# BHARATA SHAKTI

*( The Epic of God-men )*

BY

YOGI SHUDDHANANDA BHARATI

(The First Complete Edition)

12-5-1948





PUDU YUGA NILAYAM

PONDICHERRY

PRICE RUPEES FIFTEEN

விலை ரூபா: பதினைந்து

# பதிப்புரை

இன்று கவியோகி **சுத்தானந்த பாரதி**யாரின் பிறந்த நாள். இது அவர் வாழ்விற் சிறந்த நாள். ஸ்ரீ அன்னை அருளால் அவரது ஆயுட் காவியமான **பாரத சக்தி மகா காவியம்** நிறைவாக வெளிவந்து விளங்குகிறது.

பாரத சக்தி, கவிக்குக் கவி; கலைக்குக் கலை; வாழ்விற்கு வழி காட்டும் சாதன வேதம் ; புதிய உலகில், புதிய பூரண வாழ்வைத் தரும் அமரானந்த ஊற்று ; இனிய, எளிய, ஆவேச நடையில் வரிக்கு வரி தெய்வச் சுவை நிரம்பிய கலைக்கோயில். இதுவே உலகின் உள்ளம், மனித சமுதாயத்தின் உண்மை வரலாறு, மனிதான்மாவின் தெய்வ விளக்கம்.

காவிரி முக்கொம்பில் எழுந்த இக் காவியம், ஐயர் குருகுலத்தில் மலர்ச்சி பெற்று, ஸ்ரீ அரவிந்தாசிரம மோனத் தவத்தில் கனிந்து, உயிர்க்குலமான இறைவனுக்கு அர்ப்பண மாகிறது. வான்மீகி, வியாசர், கம்பர், ஓமர், தாந்தே, மில்தன் போன்ற மகா கவிகளுக்குப் பின் எழுந்த இந்த மகா காவியம், இயல்—இசை—நாடகம் ஆகிய முத்தமிழுக்கும் அணிகல னாகும். இதைப் பண்ணுடன் இசைக் கருவிகளும் இணைந்து பாடிக் கேட்டால், உள்ளம் உருகும்; வாழ்க்கையில் புதிய மெருகு ஏறும்; மனிதனிடம் உள்ள அசுரத் தன்மைகள் ஒழிந்து, தெய்வ சக்திகள் கிளர்ந்திலங்கும்.

சுத்தானந்தர், தமது வாழ்வையே யோகக் கனலில் உருக்கி வார்த்து, பாரத சக்தியாக உலகிற்கு அளிக்கிறார். அவரே இதற்குத் தனி யிலக்கணமும் செய்திருக்கிறார்.

இந்த மாபெரு நூலை மிக விரைவில் அச்சிட்டுதவிய ஸ்ரீ அரவிந்தாசிரம அச்சகத்திற்கு நன்றி, நன்றி. இந்த நூல் நிறைவாக வெளிவந்து சுத்தானந்தர் வாழ்க்கை உய்தி பெறச் செய்த ஸ்ரீ அரவிந்த சக்தி யன்னைக்கு வணக்கம்.

இந்தக் காவியத்தைப்பயன்படுத்தி, இதன் உள்ளத் துடிப்பை, ஒவ்வோர் உள்ளத்திலும் துடிக்கச்செய்யும் அன்பருக்கு வணக்கம்.

பாரத சக்தியே சுத்தானந்தர் வாழ்வின் நினைவுக் கோயில்; இந்த அருட்கலைக் கோயிலில் உலகெல்லாம் உள்ளொன்றி வாழலாம்; வருக ! ஓம் சுத்த சக்தி !

**30, சித்திரை—சர்வதாரி**
**புதன் கிழமை**
**12—5—1948**

**புது யுக நிலையம்**

# பொருள் அடக்கம்



## 1. சித்தி காண்டம்

## 2. கௌரி காண்டம்

| எண் | | பக்கம் |
|---|---|---|

## 3. சாதன காண்டம்



## 4. தானவ காண்டம்

| எண் | | பக்கம் |
|---|---|---|



## 5. சுத்த சக்தி காண்டம்

## பாரத சக்தி மகா காவியம்





# ஆசி மொழிகள்

## (வீரக் கலை விளக்கு வ. வே. சு. ஐயர்)

உலகச் சரித்திரம் தோன்றியுள்ள நாட்களுக்கு முற்காலந் தொடங்கி நேற்றுவரையில் வீரவாழ்க்கைக்கும், கல்விக்கும், ஞானத்திற்கும் தாயகமாக இருந்து வந்திருக்கிற பாரதநாட்டின் புகழ், எல்லையில்லாத கடல். இக் கடலில் நீந்துவதற்குப் போதிய ஆற்றல் படைத்தவர் **ஸ்ரீ சுத்தானந்த பாரதியார்** அவர்கள் என்று நாம் இங்கு துணிந்து கூறுவோம். இவர், தமது வாழ்வையே தவத்திற்கு நிலைக்களமாக்கிய பரமயோகி. இவர், அத்யாத்ம வாழ்க்கை வாழ்ந்துகொண்டு, அத்யாத்ம ரகசியங்களைப் பரிசீலனை செய்து அனுஷ்டித்து வருகிறார்; பாரத தேசத்தின் பழைய சரித்திரத்தையும் புதிய சரித்திரத்தையும் ஆர்வத்தோடு, பக்தியோடு, சிரத்தையோடு ஊன்றிப் படித்திருக்கிறார்; தமிழில் பல நூல்கள் எழுதி யுதவியிருக்கிறார். தமிழ்க் குருகுலத்திலும் **பால பாரதி**யிலும் ஸ்தானம் வகித்துக்கொண்டு, இத்தகைய அரிய நூலை இவர் தொடர்ந்து எழுதுவதற்கு ஆற்றலும் நேரமும் படைத்திருப்பது, இவருடைய தேசு நிறைந்த பிரமசரியத்திலும், யோகவாழ்விலுமே யாகும். தமிழ்நாட்டுஅறிஞரும் ரசிகரும், இந்நூலிற் பொதிந்துள்ள அமுதச்சுவையை நுகர்ந்து பார்த்து இன்புற வேண்டும்.

காசிவாசி நண்பர் **ஸ்ரீ. பா. ஆதிமூர்த்தி**ப் புலவர் இக்காவியத்தைப் பற்றி ஐயருக்கு எழுதிக் கேட்டிருந்தார். ஐயர், அவருக்கு எழுதிய கடிதத்தில், இவ்வாறு குறிப்பிட்டார் :

**ஸ்ரீ சுத்தானந்த பாரதியார்** அவர்கள், ரிஷிவாழ்வு வாழும் ஓர் அற்புதமான வரகவி ; **கவியோகி** ! அவர் வாக்கு, தவத்தினால் பழுத்துக் கனிந்ததென்றே சொல்லவேண்டும். உலக மகா காவியங்களையும், வீரர் வரலாறுகளையும், பல நாட்டுச் சரித்திரங்களையும், (முக்கியமாக, பாரத தேசச் சரித்திரத்தையும்) இவர் கருத்துடன் படித்திருக்கிறார். சிறு வயது முதலே இவருக்குக் கவிதா சக்தி வளர்ந்து வந்திருக்கிறது. முற்கால மகாகவிகள், இராமாயணம், பாரதம், பாகவதம், இலியாது போன்ற பெரிய காவியங்களை எப்படிச் செய்தார்கள் என்பதை, நாம் சுத்தானந்தர் வாழ்வினின்று தெரிந்துகொள்ள முடிகிறது.

கவிக்குயில் நல்ல காவியம் என்றூர் ;
வீர விளக்கு விரும்பிக் கேட்டு
மகாகா வியமென வாழ்த்திப் புகழ்ந்தார்,
மகரிஷி கதையை மகிழ்வுறச் செவித்தார்.
நவயுக யோகி நன்றிது வென்றூர்........
புதுவையில் மீண்டும் புதுக்கி யெழுதி,
என்னை யாளும் இறைவன் அருளால்,
அன்னை சக்தியின் அன்புத் துணையால்,
இப்பெருங் காப்பியம் இலகுவ துலகே.
எனதியா னென்னும் இறுமாப் பாலே
ஆசைத் தின்வால், ஆணவக் கொதிப்பால்,
போட்டி பொறுமையால், பொய்நடை பலவால்,
மனங்கெடு மாந்தர் இனங்கெடு மதியால்,
ஆயுதக் கிடங்கில் ஆயுளைப் போக்கியே,
குத்துவெட் டுகளிற் கொலைநட மாடி,
இரத்தவெள் ளத்தில் இன்னுயி ரிழப்பதும்,
அணுவெடி வீசும் அரக்க ராவதும்,
ஆக்கம் போலே அழிவதும் ஒழிய,
மனத்தைத் திருத்தி, இனத்தைத் திருத்தி,
காமம் வெகுளி கலக்கமில் லாது,
உள்ளங் களிக்க, உலகஞ் செழிக்க,
எல்லா உயிர்க்கும் இறைவன் ஒருவனே
எல்லா உடலும் இறைவனு லயமே..
என்னும் சமரஸம் இதயத் துடிப்பாய்,
அகப்புறத் தூய்மையும் அஞ்சா உரிமையும்,
அமரத் தன்மையும் அடைந்துநீ டூழி
வாழும் வகையை வழங்கும் சக்தியே—
பரமயோ கந்தரும் பாரத சக்தியாம்.
பாரத நாட்டுப் பூரண யோகிகள்
தவத்தால் விளக்கிய சக்தியை இன்று
மீண்டுந் தூண்டி, வேதச் சுவையும்,
தெய்வத் தன்மையும் சிறக்க வேண்டினேன்.
தீர்க்க தரிசிகள் பார்க்க நினைத்த
விண்ணர சாட்சியை மண்மிசை நாட்டும்
சாதனம் வகுத்துச் சத்திய சுத்த
சக்தி சாந்தாதி முத்தர் முயற்சியால்,
புதுயுக வுலகம் பொலிவுற நாட்டி,
ஒன்றே கடவுள் ஒன்றுசுத் தான்மா,
ஒன்றே உலகுயிர் ஒன்றே வான்போல்—

என்று விளக்கி எங்கும் இன்பமே
காணத் துடிக்குமிக் காவியங் கற்ருேர்
எண்ணிய புண்ணிய மெய்திடு வாரே.
சத்திய சுத்தர் சத்தி யுடனே
யோகசங் கத்தால் உலகைத் திருத்தி,
மாவலி கலியர் வாள்வலி யொடுக்கி,
அசுர பலத்தை அமைதியாய் வீழ்த்தி,
அருளர சாட்சியை அவனியில் ஊன்றி,
மானிடரை அதி மனிதர்க ளாக்கி
மாதரைச் சக்தி மண்டல மாக்கி,
சுத்தான்ம சித்தர் சுடர்பெறுஞ் சங்கமே
உலகவாழ் வாக நிலவச் செய்யும்.
பாரத சக்தியென் ஆருயி ராகவே
பாரின் உள்ளமே பருவுட லாகவே
வானுள மட்டும் யானு மிருந்தே,
கவியுருக் கொண்ட கனவுக ளாலே
உலகிற் பணிசெய ஓம்சுத்த சக்தி
அருளுக வெற்றி ஆகுக நலமே !
இதனை ஓதி இன்ப மடைந்தேன்
இவ்வுல கடைக யான்பெறு மின்பமே.

எத்தி சையிலும், எந்தெந்த நேரத்தும்,
சித்த மூன்றிச் செயலை நடத்திடும்
சுத்த சக்தி அருட்சுடர் என்றனை
வைத்த வாறு வளர்வதென் வாழ்க்கையே.

கனக்கு நூல்பல கற்றுத் தெளிந்தே
மனக்கு நல்ல மகிழ்வினை நல்கி
எனக்குக் கற்க இலக்கியஞ் செய்தேன் ;
உனக்கு மின்ப முதவு முலகே !

*நூற்பயன்*

வீரமும், சுத்த சக்தி விளக்கமும், ஆத்ம ஞான
தீரமும், கல்வி செல்வத் திருக்களும் பெருகி யோங்கும்;
பூரண சித்தி யெய்திப் பொலிந்திடும் அமர வாழ்க்கை-
பாரத சக்தி தன்னைப் பயிலுக உலக மெல்லாம்!

—சுத்தானந்த பாரதி

# பாரத சக்தி மகா காவியம்

## முதலாவது

## சித்தி காண்டம்

### (கதைக் குறிப்பு)

இறைவன் புதிய உலகைப் படைக்க விரும்புகிறான்; ஊழி வெள்ளத்தால் பழைய உலகை முற்றிலும் அழித்துத் தானே தானாகத் துரிய சமாதியில் விளங்குகிறான். பராசக்தி விழித்தெழுந்து, புதிய உலகையும், புதிய மாந்தரையும் படைக்கத் தூண்டுகிறாள். சக்தி வீணையில் இறைவன் இச்சைப்படி ஓங்காரம் முழங்குகிறது; அணுக்கள் சுழல்கின்றன; ஐம்பூதங்கள், தன் மாத்திரைகள் எல்லாம் தோன்றுகின்றன. அவை, பல சுடர்களாகவும், கோளங்களாகவும் பரவிச் சுழல்கின்றன. கதிரவன், கடல் மழை, ஆறு, காடு, பயிர், உயிர்க்குலங்கள்—இவை முறையே தோன்றுகின்றன. இறைவனும் சக்தியும் இமாலயத்தில் வீற்றிருந்து, அதற்குத் தெற்கே புண்ணிய பூமியை உண்டாக்குகின்றனர்; அதில் **மனு-மதி** என்னும் புதிய ஆணையும் பெண்ணையும் உண்டாக்கி, அவர்கள் மூலம் மனித மரபை வளர்க்கின்றனர். மனிதரில் அந்தக்கரண சுத்தி யுள்ளவர்கள் அமர வாழ்க்கை வாழுகின்றனர்; அஃதில்லாதவர் அசுரர்களாகி, இடர் செய்கின்றனர். இருதன்மையருக்கும் போர் நடக்கிறது. அசுரரை வென்று **பரதன்** அருட்குலத்தைத் தோற்றுவிக்கிறான். அவன் வழி வந்த அருட்பெரியாரை அருட்குலப் படலத்திற் காண்க. இறுதியில் சத்தியராஜன் எழுந்து, **சித்திமா**நகரில் சத்திய ராஜ்யத்தை நாட்டுகிறான். அவன் மனைவி இந்திரை, குரு பாரத முனிவர், மந்திரி சித்திமான், படைத்தலைவன் விஜயன்—எல்லாரும் தீரர்கள்; உலக நலமே போற்றி வாழ்பவர்கள்.

சத்திய ராஜனுக்கு நெடுநாள் பிள்ளை யில்லாதிருந்து, தவப் பயனால் **சுத்தன்** என்னும் தெய்வ மைந்தன் பிறக்கிறான். 'இராமன், கண்ணன், புத்தர், மகாவீரர், ஏசுநாதர், மஹாத்மா போன்ற தெய்வாம்சம் பெற்ற மகான் அவன்' என்று பாரத முனிவரும் பெரியாரும் கண்டு வணங்குகின்றனர். சுத்தன் குழந்தைப் பருவத்திலேயே அற்புதமான அருளாற்றலை விளக்கு

கிறான். அவனுக்குப் பாரத முனிவரே தமது குருகுலத்தில் யோகம், கலை, அரசியல், போர்த்திறல், சாத்திரம் எல்லாம் பயிற்றி, அவனது அருளறிவையும் தூண்டுகிறார். கல்வி முடிந்ததும் தந்தை, சுத்தனை நாட்டைச் சுற்றிப்பார்த்து உலகானுபவம் பெற மந்திரியுடன் அனுப்புகிறான். இருவரும் யாத்திரைசெய்து, அரசர் நீதி, பெரியார் வாழ்க்கை, பொதுஜனங்களின் நிலைமை எல்லாம் பார்க்கின்றனர். சுத்தனை மன்னரும் குடிகளும் மகிழ்வுடன் வரவேற்கின்றனர். தமிழகம், ஆந்திரம், கொங்கணம், கன்னடம், வங்கம், காசி, கோசலம், பாஞ்சாலம், சிந்து, இராஜபுதனம் எல்லாம் பார்த்துக்கொண்டு, சுத்தன் மகாராஷ்டிரத்தைச் சுற்றிப்பார்த்து வியக்கிறான்; இராயசிங்கக் கோட்டையில் சிவாஜி சரித்திரம் சித்திமான் சொல்லக் கேட்கிறான். அச் சமயம் கலியன் அழைப்பு வருகிறது.

**கலியன்,** சத்தியன் தம்பிதான்; ஆனால், மகா அசத்தியன், அசுரன், பாதகன், பேராசைப் பதர். அண்ணனுக்குப் பிறகு, தானே **சித்தி**யைக் கைப்பற்றித் தனது கலியரசை நாடெங்கும் நாட்ட அவன் மனப்பால் குடித்தான். சுத்தனுக்கு அவன் கொடிய பகைவனானான்; அவனைக் கொல்லச் சூழ்ச்சி செய்தான்; பலிக்கவில்லை. சித்தியைக் கைப்பற்றவும் போதிய படையில்லை. துயரில் மூழ்கிய அவனை, மனைவி **மோகி** தேற்றினாள். மோகி, அழகான அரக்கி. அரக்கர் வாழும் இரகசியத் தீவாகிய **தானவ**த்தை ஆளும் மாவலியின் தங்கையே அவள். அரக்கரிடம் பற்றுமிகுந்த கலியன் அவளை மணந்து அவள் கைப்பாவையானான். "என் அண்ணன் படைகளைக் கொண்டுவந்து, சித்தியைக் கைப்பற்றுகிறேன்" என்று அவள் தானவம் சென்றாள்; அரக்கர் சிலரை அழைத்து வந்தாள். அவர்கள் கலியன் படைகளுக்கு அசுர வித்தைகளையும், புதிய கொடிய ஆயுத வித்தைகளையும் பயிற்றினார்கள். கலியன் பெரிய படை சேர்த்துச் சித்தியைத் தாக்கத் தயாரானான்; இதனிடையே, சுத்தனைக் கலிநகருக்கு அழைப்பது; வரும் வழியில் தாக்கிக் கொல்வது; அல்லது, கலி நகரிலேயே தந்திரமாகச் சிறையிலிட்டுக் கொல்வது என அவன் பலமான ஏற்பாடுகளைச் செய்தான். கலியன் சூழ்ச்சியை அறிந்த சித்திமான், அவனழைப்பிற்குத் தந்திரமாகப் பதில் அனுப்பினான்; தன் ஒற்றரை விடுத்துக் கலிநகர் நடப்பை அறிந்துவரச் செய்தான்; சுத்தனை மிகவுங் கவனமாகக் காத்து வந்தான்.

ஸ்ரீராம நவமி யன்று சுத்தனும் சித்திமானும் மாரத வீரர் வழி நடத்தப் **பஞ்சவடி**க்கு வருகின்றனர். அங்கே முனிவர் இரு

வரையும் வரவேற்றுபசரிக்கின்றனர். பஞ்சவடியின் இயற்கை யழகும், தவப் பொலிவும், முனிவரின் புனிதக் காட்சியும் சுத்தனுக்கு இன்பமளிக்கின்றன. முனிவரைப் பார்த்து ஆசி பெற்று, நல்லுரை சொல்லிக்கொண்டே இருவரும் **சாந்த முனிவர்** ஆசிரமத்துக்கு வருகின்றனர். முனிவர் அதிதிகளை வரவேற்று நன்மொழி கூறி, உபசரித்து, கனிவிருந் தளிக்கிறார்.

பஞ்சவடி, முன்னே இராவணன் ஆண்ட இடம்; சூர்ப்பணகையும் கரதூஷணாதிகளும் இருந்த இடம். அங்கே முதலில் தனது கொடியை ஊன்றித் தவமுனிவ ரெல்லாரையும் தனது நாத்திக மதத்திற்கு மாற்றிக் கலியரசை நாட்டவேண்டுமென்பது கலியன் கருத்து. அவனால் தாங்கள் படும் பாட்டை முனிவர் சொல்லுகிறார். சுத்தன் முனிவருக்கு எக் கேடும் வராதபடி காப்பதாக வாக்களிக்கிறான். சாந்த முனிவரின் அன்புச் செல்வி **கௌரியே** அதிதிகளை இனிமையாக உபசரிக்கிறாள். அவளைக் கண்டதுமே சுத்தனுக்கு ஒரு புனிதக் காதல் பிறக்கிறது; அப்படியே அக் கன்னிக்கும். அன்று ஸ்ரீராம நவமி யாதலால், முனிவர் இராமாயணத்தை இனிய விருத்தங்களாகப் பாடி விரிவுரை சொல்லி, 'அசுரர்களை ஸ்ரீ ராமன் போல அழித்து, தருமத்தை நிலைநாட்ட வேண்டும்' என்று முடிக்கிறார். சுத்தன் இராமபக்தரான இராமதாஸ் முனிவர் சரிதமும் அருளும்படி கேட்கிறான். முனிவர் மறு நாள் சொல்லுவதாக விடை கொடுக்கிறார்.

சுத்தனும் சித்திமானும் தபோவனத்தில் உலாவி, அமைதி பெற்றுத் தமது இடத்திற்குச் சென்றதும், கலிநகர் சென்ற ஒற்றர் ஓடிவந்து, திடுக்கிடும்படியான செய்திகளைச் சொல்லுகின்றனர்: "கலியன் சுத்தனைச் சிறையிட்டுச் சேனைகொண்டு சித்தியை முற்றுகைபோடவே சூழ்ச்சி செய்கிறான். நாளையே பெரிய அசுரப் படையை இங்கே விடுத்து அட்டூழியம் செய்யப்போகிறான்" என ஒற்றர் சொல்லுகின்றனர். சித்திமான் பக்கத்திலிருக்கும் சிற்றரசருக்கு அவசர ஓலை விட்டுச் சேனை யனுப்பச் சொல்லுகிறான். சுத்தன், "வரட்டும் கலியன் படை! ஒரு கை பார்க்கிறேன்" என்று வீரமுடன் பேசுகிறான்.

மறுநாள் இருவரும் காலைக் கடன்களை முடித்து, சாந்தாசிரமம் செல்கின்றனர். கௌரி யாழ் மீட்ட, சாந்த முனிவர் இனிய குரலால் இராமதாஸர் வரலாற்றைச் சொல்லுகிறார். கருத்துடன் கேட்டுக்கொண்டிருந்த சுத்தனுக்கு ஒரு புதிய வீரம் பிறக்கிறது. தனது மனத்திலுள்ள கவலை, ஒற்றுச் செய்தி, கலியன் பொல்லாங்கு ஆகிய எல்லாவற்றையும் முனிவரிடம் சொல்லி, சிவாஜி

போலும் இராமன்போலும் பகைவரை எதிர்த்துப் போர் புரிய முனிவர் ஆசியை வேண்டுகிறான். அரக்கரை வீழ்த்தி அறத்தை நாட்ட வந்த தூயனை, முனிவர் ஆசீர்வதிக்கிறார். அச் சமயமே கலியன் அசுரப் படை பஞ்சவடியிற் புகுந்து, மரங்களை ஒடித்து, பர்ணசாலைகளில் தீ வைத்து, முனிவரை அடித்து மிரட்டிக் கொடுமை செய்கிறது. **வேகன்** என்ற அசுரன் ஆசிரமங்களில் உள்ள பெண்களைத் தூக்கிச்செல்ல முயல்கிறான். முனிவர் அபய மிட்டு அலறுகின்றனர்.அதேசமயம் சித்திமான் எதிர்பார்த்த படைகளும் வருகின்றன. சித்திமான் காட்டில் அரக்கருடன் போர் புரியச் செல்கிறான். சுத்தன் முனிவர் ஆசிரமத்தை அணுகும் அரக்கரை வீழ்த்துகிறான் ; கவனமாக முனிவரை ஒரு மலைக்குகைக்கு அனுப்புகிறான். வேகன் முதலிய அரக்கர்கள் பர்ணசாலைகளைச் சுட்டெரித்து முனிவர் சிலரைத் துரத்திப் பிடிக்கின்றனர்.சுத்தன் அவர்களைப் பொருது வீழ்த்துகிறான். வேகன் பர்ணசாலையில் புகுந்து கௌரியைத் தூக்க முயல்கிறான். சுத்தன் அவனை ஒரே குத்தில் வீழ்த்துகிறான். அவன் மடியில் ஒரு கடிதம் இருந்தது : "கலியன் ஆணை ; வேகன் படை வேகமாகச் செல்க ! பஞ்சவடி முனிவரை யெல்லாம் சிறைப் பிடிக்க வேண்டும். சுத்தனையும் சித்திமானையும் கைதியாக்கி விலங்கு போட்டு இரகசியமாகக் கொண்டு வரவேண்டும். பெண்களை யெல்லாம் இங்கே கொண்டு வந்து, நம்மவர் அடிமைகளாக்க வேண்டும். பஞ்சவடிப் பர்ண சாலைகளைச் சுட்டெரித்து அங்கே நமக்கு உல்லாச மாளிகைகள் கட்ட வேண்டும்; யோகவனம் போகவன மாகவேண்டும்!" என்று அக்கடிதத்தில் எழுதி யிருந்தது. கலியன் சூழ்ச்சி மண்ணானது. போர் ஒழிந்தது. வெற்றி முரசொலிக்கிறது. குகைகளில் ஒளிந்த முனிவரும் பத்தினிகளும் வருகின்றனர் ; சுத்தனை ஆசீர்வதிக்கின்றனர். சாந்த முனிவர் இனிவரும் உலக நிலையை விளக்கிச் சுத்தனே உலக ரட்சகன் எனக் காட்டுகிறார். சுத்தன் ஆவேச மொழி புகன்று அபய மளிக்கிறான். முனிவர் இனிப் பஞ்சவடியில் இருக்க முடியாது என்கின்றனர். சுத்தன் பஞ்சவடியில் ஒரு பெரிய படையை வைத்து, சாந்தரையும் கௌரியையும், முனிவரையும் அழைத்துக்கொண்டு சித்தி நகருக்கு வருகிறான். சித்தி நகரில் குதூகலமான ஊர்வலம் நடக்கிறது. சத்திய ராஜன் தன் மகனை அன்புடன் வரவேற்று மகிழ்கிறான். சுத்தன் தான் கண்டவை, கேட்டவை, கலி நகர் அட்டூழியங்கள் ஆகிய எல்லாவற்றையும் சொல்லி, உலகில் அதர்மம் தலை தூக்குகிறது, தருமத்தை நிலைநாட்டிப் பல தியாகங்கள் செய்யவேண்டி யிருக்கும் என்று நீண்ட சிந்தையில் ஆழ்கிறான். ஒற்றரால் கலி நகரிலும், நாட்டி

லும் நடப்பதை அறிந்து, சத்தியனும் வருங்காலத்தைப் பற்றிய சிந்தனையில் ஆழ்கிறான்.

பாரத சக்தியின் ஐந்து காண்டங்களும் மனித வாழ்வின் ஐந்து நிலைகளைக் குறிக்கும் : முதலாவது **சித்தி காண்டம்**, மனிதன் இயற்கையாக சத்தியநெறி பற்றி வாழ்ந்த சத்திய நிலையைக் குறிக்கும். இரண்டாவது **கௌரி காண்டம்** உலகின் இருவிகாரங்களுடன் மனிதன் வீரப் போர் புரிந்து, வீர மனிதனாக விளங்கும் நிலையைக் குறிக்கும். மூன்றாவது **சாதனக் காண்டம்**, உலகப் போரால் அலுத்த மனிதான்மா துறவை நாடி, பல மதங்களில் பரமசாந்தத்தைத் தேடுகிறது. நான்காவது **தானவக் காண்ட**த்தில், மதத்தாலும் அமைதி கிடைக்காமல், உலகின் குண தொந்த விகாரங்களுடன் மோதி, அசுரக் கொடுமைகளைப் பொறுமையால் வெல்ல முயன்று அயர்கிறது. கலைகளாலும் அமைதி கிடைக்கவில்லை. ஐந்தாவது **சுத்த சக்திக் காண்ட**த்தில், பரம பரிசுத்த யோகிகள் பாரத சக்தி யென்னும் சுத்தான்ம சக்தியைப் பரப்பி, சாதகக் கூட்டங்களைப் பூரணமாக்கி, உலகில் அமைதி நாட்ட அனுப்புகின்றனர். அவர்களாலேதான் உலகம் அசுரக் கொடுமை தீர்ந்து, தெய்வத் தன்மையும் அருளாட்சியும் பெற்ற ஒரு தேவ ஜாதியாக வாழ்கிறது !

# பாரத சக்தி மகா காவியம்

முதலாவது

## சித்தி காண்டம்

### 1. மங்கல வாழ்த்துப் படலம்

*வெற்றி கொட்டுக ! விம்முக பேரின்பம் !
சுற்றி ஞானச் சுடரொளி வீசுக !
முற்ற றிவன் முதல்வன் அருளையே
பற்றி வாழப் பயின்றதிப் பாரெலாம் !

அம்மை யப்பன், அருட்பெருஞ் சோதியான்,
எம்மை யாளும் இறைவன், குருபரன் ;
தம்மைத் தந்தவர் தாபந் தணிப்பவன் ;
செம்ம லரடி யைத்தினஞ் சேவிப்பாம்.

எல்லை யற்றநல் லின்னுயி ருள்ளமே
தில்லை யாகத் திருநடஞ் செய்பவன் ;
இல்லை யென்பவ ருள்ளு மிருப்பவன் ;
சொல்லைத் தூண்டித் துலக்குக வெற்றியே !

இத்த லத்தொழில் எல்லா மியக்கியே,
அத்தன் ஆணையி னுல்வினை யாடுவாள் ;
சுத்த சக்தி யருட்சுட ரேற்றுக—
நித்த மிக்கவி நின்று நிலவவே !

மீட்டுவாய் உயிர் வீணையைப் பண்ணுடன் ;
ஊட்டுவாய் உயர் வோங்குங் கலையின்பம்,
காட்டுவாய் வழி காசினி யெங்குமே
நாட்ட வுன்னிசை நற்றமிழ் வாணியே !

* இசைக் குறிப்பு : *மங்கல வாழ்த்துப் பாடல்கள் கலி விருத்தம் துள்ளலிசை ; திருக்குறுந் தொகை போல, ஆதி தாளத்தில் நாட்டை, நாதநாமக்கிரியை, பியாகு, காபி—ராகங்களில் பாடலாம். தன்ன, தன்னன தன்னன தானன—சந்தம்.*

திங்கள் கண்ட திரைகடல் போலவும்,
பொங்குங் காலையிற் புள்ளிசை போலவும்,
மங்கலஞ் சொல் வசந்தத்தைப் போலவும்,
கங்கை போலுங் கவியருள் வாணியே !

உன்னை யோதி யுருகுவ தல்லது,
பின்னை யேதும் அறிகிலன் பிள்ளையான் ;
அன்னை யேயமு தேயென தாவியை,
மன்னு மங்கல மாகவி யாக்குவாய் !

ஊழின் கூத்து முடிந்ததும், ஓர்பகல்,
வீழும் பொய்யுடல் வீழினும், உன்புகழ்
சூழும் சுத்த சுயங்கவி யாயென்றும்
வாழ இன்ற வரமருள் சக்தியே.

என்பெ யரை மறக்கினும் இப்புவி,
உன்பெ யரை யுருகி நினைத்திடத்
தன்பெ யரைத் தழைக்க விளக்கிடும்,
அன்பு மாகவி யையருள் அன்னையே !

சிலை,அ ருட்கவி சித்திரம், கூத்திசைக்
கலைகள் தெய்வக் கருத்துடன் ஆடிடும்,
மலையி னுச்சியில் என்மனம் ஆடிடத்
தலைவி யேயருள் தாரக சக்தியே !

வள்ளல் வானில், மலைவனக் காட்சியில்,
துள்ளு மாற்றினிற் சூழும் இயற்கையில்,
அள்ளி யள்ளி யளித்திடும் பாட்டையென்
உள்ளப் பொய்கையில் ஊற்றி யருளுவாய் !

கடலைக் காற்றைக் கதிர்வளர் வானத்தை,
இடம கன்ற புவியை, யியற்கையை,
உடலை, யென்னுள் உயிரைப் படைத்தவுன்
வடிவைப் பாட வரமருள் சக்தியே !

பூவி லுன்னருள் பூத்த புலவர்செய்
பாவி லூறிப் பழுத்த கவிதையென்
நாவி லூறிட நல்வரந் தந்தருள்,
ஆவி போர்த்தென்னுள் ஆடும் பரமனே.

தோற்றித் தோற்றித் துகளற நாளுமே
மாற்றி மாற்றி மனிதரின் வாழ்வைமுன்
னேற்றி யேற்றி யியற்றுமுன் ஆடலைப்
போற்றி சக்தி, புகன்றரு ளென்னுளே !

வித்து வான்கள் விரும்பியுன் னன்பினை
முத்து முத்தெனச் சூட்டினர் முத்தமிழ் ;
புத்த லர்தொடுத் தேனுனைப் பூசிக்கப்
பித்த னேன்சிறு பிள்ளைத் துணிவினால். 60

வீரர் வீறது ; வித்தகர் சித்தது ;
தீரர் யோகத் திறனது ; மானிடர்
பூர ணம்பெறும் புண்ணியத் தீயது ;
தார கம்அது பாரத சக்தியே !

தூய்ய யோகந் துலங்கிடும் வாழ்விலே,
வைய கத்தினில் வானர சோங்கிடும்,
தெய்வ மானிடச் சங்கஞ் செழித்திடும்,
செய்ய பாரத சத்தியின் சித்தியால்.

பொலிக பூரணம் ! பொங்குக வெற்றியே !
பொலிக நல்ல புதுயுக வாழ்க்கையே !
பொலிக புண்ணிய பாரத பூமியே !
பொலிக மங்கலம் பூவுயிர் யாவிற்கும் ! 72

# 2. சிருட்டிப் படலம்

அன்னை அருளிய காட்சி

*எங்கு வந்ததிப் பூவுயிர் ? எப்படி ? எதனால் ?
எங்குச் செல்வதிப் படைப்பணி ? இதன்முடி பென்னே?
இங்கு வந்துவந் தியங்கிடும் வாழ்க்கையின் பண்பை,
நன்கெ னக்கருள் என்று நான் சக்தியை நயந்தேன்.

உலகை ஓமெனு மந்திரத் தாலுயிர்ப் பித்தாள்,
அலகி லாவினை யாட்டுடை யாள்பர சக்தி,
நிலைபெற் றென்னுளத் தேநிறைந் தருள்விழி திறந்தே
இலகு வித்தமெய்க் காட்சியை யியம்புகின் றேனால்.

---

*இசைக் குறிப்பு:—*சிருட்டிப் படலம், அருட் குலப் படலம், கலி நிலைத்துறை. ஐஞ்சீர், நான்கு அடிகளாய் நடப்பதுகலித்துறை. இதன் சந்தம், தன்ன தானன தானன தன்னன தனனா. இதை மூன்றடித் தாளத்தில் பூர்வீகல்யாணி ராகத்திற் பாடுக !*

## புது யுக நினைப்பு

வான மாதியைம் பொருளினம் வகுத்தவை தொகுத்தும்,
ஈன லாதியைந் தொழில்களைச் சக்தியால் இயற்றி,
மான வர்முதல் எழுவகைத் தோற்றமு மகிழ,
ஞான நாடகம் புரிபவன் ஞாலநா யகனே.

ஆக்கும் போதய னாகவும், ஆருல குயிரைக்
காக்கும் போதரி யாகவும், கடைவெள்ளத் தாலே
நீக்கும் போதர னாகவு நிலவுவன் அருளால் ;
பூக்கும் போதுறப் புதுயுகம் புலர்கென நினைத்தான்.

## ஊழி வெள்ளம்

கடக டத்திடத் திசையெலாங் காற்றுடன் கதிரோன்
படப டத்திட வுருத்திரன் காளியைப் பணித்தான்.
தடத டத்திடி தாவிடத் தண்கடல் பொங்கி
மடம டத்துயி ருலகினை வாரியுண் டதுவே !

பஞ்ச பூதங்கள் பிரிந்தன ; பண்டுல கனைத்தும்,
எஞ்ச லின்றியாங் கிரிந்தது ; பரந்தது வெறுமை.
செஞ்செ யல்புரி திறங்களைக் கரந்துளே நீடு
துஞ்சி னன்பர மாத்மனுந் துரியமா முடிமேல் !

அகம கிழ்வினால் உலகினை ஆக்குவான், காப்பான் ;
உகமு டிந்திட வுருத்திர லீலைகள் புரிவான் ;
இகப ரந்தனி லெவையுமா யிருப்பவன், ஒருவன்,
சுகம வன்பதந் துதிப்பதே தொழிலெனக் கொள்வாம்

## மூலசக்தி விழித்தல்

ஏழு தோற்றமாய்ப் பிறந்திறந் துலகினி லியங்கி,
வாழு மன்னுயிர்க் குலத்தினை வளர்த்திடு மிறைவி
ஆழு றக்கம்விட் டெழுந்தெலாம் அழிந்ததை யறிந்து,
பாழு றக்கம்விட் டெழுப்பினள் பரமனைப் பரிந்தே !

"உள்ள வாறுதன் அறிவினால் உலகெலாம் இன்ப
வெள்ள மாய், உயிர்க் குயிரென விளங்கிடும் பொருளே,
விள்ள ருந்தனிக் கருணையே, விலகரும் அன்பு
வள்ள லே,என தாடலை வகுத்திடும் பரனே" !

"ஒருவ னேபல பான்மையாய் ஒளியுடன் கதிர்போல்
மருவு மென்வயின், வானுல காடலை வைத்தாய் ;
அருவு மாகுவை, ஆண்பெண்ணும் அகிலத்தை யாளும்
உருவு மாகுவை யுன்னியல் பறியுமா றுளதோ" ?

''விதங்க ளைப்புவி யணிகளே, வியன்களே, வினையைப்
பதங்க ளைப்பரி ணமத்தின் படிகளைப் பயனை,
இதங்க ளைப்பல மதங்களை இயல்புற வகுப்பாய்,
கதங்க ளைந்தினிப் புதுப்புவி கண்டருள் புரிவாய் " !

"அளவி லாவுயி ராலயம், அருவினை யரங்கம்,
வளமி லாதுணர் வொலியுரு, சுவைமணம் வறண்டே,
தெளிவி லாதொரு சூனிய மானதே.....! திகைத்தேன்.
உளவி டத்தினில் உள்ளவா றுலகெலா மாவாய்" !

## பரமன்

"நன்கு நன்றினி துன்றிரு நயமொழி யுவந்தேன் .
மங்க ளச்சிவ சக்தியே, சின்மய வடிவே !
பொங்கு முத்தொழில் இனிப்புது வுலகினிற் பொலியும்.
எங்கு மென்மய மாகநீ கோயில்கொண் டிருப்பாய் ! "

"உன்னு டன்உறங் கியபுவி யுன்னுடன் விழிக்கும் ;
என்ன லந்தரும் இச்சையை யேவினேன் இதன்பால்.
மன்னு மங்கல யாழினில் ஓமிசை வழங்காய் !
பொன்னெ ளிர்புது யுகப்புவி பொலிந்திடக் காண்பாய் !"

"ஓமெ னுந்திரு மந்திரம் உலகினை யாக்கும் ;
ஓமெ னுந்திரு வொலியதே உயர்மறைப் பொருளாம் ;
ஓமெ னும்பர நாதமே உண்மையின் பறிவாம்.
ஓமெ னுந்தமி ழிசையினை யுளமகிழ்ந் திசைப்பாய் ! " 60

## சக்தி யாழ் மீட்டல்

"நின்று சாட்சியாய்ப் பணித்தெனை யனைத்திலு நிறைவாய்
என்று மென்செயற் கிறைவனே, ஏகநா யகனே,
நன்று மீட்டுகின் றேனிந்த நலங்கிளர் நாதம்,"
என்று மீட்டினள் ஏழிசைப் பயன்களை யிணைத்தே.

பாழி டத்தினிற் பரந்ததோர் பம்பர வியக்கம் ;
யாழி சைதரும் அகரத்தால் அம்பரம் விழிக்க,
வாழி சைதரும் உகரத்தால் வளர்தரும் அணுக்கள்
சூழி சைதரும் மகரத்தாற் சுழன்றன விரைந்தே.

நாதம் உண்டுள நாரணன் எழுந்தணு நிறைந்தான் ;
வேத மார்த்தனன் விழித்தெழுந் தவன்வயின் பிரமன்.
பூத வாதிகள் பொம்மென வொலிமடுத் தெழுந்த,
சோதி பூத்தது, சுடர்மணிக் கணங்களும் பூத்த.

வெளி நிறைந்தது ; சக்தியால் வேகமாம் அணுவிற்
களி நிறைந்தது ; கதிரிடுஞ் சுடர்களிற் கனலின்
சுழி நிறைந்தது ; கடலுண்டு சொரியும்வா னமுதின்
அளி நிறைந்தது ; புதியநல் லழகெங்கு நிறைந்தே !

வல்லி யற்கையின் வளமைகள் வளர்ந்திட நாளும்,
சொல்லொ ணுப்புதுத் தோற்றங்க ளுதித்தன தொடர்ந்தே;
கல்லெ ழுந்தது ; மலைநதி கனிமரக் காடு
புல்லெ ழுந்தது புசிப்புக ளெழுந்தன செழித்தே.

## புண்ணிய பூமி தோன்றுதல்

மண்ண ளாவிய மாண்பணி மகுடம்போல் எழுந்து,
விண்ண ளாவிய வெள்ளிமால் வரைமிசை யிருந்தே,
கண்ண ளாவிய தென்புறங் கவினுறக் காட்டிப்
பண்ண ளாவிய செஞ்சொலாள், பகவனுக் கிசைத்தாள்.

### சக்தி

" ஆதி யேநம தரியணை யாகுமிம் மலைமுன்,
மேதி னிக்கொரு ஞானமா விளக்கென மிளிரும்
சோதி நாடொன்று தோற்றுவாய் சொக்கழ காகத்
தீதி லாத்தவம் பொலிந்திடத் தேவர்போற் றிடவே ! "

### பரமன்

" நன்றி சைத்தனை நலந்தரு ஞாலநா யகியே
என்றி சைத்தருள் இறைவனும் உவகைமீ தெழுந்தே,
தன்றி ருத்தவக் கதிரினைத் தளர்வறப் பரப்பி,
வென்றி சைத்திடும் வியன்பெறு நாட்டினைப் படைத்தான் ! "

" பாரெ திர்பர தேவியே பச்சைவிண் ணகத்தைச்
சீரெ லாம்வளர் திவ்வியச் செல்வநா டிதுவே,
பாரெ லாம்புகழ் பாரத சக்திநின் றெருளிரும்
பூர ணம்பெறும் **புண்ணிய பூமி** யென் றிசைப்போம் ! "

" நாய கம்பெறு மிதன்மிசை நல்லன யாவுந்
தாய கம்பெறும் ; தாரக மாகிய தருமம்
தோய கம்இது ; துலங்குக துகளற நாளும்
வாய கங்கடந் தோங்கிடும் வாய்மையைப் போலே !"

ஆக்கும் ஆற்றலை முற்றிலும் காட்டினன் அயனும் ;
காக்கும் ஆற்றலைக் கண்ணெனக் கருணைமால் வகித்தான்;
பாக்கி யங்களை மிகமிகப் பரவிடப் புரிந்து,
நோக்கி னுள்சிவை பரமனை நூதனந் தோன்ற.

சக்தி

“ இச்ச கத்தையென் இன்பவீ டாக்கினை இறைவா ;
உச்ச நல்லறி வாற்றலும், உன்னரு ளுணர்வும்,
மெச்சும் ஆத்தும சக்தியும் விளங்குமா னிடத்தைச்
சச்சி தானந்த வத்துவே, சகத்தினிற் படைப்பாய் ! ”

பரமன்

“ என்னி லாண்மைநல் லறிவுடன் வீறுபெற் றெழுக !
உன்னிற் பெண்மைநல் லன்புடன் அழகுறப் பொலிக !
இன்னி தின்இரு திறங்களும் இணைந்துநீ டூழி
மன்னு மங்கல மானிட மரபெனத் திகழ்க ! ”

பூத யாக்கையிற் பொறிபுலன் கரணங்கள் பொருந்தி,
நாத விந்துக லாதியாம் ஆத்தும நாதன்,
போத மாகவுட் புகுந்துயிர் வாழ்வினை யியக்க
ஏதமில் திருக் கோலங்கள் இரண்டெழுந் தனவே !

சக்தி

“ நனிதி கழ்மனு மதிஎனும் தளிரணிச் செல்வீர்,
புனித மாகிய மனையறம் பொலிவுறப் பொருந்தி,
இனித றம்பொரு ளின்பம்வீ டிசைவுறச் செழித்தே
மனித மாமர போங்கிட வாழிநீர் மாதோ ! ” 120

மாச கல்மனு மதிகளை வாழ்த்திமா தேவி,
பாச மேவிய நகையுடன் சிவன்முகம் பார்த்து,
“ நேச, மானிடர் நிலையினி யென் ” னெனக் கேட்டாள்.
ஈச னும்பரி ணமத்தின் இயல்பினை யுரைத்தான் :

பரமன்

“ ஈசன் யான்வளர் மானிடம், எனையறி யாது,
பாச முற்றிடிற் பவவினை பற்றிநீ டலையும்.
நேச மென்னிடை நிலைத்திடின், அருளுணர் வோங்கிப்
பாச நீங்கிடும் பதியினைக் கூடிடும் பசுவே. ”

“ முக்கு ணம்பெறு மாயையின் முடிவறு வலையிற்
புக்கு மானிடர் இருவினைப் போர்களை விளைப்பார் ;
பக்கு வம்பெறு ஞானிகள் பதைப்பறப் பார்த்தே
எக்கு ணத்திலுந் தோய்வுறார் ; என்னிலே இருப்பார். ” 132

# 3. அருட் குலப் படலம்

காபி—முத்தாளம்

பரதன்

**ப**ஞ்ச பூதமும் பரிதியு மதியிளங் கதிருந்
துஞ்சி டாக்குண தொந்தமும் வளர்த்திடும் புவியில்,
செஞ்செ யல்புரி மானிடத் தேவரும் செழித்தார் ;
வெஞ்செ யல்புரி அரக்கரும் பெருத்தனர் விரைந்தே.

கரவுந் தீமையும், கடுஞ்சினப் போர்களும் விளைக்கும்
அரவும் வேங்கையும் போன்றவெவ் வரக்கரை யெதிர்த்தே,
விரவு வீரமும் தவமுங்கொண் டெளிதினில் வென்றான்—
**பரத** னென்பவன் மனுக்குலப் பரிதியாம் அவனே.

அருட்குலம்

திருக் குணத்தினர் அரசெனத் தேர்ந்திசை கூற,
இருட் குலத்தினை இகல்கெட வென்றமெய் வீரன்,
உருக்கொண் டேயறம் ஓங்கிட மீண்டுமிவ் வுலகில்,
அருட் குலத்தினை ஆக்கினன் ; அதன்புக ழிசைப்பாம்.

தெய்வக் கற்பகஞ் செழுமலர் கொழுங்கனி தழைத்தே,
வைய கத்தினுக் களித்திடும் வகையினைப் போலே,
துய்ய நல்லருட் குலந்தருஞ் சுடர்பெறு மைந்தர்,
செய்ய வாழ்வினாற் செகத்தினிற் கினியன செய்தார்.

இனிய வாய்மையும், வீரமும், எழில்பெறுந் திருவும்,
முனிவர் போற்றிடு ஞானமு, முதற்குண வளமும்,
புனித வாழ்க்கையும், புலமையும், பொதுநலப் பணியும்,
மனித ராகிய தேவரின் மாண்பிவை யாமே !

புலனை வென்றவர் புவிமிசை அமரராய்ப் பொலிவார் ;
நிலனை வென்றவர் நீதிநன் னிருபராய்த் திகழ்வார் ;
* இலனை வென்றவர், மனைதரும் இன்பமோங் குவர் ; தன்
னலனை வென்றவர் பொதுநல நண்பராய் வாழ்வார்.

நாக ரிகத்தினிற் சிறந்தனர் நறுங்கலைச் செல்வர் ;
வாகை யோங்கிய வலியதிண் புயத்தினர் ; நாளும்
ஈகை யின்பமும், சிவந்துலங் கிதயமும் படைத்தார்
பாகி னந்தமிழ் போன்றனர் பண்பினு லவரே.

செங்கண் மாலுயிர் காத்திடச் சிறப்புடன் அயனும்,
அங்கண் மாநிலத் தாருயி ரணிகளை வகுக்க,
துங்க மாஞ்சக்தி சிவனருட் சுடரினில் வளர்ந்த
மங்க லத்திரு மரபினர் கிளையினை யறிவாம்.

நிலவு ருண்டையைப் போலவே நிலையிலா அரசும்,
பலகு லம்பறித் தாண்டிடும் பாக்கியப் பணயம்,
வலியர் கைவழி வழிந்துசெல் வழக்குடை யாட்சி,
பொலியு மோர்புறஞ் சகடைபோற் போகுமோர் புறமே.

வீர மோங்கிய செந்தமிழ் விரிநில வேந்தர்,
ஆரி யர்மதி யிரவியர், அங்கியர், சிங்கர்,
மோரி யர்புத்தர் கிறித்துவர் முகம்மதி யர்கள்,
மார தர்முதல் மிகப்பலர் வழிவழி புரந்தார்.

சிங்க மோங்கிய நெஞ்சினர், செருபடைத் தலைவர்,
வங்க மோங்கிய வாணிகர், தொழில்வளத் தாலே
தங்க மோங்கிய தருகையர், தமிழ்க்கலை முழங்கும்
சங்க மோங்கிய தென்னவர் மன்னவர் தாமே.

தண்மை யோங்கிய குடையினர் ; தானையிற் சிறந்தார் ;
வண்மை யோங்கிய செல்வர்கள் பொன்னிநல் வளவர்,
திண்மை யோங்கிய புயத்தினர் சேரநாட் டரசர் ;
உண்மை யோங்கிய புகழினுக் குடையவ ரிவரே.

அமரர் உய்ந்திட நஞ்சினை அமுதென நயந்தே,
எமனை யெற்றி,மன் மதனையும் எரித்தவன் அடியார்,
விமல மாலடி யார்—இவர் பாடிய வேதத்
தமர மோங்கிடுந் தண்டமிழ் நாட்டினுக் கிணையோ ?

கடவுள் உள்ளமும், கலைகளுங், கதைகளுங், கவியும்,
கடவு ளாடலைத் தாங்கிய கவின்பெருந் தலமும்,
கடவுட் காதலும், வீரமும், கற்புமோங் கியதாம்
கடவு ளாலய மாகிய கனிதமி ழகமே !

## பிரகலாதன்

நஞ்சும் வேழமு நாத்திகக் கொடுமையுங் கொண்டே
அஞ்சு வெஞ்சினக் கனகன்செய் இடர்களை அஞ்சான்
தஞ்ச மென்றரி நாமமே தளர்வறப் புகன்றான்
பிஞ்சி ளம்ப்ரக லாதனின் பெருமையைப் புகல்வாம்.

## இராமபிரான்

வேத வேள்வியும், வரங்களும், வேந்தெனுஞ் செருக்கும்,
மாத ராசையால் இழந்தனன் மதியிலி யரக்கன்
பாத கத்தலை பத்தையும், ஒருகணை யாலே
தீத றக்கொய்த தீரனும் இராமனைப் பணிவாம்.

## இராமன், இலக்குமணன், சீதை

யார்தம் அன்னைகை அரணியம் பணிவுடன் ஏற்றார்,
யார்த லைவனை அத்தனை அன்புறத் தொடர்ந்தார்,
யார்இ மைப்பறு பணியுடன் அண்ணலைக் காத்தார்,
யார்இ ராமனும் சீதையும், இளவலும் அனையார் ?

## பரதன்

அண்ண லற்றமன் னரசினை அரசெனப் புரவான்
புண்ணியன் றிருப் பாதுகை பூமுடி யணிந்தான் ;
மண்ணி னின்பத்தை மதித்திலன் ; வாய்மையன் பினையே
கண்ணிற் போற்றிய பரதனைக் கருத்தினி லணிவாம்.

## அனுமான்

ஆசை மாக்கடல் கடந்தனன் ; அச்சுதன் பணிக்கே
ஓசை மாக்கடல் கடந்தனன் ; அரக்கரை யொறுக்கப்
பூசன் மாக்கடல் கடந்தனன் ; பொருவரு வீரா
வேச மாக்கட லானவன் வெற்றிமா ருதியே !

## கண்ணன்

ஊதினான் குழல் உயிர்களின் உளத்தினைக் கவர்ந்தான் ;
கோதி லார்தமைக் காத்தனன்; கொடியரைக் குமைத்தான்;
ஆதி பாரத மாக்கினான் ; அறம்வளர் கண்ணன்,
ஓதினான் அருட் கீதையை உலகமின் புறவே !

## பாண்டவர்

சூதி னாற்புவி கவர்ந்தனன் ; சொற்கட வாத
கோதை நற்றுயில் உரிந்தனன் மதியிலாக் கொடியோன் ;
பாத கத்துயர் அனைத்தையும் பரிவினாற் பொறுத்தார்—
மாத வன்பத மலர்தொழும் பாண்டவர் வாழ்க !

### விசயன்

நல்ல றம்பொறை தாங்கிய தருமனுக் கிளையோன்,
கொல்ல றங்கிளர் கும்பலைக் குமைத்திடக் கண்ணன்
சொல்ல றத்துடன், சிவனருள் சுடர்க்கணை தாங்கும்
வில்ல றத்தினன், விசயனின் வீரத்தைப் புகழ்வாம்.

### பெண் சக்தி

தணலும் கற்பினுற் சானகி யிலங்கையைச் சுட்டாள் ;
குணமி லார்கெடத் திரௌபதி குறுநகை புரிந்தாள் ;
அணங்கு பார்வதி, தவத்தினல் அரனுட னமர்ந்தாள் ;
வணங்கு வோம்இவர் மலரடி ' சக்தி ஓம் ' எனவே.

### புத்த பகவான்

பேதைச்செல்வத்தைப் பிணியெனத்துறந்து, மெய்த்தவமார்
மேதைச் செல்வத்தை மேதினிக் கினிதுறத் தந்தான்,
போதிச் செல்வனும் புத்தனைச், சித்தனை, ஞானச்
சோதிச் செல்வனைத் தொழுதவர் பதங்களைத் தொழுவாம்.

### மகாவீர பகவான்

பற்ற றுத்தவன் * பத்தறம் போற்றிய பகவன்,
முற்றும் அன்புரு வானவன், அஹிம்ஸையின் முதல்வன்,
குற்ற மற்றசற் குணநிதி, அதிமகா வீரன்
பொற்றி ருப்பதம் போற்றினுர் புண்ணியம் புகழ்வாம்.

### அசோகன்

புத்தர் பொன்மொழி புவியெலாம் பரவிட நின்றுன் ;
கத்தி யின்றிநற் கருணையால் உயிர்களைக் காத்தான் ;
குப்த மூரியன் குலமணி, அசோகனைப் போலே
இத்த லத்தினிற் சனகன்பின் யாவரே யிருந்தார் ?

### புகழ் பெற்ற அரசர்

புஷ்ய மித்திரன், சதகர்ணி, புகழ்பெறுங் கனிஷ்கன்,
விஷ்ணு வர்த்தனன், விக்கிர மாதித்தன், சிமுகன்,
ஹர்ஷன், ஆதித்தன், கிருட்டின தேவன், சுவர்ண
வர்ஷத் தாற்கவி வளர்த்தநம் போஜன்வா ழியவே !

---

* *தூய்மை, வாய்மை, தவம், தியாகம், அடக்கம், நேர்மை, சீர்மை, ஈகை, அன்பு, அருள்*

சித்தாந்தப் பெரியார்

''அன்பெ னும்சிவம், அன்பினுல், அன்பருக் கறிவாம் ;
இன்ப மேயது, தில்லேயாம் இதயத்தில் வளரும் ;
துன்பப் பற்றினேத் துடைத்தருட் சுடர்வழி சேர்மின் ! ''
என்பர் தூயசித் தாந்தத்தின் இணையறு பெரியார். ''

திருவடியார்

உப்பும் அப்பும்போற் சிவத்துடன் ஒன்றிய தூயர்,
அப்பர் சம்பந்தர் சுந்தரர் வாதவூ ரடிகள்
ஒப்பு மெய்கண்டார், மந்திரம் உரைத்தமா மூலர்,
செப்பு மின் இவர் திருப்பெயர் சென்மமுய்ந் திடவே !

வாய் மனங்கடந் தருள்வழி வாய்ந்திடும் பொருளே
தோய ருட்சுடர் வள்ளலார், துறவிவெண் காடர்,
தாயு மானமா முனிவர்தந் தமிழெலாம் அமிழ்தம் ;
தூய காதலோ டருந்துமின் பொருந்துமின் சுகமே ! 120

'' பத்தி செய்குமின் ! பதமலர் பற்றிவீ டடைமின் !
முத்தி யின்முதல் வன்ஹரி முகுந்த''னென் றேதும்
மத்து வர்உடை யவர்நிமை, மாதவ னன்பர்,
நித்த மும்நம துளமிசை நிலவுக மாதோ !

ஆதி சங்கரர்

'' சாதி யற்றது ; சமரசச் சுடரது ; தருக்க
வாத மற்றது ; மோனத்தில் வளரும்சுத் தான்மா
போத மானது ; பொருளது நீ'' யெனப் புகலும்
ஆதி சங்கரன் அறிவினுல் ஐக்கியம் அடைவோம்.

ஜாரதுஷ்ட்ரன், கிருஸ்து, முஹம்மது நபி

மிக்க வுள்ளன்போ 'டிறைவனே மேவுமின்' என்ற
சொக்கத் தூயனும் ஜராதுஷ் டிரன் ; சிலு வையிலே
திக்கெ லாந்தொழுந் தியாகத்தீ யெனவளர் கிறிஸ்து ;
மக்க மாநகர் நபிமணி வாழிய மாதோ !

மகான்கள்

தீர ராகிய நானகன், கோவிந்த சிங்கன்,
வீர ராமதாஸ் விரும்புசி வாஜி,ராம்மோஹன்,
ஆரி யர்க்குயி ரான தயானந்தன், ஞான
வாரி யாம்குரு பரமஹம் ஸன்புகழ் வாழ்க !

சத்திய ராஜன்

இனைய வீரரும் இறைவரும் பகவரும் இலகும்
புனிதமாம் அருட் குலத்தினில் இறுதியாய்ப் பூத்தான்—
தனையொவ் வாத்திரு மிகுந்தவன் சத்தியன் என்போன்
இனிய வன்வள நாட்டினை இசைத்திடு வோமால். 140

# 4. புண்ணிய பூமிப் படலம்

*வீரரின் அன்னை, ஞான விளக்கொளி பரவு கின்ற
பாரினுக் கன்னை, பொன்செய் பசுவளத் திருவின் ஓங்கும்
சீரினுக் கன்னை, செங்கோற் செழிப்பினுக் கன்னை, யோக
பூரணர்க் கன்னை, எங்கள் புண்ணிய பூமி வாழ்க !

வரையெலா முனிவர் கூட்டம் ; வனமெலாங் குருகுலங்கள்
திரையெலாம் கப்பலோட்டம்; திசையெலாம் திருவின் காட்சி;
கரையெலாம் செல்வக் குப்பை; கவின்மலர், கனிகு லுங்குந்
தரையெலாம் அமுத வாரி தழைத்துயிர் வளர்க்கு நாடே !

வெய்யிலு மழையுங் காற்றும் விரும்பிய வளமை நல்கச்
செய்யவள் உலாவுஞ் சோலை ; செழுமலர்த் தேனை யுண்டு
மையரி யினங்கள் ஊத, மருதயாழ் முழங்கக் கண்ணன்
கைவளர் முரளி பாடக் கலைநடம் புரியு நாடே !

† இருதொடர் கடலோ ரத்தில் இலகுகன் னியை வணங்கப்
பருவதப் படிக ளேறிப் பனிவரை வீற்றி ருந்தே,
குருசிவ சக்தி யிந்தக் குவலயக் கோயி லெங்கும்
அருளர சாட்சி செய்யும் அரியணை போன்ற நாடே !

திருநதி, ‡விமலை க்ருஷ்ணு, பொன்னி, பெண், வைகைதாம்ர
பருணிகி ழக்கே ; மேற்கே பாய்ந்திடும் சிந்து தப்தி,
நருமதை வளர்க்கும் பச்சை நல்வளத் திருவி னோங்கும்
மருதயாழ் கேட்டுக் கோக்கள் மடிசொரிந்துலாவு மன்றே ! 20

ஆறணி வெளிகள் ; செங்கால் அன்னங்கள் ஆடும் பொய்கை ;
சோறணி பழனம், தெய்வச் சுடரணி திருத்த லங்கள் ;
வீறணி பிரம சாரி விரிகலை பயிலுஞ் சாலை ;
பாரணிக் கழகு செய்து பயனுற விளங்கு நாடே !

---

* *அறுசீர் ஆசிரிய விருத்தம்.* **பண்** *இந்தோளம்.* **சந்தம்** *தானன தனன தான, தனதன தனன தான. கல்யாணி.*

† *மேற்கு, கிழக்குத் தொடர்மலை* ‡ *கோதாவரி*

தத்தை, சிச்சிலி, குயில்கள், சாதகம், கருடன், பூவை,
முத்தமிழ் பயிலும் ஓசை ; மோகனக் குழலும் யாழும்
மத்தளந் தழுவும் ஓசை ; மங்களக் கருவி யோசை ;
வித்தகர் அருட்பா ஓசை விண்ணெட்டப் பண்செய் நாடே !

ஓங்குறு தொழில்க ளோசை, ஓவெனும் கடைக ளோசை,
ஆங்குறு வணிகர் செல்வம் அளந்துபை கட்டும் ஓசை ;
நீங்கறு வண்மை யாளர் நீடிசை பெருகும் ஓசை ;
பாங்குறு விழாக்க ளோசை பரவைபோல் ஒலிக்கு நாடே !

பொன்னெலார் வயல்கள் ஓங்கிப் பூந்திருப் பொழில்கள் ஓங்கித்
தென்னை, மா, பனசம், வாழை,செங்கரும் போங்கி யெங்கும்
கன்னலுந் தேனும், பாலுங் கனிரச வளமு மோங்கி
அன்னம்பா லிக்கு நாட்டின் அழகெலாம் அமுத வூற்றே !

## பாரத சமுதாயம்

வேதமும் வாழ்வும் ஒன்றும் ; வீரமும் அறமும் ஒன்றும் ;
காதலும் கற்பும் ஒன்றும்; கண்ணுடன் கருணை யொன்றும்;
போதமும் குணமும் ஒன்றும்; புதுமையும் பண்டும் ஒன்றும்;
நீதியும் அருளும் ஒன்றும் நெறியினிற் பெரிய நாடே !

ஊகமுங் கலையுங் கல்வி யொழுக்கமும், பரமா னந்தத்
தாகமுந் தவமும், வீரத் தணலுற முயலும் வெற்றி
வேகமு முடைய தீரர், விரிநில முதவு கின்ற
போகமுந் துய்ப்பர்; யோகப் பொருளினைப் பொருந்திவாழ்வார்.

புலன்களில் அடக்க மிக்கார் ; புந்தியிற் றெளிவு மிக்கார் ;
உளங்களில் அன்பு மிக்கார் ; உயிர்க்கெலாம் அருளே மிக்கார்.
வளங்களில் வண்மை மிக்கார் ; வாழ்க்கையில் அழகு மிக்கார் ;
நலங்களில் இறைவ னுக்கே நன்றிசெய் தொண்ட ரன்னோர்.

ஈதலில் இன்பங் கண்டார் ; இன்பத்திற் கடவுள் கண்டார் ;
மாதரில் அன்னை கண்டார் ; மண்ணிடை விண்ணைக் கண்டார் ;
காதலிற் கலையைக் கண்டார்; கலையினில் வாழ்வைக் கண்டார்;
சாதலும் பிறப்பு மில்லாத் தம்மையே கண்டார் மாதோ !

வெண்மதி, மரைகள் பூத்து, வீங்கிரு கனிக ளேந்தி,
ஒண்கொடி மின்ன லேறி, மயிலென உலாய தன்னூர் ;
மண்ணில மோங்க வந்த மங்கலத் திருவின் மாதர்
கண்ணொளிர் தெய்வக்கற்பின் கனலினைவணங்கு வோமால்

மலைதரு வளங்க ளீவார் ; மருதநல் வளங்கள் ஏற்பார் ;
அலைதரு வளங்க ளீவார் ; அரியகான் வளங்க ளேற்பார் ;
கலைதரு வளங்க ளீவார், காசினிப் புகழை யேற்பார் ;
நிலைதரு ஞான மொன்றி நிகரென வாழுந் தூயர்.

உரிமையைப் பறிப்போ ரில்லை; உரிமையை யிழப்போ ரில்லை ;
சிறுமைக ளிழைப்போ ரில்லை; சீர்மையைத் துறப்போ ரில்லை;
வறுமையை யழைப்போரில்லை; தொழிலினை மறப்போரில்லை;
திறமைசால் அறிவும் வீறுந் திருவுட னோங்கு நாடே.

இரப்பவர் இல்லை. ' இல்லை ' என்பவ ரில்லை ; உள்ளங்
கரப்பவ ரில்லை ; பேதங் காண்பவ ரில்லை ; அன்பைத்
துறப்பவ ரில்லை. வஞ்சர் தொல்லையும் இல்லை. தன்னை
மறப்பவ ரில்லை. உண்மை மறுப்பவ ரில்லை மாதோ !

தருமத்தால் வெற்றி ; யோக சாதன மாகச் செய்யுங்
கருமத்தால் வெற்றி; செஞ்சொற் கவிகளால் வெற்றி; ஆன்ம
வொருமையால்வெற்றிஅன்பின்உள்ளத்தால்வெற்றிதெய்வப்
பெருமையால் வெற்றி யோங்கிப் பிறங்கிய திந்த நாடே !

வீரரின் உயிரே, ஆன்ம வெற்றியின் விளக்கே, இந்தப்
பாரினுக் கெல்லா ஞானப் பரிதியே, சுருதித் தாயே !
தீரர்கள் போற்றி செய்யத் தேவர்கள் வாழ்த் தெடுக்கப்
பூரண யோக சக்தி யாகநீ பொலிக மாதோ !

காசினிக் கெல்லாந் தெய்வக் கதிரொளிக் கனலை நன்று
வீசிநீ வாழ்க, மண்ணில் விண்ணர சிலகச் செய்வாய்.
மாசிலாத் தேவ மாந்தர் மரபினைப் பெற்ற தாயே,
ஆசிதா வுனது சீர்த்தி யணிகவி பொலிய வென்றும் !

# 5. சித்தி நகரப் படலம்

*அத்தகை நாட்டுடை அரசன், அன்பர்கோன்,
சத்தியன் விளங்கிய தரும பீடமாம்,
சித்திமா நகரணிச் சிறப்பைப் பாடிட
முத்தமிழ் வாணியை முன்னு வாமரோ !

---

* *இப் படலம் கலிவிருத்தங்களா லானது ; துள்ளிசை.*

**சந்தம் :** *தன்னன, தானன, தனன, தானன. இந்தி சௌபாயி போலப் பாடலாம், ஆதி தாளம்.*

**ராகம் :** *பியாகு, தோடி, கல்யாணி. வேறிடங்களில் வரும் இதே வகை விருத்தங்களையும் இவ்வாறே பாடுக.*

மண்டல மடந்தையின் மதிமு கங்கொலோ ?
விண்டலத் தேவர்கள் விளங்கும் வீடிதோ ?
பண்டொடு புதுமையும் பயிலும் தாயகம்
தெண்டிரை முரசதிர் சித்தி மாநகர் !

பூமகள் வாசமோ ? புகழின் வாகையோ ?
நாமகள் வீணையோ ? நாட்டின் உள்ளமோ !
பாமணம், பூமணம் பருகுந் தென்றலில்
ஓமொளிக் கொடிவளர்ந் தோங்கு மாநகர்.

கவினெலாந் திரண்டிதன் காட்சி யானதோ ?
தவமெலாந் திரண்டிதன் தரும மானதோ ?
சிவமெலாந் திரண்டிதன் செல்வ மானதோ ?
புவியெலாந் திரண்டிதன் புகழைப் போற்றுமால் !

புனல்வளம், பயிர்வளம், பொங்கு பூவளம்,
இனமணித் திரள்வளம், இலகு பொன்வளம்,
மனைவளம், மாசறு மைந்த ரின்வளம்,
வினைவளங் கலைவளம் விளங்கு மாநகர்.

சுந்தர மலர்வனஞ் சொரியுந் தேன்மழை.
சிந்துரக் கனிவளஞ் செழிக்கப் பாயுமால் ;
அந்தரம் வியப்பவோர் அமுதப் பச்சைவான்
பந்தலிட் டிந்நகர் பரவு மாங்கொலோ ?

அம்புவி தனைவளர் அன்னை போலவே,
பம்புநல் அருவிகள் பயிர்வ ளர்த்திடும்
நம்புமெய் யடியவர் நாளும் ஓங்கவே,
சம்புவின் அருளெனத் தழைக்கும் வான்மழை !

நதியொலி, புள்ளொலி, நல்ல பாட்டொலி,
கதிமிகு தொழிலொலி, கல்வி நல்கொலி,
விதியையும் வென்றிடும் வீரர் பாயொலி
மதிமிகு கலையொலி மல்கு மெங்குமே.

* ஐந்தினை ஆளுவர் அந்தண் வீரர்கள் ;
† ஐந்திணை யாளுவர் ஆண்மை வீரர்கள் ;
‡ ஐந்தறங் காப்பரில் லறத்தின் வீரர்கள் ;
|| ஐந்தொழி லாளியின் அன்பு வீரரே !

---

* ஐம்புலன்கள் † மருதம், குறிஞ்சி, நெய்தல், பாலை, முல்லை
‡ யோகம், அறிவு வளர்ச்சி, தொழில் முயற்சி, வீர வளர்ச்சி, பொது நலம்.
|| ஆக்கி, அளித்து, நீக்கி, மறைத்து, அருளும் கடவுள்

அறமெனும் பூமியில் அன்பை நாட்டுவார் ;
உரமெனப் பொருளின்பம் ஊற்றிப் போற்றுவார் ;
குறைவறும் அருண்மலர் குலுங்க முத்திசேர்
நிறைகனி யுண்டவர் நீடு வாழ்வரே !

உண்டியிற் றூயவர், ஊனைக் கள்ளினைக்
கண்டிலர், கனவிலும் காமத் தாற்பிறர்
பெண்டிரை நயந்திலர், பெரிய நோக்கங்கள்
கொண்டவர் வண்டெனக் கூடி வாழுவார்.

அறந்தரும் இன்பமே யின்ப மானவர்;
திறம்பல படைத்தவர் தெய்வத் தீயினால்,
பிறர்துயர் துடைத்திடப் பிரியங் கொள்ளுவார்.
பிறர்நலந் தமதெனப் பேணும் பெட்பினர்.

திண்ணிய தோளினர் ; சித்தம் வென்றவர் ;
புண்ணிய வினையினர் ; புன்மை யற்றவர் ;
மண்ணியல் வாழ்விலு மகிழ்வர் ; சாதனம்
பண்ணிய யோகத்தின் பயனு மெய்துவார்.

நித்தியங் கல்வியும், ஆன்ம நேயமும்,
பத்தியுங், காதலும், பணிவும் போற்றுவார்
சத்தியின் கனலெனத் தருமந் தாங்குவார் ;
பத்தினிப் பெண்டிரின் பாதம் போற்றுவோம் !

சேயிழைக் கிம்மியும் சிறுமை நேர்ந்திடின்,
ஆயிரம் வாட்கரம் ஆர்த் தெழுந்திடும்.
நாயகர் சக்தியை நாற்பங் காக்கிடும்,
தூயவர் கற்பினைத் தொழுது போற்றுவாம் !

மற்புய வீரரின், மன்னர் நீதியின்,
சொற்பொழி புலவரின், சூழ மைச்சரின்,
பொற்புறு செல்வரின் புனித மாதரார்
கற்பெழில் அந்நிலக் காவ லாவதே.

தீரரை அமைத்திடுந் தெய்வச் சிற்பிகள்,
வீரரை யாக்கிடும் வீறு கொண்டவர்,
காரினும் கதிரினுங் கருணை மிக்கவர்
பாரிலே தவவொளி பரவும் அந்தணர்.

மஞ்சணை மணிக்கொடி யாடு மாளிகை,
கொஞ்சிளம் பூவையர் கோட்டி யாழுடன்,
அஞ்சலில் வீரரின் அதிச யக்கதை
பிஞ்சிளம் பிள்ளைகள் பேசப் பேசுவார்.

கார்வரை பொடிபடுங் கனத்த தோளினர் ;
தேர், பரி, கரிசமர் தேர்ந்த சூரர்கள்,
மார்புடைத் தெண்டிசை அதிர மற்செய்வார் ;
' யார்நிகர் இவர்க் ' கெனப் பகைவர் அஞ்சவே !

வேளையும் வடிவினில் வென்ற நல்லிளங்
காளையர், கருத்துற நோக்குங் காதலால்
வாளையங் கண்ணினர் மனதை நல்குவார் ;
கோளையு நாளையுங் குறிப்பர் யாவரே ?

கந்தனும், வள்ளியும் போன்ற காதலர்,
சந்தமும் பொருளும்போற் சார்ந்து வாழுவர்.
இந்திர போகமும், இறைவன் யோகமும்
வந்திவர் வாழ்வினில் வளர்வ தாகுமே.

சுந்தர மாளிகை, சுடர்பொன் முத்தணி
அந்தமில் விருந்தணி, யாவுங் கண்டிங்கே
இந்திரன் உலகமும் இலச்சை கொண்டன்றே
அந்தரத் திரையிடை அவிழ்த்த தேகொலோ ?

கொடைகளு மணங்களுங் கொட்டு மேளமும்,
படைகளின் கதிகளும், பவனிக் காட்சியும்,
அடலரி வீரரின் அணிவி ழாக்களும்,
நடைகளுங் கலைகளு நல்வி ருந்தரோ !

அருந்தவ நிலையங்கள், அறஞ்செய் சாலைகள்,
பெருங்கலை நிலையங்கள், பெண்டிர் சங்கங்கள்,
மருந்தளி நிலையங்கள், மணஞ்செய் மாடங்கள்,
விருந்தளி நிலையங்கள் விளங்கு மெங்குமே !

பயிர்வளம், பசுவளம், பண்ட மாற்றுடன்
உயிர்வளம் பெருகிட வுழைக்கும் வாணிகர்,
இயல்வளம் செயல்வளம் ஏற்றிக் கப்பலில்
அயர்வறக் கடல்கடந் தம்பொன் செய்வரே !

சிலம்பணி யிசைத்திடத் திருந டஞ்செயும்.
பொலங்கொளப் பொன்மணி கிண்கி ணென்றிடும்.
நலங்கெழு சரக்கினம் நாகம் ஊர்ந்திடும்.
கலங்கெழு கடலெனக் கனைக்கும் ஆவணம்.

## வேளாளர் பெருமை

மன்னுயிர்க் குயிர்தரும் பயிர் வளங்களைப்
பொன்னினும் போற்றுவர், புவியை ஊட்டுவார்.
மன்னவர் மதித்திட மாண்புற் றேங்கினர்
இன்னிய உழவரின் ஏரைப் போற்றுவாம் !

சாத்திரக் கூச்சலும் சமயச் சண்டையும்
கோத்திரப் பொய்களுங் கொள்வ தில்லையால்,
சூத்திரர் பிராமணர் என்னுஞ் சொல்லிலை ;
ஆத்தும நேயத்தால் அனைத்தும் ஒன்றரோ !

விலகறு மெய்வழி விரும்பிச் செல்லுவார்
' வில ' கென யாரையும் வெம்மை செய்திடார்.
உலகுயர் ஆலயம் ; உயிரின் கூட்டமே
இலகுயர் கடவுளென் றிதயத் தெண்ணுவார்.

இனியநல் லிசையினில் எழுத்தின் கூட்டம்போல்,
தனிவினை தாங்கியும் சங்க மாகவே
மனிதர்கள் வாழ்ந்தனர். பலா மரத்திலே
கனிவளர் பான்மையைக் கண்டுள் ளொன்றியே.

கண்ணிலத் தாய்அருட் கைகள் அன்னவர்,
எண்ணறு தொழிலினர், இதயம் ஒன்றுளார்.
புண்ணியர் கண்ணியர் ; பொறுமை நோயிலார்.
திண்ணியர் ஆத்தும தீர ராவரே.

பழரசந் தேனுடன் கலந்த பான்மையோ !
குழலுடன் வீணையும் குலவும் இன்பமோ !
அழகிளம் பெண்மையும், அறிவின் ஆண்மையும்
பழகிடும் பண்பினைப் பகர லாகுமோ ?

மண்ணக மிலையிது விண்ணை மானுமால் ;
விண்ணிலை விண்ணையும் வென்ற வாழ்க்கையால்.
புண்ணிய நதியணி பொன்னின் மாநகர்
கண்ணெனக் காத்தவன் அரசைக் காண்பமால்.

# 6. சத்தியன் அரசியற் படலம்

'ஆதி மன்னர் அமர்ந்த அரியணை
சோதி சுந்தரி யிந்திரை தன்னுடன்
பாதி தாங்கிடப் பாருயிர் தன்னதாய்
நீதி தாங்கி நிலவினன் சத்தியன்.

---

* கலி விருத்தம்:— *கல்யாணி ராகம்-ஆதி தாளம்; சந்தம்: தான தன்ன—தனந்த—தனதன.*

† செங்கதிர் முகத்தான் ; ஞானத் தீக்கனல் விழியான் ; கோடி
சிங்கத்தை வென்ற வீரத் திண்ணிய புயத்தான் ; ஈகை
தங்குநீள் கரத்தான்; சாலத் தயைமிகும் உளத்தான்; வெற்றி
பொங்குயர் புகழான்; மக்கள் போற்றிடு மன்னன் மாதோ !

அன்பரி யணையாய், ஓங்கும் அறமதே செங்கோ லாக,
மன்பதை யுள்ளம் போற்று மாட்சியே மகுட மாக
நண்பருட் குடையாய், நாட்டு நன்மையே நாட்ட மாகப்
பண்புடன் அரசு செய்தான் பழுதிலா வாய்மை யானோன்.

பொறையிலே **தருமன்** ; வீரப் போரிலே **விசயன்** ; ஞான
நிறைவிலே **சனகன்**; செய்ய நெறியிலே **அசோகன்**; ஆட்சி
முறையிலே**பொற்கை**; நல்லமுயற்சியில் **வளவன்** அன்னோன்
இறைமைசேர்திறமை தன்னில் **இந்திரன்** போன்றான் மாதோ!

கல்வியிற்பெரியான்; பொங்குங்கருணையில்வானைப்போன்றான்;
செல்வியின் இருக்கை யாவான்; சீர்த்தியில் இராமன் போன்றான்;
அல்லலிற் கைகொ டுக்கும் அன்பினில் அன்னை போன்றான் !
பல்லுயிர் உலகம் வாழ விளங்கிடும் பரிதி யன்னான் !

குடிகளிற் குடியே யாவான் கோக்களிற் கோவே யாவான் ;
அடியவர்க் கடியா னவான் ; அற்றவர்க் கரும்பொன்னவான்
கொடியவர் கால னவான் ; குவலயத் தோழ னவான் ;
முடிவிலா வுயிரின் உள்ளம், உளத்துடிப் பானன் மாதோ !

அன்னவன் காதல் அன்னம், அமுதவாய்க் குமுதச் செங்கண்,
மின்னிடை, அருணச் சோதி மிளிர் தரும், அழகுத் தெய்வம்,
மன்னறத் துணைவி, நல்ல மனையறத் துணைவி, ' எங்கள்
அன்னை' யென் றுலகம் போற்றும் அருங்குணச் செல்விமாதோ

பாலுடன் தேன்க லந்த பான்மையர், வாய்மை யாளர்
நாலுடன் ஐந்தும் போற்றி, நல்லன செய்தார் ; அன்னோர்,
வேலுடன் வெல்லும் வெற்றி யதனினும், விரும்பி அன்புக்
கோலுடன் கொண்ட வெற்றி குடிகளுக் கினிய தன்றே.

கற்றறி புலவர், காலங் கணக்கிடங் கருவி, செய்கை
முற்றறிந் தொற்ற றிந்து முடிபுரை சூழ்ச்சி யாளர்,
விற்றறி யார்தம் வாழ்வை, வீணுரை யறிகி லாதார்,
சுற்றுல கியல்ப றிந்து தொண்டுசெய் யமைச்சர் மாதோ !

---

† *அறுசீர் விருத்தம்—கல்யாணி ராகம்; சந்தம்: தன்னன தனன தான தானன தனன தான.*

வடுவறு காட்சி யாளர், மனத்தினைக் கரவார், நல்ல
விடுதலை வீரர், நாளும் பொதுநல விரதம் பூண்டார்,
கெடுதலைச் செய்யார், யாரும் கீழென நினையார் ; உண்மை
நடுநிலை யாளர் ; வேந்து நம்பிய தொண்டர் மாதோ !

முந்தர சேத்தும் ஆசான் பாரத முனிவ னுவான்.
மந்திரத் தலைவன் வாய்மை வடிவெனும் சித்தி மானும்
வெந்திறற் சேனை முற்றும் விஜயனே நடத்தி வென்றான்.
தந்தனன் சுமதி கல்வி. சதுரனுந் தொழில் வளர்த்தான்.

வங்கர், கோசலர், பாஞ்சாலர், மாரதர், அரச புத்ரர்,
அங்கர், கூர்ச் சரர்,கலிங்கர், ஆந்திரர், தமிழர், சேரர்,
சிங்கர்,கன் னடர், நேப் பாளர், சிந்தியர், சோளர், சீனர்,
தங்கிடத் தனது நீழல் சத்தியன் அரசு செய்தான்.

பலகிளை யாறு பாய்ந்து பயிர்களை வளர்ப்பதே போல்,
உலகுயிர் வளர்க்கும் அன்னோன் ஓங்கிய செங்கோ லாட்சி.
இலகிடும் இரவி தன்னிற் கதிர்க்கணம் இணைந்த தொப்ப
நிலமொழி யாளர் நீதி நிருபனைப் பொருந்தி வாழ்ந்தார்.

ஒன்னலர், கள்வர், மாக்கள் ஒருதுயர் இழைத்தி டாமல்,
இன்னிய பரிச னத்தார் இதமுடன் பணிகள் செய்ய,
தன்னுயிர் பெருக்கி, மாந்தர் தம்முயிர்க் குயிராய் வைத்து,
மன்னனுந் தொண்ட னாக மன்னுயிர்ப் பணிகள் செய்தான்.

பூவினுக் கமுத மீயப் புயல்அலை முகப்ப தேபோல்,
தேவையி னளவு செல்வர் திறைகளை யேற்றுப் போற்றிக்
காவலும், சுகமும், சீரும், கல்வியும், தொழிலும் ஓங்க
மேவுயிர் உடலைப் போலே வேந்தனும் வேந்து செய்தான்.

கற்றவர் சொல்லைக் கேட்டுக் கடன்முறை செய்யு மன்னன்,
ஒற்றரால் அறிந்துத் தானே உருக்கரந் தேகிக் கண்டும்,
குற்றமுங் குணமுந் தேர்ந்தே குறைகளை யுடனே போக்கி
உற்றவர்க் குதவி செய்தான் உலகினுக் கினிய னானன்.

குருகுலக் குமரர் கல்வி, கொற்றமெய் வீரர் வீரம்,
திருவுடை அந்த ணாளர் செம்மை, நன் மாதர் கற்பு,
பெருகுவே ளாளர் சேமம், வணிகரின் செல்வம் ஓங்கத்
தருமமே பொருள்கொடுக்கத்தழைத்தது மன்னன் செங்கோல்.

ஆவியும், உடலும், உள்ளும், அறம், பொருள், இன்பமாகத்
தேவியல் வாழ்வை நோக்கிச் செழித்திடும் சமுதா யத்தைக்
கோவியல் வழுவா தாண்ட கொற்றவன் கதையைச் சொல்ல
நாவினி லிருந்து வாணி நல்குக கவிதை வெள்ளம்.

# 7. தியானக் காட்சிப் படலம்

சத்தியன்

தேவி சக்தியின் அருளினாற் சிந்தையி லுதித்து,
நாவி லோடிய நற்கவி வெள்ளம்போற் செழித்த,
காவி லோடிய வோடையிற் கனி நகை புரிந்தான்
பூவி லாருயிர் வளர்த்திடும் புண்ணியக் கதிரோன் !

ஞால சுந்தரி நாண்மல ரணியுடன் பொலிந்தாள்
கோல மாதவன் குழலெனக் கொஞ்சிட வசந்தம்,
காலை பூத்தது ; கமலங்கள் பூத்தன ; மன்னன்
வேலை பூத்தது ; விழித்தது வினையுடல் வாழ்வே !

புனித மாதவர் உளமெனத் தெளிபுன லாடி,
இனிய புத்தணி யணிந்துநல் லியற்கையின் வனப்பில்,
பனிம லர்நகும் பசுங்குடி லமர்ந்துநங் கோமான்
கனிம னங்கசிந் துருகிடக் கடவுளை நினைத்தான் :

"வான கத்தில் வளர்ந்திடுஞ் சோதி நீ !
தேன ளாவு மலரிற் சிரிப்பு நீ,
நானென் றுள்ள நடு, மழை மின்னென
மோன மாக நடஞ்செயு மூர்த்தியே !"

"மலைய ருவிவ ளர்வதுன் மாமறை ;
கலைய ருவிவ ளர்வதுன் கற்பனை ;
அலையி லாடுவ துன்பர மானந்தம் ;
தலைவ னேயருள் பாலிக்குந் தந்தையே !"

"உலக மெல்லாம் ஒருகுல மாகவே
கலக மின்றி யுனைக்கலந் தோங்குக !
நலிக தீவினை ; நல்லன யாவுமே
பொலிக வுன்னருள் போற்றி, இறைவனே !"

இந்திரை

இன்னவா றிறைஞ் சும்புவி வேந்தனை,
மன்ன ரசிவணங்கிட மங்கலப்
புன்ன கைபொலி யப்புனி தத்திரு
மின்ன மின்ன மிளிர்ந்து நெருங்கினாள்.

மயில்க ளாடின ; மாங்கனி வாயிளங்
குயில்கள் பாடின ; கொஞ்சின கிள்ளைகள்.
பயிலும் பூவைகள் பாய்ந்தன ; பச்சிளம்
வெயிலு கந்து விலங்கினந் துள்ளின.

அன்னக் கூட்டம் அணிநடை கற்றுற,
வன்ன மானினம் வாட்கண் வியந்திட,
பொன்வண் டுதிடப் பூமுகங் கண்டதும்,
மென்கை தொட்டதும் பன்மலர் மேவிட.

இந்திரை, சத்தியன்

கொடிக ளோடிக் குளிர்பசும் பந்தலில்,
அடிகள் வைத்தனள் அன்புடன் இந்திரை ;
“படியை யாளும் பராசக்தி யன்னையின்
வடிவமே” யென மன்னவன் போற்றினன்.

அருமை யாகும் உயிரதி னின்னிய
வுரிமை நாதனை யொண்சுடர்க் கற்பினள்,
ஒருமை யன்புடன் போற்றி யுளமிசை,
திருவ டியில் அருச்சனை செய்தனள்.

காதல் வாழ்விற் கடவுளைக் கண்டிடும்,
ஓத ரியவு யர்தவ யோகத்தின்
சாத கர்சிவ சக்தியென் றேரணை
மீத மர்ந்து தியானத்தின் மேவினர்.

பத்தி யோங்கிடப் பார்வையுள் ளோங்கிடச்
சித்த மூன்றித் தியானம் நிலைத்திடச்
சுத்த சக்திச் சுடரை வணங்கினர்
நித்த நித்த நினைத்தது கூடவே.

இதய மொன்றினர் : இன்னுயிர் ஒன்றினர் ;
மதியு மொன்றினர் உச்சி மரைமிசை,
பதியை யொன்றினர் பாய்கடல் வெள்ளத்தை
நதிக ளொன்றிய நன்மையைப் போலவே.

அந்த வேளை யிறைவனிவ் வன்பரின்
சிந்தை யாகுந் திருக்குறிப் பீந்தனன் ;
இந்தி ரையுள் இலங்குமக் காட்சியை
முந்து வேந்து முகத்தினிற் கண்டனன்.

“என்னுயிர்க்கமுதே, கற்பின் எழில்பெறும் அழகே, இன்றுன்
பொன்முகம் பூரிக் கின்ற பொருளுரை” ! யென்ன வேந்தன்
“ மன்னவா ! மனத்தி னுள்ளே மங்கலக் காட்சி கண்டேன் ;
உன்னரும் உவகை யாலே யுதித்ததப் பூரிப்” பென்றாள்.”

'' பங்கய முகமும், அன்பு பாய்ந்தொளிர் மனமும் பூத்த
மங்கலக் காட்சி யென்ன வென்'' னென வினவ மன்னன்,
செங்கதிர் முகத்தை நோக்கித் தேன்மொழி தேர்ந்து, நெஞ்சிற்
பொங்கிய மகிழ்வின் ஊற்று வாய்வழி பொழியச் சொன்னாள் :

'' நானெனும் உணர் வொடுங்கி, நாதமும் ஒடுங்கி, யாழ்ந்த
மோனத்தி லெனுட்புகுந்த முச்சுடர்ப்பொலிவென்சொல்வேன்!
ஞானத்தி னெல்லே கண்டேன் ; ஞாலத்தி லெங்கு மின்ப
வானத்தின்அரசைக் கண்டேன்; மகிழ்வினுக்கெல்லேகாணேன்!

'' பொம்மென வுலக மெல்லாம் போரிருள் படரக் கண்டேன் ;
வெம்மன வரக்கர் கூட்டம் வீறிட்டுப் பொருதக் கண்டேன் ;
செம்மையாந் தருமத் தாயின் சிந்தனே முகத்தைக் கண்டேன்;
'அம்ம' வென் றஞ்சி நின்றேன். அகன்றதக் கொடிய காட்சி !

'' மலர்தலேக் காலே சாந்த மகிழ்வுறக் கதிர்கள் வீசிப்
புலர்சுட ரொன்று கண்டேன் ; புதுயுகம் பிறக்கக் கண்டேன்.
பலர்தவம் புரிந்த நல்ல பயனிதென் றுளத்திற் கொண்டேன்
உலகைக்கண் விழித்துக்கண்டேன், உம்முகத்துவகைகண்டேன்.

'' ஈதென தருமைக் காட்சி'' யென்னுமுன், மன்ன னுங்கே,
காதலின் கனியைக் கண்டேன் ; கடவுளின்கருணே கண்டேன்;
பூதலம் வாழக் கண்டேன் ; புதல்வனே யினிது கண்டேன் ;
ஆதலி னருளால் இன்றென் அகக்குறை யகன்ற''தென்றான்.

''மாசிலா மணியே, சித்தி மரபினே வாழ வைத்த
தேசுலாங் கொடியே, கற்புத் தெய்வமே, திருவே, வாடா
வாசநாண் மலரே, யுன்றன் மங்கலக் காட்சி யாலே
காசினிக் கமுத மாகுங் கனியொன்று பழுத்த'' தென்றான்

# 8. முனியுரைப் படலம்

## பாரத முனிவர்

இமயமுஞ் சிறிய தென்றே யேறிடப் புயங்கள் விம்மிக்
கலமக்கண் ணிரண்டு மின்பக் கதிர்களால் விரிய, உள்ளம்
விமலனே யெண்ணி யெண்ணி வியந்திடும் அந்த வேளே,
சமதம சித்தி பெற்ற தவமுனி வரனும் வந்தான்.

மலேயின் மாண்பினன், மடங்கலின் மொய்ம்பினன்; ஆன்மக்
கலேயின் ஆழியான் ; ஞானமாக் கனல்விரி கண்ணன் ;
நிலவு செங்கதிர் மேனியான் ; நீளுயர் மின்னல்
உலவு கின்றதை யொத்தனன், உத்தம முனிவன்,

சிறக டித்தன ; தீங்குர லார்த்தன ; மீது
நறும லர்களை யுதிர்த்தன நளிர்வனப் புட்கள்.
உறுக வென்றன கன்றுகள் உயர்வுறத் துள்ளி,
நிறைத வத்தினர் உயிர்க்கெலா நேயரே யன்றோ !

அருமுனி வரவு கண்டாங் கரசனும் அரசி யாரும்
வருகவென் றுவகை கூறி, மணித்தவி சிருத்தி, வாசத்
திருமலர் தூவிப் போற்றிச் சேவடி பணிந்து நின்றார் ;
குருமுனி மனங்கு ளிர்ந்து நன்மொழி கூறி னானால் ;

முனிவர்

"ஆன்றநல் லறமுஞ் சீரும் அருளொடு பொருளு மோங்கி,
வான்றகு புகழ் சிறக்க, வையகம் புரந்து வாழ்வீர் !
கோன்றகு முறைசெய் யுங்கள் குலமுட னுலகும் வாழத்
தோன்றலைப் பெறுவீர் இன்பத் தூயனின் கருணை யாலே !"

சத்தியன், இந்திரை

"எனைத்தும் உன் அருளால்" என்றே இந்திரை கண்ட காட்சி
அனைத்தையும்அரசன்சொல்லிஅதன்பொருள் இயம்பக்கேட்டான்.
இனித்தமென் முறுவல் பூத்து, மனங்குவிந் திருந்து சற்றே,
தனித்தவக் கொழுந்திவ் வாறு சாற்றினான் சாந்த மாக :—

முனிவர்

"நல்லதுந் தீயதும் நட்பும் வெம்பகைத்
தொல்லையும் தொடர்ந்துறுந் தொல்பெ ரும்புவி ;
அல்லல்செய் அரக்கரிங்(கு) அமரத் தன்மையைக்
கொல்படை கொண்டினிக் கொடுமை செய்வரால்."

வீரியச் செருக்கினால் வெய்ய செய்திடும்
போரியல் அரக்கராம் பொய் யிருள்கெடச்
சூரியன் போலருட் சோதி மைந்தனுன்
பேரியற் குலத்தினிற் பிறங்கு வானரோ !

மாற்றுவன் பழையன ; மற்று நூதனந்
தோற்றுவன் ; புதுயுகந் துலக்கி யாளுவான் ;
வேற்றுமைச் சமர்களை வேரொ டெற்றுவான் ;
போற்றுவன் புண்ணிய பூமி யின்புகழ் !

"இதுபொரு ளிந்திரை காட்சிக் கா" மெனப்
பொதுமறை முனிவரன் புகலக் கேட்டதும்,
புதுமகிழ் வெய்தினர் ; போற்றி செய்தனர் ;
முதுதவன் பதமலர் வணங்கி முன்னின்றார்.

"முனிவனே போற்றி, ஜீவன் முத்தனே, யுலகிற் கெல்லாம்
இனியனே போற்றி, யெங்கள் இறைவனே போற்றி" யென்று
பனிமலர் சொரிந்து பாதம் பணிந்தவுள் ளன்ப ருக்குப்
புனிதநல் லாசி கூறிப் போயினன் புரையி லாதான்.

என்னுடை மரபும் இந்த வுலகமும் இனிது வாழப்
பொன்னொளிர் புனித மைந்தன் பொலிவனென் றுவகை பூத்து
மன்னவன் அறங்கள் செய்தான்; மகிழ்ந்தனர்குடிகளெல்லாம்.
தன்னிக ரற்றோன் வந்த கதையினிச் சாற்று வோமால். 48

# 9. சுத்த ஜனனப் படலம்

*இலங்கு செய்யவள் போன்றநல் லிந்திரை,
விளங்கு வெண்கலை வாணியை யொத்தனள்
பளிங்குக் கூட்டிற் பகலவன் போலொளி
துலங்கு சேயைச் சுமந்த திருவினால்.

மூன்று காலமு முற்ற வுணர்ந்தனள் ;
ஆன்ற வேதப் பொருளறிந் தோதினாள்—
சான்ற மாதவர் சாற்றிடும் பூரணத்
தோன்றல் வந்து துலங்கிய மாண்பினால்.

மூல சக்தியின் முத்து முகமெனக்
காலை வாணகை காட்டி யெழுந்தது.
சோலை மாருதஞ் சோதி யுதயத்தை
ஞால மெங்கு நவின்றதந் நாளிலே.

முழவும், பாடலும், வீரர் முரசமும்,
குழலும் வீணையுங் கொஞ்சிளஞ் சேய்களின்
மழலையும் சுப மங்கல வேதமும்,
எழுமி னென்றிசை பொங்கின வெங்குமே.

பூக்கள் ளுண்டு புலம்பின வண்டினம் ;
பாக்க ளுண்டு பறந்தன புள்ளினம் ;
கோக்கள் பொங்குங் குடமுலை கொட்டின ;
மாக்க ளெல்லாம் புதுமகிழ் வெய்தின. 20

*கலி விருத்தம்—*துள்ளலிசை ; சந்தம் : தனன தானன தானன தானன ; சாப்பு தாளம் ; பிலகரி, அசாவேரி ராகங்கள்*

பத்தி ஞானம் பரிவரு ளீகையால்
ஒத்தி யல்பினில் ஒன்றினர் மாந்தர்கள் ;
சத்திய யுகம் வந்ததென் றுத்துமச்
சித்தர் செப்பினர் சேம வுரைகளே.

வெற்பி னூற்றிற் படிந்திள வேனிலின்
பொற்ப ணிந்த புதுமலர் கொய்துடன்,
கற்ப ரசிக ணவனைக் கண்டுபின்
இற்பு குந்ததும் இன்பமொன் றெய்தினள்.

பொன்னின் காலையிற் பூத்த பரிதிபோல்,
உன்னு முள்ளத் தொளிர்தவத் தீயைப்போல்,
அன்னை தாங்கும் அருட்சுடர்ச் சோதியான்,
மின்ன லென்ன மிளிர்ந்து பிறந்தனன்.

பாடி னார்திருப் பாவையர் பாசுரம் ;
ஆடி னார்பர மானந்தங் கொண்டவர் ;
ஓடினார் உரைத் தார் அர சன்வரக்
கூடி னார் ; சுப வேளைகொண் டாடினார்.

சத்தியன்

*விரைந்துதன் குலமொளிர் விளக்கை வேந்தனுங்
கரந்தனி லேந்தினன் ; களிசி றந்தனன்,
சிரந்தனை மோந்தனன் ; செல்வ முத்திட்டான் ;
கரந்தனைக் கொஞ்சினன் ; காதல் விம்மினன். 40

" பொங்குக பூவினிற் புனித னாட்சியே ;
மங்குக தீவினை, மறைக வெம்பகை ;
தங்குக சத்திய தரும " மென்றுவான்
மங்கல துந்துமி வழங்கிற் றெங்குமே.

வசையறு வரதனும் வந்த வாசகம்
திசைதிசை பரவலுஞ் செய்ய நல்லவர்
விசைபெற வந்தனர், வேந்தைக் கண்டனர்
இசைகளைப் பொழிந்தனர் இறைவன் வாழ்கென.

பாரத முனிவர்

மலர்விழி, மலர்முகம் மலர்ந்த புன்னகை,
மலர்க்கரம் மலர்ப்பதம் மலரின் மேனியால்
இலகிடும் புனிதனை இனிய மாமுனி
உலகள வுவகையி னுவந்து போற்றினன்.

* **சௌபாயி** *போல்* ; *ஆதி தாளம்* ; *பியாகு, நாட்டைக் குறிஞ்சி ராகங்கள்* ; **சந்தம்** : *தன்னன, தானன, தனன தானன.*

"கண்ணினில் அறிவொளி கனலும் கண்ணனை,
எண்ணரு மாதவர் ஏத்துந் தீரனை,
மண்ணக வாழ்வினில் வாய்க்கப் பெற்றவர்
புண்ணியம் புண்ணிய" மென்று போற்றினன்.

ஓடினர், உரைத்தனர் ; உரைத்த யாவர்க்கும்
சூடினர் மாலைகள் ; சுகந்தம் பூசினர் ;
கூடினர் ; அரியநன் கொடைக ளீந்தனர் ;
நாடிய பொருளெலா நயந்த தென்றனர்.

பாலொடு, நெய்தயிர், பாய சங்களும்,
கூலமுங் கனிகளுங் கொம்புத் தேன்களும்,
ஏலுநர் ஈபவர் இருவர் கைகளுஞ்
சாலவுந் தழைத்திடத் தருமஞ் செய்தனர்.

கேட்டவர் கேட்டவர் கிளர்ச்சி கொண்டு,தம்
வீட்டிலே மகக்கனி விளைந்த தாமெனக்
காட்டின ரானந்தக் கண்ண ருவியே
பாட்டுடன் அணிபெறப் பவனி வந்தனர்.

"மங்கல மாகுக மாந்தர் வாழ்வெலாம் !
பொங்குக பொன்மழை ! புலமை யோங்குக !
நங்குறை தீர்ந்தநாள் !" என்று மன்னவன்,
எங்கணுந் தானங்கள் இனிது செய்தனன்.

## 10. திரு நாமப் படலம்

*செய்கடன் செய்முறை செய்து மன்னனுந்
துய்யநற் பெயரினைச் சூட்ட வேண்டியே,
பொய்யறு புலவர்கள் பொருந்தும் ஆலயம்
தெய்வநற் சந்நிதி திகழ நின்றனன்.

பொன்னிடை யரதனம் பூத்த தென்னவே,
அன்னைகை விளங்கிடும் அமுதச் சேயினை,
உன்னத முனிவரும், உலகு போற்றிடும்
மன்னரும், வீரரும் வாழ்த்தி நின்றனர்.

இம்பரும் உம்பரும் இனிது வாழவே
அம்பல நடஞ்செயும் அருளி றைவனை
என்புநெக் குருகிடும் இதயக் காதலால்,
அன்பர்நன் மலர்சொரிந் தடிப ணிந்தனர்.

*சுருட்டி ராகம், ஆதி தாளம்.

அன்பர்

" வானெனப் ,புவியென, வடிவு கொண்டுலாம்
ஊனென, வுயிரென, வுயிரு ளேவளர்
நானென நடுநிலை நின்ற சாட்சியே,
தானென நிலவிடுந் தனி முதல்வனே ! "

" ஊட்டியும், உறக்கியும், உலக நாடகம்
ஆட்டியும், பிறவியின் அனலிற் பொன்னென
வாட்டியும், உயிரினை மாச றுத்தொளி
காட்டியும் அருளுவை கருணை வள்ளலே ! "

சத்தியன்

" உனதரு ளிச்சையே உலகக் கோயிலில்
இனிதுற வுயிர்க்கெலாம் இன்ப மோங்கவே,
எனதருஞ் சேயினை யேற்றுப் போற் " றெனப்
பனிமலர் தூவினன் பாரின் மன்னனே.

முனிவர்

கருத்திலுங் கண்ணிலுங் களிது லங்கிடத்
திருத்தகு சேயினைச் செங்கை யேந்தியே,
நிருத்தங்க ளாடிடு நிமலன் பாதத்தில்
இருத்தினன் முனிவரன் இசைமு ழங்கவே.

சத்தியன்

" அயர்வறு தவக்கனல் அருளும் யோகியே,
உயர்குல விளக்கினுக் குவந்த சீர்பெறும்
பெயரினை யிதுவெனப் பேசி யாள் " கென
வியனுறு முனிவனை வேந்து நோக்கினன்.

முனிவர்

" சித்தியின் மரபொளி, திருவி ளங்கிடும்
சத்தியன்-இந்திரை தந்த நல்லொளி,
அத்தனின் அருளொளி, ஆத்மச் சோதிபோல்,
' சுத்த ' னென் றுலகெலாம் துலங்கி வாழ்கவே."

" சுத்தமே கடவுளின் சொரூபம் ; ஆத்தும
சுத்தமே கடவுளைத் துலக்குஞ் சோதியாம் ;
சுத்தமே சுகமெனச் சொல்வர் ; ஆதலால்
சுத்தனே யிவனெனச் சொல்லு வாமரோ ! "

எல்லையில் அருந்தவன் ஈதி யம்பலும்,
பல்லிய முழங்கின, பரந்த தீம்புகை ;
மல்லிகை சண்பக மாரி பெய்தன ;
நல்லிசை முழங்கின ஞால மெங்குமே !

அன்பர்

மன்னவன் மகிழ்வுற மக்கள் யாவரும்,
" தன்னிக ரற்றதோர் தருமக் காவலா,
உன்குல மொன்றல ; வுலகில் வாழ்ந்திடும்
இன்னுயிர்க் கின்பமே இவ " னென் றேதினர்.

தவ முனிவர்கள்

" வானர சாட்சியிம் மாநி லம்பெறும் ;
ஈனவெவ் விருட்பகை யின்மை யாகிடும் ;
ஞானமா ஞாயிறு போலும் இன்னவன்,
வான் புகழ் வாழ் " கென முனிவர் வாழ்த்தினர்.

வாழிய சத்தியன் ! வாழி யிந்திரை !
வாழிய வையகம் வாழ வந்தசேய் !
வீழிய தானவர் ; விளங்கு நல்லருள்
சூழிய வுலகெலாம் சுத்த மங்களம் !

சோதிடர்

நாளொடு கோளையு நன்கு பார்த்தவர்,
" வாளொடு வென்றவர் வெற்றி வெற்றியோ ?
தாளொடு மூறிடுந் தவத்தின் சக்தியால்
ஆளுவன் உலகெலாம் அமரச் சே " யென்றார்.

" பொன்னினும் அரியது புதனென் றேதுவார் ;
மின்னிய மீன்களில் மூலம் மேலென்பார்
கன்னிகை மேலென்பார் கணித்த ராசியில்
இன்னவன் பிறவியின் ஏற்ற மென்சொல்வோம் !

" ஆவணி மூலத்தில் அவத ரித்தவன்
பூவணி யாகவே பொலிவன் ; புண்ணியர்
நாவணி யெனத்திரு நாம மோதுவார் ;
பாவணி புலவர்கள் இவனைப் பாடுவார்."

சத்தியன்

பெரியவர் இனையவை பேசக் கேட்டலும்,
அரியபே ரின்பம்வந் தடைந்த தாமென,
வரையறப் பொன்மழை வழங்கித் தானங்கள்
புரிந்தனன் உலகினைப் புரக்குந் தந்தையே.

கவிதையுங் கல்வியுங் கலையும் வீரமும்,
நவையறு தொழில்களு நாளு மோங்கவே,
அவரவர்க் கேற்றவை யள்ளி யீந்தனன்
தவம்பெறு மைந்தனைத் தந்த தந்தையே. 76

# 11. குழந்தைப் படலம்

*கண்ணே, மணியே, கனகக் கிளியே, கனியே, செம்
பொன்னே, புகழின் பொலிவே, புனிதத் தவமீன்ற,
விண்ணே, யமுதின் விளைவே, யழகே, யிசையாழின்
பண்ணே, யருளின் பயனே, வியனே, பகவானே !

சத்திக் கனியே, சாந்தக் கனியே தவமோங்கும்
சித்திக் கனியே, செல்வக் கனியே, செகசீவன்
முத்திக் கனியே, முருகார் திருவே, ஒருமுத்தம் !
சுத்தக் கனியே, சோதிக் கனியே, சுகவாழ்வே !

இன்னன தீஞ்சொல் ஏந்தி யிளஞ்சேய் இனிதான
புன்னகை பொங்கும் போதுள மெல்லாம் புளகிக்கும் ;
அன்னை 'கை வீசம் மா' வென வீசும் அழகாக ;
தன்னிணை யில்லா இன்பம் வளர்சேய் தருமின்பம் !

அம்புலி கூவும் ; அம்மையப் பாவென் றழகாகப்
பம்பி நடக்கும் ; பைங்கிளி போலத் தமிழ்பேசும் ;
பொன்பொலி காலை பூத்து வசந்தம் அசைபூவின்
கொம்பொடு கொஞ்சும் ; கன்றுகள் பின்னே குதித்தோடும்.

பன்மணி மாலை மின்னொளி பாயப் பரியாடும் ;
கிண்கிணி கொஞ்சப் பந்தை யுருட்டும் ; கிளர்புள்ளின்
பண்க ளிசைக்கும் ; பச்சை மயில்போல் நடமாடும் ;
கண்மணி நோக்கிக் " கண்ணனிதோ பார் " எனப்பொங்கும்.

செங்கதிர் காணப் பொங்கி நகைத்துச் செயவென்னும் ;
திங்களை யன்புத் தீங்கனி யென்னுந் ; திசையெட்டுந்
தங்க வியற்கைத் தாயெழில் காணும் ; தனி நின்றே
" எங்குமென் அன்னை எங்குமென் அப்பன் " எனஓதும்.

---

*கலி நிலைத்துறை. சந்தம் : *தன்னத் தனனா தனனத் தனனா தனதானா ; அல்லது தன்னன தானா தந்தன தனா தனதானா, ஆதி தாளம் ; நாட்டை, மோகனம்—ராகங்கள்.*

இந்திரை சொல்லும் இன்கதை கேட்கும் ; இருகையால்
மந்திர மென்று மத்தை யலைக்கும் ; மறுராமச்
சந்திரன் என்று வில்லை வளைக்கும் ; சகசாம
சுந்தர னென்றுப் பூங்குழ லூதுந் துவர்வாயால்.

பூமியை நீவும் ; பூங்குடி லாக்கும் ; பொதுவான
சாமியை நாட்டும் ; தண்மலர் தூவும் ; சிவசக்தி
ஓமென வோதும் ; உற்ற துணைவர் மகிழ்வெய்தத்
தேமது ரச்செஞ் சொற்கதை சொல்லுந் திருவோங்கும் !

தேரணி யாக்கித் தோழரோ டாடுந் திருநாளால்
ஊரணி யாக்கும், கொட்டு முழக்கும், உலகாளுந்
தோரணை காட்டும் ; துட்ட ரடங்க நலமெல்லாம்
பூரண மாகப் போற்று மிளஞ்சேய் புகழோங்க !

வீரன் இருந்தான், வீரன் எழுந்தான், கரம்வீசி
வீரன் விரைந்தான், வீரன் மொழிந்தான், விறலோங்கும்
வீரன் வளர்ந்தான், வீரன் உயர்ந்தான் ; இனியெய்தும்
வீரன் பொலிந்தான் வீரமணிச் சேய்விளையாட்டில். 40

* பாரினுக் காருயிர் போன்றநம் பாலனைச்
சீரிளஞ் செல்வனைச் செஞ்சுடர் வண்ணனை,
நேரினிற் கண்டவர் நெஞ்சமின் புற்றனர்
காரினைப் பைம்பயிர் கண்டதைப் போலவே.

" முத்து தா, மொஞ்சியுண், மோகனக் கண்ணனே,
சித்தனே, சித்தியின் செல்வனே, செம்மலே,
எத்தனை இன்ப " மென் றேந்திழை மாதரார்
மெத்தெனக் கொஞ்சுவார் மென்முலை விம்மவே.

புண்ணியப் போதனைப் போற்றிடாப் போதெலாம்
விண்ணவர் வாழுரு வெற்றுநா ளென்பரால் ;
கண்மணிப் பிள்ளையைக் காதலாற் கண்டவன்
எண்ணமே யாயினர் இந்நிலத் தோரெலாம்.

மூன்றுகா லந்தனை முற்றவுங் கற்றநல்
ஆன்றவர் போற்றிடும் அற்புதச் சுத்தனை
வான்றருஞ் சோதியை வையகத் தாருயிர்
போன்றுநே சித்துளம் பொங்கினர்.....விந்தையென் ?

---

* *கலி விருத்தம், சந்தம்: தானன, தானன, தன்னன தானன. ஆதி தாளம். காபி செஞ்சுருட்டி, கமாஸ் இராகங்கள்.*

அணிகளைச் சூட்டுவார் ; அன்புபா ராட்டுவார்,
பணிகளைக் காட்டுவார் ; ‘ பார்புகழ் வீரமா
மணிகளைப் போல நீ வாழ் ’ கெனப் பேசுவார் ;
துணிவருள் சூரனைச் சுத்தனிற் காணுவார்.

அரியசெஞ் சொல்லுடன் ஆடலும் பாடலும்,
உரியநற் செய்கையும் ஓங்குயர் தன்மையும்,
பெரியனைப் பேசிடும் பிள்ளையுங் கற்றிடத்
தெரிவுயர் குருகுலஞ் சேர்ந்ததைச் செப்புவாம்.

# 12. குருகுலப் படலம்

அளந்தநல் ஆயுளும், அறமும், ஆற்றலும்,
தெளிந்தநல் லறிவுடன் சீர்பெற் றோங்கவும்,
உளந்தனைப் பயிற்றவும், உயிரைப் போற்றவும்
இளந்திரு வயதினிற் கல்வி யீதலே.

சத்தியன்

உன்னதப் புலமையோ டுதித்த தெய்வச்சேய்
துன்னறி வொளியினைத் தூண்டி வேண்டிய,
மன்னறம் பயின்றிட வாய்மை வேந்தனுந்
தன்னிக ரற்றமெய்த் தவனை நோக்கினான்.

“ கற்பது கற்றுநின் றறத்தைக் காத்திடப்
பொற்புறு குருகுலம் பொருந்தி வாழ் ” கென்றே
அற்புத மைந்தனை யளிக்க, மாதவன்
“ கற்பகங் கனி ” கெனக் களிப்போ டேற்றனன்.

இந்திரை

“ செழுந்தவச் செல்வனே தீர னாகிநீ,
எழுஞ்சுடர் வனப்புடன் இலகு ஞானமும்,
பொழிந்திடு வானெனப் புகழும், ஈகையும்,
தழைந்தினி தோங் ” கெனத் தாய்மொ ழிந்தனள்.

சத்தியன்

“ அறிவுடன் ஆண்மையும், அருளும் இன்பமும்,
அறம்பொருட் செழிப்புடன், ஆத்ம ஞானமும்,
பொறிபுல னடக்கமும், புனித வாழ்க்கையும்
திறமுடன் பெறுகநீ, தெய்வ மைந்தனே !”

" குருவர னேமுது குரவர் போன்றவன் ;
குருமனை யேயினிக் கொற்ற மாளிகை ;
குருவடி யேநலங் கொடுக்குங் கற்பகம்
குருவருள் பெறுகநங் குலம் விளங்கவே !"

" உத்தமக் குருவடி யுள்ளங் கொண்டு நீ
பத்தியும் பணிகளும் பரிந்து போற்றியே,
வித்தக னாகியென் குலவி ளக்கென
நித்திய மோங்குக நிமலச் செல்வனே !"

" கண்ணெனுங் கல்வியைக் காக்கும் மாணவர்,
உண்ணலும் உறங்கலும் உடை யணிதலும்,
எண்ணலும் இயற்றலும் இயம்பல் யாவினும்,
உண்மையும் தூய்மையும் ஒளிர வாழ்வரே !"

" சீரிய முனிவரன் செய்யு நன்மையால்,
வீரமும் சக்தியும், வேந்தர்க் காகிய
காரிய வெற்றியும் கல்வி கேள்வியும்
பூரண வாழ்க்கையும் பொலிக, செல்வனே !"

சுத்தன்

இன்னன விளம்பித் தாதை இனிதுற மகனை நோக்கச்
சென்னியிற் கரங் குவித்துச் சேவடி தொழுது மைந்தன்,
"சொன்னநன் மதியைப் போற்றித் துகளறக் கல்வி கற்றுப்
பன்னிரண்டாண்டென் ஆசான்பணித்திறம்பயில்வ" னென்றான். 40

"தருதிர்நல் லாசி" யென்று தாள்பணி சேயைப் பெற்றோர்
"வரதநீ வாழ்க" வென்று வளர்த்தகை யால் அணைத்தே,
குருபர னிடங் கொடுத்தார் ; குணநிதி முனிவ னாங்கே
"பெருகு மானந்த" மென்னப் பிள்ளையை நடத்திச் சென்றான்.

வாத்தியம் பல முழங்க, வாழ்த்துக்கள் ஒலிக்க, வேத
சாத்திரம் பல முழங்க, தமிழ்மறை முழங்கத் தெய்வத்
தீத்திகழ் முனிவன் கோயில் சிறப்புறச் சென்றெல் லாரும்
பூத்தருள் பொலிக ! வென்று புதல்வனை விடுத்து வந்தார்.

அன்புந் தெய்வமும், அருளுடன் அழகணி யறிவும்
நன்புங் கொண்டொளிர் நவையறு குருகுல மதனில்
இன்ப மாகுநல் இயற்கையின் மடிமிசை வளர்ந்தான்
மன்ப தைகளைக் காத்திடும் மங்கலப் புதல்வன்.

திருந்து செந்தமிழ், ஆரியம், ஆங்கிலம், இந்தி
பெருந் தொகையினர் பேசிடும் பிறசில மொழிகள்,
வருந்திக் கற்றனன் ; வாணியின் வரம்பெறு புலவர்
விருந்தெனப் புகழ் வியன்கவிக் கலையிலுந் தேர்ந்தான்.

வேந்தர்க் காகிடும் வீரமும் போருடன் பொருளும்,
சாந்தர்க் காகிடும் யோகமுந் தருமமும் தவமும்,
தேர்ந்த நீதிசெய் முறைமையுந் திருவுறப் பயின்றான்—
வாய்ந்த சுத்தசன் மார்க்கத்தின் வாய்மையே யானோன்.

கவியுங் கானமும் கணக்குடன் அறிவுநூல் வகையும்,
புவியில் அற்புதம் புரிந்திடும் பொறிகளின் அமைப்பும்,
செவியுங் கண்களுஞ் சிந்தையுந் திருந்திடக் கற்றான்
தவமுங் கல்வியுந் தந்தநன் முனிவரன் அருளால்.

வையம் ஓங்கிட வந்தவன் வளர்பிறை போலே
தெய்வ ஞானமும் உலகியல் அறிவுடன் சிறக்க,
துய்ய சாதன வாழ்க்கையுஞ் சுருதியும் அளித்த
செய்ய மாதவன் சேவையே சேவையிற் சிறப்பாம்.

ஓங்கு மாமலை ஓமெனும் அருவியும், அன்னம்
தூங்கு தாமரை வாவியும், தோகையுங் குயிலும்
நீங்கு றுப்பசுஞ் சோலையும், நீலவான் பொலிவும்,
ஊங்கு யர்கலை தூண்டின வுத்தம னுளத்தே.

சோதி மாதவன் சுடர்பெறும் அறிவினைத் தூண்ட,
நீதி மந்திரி யினிவரு நிருபனை யமைக்க,
ஆதி சக்தியின் அருளொளி யாகிய மைந்தன்
மேதினிக் கொரு வரமணி விளக்கென மிளிர்ந்தான்.

அன்பர் வாழ்த்தி "யிவ் வதிசய மைந்தனு லுலகம்
இன்ப மாகு" மென் றிசைத்தனர் ; இன்னொரு புறத்தில்,
வன்பகை செய்யும் வலியவன் ஒருவனும் எழுந்தான் ;
துன்பமே வடி வாமவன் சூழ்ச்சியை யறிவாம்.

# 13. பொறுமைப் படலம்

நன்மையுந் தீமையு நட்புஞ் சண்டையும்,
புன்மையும் பெருமையும், புகழும் வீழ்ச்சியும்,
இன்மையும் உண்மையும் இருவ கைமனத்
தன்மையின் பரிசெனச் சாற்று வாமரோ !

நல்லது நினைத்திடின் நன்மை யாகிடும் ;
அல்லது நினைத்திடின் அல்ல லாகிடும் ;
இல்லதும் உள்ளதும், இம்மை யம்மையும்,
செல்வதும் வருவதும் நினைப்பின் செய்கையே.

## கலியன்

பழிப்பறு புகழ்பெறும் பரத நாட்டிலே,
செழிப்பறு சித்தியின் சீர்த்தி யாவையும்
அழிப்பனென் றெழுந்தனன் அகந்தை கொண்டொரு
முழுப்பதர் கலியனும் மோகி கேள்வனே.

விடந்தரு நோயென, வேந்தன் சத்தியன்
உடன்பிறந் தானவ னுடன்பொ றுமையும்
இடர்செயுந் தீமையும் இகலும் வெம்மையும்
படர்ந்தன புதருடன் பாம்பு மென்னவே.

## கலியன் பொறுமை

வாளெனப் பாய்வது ; வஞ்சந் தீர்த்திட
நீளெரி புகுந்தென நெஞ்சில் வேவது ;
கோளினு லுயிர்ப்பது ; கொடுமை செய்துபின்,
ஆளினை யுண்பது பொறுமை யாகுமே.

திசைதொறும் அண்ணலின் சீர்த்தி கேட்டுளம்
பிசைதுயர் கொண்டவன், பிள்ளை சுத்தனின்
இசையினைக் கேட்டதும் எரி மிகுந்தனன் ;
விசையினில் இவர்களை வீழ்த்த வெண்ணினுன்.

வலிகொளும் சித்தியின் மரபைக் கண்டதும்,
கிலிகொளு நெஞ்சினுன், கேடு சூழவே
புலிகொளும் புதரெனப் பொல்லர் வாழ்த்திடும்
கலிநகர் கண்டனன் காலன் அஞ்சவே.

இந்திர சாலங்கள் இருட்பொய் வித்தைகள்,
மந்திர மாயங்கள் மாறு பாடுசெய்
தந்திரச் சூதெலாந் தரும நீதியைத்
தொந்தரை செய்தன ; துணிந்து வீழ்ந்தவே.

இணைகரும் பூனையின் எரி விழிகளும்,
பணியுடன் காகமும், பச்சை யோந்தியும்
பிணங்களின் மூளையும் பெண்க ருக்களும்,
புணைகரு மைசெயப் புகுந்துந் தோற்றனன்.

"கருவினைக் கலைத்திடக் கருவினை செய்தேன்
உருவினைக் குலைத்திட, வுளத்தை மாற்றிடப்
பெருநிணப் பேய்களை ஏவினே னந்த
ஒருவனைச் சிறுவனை உம்ப ரேற்றவே."

"ஆளத்தான் உலகினை அண்ண லுக்குப்பின்
நீளத்தான் கருதிய நெஞ்சம் புண்ணுற்றேன் ;
மூலத்தான் வந்தனன், மூன்று லோகமும்
வாழத்தான் வாழ்ந்தனன் ; வயிறு வேகுமே !"

"தேனெனப் பேசிய தீய சூனியர்,
ஊன்மது வுண்டவன் உயிரை யுண்கிலார் ;
யானினி யென்செய்வேன் ; அடவிப் பேய்க்குலம்
ஏனெனை யேளனம் செய்த ! வஞ்சமே !"

மோகி

புயலெழு மனத்தினான் புன்வ லைப்படுங்
கயலெனத் துடித்ததைக் கண்டு, நீள்விழி
மயலெழ வீசித்தன் மாய வித்தையாற்
செயம்பெறு மோகியும் சிரித்து வந்தனள்.

கொஞ்சுமென் மொழிசொலிக் குமுதக் கைகளால்,
துஞ்சறு விழிகளைத் துடைத்து நோக்கிடும்,
அஞ்சன விழியளை யணைத்துத் தன்மனம்
சஞ்சலக் கலியனுஞ் சாற்றி னான்கொலோ.

கலியன்

"அரியணை யிருந்துநான் சித்தி யாண்டிடும்
உரிமையை யிழந்தனன் ஒருவன் வந்ததால் ;
பெரியசிந் தனையெலாம் பேச வாயிலேன்..........!
பரிந்தெனக் கிதமொழி பகர வல்லையோ ?"

மோகி

நோயுறு கலியிவை நுவல, மோகியும்
"ஓயுக கவலைகள் ; உலகை வென்றிடப்
பாயுறும் அரக்கரின் படையைத் தூண்டுவேன் ;
ஏயெனு முன்னுன திச்சை யா"மென்றாள்.

"ஏனினி யோசனை ; யெவனை யஞ்சினை
யானவன் அழியவென் அண்ணல் மாவலி
சேனையைத் தூண்டிடச் செல்கின்றே னின்றே
தானவத் தீ"வெனச் சபதஞ் சாற்றினாள்.

கலியன்

" கவலேயும் ஒழிந்தது ; கனவு மெய்த்தது;
புவனமுங் கிடைத்ததுன் பொன்சொ லால் ; இனி
எவருமென் னிகரிலே " என்று விம்மினுன்
அவஞ்செயும் தீயருக் கரச னுயினுன்.

மோகி

" வருகுது சித்தியை வீழ்த்தும் வன்படை !
பெருகுதுன் புக" ழெனப் பெரிய பாதகி,
வெருவுறு மரக்கரை விளேத்த தானவம்
இருமுழு மதியுடன் ஏகி ஞள்கொலோ.

கலியன்

நகையினே யுதட்டிலு, நஞ்சை நெஞ்சிலும்,
பகையினேச் செயலிலும், பரிவை நாவிலும்,
வகையுறக் கலியனும் வைத்து, நாட்டிலே
மிகையுறு பிரிவினே விரைவிற் செய்தனன். 80

பதரெனும் பதகனின் பழியி னுல்வினே
அதர்மங்க ளனேத்தையும் அறியு முன்னரே,
கதிர்மணி போல்வளர் கடவுட் சுத்தனின்
புதியநல் வாழ்வினேப் புகலு வாமரோ. 84

# 14. புறப்பாட்டுப் படலம்

மூன்று காலமு முற்றறி சித்தன்பால்,
ஆன்ற ஞானம் அனேத்தையுங் கற்றபின்
சான்ற வர்சொலச் சத்திய சுத்தனும்
தோன்று லகை யறிந்திடத் துன்னினுன்.

ஏட்டிலே யிசை யெத்தனே கற்கினும்,
பாட்டி லாதவர், பண்செய் கருவியில்
மீட்டி லாதவர் வித்துவ ராவரோ ?
ஆட்டி லாதவர் ஆடுந ராவரோ ?

சுற்று ணர்ந்திரு தோற்ற வுலகினே
முற்று ணர்ந்ததன் முக்குண நாடகம்
இற்றெ னத்தெளிந் தார் இயல் பாகவே
கற்று ணர்ந்த கலேக்கட லாவரே.

சத்தியன்

ஆத லால் " என் அரசிளஞ் செல்வனும்
ஓத லால்வரு ஞானம் உரம்பெற
நீதி யாட்சி நிலவுநன் ளுடெலாம்
போத" லென்று புகன்றனன் சத்தியன்.

" புத்தி மான்,புவி யாளுங் கலையினில்
எத்தி சையும் இசைபெற்ற மந்திரி
சித்தி மானுடன் செல்வகை செல்"லெனச்
சத்தி யனுந் தனயனை யேவினுன்.

அன்ன செய்தி யறிந்து மகிழ்ந்துடன்
முன்னர் தூது விடுத்து மகிபரும்,
மன்னர் மன்னனின் மன்னிளஞ் செல்வனை
இன்ன நாள்வர வேற்பமென் றேதினுர்.

பூக்குங் காலைப் புதுமலர் தூவியே,
காக்கும் அன்புக் கடவுளை யேத்தியே
வாக்கு மிக்க வரமுனி வாழ்த்துகள்
ஊக்க வுள்ள முவந்தனன் கோமகன்.

ஆனை, தேர்,கு திரையணி சேரவே,
சேனை வீரர் " செயசெய " வென்னவே,
வானை யெட்டக் கொடிகள் வளரவே,
மோனை முத்தமிழ் போன்முர சார்த்தவே.

படையின் மின்னலும் பார்விழி மின்னலும்,
உடையின் மின்னலும், ஊர்தியின் மின்னலும்,
குடைசெய் வானங் குலாவிடு மின்னென
நடையின் மின்னலு நல்லணி மின்னலே.

முக மலர்களு, முல்லை விரிந்தென
நகை மலர்களு, நற்கரந் தூவுபல்
வகை மலர்களும் வானத்து நாண்மலர்,
தொகை மிகுத்திங்கு தோன்றுவ போன்றவே.

மார் நெருங்கின ; மார்பணி நன்மணி
தார் நெருங்கின ; தண்மலர்க் கூந்தலாங்
கார் நெருங்கின ; காலு நெருங்கின ;
ஊர் நெருங்கின ஒருட லாகவே.

பாண்டி லோசையும், பாவலர் பாடும்பல்
லாண்டி னேசையும், ஆசிக ளோசையும்,
தூண்டு மாமதி தோன்றக் கடல்மிசை
நீண்ட வோசையைப் போல நிகழ்ந்தவே.

இரணம்வீசிக் கிளர்ந்தெழும் சூரியன்
அருணத் தேரில் அமர்ந்தது போலவே,
திருவ ணிந்தபொற் றேர்மிசை ஏறியே
கருணை மாமுகங் காட்டினன் கண்ணனே.

விழிகண் டார்அருள் விண்ணொளி கண்டனர் ;
பொழிமு றுவலைக் கண்டவர் பொன்கண்டார் ;
செழிமு கத்தைக்கண் டார்திரு வேகண்டார்
அழகை முற்றும் அளந்தவர் யாவரே !

பொது விழியினுற் புண்ணியர் எங்குமே
அதுவென் றேயுணர் ஆதிப் பிரமத்தை,
மத விழியர் மதிப்பது போலவே,
" இதுவி துவழ " கென்றனர் மாந்தரே.

கந்தன், கோகுலக் கண்ண னிவனென்றார்,
இந்தி ரனும் இணையிலை யென்றனர்.
சிந்தை யெப்படி யப்படிச் சித்திரம்
தந்த தந்தத் திருவுருத் தன்மையே.

உடைநெ கிழ்தலும், உள்ளம் வெதும்பலும்,
கடையர் காமக் குறிகளும் இன்றியே,
நடையு யர்சுத்த ஞாயிறைக் கண்டவர்
மடமை நீங்கி மதிப்பொலி வெய்தினர்.

ஆசை மாமல ராமெனக் கண்டவர்
பூசை மாமல ரேபொலி யக்கண்டார்.
வேசை நெஞ்சும் விலைமயக் கற்றது ;
தேசை வீசிடுந் தெய்விகக் காட்சியால்.

" சென்ற தேசங்க ளில்வர வேற்றிடும்
வென்றி வேந்தர் புதல்வியர் யாரிவன்
மன்றல் மாலை யணிந்து மகிழ்வரோ ! "
என்று மட்டும் இயம்பினர் மாதரே.

நோக்கும் ஒற்றர்முன் னோக்கிட, நுண்ணறி
வாக்கு வல்ல புலவர் உடன்வரக்
காக்கும் வீரக் கனற்படை சூழத்தேர்
ஊக்க மாகமுன் ஊர்ந்தது காலம்போல்.

புதனும் பூரணச் சந்திர னும்என
மதிய மைச்சுடன் மன்மக னுஞ்செலும்
பதிக ளைப்பலர் பேசினர் ; நாமுமக்
கதியைப் பின்பற்றிக் காண்பன காண்பமால் !

# 15. யாத்திரைப் படலம்

## வரவேற்புகளின் வருணனை

*கொட்டுவார் முரசிளங் குதிகடலைப் போலவே,
எட்டுத்திக்கும் வெற்றிவெற்றி யென்றிசை முழங்கவே,
திட்டமாகச் சிற்றரசர் தேர்கரி பரியுடன்,
வட்டவெண் குடைநிழற்ற வாழிபாடி வந்தனர்.

"வருகமன்னர் கோமகன், வருகசித்தி மந்திரி,
வருகசக்தி மாமரபின் வான்சுடர் மணியெனுஅ,
உருகுகாத லோடுமன் னுயிர்களுள்ளம் பொங்கியே
பெருகுமன்பு டன்வரும், பிரானைமுன்சென் றேற்றனர்.

மண்ணில்வான மீனினம் வயங்குகின்ற வாறுபோல்,
எண்ணிலா மணித்திரள், இருள்பருகி வில்லிட,
விண்ணுலாங் கதிர்க்கொடி பிடித்தவேந்தன் மைந்தனைப்
பண்ணுலாஞ் சிறப்புடன் பவனிசெய்து பார்த்தனர்.

மாடமாளி கைமிசை, மணிக்கொடிகள் 'வா'வெனும்
ஏடவிழ் இனமலர் இடைவிடாது கொட்டிடும்,
கூடச்சாள ரத்திலே கொழுமதிகள் பூத்திடும்,
தேடரிய செல்வனுந் தெருவில்வந்த போதிலே.

நாடினுர் குமுதவாய் நகைகுலுங்கு மாத ரார் ;
கூடினுர் மயிலெனக் குயிலெனக் குழலெனப்
பாடினுர் பல்லாண்டுகள், பரதநூன் முறைப்படி
ஆடினுர் அணியிழை யரம்பையும் வியக்கவே.

தோரணக் கலையெலாந் துலங்குகின்ற வாயிலில்,
வாரணங்கள், வாத்தியங்கள் வாழ்த்த ஒமொலியுடன்,
பூரணக் கலசமேந்திப் பூவையர்முன் செல்லவே,
ஆரணங்க ளோதிச்செல்வர் ஆண்டகையை யேற்றனர்.

" ஞானஞாயி றேயருள் நடம்புரியும் ஆழியே,
வானமுதம் போலுயிர்க்கு வாழ்வளிக்கும் வள்ளலே,
தீனர்செல்வ மே !"யெனத் திருவுடைய மன்னவர்,
கோனருள் குமரனைத்தங் கோயிலுட்கொண் டேகினுர்.

அரியணையில் ஏற்றினுர், அரசியற் சிறப்பெலாம்
வரிசையாகக் கூறினுர் ; வழங்கினுர் பரிசுகள்.
விரிகடல் பருகத்தாழும் வெண்முகிலைப் போலவே,
வரதனும் பணிந்துவாங்கி மன்னுயிர்க் குதவி னுன்.

---

* இசைக் குறிப்பு :—*எழு சீர் ஆசிரிய விருத்தம் ; செஞ்சுருட்டி ராகம்.* சந்தம் : *தான தான தான தான தான தான தானனு.*

தேனும்பாலுந் தீஞ்சுவைக் கனிகளும் பலவகை
யானநல் லடிசிலும், அமுதனுர் அளித்தனர்.
தீனர்,செல்வர் யாவரும் செறிந்துடன் அருந்திடத்
தானுமவ் விருந்தருந்தி ஞன்சம ரசச்சுடர்.

இளங்கதிர் முகத்தனை, யிருமலர் விழியனை,
உளங்கவர் குணத்தனை, உயர்வரைப் புயத்தனைக்
களங்கமற்ற கல்வியிற் கரையிலாக் கடலனை,
விளங்கருட் புலவனை விளம்புவா யினிக்குமே.

காணுங்கண்கள் இன்னுமின்னுங் கண்டுகண் டுவக்கவே,
ஆணும்பெண்மை வேட்குநல் லழகனை நினைத்ததும்,
பூணிலங்குங் கொங்கைமாதர் பொங்குகாதல் வெள்ளத்தால்,
நாணவேலி போக்கினுர், நவில்வதென்ன விந்தையே ?

கொண்டைநாண் மலர்சொரியக் கொங்கைவிம்மிப் போர்செயத்
தொண்டை வாய்க் கிளியனுர் துடியிடை துவளவே,
தண்டையஞ் சிலம்பொலிக்கத் தாவிவந்து சுத்தனைக்
கண்டது மியம்பொணுக் கனவுலகி லாழ்ந்தனர்.

தேர்ந்தெடுத்த சிற்பிகள் செதுக்கிய சிலையனுர்,
கூர்ந்தவாள் விழிகளாற் குரிசிலைப் பருகியே,
பேர்ந்திடாது நின்றனர் ; பிராணெருவ னேயுடல்
சோர்ந்திடா வுயிரெனத் துடித்தன ளவருளே.

வான், கடல் மலை,நதி, யியற்கையின் வனப்புகள்,
மேனியா யமைந்த தன்ன வீரனைமுன் கண்டதும்,
கான்மலர், தளிர்,கனி மதிகலந்த பொற்பினுர்,
ஊன்கலந்த வுள்ளுயிர் இவன்ஒருவ னென்றனர்.

தோகை,கோகி லங்கிளி தொகுத்தசுந்த ராங்கிகள்,
தாகமாகப் பார்த்திருந்த சக்தி மைந்தன் வந்ததும்,
மேகமார்பி னைப்பிளக்கும் வேகமின்ன லென்னவே,
மோகமார்பி னின்றெளிர் முறுவலள்ளி வீசினுர்.

அல்லிமார்பைக் கொஞ்சிடும் அமுதவெண் ணிலாவினைப்
புல்லியாடுந் தென்றலைப் பொருமை கொண்டு நோக்குவார் ;
மல்லிகையில் ஊதுகின்ற வண்டைத்தூ தனுப்புவார்,
மெல்லிதழ் குவிந்தபூ விழித்திருக்க வேண்டுவார்.

வில்லினைக் குனித்திரண்டு வேல்விழிகள் வீசியே,
சொல்லிலாது மாந்தரைத்தம் சொக்கிலே பிடித்திடும்,
மெல்லியர் வலைகளில் விழாதடக்கி, ஐந்தினை
வெல்லு மாண்மை கொண்டவீர தீரன்வாழ்க வாழ்கவே !

பன்மணி யணிகளெங்கும் பத்திபத்தி யாகவே,
மின்னலிட்டுக் கண்பறிக்கும் வேந்தர்மாளி கைகளின்
பொன்னுயிர்த்த போகபோக்கி யத்திற்புந்தி விட்டிடான் ;
இன்னொரு புறத்திலேதன் எண்ணமூன்றிப் பார்த்தனன்.

பொன்னரசர் கோயிலீயும் போகவாழ்வை வேண்டிலன்.
மன்னர்தங் குமரிகள் வருந்துவேட்கை தீர்க்கிலன்.
கன்னியர்கள் வீசுகின்ற கண்வலையுங் காண்கிலன்,
மன்னுயிர்த் துடிப்பையே மனத்துடிப்பி லேந்தினான்.

கொற்றவாழ்வி னுச்சியிற் குலாவுமின்பம் வேண்டிலான்,
நெற்றிவேர்வை சொட்டச்சொட்ட நீடுழைக்கும் ஏழைகள்
வற்றிக்கஞ்சி யின்றிவாடும் வன்கொடிய காட்சியைச்
சுற்றியெங்குங் கண்டவர் துயர் கெட வுதவினான்.

செல்வர்தந்த செல்வமெல்லாந் தேசதேச மாகவே,
கல்வியுந் தொழிலுமோங்கக் கைநிரம்ப நல்கினான்.
நல்லதொண்டர் செய்பொது நலம்வளர வூக்கினான்,
எல்லையில்லாத் துன்பமிந்த நாட்டிலேனென் றெண்ணுவான்.

வண்மையும் வளமையும் வளருகின்ற நாட்டிலே,
உண்மையும்உள் ளன்புமெங்கு மோங்குயர்பொன் னாட்டிலே
கண்ணினீர் பெருகிடுங் கவலைமேக மேனென்பான்
புண்ணிய வமைச்சுடனிப் பூவியல்பை நோக்குவான்.

ஆதிமன்னர் வாழ்வுமின் றரியணை யிருந்திடும்
நீதிமன்னர் மாட்சியும், நிகரிலாச் செயல்களும்,
தீதினைத் தகர்த்தவர் செருக்களஞ் செயித்ததும்,
ஓதினான் உளங்கைநெல்லி போலுணர்ந்த சித்திமான்.

செல்வச்சேயை மார்பிலூட்டுந் தெய்வத்தாயைப் போலவே,
பல்வளந் தழுவிப்பாய்ந்து பாரை யூட்டும் ஆறுகள்,
சொல்லரசர் பாடியன்புத் தொண்டுசெய் திருத்தலம்,
தொல்வளஞ் சுமந்தமா மலைக டோறுஞ் சென்றனர்.

செஞ்சி,சென்னை, தஞ்சை,மா மதுரை,கேர ளம்,முனை,
கஞ்சி,காசி, கல்கத்தா, கயா,அயோத்தி, சீநகர்,
பஞ்சவடி, ஹம்பி, பம்பை, பாலைவீரர் பட்டினம்,
எஞ்சுபல் லிடங்களு மிருந்திருந்து சென்றனர்.

சென்றசென்ற வூர்களிற் சிறந்தகாட்சிச் சாலைகள்,
குன்றிடா தறிவினைக் கொடுக்குங்கல்விச் சாலைகள்,
வென்றமா முனிவர்தீரர் வீரர்தம்மைக் கண்டனர்,
தொன்றுதொட்ட வாழ்க்கையும் துளக்குறக்கண் டேங்கினார்.

கல்வளர் குறிஞ்சியும், கடிய பாலையும்,
புல்வளர் முல்லையும், பொங்கு நல்வளம்
மல்கிய மருதமும், வங்கக் கூட்டங்கள்
பல்கிய நெய்தலும் பார்த்துச் சென்றனர்.

தமிழ் நாடு

முத்திறை தென்றிரை முத்த மிட்டிடும் ;
சித்தரின் மலைதருந் தேன ருவிகள் ;
பத்தரின் பாடலைப் பறவை பாடிடும்
முத்தமிழ் நாட்டினை முந்து கண்டனர்.

" வருகநங் கோமகன் ! வருக சித்திமான் !
வருகநல் வர"வென வரிசை கொண்டெதிர்,
தருகைநீள் செம்மலாந் தமிழர் நாடனும்,
முருகிள மன்புடன் முன்வந் தேற்றனன்.

சுத்தன் தமிழ் நாட்டைப் புகழ்கிறன்

" எந்தையின் கண்ணெனு மினிய நாடிதே,
செந்தமிழ் இசைமலி தெய்வ நாடிதே ;
சொந்தநம் வீடிது ; சுதந்த ரத்துடன்
வந்தனம், உவந்தனம், வரம்பி லின்பமே.

" வள்ளுவர் பொதுமறை, கம்பன் வான்கவி,
ஒள்ளிய யோகியர் உரைத்த வாசகம்,
தெள்ளிய திருமுறை, திருவ ருட்கவி,
உள்ளத்திற் கமுதென வூறு நாடிதே.

" குரைகடல் உண்டதோர் குமரிக் கண்டத்தின்
கரையறு கலைத்திரள் கரைந்த பின்னரும்,
அரியநல் லறிஞர்செய் யருங்க லைத்திரள்
வரையெனக் குவிந்திசை வளரு நாடிதே !

கடற்படை நிலப்படை கணக்கி லாதது ;
மடைதிறந் ததுவென வாணி கத்திரு
வுடையது ; வண்மையி லுயர்ந்த சீர்த்தியே
இடைவிடா திதன்புகழ் இயம்பு மாமரோ !

" உலகெலாம் ஒருகுல மாகு மன்பொளி
நிலவிடுஞ் சமரச நிலைய மிந்நிலம்.
நலமுயர் அருட்பெருஞ் சோதி நாதர்கள்,
இலகிடுந் தவக்கனல் ஏறு நாடிதே."

“ கண்ணிய மாகவென் றந்தை காத்திடும்,
புண்ணிய பூமியின் புனிதச் சோலையாம் ;
எண்ணினும் இயம்பினும் இதயம் இன்புறப்
பண்ணிடுந் தமிழகப் பண்பு வாழ்கவே.”

இவ்வகை போற்றிடும் இளவல் சுத்தனைச்
செவ்விய செந்தமிழ்ச் செல்வர் கோமகன்,
திவ்விய விருந்துகள் செய்து கோயிலில்,
ஒவ்விய சிறப்புடன் உபச ரித்தனன்.

உயிர்களுக் குயிரென வுலவும் ஒன்றைப்போற்
பயிர்களுக் குயிரெனப் பாயுங் காவிரி
வயல்வளம், வருணிநல் வைகைப் பொன்வளம்,
உயர்மலை வளங்களும் உபச ரித்தவே.

கேரளம்

ஆர்த்தெழும் அருவிகள், அடர்ந்த தென்னைகள்
கூர்த்தெழுங் கார்வரை குலவுங் கேரளம் ;
வேர்த்திட வுழைத்திடும் வீரர் சேரமான்
சீர்த்திகள் கண்டனன் சித்திச் செல்வனே.

கன்னடம்

பொன்னியின் மாலையைப் பூண்ட பொன்னிலம் ;
இன்னிற மலர்கனி யிலகு மின்பவிண் ;
பன்னலத் தொழில்வளம் பரவி யோங்கிடுங்
கன்னடங் காட்டிய கனிவிற் பூரித்தான்.

ஆந்திரம்

மானத்தை யுயிரினு மதிக்கு மல்லர்கள்,
நானென, நாடென நன்மை தேடுவார்.
தேனிசை தவழ்ந்திடுந் தெலுங்கு பேசுவார்,
கோனிசை கேட்டுளங் குளிர்ந்து சென்றனன்.

வங்க நாடு

கங்கையாழ் இசைப்பது ; கலைசி றந்தது ;
பொங்கிய ஞானமும் புகழு மிக்கது ;
மங்கலப் புதுயுக வசந்தச் சோலையாம்,
வங்கத்தின் வரையறு வரங்கள் கண்டனன்.

காசி நாடு

பாசவெவ் வலைகளைப் பறித் தெறிந்திடும்
மாசறு புலவர்கள், வடமொழிக் கலை
பேசிடும் புலவர்கள் பெருமை செய்திடுங்
காசியிற் சங்கரன் கழல் பணிந்தனன்.

கோசல நாடு

ஓம்என ஓதிடும் வேதத் தென்றலில்,
பூம்பயி ராடிடும் புனிதக் கோசலம்,
தீம்பழச் சுவையெனுந் தெய்வ நூல்களை
ஓம்பிடுந் திறமைகண் டுள்ளம் பூரித்தான்.

பாஞ்சால நாடு

திண்ணிய வுடலினர், சிங்க நெஞ்சினர்,
எண்ணிய வினைகளை யியற்றும் வீரர்கள்,
புண்ணியச் சிந்துவின் புனலுண் டோங்கிடுங்
கண்ணிய மைந்தரைக் கண்ணிற் கண்டனன்.

இராஜபுதனம்

சிங்கத்தைக் குகையினிற் செகுக்கும் வீரர்கள்,
அங்கியின் குலத்தினர், அரச புத்திரர்,
பொங்கிய போர்ப்புகழ் புகலக் கேட்டனன்—
செங்கதிர்க் கொடியுயர் சித்தி வீரனே.

மகாராஷ்டிரம்

இவ்வகை நாடெலாம் இனிது கண்டபின்,
செவ்விய கேள்வியின் செல்வன் சித்திமான்,
ஒவ்வரும் புகழுடை யுலக வீரனும்
திவ்விய சிவாஜியின் தேச மீதென்றான்.

அத்தகை வீரனின் அற்புதக் கதை
எத்தகை யுளத்திற்கும் இனிமை யாகிடும்;
சித்தியின் அமைச்சனே செப்பிக் கேட்டிட
மெத்தவும் விரும்பினன் வீரக் காளையே.

மாரத நகர்களை வலம்வந் தானபின்,
தாரணி வீரனின் சடலந் துஞ்சிய
ஊரினுக் குற்றதும், உரைக்க லுற்றனன்
தீரனும் சித்திமான் சிவாஜி காதையே.

# 16. வீர சிவாஜிப் படலம்

வீரர் போற்றிடும் வீர சிகாமணி
பார தத்தின் பழுதறு காவலன் ;
மார தக்குல மன்னன் சிவாஜியின்
சார மான சரித்திரங் கேட்டியால் :

வீர சக்தியின் மார்பென விளங்கு*ம ராட்டின்
ஆர மானது ; பழம்புகழ் அணிந்தது ; தூய
பார தத்திருத் தாய்புனை பதக்கமே போன்ற
ஊர தன்பெயர் பூநகர் உரைப்பதற் கினிதே.

இந்த வூரினில் ஷஹஜியென் றியம்பிடும் அமைச்சன்
சிந்தை தூய †ஜீஜாவுடன் சிவநெறி வாழ்ந்தான் ;
அந்த வந்தணர் அருந்தவக் கனிபழுத் ததுபோல்,
வந்து தோன்றினன் வரம்பெறு வீரசி வாஜி.

நாரி யர்க்கணி யாகிய நன்னலத் தாயும்
ஆரி யச்சுட ராகிய தன்மக னுணர
வீரர் வீரமுஞ் சோற்றுடன் மிசைந்திட வூட்டித்
"தீர னுயிரு" வென்றனள் ; சிவாஜியு மிருந்தான்.

காண்ட தேவெனும் காட்சியான் காதலால் அமைந்தே,
வேண்டு போர்க்கலை வீரமாக் குரிசிலுக் கீந்தே,
தூண்டி யுட்சுடர், துகளறு சிற்பியைப் போலே,
ஆண்ட கைதனை யற்புதப் பொலிவுட னமைத்தான். 20

காலநிலை

அந்த நாளினில், அறமிழந் தாற்றலு மிழந்தே,
பந்த முற்றிடர் தவித்தனள் பாரத தேவி ;
சொந்த நாட்டினிற் சுதந்தரம் நாட்டுவ னென்றே,
சிந்தை கொண்டிளஞ் சிங்கம்போ லெழுந்தனன் சிவாஜி.

உலகம் யாவையுந் தாங்கிடும் ஒருபரம் பொருளை,
நலமெ லாந்தரும் அருட்பெருஞ் சோதியை நம்பார் ;
பலம தஞ்சொலி யொருவர்மற் றொருவரைப் பகைத்தே,
கலகக் காடெனச் செய்தனர் கண்ணிலா ருலகை.

ஒத்த மானிடர், ஒளிவளி நீர்நில வளமை
ஒத்த மைந்தவர், ஒருயிர்ச் சக்தியால் உயிர்ப்பார்,
ஒத்து வாழ்ந்திடும் உணர்விலார், உண்மையொன் றறியார் ;
சத்த மாமதச் சந்தையிற் றலைதிரிந் தலைவார்.

என்ன தேயெனக் கேயெனும் ஆணவத்தாலே
சொன்ன தேசொலிச் சுத்தசத் தியப்பொரு ளறியார் ;
மன்னு ஞாலத்தில் அருட்பெரு மங்கல வாழ்வை
இன்ன தீயவர் தடுப்பரே இன்னமும் அந்தோ !

---

* மகராஷ்ட்ர தேசத்தின்

† ஜீ ஜா என்றால் தாய்—நம்மவர் தாயாரம்மாள் என்பதே மராட்டியில் 'ஜீ ஜா பாய்'' எனப்படுகிறது.

இத்த கைமத வெறிகளும் இடர்களுங் காமப்
பித்த லேத்திடும் பிழைகளும், பேயர்வெங் கொலேயும்,
சத்து ருக்களின் சங்கடத் தீமையுங் கண்டே,
உத்தமர் உளங் கொதித்தனர் உய்வகை யறியார்.

பயமு றுத்திடும் பாதக வெறியெழுந் தெறியும் ;
புயலி லேயிருட் சுழியிலே, புகலது காணுர்,
இயம்பொ ணுதிடர்க் கடலினில் எளியவர் தவித்தார்.
செயப் படாங்கொளும் வங்கம்போல் வந்தனன் சிவாஜி !

உண்ணும் ஊணினே, உயிர்த்திடும் உயிர்ப்பினே, உரையை,
எண்ணும் எண்ணத்தை, இயற்றிடும் பணிகளே யெல்லாம்,
கண்ணி னும்அரி தாகிய கற்பக நாட்டின்
புண்ணி யப்பயன் வாழவே பூசனே புரிந்தான்.

“ இச்சை யால்உல காடலே யியற்றிடும் பரமா,
நச்சி ருட்பகை நலித்திட, நரகினுங் கொடிய
கொச்சை வாழ்விந்த நாட்டினிற் குலவிட லாமோ ?
அச்ச மற்றநல் லமரவாழ் வருள்புரி ” யென்பான்.

“ பாரில் யாவரும் பரம்பொருட் பங்கெனப் பகரும்,
பார தாத்தும தருமமே பரவிட வேண்டும்.
போரி டர்களேப் போரினுல் ஒழித்திட வேண்டும்,
வீரத் தீயெனக் கருளுவாய் வெற்றிநா யகனே !”

சொல்லுஞ் சொல்லினேச் செயலினிற் காட்டிடத் துணிந்தே,
மல்லர் சேனையைப் பயிற்றினுன் மாரதச் சிங்கம் ;
பொல்ல வர்தமைப் பூண்டுடன் போக்கிடக் கருதி,
நல்ல வர்தமை நாடொறுங் காத்திட நயந்தே.

மாரன்போல் அழகி னுனே, மடங்கல்போல் நெஞ்சினுனே,
கார்வரைப் புயத்தி னுனேக் காலனும் வெருவுகின்ற
வீரவாட் கரத்தி னுனே, வெற்றிக்கு வெற்றி செல்லுந்
தீரனேக் கண்ட பேர்கள் சிவக்கன லுருவே கண்டார்.

கல்லுடைத் தோளேக் கண்டார் கலங்கறு வீர ராஞர்.
சொல்லுடைத் திறத்தைக் கேட்டார் சொல்லறப் பணிந்து நின்ருர்.
வில்லுடைத் திறத்தைக் கண்டார் வில்லரா யெழுந்து வந்தார்;
மல்லுடைத் திறத்தைக் கண்டார் மல்லராய் முன்சென் ருரே !

கண்டவர் கருத்தை முற்றுங் காந்தம்போற் கவரும் வீரன்,
கொண்டதே கொள்கை யென்ருர்,குறித்ததே கடமை யென்ருர்.
பண்டறம் பிழைக்க, ஞான பாரதம் பிழைக்க வின்னேன்
விண்டதே வேத மென்ருர்.....“ வெல்கநீ ! வாழ்க ” வென்ருர்.

அலையெறி கடலைப் போலே, ஆர்த்தெழும் படையி ருந்தென்?
மலையெனப்பொருளும்வேண்டும்.வயிறன்றோஉயிரைத்தாங்கும்?
" நிலைபெறத் தரும மிங்கே, நீணிதி யரு " ளென் றன்பன்
தலைவிப வானி யன்னைத் தாள்பணிந் திறைஞ்சி னனே :—

" ஒன்னலர் கொடுமை போக்கி, ஒற்றுமை யாக நாடு,
தன்னறம் போற்றி வாழத் தருமவீ ரரைநீ தந்தாய்.
அன்னவர் உண்டு டுத்தே, ஆண்டகைப் பணிகள் செய்யப்
பொன்னருள் புரிவாய் தாயே,போற்றியுன் சரணம்பூண்டேன்.

" சத்திய சீலர் வாழச் சநாதன தருமம் வாழ,
பத்தினிப் பெண்டிர் வாழப் பசுவளம் வாழ வேண்டி,
இத்தினம் எழுந்து நின்றேன் ; இறைவியுன் னருளி னாலே ;
உத்தமர்க் குணவு தாராய், உலகினை யூட்டுந் தாயே !"

பூரண சக்தி யன்னை புதல்வனுக் கருள் புரிந்தாள் :
தாரணிக் கோட்டைக் குள்ளே தங்கமாப் புதையல் கண்டான்.
"பாரணி யருளே, யுன்றன் பரிவினாற் பிழைத்தே" னென்று,
போரணி வகுக்க நின்றான் புவியெலாம் புகழும் வீரன்.

ஆவியும் உடலும் போலே யாட்களும் பொன்னும் வந்து
மேவிய வுடனே வீரன், மேவலர் அணுக வொண்ணுக்
காவல்க ளமைத்தான் ; கல்லாற் கட்டினான் அரண்கள்; சக்திக்
கோவில்கள் அமைத்தான் ;வீரப் பயிற்சிகள் கொடுத்தான் மாதோ!

வீரப் பேச்சு

கூட்டினான் சேனை ராஜ சிங்கமாக் கோட்டைக் குள்ளே ;
காட்டினான் காலம் வேண்டுங் கடமையும் இடமும் ; வாளை
நீட்டினான் ; "பவானி, சண்டி, பைரவி போற்றி " யென்றே
பாட்டுகள் முழங்கச் செய்தான் ; பயனுரை கூறினா னே.

" இறைவியின் அருளினால், எழுந்த வீரர்காள்,
பொறைகெட வருந்திடும் புண்ணி யத்தினைக்
குறையறக் காத்திடக் கொண்ட கொள்கையை
நிறைவுறப் போற்றிட நேரம் வந்ததால்."

" வேங்கைபோல் அதருமம், வேதத் தேனுவைத்
திங்குறு கைகளாற் செகுக்கக் கண்டுமே,
ஓங்கிய மாமலை யொத்த தோளினர்
தூங்கினார் என்கிற சொல்லைக் கேட்பமோ ?"

" கோவில்கள் யாவையுங் கொள்ளை போகையில்,
ஆவினம் படுகொலை யாகும் போதினில்,
பூவையர் மானமும் புண்பட டேங்கையில்,
பாவியர் தீமையைப் பார்த்தி ருப்பதோ ?"

“ செல்லுமின், அதர்மத்தைச் செகுமின், வெம்மையைக்
கொல்லுமின், அறத்தினைக் குலவ நாட்டுமின்,
சொல்லுமின் “ சுதந்தர சக்தி ஓம் ” என்றே,
வெல்லுமின் பகைவரை வீர ராமன்போல்........!”

சூரன் இன்னவை சொல்லி நடத்தலும்,
“ பாரின் சக்தி பவானிக்கு ஜே ” யென்றே,
மார தப்பெரு மல்லர்கள் பீஜபூர்
ஊர்க ளிற்கொடி யூன்றினர் வெற்றியால்.

சுல்தான்

அந்த வூர்களை யாளுஞ்சுல் தானுக்குத்
தந்தை ஷாஜி தகவுடை மந்திரி.
சொந்த மைந்தனைச் சொல்லி யடக்கென,
மந்தி ரியைப் பணித்தனன் மன்னனே.

தந்தை

“ நான் அமைச்சு நடத்திடும் பீஜபூர்,
கோனுக் கேபல குற்ற மிழைத்தனை !
ஏன் எனக்கு மகனென வந்தனை ?
மானம் போனதுன் மர்க்கடச் சேட்டையால்.”

“ நஞ்சர் என்னினு நாட்டினை யாளுவோர்
தஞ்ச மென்றடி தாழ்ந்தவர் கட்டளை,
செஞ்சொல் வேத மெனச்செய லேமதி !
அஞ்சத் தக்கதை யஞ்சிடத் தக்கதே !”

“ வரம்பை மீறினை வாலிபத் தெம்பினால்,
நிரம்ப வுஞ்செருக் குற்று நிமிர்ந்தனை ;
பரம்ப ரையர சைப்பதம் பார்த்தனை !
வரம்பெற் றோர்க்கும் வணக்கம் அழகன்றோ ?”

“ பழிப்பு றுஞ்செயல் செய்தனை மைந்தவென்
பிழைப்பி னுக்குப் பெருந்துய ராயினை ;
அழைப்பன் மன்னன் ; அடக்கமாய்ப் பே” செனப்
பழுத்த தந்தை பயலை வெருட்டினன்.

சிவாஜியின் வீரவுரை

“ மாதரைக் கெடுத்திட் டேனோ? மன்னறம் பிழைத்திட் டேனோ?
பாதகக் கள்ளுண் டேனோ ? பசுக்களைக் கொலைசெய் தேனோ?
கோதறு முனிவர் வாழுங் கோயிலைக் கொளுத்தி னேனோ ?
யாதிடர் செய்தேன் ஐயயா”வென மைந்தன் சொல்வான்.

" இந்தநம் புனித நாட்டின் இரத்தத்தை வடித்த வர்க்கும்,
விந்தையாய்ப் பரிந்து பேசி, விடுதலை செத்து, நீசெய்
மந்திரி வேலை யன்றோ மானத்தைக் குலைப்ப தையா...!
தந்திர வேசைக் காளாய்த் தாயினை மறப்ப துண்டோ ?"

" வருந்திய தனது தாயை வருத்திடும் இரத்தக் கையால்
விருந்தினை யுண்டு, நாளை விற்பதும் ஆண்மை யாமோ ?
திருந்திட வேண்டும் நீயே, தீரர்முன் தலைநி மிர்ந்தே
இருந்திடவேண்டின்என்போல் இருந்திடவேண்டு" மென்றான்.

"தந்தைசொல் எனது தாய்க்குத் தருவது பெருமையாயின்,
மந்திர மென்னக் கொள்வேன்...மற்றது சிறுமை யாயின்,
பந்தனை தருவ தாயின், பதரெனத் தள்ளி, வீரச்
சிந்தனை செயலிற் காட்டிச் செயக்கொடி பிடிப்பே"னென்றான்.

" உடலைநீ தந்த துண்மை. உடலினுள் எரியும் வீரச்
சுடரைநான் பெற்றேன், அன்னை சூலிபவானி தந்தாள் ;
இடர்தரு மிகலை வீட்டி யினிதறம் போற்றி யெங்கும்
படர்துடைத் தாளு வேனிப் பாரத நாட்டை" யென்றான்.

" அறத்தினைக் காத்த ராமன் அவதரித் திருந்த நாட்டில்,
கரத்தினைக் கட்டி வாழேன், கருமவீ ரத்திற் கென்றே,
வரத்தினைப் பெற்ற வீர மாருதி போல வெற்றிச்
சிரத்தினையுயர்த்தியேநான் சிங்கம்போல் நடப்பே"னென்றான்.160

"நானுரை மொழியில்உண்மை நன்மையொன் றுள்ளதாயின்,
ஏனெனும் எதிர்ப்பில் லாமல், இதயத்தில் உனக்கு நாட்டின்
மானமே துடிப்ப தாயின், மந்திரி வேலை விட்டென்
சேனைசெய் தேச சேவை செய்வதே கடமை !" யென்றான்.

கட்டறு வீர மைந்தன் கருத்தினை யறிந்த தந்தை
விட்டவன் போக்கிற் சென்றான்...விடுதலை மனத்தி னுக்கும்
வட்டவான் மழையி னுக்கும், மதிவளர் அலைக ளுக்கும்
சட்ட திட்டங்கள் செய்வார் சகத்தினி லில்லை யன்றோ ?

முதல் வெற்றி

தூண்டு வீரத் துடிப்பை யடக்கிலான்,
மீண்டும் ஊர்களை வென்றுதன் சேனையால்,
ஆண்டு தன்கொடி யாடிடச் செய்தனன்,
ஈண்டு சுல்தா னெரிசின மேறவே !

மல்லரால் இந்த மல்லனை வெல்வலி
யில்ல னாகி, யிணங்கவும் இல்லனாய்,
தில்லி மன்னன் செவியுறச் செய்தனன்,
தொல்லை செய்யத் துணிந்தவன் மாற்றமே.

" கள்ள மாகக் கரந்து மலைகளில்,
மெள்ள வந்து மிடற்றினைப் பற்றுவான்,
கொள்ளை யிட்டுக் கொலைசெயுங் கூற்றிவன் !
சள்ளை சொல்லிற் சரித்திர மாகுமே !"

" ஒடுக்க வேண்டு முடனிவன் கொட்டத்தை ;
தொடுக்க வேண்டுஞ் சமர் " எனச் சொல்லவே,
திடுக்கெனச் சினந் தேதில்லி மன்னவன்
கொடுத்த னன்ஒரு கோபக் கனற்படை.

அறமும் ஆண்மையும் அன்பும் பொருந்திய
திறமை கொண்ட திருவினன் ஓர்பகல்,
இறைவி தன்னை யிறைஞ்சிடும் போதினிற்,
பறை முழக்கொலி பாய்ந்தது காதிலே.

" எந்தை யேஅஃப்சுல் கான்எனும் வெய்யவன்
வந்த னன்வழி யெங்கும் இரத்தமே
சிந்தி னன் ; உமைச் சிக்கெனப் பற்றிட
முந்தி னுன்" என ஒற்றன் மொழிந்தனன்.

கொல்ல வந்தவன் குட்டறி ஒற்றரும்,
புல்லை விற்பவர் போல்உள வாய்ந்தனர்.
வெல்ல வோர்வழி கண்டுநம் வீரனும்
மல்ல ராங்கு மறைக வென் றேவினுன்.

மாசி லாத மராதிய மாமணி,
வீசி வாளை விரைந்திடும் போதிலே,
" நேச மாய்நினை நேரினிற் கண்டிடும்
ஆசை யேன் " என் றழைத்தனன் அஃப்சுலே !

எப்ப டையுமில் லாமல் எதிர்ந்திடும்,
அஃப்சுல் கானை யறிந்தநம், வீரனும்
" குப்பெ னப்பற்றிக் கொன்றிடும் சூழ்ச்சியைத்
தப்ப நானுந் தயார்" எனச் சென்றனன்.

"எடுத்தனன் இரத்தக் கூர்வாள், இடுக்கினன் புலி நகத்தை
அடுத்தனன் குறித்த சூழல், அன்பிலான் மோசங் கண்டே,
பிடித்தனன் வயிற்றைக் கீறிப் பிளந்தனன், பகையை முற்றும்
முடித்தனன், பொருளை வாரி முதல்விக்கு நிவேதித் தானே.

" ஒன்னலர் வஞ்சத் தீமை ஒழிந்தது, முதற்போர் வென்றேம்!
உன்னடிக் கொப்ப ளித்தோம் உதவிய பொருளை முற்றும்.
மன்னறம் வாழ, நாடு மங்கலம் பொலிந்து வாழ
அன்னையே வீரசக்திக் கனலெமக் கருளு வாயே !"

"பேச வந்த பெரும்படை யாளனை
மோச மாக முடித்தவன் சேனையை
நாச மாக்குவம் நா" மென ஷா, பிடி
மீசை யைமிடுக் காக முறுக்கினான்.

கொள்ளி போலக் கொதித்திட வெஞ்சினம்,
வெள்ள மாப்படை கொண்டு விரைந்தனன்.
துள்ளி வந்த துருக்கர் படையினை
அள்ளி வீசி யழித்தனன் வீரனே !

" சூரி யனையெச் சூறை யணைத்திடும்
வீரிய னிவன், வெல்லற் கரியவன் ;
போரி லாதன்பு பூண்பது நன்" றெனக்
கோரி னான்அதில் ஷாகுண மாகவே.

" தேசத் திற்கும் அறத்திற்குந் தீமைசெய்
நாச காலர் நலிந்திட வேயிவன்
ஆசை கொண்டவன், அன்றி யிஸ்லாமியர்
நேசங் கொண்டவன் ; நேர்மை தவறிலான்."

" இவன் படையில் இஸ்லாமியர் உள்ளனர்,
அவர்க ளுக்குக் குரானும் அளிக்கிறான் !
தவறி வந்த தனியிள மாதரை
அவர வர்க்குரி யாரிடஞ் சேர்க்கிறான் !

" இத்த கையவன்" என்றுதன் ஒற்றர்கள்
ஒத்தி யம்பினர்; உண்மை யறிந்ததும்,
வைத்த வெம்பகை மாறி அதிலனும்
உத்த மனுக் குறுதுணை யாயினான்.

தந்தை யுள்ளந் தழைத்துத் தழுவினான் ;
முந்து கொண்ட முனிவை முனிந்தனன்.
சிந்தை பூத்து"நற் செல்வநீ வாழ்"கெனத்
தந்த னன்மன தாரத்தன் ஆசியை.

தந்தை யுந்தந்தை யாக மொழிந்தனன் ;
மைந்த னும்மைந்த னாக வணங்கினான் ;
" நிந்தை யற்ற நெறியி லொழுகுமுன்
சந்த திக்கினிச் சாவிலை " என்றனன்.

தில்லி பாதுஷா

சுற்றி யெங்குந் துணிந்தமர் செய்தவன்
சிற்ற ரசரைச் சேவகங் கொண்டொரு
முற்ற ரசை முடிவற நாட்டினான் ;
வெற்றி கண்டு வெருவினன் பாதுஷா !

அடங்கி லான்அர சாட்சியிந் நாட்டிலே
இடம் விரிந்து பரவிய தெங்குமே ;
உடனித் தீதை யொடுக்குவ தேமுதற்
கடமை யென்னக் கருதினன் பாதுஷா......

சொற்ற வாயுஞ் சுடும்; அவன் பேரிசை
கற்ற நெஞ்சுங் கனலென வெந்திடும் ;
மற்று ரைப்பதென் ? மாரதச் சிங்கத்தால்
அற்று றக்கம் அமைதி யிழந்தனன் !

" பரவை போலப் படைத்திரள் கொண்டென்றன்
அரசைத் தான்பற்றி யாளத் துணிந்தவன்,
சிரசைக் கொய்" கெனச் சேட்டனை யேவினன் ;
முரசு விம்ம முடுக்கினன் சேனையை........

இறைவன் கட்டளை யேந்திய வெம்படை
கறைகொள் மேகங் கலித்தெழு மின்னெனப்
பறை முழக்கிப் பறந்தது ; பூநகர்,
சிறை பிடித்துச் செகுத்திடச் செம்மலை.......

## சேட்டாகானை வெல்லல்

சினங்கொதி புலியி னம்போற் சேட்டன்பூ நகர் புகுந்து,
கனம்பெறு போர் முறுக்கக் கரந்துள சூழல் கண்டே,
மனந்திடங் கொண்டெ தழுந்த மாரதச் சிங்கம் அந்நாள்,
புனைந்தொரு புதிய வேடம், பூனைபோற் புலியை வென்றான்.

கூற்றுலாம் பகைவன் சூழல், குறட்டைவிட் டுறங்கும் போது,
நீற்றுருப் பூனை போல நெருங்கியோர் சாதுக் கூட்டம்,
காற்றெனப் புகுந்த துள்ளே...கனலெனச் சீறிக் கொல்ல,
வேற்றவர் குடல் கலங்கி வெருட்சிகொண் டோடி னரே !

சேட்டனுஞ் சென்ன லேறித் திடுமெனக் குதித்த போது,
போட்டதோர் வலியவெவ்வாள் ; பொருக்கென வுயிரையேந்தி,
வீட்டினின் "றையோ" வென்றே விரல் இழந் திவன் எடுத்த
ஓட்டம்போய் தில்லி சுல்தான் உலைந்திட நின்ற தன்றே...

## ஆக்ராச் சிறை தப்பல்

வெல்லுஞ் சேனையை வென்று முடித்தனன்,
கொல்லுஞ் சூழ்ச்சியைக் கொன்று முடித்தனன்.
இல்லை சாந்த மில்லாவழி யென்றந்தத்
தில்லிபன் அழைத் தான்சிவன் சென்றனன்.

அஞ்சறு வீரன் கண்டான் அரசனை ஆக்கிராவில் ;
துஞ்சறு சமயப் பற்றுந் துகளறும் எளிய வாழ்வும்,
மிஞ்சிய பாது ஷாவை வியந்தனன். பாதுஷாவும்,
நெஞ்சுரங் கொண்டான் செய்கை நேரிய தெனவுணர்ந்தான்.

நிறையுடன் இரண்டு பேரு நேசமா யிருக்கு நாளில்,
இறைவனும் வஞ்சர் சொல்லை யேற்றுநம் வீரர் ஏற்றைச்
சிறைசெய்தான் ; சிவாஜி வீட்டிற் "சிவசக்தி காக்க" வென்றே
முறையிட்டான் மோசஞ் செய்த மோசரைத் தப்பவேண்டி...
"தருமத்தை நிலை நிறுத்தத் தாரக மாக முன்னோர்
நிருமித்த வழி நடந்தேன் ; நிறைவுநா ளின்னுங் காணேன்.
கருமத்தை முடிக்க வேயிக் கட்டினை யுதறிச் செல்லும்
மருமத்தை விளக்கிக் காவாய், மாசிவ சக்தி தாயே !"

ஆயிர மின்னல் போலே அன்னைவந் தபய மீந்தாள் !
போயது துயரம் ! சூழ்ச்சி பொலிந்ததும், அறிந்த வீரன்,
நோயெனப் படுக்க, நண்பர் நூறுபேர் சிகிச்சை செய்தார்....
வாயிலுந் திறந்தார் தந்தை மகனொடுந் தப்பு தற்கே......

விட்டது நோயென் றூர்கள். வீரனைத் தில்லி மன்னன்
மட்டறு மகிழ்ச்சி காட்டிப் பார்த்தனன் ; மராட வீரன்,
"இட்டமித் திரருக் கெல்லாம் விருந்துகள் இடுவேன் "என்றான்...
கட்டளை யேற்ற தோழர் கனவிருந் தாக்கி னரே..... 300

நேசர்க்குப் பண்ட மென்றே நெடியபல் கூடை சென்ற !
வேசையர் நடனக் கூத்தில் வெறிகொண்டார் காவலாட்கள் !
வாசலைக் கடந்து சென்ற வலியதோர் கூடை யென்னே !
தோசையென் றிருந்தார் மற்றோர் ; சூரனும் விடுபட் டானே !

மூக்கினில் விரலை வைத்தான் முகலவர் கோனும் ; வாயிற்
காக்குநர் தமையொ றுத்தான் ; காற்றினும் வேக மாக,
ஊக்கினன் ஒற்றர் தம்மை ; ஒருலட்சம் வராக னென்று
வாக்களித் தானவ் வீரன் சிரத்துடன் வருவா ருக்கே !...

*வாசியி லேறிய வன்றிறல் வீரன்,
ஓசனை நான்குற ஓர்வனம் புக்குப்
பாச மறுத்த பரங்களைக் கூடிக்
காசி யடைந்தனன் காவி யுடுத்தே.

ஐம்பொறி வென்ற வருண்முனி போலே,
கைம்மலர் தன்னிலோர் கப்பறை தாங்கி,
பொம்மக தேவவென் றையம் புகுந்தே,
செம்மல் சிவாஜி திரிந்தனன் சுற்றி.

---

* *கலி விருத்தம்; மோகன ராகம்; ஆதி தாளம்*

அறிந்தவர் போற்றி யறிந்தது சொல்லார்,
துறந்தவ னென்று பகைவர் துறப்பார்,
செறிந்து பிடிக்க வருஞ்சில தெவ்வர்
மறைந்தவன் போகிற மாய மறியார்.
தான்வரத் தானம் வழங்கு மனைவி,
தான்வரக் கண்டு தழைத்தன வின்பம்,
கோன்வரக் கண்டு குளிர்ந்தது நாடு,
பூநகர் மீண்டு புரந்தனன் வீரன்.

சத்திரபதி

வெருவிய பாது ஷாவும், வீரனை வெல்லொ ணுமல்,
உருவிய சூழ்ச்சி வாளை உறையிலிட் டுண்மை யான
பெருமைகள் பேசி, மன்னர் பிரானெனும் பட்டஞ் சூட்டித்
திருவுடன் சுதேசங் காக்கச் செய்தனன் சேம மாக......

செருவினி லனுமான் வாழ்க, தீமையைச் செற்ருேன் வாழ்க,
அருமருந் தனைய நண்பன், அரனருட் சக்தி மைந்தன்,
தருமத்தைக் காத்த தீரன், சத்திர பதிவாழ் கென்றே
திருமுடி சூட்டிஞர்சு தேசத்தார் கேச ரிக்கே.

கடமைக்குயிர் தருசேனையுங் கலங்காமன வுரனும்
திடபக்தியுஞ் செயல்வெற்றியுந் திருவோங்கிய புகழும்,
இடமேவிய வரசும்மிக வினிதாகிய குணமும்,
உடையான்உல கெக்காலமும் ஓதும்அதி மனிதன்.

அடிமைத்துய ரிருள்போக்கிடும் ஆண்மைச்சுட ரானுன்.
இடருக்கெதிர் இடர்செய்துபே ரிடர்தீர்த்தினி தீந்தோன்,
வடநாட்டிலுந் தென்னுட்டிலும் கொடிநாட்டிய மன்னன்
இடிமின்புய லுடன்மாமழை யெனவேவினை புரிந்தோன்.

மக்களுக் கினிய தந்தை, மன்னவர் மன்னன், உள்ளப்
பக்குவ ஞானிகட்குப் பண்புள தொண்ட னுனன்,
அக்கிர மங்கள் செய்யும் அரக்கனின் கால னுனன்
சக்கர நெறிநின் ருர்க்குத் தருமமே யானன் மாதோ !

தாயினுக் கினிய பிள்ளை, தந்தைக்குப் புகழைத் தந்தோன்,
நேயருக் கினிய நேயன், நிகரிலா வுலக வீரன்,
தூயனி ராம தாஸன் சொல்மொழி கேட்கு மன்பன்,
ஆயுளை யெல்லாந் தேச சேவைக்கே யளித்தான் மாதோ !

“ இனையசி வாஜி மன்னன் வணங்கிய இராம தாசின்,
புனிதமாக் கதைசொல்”லென்று புனிதனுங் கேட்க,நல்லோன்
“ இனிதினி துனது கேள்வி ; ஏகுவோம் ஐந்தால் ஆங்கே
முனிவரின் வாக்கி னுலே முனிவரைக் கேட்போ” மென்ருன்.

வாளினில் வீரன், போரில் வாகைகள் அணிந்த வீரன்,
தோளினில் அறஞ்சு மந்த துகளறு வீரன் ; பூமி
ஆளுறு வீரன், யோக பலத்தினுல் அடக்கித் தம்மை
ஆளுறும் வீர ருக்கே அன்புறு வீர னுன்....

அத்தகை சிவாஜி யாக்கை அடங்கிய ராயக்கோட்டை
இத்ததி காணப்பெற்ருேம் இதயத்தில் வீர மூற,
சத்திய தருமத்திற்கே தம்முயிர் வழங்கு கின்ற
உத்தம வீர ரிந்த வுலகுள மட்டும் வாழ்க ! 360

மாசறு வீரன் வாழ்வை மனமுறப் பருகிச் சுத்தன்
" பேசரும்பெருமைபெற்றபிரான்கதை செவியிற்கொண்டேன்
காசினி யனைத்து மிந்தக் கதையினுல் வீர சக்தி
ஆசியைப் பெற்று வெற்றி யடைந்திடு முண்மை" யென்ருன்.

இன்ன சொல்லி முடித்திடு மெல்லையில்,
" என்ன கர்க்கண் இளமன் வரு" கெனக்
கன்ம மனக்கலி யன்கடி தந்தந்தே
முன்னின் ருன்முக மூடிய தூதனே.....

இடமு நாளும் இசைந்திடின் உன்னகர்
உடன் வருவ துறுதியென் றன்புடன்,
விடை யெழுதி விடுத்ததும், சித்திமான்
கடிதின் ஒற்றரைக் காண்மினென் றேவினுன். 372

# 17. பஞ்சவடிப் படலம்

வேதங்கள் அனைத்தும் ஒன்ருய் விளம்பிடும் உண்மையான
ஆதிசுத் தான்மன் யானென் றறிந்திடத் தியான மோனச்
சாதனஞ் செய்து, முற்றிச் சகசநிட் டையில் விளங்கு
மாதவர் வாழும் பஞ்ச வடியினைப் புனிதன் கண்டான்.

உரையினுக் கரிய ஞானி யுளமென மலையும், ஆர்வக்
கரைபுரண் டோடுந் தெய்வக் கவியென விமலை யாறும்.
விரைமலர், கனியுங் காயும் விளைபசு வனப்பு மோங்கி
வரையறு தவத்திற் கேற்ற தண்டக வனமுங் கண்டான்.

வானமு மலையும் ஊட்டி வளர்த்திட, வளர்ந்து சென்றே,
நானிலப் பயிர்கள் ஓங்க, நல்லுயிர்க் குலஞ்செ ழிக்கத்
தானமாய்த் தன்னை நல்கித் தரத்தரத் தழைத்துப் பொங்குந்
தேனினு மினிய கோதா வரியெனுந் தெய்வ யாறே.

அரன்பொது மன்றில் ஆடும் ஆனந்தக் கூத்தைப் போலும்,
பரமனைப் பரவு கின்ற பக்தர்பா மாலை போலும்,
துரியரின் வீணை தண்டந் தொனிக்குமோங் காரம் போலும்,
விரியலைக் கரங்கள் வீசி விரைந்தது விமலை யாறே.

தாய்முலைப் பாலைப் போன்ற தளிரிளம் பயிரை யூட்டிக்
காய்கனி தானி யங்கள் கணக்கற விளைத்து நல்கித்
தேயத்தின் பசியை நீக்கித் திருவருண் முனிவ ருக்குத்
தூயநல் லுதவி செய்யுஞ் சுதந்தர வள்ள லாறே.

தீங்கனி ரசமும், வாச மலர்வனஞ் செழித்த தேனும்
தாங்கிடும் அமுத வெள்ளம், தங்கமும் பசிய சீரும்
ஓங்கிடு மிதன் பரப்பில் உலவிடு மனத்தி னுக்கு
நீங்கிடுங் கவலை, சாந்த விடுதலை நிலவு மம்மா !

பாருயிர் அறஞ்செ ழிக்கப் பாய்ந்திடும் விமலை யாறு,
கார்வரைக் கல்லு ருட்டிக் கான்மரம் பறித்து மோதிப்
போரலை விம்மப் போந்து பொருகடல் கலக்கு நீரால்,
வார்சிலை இராம னேவும் வானரப் படையை மானும்.

வரைகளிற் பொருளின் மாண்பும்,வனங்களிற் கலையின் மாண்பும்
திரையெழுந் தோடும் ஆற்றிற் செவ்விய சொல்லின் மாண்பும்
கரையிலா வுயிரின் போக்கிற் கலந்திடும் பண்புங் கொண்டே
உரைமிகும் ஐந்தால் வேத வுருவென விளங்கிற் றம்மா !

போட்டிபொ றாமை கோபம் போர்,செருக் கோங்கி நெஞ்சை
வாட்டிடும் உலகை நீத்து, வஞ்சமில் நதியும், புள்ளும்,
பாட்டிசை வனத்திற் பாலும் பழங்களுந் துய்த்து மேலோர்,
நாட்டிசை யோங்க நல்ல கலைகளை நல்கி னாரே !

திருவுறு மாந்த ருக்குச் செந்நெறி யிலகக் காட்டிப்
பருவநன் மழையைப் போலப் பயன்மிக விளைத்து, நாளுந்
தருமமுங் கலையுந் தந்த தபோவன முனிவ ருள்ளம்
உருவுகொண் டொழுக்க முள்ள வுலகென விரிந்த தம்மா !

இத்தகை வனத்தி னூடே, யியற்கையின் அழகிற் சொக்கி,
சித்திமான் அரிய காட்சி திசைதொறு மினிது காட்ட,
சத்திய மைந்த னுக்குச் சாதுக்கள் வரவு கூற,
சுத்தனும் வணக்க மாக முனிவரைத் தொழுது சென்றான்.

எழிலுறும் இயற்கை யன்னை, யினமலர் நகை குலுங்க,
கழிபெரும் உவகை தூண்டக் கானமா வரவு கூற,
பொழிலுறு கனியு திர்த்துப் புள்ளினந் தென்ற லோடும்
வழிநடைப் பாட்டொ லிக்க வரதனும் வழிந டந்தான்.

மாரத வீரர் முன்னே வழியினைத் துலக்கிச் செல்லத்
தேர்பரி கரிகள் சூழத் திருநெறி முனிவர் கூடி
ஆரணங் கூறி வாழ்த்தி, யமைதியாங் குடிலில் ஏற்கப்
பாரணங் கீன்ற தூய பாக்கியன் இனிது சென்றான்.

## சாந்த முனிவர் ஆசிரமம்

கலகலப் பாகப் புட்கள் கனிவிருந் துண்டு பாடிக்
குலம்வளர் குஞ்சைக் கொஞ்சிக் கூடுகள் கட்டி வாழும் ;
கலையினங் கட்டி லாத கன்றினத் துடனே யாடும்,
இலையினக் குடில்கள் காணும் சோலையொன் றெதிரே கண்டான்

ஆலுடன் வேம்பும் கூடி யாக்கிய நிழலிற் காணும்
வேலுடன் அமைந்த கூரை வீட்டினுள் வீற்றி ருக்கும்,
சால்புடை அந்த ணாளன் சாந்தமா முனிவன் ; அன்னோன்
கால்படு துசி யாமோ கணக்கிலா நூற்கு ழாமே !

உளங்குளிர் காட்சி யாளன், ஒருமையி லூன்றி நாளும்,
வளங்கொளுந்தவத்தின்மிக்கோன், வாய்மையேவடிவமானோன்,
விளம்பர மெதுவு மின்றி வியன்செயல் பலவுஞ் செய்தோன்,
இளம்பொலி வுடைய மூத்தோன் இருடிகட் கிறைவ னுவான்.

முன்ரகு ராமன் பின்னே இராமதா சனைய சித்தர்,
மன்னிநின் றரிய தூய மாதவம் புரிந்த சூழல்.
இன்னவன் வாழு மிந்த நிலயமே யென்னின் வேறு
பன்னுவ தென்னே யென்று பழுதிலார் பரிந்து சொன்னார்.

"பாக்கியம் பழுத்த" தென்னப் பகரவும் புனித னங்கே,
ஊக்கிய வுவகை யோடும், உத்தமச் சீடர் ஏற்றார்.
நோக்குயர் முனிவன் முன்னே, நுவலரு மின்ப வெள்ளந்
தேக்குறத் தொழுது நின்றான், சித்தரி னுள்ளந் தேர்ந்தான்.

## சுத்தன்

"உலகெலாங் கோயி லாகி, உயிரெலா மேனி யாகிப்
பலபல தோற்ற மெல்லாந் தன்னருட் பான்மை யாகி,
அலைமனம் அடங்கி நிற்கும், அமைதியில் ஒருமை யாகி
நிலைபெய ராத வுண்மை நேயனே போற்றி போற்றி !"

"ஆய்வுறுங் கலைக ளெல்லாம் அருக்கன்முன்மீன்கள்என்னத்
தேய்வுறச் சுடரும் ஞானச் செங்கதிர்ப் பிழம்பே ! என்றன்
வாய்மனங் கடந்த மோன வானமே ! தானே தானுய்த்
தோய்வுற வுலகில் ஐந்து தொழில்புரி யருளே போற்றி !"

சாந்த முனிவன்

மாசிலான் போற்றிட மகிழ்ந்து மாமுனி
"காசினிக் கருட்சுடர் காட்ட வந்தனே,
தேசுற வாழ்கநீ தெய்வ மைந்த" வென்
றுசிகள் கூறினன், அன்பு பொங்கியே !

"வந்தனே தசரத ராமன் வந்தநாள் ;
சிந்தனைக் கினிய நீ ; செகத்தின் மிக்கநீ,
முந்தவன் கார்முகம் முடித்த செய்கையை
இந்தநாள் யோகத்தால் இயற்றுவாய்" என்றான்.

"கலியனென் றொருபெருங் காதகப் பதர்,
அலகறும் அரக்கரை அதர்ம வீரரைப்
புலிநரிக் கூட்டம்போற் புகுத்தி யிங்குமே
கலகங்கள் செய்வதைக் காணுவா" யென்றான்.

"செருக்குடன் பீரங்கித் திமிரும் கொண்டவன்,
உருக்கினால் உலகினை வெல்லும் உள்ளத்தான் ;
கறுக்கொண்டு மாந்தரைக் கருவ றுத்திட
உருக்கொண்ட மாவலிக் குடந்தை யானவன்."

"இன்றுநீ யிலகிடு மிவ்வி டத்திலே,
அன்றிருந் தரக்கரை யழித்த ராகவன்,
ஒன்றியுன் னுளத்தினில் ஊன்றி நல்லறம்,
வென்றிட வருள்"கென விரதன் கூறினான்.

முனியுரை வாசகம் முற்றுங் கேட்டு,நம்
இனியனும் இனிவரும் வினையை யெண்ணியே
"கனிதவ முற்றிய கரும வீரனாய்ப்
புனிதவுன் னாசியாற் பொலிவன்" என்றனன்.

"தூண்டிய கருமமுந் துணிந்த தைச்செய
வேண்டிய தருமமும் விளங்க வூக்கிடும்
மாண்டகு ராமனின் மாண மெய்க்கதை
ஈண்டெனக் கிசைத்திடின் இனிய தா" மென்றான்.

"அன்னதே யின்றெனக் கமைந்த பாக்கியம் ;
மன்னனும் அமைச்சனு மனமு வந்துடன்
என்னுடை யெளியநல் விருந்தை யேற்" கெனும்
முன்னரே யொருதிரு முகம்வந் தேற்றதால்.

கௌரி

மங்கலப் புன்னகை மலர்ந்த பொன்முகம்,
பங்கய வேல்விழி, பவள மூரல்வாய்,
பொங்கிள மயில், குயில், அன்னம் போன்றவள்
புங்கவன் அருளினிற் பொலியுங் கௌரியே.

நீண்டநாள் அறிந்தவன் போல நின்மலன்
காண்டலுங் கருத்தினைக் கவர்ந்த கண்ணினாள்,
ஈண்டிய வுவகையள், இனிய தேனுபோல்
வேண்டிய வேண்டுமுன் விரும்பி யீந்தனள்.

முக்கனி யமுதினை, முதிர்ப ருப்பினைப்
பக்குவ மாக்கிய பச்சி லைகளை
அக்கணங் கறந்தநல் லாவின் பாலினை
இக்குவின் சாற்றுடன் இனிது தந்தனள்.

அமுதளி யமுதினை யமுது செய்தவர்,
குமுதநாண் மலர்நகை கொண்டு சென்றதும்,
அமைதியாய் அவரவர் அலுவல் ஆனபின்
சமரச முனிவனைச் சார்ந்து கேட்டனர்.

# 18. இராமாயணப் படலம்

கதைதரு முனிவன், செஞ்சொற் கவிக்கலை தந்த கம்பன்,
விதவித நீதி சொல்லும் வித்தகத் துளசி தாசன்,
மதிமிகு புலவர், நாட்டு மக்களெல் லாரும் போற்றித்
துதிமிகும் இராம நாமம் சொல்லுவார் வெல்லு வாரே.

நிலமகள் இயற்றி வந்த நீண்டபுண் ணியங்க ளெல்லாம்,
நலமுறு மிராம னென்னு நாமத்தால் அவதரித்து,
கலகமுங் காமநோயுங் கடுந்தவச் செருக்கும் பூண்டார்
பலமதை நலித்த றத்தைப் பாலித்த சரிதை கேளீர் !

இராவணன்

செவ்விய கேள்வியாளன், சிவனிடம் வரங்கள் பெற்றோன்,
ஒவ்வருந் தவத்தின் மிக்கான், உயர்மலை பெயர்க்க வல்லான்,
அவ்வியம் காமங் கோபம் அகந்தையின் வடிவ மானோன்,
இவ்வுல கதிர வைத்த இராவணன், இலங்கைக் கோமான்.

கைகசி விச்சிர வசுவைக் காமுற
எய்திய மூத்தவன், இவன்பின் வந்தவர்—
மெய்ம்மனக் கும்பகன், விரகச் சூர்ப்பணை
செய்யவி பீடணன் சிறந்த சிந்தையான்,

குணத்திலுந் தவத்திலுங் கொடிய கொள்கையர்,
நிணத்திமிர் பிடித்தவர் நிருத ராயினுர்
இணக்கமும் வணக்கமு மெய்தி, யிந்நிலந்
துணுக்குறக் கிளர்ந்தனன் சூழ்ச்சி மிக்கவன்.

கலைமிகக் கற்றவன், சாம கானனும் ;
தலையினைத் தந்தும்வெந் தவமி யற்றினேன் ;
மலையினைச் சிலைசெய்த மங்கை பாகன்பால்,
அலைவறு மாயுளும் வாளும் ஆர்ந்தனன்.

தேவரு மாந்தருஞ் செய்ய தூயரும்,
யாவரும் வெருவிடத் திக்கின் யானையும்
சோவுறத் துன்பமே துணிந்து செய்தனன்,
தாவுறு மனத்தினைத் தடுக்க லாற்றிலான்.

வன்பகை விளைப்பதும், ஒருவன் வாழவே
மன்பதை பதைத்திட வதைகள் செய்வதும்,
அன்பதை யறிந்தர சாள வேண்டிலார்
புன்பகை நெஞ்சினிற் போந்த போரன்றோ ?

நீதியும் இரக்கமும் நேர்மை யும்இலா,
வேதியன், வேதத்தை விளம்பக் கற்றவன்,
பூதல மெங்குமே புகழ்கண் டின்புற
வாதனை யாகிய வழியைப் பற்றினுன்.

கடக்கரும் இலங்கையைப் பாது காத்தபின்,
வடக்குறு தண்டக வனம் வரைக்குமே
அடக்குறு முறைகளுக் கடிமை செய்தனன்,
விடக்கரும் பாம்பெனும் வெய்யர் சேனையால்.

காற்றிற்குங் கடலுக்குங் ககன ராசிக்குங்
கூற்றிற்குங் கட்டளை குறிக்க முன்னின்றுன்,
நாற்றிசை மனிதரை நரரென் றெள்ளினுன்,
போற்றிய பொருவலி யரக்கர் போற்றவே.

கோபத்தைப் பெருக்கிய கொடிய வாழ்வினுல்,
ஆபத்தைப் பெருக்கினன் ; ஆன்ற சான்றவர்
சாபத்தைப் பெருக்கினன் ; சதைச்செ ருக்கினுற்
பாபத்தைப் பெருக்கினுன், பகைபெ ருக்கினுன்.

அதஞ்செயும் அரக்கனை யடக்கி வீழ்த்திட
நிதந்தவ முனிவரு நிகரில் வீரரும்,
கதந்தர வெழுந்தனர் ; கனலைப் போல்வளர்
சுதந்தர வுணர்ச்சியுந் தோல்வி காணுமோ ?

இடருறு முலகெலாம் " இனிச்செ யலிலோம்
கடவுளே வந்தெமைக் காப்ப துன்பரம்,
விடுதலை விடுதலை " என்று வீறிட்ட
கடுமையே கார்முகங் காட்டி வந்ததால்.

## இராமன் இளமை

மன்னுயிர் நன்மையே மகுடந் தாங்கிடுந்
தன்னுயிர் நலமெனுந் தசரதப் பெயர்
மன்னவன் மரபொளிர் மைந்தர் நால்வருள்,
முன்னவன் இராமனக் கருணை மூர்த்தியாம்.

ஈன்றனள் இராமனை யினிய கோசலை ;
ஈன்றனள் பரதனை யிளமென் கைகசி ;
ஈன்றனள் சுமித்திரை இலக்கு வனுடன்
சான்றவர் போற்றிடச் சத்து ருக்னனை.

குவலயம் வருந்திய கொடிய துன்பங்கள்,
கவலைகள் யாவையும் கதிர்முன் வெண்பனித்
திவலைக ளாயின. சேம மேயினி
நவிலுவ மென்றனர் நல்ல வீரரே.

வன்றவன் வரமுனி, வன்பு லன்களை
வென்றவன், ஆத்தும வீரன், யோகத்தில்
ஒன்றிய வசிட்டனே, உயர்ந்த கல்வியை
நன்றிளஞ் சிறுவர்க்கு நல்கி னானரோ.

அன்றிளம் இராமன்கை அம்பும் வில்லுமாய்
நின்றதைக் கண்டவர், " நிருதர் யாவரும்
பொன்றினர்.........பூமகள் புண்ணி யங்களே
வென்றன " என்றனர், வெற்றி வீரனால்.

## முனிவன் வேள்வி நிறைவேற்றல்

அருங்கலை யகலமும், அறிவின் ஆழமும்,
ஒருங்குயர் ஒழுக்கமும், ஓங்கு மைந்தரைப்
பெருங்களிப் பெழுந்திடப் பேணுந் தந்தைபால்,
வரந்தரு கௌசிகன் வந்து நின்றனன்.

" அன்புடன் மக்களை யாளுங் காவலா,
வன்பகை யரக்கரென் மகங் கலைக்கின்றார்.
உன்முதற் செல்வனை யுதவு வாயுடன்,
என்வினை வென்றிடும் " என்று சாற்றினான்.

" கண்ணினும் உயிரினும் காதல் செய்மணி
வண்ணனை யொருகணம் பிரிந்து வாழ்கிலேன்.
எண்ணிய கருமத்தை இயற்ற நானுளேன் ;
திண்ணமி தென்றனன் " திகைத்த தந்தையே.

கேட்டதே கேட்டிடக் கேடில் மாமுனி,
வாட்டத்தைத் தவிர்த்திட வசிட்டன் மெய்யுரை,
கோட்டமில் மனத்தனுய்க் கொண்டல் வண்ணனைக்
காட்டக முனிவனின் காப்பி லீந்தனன்.

பிரிவறு தம்பியும் பின்றொ டர்ந்திட,
நரிபுலிக் காட்டிடை நடக்கு மெல்லையில்,
கரிபொரு தாடகி, கண்ட மூவரை
எரிபசிக் கடைப்பனென் றெதிர்ந்து சீறினுள்.

" கொல் " எனக் குருமுனி, கொடியள் மார்பிலே
சொல்லென இராமனின் சுடுச ரம்புக,
நல்லருள் கூடிட நலியுந் தீமைபோல்,
பொல்லவள் வீழ்ந்தனள் புழுதி மண்ணிலே.

" பின்னுறும் பேரிசை பெருகுஞ் செய்கையை
முன்னுற விளக்கினே, மூரி வில்லனே,
என்னுடை யாசிகள் ஏற் " கென் றேமுனி
தன்னுடை மந்திரக் கணையுந் தந்தனன்.

வீழ்த்திச்சு பாகுவை விரிக டலிலே,
ஆழ்த்திமா ரீசனை அம்பின் வேகத்தால்,
காத்தனர் இருவருங் கண்ணி மையென
வாழ்த்திடு முனிவரன் வளர்த்த வேள்வியை.

மகத்தினை முடித்தபின், மனதிற் பற்றறச்
சகத்தினைத் தாங்கிடுஞ் சனகன், " என்னகர்
அகத்தியம் வருக " வென் றழைக்க, மாமுனி
உகப்புடன் செல்வரை யுடன்கொண் டேகினுன்.

அகலிகை சாபம் தீர்த்தல்

செல்வழி, செம்மலின் சேவ டித்திறன்
கல்லினின் றகலிகை யுயிர்க்கக் கண்டதால்...
தொல்முனி-சாபத்தைத் துடைத்த தேவனை
நல்லணங் கிவ்வகை நவின்று போற்றினுள் :

" விண்ணர சிந்திரன் வேட்கை கொண்டதால்,
பெண்ணறம் பிழைத்தனன். பேதை செய்கையைக்
கண்ணுறு கௌதமக் கணவன் சாபத்தால்
மண்ணினிற் கல்லென மாறி நின்றனன்.

" கார்மணி வண்ணனே, கருணைக் கண்ணனே,
பார்தொழும் வள்ளலே, பதும பாதத்தின்
ஓர்துகள் பட்டிட வுயிர்த் தெழுந்தனன்
தீர்வதென் பாபமும் ; திருந்தி வாழ்கின்றேன்...."

இல்லறத் திருவினை யில்லஞ் சேர்த்ததும்,
செல்வரும், தவமுனி செப்புங் காதையால்,
ஒல்லையிற் றொலைகடந் துயர் மணிக்கொடி
நல்வர வேற்றிடு மிதிலை நண்ணினர்.

### சீதாராமர் திருமணம்

சகத்தினை யறிந்தவன் ; சகச ஞானமாம்
சுகத்தினை யறிந்தவன் ; சுடரும் பேரின்பம்
இகத்தினில் அரியணை யிருந்த தன்னவன் ;
மகத்தினிற் பெரியவன் சனக மன்னனே.

ஆயவன் முகமலர் அன்பு கூறிடத்
தூயனைக் குமரரைத் துதிகள் சொல்லியே
ஏயநன் முறையினில் ஏற்று, நட்பினால்
நாயமா யறிவன நன்ற றிந்தனன்.

" நல்லறம் பெருகிடும், ஞால மின்புறும்
இல்லறம் பெருகுமென் இளமென் சீதைக்கும்—
வல்லநீள் வில்லொன்றை வளைக்க வல்லையேல்,
தொல்பெரும் அயோத்தியின் சோதி மைந்தனே !

இட்டமி " தென்றிடச் சனகன், ஏறுபோல்
சட்டெனத் தாவியி ராமன் வில்லினைப்
பொட்டென வளைத்தனன் ; கணையைப் பூட்டுமுன்
பட்டென முறிந்ததப் பண்டை வில்லுமே !

வீரரும் வேந்தரும் வியந்து போற்றியித்
தீரனே யமைந்தவன் சீதைக் கென்றனர்.
வார்முர சியம்பின ; மணவி ழாவணி
ஊரெங்கும் விளங்கின ; உளங்கள் பூரித்த.

கேட்டதுந் தசரதன் கிளர்ந்து பொங்கிக்கொண்
டாட்டமும் பாட்டமும் அணியுஞ் சூழ்ந்திட
நாட்டுடன் மிதிலையை நண்ணிச் சீதையை
வேட்டிடும் வீரனை " மெய்ய, வாழ் " கென்றான்.

ஆரழ தனைத்துங் கூட்டி அருளமு துடனே வேதா
வாரிசத் திருவின்மிக்க வடிவினை யமைத்த தன்னாள்,
பூரண மதியு, மானும், பொன்னிள மயிலும் போன்றாள்,
தீரனுக் கேற்ற கற்புத் தீபமே யனையாள் சீதை.

வாய்மையுந் திருவும், வீர வடிவுகொண் டறத்தைக் காக்கத்
தாயுளம் பூண்டு வந்த தசரத ராமன், அன்பர்
நேயன், அதருமக் காட்டை நீறுசெய் கனலே யன்னான்,
மாயிரு ஞாலம் தெய்வ மணியென வணங்குந் திரன். 160

கண்களாற் கண்ட போதே, காதலாற் கருத்தொன் றான,
பெண்சக்தி வீர ராமன் இருவரும் பிரியா தொன்றிப்
புண்ணிய யோகம் போகம் பொருந்திய காட்சி போன்றார்
மண்ணுல கெல்லாம் வாழ்த்தி மங்களங் கூற மாதோ !

இவ்வணந் தம்பி மாரும் இல்லற மேற்ற பின்பு
திவ்வியக் கோலங் கொண்டு திரும்புழி, பரசுராமர்
வெவ்விய செருக்கை ராமன் வீழ்த்திட, வெற்றியோங்கிச்
செவ்விய நகரஞ் சேர்ந்து, சேமமாய் வசித்தார் சின்னாள்.

## இராமன் துறவு

யாக்கையும் அதனைச் சுற்றும் யாவையும் குமுறுங் காலத்
தீக்கிரை யாகுமென்று தெரிந்தறம் புரிந்த தந்தை,
வாக்குயர் அமைச்சர் ஒப்ப, மணிமுடி மகனுக் கீந்து,
நோக்குயர் யோகஞ் செய்ய நோக்கினான் பிறவி தீர.

நீடுலாம் அரச நீதி நெறியினை வசிட்டன் சொல்ல,
நாடெலாம் இராம னுரு நாளெதிர் பார்த்து வந்து,
வீடெலாம் விருந்து செய்ய, வீதிகள் அலங்க ரிக்க,
கேடெலாங் கொண்டு வந்தாள் கெடுமனக் கூனி யந்தோ!

வாட்டிய பொறாமைத் தீயைக் கைகசி மனத்தில் மெல்ல
மூட்டி " நீ தசர தன்பால் முன்னிரு வரங்கள் பெற்றாய் ;
நாட்டையுன் மகனே யாள நம்பியும் பதினான் காண்டு
காட்டினை யாளச் செய்வாய் கணவனைத் தூண்டி " என்றாள். 1

சாகசத் தாலே யன்புத் தலைவனை வசப்ப டுத்திக்
கேகயி வரத்தைப் பெற்றாள் ; இராமனுங் கேட்கச் சொன்னாள் ;
சோகமுற் றயர்ந்த தந்தை சொற்படி காடு செல்லத்
தாகமுற் றெழுந்தான்; வீரத் தம்பியுஞ் சினந்தெ ழுந்தான்.

## இலக்குமணன்

" பெண்மொழி கேட்டுத் தந்தை பிதற்றினான். எதிர்த்து நிற்கும்
விண்ணையும் வீழ்த்தி யுன்னை வேந்தனாய்க் காண்பல் யானே;
அண்ணனீ யாள வேண்டும் ; அரணியம் செல்ல வொட்டேன்.
எண்ணம் நீ மாற்றி " டென்றான் இலக்குவன் அலக்க ணுற்றே.

### இராமன்

“ நல்லதே சொன்னுன் எந்தை. நல்லதே செய்தாள் எந்தாய்.
நல்லதே விளேயு மின்று நாடிகந் தடவி சென்றுல் ;
அல்லலேப் போக்குந் தூய தவப்பய னுகும் ; இந்த
வில்லிற்கு மினிதே தம்பீ ! வெகுளலே ” யென்றுன் வீரன்.

‘ நானுனேப் பிரியே ’ னென்று நடந்தனன் இளவல் பின்னே,
‘ நானுடல் உயிர் நீ ’ யென்றே நடந்தனள் சீதை முன்னே ;
ஏனேயோர் மனதை யாற்றி, இடர்க்கண்ணீ ராற்றைத் தாண்டி,
மோனஓங் காரம் போலே மூவருங் கானஞ் சென்றுர்.

இழந்தனர் மக்க ளின்பம், இழந்த தயோத்தி சாந்தம்,
இழந்தனன் இறைவன்ஆவி இத்ததி; பரதன் வந்தே,
இழந்தனன் பொறுமை ; அண்ணல் ஏகிய வழியே சென்றுன்.
இழந்தனள் இடர்கட் கெல்லாம் இறைவிகை கேசி யெல்லாம். 200

### பரதன் விரதம்

பத்தியும் பணிவு மிக்க குகன்விடும் படகி லேறி,
முத்திறை கங்கை தாண்டி, மூவரும் வனம் புகுந்தே,
சித்திர கூடந் தன்னிற் சிந்தையற் றிருக்கும் போது,
சத்தியப் பரதன் வந்து சரண்புகுந் திவேய சொன்னுன் :—

“ அன்னேயென் றென்னேப் பெற்றுள், அறிவிலி யாசைப் பேயே ;
என்னுயிர்க் கின்னல் செய்தாள் ; என்னுயிர் தன்னின் மிக்க
உன்னுயிர்க் கின்னல் செய்தாள் ; உன்னிடை யுயிராந் தந்தை
தன்னுயிர் பிரித்தாள் ; இன்று தருமமும் கலங்கும் அண்ணு !

அரசினே யாளவாராய் அண்ணலே; காட்டி லேயுன்
மரவுரிக் கோலங் காணேன். மனதுசற் றிளகா யாகில்,
விரதம்பூண் டிளவ லோடுன் பணிசெய விருப்ப” மென்னும்
பரதனேத் தேற்றி நம்பி பரிவுட னிவேய சொன்னுன்:

“ கோதிலாய், தந்தைசென்றுர், கொடியனேன் பெயரைக் கூவி ;
மாதவஞ் செய்தோர் சொல்லே மறுவறக் கடைப் பிடித்தே
போதரு வேன யோத்தி ; புரிதிநீ யரசெ”ன் றீந்த
பாதுகை சிரத்தி லேந்திப் பரதனுந் திரும்பி னுனே.

அண்ணலின் பாத ரட்சை யரியணே வகிக்க நாளும்,
கண்ணுகு நீரி னுலே கழுவிநாண் மலர்சொ ரிந்தே.
புண்ணியப் பரதன் நந்தி கிராமத்தில் விரதம் பூண்டு,
மண்ணறங் காத்து மன்னன் வரவினேப் பார்த்தி ருந்தான். 220

## பஞ்சவடி செல்லல்

வற்கலே யணிந்த தூயர், வனம்வனந் திரிந்து, யோக
நற்கலே யணிந்த சித்தர் நல்வர வேற்றுப் போற்ற,
முற்கலேத் தமிழளித்த முனி,மொழி யுடனே தந்த
பற்பல பகழி தாங்கிப் பஞ்சமா வடிய மர்ந்தார்.

பூரண யோகஞ் செய்யும் புண்ணிய முனிவர் கூடிப்
" பூரியர்,அரக்கர் செய்யுங் கொடுமையைப் பொறுக்க மாட்டோம்
கார்நிகர் கருணே வள்ளால் காப்பதுன் பாரம் " என்ன,
வீரனும் வில்லு யர்த்தி விளம்பினுன் அபய வாக்கே !

" திண்புய முண்டு ; வீரத் தினவுறு வில்லும் உண்டு ;
பண்புறு சொல்லு முண்டு ; பழுதறு தரும முண்டு ;
தண்புவி வாழத் தீய தறுகணர் வீழக் காலம்
அண்மையில் வந்த தாலே அஞ்சலிர் ; அபய மீந்தேன் !

" வேதத்தைப் படித்தோ ரேனும், வேள்விகள் செய்தோ ரேனும்,
பூதலம் வென்ருே ரேனும், புகழ்பல படைத்தோ ரேனும்,
நீதியுங் கற்பு மில்லா நீசரை நீறு செய்தும்
வேதனே தீர்ப்பேன் இந்த விரதமென் சரித " மென்ருன்.

எண்டிசை யெதிரொ லிக்க வியம்பிய சபதங் கேட்ட
தண்டக வனத்தி லுள்ள தவமுனி வோர்க ளெல்லாம்,
" பண்டறங் காக்க வந்த பகவநீ வாழ்க ! வீரக்
கொண்டலேவாழ்க! உன்ளுற் குறையிலோம்" என்று சொன்னுர். 240

## சூர்ப்பணகை

கண்ணிலாக் காம நோயே காதகக் குல மழிக்கப்
பெண்ணுருத் தாங்கிச் சூர்ப்ப ணகையெனும் பெயரும் பூண்டு
மண்ணிடைப் பிறருக் கான மாதரை யன்னே யென்றே
யெண்ணுறு மிராமன் முன்னே யிளநகை புரிந்த தம்மா !

காவியப் புலவர் செய்யுங் கற்பனே கடந்த தீரன்,
ஓவியப் புலவர் காணு வுட்புற வழகன் மேலே,
ஆவலாய் வந்தாள். ஆசை அவலமாய்ப் போகச் சீதா
தேவியைக் கொல்ல வெய்ய தீவிழி பார்த்து நின்ருள்.

வம்புசெய் யரக்கி மாயம் வார்த்தையால் அடங்கா தென்றே
தம்பி,மூக் கறுத்தே யோட்டித் தமயனின் மானங் காத்தான் ;
வெம்பிய மூளி மீண்டும் வெங்கர தூட ணுதிக்
கும்பலேத் தூண்டி விட்டாள்; கோதண்ட விருந்திற் கம்மா !

பொம்மெனப் பொருத தீயர் பொடிபட முடித்தான் வீரன் ,
இம்மெனச் சினந்த ரக்கி யிலங்கைசென் றண்ணன் முன்னே,
விம்மினுள்; விளைந்த தெல்லாம் விளம்பினுள்; " அந்த வீரச்
செம்மலென் கணவ ளுகச் சீதையைக் கொள்வா "யென்றுள்.

" பூதலம் போற்றுகின்ற பூவையர் திருக்க ளெல்லாம்
சீதையாய்ப் போந்த தந்தச் சித்திரத் தெழுத வொண்ணு
மாதினைக் கொணர்ந்தாயாகில்,வாழ்ந்துபோம் இலங்கை" யென்று
போதனை புரிந்தாள்; அண்ணன் புத்தியுங் கெட்ட தம்மா ! 260

" மலைபெயர் வீரன், யானம் மாதினைப் பெயர்க்க வல்லேன்
கலைதெளி புலவன், அன்னுள் காதலைப் பெறவும் வல்லேன் ;
இலையொரு தடையிங் கென்னை யெதிர்ப்பவ ரில்லை " யென்றே
தலைகிறு கிறுக்குங் காமத் தணலெழ விரைந்து சென்றுன்.

மாய மான்

பிறகுறும்போரையெண்ணுன்பெண்மையின்சிறப்பையெண்ணுன்
உறவுள தங்கை நாசி யுரைத்திடும் கருத்தை யெண்ணுன்,
அறமறு காம நோயால், அறிவிழந் தரக்க னுள்ளம்
பிறமனை புகுந்த போதே பிடித்தது சனிய னம்மா !

மானத்தை யுதறியே, விமானத்தி லேகி, மாய
மானைவிட் டதைத்து ரத்தி, மான்விழி மனுளன் ஏகத்
தானெரு துறவி வேடந் தரித்தொரு நொடியி லிங்கே
சானகி தனைக் கொணர்ந்து, சாந்தமா யிருக்கச் சென்றுன்.

வந்தது, சீதை நெஞ்சைக் கவர்ந்தது மாய மானும் ;
பிந்துறு சூழ்ச்சிநோக்காள், "பிடித்ததைத்தருக" வென்றுள்.
தந்திர மானுந் தாவித் தாவிமுன் னேட, ராமன்
பந்தெனத் தாவிச் சென்று பாணம்விட் டதனைக் கொன்றுன்

நெடுநெறி யிழுத்துச் சென்றே, யிளவலை நீளக் கூவிச்
சடுதியி லிறந்த மானின் சத்தங் கேட்டுலைந்த சீதை
" கெடுதலே வந்த தாங்கே கேள்வனே கூவுகின்றுன் ;
கடுகிடு கொழுந்த " வென்றே கட்டளை யிட்டா ளம்மா ! 280

இராவண சந்நியாசி

சினமுங் காமமும் சேர்ந்து கலகஞ்செய்
மனமறைத் தொரு மாயத் துறவியும்,
தனிமை கண்டு, சனகியை யண்மிமுன்
இனிமை பேசி யிராவணங் காட்டினுன்.

சாமி யென்றுப சாரஞ்செய் தாயினைக்
காம ராட்சசன் கையுடன் அள்ளியே
பூமி யஞ்சிடப் பூவை புரண்டழ,
நாம வேலை யிலங்கையை நாடினன்.

வீர நண்பன் சடாயு "விடேன்" எனப்
பார் மகளை விடுவிக்கப் பாய்ந்தனன் ;
ஓரி ரத்தத் துளியுள மட்டிலும்
போர் கொடுத்துப் புகழினைத் தாங்கினன்.

### இராமன் சோகம்

தாவு மான்விழத் தம்பியும் வந்ததும்,
தீவி னையெனச் சீதை மறைனும்,
காவ லற்ற குடிலைக் கடுகினன்.
"ஆவி போயது வே!"யென் றலறினன்.

கானின மரங்காள், செய்ய கனியுண்டு பாடும் புட்காள்,
மானிளம் பிணைகாள், மஞ்ஞை வளர்மலை யருவி யீரே,
வான்சுடர் மணிகாள், உங்கள் வனப்பினும் வனப்பு மிக்க,
தேன்மலர்த் திருவென் சீதை சேர்திசை யறிகிலீரோ ?

ஓடினன், அங்கு மிங்கும் உயிரனை யாளைக் கூவித்
தேடினன் ; உயிரொ டுங்குஞ் சடாயுவாற் செய்தி கேட்டு,
வாடினன் ; அள்ள வந்த கவந்தனை மடித்தான் ; அன்பு
கூடிய சபரி காட்ட வானரர் குன்றஞ் சேர்ந்தான்.

### வானர வீரர்

மலைவளர் மல்லர், வீர வானரர் ; சுயேச்சை மிக்கார் ;
கொலைவளர் கொடுங்கோ லுக்குக் கூற்றனர்; அரக்கர் வாழும்
அலைவளர் இலங்கைக் கோமான் அஞ்சிடும் ஆண்மை யாளர்,
நிலையறம் வாழவாழ நெறியினிற் சிறந்தார் மன்னோ !

### சுக்கிரீவனுக்கு முடி சூட்டல்

மதிமிகு பலவான் வீர மாருதி யெம்பி ரானைத்
துதியுடன் வணங்கி, "யெங்கோன் சுக்கிரீ வனுக்கு மூத்தோன் ;
கொதிமன வாலி, செய்யுங் கொடுமைகள் தாங்கோ" மென்னக்
கதிதரும் வள்ளல் "அன்பீர், சுதந்தரங் காண்பீர்" என்றான்.

தாரத்தைக் கவர்ந்து, தம்பி தலையையுங் கொய்ய வேயாங்
காரத்தைக் காட்டிப் போர்செய் கடுமன வாலி தன்னை,
வீரத்தைத் தீட்டி, யம்பால் வீழ்த்திச்சுக் ரீவ னுக்கே
காரொத்த கருணை நாதன் கனமுடி சூட்டி னனே.

நன்றியும் நடையு மிக்க நண்பனும் சுக்கி ரீவன்,
வென்றிசெய் யிராம னாணை விருப்புடன் சிரமே லேற்று,
வன்றிறல் கொண்ட வீர வானரப் படையை விட்டான் ;
தென்றிசைஅனுமான் சென்றான் சீதையைத் தேட மாதோ ! 320

## இராம தூதன்

ஆழியான் ஆழி பெற்றே ஆழியை யனுமன் றாண்டி
ஊழ்வினை சூழி லங்கை யூரெலாந் தேடித் தேடி,
பாழ்மன வரக்கன் சோலை பத்தினித் தெய்வங் கண்டு,
" வாழியி ராம" னென்றோர் மரத்திடை மறைந்தி ருந்தான்.

## துரும்பே !

பாவியர் பயமுறுத்தப் பதியினை யெண்ணி யெண்ணி,
ஆவிசோர்ந் துடலி ளைத்தே யங்கணீர் பெருகி வாடுந்
தேவியை யந்த வேளைத் திருவிலி யரக்கன் பார்த்தே
நாவினா லிரந்து, பின்னே நடந்ததை யனுமன் கண்டான்.

" வெள்ளிமா மலையெடுத்தேன், வேழங்க ளெட்டும்வென்றேன்,
தெள்ளிய மறைகள் கற்றேன், தேவரை யேவல் கொண்டேன் ;
வெள்ளநீ ருலகை யாளும் வேந்தன்யான் ; எனைக்கண் பாராய் !
அள்ளியென் சிரத்தே வைத்துன் அழகினுக் கடிமை செய்வேன்."

விண்ணெட்டப்புகழ்ந்துதன்னைவேட்கைகொண் டிறைஞ்சு வோனைக்
கண்ணெட்டக் காணாள் ; பின்னே கதுமெனத் திரும்பிக் கையால்
மண்ணெட்டுந் துரும்பெடுத்து வீசித்தன் மனத்தில் வேகும்
புண்ணெட்டும் சொல்லைச்சொல்லிப் "போ" வென்றாள் புனிதசக்தி.

" சீதையே சித்தம் வைப்பாய் " என்றினுந் தீயன் காமப்
போதையி லுளறி நின்றான். பூமகள் துரும்பைப் பார்த்தே,
" சீதையை யன்றுன் சீரும் தேசமும் சாம்ப ராகும்
தீதனைத் திருடி வந்தாய், திருவிலி போபோ" வென்றாள் 340

"புண்ணியன் அற்றம் பார்த்துப் பொய்த்துற வேந்தி யென்னை
மண்ணுடன் பெயர்த்து வந்து மார்தட்டிப் பேசுகின்றாய்.
விண்கதிர் மலர்த்தும் பூவை மின்மினி மலர்த்த லுண்டோ ?
பெண்மையின்பெருமைகாண்பாய்ஆண்மையின் பெருமையில்லாய்.

பத்தினி யினைய சொல்லப் பதகனும் "திங்க ளொன்றில்
சித்தம்வைத்திலையேல், உன்னைச்செறுவ"னென்றுருவி நீண்ட
கத்தியைக் காட்டிச் சென்றான். கலங்கிய கற்புத் தெய்வம்,
அத்ததி இராம நாமம் கேட்டனள் ! அனுமன் வந்தான் !

## ஆழி கண்ட தேவி !

" அன்னையே இராம தூதன், அனுமன்யான், காண வந்தேன்
உன்னையே யெண்ணி யெம்மான் உளந்துடித் துருகு கின்றான் ;
அன்னவன் ஆழி கொள்வாய். அறிந்ததும் உனது சூழல்,
அன்னரே யரக்கர் வீழ்ந்துன் அருந்தவம் பலிக்கும்" என்றான்.

ஆழியைக் கண்ட தேவி ,அங்கணில், அகத்தில் ஒற்றி
" வாழியெம் பெருமான் ! வீர மாருதி வாழ்க !" வென்றாள்.
மூழ்கிய கவலை யற்று, நகை மலர் முகத்தைக் காட்டி,
ஆழியான் செய்தி கேட்டுத் தன்னிலை யறியச் சொன்னாள்.

" நாதனை வாழ்த்திச் சூளா மணியினை நல்கி, யின்னும்
மாதமொன் றுயிர் வகிப்பேன் வருகையை நோக்கி, உண்மை
ஓதுதி" யென்றுசொன்னாள்;"உணர்ந்தனன்உரைப்பே"னென்று,
சீதையை வணங்கி யந்தத் தீரனும் விடைபெற்றானே. 360

## இராவணா !

வருகின்ற போரின் வெம்மை வஞ்சகர் அறிய.....வீரன்,
அருநிழற் சோலை முற்றும் அழித்தனன் ; பகையழித்தான்.
வெருவுற நாக பாசம் வீசிமா ருதியைக் கட்டிச்
செருவலி யரக்கன் முன்னே யிந்திர சித்தன் சென்றான்.

எரிவிழி யாலே நோக்கி, இடியெனச் சிரித்த ரக்கன்
வரிசையாய்த் தனது சீரும் வலிமையும் வரமுஞ் சொல்லி,
" அரியகா வழித்தாய்; என்றன் அரக்கரைச் செற்றாய்; நீயார் ?
தெரிவுறச் சொல்வா" யென்னத் தீரனுங் கூறி னானே !

" வெய்யமா தவம் புரிந்தும், வேதவேள் விகளைச் செய்தும்,
கையினால் மலை பெயர்த்தும், கண்ணுதல் வரங்கள் பெற்றும்,
வையமும் வானு மஞ்ச வன்கொடுங் கோல் பிடித்தும்,
ஐயநீ காமத் தாலே யனைத்தையு மிழந்தா யன்றோ ! "

" வன்றவம் புரிந்துங்கெட்டாய், வாழ்ந்திட விருப்ப மென்னில்,
இன்றுநீ தேவி தன்னை யிராமன்முன் சேர்த் திரந்து,
நன்றவன் சரண்பு குந்து, நாரியர் ஆசை விட்டு
வென்றகங் காரந் தன்னை வேதிய னாவா " யென்றான்.

" ஆரடா புத்தி சொன்னாய், அறிவிலிக் குரங்கே !" யென்று
பேரிடி முழக்கஞ் செய்து, " பின்புறந் தீக்கொ ளுத்தி,
ஊரைவிட் டிவனை முன்னே ஓட்டுமின் ! வருக ஓர்கை
போரினிற்காண்பேன்அந்தப்புகழ்பெறுநரனை"என்றான். 380

### கண்டேன்! கண்டேன்!

கொளுத்திய தீயால் ஊரைக் கொளுத்திவந் துலக மெல்லாம்
களித்திடக் "கண்டேன்கண்டேன் கற்பினுக்கணியை!" யென்றே
துளித்தருட் கண்ணீர் பெய்து, தூயமெய் வீரத் தூதன்,
அளித்தொளி மணியை, அண்ணல் அருளினைப் பருகி நின்றான்.

சீதைசெய் தவமுஞ் சொல்லுந் தெளிவுறச் சொல்லி, யின்னும்
"மாதமொன் றதனில் அந்த மமதைகொள் அரக்கர் வீழப்
பூதலத் தறமுங் கற்பும் வீரமும் பொலியச் செய்வோம்;
ஆதலின் எழுக சேனை" யென்றனன் அன்பு வீரன்.

### இலங்கைப் போர்

ஆண்டகை யனுமன், சாம்பன், அங்கதன், சுக்கி ரீவன்;
ஈண்டிய சேனை வெள்ளம் இரைகடல் அணையொன் றிட்டுத்
தாண்டிடச் சீதை நாதன் தம்பியோ டிலங்கை சேர்ந்தான்,
மூண்டது கொடிய வெம்போர்; முடிந்தது, தீயர் கூட்டம்.

மந்திரத் தலைவர் தம்மை மனப்படி நடத்தி யாளுந்
தந்திர மன்றி, வேறு தருமமொன் றறிகி லாதான்;
முந்துகும்பகர்ணன் சொன்னமுதுமொழி கொள்ளான்; பின்னே
சிந்தனை தூய தம்பி வீடணன் செஞ்சொல் ஏலான்.

அறமனை யானைத் தேடி, வீடணன் அடைந் தரக்கர்
மறவினை யெல்லாஞ் சொன்னான். மாண்புறு வீர வள்ளல்,
திறமுள தூதுவிட்டுந் தேர்கிலான் அரக்கன்; காம
மறலியாட் கொண்ட பின்பு மந்திரம் பலிப்ப துண்டோ? 400

எழுந்தது ராம சேனை. எறிதிரைக் கடலைப் போலே,
எழுந்தது போர் முழக்கி இராவணன் அசுரச் சேனை......
கொழுந்தெரி கணைகள் பாய்ந்து கொன்றன கூற்றைப்போலே.
விழுந்தனர் அரக்கர். "நீதி வெல்"லெனத் தருமம் ஆர்க்க!

பட்டனர் தலைமை வீரர், பட்டனன் கும்ப கர்ணன்.
பட்டனன் அதிகாயன்பின் பட்டனன் பாசன், அந்தோ,
பட்டனன் பெரும்போர் செய்து படைமிகு மேகநாதன்
பட்டது மூல சேனை; பட்டினும் உணரான் வெய்யோன்.

"தொடுத்தபோர் நிறுத்தேன்; அந்தத் தோகையுஞ் சிரிப்பாள்" என்றே
எடுத்தனன் சக்தி பெற்ற படைக்கலம்; "இராமன் வீழப்
படுத்ததும், எனதே யந்தப் பத்தினி" யென்று சொல்லி
விடுத்தனன் அம்பு மாரி; விதியுடன் போர்பு ரிந்தான்.

கைகளின் குப்பை, மேலே கால்களின் குப்பை, விண்ட
மெய்களின் குப்பை, வீரன் வெட்டிய தலையின் குப்பை ;
வெய்யவெங் கணையின் குப்பை, மீதொரு குப்பை யாகப்
பொய்யுடல் வீழக் காற்றுப் போனது, வீணன் ஆவி !

## வெற்றி முழக்கம்

ஆர்த்தன வெற்றிச் சங்கம் ! ஆர்த்தனர் தேவர் கூடி !
ஆர்த்ததிவ் வுலக மெல்லாம், ஆயிரம் புகழி யம்பி !
ஆர்த்தனர் "ஜயராம்" என்றே வானரர் ; அனுமான் சென்றே
போர்த்தொழில் வென்ற செய்திதாயிடம் புகன்றான் அன்றே.

## சோபனம்

" வென்றதி ராம னம்புன் விரதத்தீ சுட்ட வெய்யோர்
பொன்றினர், புகழுனக்கே, பூமக ளேயுன் கற்பு
நின்றது ; தரும மிங்கு நிலைத்தது ; நல்ல காலம்
துன்றிய துலகுக் கெல்லாம்; சோபனஞ் சொல்ல வந்தேன்."

" நிலமகள் கண்ணீர் சோர, நிறைதவர் புண்ணீர் சோரக்
கலைமகள் வெட்கக் காமன் கணையினாற் கண்ணி ழந்தே,
குலமகள் உனைக்க வர்ந்தான், கொத்துடன் குலம ழிந்தான்.
நலமிலாக் கொடுமை செய்தார், யாவரே நன்று வாழ்ந்தார் ?"

" மூக்கினை யிழந்த மூளி மூட்டிய காம வெந்தீ
தாக்கிய தலையு நெஞ்சுந் தரையினில் உருண்ட காட்சி
நோக்கிடாய், கணவனன்றி நோக்குவே றில்லாத் தாயே !
வாக்கினால் இராமன் சொன்ன வாய்மையும் பலித்ததம்மா ."

"கதந்தரும் அரக்க ராலே கவலைகொள் மாந்தர்க் கெல்லாம்
சுதந்தரம் அளிக்க வில்லுஞ் சொல்லுங்கொண் டவதரித்தான்;
மதந்தரும் அரக்கன் மார்பை மண்புழு வுண்ணச் செய்தான் ;
இதந்தரும் தரும மன்னன் இராகவன் வாழ்க மாதோ ! "

## விரதம் பலித்தது

பத்தினித் தெய்வங் கேட்டுப் பரமவா னந்த மெய்திச்
" சத்திய வீரன் எம்மான் சரத்தினால், உலக மஞ்சுந்
தொத்துநோய் ஒழிந்த தென்றன் சோகமோ டசோகின் கீழே,
மெய்த்தவம் புரிந்ததாலே பெண்மையும் விளங்கிற் " றென்றாள்.

" சிந்தையிற் பெரியை ; வீரச் செய்கையிற் பெரியை; ஓங்கும்
புந்தியிற் பெரியை ; கற்ற புலவரிற் பெரியை ; ஈங்கு
வந்தனை கடலைத் தாண்டி வரதனின் ஆழி கொண்டு
தந்தனை ; தந்த போதே தருமமும் வென்ற"தென்றாள்.

" உண்மையே வயிர வாளாய், உறுதியும் அன்புங் கொண்ட
திண்மையே திரண்ட தோளாய்த் தீரமே படையாய்ச் செய்ய
வண்மையே நெஞ்சாய், நல்ல தருமமே வாளி யாகிக்
கண்ணிலங் காத்த கண்ணன் கண்மணி போன்றாய் வாழி !"

" துயர்படர் காட்டை யெல்லாந் தூருடன் சுட்டெ ரித்தே
உயர்நல மோங்க வள்ளல் உயர்த்திய கொடிபி டித்தாய்.
அயர்வற இராம நாம மாகிடும் அமுதால் இன்பப்
பயிரினை வளர்த்தாய் ; தூய பண்பநீ வாழி" யென்றாள்.

இராம பட்டாபிஷேகம்

தீயினுந் தூய ளென்றே தெரிந்திட விளக்கி, அன்பர்
நாயகன் கற்பின் மிக்க நாயகி தன்னை யேற்றான் ;
பாய்கடல் இலங்கை யாட்சி வீடணன் பங்கென் றீந்து,
தாய்நகர் அயோத்தி சார மானத்திற் றாவிச் சென்றான்.

பாதுகை வணங்கி யண்ணல் வரவினைப் பார்த்தி ருக்கும்
சாதுவாம் பரதன் வந்து, தழுவினன் ! கண்ணீர் சோர்ந்தான் ;
ஓதரு முவகை பொங்கி, ஊரினர் ஒன்று கூடி,
" மூதுல காள வாராய் முடிபுனைந்" தென்று சொன்னார். 460

ஊரணி செய்து மக்கள் உளமகிழ் வெய்த நன்னாள்,
ஆரண முழங்க, ராமன் அரியணை யேறி, யோக
பூரணன் வசிட்டன் சூட்டும் பொன்முடி தாங்கி யிந்தத்
தாரணி வாழத் தூய தருமத்தைப் போற்றி னானே.

வாழிய இராமன் வீரம், வாழிய சீதை கற்பு,
வாழிய இளவல் சேவை, வாழிய பரதன் அன்பு,
வாழிய அனுமன் ஆற்றல், வாழிய குகன் வணக்கம்,
வாழிய உலக மெல்லாம் அறநெறி வாழ்க மாதோ ! 468

# 19. ஒற்றுக்கேள்விப் படலம்

அருவியுங் குருவியும் அந்தி மாமலர்,
மருவிய வசந்தமு மகர வீணையும்,
சுருதியிற் கலந்திடத் தூய காதையைப்
பருகினர் அமுதெனப் பக்தர் யாவரும்.

பொய்ப்பொருண் மயக்கினைப் போக்கி, யிவ்வகை
மெய்ப்பொரு ளுணர்முனி வேந்தர் ஞானத்தைத்
துய்த்தினி திருந்திடத் தூயன் வேண்டினான்.
அத்தகை அமைதியை அளித்த தக்கதை.

பண்புடை முனிவனைப் பணிந்து தூயவன்,
" இன்பத்தி லின்பமாம் இராம நாமத்தில்
அன்புடைத் தாஸரின் அரிய மாக்கதை
உன்புது வாக்கினல் உரைத்தி" யென்றனன்.

" காலையிற் கடன்முறை கழிந்தபின், அதே
வேலை"யென் றருளவும் விரத மாமுனி
மாலையின் கடன்முறை செய்து மன்னவன்,
சோலையில் அமைச்சுடன் சுற்றி வந்தனன்.

ஒற்றுரை

அத்ததி கலிநகர் அடைந்த ஒற்றர்கள்,
" இத்ததி யமைச்சனும், இளைய மன்னனும்
சித்திமா நகருக்குத் திரும்பிச் செல்வதே
உத்தமம் " என்றுரைத் துயிர்ப்பு வீங்கினர் !

எய்திய ஒற்றரை யிருத்திச் சித்திமான்,
செய்தியை முற்றிலுந் தெரியக் கேட்டனன் ;
கைதவக் கலிநகர் கண்ட காட்சியைப்
பொய்தவிர் ஒற்றரும் புகன்று நின்றனர்.

சத்தியன் ஆட்சிக்குந் தரும வாழ்விற்கும்,
சுத்தனின் உயிருக்குந் துகளில் வீரர்வாழ்
சித்தியின் பெருமைக்கும் தேச நன்மைக்குங்
கத்தியைத் தீட்டினன் கலிய ரக்கனே.

நாவினல் அழைத்தந்த நஞ்ச நெஞ்சினன்,
கோவிளங் குமரனைக் கொடுமைக் கோட்டத்திற்
காவல்வைத் திடநெடுங் கனவு கண்டனன்,
ஆவினை வாவெனும் அரியைப் போன்றவன்.

குடியரும், பதகரும், கொலையும் அஞ்சிடும்
கொடியரும், குலங்கெடு காமக் கூத்தரும்,
தடியருந் திருடருஞ் சண்டைப் பூதத்தின்
அடியருங் கூடினல் அமைதி நிற்குமோ ?

திருந்திய மனமிலாச் சிறுமை வேந்தரும்
பொருந்தினர் சிலருமப் பொய்யன் பக்கமே,
பெரும்படை கூடிய பேயர், இப்புவி
வருந்திட வெறிகொண்டு வாழ்கின் றுரையா !

வலிகொளும் படைக்கல வரிசை கண்டதுங்
இலிகொளுந் தருமமும் ; கேடு சூழ்ந்திடுங்
கலிகொளும் அந்நகர் கயவர் கூடிய
புலிகொளும் புதரெனப் புகுந்து கண்டனம்.

அணிமணி யாடைகள் சுற்றி விற்றிடும்
வணிகரைப் போலவும், வரும்பொ ருள்சொலும்
கணிகளைப் போலவும், கலிந கரெலாந்
துணிவுடன் கண்டனந் துரித மாகவே.

கரியெனப் பெருத்தவர், கண்கள் சேந்தவர்
எரிகொளு நெஞ்சினர், எமனைப் போன்றவர்,
நரியினும் வஞ்சகர்—எந்த நாட்டினர்
தெரிகிலம்—அங்கவர் திரியக் கண்டனம்.

கழுகெனப் புலியெனக் கரிய பாம்பெனக்
கொழுவன விலங்கெனக் கூடி மாந்தரை
விழுங்கிடும் போர்வெறி விம்முந் தீயரால்
அழுங்குரல் கேட்டனம் அண்டை நாடெலாம்.

" தருமமுந் தெய்வமுந் தவமும் தூயநற்
கருமமும் பத்தியும், கருணையும், பர
குருவடி சேவையும், குவிந்த யோகியின்
ஒருமையும் பேடிகள் உளறும் பொய்" யென்பார்.

இளவர சிவ்வன மிருக்குஞ் செய்தியும்
உளவினு லறிந்தனர். ஊறு செய்குவார்.
களவியற் பாதகர் கண்ப டாமலே
வளநகர் செல்வது மாண்பென் றேதினுர்.

### சுத்தன் கவலை

சேர்ந்த வாழ்வுஞ் சிறந்த வலிமையுந்
தேர்ந்த பாரத தேசத்தி லேகலி
சார்ந்து செய்திடுஞ் சங்கட வெவ்வினை
ஓர்ந்து சுத்தனும் உள்ளங் கலங்கினுள்.

வாயில் வாய்மையும், வாழ்வினில் மெய்ம்மையும்,
நேய வுள்ளத்தில் உண்மையு நின்றிடுந்
தேயத்தில், அன்புத் தெய்வம் உலாவிடுங்
கோயிலிற் பகை கொட்ட மடிப்பதோ ?

தீரர் எத்தனை, தேவர்கள் எத்தனை,
வீரர் எத்தனை, வேந்தர்கள் எத்தனை,
வாரம் வைத்து வளர்த்த தருமத்தைக்
கோர ராட்சச மாயை குலைப்பதோ ?

## சித்திமான் துணிவு

கன்னக் கையுடன் கண்குவித் " தின்றினி
என்ன செய்வ" மென் றேங்கி யிளம்பிரான்
தன்னுள் ஆழ்ந்த சமயம் அமைச்சனும்
" இன்னலே யெதிர்ப் போ" மென் றெழுந்தனன்.

" ஒற்றர் ஏகுமின், ஒல்லையிற் சொல்லியே
சுற்றி யெங்கணுஞ் சூழ்ந்தறங் காத்திடுஞ்
சிற்ற ரசரின் சேனையை நாளையே
உற்றிடுஞ் சமர்க் குற்றிடச் செய்குமின்."

" வருக தீமன வஞ்சகர் ; வந்து போர்
தருக ; நல்ல தபோதனர் அஞ்சவே
அருகு செல்க ; அழிக அவர்தலை
திருகுவோ" மெனச் செப்பினன் சித்திமான் !

## சுத்தன் துணிவு

ஈன்ற தாயின் இசைவளர் சுத்தனும்,
" ஆன்ற மாதவர் ஆசிகள் பூத்திட,
தோன்று போரிலத் துட்டரை மாருதி
போன்று நொய்யப் புடைப்ப" மென் றுரைத்தனன்.

வீரங் கூறி விழிப்புந் துயிலுமாய்க்
காரி ராவைக் கழித்திரு சிலரும்
நீரி லாடி, நியமங்கள் செய்ததும்,
பூரணன் வளர் பூம்பொழி லேகினர்.

காலைக் கோர்புதுக் காந்த மளித்திடும்,
சீல மாதவர், செங்கதி ரின்றொடர்
போல மர்ந்துளப் பூசை புரிந்தனர் ;
ஞாலந் தெய்வ நலம்பெற நாளுமே.

ஊது வண்டுடன் ஓது மறைகளும்
போதென நகை பூத்த முகங்களும்
காதுங் கண்ணுங் களிக்க விளங்கிடும்,
சாது சங்கத்தைக் கண்டனன் சுத்தனே.

காணக் காணக் கடவுட் பெரியரை
மாண மாண்புறு மானிட வாழ்க்கையே !
பூணப் பூணப் புனிதர் மலரடி,
ஆணவங் குறை யும்அரு ளோங்குமே.

சித்தர் கூட்டத்தைச் சேவித்துச் சேவித்துத்
தத்துவப் பொருள் சாற்றிடக் கொண்டுளம்,
சித்திமானுடன் சுத்தனுஞ் சேர்ந்தனர்
முத்தி வேந்தன் விளங்கிய முன்றிலே.

புகையுஞ் சாந்துடன் பூவு மணந்திட,
பகவன் மேலருட் பாட்டு முழங்கிட,
மகர யாழுடன் கௌரி வயங்கிடச்
சுகமு னிவன் கதையைத் தொடங்கினன்.

வணங்கிப் புன்னகை மாமலர் பெற்றதும்,
குணங்க ளோங்கிடுங் குன்றனை யான்முன்னே,
இணங்கி நெஞ்சம் இருவருங் கேட்டனர்.
உணர்வு தூண்டிடும் உத்தமன் காதையே.

# 20. இராமதாஸ் படலம்

தெள்ளிய ஞானமுந் தெய்வ பக்தியும்,
ஒள்ளிய ஒழுக்கமும், ஓங்குந் தூயவர்
விள்ளரும் பெருமையை விளம்பப் பேரின்ப
வள்ளலின் கருணையை வழுத்து வாமரோ !

நல்லன கூடிடும் ; ஞான மோங்கிடும் ;
அல்லன விலகிடும் ; அறங்கள் ஓங்குமே ;
இல்லதும் உள்ளதும், இனிது தேர்தவச்
செல்வரின் சேவைகள் செய்யும் அன்பர்க்கே !

பொன்னுடன் பொன்னிறப் பொலிவு போலவும்,
விண்ணுடன் விரவிய மேகம் போலவும்,
கண்ணுடன் கதிர்தருங் காட்சி போலவும்,
புண்ணிய ருடனருட் பொலிவும் பொங்குமே.

பன்னருங் கேள்வியின் பயனைக் காட்டிலும்,
தன்னுடல் வெறுத்திடுந் தவத்தைக் காட்டிலும்,
என்னதி யானெனும் இயைபில் மாதவர்
முன்னிலை யிருப்பது முத்தி யாகுமே.

பொய்ம்மன வேற்றுமைப் போரி னுற்கெடும்
வையக மாந்தர்க்கு வழியை நாட்டியும்,
வெய்யவர் வெம்மையை வென்றும், உண்மையாற்
செய்வன செய்தவர் செய்ய சீலரே !

சாதுக்கள் சங்கமே சாந்த மீந்திடும் ;
சாதுக்கள் வாசகம் சகல ஞானமாம் ;
சாதுக்கள் சந்நிதி சக்தி யீந்திடும் ;
சாதுக்கள் வாழிய, தரும தீபம்போல் !

புண்ணிய பாரத பூமி யெங்குமே,
பண்ணவர், மாசறு பக்தர் சங்கமே !
திண்மக ராட்டிரஞ் செழித்த பக்தரை
எண்ணிநம் கதையினை யினிது சொல்லுவாம் :

* புரந்தர விடலனின் புனித பக்தராம்,
நிரந்தர ஞானியும், நிவிர்த்தி தேவரும்,
அறந்தரும் ஏகரும், அன்பு நாமரும்,
மறைந்தபின் இருசுடர் மணிகள் வந்தனர் !

" சாதியும் வேடமுந் தருக்க வாதமும்,
பேதமும் பொய்ம்மனப் பிழையு மின்றியே,
ஓதுமின் அரியை" யென் றுரைத்த ராமனின்
கீதங்க ளீவது கேடி லின்பமே.

பக்தது காவருட் பாடல் கேட்டதும்,
சத்திர பதிக்குப சாந்தம் வந்தது ;
முத்தனி ராமதாஸ் முனிவன் காட்சியால்
சக்தியும் வீரமும் தழைத்த தென்னுவாம்.

தேசமுந் தருமமுஞ் செழிக்க வீரத்தீ
வீசிய சிவாஜியின் விமல சற்குரு,
மாசறு மாதவன் இராம தாஸனின்
ஆசறு கதையினை யன்பிற் கேண்மினோ !

பம்புகோ தாவரி பாயு நாட்டிலே,
சம்பகம் எனப்பெயர் சாற்றும் ஊரிலே,
நம்பனைப் போற்றிடு நவமி நாளிலே,
அன்பன்இ ராமதாஸ் அவத ரித்ததே.

ஆரணம் ஓதிடும் அந்தண் செல்வர்கள்,
சூரிய ரேணுகர் தூய பெற்றவர் ;
நாரண னெனப்பெயர் நல்கி, நம்பியைப்
பூரணக் கலைபெறப் போற்றி வந்தனர்.

சூரிய வணக்கத் தாலே, தூயசிந் தனையி னாலே,
ஆரிய வேதத் தாலே, அனுமனின் அருளி னாலே,
தாரக ஜபத்தால், இராம தாஸெனும் பெயரும் பெற்ற
தீரனுக் கின்றோர் நல்ல திருமணஞ் செய்யா நின்றார்.

கானமுங் களிப்பு மோங்கும் கடிமண முடிக்கச் 'சாவ
தான'மென்றுசான்சொல்லத் தப்பினேன்பிழைத்தேனென்றோர்
ஞானவீ றெழுந்து தாவி, நதியினை நீந்திச் சென்று,
மோனியாய்த் தவங்கள் செய்து, முத்தியைஅன்பன்கண்டான்.

கனிகிழங் குண்டு, வேறு கவலைக ளனைத்தும் போக்கித்
தனிமலைக் குகை யிருந்து, சபதப தியானஞ் செய்து,
மனதினை யடக்கி வென்று, மமதையை வேரின் மாய்த்து,
புனிதசுத் தான்ம சித்தி பொருந்திய மகான்கள் வாழ்க!

சமநிலை கண்ட சித்தன் சகத்தினை வெறுத்திடாமல்,
தமநிலை நீங்கி யின்பந் தழைத்திடக் கருணை பூத்தான் ;
அமங்கலி அன்ன பூர்ணை அன்பனுக் காவி நல்கி
சுமங்கலி யாக நல்ல சுதருடன் வாழச் செய்தான் !

மூர்த்தியுந் தலமுங் கண்டு முறையுறப் பரத நாட்டைப்
பார்த்துநாற் றிசையும் பக்தி பரவசக் கனல் பரப்பி,
வார்த்தைசொல் குருவைத் தேடும் மாணவர்க் குபதே சித்துத்
தீர்த்தனும் கிருஷ்ணா பாயு மகூலியிற் சென்றி ருந்தான்.

இல்லற ஞானி யாகி, இசைதரு புலவ னாகி,
நல்லறத் தொண்டனாகி நாரண னருளைப் பாடும்,
சொல்லர சான துக்கா ராமனுந் தொழுது போற்றி
எல்லையி லின்பமே யிராமதா சனைப்பு கழ்ந்தான்.

சிவாஜி வருதல்

பத்தியு ஞானமும் பழுத்த தூயவன்,
அத்தினம் அருந்தவ மளித்த திவ்விய
சத்தியைப் பொழிந்தொரு தரும வீரனுள்,
சத்திய வாழ்வினைத் தாங்க முன்வந்தான்.

வருந்திடும் அன்னையின் வருத்தந் தீர்க்கவே,
மருந்தென விளங்கிய மராட வீரனும்,
அருந்தவன் புகழினை அறிந்து நாடினான் ;
இரும்பினைக் காந்தம்போல் இதய மீர்க்கவே !

" எனதுடல் பொருளுயிர் எவையும் உன்னதே ;
உனதரு ளேயென துலகும் வாழ்க்கையும் ;
மனதுறு பசியினை மாற்ற மாதவக்
கனியென வந்தனை, கடவு ளேசரண்."

" தன்னலந் துறந்தனை ; தவத்தின் மேன்மையால்
இன்னுயிர்க் கருளினை இன்ப மெங்குமே !
உன்னிகர் குருவினை யுடைய பேறுடை
என்னிகர் யா" ரென இறைவன் ஏத்தினுன் !

ஆவலாய் வந்துதன் அடி வணங்கிய
கோவினைக் கோமுனி குளிர நோக்கியே,
" மேவினை யென்பணி வென்ற " தென்றவன்
ஆவியிற் பெய்தனன் அருளி னுற்றலே.

ஏகுமின் னுடன்கலந் திணைந்து கூடிடும்
ஆகுமின் போன்றநல் லருந்த வக்கனல்
வேகமாய்ப் பாய்ந்துநம் வீர வேந்தனுக்
காகிய சக்திக ளனைத்து மீந்ததால்.

கொடியபொன் னுசையைக் குமைத்த மாமுனி,
அடியவன் அன்புடன் அளித்த பொற்குவை,
தொடவிலை ; துயர்கெடச் சுற்றும் வாழ்ந்தனன் ;
இடையருக் கீந்தனன், அருளின் ஈகையான் !

" அன்னையின் அன்புடை யண்ணலே, யென்றன்
பொன்னகர் புண்ணியம் பொலிய வாழ்" கென
மன்னவன் அழைத்திட, மாத வச்சுடர்,
" என்னிலை யேயெனக் கின்ப " மென்றனன் !

"குருதுணை, குருதுணை, குருதுணை" யென,
இருமலர்ப் பாதத்தை இறைஞ்சி வீரனும்,
மருவினன் வளநகர், மறுவிலான் மொழி
அருளினல் வெற்றிகள் அடைந்து பூரித்தான் !

ஆர்வமுற் றரசன் ஓர்நாள் அருட்பெருங் குருவைத் தேடிக்
கார்வனக் குகையில் நோயாற் கலக்கமுற் றிருக்கக் கண்டான்.
" ஓர்மருந் துண்டு ; வேங்கைப் பா" லென வுரைக்கக் கேட்டு,
வீரவா ளெடுத்து மின்போல் விரைந்தனன் அடவிக்குள்ளே.

சேய்களைப் பிடித்தான், சிங்கம் ; தீயெழ வுருமிப் பாய்ந்த
தாய்ப்புலி தனையடக்கித் தடையறப் பால்கொண் டேந்து,
நோயினைத் துடைத்தான்; அந்தநுவலரும் அன்பைப் போற்றித்
தூயவன் "வாய்மைவீரத்தொண்டநீவாழ்க" வென்றுன்.

குருவினைப் பணிந்து வேண்டிக் கொற்றவன் பரலி தன்னில்,
திருமடங் கோயில் கட்டிச் செய்யநல் லடியா ரோடும்
அருகினில் இருத்தி, நாளும் அவனடி தொழுது வந்தான் ;
பொருளுடன்அருளு மோங்கும்புண்ணியப் பொலிவு பெற்றுன்!

இலகிடத் தருமமெங்கும், இகற்படை செய்யுந் தீய
கொலைகளை வொழிய நல்ல குலமகள் கற்பு வாழ,
நிலைபெறு வீர நீதி நெறியினை யிலகக் காட்டிப்
பலவகை யுதவி செய்தான் பரிவுள குருவு மாங்கே.

அலைமனம் அடக்கி யாளும் அருந்தவ யோகி போன்றே
நலிபகை அடக்கி யாண்டு, நானிலம் புகழை நாட்டி
மலையெனச் சிறந்த வீரன், மாண்புறு சத்ரா ராவில்
நிலைபெறு நாளிற் கண்ட நிகழ்ச்சியை விளம்புவோமே.

மாதவச் செல்வன் ஊரில் மதுகரி பிச்சை யேற்று,
மேதகு வேந்தன் கோயில் மேவலும், பரம பக்தன்
பாதமா மலரில் வீழ்ந்து, " பகவானே அரசு முற்றும்,
ஏதெனக் குரிய தெல்லாம் உனதெ"ன எழுதிப் போட்டான் !

" உய்வித்தாய் என்னை; யென்றன்உடல் பொருள் உயிருனக்கே.
ஐயநீ ஐய மேற்றல் அழகிலை ; அரச னாக
வையகம் புரப்பாய்" என்று வணங்கியே வேந்தன் சொல்ல,
"மெய்யநின்அரசையாளமேற்கொண்டேன் என்றான்ஞானி" 140

" விட்டது பார " மென்று விடுதலை வீர னாங்கே,
பட்டணத் தெருக்கள் சுற்றிப் பகவனே டிரந்து வந்தான் ;
இட்டசோ றுண்டு, பின்னர், " இறைவநீ யாள்க ; யானுன்
கட்டளை செய்யுந் தொண்டன்; கட்டற வாழ்வே" னென்றான் !

போற்றிமெய்த் துறவை,யாசான் புன்னகை பூத்து, "நீயே
நாற்றிசை யுலகை நன்று நடத்திடத் தகுவை ; நீடு
நோற்றனன் உனக்கே ; நாட்டு நோவினைத் தீர்க்க, வாளின்
ஆற்றலைப் பெற்றாய், என்றன் அன்ப நீ அரசாள்" என்றான் !

சாதுவின் மொழியைக் கேட்டுச் சரண்புகு சீடன், அன்னோன்
பாதுகை பீடமேற்றிப் பறந்திடக் காவிச் சண்டா,
மூதுரை போற்றி, யாள முனைந்தனன் ; அவனுக் கின்னும்
கோதறு போதந் தன்னைக் குறித்தனன் குரவனாங்கே !

## இரமதாஸ் போதம்

**மா**ரதச் சுடரே, பாரத மணியே,
வீரருக் கரசே, பாரினுக் கொளியே,
சாது சங்கம் சாந்தமாய் வாழ,
வேத தருமம் விளங்கிட நாட்டில்,
அறந்தாங் கிடவே பிறந்தாய் நீயே !
துறந்தாய் நன்னலம் ; சிறந்தாய் பொதுநலம் ;

போற்றும் உலகை ஆற்றல் மிகுந்தாய்.
நோற்ற சக்தியை ஊற்றினே னுன்னுள் ;
ஊழ்வலி யாலே யுலைந்தநா டுய்யத்
தோள்வலி வேண்டும் ; வாள்வலி வேண்டும்.
மருத்துவன் போலே, மாநில வுயிரை
வருத்தும் புண்களை அறுத்தெறி வீரா !
பேடிகள் போலே ஓடி யொளியும்
பீடைப் பழக்கம் பிறகிட் டொழிக ;
போர்முர சார்த்ததும் புயங்கள் விம்ம
வீரவா ளேந்தி விடுதலை முழக்குக !
சிங்கம் போலே, தீயிற் சுட்ட
தங்கம் போலே தியாகிகள் வேண்டும்,
புலியெனக் கேட்டதும் கிலிபிடித் தோடும்
அலிப்பதர் வேண்டோம், ஆண்மை வளர்கவே !
சத்திய யுகத்திற் சாந்தம் பலிக்கும்,
இத்ததி கலியெமன் இடர்செயுங் காலை,
அறச்சமர் புரியும் ஆட்பலம் வேண்டும்.
திறமை வேண்டும் தீமை தீரவே.
பெண்டிர் கற்பும், பெரியார் தவமும்,
தொண்டர் நலமும், தூயநல் லறமும்,
ஆக்களும், சேய்களும், அமைதியாய் வாழக்
கோக்கள் புயவலி வீக்குதல் கடனே.
மெத்தப் பயந்து வீரங் குன்றிச்
செத்தநாட் டிற்குச் சீவ னளிப்பாய்.
குனிதலை நிமிர்ந்து, கொடுங்கோல் குமைய
மனிதர் மனிதராய் வாழ்ந்திடச் செய்வாய் !
கருத்தில் வீரக் கனலைத் தூண்டாய்,
திருத்திக் கோழையைத் தீர ளுக்குவாய் !
கரிபரி யிரதம் காலாட் படையுடன்
உரிமையைக் காக்கப் பெருமையோ டெழுவாய் !
தோல்வி யென்பது துணிந்தவர்க் கில்லை.
சால்புடை யோர்க்குத் தளர்வுமிங் கில்லை.
கடற்படை தன்னைக் கண்ணெனக் காப்பாய்.
உடற்கமை பயிற்சியை உயிரெனப் போற்றுவாய்.
சோனியுஞ் சொத்தையுஞ் சொள்ளையும் வேண்டாம் !
மானங் காக்கும் மாண்புளோர் வருக !
அருச்சுனன் பீமன் அனுமான் போலவே
திருத்தகு வீர தீரரை வேண்டுவோம் ;
சிக்கனம் போற்றித் தேசம் வாழவே

பக்குவ மான பணிகள் புரிவோம் ;
இணங்கும் பிறரை இணங்கி யேற்போம்.
குணங்கும் மாந்தர் கோணலை நிமிர்த்துவோம் !
அறவோர் அனைவரும் உறவோ ராவர்,
அறிஞர் அனைவரும் ஆதரம் பெறுவார் ;
புல்லியல் அதர்மப் புதர்களை நீக்கி
நல்லியற் சோலை நாட்டுதல் கடனே.
மறத்திமிர் கொண்டு மாந்தரை வருத்தும்
அறப்பகை யாளரே ஆவர் நம் பகைவர்.
நேர்மையும் பண்பும், சீர்மையும் போற்றுங்
கூர்மதி யாளர்நங் கூடப் பிறந்தோர்.
அருளும் பொருளும், அன்பும், கல்வித்
திருவும், கலையும், சீரிய தொழிலும்,
உள்ளொற் றுமையும், உலகொற் றுமையும்,
தெள்ளிய ஒழுக்கமும், ஒள்ளிய நினைவும்,
பயிரின் வளமும், பசுவின் வளமும்,
உயிரின் வளமும் ஓங்கிச் செழிக்கவே !
கருத்திற் கடவுளுங் கையிற் செயலும்
இருத்திமன் னுயிர்க்கெலாம் இன்பமே செய்வாய் !
அருளும் பொருளும் ஆனதே வாழ்க்கை,
திருவும் அறிவுஞ் சேர்ந்தே செயலாம்,
அரசுந் தவமும் அமைந்ததே செங்கோல்,
பரமும் இகமும் படைத்ததே இன்பம் ;
திண்மையே சக்தி, உண்மையே வெற்றி,
பெண்மையும் ஆண்மையும் பேணுக வுண்மை ;
மாசறு வீரா....தேசுறும் அன்பா,
நேசருக் கினியாய் நிகரிலா நிருபா,
துறவுக் கொடியைத் தூக்கிப் பிடித்தே
அறநெறி போற்றி, அறிஞரைக் கேட்டுக்
காலங் கருதிக் கடமையைக் காத்து
ஞாலங் கருதி நலமெலாஞ் செய்து,
"ஸ்ரீராம், ஜெயராம், ஜெயஜெய ராம்" எனும்
தாரக மந்திரச் சக்தியைப் பெருக்கி,
சத்திர பதியாய்ச் சத்தியச் சுடராய்,
இத்தல மெல்லாம் இசைத்திட வாழ்கவே !

சிவாஜி

ஆணை தாங்கி அவனியை ஆளுவேன்,
காண நின்ற கருணைக் கடவுளே !
ஆணவப் பகை யற்றது நின்கழல்
பூணப் பெற்றனன் பூரண மெய்தினேன்.

அறிவு தந்தநின் அன்பருள் இன்றியான்
சிற இழந்த சிறுகிளி போலுவேன் ;
மறலி யஞ்சுநின் மாணடி பற்றினேன் ;
இறைவ, வேறெனக் கோர்கதி யில்லையே !

என்றி றைஞ்சி யிறைவன் அருள்வழி,
நின்று நீதி நிலவ நிருபனும்
நன்று நாட்டிடை நல்லறம் பாலித்தே
வென்றி வீர விளக்கென் றிலங்கினன் !

எண்ணு மெண்ணங்கள் எண்ணலுஞ் செய்து நீள்
புண்ணி யப்புகழ் பொங்கப் புனிதனும்,
மண்ணின் வாழ்வுதன் மாதவச் சித்தியால்
விண்ணின் மிக்கு விளங்க விளங்கினன் !

அன்பு வீரன் அரனடி சேர்ந்தபின்,
தன்பு விப்பணி தாழ்வறச் செய்தபின்,
புன்பு லாற்பொறை போக்கிப் புனிதனும்
இன்ப விண்ணி லிருக்கக் கருதினன்.

சீரடியார் புடைசூழச் சித்த னோர்நாள்,
''சிறையுடலை யுதறியான் செல்வே னின்றே ;
ஆருயிருக் குயிராம்சுத் தான்மா யானே,
அழிவின்றி அடியாருள் இருப்பேன் காணீர் !
பாருலகிற் பிறந்தபயன் பரம னன்பே ;
பயன்கருதாப் பொதுநலமே பயில்வீ'' ரென்றான்.
ஆர்வமுடன் ''ஹரஹர'' வென் றனலாய், மின்னாய்,
அருட்சோதி தனிற்கூடி யதுவே யானன் !

எண்ணரிய வினையுடலம் எடுத்த மாந்தர்
இருவினைதீர் இறைவனையே யெண்ணி யன்பு
பண்ணிடுக ; பாருக்கு நலமே செய்க ;
பரிதியினை வான்மழையைப் பார்த்துப் பார்த்தே
புண்ணியங்கள் போற்றிடுக தீமை போக !
பூவுடனே மணம்போலும் புவியைப் பார்க்கும்
கண்ணுடனே கதிர்போலும் உயிர் கலந்த
கடவுளருள் காப்பாற்றும் கருணையாலே !

கனிதமி ழின்பமென்னக் கௌரி யாழ் இசைந்துக் கொஞ்ச,
முனிசொலும் பொருளும் வாக்கும் முழுமனம் உருகக் கேட்டு,
நனியினி தென்று சுத்தன், நயஞ்சொலிப் பணிந்த பின்னர்
மனமுறு கவலை தன்னை மாதவன் அறியச் சொன்னான்.

பொறிகளை வென்ற மேலோன், " புனிதவுன் கவலை முற்றும்
அறிகுவேன்; உண்மை; நாட்டில் அதரும மோங்குங் காலம் ;
வெறிகொளும் கலியன் சேனை, வேங்கையின் கூட்டம் போலே
அறநெறி முனிவர் செய்யும் அருந்தவங் கலைக்கு மையா !"

" பாரத நாடு பெற்ற பலமெலாம் ஆத்ம சக்தி ;
வேரது ; கிளையும் பூவும், வீரமும் அறமு மாகும்.
சீருடன் மூன்றும் பேணும் சித்தரை யழிக்க முன்னே
போருடன் வருகின் றனப் புல்லனை வீழ்த்த வந்தாய்." 280

இவ்வகை முனிவன் சொல்லி, " இன்னமும் " என்றபோதே
வெவ்வெறிக்குரல்கள்கேட்டார், 'வேந்தபோர், போர் போர்' என்றே
திவ்விய முனிவர் ஆர்த்தார், தீக்கொழுந் துயரக் கண்டார் !
அவ்விடம் அமைச்சன் வேண்டும் அணிபடை யெழுந்த தம்மா!

சாந்தனின் ஆசி பெற்றுச் சடிதியிற் சென்று, சுத்தன்
பாந்தளும் புலியும் போலப் படையுடன் சீறி யாங்கே,
போந்தவெம் பகைவர் கூட்டம் பொடிபடப் பொருதுவென்று
வேந்தறங் காத்த தன்மை விளங்குற விளம்புவோமால். 288

# 21. கலி சினந்த படலம்

*பற்று தீக்கொரு பஞ்செனச் சித்திமான்
ஒற்றர் மூலம் அனுப்பிய ஓலையிற்
குற்றங் கண்டு கொதித்த கலியனைச்
சுற்றி நின்ற கொடியருந் தூண்டினர்.

கலியன்

" ஆசை சொல்லி யழைத்தும் வரானந்த
மீசை யில்லா விடலைச் சிறுபயல்.
மோச மான முடங்க லனுப்பினன்.
மாச மர்த்தன் மதிமிகு மந்திரி."

" எனை மதிக்கிலர் ; என்னுடை யாட்பலந்
தனை மதிக்கிலர் ; சங்கட மானபோர்
முனை யிலேயிவர் மூளையைப் பேர்க்கிறேன் "
என முறுக்கினன் மீசை யிருபுறம்.

*கலிவிருத்தம்: *இராகம் மோகனம்; தாளம் ஆதி; சந்தம் தனன தானன தன்னன தானன.*

### கலி-வீரர்

கேட்ட வெய்யர் கிளர்ச்சிகொண் " டின்றுநம்
தோட்டி னவைத் துடைத்ததுன் சீற்றமே ;
காட்டை நீவிக் கலிக்கொடி விண்ணொட்ட
நாட்டு வோ"மென நாப்பறை கொட்டினர்.

சேனை யில்லை......சிவசிவ வென்றுள
ஞானப் பித்தர், நமதொலி கேட்டதும்,
மோன மாக முழையிற் பதுங்குவார்
தான மாகவுந் தந்து வனத்தையே.

" மன மடக்குவர்; மாதரை அஞ்சுவார்.
வன முறையும் வறட்டுத் துறவிகள்,
இனிதிங் கைம்பொறி யின்பத்தி லூன்றியே
செனம் பெருக்கிடிற் சேனைக்கு நன்றரோ ?

### வேகன்

வேக னென்றொரு வேங்கை யனையவன்,
மோக மேவடி வானவன், முன்னின்று,
" யோகப் பித்தர் ஒழிக வுலகிலே ;
போக வாழ்வு பொலி"கெனக் கூவினன்.

" தாடி வைத்துந் தவமெனக் கண்களை
மூடி நின்ற முனிவரின் மோசமே,
நீட ரசு செலுத்து நிருதரை
நாட ழித்து நலித்ததைக் கண்டனம் !"

" ஆண்மை கொண்டும், அலியென வாழுமிவ்
வீண்ம னிதர் விரதக் குடில்களிற்
காணும் இன்னிய காரிகை யாரின்பம்
பூணுவோம் குலம் பொங்கித் தழைக்கவே !

### கலியன்

" சரிச வா"சௌத் தானவர், துள்ளினர் !
" அரிவை யாருடன் அந்தண் முனிவரைத்
துரித மாகவே தொத்தடி மைசெய்து,
பெரிய மன்னரின் பிள்ளையைப் பற்றுவீர்."

என்று வெங்கலி, ஏறுஞ் செருக்கினல்,
" இன்று செவ்வா யிராகுவின் காலமே
நன்று ; நாத்திகச் செங்கொடி நாட்டுவீர் !
வென்றி வாளினுக்கே"யென வீறிட்டான்.

" கதியி லாத கருணை முனிவரை,
மதி யமைச்சனை, மன்னவன் மைந்தனை,
எதிர் பகைவரை எற்றி யெறிந்துநம்
புதிய கொள்கை புகட்டக் கொணருவோம்."

" காட்டில் வாழுங் கனியுண வாளரை,
ஈட்டி யின்றி எளிதினில் வெல்லலாம்.
போட்டி போடும் புரவலன் சேனையை,
வாட்ட வேண்டும் வலிமிகு சேனையே."

" வேகன், வெய்யன், வெறியன், அகம்பரன்,
போக கேது, புலியன், முதலினோர்,
மேக மின்னென வாட்கணம் வீசியே,
போக வேண்டுமிப் பூமி யதிரவே."

இடி முரசம் இயம்பின ; செந்நிறக்
கொடி பறந்தன ; கோபக் கலித்திரள்
படி நடுங்கிடப் பாய்ந்தது ; பட்டிகள்
பொடிபடப் படை போகும் வழியெலாம்.

கலை யழித்தனர் ; கற்பை யழித்தனர் ;
கொலை புரிந்தனர் ; கொள்ளை யடித்தனர் ;
தலை தெறிக்கத் தருமம் அழித்தனர்
கலியன் ஏவிய கள்ளக் கயவரே !

" குருதி கக்கக் கொடுங்கொலை செய்குவோம்,
நிருதர் யாம் ; எதிர் நில்லன்மின் " என்றவர்,
அருகில் வந்த தனைத்தும் அழிவுறப்
பொருது பஞ்ச வடியிற் புகுந்தனர்.

# 22. பஞ்சவடிப் போர் வென்ற படலம்

ஈச னேதுணை யென்னு முனிவரை
ஏசி, வீட்டில் எரியினை மூட்டினர் ;
பூசை மாமலர் பொங்கும் பொழில்களை
நாசஞ் செய்தனர், நாத்திகத் தீயரே.

" பாப புண்ணியம் பார்த்திடு வீ"ரென்றார்.
சாப மிட்டனர் சாது முனிவரர் ;
கோப வெங்கனல் கொட்டு மரக்கரைத்
தூபம் போட்டினுந் தூண்டின மெய்யுரை.

தாக்கினார், தகர்த்தார், தவத்தை அவம்
ஆக்கினார் ; அழித் தார்அரு ளாளரை ;
வாய்க்கு வந்ததெல் லாஞ்சொல்லி வைதனர் ;
பேய்க்கு ணத்தினர் செய்கையைப் பேசவோ ?

பெண்ணி னத்தின் பெருமை யறிகிலார் ;
கண்ணிற் காமக் கனலுற நோக்கினார்.
புண்ணியர் உயிர் போம்வரைப் போர்தர
எண்ணிக் கச்சை யிறுக்கிமுன் னின்றனர்.

மற மனத்தர் மதுவெறி யேறிச்செந்
நிற முகத்தர், நிலைகுலைந் தோடவே,
அற மனத்தர், அருந்தவத் தால்வருந்
திறமை காட்டினர் ; தெய்வத்தைக் கூவினார்.

ஓச்சிக் காலை யுயர்த்தினர் ஆசனம் ;
மூச்ச டக்கினர் ; முத்திரை வைத்தனர்,
பேச்ச டக்கிப் பெருஞ்சபஞ் செய்தனர்,
ஆச்சி யத்தை யனலெழ வார்த்தனர்.

கூற்று தைத்த சிவனடி கும்பிட்டார்,
போற்றி ராமனைப் பூசித் தெழுந்தனர்.
தூற்ற ரக்கருந் தூயரைக் கண்டதும்,
ஆற்றல் குன்றி அதிர்ச்சியொன் றெய்தினார்.

ஊக்கி யுட்கனல், யோக முனிவரர்,
தாக்கு முன்பு தயாநிதி யாகியே,
நீக்க மற்று நினைத்திடும் அன்பரைக்
காக்குந் தெய்வக் கருணையைச் சிந்தித்தார்.

"துங்க மான துரிய முனிவரர்,
சங்க மின்று தவிக்குதித் தீயரால்,
எங்கு நீ"யென் றியம்பிடு மெல்லையில்
இங்கி தோவென் றிடிமுர சார்த்ததால்.

ஆனை, தேர், பரி, ஆயுதந் தாங்கிய
சேனை கொண்டுநந் தீரன் அமைச்சுடன்
சோனை யம்பு சொரிந்து கலிநகர்த்
தானை யஞ்சிடத் தாவி வளைத்தனன்.

வாழி மெய்யறம் ! வாழிய சித்திபன் !
வீழி பொய்யர், விடுதலை வாழ்கெனா,
சூழு மந்தணர் தூவ மலர்மழை,
ஆழி போலச் சயமுர சார்த்ததால்.

### சித்திமான்

துய்ய நீநற் றுணைசெய் முனிவரை
வெய்யர் தீண்ட விடாதிவ் விடத்திலே ;
ஐய நான்சென் றமரிற் பகைவரை
நொய்ய வாட்டி நொருக்கி வருகின்றேன்.

என்ற மைச்சன், இமைக்குமுன் னேகியே
நன்ற ரக்கர் நலியப் புடைத்தனர் ;
ஒன்று கூடிய ஒன்னலர் இன்னவன்,
“ கொன்று போடுவன் கூ ” வென ஓடினர்.

இடி விழுந்த மரமென் றிகலவர்
கொடி விழுந்தது....கோதறு மேனியில்
அடி விழுந்தது....கோவென் றலறியே
படி விழுந்ததப் பாதகர் சேனையே....

ஆய்ந்து மீண்டும் அரக்கர் கொடும்படை
பாய்ந்து நேசப் படையினைத் தாக்கியே,
தேய்ந்து தேய்ந்து திறலற்றுப் பின்னுறச்
சாய்ந்து சாவின் விருந்தென லாயதே.... 60

எறிந்து கற்கள் எரிமலை போலவே,
செறிந்து மோதிடுந் தீயர் பெரும்படை
அறைந்து வீழ்த்தி யழுத்திய பின்னரும்,
குறைந்து மீளவுங் கூடி யெதிர்த்ததால்.

வெருகும் பாம்பும்வெவ் வேங்கையு மென்னவே
பெருகி வந்த பிசாசர் படையினை,
அருகு வந்ததும் ஆறென வுண்டது
செருவிற் சிங்கத்தைச் செற்ற செயப்படை.

காடு மேடுங் கலங்கிச் சிலர் பின்னே
ஓடு கின்றனர், ஓய்ந்து சரண்புக
நாடு கின்றனர், நாமென் செருக்கினுற்
சாடு கின்றனர் தானவர் சிற்சிலர்.

### வேகன் முனிவரைப் பொருதுதல்

இத்ததி யிவ னைவிடுத் திவ்விடம்
கத்து வேதமுங் காவியுங் கொண்டுழல்
சொத்தை மாந்தர் சுவர்க்க மடைந்திட
மொத்து வோமென ஓடினன் வேகனே.

கொழுத்த பாவிகள் கூடி வருமுன்பே,
வழுத்தி சுத்தன், வரைக்குகை யொன்றினில்,
பழுத்த பண்ணவ ரைப்பதுக் கிப்பகை
அழுத்து மெல்லே யணிபடை கூட்டினன்.

சுத்தன்

வருகின் றரெனை ஒற்றர் வழுத்தலும்,
அருமை வீரரை யாண்டகை நோக்கியே,
"கரும வீரர்க் குரிய கடமையைப்
பெருமை யாகச்செய் வோ"மெனப் பேசினன் :

நாட்டின் சேமமும் ஞாலத்தின் சேமமும்,
வீட்டின் சேமமும், வீரரின் சேமமே !
ஓட்டி வெம்பகை, அன்பை யுறுதியாய்
நாட்டி யின்று நலஞ்செய வம்மினே.

வீரர்

வெற்றி யோங்குக ! வெம்பகை வீழுக,
ஒற்று மைசெழித் தோங்குக மேதினி !
நற்ற வங்களு ஞானமு மோங்கிடக்
கொற்ற வன்கொடிக் காவி கொடுப்பமால் !

வீர ரிவ்வகை வீறிட் டெழுந்ததும்,
காரு மின்னுங் கடும்புயல் வேகமும்,
சேர்வ தென்னத் திரள்பெறுந் தானவர்,
போர் முழக்கம் பொலியப் புகுந்தனர்.

கலியரக்கர்

இவ்வு லகெலாம் எங்கள் உலகமே,
இவ்வ ரசெலாம் எங்க ளுரிமையே,
எவ்வு யிர்களும் எங்க ளடிமையே,
எவ்வ மின்றி யிணங்கிடின் உய்குவீர்.

திண்ணெ னப்பகை செப்பலு மிவ்வகை
விண்ண திர்ந்தது, மெல்லுயி ரஞ்சின ;
புண்ணியன் ஒரு புன்னகை பூத்தெதிர்
நண்ணி வேகனைக் கண்டு நவின்றனன்.

சுத்தன்

உலக வாழ்க்கை உலகினர்க் கல்லது,
கலக வஞ்சக் கயவருக் காகுமோ ?
உலகி லுள்ள வுயிர்கள் இறைவனார்
இலகு கோயில் இதற்கெதி ரில்லையே.

வேகன்

கொட்டடா பறை கோயிலுஞ் சாமியும்,
எட்டுத் திக்கிலும் இல்லை ; யிப் பொய்யினை
வெட்ட டாவென வேகன் விளம்புமுன்
முட்டி மோதி முனைந்தது வன்படை.

"வெம்மை யேயுயிர்ப் பாம்வெறி யீருமைச்
செம்மை யாக்குது " மென்றுநந் தீரனும்,
பொம்மெ னப்படை யேவிப் பொருதனன்,
விம்ம கந்தை விழுந்துமண் ணுகவே.

நீவரும் ஆணவ நெஞ்சரின் ஆவியைச்
சிவரத் தீயுமிழ் செஞ்சின வாளினுற்
கவருஞ் சுத்தன் கதியினைக் கண்டதும்
அவல மாகிக்கை யஞ்சினன் வேகனே.

விட்டி லென்ன விதிர்த்து மறைந்துபின்,
துட்டர் சேனை துணுக்கெனத் தோன்றியே,
வெட்டும் தந்திர வேகமுந் தோற்றபின்,
எட்டி நின்றிறு மாப்புகள் பேசிற்றுல்.

வேகன்

ஊறு செய்யும் உரிமைகொள் எங்களை
ஊறு செய்தனை யின்றுனை நாளையே
கூறு செய்துன் குலத்தினை வேரற
நீறு செய்து நெடுங்கொடி நாட்டுவோம்.

சுத்தன்

திருட்ட ரக்கர் இனையன செப்பலும்,
அருட்டுணை பெறும் ஐயன் அமைதியாய்,
"மருட்டு மாயத்தைக் கண்டு மயங்கிலோம்,
இருட்டிற் காதவன் அஞ்சுவ தில்"லென்றுன்.

வேகன் தாக்குதல்

"எமை யிருட்டென் றிகழ்ந்தனை" யென் றுடன்,
அமைதி யற்றவர், ஆணவப் பேயினர்,
தமை யிழந்து சமர்செயத் தாவினுர் ;
நமனு மங்கு நகைத்தெதிர் தாவினுன்.

வாவு வாசியி லேறிவந் தேஅுறை
கூவு வேகன் குலைகுலைந் தோடவே,
ஏவி யம்பை யெதிர்த்தமர் செய்தனன்.
பூவினில் இணை யற்ற புனிதனே.

முரசு கொம்பு முரடு தடாரிகள்,
"அரசுடன் அறம் வாழி" யென் றுரர்த்தன !
பரசு, சூலம், பகழி பறந்தன !
சிரசுங் கைகளுஞ் சிந்தின மண்ணிலே.

கூற்ற லைக்குங் கொடியவர் வெம்புயற்
காற்ற லைக்குங் கலமெனப் போர்முனை
தோற்று வீழ்ந்து, தொகைதொகை யாகவே
ஆற்றலை புகுந் தாழி கலந்தனர்.

ஆண்முன் ஆண்மை யழிந்தவெவ் வேகனும்,
நாண மற்று நகார மடித்தினும்,
மாண மாதவ மங்கலப் பெண்டிரைக்
காண வந்தனன் காமச் செருக்கினல்.

## வேகன் பெண்களிடம் கூறுதல்

காய்த்திடும் பருவத்தைக் காட்டு மூலையில்,
மாய்த்திட லாகுமோ, மலர்க்கண் பாவையீர்,
சேய்த்திரள் இன்பமுஞ் சீருஞ் செல்வமும்,
வாய்த்துநல் வாழ்வினை வாழ வாருங்கள்.

தாடியு மீசையுந் தண்டுங் காவியும்,
வாடிய மேனியும், வாழ்வை யஞ்சியே
ஓடிடுந் துறவையும் ஒருங்கு கொண்டுழல்,
பேடியர் காதலைப் பெற்றென் பெற்றதே?

தேனினும் அமுதினுந் தீஞ்சொற் கிள்ளையீர்,
மானினும் மயிலினும், மணிப்பு றுவினும்,
மீனினும் அழகுடை மெல்லி ளந்தளிர்
மேனியீர், மேனியின் பயனை வேண்டுவீர்.

வலிவுட னிளமையும் வாய்ந்த நங்கையீர்
அலிகளைப் போலிங்கே அழித லின்றியே,
கலிநகர் வாருங்கள், காத லின்பத்தை,
நலிவறப் பருகிட வாழு நாளெல்லாம்.

## யோகினிகள் வேகனை முனிதல்

வேகனிவ் வகைசொலி வேட்கை யோடுற,
யோகமே வாழ்வெனும் யுவதி மாரெலாம்,
ஏகமாய்ச் சூலத்தை யெடுத் தெதிர்த்துடன்
"மோகமே போ" வென முனிந்து தள்ளினர்.

தோற்றனே ஆண்டகை சுத்தனு ரிடம் ;
ஆற்றலைப் பெண்டிர்முன் அரங்கி லேற்றினே.
கூற்றுனைக் கூவுது கொடிய னேபுயற்
காற்றெளிர் கதிரினைக் கலக்க லாகுமோ ?

வேகன் படை

"இணங்கிடா தெம்மையும் எதிர்த்து நின்றிடும்,
அணங்குகாள், உம்மையாம் அள்ளிச் செல்லுவோம்.
கணந்தனில் உங்களைக் கலிபு ரத்திலே
மணம்புரிந் தெம்முடன் வாழக் காணுவோம்."

"தூக்குங்கள்" என்றதுந் துட்ட ராக்ஷஸர்,
மேக்குவி கையுடன் மெல்லி டையினர்,
"காக்கவா கடவுளே" யென்று கத்தினர்
"தாக்குங்கள் "என்றெரு தானை வந்ததால்.

கட்டழ கரசியாங் கௌரி தேவியைத்
துட்டவெவ் வேகனே தூக்கிச் சென்றிடத்
தொட்டனன், ஆங்குநம் சுத்தன் வேலினுற்
பட்டனன் முருகன்முன் சூர பத்மன்போல்.

சித்திமான் வெற்றி கூறல்

எஞ்சிய பகைவரும் இறைஞ்சிச் சுத்தனைத்
தஞ்சமென் றடைந்துயிர் தப்பி வாழ்ந்தனர்.
அஞ்சறு படையுடன் அமைச்சன் வந்து "நம்
வெஞ்சமர் முடிந்தது வெற்றி" யென்றனர்.

வேகன் இறுதி மொழிகள்

குற்றுயிர் துடித்திடுங் கொடிய வேகனும்
முற்றிலுஞ் செருக்கற முதல்வன் பாதத்தைப்
பற்றினன் பணிந்தனன், "பகவ உன்கையாற்
செற்றிடப் பெற்றனன் சிறியன்" என்றனன்.

"பிழைபொறுத் தருளுவாய் பெரிய வென்மன
முழையினிற் பதுங்கிய மூட மோகங்கள்
இழைகொடுஞ் செய்கையால் இறக்கின் றேனையா,
மழையினுங் கருணைசெய் மன்ன கேட்டியால்.

தானவத் தீவினிற் சனித்த தானவன்,
ஞானமும் பத்தியு நன்ன டக்கையும்,
ஈனமென் றிகழ்ந்தவன், எந்த நாளுமே,
நானெனுஞ் செருக்குற நடந்த பாவியான்.

மங்கையர் கற்பினே, மனிதர் வாழ்வினே,
புங்கவர் தவத்தினேப் புவிய றத்தினேப்
பங்கஞ்செய் பணியொன்றே பணிய தாகினேன் ;
இங்கதை யியற்றிடக் கலியன் ஏவினுன்.

மோகியாம் அரக்கியின் மோகங் கொள்கலி,
போகமும் யோகமும் பொருந்திப் புண்ணிய
நாகரி கம்வளர் நல்ல நாட்டினே
வேகமாய்த் தனக்கென வெல்ல வேட்டனன்.

சித்தியை மரபுடன் சிதைத்துத் துன்மதி
வைத்தது சட்டமென் றுள வையகம்,
இத்ததி பெரும்படை கூட்டி எம்மையும்,
சுத்தனேக் கொல்லெனத் தூண்டி விட்டனன்.

கொடியவன், கொடுஞ்செயல் குறித்து வந்துள்
அடியவ னுகியே ஆவி நீங்கினேன்.
முடிவுரை முடிந்ததென் மூச்சு நின்றதும்,
மடியினேப் பா" ரென வேகன் மாய்ந்தனன்.

## சுத்தன்

வெவ்விய வாழ்வினே விட்டுச் சாகையிற்
செவ்விய சிந்தனே செய்து தப்பினுய் ;
இவ்வள வியற்றிய திறைவனே யெனத்
திவ்விய கோமகன் செப்பி னுனரோ.

மடியினேப் பார்த்திட மடக்கு வாளுடன்
கடிதமொன் றிருந்தது—கலியன் ஆணேயே.
படியெனச் சித்திமான் படித்து நெஞ்சகந்
துடிதுடித் ததன்பொருள் சொல்லு வானரோ .

## கலினுன் ஆணேக் கடிதம்

பஞ்ச வடியிலே, பசுப்போல் வாழும்,
துஞ்சா முனிவரை வெஞ்சிறைப் பிடிமின்,
அரிவையர் தம்மை அள்ளி வாருமின்,
உரியவர் நாமே உலகினுக் கென்றே,
ஆங்கே சுத்தனும் அமைச்சனும் உணர
ஓங்கி யுரைமின் ! ஒளிந்தொளிந் தேகிச்
சமயம் பார்த்துச் சத்தியன் மகனே
எமபுர மேற்றி, எத்தனும் அமைச்சனே
நம்புறந் திருப்ப நயமாய் முயலுமின் ;
சம்பம் பேசிற் சாகத் தீட்டுமின் ;

அங்கே போர்வினை யானதும் படைகள்
இங்கே வருகவே இரண்டு நாளில் ;
சித்தியைச் சூழ்வோம், தீயினுற் செயிப்போம்.
கத்தி முனையிற் கலியர சோங்குமே !

வெருவுரு கலியனின் விருப்பங் கண்டுளம்,
மருகினர் " பின்னந்த மடைய ஞர்தலை
திருகுவம் " என்றனர் சேனை வீரர்கள்
உருகினன் சுத்தனும் உலகை யெண்ணியே !

அத்ததி முனிவரர், ஆசி கூறியே,
பத்தினி மாருடன் பரிந்து வந்தனர்.
இத்தினம் வெற்றியி னின்பந் தந்தநம்
சுத்தனைத் துதித்ததைச் சொல்லு வாமரோ ! 250

# 23. அபயமளித்த படலம்

உருகிய செம்பைப் போலே, உள்ளமு முகமு மாகி,
வெருவுறு மரக்கர் தீதை வெகுண்டது செக்கர் வானம் ;
பொருவினில் வென்ற சுத்தன் புண்ணியம் புரிந்த தெண்ணித்
திருவுறு திங்கள் காட்டிச் செயநகை புரிந்த தன்றே !

புள்ளினம் பாடவில்லை ; பூவின மணக்கவில்லை ;
கிள்ளைகள் கொஞ்ச வில்லை ; கிளர்மறை யொலியு மில்லை ;
தெள்ளிய நதியுங் காற்றுந் திங்களோ டுரைப்ப தொன்றே.
விள்ளரு மோனக் காடு விரிச்செனக் கிடந்த தம்மா !

புயல், எரி மலை, பூ கம்பம் போலெழும் பொய்யர் வெம்போர்
இயல்பெறுஞ்சாந்தவாழ்வின் இசைநரம்பறுத்துப் பொல்லாத்
துயர்பல செய்து, காட்டைச் சாம்பராய்த் தூவிச் சென்ற
பயங்கரக் காட்சி கண்டு பதைத்தது முனிவ ருள்ளம்.

சோலையை யழித்துத் தூய தவச்சுடர் துலங்கும் பர்ண
சாலையை அழித்துச் சென்ற சண்டமா ருதத்தை யெண்ணி,
மாலையுந் திகைத்த தந்த மலைகளுந் திகைத்து நின்ற;
காலையில், வேத கானம் பாழினைக் கலைத்த தம்மா !

முனிவர்

இவ்வுல கெல்லாம் இறைவவுன் உறையுள்,
எங்கெங்கும் உயிர்க்குயிர் நீயே !
எவ்வகைப் பொருளும், இறைவநின் பொருளே,
ஈந்துதுய்த் தருட்பணி புரிந்தே,

வவ்விடா தொருவர் பொருளைமற் றொருவர்
வழங்கிநா ளுண்டுகள் வாழ்க !
திவ்விய வுண்மைப் பொன்முகங் காட்டித்
திருவருள் புரியருட் சுடரே !

இருந்தவா றிருந்தே, இயங்கிடும் பொருளே,
ஏகம், அநேகமாய் வளர்ந்தாய் ;
அருந்துணை நீயே, அகந்தொறும் கனல்சுத்
தாத்துமத் தெய்வமே, உன்னைத்
திருந்துநல் லறிஞர், யாவுமாய்த் தெளிந்தே
திகைத்திடார் பகைத்திடார் ; அன்பே
பொருந்தியெந் நாளும் சுதந்தர ராகப்
பொலிகுவர் பூரண வொளியே !

எப்பொருள் அறிந்தார் அறிந்தவர் ஆவார்,
எப்பொரு ளாளர் இன் புறுவார்,
எப்பொருள் இரவு பகலென்ப தின்றி,
இறப்பையும் பிறப்பையும் வென்றே,
சிற்பர வொளியாய், அமரவாழ் வருளுந்
தேன்விளை ஞானவூற் றமோ
அப்பொருள் உண்மை யறிவினுக் கென்னை
அக்கினிக் கடவுளே நடத்தாய். 40

முனிவர்

என்று வேத மிசைத்து முனிவரர்,
இன்று தங்கள் இடர்களைப் போக்கியே
நன்று செய்த நலம்பெறு நம்பியின்
வென்றி தன்னை வியந்துளம் பூரித்தார்.

பார திரப் பலம்வளர்த் தெங்குமே
போர திரப் புரிந்து மதங்கொண்ட
சூர பத்மனைச் சுட்ட முருகனே,
வீர சுத்தனுய் வேகனை வீழ்த்திஞன்.

செருக்கு மிஞ்சித் திமிர்கொண்ட பாவிகள்,
உருக்கு போன்ற வுளத்தர் கலிநமர்
பெருக்கு சேனை யினும் பெரும் பேயென
நெருக்கி நம்மை நலிக்க நினைக்குமால்.

தருமந் தாங்குந் தவமுனி வோர்களே
கருமந் தாங்கும் உலகினர் காப்பென்ற
மருமங் கண்டுநம் வாழ்வை யொடுக்கவே
வருமத் தீயரின் வாட்படை நாளையே.

தன்ன லஞ்சுய சாதி மதத்திமிர்,
பொன்மண் ணாசை, புவியெம தென்கிற
மன்னர் செய்யு மதிகெடு போர்வினை,
இன்னல் செய்யு மினியுல கெங்குமே.

எல்லை யற்ற துயர்செய் யிகற்படை
சொல்லை மீறித் தொகைதொகை யாகவே,
தொல்லை செய்யத் தொடருமுன் ஓர்வழி,
ஒல்லை காண உளங்குவிந் தெண்ணுவோம்.

அலைகள் மோதி யலைக்குங் கலமென
நிலை குலைந்திடு நீதி தருமத்தை
உலைவி லாவழி யுய்த்தருள் பாலிப்பாய்
தலைவ, சுத்த தயாபர மூர்த்தியே.

சுத்த முக்த சுதந்தர சக்தியால்,
சத்தி யச்சுடர் தந்தெமை யாண்டிட
இத்த தியிங் கெழுந்தருள் செய்கநாம்
நித்தியந் தொழு நின்மல தேவனே.

அன்று சூரனை வேல்கொண் டழித்தவன்,
என்று மன்பர்க் கிதஞ்செய் சிவக்கனல்,
ஒன்று பட்டநம் உள்ளத்திற் கூடியே
இன்று நல்கும் இனிதின் அபயமே.

அந்தண் மாதவர் அன்புள நன்றியால்,
அந்தி வண்ணன் அனல்வடி வாகிய
செந்தி லாண்டவன் சீர்வடி வைக்குக
மந்தி ரஞ்சொலி வாழ்த்தி வணங்கினர்.

குக மந்திரம்

கதிநீ, மதிநீ, கதிர்வேல் முருகா,
துதிசெய் யடியார் துணை நீ யரசே,
விதிசெய் வினையும் விலகப் புரிவாய்,
புதிதா கியவாழ் வருள்புங் கவனே!

சத்திக் கனலே, சமர்செய் பகையைக்
குத்திக் குமுறும் கொதிவேற் கரனே,
தொத்தித் துயர்செய் பிணியைக் களைவாய்
பத்தர்க் கருளும் பரமன் மகனே.

பவபந் தனைசிந் துக!பற் றறுக!
தவசா தனைசித் திதழைத் தொளிர்க!
கவலை, கதிர்முன் பனிபோல் ஒழிக!
சிவஷண் முகஓம் செறுவேல் முருகா!

அருளார் முகமும், அடியார்க் கபயம்
தருபொற் கரமும், தணலார் விழியும்,
கருணைப் பொலிவும், கனிவாய் நகையும்,
திருமார் பழகுந் திகழும் முருகா !

சிதையா துதியா னம்நிலைத் திடவே,
பதையா துமனம் பணிவா கிடவே,
இதயத்தி லெழுந்து பொலிந் திடுவாய்,
உதயக் கிரிபோல் ஒளியார் முருகா !

தாயிற் பெரிதான தயா பரனே,
நேயர்க் குபசாந்த நிகே தனனே,
காயத் திரியின் கருவே குகஓம்,
தேயச் சுடரே, சிவஷண் முகனே.

அன்பர்க் கெளிதாய் வருவாய், அபயம் !
நம்பன் அருளும் நலமார் கனலே,
உன்பொற் பதமென் னுளமூன் றிடவே
எம்பால் வருவாய் குருவா யிறைவா.

இரவும் பகலும் இதயத் துணையே
பரவும் அறிவும் பணியுந் தருவாய்,
புரியுந் தொழில் பூசனையா கிடவே
பரிவுற் றருள்வாய் பரிபூ ரணனே.

பண்ணின் ஒலியே, பரிதிக் கொளியே,
கண்ணின் மணியே, கனியின் சுவையே,
மண்ணின் வளமே, மலரின் மணமே,
விண்ணின் விரிவே, அறிவின் விளைவே.

*பழிசெய் யசுரர் பயபந்த மிலா
வழிகாட் டியதிண் வடிவேல் முருகா,
அழியா தொளிரும் அமரக் கனலைப்
பொழியென் உயிரிற் பொலிஓம் குகனே.

நேய மூன்றி நினைத்துத் துதித்துளே
கோயில் கொண்ட குகைக்கன லொன்றியே,
தூயர் தூயனைச் சுற்றித் தியானித்தார்,
வாய கத்தைக் கடந்த மவுனராய்.

*இசைக் குறிப்பு: இராகம்–காபி–தாளம்–ஆதி;
தனனா தனனா தனனா தனனா; கலிவிருத்தம்

செய்ய மாதவச் சித்தருள் ளேவளர்
தெய்வ குண்டலித் தீயெழுந் திப்புவி
உய்ய வந்த ஒருவனுள் ளேவளர்
துய்ய சோதிச் சுடரிற் கலந்ததே.

பொறிய டங்கி மனத்திற் பொருந்திட,
நெறிநின் றம்மனம் நெஞ்சி லடங்கிட,
அறிவி லேயஃ தடங்கச்சுத் தானந்தச்
செறிவி லேயொரு சித்தி மலர்ந்ததால்.

காந்த மின்பொறி காட்டுங் கனலென
ஏந்து மாதவர் இன்பக் கனலிலே,
நீந்தி யுள்ள நிலையினை யோதினர் ;
சாந்த மாமுனி சாற்றிய சாற்றுவாம்.

சாந்த முனிவன் இனி வரும் உலக நிகழ்ச்சிகளைக் கூறுதல்

இலங்கு மாதவ மேந்திடுஞ் சித்தர்காள்,
கலங்கி டாது கடமை புரிகுவோம் ;
நலங் கிளர்ந்திடும் ; தீமை நலிந்திடும் ;
துலங்கு மின்பம் ; தொலைந்திடுந் துன்பமே.

தொத்துறு மனத்தின் பாசந் துடைத்தொரு கவலை யின்றி
முத்தியில் உலவி யிந்த முதுவனம் வசித்து வந்தோம் ;
இத்ததி யுலகுக் கெல்லாம் இடரென முளைத்த தீயர்
கத்தியைச் சுழற்றி வந்து நம்மையுங் கலக்கி விட்டார்.

அத்தகை அரக்கர் வாழ்வை யழித்தொழித் தமர வாழ்வை
இத்தல மாந்தர்க் கெல்லாம் இயன்றிடச் செய்ய வந்த
சித்தனிங் கொருவன் உள்ளான், செருவிலு மிணையி லாதான்,
சுத்தனென் றறியத் தக்க சுடரொளிக் குமரன் வாழ்க !

தந்திர மெல்லாம் வல்ல சதுரனும் அறிஞன், சித்தி
மந்திரி யுடனே யின்று மாதவர் குலத்தைக் காத்தான் ;
இந்தவாள் வீர னுள்ளே இன்றுநந் தவத்தை வார்த்தோம்.
சந்ததம் அறமும் அன்புந் தழைத்திட வுலக மெல்லாம் !

கதந்தரும் அரக்கர் சேனை, கடலெனச் சூழ்ந்து நாட்டின்
சுதந்தர வாழ்வைச் சின்னாள் சிதைத்திடும்; துயர்கள்ஓங்கும்;
பதந்தருங் கரும ஞான பக்தியோ கங்கள் போற்றி
இதந்தரும் பெரியோர் வாழ்க்கை இடர்ப்படும் பகைவர்போரால்.

தானமுந் தவமுங் குன்றும் ; தருமமுந் தயவும், பெண்கள்
மானமுங் கற்புங் குன்றும் ; மானிடர் விலங்கு போலே,
ஞானசூ னியராய் வாழ்வார்; நல்லதைச் சொல்லிக் கேளார் ;
வானமும் பொய்க்கும்; எங்கும்வறுமையுமிருளுஞ்சேரும்.

பொறுமையிற் கழுதை யாகிப் பொருமையிற் பாம்பே யாகிச்
சிறுமையிற் புழுப்போ லாகித் தீமையிற் புலிக ளாகி,
வறுமையிற் பாலையாகி, வஞ்சத்தில் நரிக ளாகி
வெறுமையுற் றீன வாழ்வை விரும்புவோர் பலரு மாவார்.

பாருயிர்க் குயிர தாகிப் பலப்பல பான்மை யான
ஓருயிர் பொருளை யெண்ணார் ; உள்ளதும் உடலே யென்பார்,
ஆருயிர் ஆண்பெண் சேர்க்கை யளிப்பதென் றறிவு சொல்வார்,
காருகு மழையுஞ் செய்வோம் கதிரையும் படைப்போமென்பார்.

ஆத்திக வேத மெல்லாம் அனலிட்டுப் பொசுக்கு மென்பார்,
நாத்திக வாதம் பேசி, நாத்தடிப் பேறக் கற்றார்,
சாத்திரச் சண்டை கோடி சாதியு மதமுஞ் செய்யும்
ஆத்திரச் சண்டை கோடி அடிமைநா டெங்கு மாமே.

குருவினைத் தூற்று வார்கள் ; கோயிலை யிடிப்பார் ; மாதர்
கருவினைக் கரைப்பார், தீய காமத்தாற் கண்ணி ழப்பார்,
பொருவினை செய்ய வெய்ய பொறிகளைக் குவிப்பார், நாட்டுத்
திருவினைக் கொள்ளை கொள்வார் தீவினை யரக்கர் மாதோ !

தன்னலப் புலிக ளாகித் தம்மவர் கொழுக்க வேண்டி,
இன்னொரு நாட ழிப்பார், இகல்வெறி மதமே பூண்பார் ;
சொன்னதைக் காவார் ; மற்றோர் சுதந்தர ராகப் பாரார் ;
மன்னர சில்லார் நல்ல மக்களி னரசி லாரே.

பூசிய முகமும் போலிப் பற்களும் பொய்ம் மினுக்கும்,
வேசையின் நடையும், கண்ணும் வீணகங் காரப் பேச்சும்,
ஆசையைக் காட்டி யாளை அம்பல மாக்கு நட்பும்,
மோசமாய் வலுக்கு மிந்த மோகநா கரிகத் தம்மா !

பணத்திமிர் கொண்டோ ராலே, ஏழைகள் பாடு பட்டும்
உணத்தகு சோறில்லாமல், பசியினால் உயிர்து டிப்பார்,
நிணத்திமிர் கொண்ட ரக்கர் நீள்சமர் பெருக்கி யெங்கும்
பிணத்தினைக் குவிப்பார் ; மோகப் பேய்பிடித் தாடுவாரே.

பஞ்சமுங் கள்வுங் கொள்ளைப் படைகளின் ஊழிக் கூத்தும்,
வெஞ்சமர்க் கொலையும், எங்கும் விடுதலைப் புரட்சிப் போரும்,
அஞ்சிடும் அரசர் வீழ்வும், அரசியற் சூது வாதும்
செஞ்செவே லென்ன மாற்றும் பசுவளச் செகத்தை யம்மா !

நெறியுடன் நெறிகள் மோதி, நிலத்துடன் நிலங்கள் மோதி,
வெறியுடன் வெறிகள் மோதி, வெடியுடன் வெடிகள் மோதி,
பொறியுடன் பொறிகள் மோதிப் புயலுடன் புயல்கள் மோதி,
அறிவிழந் தவலமாகி அழியுமிவ் வரக்கர் ஆட்சி.

அத்ததி அமைதி யென்றே அலறுவார் உலக மாந்தர்,
தத்தம தாற்ற லாலே தருமத்தை நாட்ட மாட்டார்,
புத்திவந் திறைவா நீயே புகலெனப் புலம்பு வார்கள் ;
இத்ததி சுத்த னென்னும் இரவிவந் தருளு மம்மா.

வெறிபிடித் தலேயும் கால வினைகளை மறந்தே, யோக
நெறிபிடித் தொழுகிச் சுத்த ஞாயிறு நிலவுகின்ற
குறிகொண்டு சுத்த சங்கங் கூட்டிநாம் வாழ வேண்டும்
அறிவரு ளாற்ற லெல்லாம் அதற்கென வழங்கி நாளும்.

இங்கினித் தவயோ கங்கள் இயற்றிட வசதி யில்லை ;
வெங்குலக் கலியர் நாளை விரைந்துவந் திடும்பை செய்வார்.
நங்குலம் இமய மீது நலமுறக் கூடி வாழ்ந்து,
மங்கல மைந்த னுக்கே மாண்புறத் தொண்டு செய்க !

சாந்தனிவ் வாறு பேசச் “ சரியது சரி ” யென் றுத்தம
வேந்தர்கள் ஆமோதித்து, விமலனை நோக்கி னூர்கள்.
ஏந்தலும் வணக்கஞ் சொல்லி, முனிவரின் இதயந் தன்னைக்
காந்தமின் சாரம் போலக் கவர்ந்திடும் வார்த்தை சொன்னுன்:

சுத்தன் திருவாக்கு

ஓம் என வேதம் ஓதிடும் பொருளைத்
தாம் எனத் தெளிந்த தவமுனி வோர்காள்,
மனத்தை வென்ற மாசிலா வீரர்காள்,
சினத்தை வென்ற தீரர்காள், வணக்கம் !
காமம் வெகுளி கலக்க மின்றி,
தாமதம் ராசதம் சத்துவ மாகிய
முக்குணங் கடந்த முத்தர்காள் வணக்கம் !
சிக்கற வாழும் சித்தர்காள் வணக்கம் !
மின்விளக் கணியில் விளங்கொரு சுடர்போல்,
பன்மதத் துள்ளும் பரம்பொருள் ஒன்றெனத்
தேர்ந்து சமரசந் தெளிந்த காட்சியீர்,
சேர்ந்து வாழுந் திறமை யறிவீர்,
அருணச் சாந்தமும் ஆத்தும சக்தியும்,
கருணை யுள்ளமுங் காட்டி யுலகெலாம்,
இன்புற நோற்கும் அன்புச் சுடர்காள் !
பன்மையில் ஒருமையே பார்க்கும் யோகிகாள்,
இருவினைக் கட்டை யெற்றி யெறிந்து,
செருவினை யில்லாக் குருமர புடையீர் !
சூரியன் போலத் துலங்குஞ் சாட்சியாய்ப்
பார்வினை யாட்டைப் பார்க்கும் புலவீர்,

இயற்கை யுலகில் இறைவனைக் கண்டு
மயக்கற வுள்ளே வாழுந் துறவீர்,
நீண்ட தவக்கனல் ஈண்டெனுள் ஊற்றி
ஆண்டுகொண் டருளிய மாண்டகு பெரியீர்,
இன்றே யென்னை நன்றுநான் அறிந்தேன் ;
இன்றே யென்கடன் இன்னதென் றறிந்தேன்,
இன்றே யிறைவன் என்னுள் எழுந்து,
நன்றே செய்திறல் ஒன்றை யளித்தான்.
இனியென் பேச்செல்லாம் இறைவன் பேச்சே,
இனியென் செயலெலாம் இறைவன் செயலே.
நானென் பதுவும், நாடென் பதுவும்,
ஊனென்பதுவும், உயிரென் பதுவும்,
எல்லாம் அவனே, என்னையா ளுடைய
வல்லா னுனக்கே வணக்கம் வணக்கம் !
அவனே புகலென் றடைந்த முனிவர்காள்,
அவனே நமக்கினி அருள்வழி காட்டுவான்.
எப்படி இறைவன் எங்கே யுய்ப்பான்,
அப்படி யவன்வழி அடியேன் செல்வேன்.
அவ்வழி நீவிர் அஞ்சா தடைமின்,
செவ்வழி யதுவே, தீதறு நல்லீர் !
சாதுவா யிருந்து தவம்வளர் உமக்கும்,
தீது செய்யச் செருபடை கொண்டு,
செற்ற கயவரைத் தெய்வமே யின்று
நிற்கு நிலையற நீக்கிய தறிவீர்.
கொன்றுயிர் குடிக்குங் கொடியரை யெதிர்த்து,
நின்றது நாமே ; வென்றது தெய்வம்
நடந்தது நடந்தது ; நடப்பதைப் பேசுவோம்.
கடந்திட வேண்டுங் காடுகள் பலவாம் ;
சுயநலக் கலியர் தொடங்கிய நாடகம்,
பயங்கரப் படலமாய்ப் படரும் உலகெலாம்.
இரத்தச் சுருள்கள் இறுமாந் தவிழும் ;
உரத்த படைவலி உலகை நடுக்கும்.
மண்ணிலுங் கடலிலும், விண்ணிலும் அரக்கர்
எண்ணவும் அஞ்சும் இகல்வினைப் பார்கள்.
சத்திய மறிந்த சாந்த முனிவர்,
இத்தினஞ் சொன்னவை யெல்லாம் நிகழும் ;
நமது புண்ணிய நாட்டு மக்களும்
தமது தருமந் தவிர்ந்து வீழ்வார்.
சாதி சமய சாத்திர கோத்திர

வாதமும் புத்தி பேதமும் பொறாமையும்
புயலெனக் கிளம்பும் போர்முர சதிர்த்தே ;
அயலவர் நாட்டை அபகரித் தெனக் கொள விழுங்குவர்.
நிறத்திமிர், நிலத்திமிர், மறத்திமிர் வலுத்தே,
அறத்தினைப் பழிக்கும் அழிவினை புரியும்.
ஒற்றுமை யென்றே உதட்டளவில் மாளாம்
வெற்றுரை பேசும், வேற்றுமை பெருகும் ;
உட்சினம் வைத்தே உறவுகள் பகட்டும்.
கட்சிகள் பெருகிக் கலகக் காடாம்.
பயிற்று துள்ளாம் பாழ்படு மாந்தர்
வயிற்றுப் பலியாய் வாழ்வை வழங்குவார்.
ஒருவர் சோற்றை ஒருவர் கெடுப்பார் ;
ஒருவர் சொத்தை ஒருவர் திருடுவார் ;
ஒருவர் உரிமையை ஒருவர் அடைவார்
ஒருவர் வாழ்வை ஒருவர் கெடுப்பார்.
காயிதப் போரும் கருணையில் லாமல்
ஆயுதப் போரும், அரசியற் சூதும்,
சாதிப் போரும், சமயப் போரும்,
வேதப் போரும், வேலைப் போரும்,
வீட்டுப் போரும், வீதிப் போரும்,
நாட்டுப் போரும், ஞாலப் போரும்,
இரக்கமில் லாமல், உறக்கமில் லாமல்,
அரக்கர் செய்யும் அசுரப் போராம்.
எங்கும் புரட்சி, எங்கும் போர்ப்புயல்,
எங்கும் வறுமை, எங்கும் கொள்ளை,
எங்கும் கொலைகள், எங்கும் பயங்கரம்
எங்கும் புண்ணீர், எங்கும் கண்ணீர்
நினைக்க நினைக்க நெஞ்சம் நடுங்கும்,
அனைத்தும் அரக்கர் அழிச்சாட் டியங்களே.
இத்தகைத் துன்பம் ஏனெனக் கேண்மின் :—
பித்துப் பிடித்த பேய்மனத் தாலே,
புத்தி கெட்டுச் சுத்தான் மாதரும்
சக்தி கெட்டுச் சமரஸங் கெட்டு,
நாசஞ் செய்யும் நானென தென்னும்
பாசஞ் சுற்றிப் பண்பினை யிழந்து,
கட்டுக் கடங்காக் காட்டு மிராண்டிகள்,
கொட்ட மடிப்பார் குவலய மெங்குமே.
உயிர்வதை யாலே யுண்டு கொழுப்பார்,
உயிர்க்கொலை யாலே யுலகை யெல்லாம்

கொலைக்கள மாக்கிக் கொற்றவர் யாமெனத்
தலைதலை கிளம்பித் தடியர சியற்றுவார்.
வேகப் படைகள், வீண்வெறி பிடித்த
மோகப் படைகள் முன்முன் சென்று
முடியர சுகளைக் குடியர சாக்கும் ;
குடியர சுகளைக் கொலையர சாக்கும்.
ஆழிப் புயல்போல் ஆட்சிகள் கிளம்பி
ஊழிப் புயலாய்ச் சூழுமிவ் வுலகை !
மனத்தைப் பிடித்த தினவுந் தனித்தனி
இனத்தைப் பிடித்த கனத்த செருக்கும்,
படர்தரும் பஞ்சமா பாதகக் கூத்தும்
இடர்தரும் போரும் இயற்கை பொறாமல்,
ஆண்டவ னிடத்தில் அலறிய பயனாய்,
ஈண்டவன் புரியும் இரண சிகிச்சையே.
புன்மை வரினும், புகழே வரினும்,
நன்மைக் கென்றே நடப்பார் மேலோர்.
குண்டுபீ ரங்கி கொண்டுபோர் புரிவோர்
குண்டுபீ ரங்கி கொண்டே யழிவார்.
வாள்வீச் சினையோர் வாள்வீச் செதிர்க்கும்,
தோள்வரை தனையோர் தோள்வரை தாக்கும்.
தாக்கித் தாக்கித் தகர்த்துத் தகர்ந்தே
ஊக்கமாய் இடர்கள் ஒழிந்து போகும்.
புயலும் இடியும் பூகம் பங்களும்,
இயற்கையி னெழுந்தே யியங்குதல் போல,
நகார மடித்து நானெனக் கிளம்பும்,
விகார மனத்தில் விளைவன போர்கள்,
மனிதனைப் பிடித்த மமதை நோயை
இனிதுறக் கெடுக்கவே இவையெலாங் கிளரும்.
பண்டைக் கசண்டுகள் பாழ்பட் டொழியும் ;
சண்டைக் கப்புறம் சகத்திற் கெல்லாம்
புதிய வாழ்வைப் பொலிவுற நாட்டவே
அதிமனி தர்கள் அருளுடன் வருவார்.
இருள்வழி யேகி யிடர்ப்படும் உலகம்,
அருள்வழிச் சென்றே அமைதி பெறுமே ;
அறிவுந் திருவும், அன்பும், வீரமும்,
அறமுந் தவமும், ஆத்தும சக்தியும்,
உள்ளொற் றுமையும், உலகொற் றுமையும்,
கள்ள மற்ற கருணை யொழுக்கமும்,
இறைவனோ டிணையும் இயற்கை யின்பமும்,

குறைகளை வென்ற நிறைகுணப் பண்பும்,
தாக சோக மோகங் கடந்தே,
யோகமும் சுத்த போகமும் பொலியும்.
தெய்வ வாழ்வைத் திருவரு ளாலே
வையக மீது வளமுற நாட்டலே
கடமை நமக்காம் ; கால சக்தி,
நடத்து கின்ற நாடகந் தன்னில்,
வரையிலாக் காட்சிகள் வளர்ந்து செல்லும் ;
திரையை யுயர்த்தித் திருவரு ளிச்சை
மணி யடித்ததும், மாதவக் கனலுடன்
அணியணி யாகப் பணிசெய வருவோம்.
அப்போ திறைவன் அன்பரை நடத்துவான் ;
இப்போ ததனை யியம்புதல் அரிதாம்.
கால சக்கரம் கடவுளை நோக்கும்
காலமே நமது காலம தாகும்.
அதுவரை நாமெலாம் அடக்க மாகப்
பொதுநலம் புரியப் பூரண சக்தியை
வளர்ப்போம் ; இமாலய வரைமிசை யிருந்தே.
உளப்போர் வென்ற உண்மை வீரர்காள் !
அவம்புரி யரக்கர் ஆற்றலை வீழ்த்தத்
தவம்புரி நெறியே சக்தி யளிப்பதாம்.
செல்வீர் முனிவர்காள், சிவகை லைக்கு.
வெல்வீர் உங்கள் விருப்ப மெல்லாம்
புரியத் தக்கன புரிந்தபின், யானும்
உரியகா லத்தில் உம்மிடம் வருவேன்.
சித்தி நகரைச் சீரழித் திடவே
இத்ததிக் கலியன் இறுமாந் தெழுந்தான்.
என்னைக் கொல்லவும், எந்தையைக் கொல்லவும்,
அன்னையை யழிக்கவும் ஆத்திரங் கொண்டான்.
வெறிமிகு படையால் வெஞ்சமர் தொடுப்பான்.
முறியடித் தவனை, முன்னே யெனது
நாட்டையும் வீட்டையும் நலமுற நாட்டிச்
சேட்டை செய்யும் தீயரை யொடுக்கி,
என்னிடம் உயிர்வைத் திருக்கும் தந்தையை,
இன்னிய பணியால் இன்ப முறுத்தியே,
எந்தாய் இந்திரை இசைந்தெனக் காணை
தந்ததும் இமாலயஞ் சார்வேன், முனிவீர் !
கடமை பெரிது ; காலமோ சிறிது.
கடவுள் அளித்த காலந் தன்னை

அவனை யறியவும், அருட்பணி புரியவும்,
தவக்கள ஞுக்கித் தழைப்போம் ; பெரியீர்,
சுத்தியைத் தீட்டும் கலியொழிந் தினிய
சத்திய யுகமே தழைக்கத் தழைப்போம்.
சுத்தன் சித்தன், சுதந்தரப் பெருமான்,
அத்தன், எம்மை யாண்டவன் அருளால்,
அவன்பெயர் தாங்கும் அடியேன் கொண்ட
நவம்பெறு கொள்கை நலம்பெற நாளும்
சிவம்பெறு நல்லீர், தெய்வப் புலவீர்,
தவம்பெறு சித்தி தந்தருள் வீரே.
அக்கா லத்தின் அரக்கரைக் காட்டிலும்
இக்கா லத்தின் அரக்கர் வலியரே ;
கல்வியும், கணக்கும், கலையும், தொழிலும்
செல்வச் செழிப்பும் தீரமும் வேண்டும்.
உடையணி வேண்டும், உலகம் மதிக்கும்
படையணி வேண்டும், பயன்பெறு தவத்தால்
ஆத்தும சக்தி யடைந்திட வேண்டும்.
தீத்திரள் போலே சிற்சக்தி வேண்டும்.
இராமனும் சிவாஜியும் இராம தாஸனும்,
ஒரேதிரு மேனியில் ஒன்றிட வேண்டும்.
பத்தியுங் கருமமும் பரம ஞானமும்,
முத்தியும் வீர முயற்சியும் சேர்ந்த
புதிய வாழ்வு பொலிந்திட வேண்டும்.
முதிய ஞானமும், முன்னேற்ற வீறும்,
சாந்தமும், சிவமும், சச்சிதா னந்தமும்,
சேர்ந்த வாழ்வே தெய்விக வாழ்வாம்.
பக்குவ மறிந்து பரமன் அருளால்
இக்கருத் தென்னுள் இலகிய தின்றே.
நாட்டி னியல்பை நயமுற வெனக்குக்
காட்டியின் றெழுந்த கலியர் போரில்
முன்சென் றிகலை முடித்த சித்திமான்
என்குல மந்திரி யிசைபெற வாழ்க !
சாரமாங் கதைகளும் சாத்திர நுட்பமும்,
பாரி னியல்பும் பரிந்தெனக் கருளி,
தீரமும், பக்தியும் திருவுறத் தூண்டிய
பூரண சாந்தன் பொன்னடி போற்றி !
என்னைப் பயிற்றுவ தினியவன் கடனே.
முன்இனிச் செல்வோம் முனிவர் கணங்காள் !
சித்தியிற் செய்வன செய்தபின் கருதிய
மெய்த்தவம் புரிவீர் மேதினி வாழவே !

சித்தி செல்லல்

கேட்டனர் முனிவர் சுத்தன் கிளத்திய உண்மை யெல்லாம்,
" வாட்டமொன் றில்லை யிந்த வரம்பெற்ற வேந்த னாலே ;
நாட்டிடர் நீங்கு " மென்றார். நாமினி இந்த வீரன்
காட்டிய வழியைப் பற்றிக் காணுவோம் இன்ப மென்றார்.

கொண்டநங் கொள்கை வென்றே குருகுலங் காண்போ மிங்கே
தண்டக வனத்தி லின்றெந் தானைகள் பயில்க வென்றே,
அண்டிய முனிவரோடும் அமைச்சொடுந் தேரி லேறிப்
பண்டிசை முழங்கச் சுத்தன் சித்தியைப் பார்க்கப் போனான்.

துயரிடர்க் காட்டை யெல்லாந் தூள்பட நூறி, வாழ்வின்
உயர் நல மோங்க, நானா யுலகினில் யோகசித்திப்
பயிர்செழித் தோங்கத் தீயர் பந்தனை நீங்க வேண்டி,
அயர்வறத் தொண்டு செய்யும் அருந்தவ முனிவர் வாழ்க ! 460

ஆழிசூழ் உலக மெல்லாம் அறநெறி யோங்கி நன்மை
சூழுக ! சுத்த ஜோதி, துலங்குக ! மாந்த ரெல்லாம்
தோழமை பூண்டு வீர சுதந்தர ராக நீடு
வாழிய வென்றெல் லாரும் வளநக ரடைந்தார் மாதோ ! 464

# 24. அரசவைப் படலம்

தங்க மாமலை தவழ்ந்திடுந் தரளவெண் மதிபோல்,
துங்க வெண்குடை துலங்கரி யணைமிசை யரசன்,
இங்கி லங்கிடும் இந்திரன் எனக்கொலு விருந்தான் ;
மங்க லத்திரு வரசியும் இருந்திட மருங்கே !

சித்தி மாநகர்ச் செல்வரும் புலவருஞ் செறிய
முத்தர் போற்றிடும் பாரத முனியரு கிருக்க,
வித்தகர் புகழ் அமைச்சுடன் வேந்தவை யிருந்தான்,
சத்தியன், புவி தாங்கிடுந் தருமமே யன்னான்.

கடவுள் வணக்கம்

மகர யாழ்குழல் மத்தளந் தழுவிடக் கலையின்
சிகர மேறிய திருவருட் சிந்தைகொள் புலவர்,
அகர மென்னவே அகிலத்திற் காதியாம் பொருளை,
" பகவ னேசுப மருளே" னப் பரவினர் பணிந்தே.

ஆதி சக்தியை, அகண்டசிற் சக்தியை, ஞான
ஜோதி சக்தியைச் சுதந்தர சக்தியை, ஐந்து
பூத சக்தியைப் பரப்பிநீள் புவியினில் ஆடும்
வேத வுட்பொரு ளாகிய விமலனே போற்றி !

பொங்கு நல்லறப் புகழுடன் புனிதமெய் வாழ்வும்,
சிங்க நெஞ்சமும், வீரமும், சிரமுயர் நடையும்,
துங்க மாதவர் ஆசியும், தொல்புவி வாழ்த்தும்,
எங்க ளுக்கினி தீந்தருள் இறைவனே போற்றி !

பல்லி யங்களு முழங்கின, பலகலைப் புலவர்
வல்ல பங்களை வளமுற விளக்கியே தக்க
செல்வ மெய்தினர், செய்வன செய்திட வாங்கே,
சொல்லி லாச்சுறு சுறுப்புணர் வெழுந்தது துடித்தே.

கால் அமர்ந்தது. கண்ணிய மன்னவை அனைத்தும்,
சீல வாணகை திகழுறச் செங்கண்ணால் அளந்தே,
கோல மாமுகம் குலந்தரும் பெருமையாற் குலுங்க,
ஞால மன்னனும் அமைச்சரை விளித்தனன் நயந்தே.

மன்னுயிர்க் குயி ராகிய மன்னவன் அருளால்,
அன்னவன் பணி யாகவே அறச்செங்கோல் பிடித்தேன்.
என்னை என்னர சாட்சியை யினிதுற மதிக்கும்
தன்மையீர், பொது நன்மையைத் தாங்கிடுந் தகையீர் !

தக்க கல்வியும், ஒழுக்கமும், தகுந்தநற் றொழிலும்,
பக்குவப் பயிர் வளமையும், பண்புள திருவும்,
சிக்க லற்றவொற் றுமையுடன் செறிந்துநம் அருமை
மக்கள் யாவரும் வாழ்வகை வாழுவ தறிவோம்.

மந்திரி

வணக்கம் வேந்தநல் வளமையும், வீரமும் அன்பும்,
குணக்க மற்றநற் கொள்கையுங் கல்வியுந் தொழிலும்,
பிணக்க மற்றுள ஒருமையும், பிரிவறு திருவும்,
இணக்க முற்றுன தின்னுயிர்க் குடிகளங் கிருப்பார்.

தாயுந் தந்தையுந் தமயனு நீயென மதிப்பார் ;
கோயி லாகவுன் குடைநிழ லரசையே குறிப்பார் ;
நேய ராகவுன் னிசையொளி நிலவிட வாழுந்
தூயரே யுனைத் துதித்திடுந் தொண்டராங் குடிகள்.

சத்தியன்

இனிது நும்முரை. என்னருங் குடிகளின் சேமம்,
எனது சேமமென் றியன்றதை இயற்றினன் இயல்பாய்.
தனது நோயினைத் தவிர்ப்பது போலவே, மக்கள்
மனது ளேமறை குறையையு மாற்றிட முயன்றேன்.

உண்ணும் போதிலும், உறங்கிடும் போதிலும், பூசை
பண்ணும் போதிலும், பாரத நாட்டுடை நலமே
எண்ணு கின்றனன் ; இறைவனை யிறைஞ்சிநிற் கின்றேன்.
கண்ணுங் காவலு மாயிதைக் காக்கின்றேன்.......அறிவீர்.

இவ்வகை யிமை யிரண்டென நாட்டினைக் காத்தும்,
ஒவ்வறுஞ் சிலர் உட்பகை யெழுந்ததின் றுண்மை,
அவ்வியந் தரும் அரக்கரின் றகங்கரித் தாங்கே
தெவ்வினை தொடர்ந் தாரதைத் தெரிகிலார் யாரே ?

கற்ற கல்வியோ டனுபவங் கண்டிட வேண்டி,
இற்றை நாளினில் இளவர சிப்பெரு நாட்டைச்
சுற்றித் தண்டகம் வந்ததும், சூழ்ந்தவெம் போரைப்
பற்றி யொற்றர்கள் பகர்ந்ததைப் பழுதற வறிந்தோம்.

ஒரு மகன், என துயிரினும் அரியவன், என்பின்
வரு மகன், இந்த வையத்திற் கினியன வெல்லாந்
தரு மகன், இன்று தருமப்போர் தருவதை யெண்ணிப்
பெருமை கொண்டனன் பெற்றதன் பயனையும் பெற்றேன்.

புத்திமான், புவி போற்றிடும் புலமையிற் சிறந்த
சித்தி மானுடன் சென்றதே வென்றதாம் ; எனினும்,
இத்தினம் இகல் வலுத்ததென் றியம்பினர் ஒற்றர் ;
சுத்த னுக்கொரு படையணி துரிதமாய் விடுவோம் !

விஜயன்

போரெப் போதெனப் புயத்தின வெடுத்தநம் படைகள்,
நேரிப் போதவண் சென்றிட நின்றுள தென்றே,
வீரப் போர்வர விம்மிடும் விஜயனு மாங்கே
நேரப் பேசுழி நீண்முர சார்த்ததைக் கேட்டார்.

என்ன வென்னுமுன், வெற்றியென் றெதிர்ந்தநற் றூதர்
"மன்ன வுன்மகன் மந்திரி யுடன்வரு கின்றான்.
அன்ன வன்முனி கணங்களின் ஆசிசூழ்ந் துற்றான்.
முன்ன ருன்னடி பணிந்திட முந்துவா" னென்றார்.

வந்த னன்மகன் வாகைகள் சுமந்தென, மன்னன்
கொந்த ளித்திடும் உவகையாற் குதித்தெழுந் தோடி,
முந்தி யூன்வர வேற்றிட முனிகணத் துடனே ;
அந்த வேளையிற் சித்திமான் அரசன்முன் வந்தான்.

"வருக " வென்றுதன் மந்திரிக் கிழவனை ஏற்க,
உருகு மன்புடன் வந்தனம் உரைத்துநல் லமைச்சன்,
பெருமை பெற்றதிவ் வுலகமுன் பிள்ளையால் ; அவனை
இருவ ரும்அர சவையினில் ஏற்பமென் றுரைத்தான்.
"அதுவென் பாக்கிய " மென்றதும் அரசனு மாங்கே,
பொது சனக்கடல் " சயசய புனித " வென் றுர்க்க,
சதும றைமுனி வர்துதி சாற்றிடச் சுத்தன்
புதிய வேளென முதியபொற் கோயிலுட் புகுந்தான். 88

# 25. வரவேற்புப் படலம்

கரை புரண்ட கடலென் றரசவை,
உரை யுயர்த்தி, " யுலகினைக் காத்திடுந்
துரை வருக,நம் சுத்தன் வரு" கென்றே,
நிரை யுடன்வர வேற்றிட நின்றதால்.

மந்திரிகள் வரவேற்பு

''வருக சக்தி குலந்தரு மாணிக்கம்,
வருக எங்கள் வரம்பெறு கோமகன்,
பொருந ராழிப் புறங்கண்ட புண்ணியன்
வருக " வென்றனர் மந்திரி மாரெல்லாம்.

சத்தியன், இந்திரை

"அரிய வெற்றி யடைந்தனை அன்பநீ
பெரிய ராசிகள் பெற்றனை ; பேசுதற்
குரிய உன்புகழ் ஓங்குக மைந்தனே
விரிக திரென மேதினி யெங்குமே !"

சத்தியின் குலம் சந்ததம் வாழ்ந்திடச்
சித்தி யின்புகழ் சீர்பெற வந்தனை
சுத்த வீரச் சுடர்மணி வா வென்றே
முத்த மிட்டனர் பெற்றவர் முன்வந்தே.

பாரத முனிவன்

மங்கல மைந்தநீ வருக, மாண்புடன்
உங்குல மோங்கிட ஒளிர்க பானுபோல்,
பொங்குக உன்புகழ் பூவு லகெலாம்,
தங்கிநன் றோங்கிடுந் தரும தீபம்போல். 20

இவ்வகை குமரனை யேற்றுப் பாரதன்,
செவ்விய முனிவரைச் சேவித் "தெம்பதி,
துவ்விய தானதுந் தூய சங்கத்தால் ;
திவ்விய சித்தர்காள் சேர்க " வென்றனன்.

அவரவர் அவரவர் இடத்த மர்ந்ததும்,
தவமுனிக் கணத்தினை வணங்கிச் சத்தியன்
அவைநிகழ் மணியினை யடிக்கச் சொல்லித்தன்
தவிசினில் அமர்ந்தனன் தருமம் போலவே !

படையணி வீரர் போற்றப் பண்புள வமைச்சர் போற்ற
நடையணி குலுங்கு மாதர் நல்லிசை யுடனே போற்றக்
கொடையணி செல்வர் போற்றக் கொற்றவை போற்ற வெற்றிச்
சுடர்மணிச் சீயம் போலச் சுத்தனும் எழுந்தான் மாதோ !

சுத்தனை உபசரித்தல்

நண்ணிய மகனைத் தங்க நவமணித் தவிசில் ஏற்றிப்
பண்மலர் சொரிய, வேதப் பாடல்க ளாலே போற்றி,
" உண்மையில் உதித்த தூய ஒளிமணி வாழ்க !" வென்றே
தண்மலர் சொரிந்தார் அந்தச் சத்தியச் சபையி லுள்ளோர்.

எல்லாரும்

ஆவியாய் உலகைத் தாங்கும் அறத்தினைக் காத்தாய் வாழ்க !
பாவியர் போரைப் போராற் பாழ்படப் படுத்தாய் வாழ்க !
தீவினை தீர வந்த திவ்விய வீர வாழ்க !
நாவினுக் கினிய சுத்த நாமவுன் சீர்த்தி வாழ்க !

சுத்தன்

புன்னகை பூத்த பொன்முகங் காட்டிப்
புனிதனுங் கனிமொழி தேர்ந்தே,
" அன்னையே வணக்கம் தந்தையே வணக்கம்,
அருட்பெருஞ் சித்தரே வணக்கம்,
மன்னுயிர் வடிவாய் உலகினில் ஆடும்
மங்கல சக்தியே வணக்கம்,
என்னுயிர் வாழ்வும் செயல்களும் உமது
கருணையால் இயன்ற " தென் றுரைத்தான்.

கனிப்பொறை வணக்குங் கற்பகக் கிளைபோல்,
கற்றநல் வணக்கமே காட்டித்
தனிச்செருக் கின்றிச் சாற்றினன் கேளீர் ;
தகைபெருஞ் சித்திமா னுடனே,
வனத்துறை முனிவர் ஆசியின் றுணையால்
வலிபடை யரக்கரை நலித்தேன்.
எனக்கென வாழ்க்கை யில்லையிங் கினிமேல்
என்னையே யிறைவனுக் கீந்தேன்.

இன்றுல இயல்பைக் கண்டனன் சுற்றி,
இனிவரு நாளையுங் கண்டேன் ;
தென்றிசைக் கோமான் செய்வினை யாட்டைத்
திசைதிசை காணுவ தல்லால்,
நன்றுறு வினைகள் எவற்றையுங் காணேன் ;
ஞாலத்திற் கிதுசுப வேளை
அன்றெனத் தெரிந்தேன் ; கலிதரும் அரக்கர்
ஆட்டமே காட்டிடு முலகே !

கஞ்சியே தேடிக் காரிகை யாரின்
கலவியே சுகமென நாடி,
வஞ்சமே புரிந்து, வாய்மையை யிழந்து,
வறுமையே வரவரச் சுமந்து,
நஞ்சமே யுண்ட பஞ்சரக் கிளிபோல்
நாளுமே நலிகின்றார் உலகோர் ;
அஞ்சினேன் இவரை. ஆண்டவா வுன்றன்
அருளுற வேயெனக் கருளாய்.

உயிர்க்கொலை புரிவார், கொலையுண வுண்பார்.
உலகினை யுலைத்திடக் கொதிப்பார் ;
அயர்விலாப் பொன்பெண் ஆசைக ளாலே,
அதர்மமே கடனெனப் புரிவார்,
பயிர்களை யரிக்கும் விடப்புழுப் போன்றார்,
பாரினில் எளியரை நலிப்பார்.
கயவரின் உறவைக் கனவிலுங் கருதேன்,
கடவுளே யுன்னுற வருளாய் !

பட்சிக ளிடையே கூட்டுற வுண்டு !
பாரினர் ஓரினம் பேசிக்
கட்சிவேற் றுமையாற் கலகங்கள் செய்வார் ;
காக்கைபோற் கூடியே கலைவார்.
உட்சினம் வைத்தே உதட்டினிற் சிரிப்பார் ;
ஊரினுக் குழைப்பது போலே
குட்சியை நிரப்புங் கும்பலைக் கூடேன்
குலவுக நின்னரு ளுறவே.

கொள்ளிபோல் விழியார் ; பிறர்குடி கெடுப்பார் ;
குத்திரங் கோள்பொய்யே யுரைப்பார்.
கள்ளினைக் குடிப்பார், கற்பினை யழிப்பார் ;
காலத்தைச் சூதினில் இழப்பார்,

வெள்ளியின் வலையில் வீழ்ந் (து) அதஞ் செய்வார் ;
விதவிதக் கொடுமைகள் இழைப்பார் ;
உள்ளினும் உள்ளம் சுடும்உற வணுகேன் ;
உள்ளவா வுன்னுற வருளாய்.

இவ்வகை யிறைவனை யிறைஞ்சி நாடினேன்.
உய்வகை யவனரு ளன்றி யுள்ளதோ,
எவ்வகை யவனுளம் ஏவு கின்றதோ,
அவ்வகை நடப்பதென் அறம தாகுமே.

என்னுயிர் வீணையை யிறைவன் மீட்டிட,
மன்னுயிர்க் கதனிசை மகிழ்வு கூடுமால்,
இன்னிய நண்பர்காள், இசைந்து நம்புங்கள் ;
அன்னவன் அருளுமை ஆத ரிப்பதே.

முதற்சமர் முடிந்ததென் றுவகை கொள்ளலீர் ;
அதர்மமே தொழிலெனும் அரக்கர் நாளையே,
கொதிசினப் படைகளைக் கொண்டு, சித்தியின்
மதிலினை வளைத்திட வருவ தாகுமே.

ஆயினும் அஞ்சலிர் அன்பு நேயர்காள்,
பேயினுங் கொடியவர் பிறகிட் டோடவே
போயினும் படையுடன் போர்செய் யென்றுளே
நாயகன் கட்டளை நாட்டி விட்டனன்.

ஆதலால் இனிவரும் அமர்க்க ளத்திலும்
கோதறு வீரரைக் கூட்டிச் சித்தியைத்
தீதறக் காப்பதென் செய்ய நற்கடன்
மேதகு கேள்வியீர் விருப்ப மோதுமின் !

மறந்தரு பகைவரை மாற்றி வெற்றிகொள்
அறந்தரு தூயவன் ஆர்த்த வாசகம்,
சிறந்தவுள் ளுணர்ச்சியைத் தூண்டச் சீரவை
பிறந்தது பரந்தது பெரிய மோனமே.

சத்தியன்

போர்த்த மோன வியப்பினைப் போக்கியே,
சீர்த்தி யோங்கிய செல்வன் முகத்தினைப்
பார்த்துப் பார்த்துப் பரவச மாகிய,
கீர்த்தி வேந்தன் எழுந்து கிளத்தினன் :

வேந்த வையில் விளங்கும் அறிஞர்காள்,
மாந்த ருக்கினி மாறிய காலமே
போந்த தென்று புனித னுரைத்தது,
நாந் தடையற நம்பிடும் உண்மையே.

உடன் பிறந்துடன் உண்டு வளர்ந்தவன்,
கடன் மறந்த கலியனும், மோகியால்,
விடங் கலந்த விரோதியென் ருயினுன்,
மடங்க லந்த மனத்திமி ரென்னையே !

கண்ண யர்ந்துங் கடமை மறக்கிலார்
புண்ணி யப்புவி போற்றும் புரவலர் ;
எண்ணி நன்மை யியற்றிட லேயவர்
மண்ணு டல்பெறு மாண்பெனக் கொண்டனர்.

மிக்க மேலவர் செஞ்சொலை மேற்கொண்டே,
தக்க தாற்றித் தருமஞ் செலுத்தினேன்,
இக்கொ டியவன் இன்றென தாட்சியும்
பக்கு விட்டிடப் பாதகஞ் செய்கிருன்.

ஒற்றர் மூலம் உளவறிந் தன்னவன்
பற்றுந் தீய வழிகளைப் பார்த்தனன் ;
மற்றுஞ் சொல்லை வளர்ப்பதி லென்பயன்,
சிற்றிற் பாம்பினைச் செற்றிட லேகடன்.

குடிக ளின்பமே கொள்கையென் றுடுமென்
கொடியின் மீதக் கொடியவன் ஏவிடும்
இடி விழுமுன் எதிர்த்து நொருக்கிடக்
கடிய வேகப் படையெழக் காண்பமால்.

உருகும் ஈயத்தை ஊற்றிய தென்னவே,
குரு முனிவர் குடில்களைத் தாக்கிய,
வெருவு செய்தி விழுந்ததும், சுத்தனே
செருவெல் வானெனச் சிந்தித் திருந்தனன்.

புலி நகரெனப் புல்லர்கள் கூடிய
கலி நகரக் கடும்பகை செய்படை
கிலி பிடித்துரங் கெட்டுப்பின் னேடிட
வலிய சேனை வளைகநங் கோட்டையே.

படைத் தலைவன் விசயன் பணியிது ;
கடையர் கூடுங் கலிநகர் ஏகியே,
நடை முறைகளை ஒற்றர் நவிலுக ;
இடையி லின்னொன் றியம்பிடக் கேண்மினே.

சிற்ற ரசர் சிலரின் உதவியைப்
பெற்ற னன்கலிப் பேயென் றறிகிறேன் ;
ஒற்றர் சென்றவ் வுளவையுங் காணுமின் ;
கற்ற மந்திரி யின்கருத் தோதுக.

நாடு சுற்றி யறிந்து நலமுற
வீடு வந்தநம் வித்தகச் சித்திமான்,
நீடு வாழுறு நீதி யரசினே
நாடு மாந்தர் நிலேயை நவில்கவே.

### சித்திமான்

சாதி பேதமி லாது சகலரும்,
மேதி னிக்கு விளக்கெனத் தோன்றியே,
நீதி காக்கு நிருபனென் றுன்னேயே
ஓதி யுள்ளங் குளிருவர் உண்மையே.

தந்தை நீயவர் தாயுன் னரசியே.
பந்து வர்க்கமிப் பாரத நாடெலாம் ;
இந்த நல்லுணர் வெங்கும் இருந்தெமை
வந்த னத்துட னேவர வேற்றதால்.

நிறை மனத்தின ரான நிருபர்கள்,
இறைவனு முனே யெண்ணிப் பணிந்தனர் ;
பொறை மனத்தர் பொதுசன நேயரும்;
குறை மனத்தன் கொடிய கலியனே. 180

சாத சோகனும் சந்திர குப்தனும்,
ஆதி பாண்டி யரசரும் போலவே,
நீதி செய்யு நிருபவுன் ஞட்டிலே
பேதஞ் செய்யப் பிறந்தனன் பேயனே.

ஆருக்கும் பய மற்ற துரோகியிப்
பாருக் கேயிடர் செய்யும் படைகொண்டான் ;
சீருக் கெல்லாஞ் சிறந்த நம் சித்தியின்
வேருக்கே விடம் வார்க்க விழைந்தனன்.

நற்ற வரை நலிக்கச் செயலிலான்.
ஒற்று மையை உலேக்க வுழைக்கின்ருன்.
இற்றை நாட்டில் இவன்யம தூதர்கள்,
புற்ற ரவெனப் பூந்து கரந்துளார்.

சுத்தன் சொன்ன சுடர்மொழி புண்மையே,
சத்தியன் சொல் சமர்வினே தக்கதே.
ஒத்த நெஞ்சுடன் ஓங்கிய வீறுடன்,
சத்து ருவைத் தகர்த்திட நிற்பமால்.

அமைச்ச னிம்மொழி பேசி யமர்ந்ததும்,
இமைத்த லின்றி யிருந்த சபைக்குநல்
அமைதி வாக்கை யருள்கென மன்னவன்,
சமதை கொண்ட முனிவரர் சாற்றினுர். 200

முனிவர்

வீரர்கள் பெருக ; நாடு விடுதலை பெறுக ; ஞான
தீரர்கள் பெருக ; தெய்வ ஜீவனம் பெருக ; நாளும்
போர்மத வெறிக ளின்றிப் புதுயுகம் பொலிக வெற்றி.
பாரத சக்தி ஜோதி பரவுக வுலக மெல்லாம் !

முனிவ ராசி முடிந்ததுஞ் சத்தியன்
இனிவி னைகள் இயற்ற வெழுந்தனன் ;
புனிதன் பொன்முகப் புன்னகை கண்டுநன்
மனவு றுதிகொள் மன்ற மெழுந்ததால் ! 208

பாரத சக்தி
முதலாவது சித்தி காண்டம்
*முற்றிற்று*



# பாரத சக்தி மகா காவியம்

## இரண்டாவது

# கௌரி காண்டம்

### (கதைக் குறிப்பு)

[இந்த **இரண்டாவது கௌரி காண்டத்தில்** சுத்தன் கௌரியை மணம் புரிகிறன். சத்திய ராஜன் அவனுக்கு முடிசூட்டித் தனது முதுமையை யோகத்தில் கழிக்கிறன்; தருமப் பிரசாரமும் செய்கிறன். கலியன் அசுரப்படைகளுடன் சூழ்ச்சி செய்து, பெரிய போருக்குப் படை சேர்க்கிறன். சில போலித் துறவிகளைத் "தாந்திரிக சாதகர்" என்று அனுப்பிக் கலியன் சித்தி நகரில் கலகத்தைத் தூண்டுகிறன்.அக் கலகமே போராக வளர்கிறது.போரில் ஓர் ஆபத்தில் கௌரி அதரும அரக்கர்களைக் கொன்று, நாயகனைக் காத்துத் தானும் குண்டு பட்டு இறக்கிறள். சுத்தன் சித்திக்கோட்டையை முற்றுகையிட்ட கலிப்படையைமுறியடிக்கிறன்; கலியனும் கைதியாகிறன்; பிறகு மன்னிப்புக் கேட்டுத் தப்பிச் செல்கிறன். இதற்குள் பழுத்தவீரனை சத்தியக்கிழவன்,பஞ்சவடி சேனையைக் கொண்டு கலிநகரைப் பற்றி, அங்கே தானவரின் இரகசியங்களையெல்லாம் அறிந்துகொள்கிறன். கலியன் தனது நகரவாசலில் அடிவைத்ததும், கைதியாகி மோகியுடன் சிறைப்படுகிறன். மோகி ஒரு தந்திரத்தால் அவனுடன் தப்பி ஊரைத் தாண்டுகிறள். அங்கே தானவ விமானம் வந்து இருவரையும் ஏற்றித் தானவம் செல்கிறது. இதைக்கேட்ட சத்தியன், கலிநகரை ஆள ஒரு வீரனை வைத்து, தானே தானவரையும் துரத்திக்கொண்டு மரகதத்தீவிற்குக் கப்பல் நடத்துகிறன். அவன் கதை தானவ காண்டத்தில் வரும். இங்கே சுத்தன் கௌரி தேவி வீழ்ந்த இடத்திலே பெரிய பந்தல் எழுப்பி, வெற்றி கொண்டாடுகிறன். பிறகு அதே இடத்திலே, "**கௌரி விலாஸம்**" என்ற பல்கலைக் கழகம் நாட்டுகிறன். சுத்தனுள் ஒரு மாறுதல் உண்டாகிறது]

# பாரத சக்தி மகா காவியம்

## இரண்டாவது
# கௌரி காண்டம்

## 1. ஆலோசனைப் படலம்

### காப்பு

மங்கல முனிவர் வாழ்த்தக் கௌரியை மணந்து சுத்தன்,
தங்குல காளும்போது, தாக்கிய கலியை வீழ்த்திப்
பொங்கிய வெற்றி கொண்டு பொலிந்தநற் கதையைச் சொல்லத்
திங்களை யணிந்த சக்தி சிவனருள் புரிக மாதோ !

### சத்தியன் பேச்சு

வையகந் தகழி யாக, மன்னுயிர் இன்ப வாழ்வே
நெய்யதாய்த் தரும நீதி நீண்டுயர் திரிய தாக,
மெய்யர சாட்சி யென்னும் விளக்கொளி துலக்கு கின்ற
செய்யவன்,அமைச்சர்முன்னேசிந்தையைத்தெளியச்சொன்னான்:

மனதுறு சாட்சி யாகக் கடவுளை மதித்து, நாளும்
எனதுறு துணையாய் நீதி யியம்பியென் அரசபாரம்,
இனிதுறச் செய்யும் செஞ்சொற் செல்வர்காள், எனது மைந்தன்
புனிதனுக் கரசை யீந்தோர் புதுவினை புரிய வேட்டேன்...

உலகுடை நிலையும், இந்த உடலுடை நிலையும், எங்குங்
கலகமும் பிரிவுந் தூண்டுங் கலிநகர் நிலையும் கண்டேன் ;
இலகுயர் மைந்தன் ஆட்சி யேந்திடுந் திறமுங் கண்டேன் ;
நலமுயர் பணியொன் றுற்ற நாடினேன், வாடி னேனே !

புண்ணுறு பிறவியும், போரும் போட்டியும்,
எண்ணுறு கவலையும் எழுந்து கூத்திடும்
*நுண்ணிய தடத்தினை நுனித்து நோக்கினேன்.
மண்ணுல காண்டயான், மனத்தை யாள்வனே.

---

*சூக்ஷ்ம சரீரம்

இனச்சமர் வருவதும், இகல்செய் ஆசையால்,
தனச்சமர் வருவதும், தன்ன லத்திஞல்,
சினச்சமர் வருவதுஞ் சிந்தை செய்திடின்,
மனச்சமர் அல்லது மற்றெுன் றில்லையே.

சொல்லெழு போர்களும், சொல்லை விஞ்சிய
வில்லெழு போர்களும், வெடித்து மேலெழும்
புல்லிய பொருமையின் போர்க ளன்றிவே
றில்லையென் றுறுதியாய் இயம்ப லாமரோ ?

வேற்றுமை விளைப்பதும், வினைகெ டுப்பதும்,
ஆற்றலைத் தேய்ப்பதும், அடிமை செய்வதும்,
போற்றிய நன்மையைப் பொருது வீழ்த்தலும்,
கூற்றினுங் கொடுமனக் குற்ற மேகொலாம்.

மனத்தினைத் திருத்தலே வாழு மாந்தரின்
இனத்தினைத் திருத்தலாம் ; இருவி காரமாம்
மனத்தினை வெல்லலே மதியை வெல்வதாம் ;
எனத்தகும் உண்மையை இன்று கண்டனன்....

ஆதலால் சுத்தனுக் கமைந்த கன்னியை,
வேதசம் மதப்படி விவாகஞ் செய்தபின்,
நீதிநன் முறைப்படி நிருப னுக்கியே
மேதினிக் கருட்பணி மேவ வேண்டினேன். 40

மறவழி கலியனை மடக்க வேண்டிய
திறமுள சேனையுஞ் சித்த மாக்கினேன்.
அறிவழி மாந்தரின் அகந்தி ருந்தவே,
அறவழி நலஞ்செயும் ஆர்வ மோங்கினேன்.

சீர்பெறுஞ் சத்திய சீலர் தம்முடன்
ஊர்தொறும் ஊர்தொறும், உரை நடத்தியும்,
கார்மழை யெனப்பொதுக் கடமை காத்துமே,
பார்மனந் திருத்திடிற் பயனுண் டாமரோ !

குடிநலம் ஓங்கிடக் கொற்றம் ஓங்கிடப்
படிநலம் ஓங்கிடப் பரிதி யோங்கிடுங்
கொடிநலம் ஓங்கிடக் கோன்மை யோங்கவே,
துடிமனந் தூய்மைகொள் சூழ்ச்சி செய்வனுல்...

புறமுள பகைவரைப் புறங்கண் டென்;மகன்
அறமுயர் அரியணை யமர்க சித்தியில் ;
மறவினை தூண்டிடும் மனப் பகைவரைத்
திறமுடன் வென்றிடுந் தொண்டு செய்வனுல்.

பேரிடர் செய்திடும் பேயர் சூழ்ச்சியால்,
சீரிய தருமங்கள் சிதைந்த தீமையை,
ஓர்கணந் தாங்கிலேன் ; உரைத்த உண்மையைக்
காரிய மாக்கிடக் கருத்தைச் சொன்மினே !

சித்திமான்

என்றலும் சித்திமான் இறைஞ்சி யோதுவான்;
மன்றலைச் செய்துநன் மகனை ஆளென்றே
சென்றிட லின்றியிச் சித்தி மாநகர்
நின்றுன தருட்பணி நிறையச் செய்யலாம்.

துதிமிகு முனிவருந் துதிசெய் தூயவன்,
மதிமிகு புலவரு மதிக்குங் கேள்வியான் ;
நதியென மழையென நன்மை செய்குவான்,
அதிசயப் புதல்வனுன் அன்பிற் பூத்தனன்.

எக்குல மக்களும் இனிய சுத்தனால்
மிக்கவு நலமென விரும்பி நிற்கின்றார்.
தக்கவன், உன்குலத் தருமந் தாங்கிடப்
பக்குவ மானவன் பழுதில் வீரனே.

சொன்னன சொன்னன தொண்டிற் காட்டுவான்
மன்னுயிர் தன்னுயிர் என்னு மாண்பினான் ;
பொன்னினு மாசறு பொலன்கொள் சிந்தையான்
புன்னகை போதுமிப் பூவை வெல்லவே.

மந்திரிகள்

சித்தி மானிவை செப்பி யமர்ந்ததும்,
புத்தி மான்கள், புலவர், அமைச்சர்கள்,
சத்திமான் பலவான், சயவான் என்றே
சுத்தன் மெய்ப்புகழ் சொல்லி மகிழ்ந்தனர்.

உறுதி யான மனமுடல் உள்ளவன் ;
உறுதி யான உரைசொலிச் செய்பவன்,
உறுதி யான உளத்தன் ; அறிவினால்
உறுதி யாக வுலகினைக் காப்பவன்.

நடை சிறந்தவன், ஞானஞ் சிறந்தவன் ;
கொடை சிறந்தவன் கொள்கை சிறந்தவன்,
படை சிறந்தவன், பாரிற் சிறந்தவன்,
அடைப வர்க்கப யந்தரும் ஆண்டகை !

முதிய உள்ளறி வோடு, முன்னேறிடும்
புதிய நற்கலை போற்றிடும் வித்தகன் ;
மதிமி குந்தநின் மைந்தனை எத்தனை
துதிசெய் தாலு மிகையெனத் தோன்றுமோ ?

மருளு மாந்தர் மனத்துயர்க் காதியாம்
இருளைப் போக்கும் இரவியைப் போன்றவன்,
கருணை வள்ளல் கருத்திற் கினியவன்
அருண ஜோதி யழகன் குழகனே.

எமதி யாமென் றெழுந்திடர் செய்திடும்
சமய, சாதி, சடங்குக ளின்றியே,
அமையும் அன்பை அகத்தில் விளக்கிடும்
சமர சச்சுடர் சத்திய புத்திரன்.

பாட்டுங் கூத்தும் பரதமும் சிற்பமும்,
தீட்டும் ஓவிய மும்சிறப் பாகவே
நாட்டுக் கின்னிய நற்கவிச் செல்வமும்,
ஏட்டுச் செல்வத்தோ டெய்திச் சிறந்தவன்.

சினம சூயை, செருக்கு, பொறுமைகள்
கனவி லும்கரு தாத கருத்தினன் ;
மன மொழி செயல் மாசறக் காப்பவன்
புனிதன் புண்ணியன், பூரணச் சித்தனே.

தரும தேவதை போலத் தயையுளான்,
கரும யோகி, கடவுள் செயலெனும்
அருமை யுள்ளமோ டன்பின் பணிபுரி
திருவி னன்அச் சுதந்தர தீரனே.

துன்புற் றுர்படுந் துன்பந் துடைப்பவன்,
இன்புற் றுருடன் இன்புறு நெஞ்சினன்,
அன்புற் றுருடன் அன்புற் றிருப்பவன்,
உன்பு தல்வன் உலகி லிணையிலான்.

கண்ணினும் அரிய மைந்தன் பெருமையைக் கற்ற நல்லார்,
எண்ணிய படியே யிவ்வா றியம்பிடக் கேட்ட தந்தை,
தண்முகி லிசையைக் கேட்டுத் தாவிடு மயிலே போன்றுன்
உண்மையே பேசி னுரென் றுள்ளுற வுவகை கொண்டான்

தனயனைப் புகழ்ந்ததெல்லாந் தந்தைக்கும் பொருந்துமென்றே
அனைவரும் கூறி மேலே ஆவன பேசிப், பின்பு
மனைவியைத் தேர்ந்து நம்பி மணவினை முடிந்தே, பட்டம்-
புனைவினை ; பின்பு, காலப் போக்கினை யறிவோ மென்றுர்

சத்தியன்

பாண்டியன் வங்கன் அங்கன் பார்த்திபர் பலரும் வந்து
வேண்டிநிற் கின்றார் தத்தம் விருப்பங்கள் கூறி நாளும்;
காண்டகு திருவினுரைக் காண்கிலான் சுத்தன் ; இங்கே
ஈண்டிய முனிவர் கூட்டம் இனிதெனப் போற்று கின்றான்.

ஞானியாய்ப் பேசுகின்றான், ஞானியாய்க் காணு கின்றான் ;
ஞானியர் கூட்டமன்றி, ஞாலத்தி னுறவைப் பேணான்.
ஏனெனக் கேட்டால், இன்பம் இதுவென்றுள் ளடங்கிக்கற்ற
மோனமே காட்டு கின்றான்—எனக்கென முளைத்த மைந்தன்.

தெள்ளத்தன் னறிவு ணர்ந்த தெய்வமாப் புதல்வன், காமக்
கள்ளத்தைக் கடிந்த தீரன், கடுந்தவ முனிவர் நேயன்,
உள்ளத்தைக் கடவுட் கீந்தான், உயர்வரைத் தோளே, சேனை
வெள்ளத்தாற் கலியை வீழ்த்தும் வீரத்திற் கீந்தான் மாதோ !

சூரியன் போன்ற தூய சுடர்மணிப் புதல்வன், மாதர்
மூரல்வாய் முத்தம் வேண்டான் ; மோகமார் மனத்தைப் பற்ற
வாரிச விழிகள் வீசும் வலைகளை அறுத்தெ றிந்தான்.
காரிகை யமைந்திட் டாலுங் கருத்தமைந் திணங்கு வானோ? 140

அன்னவன் மனதிற் கிந்நாள் அமைந்தநல் அன்னம்யாரோ ?
என்னிரு விழிக ளாலே இளவர சவளை ஏற்று
நன்மணம் புரியக் காணு நல்லநாள் எந்த நாளோ ?
பொன்முடி யந்த நாளே புனைந்தவன் ஆளு நாளாம்.

சித்திமான்

இந்தநன் னுளை நீயும் இன்புறக் காண்பாய், மன்னு
சிந்தையேன்? ஆணுண்டாயின்செகத்திலோர்பெண்ணும்உண்டாம்
எந்தமா முனியை நம்பி இந்தநாள் இறைஞ்சு கின்றான்
அந்தமா முனியே உன்றன் ஆசையைத் தீர்த்து வைப்பான்.

பெருமைசால் வீரச் செம்மல் பிறந்தநன் னாளில், ஐய
அருமைசால் வேந்தர் தங்கள் அணியிழை மகளிரோடும்
வருக;நல் லழகை முன்னே வரதனுங் காண்க, கண்கள்
தருகுறிப் பறிந்து, பின்னே தக்கன செய்வ தாமே-

என்றுநல் லமைச்சன் கூறி யமர்ந்ததும் இறைவ னுங்கே,
நன்றுநன் றந்த நல்ல நாளணி விரைந்து செய்தே
ஒன்றுக உலகி லுள்ள திருவெலாம் ஒருங்கே, என்றான்.
மன்றுமவ் வாணை யேற்று, மனமுவந் தெழுந்த தன்றே. 156

# 2. சுத்த ஜயந்திப் படலம்

உள்ளம் பொங்கியே உதயப் பொன் முகம்
வெள்ளிப் புன்னகை வீசி நின்றது ;
புள்ளி னந்திருப் புகழ்ச்சி பாடின ;
கள்ளு குத்தன காவின் பூக்களே.

சீத மேதினி சிலிர்த் தெழுந்தது ;
பூதம் யாவையும் உவகை பூத்தன,
நாத நல்லுயிர் நயந்த வாழ்வெலாம்
காத லாகிய கவிதை யானதே.

அண்ணல் வந்தநாள், அருள் பிறந்தசெங்
கண்ணன் வந்தநாள், கனக மாமணி
வண்ணன் வந்தநாள், வரதன் வந்தநாள்
புண்ணி யந்தரும் புனித நாளிதே.

அழகன் வந்தநாள், அமுதன் வந்தநாள்
விழவு நாளிதே, வெற்றி நாளிதே ;
பழனங் கான்மலை பாலை நெய்தலார்
முழவு கொட்டியே முழங்கு நாளிதே.

வையம் யாவையும் வாழ்வின் மாபயன்
எய்த வேண்டுநல் லின்ப நாளிதே
பொய்யி ருட்பகை பொன்று நாளிதே.
துய்யன் மெய்யொளி துலங்கு நாளிதே.

முல்லை மல்லிகை முளரி செவ்வந்தி
அல்லி, சண்பகம் அரம்பை மாபலா,
வில்வம், பச்சிலை, விளவு, மாதுளை,
புல்லிப் பூமணம் பொங்கும் வானமே.

குழலும் வீணையும், குயிலுங் கிள்ளையும்
முழவும் மங்கல முரசுஞ் சங்கமும்,
அழகி னுடலும், அமுத கீதமும்,
பழகு நல்லிசை பயிலு நாளிதே.

கண்க ளிப்புறுங் காட்சி வேண்டுவோர்,
பண்கள் வேண்டுவோர், பரதம் வேண்டுவோர்
எண்கொ ளாக்கலை யின்பம் வேண்டுவோர்
விண்கொள் சித்தியின் வீதி சேர்மினே...

பல நிறங்களும், பல மணங்களும்,
பல சுவைகளும், பல்லி யங்களும்,
பல கவின்களும் பவனி யின்பமும்,
புலவர் சொற்களும் பொங்கு மெங்குமே.

நவ மணித்திரள் நகை யணித்திரள்,
நவ மணிந்தொளிர் நகர வீதிகள்
சிவ மணிந்திடுந் திருவின் காட்சிகள்,
அவனி வாழ்வினை அழகு செய்தவே.

மன்னர் வந்தனர் மன்னி ளந்திருக்
கன்னி மாரொளி காந்த மின்னென
வன்ன மாமயில் வனமெனப் பசும்
பொன்ன ணித்திரள் பொலிய வந்தனர்.

சாணை யேறிய சாதி மாமணிப்
பூணு லாவிடும் பூங்கொம் பன்னவர்,
நாணு லாவிடும் நயனப் புன்னகை
பூணு மாடவர் பொங்கிப் பூரித்தார்.

முருகி ளந்திரு முகங்கள் பங்கயம் ;
கரும லர்களின் காடு கண்களே ;
உருகு புன்னகை ஒளிரு மல்லிகை ;
பெருகு கார்புகை பேதையார் குழல்.

விடமும் வேலும்போல் விழியின் பார்வையே ;
இடை வருந்தவே ஏந்து பொன்மணிக்
குடங்கள் போன்றன கொங்கை ; வாழுயிர்ப்
படங்கள் போன்றன பாவைக் கூட்டமே.

சிந்தை பொங்கிடச் செய முழக்கியே
முந்து மன்னவன் முதல மைச்சுடன்
சந்தமார் புகழ் சாற்றித் தன்னகர்
வந்த மக்களை வருக வென்றனன்.

அவரவர் நிலைக் கமைந்த மாளிகை ;
அவரவர் சுவைக் கமைந்த நல்லுணு ;
அவரவர் மகிழ் ஆடல் பாடல்கள் ;
அவர்மன மறிந் தரச னீந்தனன்.

வரவு செய்தவர் மனங்கள் இன்புறப்
பரவு மின்னிசைப் பா விருந்துகள் ;
விரவு மந்நகர் விழவு மேவலால்
இரவு மில்லையே பகலு மில்லையே.

பொன்னின் வார்சிலை போன்ற பொற்பினுர்
வன்ன மாமலர் வனத்து லாவினுர் ;
அன்னக் கூட்டம்போல் அருவி யாடினுர் ;
மின்ன லேயென வீடு சேர்ந்தனர்.

மானி னேக்கினுர் மாழை மாமணி
மீனி ராசிபோல் மிளிரச் சூடியே,
வான மாதர்போல் வரிசை யாகவே
ஞானக் கோயிலை நாடி வந்தனர்.

தேர்ந்த நல்லணி திகழ நாற்றிசை,
வேந்தர் வெல்படை வீரர் சூழவே,
சாந்த மந்திரஞ் சார்ந்து மெய்த்தவர்
காந்த சக்தியிற் கலந்தி ருந்தனர்.

சுத்தாலயம்

வச்சி ரம்வயி டூரியம், மாதுளைப் பதுமம்
பச்சை நீலஞ்செம் பவளந்தென் பாண்டிமுத் துடனே,
மெச்சி டுங்குயில் விழியென மிளிர்ந்திடுங் கெம்பும்,
வச்சி ழைத்தமா மணிதரு மந்திரம் இதுவே.

எண்ணில் வேந்தரும், வீரரும், இறைஞ்சிய கோயில்,
புண்ணி யர்தவப் பொலிவுறும் புனிதமாங் கோயில்,
கண்ணிற் கண்மணி யெனவுளங் கலந்துறை கடவுள்,
எண்ணிப் பேரின்ப மெய்திடற் கினியமந் திரமே.

பெயரி னேடுருப் பேதமொன் றின்றியன் பான
உயிரி னுக்குயி ராகிய ஒருபரம் பொருளை,
இயலு மெய்யினில் இயங்கிடும் இறைவனை யடைய
முயலுந் தூயநன் முனிவரர் முத்திவீ டிதுவே.

காவ லற்றிடும் புலன்வழி கட்டிலா தென்றுந்
தாவிச் சாந்தத்தைத் தடுத்திடு மனத்தினைத் தடுக்க,
மேவி யுள்விழித் திருக்கின்ற விமலரி னடுவே
கோவுடன் இளங் குரிசிலுங் கொலுவிருந் தனனே.

சுத்தன்

மன்னர், மாதவர் மந்திரர், மாதர், நன் மக்கள்
முன்னர் ,தூயவன் முழுமுதற் கடவுளை யிறைஞ்சி,
“அன்னை, தந்தையீர், அந்தணீர், ஆருயிர்க் குடிகாள்,
இன்னர் செய்தகும் பணிகளை யியம்புவேன்” என்றுன்.

இறந்த நாளெலாம் இறந்தன ; இனிவரு நாளில்
சிறந்த நற்பணி செய்திடத் திடமனங் கொள்வோம்.
அறந்தெ ளிந்துகொண் டுயிர்களுக் கன்புசெய்திடுவோம்.
பிறந்த நாளினிற் பிறவியின் பெருமையைப் பெறுவோம்.

நன்னி னைவுடன் கூடியே நல்லன புரிமின்
புன்மை சூதுபொ ருமையைப் புரையெனத் தவிர்மின் ;
அன்ன தானங்கள் செய்குமின் ; அருங்கலை வளர்மின் ;
மன்ன ருட்கடர் இறைவனின் வளமையை நினைமின்.

பாரி லேகலி யரக்கர்கள் பாரத தரும
வேரி லேவிட மிட்டனர் ; வேகமாய் அவரைப்
போரி லேபுறங் கண்டிடப் புண்ணிய வீரர்
நேரி லேயணி வகுத்தின்று நின்றிடு வீரே.

ஊர்வ லங்களும், உடலினைப் புகழ்ந்திடும் பேச்சும்
பேர்மு ழக்கமும் விருந்துண்டு பிரிந்திடும் விழவும் ;
ஓர்பயனிலை ; உள்ளத்தினில் ஒருவனை நினைந்து,
பார்நலம் பெறும் பணிகளே பணியெனப் புரிவோம்.

எம்ம தத்திற்குஞ் சம்மத மாகிடும் இயலை ;
நம்ம னத்தினில் உறுதியாய் நாட்டுதற் கேற்ற
நிம்மதி தருந் தோத்திரம் நிகழுக வென்றே
அம்ம காசபை யமர்ந்தனன் அரசிளம் பெருமான். 120

தீதறு சுத்தன் சொன்ன தீஞ்சுவை மொழிகள் கேட்டே
கோதறு முனிவர் நல்ல கொள்கையென் றுவகை பூத்தே
மேதினி வாழத் தூயன் வெற்றிகள் சிறக்க வென்றே
ஆதிமெய்ப் பொருளின் ஜோதி யருளினை வேண்டி னுரே.

அருவுரு வாகி யெங்கும் அருளினல் ஆடல் செய்தே
குருபர னுகி, எம்மைக் கோதறுத் தாளும் வள்ளல்,
ஒருவனை முனிவர் பாட உள்ளுணர்ந் துணர்ந்து சுத்தன்,
பருவுட லுலகுக் கப்பாற் பார்வையை நாட்டி னுனே.

## புனிதர் வேதம்

எங்கிருந் துலகமெல்லாம் உலகுயிர்க் குலங்க ளெல்லாம்,
இங்குவந் திருந்து சென்றே, எதனுளே இறுதி யாமோ...
தங்குமப் பொருளே ஞான தாரக மாகும் ; அன்பு
பொங்குளத் தாலே அந்தப் பொருளினைப் பூசிப் போமால்.

## பொருள் வணக்கம்

ஓமெனப் பெரியார் ஓதிடும் பொருளே,
நாமரூ பாதி நாடகங் கடந்த
மெய்யறி வின்பமாய் விளங்கும் பொருளே,
உய்வழி காட்டும் உயர்பரம் பொருளே,
இருந்த வாறே இயல்பா யிருந்தும்,
பொருந்து சக்தியாற் புரிவினை யூக்கி,
வானாய், வளியாய், வளர்தீ நீர்நிலம்,
தானாய்க் காலந் தருசுட ராகி,
கடலாய்க் காராய், கார்தரு பயிராய்,
உடலாய், உயிராய், உயிர்க்குயி ராகி,
சக்தியாய்ச் சீவனிற் சதாசிவ மாகி
முத்தி யளிக்கு முழுமுத லாகி,
எங்குங் கண்ணாய், எங்குங் காதாய்,
கங்குல் பகலறக் கருணை சுரக்கும்,
அருவாய், உருவாய்க், குருவாய்த் திருவாய்,
அருட்பெருஞ் சோதி ஆண்டவ னாகி,
இதய நடுவே இலிங்கா காரமாய்
உதயச் சுடர்போல் ஒளிரும் பொருளே,
மதியறி விற்கு மறைந்து, முதிர்ந்த
பதியறி வாளர் பார்க்கும் பொருளே,
எவ்வகை மாந்தர் எப்படி வணங்கினும்,
அவ்வகை மாந்தர் அன்பினுக் கேற்ற
பதந்தரும் பொருளே, பரம சுத்த
சுதந்தரப் பொருளே, இதந்தரும் பொருளே,
கலைகள் உரைத்த கற்பனை கடந்த,
நிலையில் விளங்கு நிர்க்குணப் பொருளே,
சிற்பரா சக்தி சின்மயக் கதிரால்
அற்புத வுலகை ஆட்டிடும் அருளே...
தன்னுளே தானாய்த் தற்பர சிவமாய்,
என்னுளே யானாய் எவற்றுளும் அதுவாய்,
இருக்க இருந்தே, இயக்க வியங்கியே,
உரைக்க உரைத்தே, உரைகடந் துள்ளே
உணர உணர்ந்தே, உணரன் பாலே
புணரப் புணர்ந்தே, போத சொரூபமாய்,
அங்கிங் கெனாமல் எங்கே யிருப்பினும்,
இங்கெனைப் பிரியா திருக்கும் பொருளே,
வேண்டு மென்னும் விருப்பமு மின்றி,

வேண்டா மென்னும் வெறுப்பு மின்றிப்
பரிதி போலே பார்ப்பா னாகிச்
சுருதி யாகத் துலங்கு மந் திரமாய்,
காற்றைப் போலே கட்டிலாத் துறவாய்,
கூற்று நடுங்குங் குண்டலிக் கனலாய்,
கற்பன கற்றுக் கருத்துறக் கருதிச்
சொற்பனங் கடந்த சூட்சுமந் தேடி,
உடலை மடக்கிக் குடலைக் குலுக்கி,
அடயோ கங்கள் அயரா தியற்றி,
மூச்சைக் கட்டிப் பேச்சைக் கட்டி,
ஆச்சிய தாரைபோல் ஆராய்ந் துள்ளே,
சிந்தை நிலைக்கத் தியானஞ் செய்து,
மந்திரஞ் செபித்து, மனத்தை யடக்கி,
ஆசையா ணவங்களின் அல்ல லறுத்தே,
பேசாச் சமாதியிற் பேரின்ப முண்ணும்,
அருளறி வாளர், அகநிலை கடந்தே
பொருளிது வென்னும் பூரண ஜோதியை—
ஒருமை யுடனே உரைகடந் துணரும்
பெருமையே பிறப்பின் பெரும்பய னாகும்...
அத்தகைப் பெருமை யடைந்தது வான
சுத்த யோக சக்திமான் வாழ்க !
முக்குணப் போர்செய் முன்னிலை யுலகிற்
பக்குவ மாகச் சிக்கற வாழ்ந்தே,
செய்வன தேர்ந்து, திருவரு ளாலே
பெய்மழை போன்றே செய்பவன் வாழ்கவே !
கதிரவன் வரவே, காரிருள் அகலும்,
பதுமம் விரியும், பனித்திரள் கரையும்,
சிறகை யடித்துப் பறவைகள் பாடும்,
கறவைகள் கறக்கும் ; கண்விழித் தெழுந்தே,
கரும வுலகம் கதிபெற நடக்கும்,
இருவினைப் பயன்கள் எண்ணில கிளரும்...
சத்தமில் லாத சாட்சியா யுலகைச்
சித்தரிக் கின்ற செங்கதிர் போன்றே,
சுற்றுல கத்தின் சூட்சும மறிந்தே,
பற்றறு சாட்சியாய்ப் பணித்திறம் பயின்று,
சாந்தக் கடலும், சக்திக் கதிரும்,
காந்தக் கனலும், ககனமின் சாரமும்,
கார்மழை போலக் கருணையுங் கொண்டு,
பார்நல மோங்கப் பலநலம் ரியும்,

பொன்னூர் மேனிப் புனிதன் வாழ்கவே !
மன்னறங் காத்து மக்களைப் பேணும்,
வேந்தன் வாழ்க ! வெற்றி வேற்கை,
ஏந்துஞ் செங்கோல் இறைவன் வாழ்கவே !
நினைத்த நலத்தை நிறைவேற் றிடவே,
வினைத்திட் பமுடன் மனத்திட் பமுற
உள்ளன் புடனே ஒற்றுமைத் திறனும்,
ஒள்ளிய நடையும் தெள்ளிய மதியும்
ஆத்தும சக்தியும், அஞ்சா வீரமும்,
பூத்த மலரெனப் புன்னகை யுடனே,
இடர்கள் எதிரே எத்தனை வரினும்,
திடவை ராக்கியத் துடனே தாங்கும்,
சகன சக்தியும், சத்திய வீறும்,
இகலை நடுக்கும் தகவுடை யாற்றலும்,
கலிப்படை கலங்கப் புலிப்படை போலச்
சலிப்படை யாத சமர்செய் வீரமும்,
அரக்கக் களைகளை அறுத்து, நலங்களே
சிறக்க நாட்டுந் தீரமுங் கொண்டான்.
புண்ணிய பூமி விண்ணர சடைய,
நண்ணிய பெருமான், நரரை நாரணர்
ஆக்கிட வல்லான், அதர்மப் பதர்களைப்
போக்கிட வல்ல புனிதன் வாழ்கவே !
சுத்த மூர்த்தியின் சக்திக் கதிராய்ச்
சித்தியி லுதித்த செங்கதிர் வாழ்கவே !...

தூயவர் வேத மோதித் தூபதீ பங்கள் காட்டி,
ஏயநற் கடன்முறைகள் இனிதுறச் செய்து போற்றி,
நாயக மைந்த னுக்கு நலம்பல வேண்டி னூர்கள்,
ஆயது முடிந்த பின்னர் அனைவரும் விருந்துண்டாரே....

வசந்த மாளிகைக் காட்சி

வாசநாண் மலரில் ஊறி வண்டுணுந் தேனைப் போலும்,
மாசிலாத் தேவர் உண்டு மகிழ்ந்திடும் அமுதம் போலும்,
ஈசனைக் கலந்த நெஞ்சில் இனிக்கும்பே ரின்பம் போலும்,
போசன மிருந்த தந்தப் புண்ணியன் பிறந்த நாளே !

நாச்சுவை யருந்திப் பன்னீர் நனைத்தசந் தனங்கள் பூசிப்
பூச்செறி மாலை சூடிப் புனிதனைப் போற்றி செய்து,
பேச்சுகள் பலநிகழ்த்திப் பெருந்தகைப் புலவர் தந்த
பாச்சுவை யருந்தி மக்கள் பரவச மடைந்தார் மாதோ !

பல்லிசை முழங்க வேத பாரகர் ஆசி கூற,
மெல்லிளங் கன்னி யர்தம் விரலொடு குரலுங் கூட்டி,
நல்லிசை வழங்க, மன்னர் ஞாலத்தில் அரிய தாகச்
சொல்லிடும் பொருள்கள் ஏந்திச் சூழ்ந்திடச்சுத்தன் வந்தான்.

அலைவளர் மணிக ளெல்லாம் அடுக்கடுக் காக வைத்துக்
கலைவளர் அழகை யெல்லாங் காட்டிடும் பளிங்கு வீட்டில்,
சிலைவளர் தோளி னானைச் சேர்த்தரி யணையி லேற்றி,
மலைவளர் அருவி போன்று மங்கல வாழ்த்தொ லித்தார்...

தேன ளாவிய தென்றலி லே, புகழ்
வான ளாவிப் பறக்கு மணிக்கொடி
தான ளாவிய தாரணி மாளிகை
கோன ளாவிக் கொலுவி லிருந்தனன்.

மந்தி ரிகள் மருங்கி லமர்ந்திட,
வந்த வேந்தர் மணித்தவி சேற்றிட,
சுந்த ரிகள் சுடர்மலர்க் கொம்புபோல்
தந்த மாசனந் தாங்கி யிருந்தனர்.

குழலி சைத்தன கோடிக் குயிலென ;
முழவொ லித்தன முகிலின் கணமென ;
அழகின் ஆடலும் பாடலும் ஓல்எனும்
விழவு மாளிகை விண்ணக ரொத்ததே.

நகர ஜோதி நடமிடும் அச்சபை
சிகர ஜோதி யெனத்திகழ் செம்மலும்,
சகல நாதமுந் தாங்கி நடத்திடும்,
அகரம் போலங் கமர்ந்தனன் சாந்தமாய்.

வேக மான விகாரங்கள் சூழினும்
ஏகமான இதயத்தி லூன்றியே,
சோக மோகச் சுழலினிற் சிக்கிடாத்
தேகி போலுமத் தீரன் இருந்தனன்.

மண்ணின் வாழ்வினை மங்கலஞ் செய்திடும்,
பண்மொ ழியினர், பச்சை மயிலனார்,
தண்ம லர்க்குழல் தாங்கு மதியனார்,
கண்ம லர்கள் ஒருவனைக் கண்டவே

பரிசு வழங்கல்

ஒருதனிக் காதலில் உள்ளம் பற்றியே
இருபது நூறுநல் லிளங் கயல்விழி,
அருணனைப் பார்த்திடும் அம்பு யங்கள்போல்,
முருகனைக் கண்டுள மோக மீறின.

தனப்பொறை விம்மிடச் சஞ்ச லித்திடும்
மனப்பொறை விம்மிட, மலர்க்கொம் பன்னவர்,
எனக்கிவன் எனக்கென இருகண் ணம்பினைக்
குனித்திரு புருவமுங் குறித்து வீசினர்.

மன்னவன் மன்னிள மைந்தன் வாழ்கெனுஅ
முன்னர்தம் பரிசினை முறையின் வைத்ததும்,
கன்னியர் நாணுடன் கலந்த பொன்னொளிர்
புன்னகையுடன் மணிப் பூவுந் தந்தனர்.

அமரரின் அமுதுடன் ஆசைத் தீயுடன்
கமலமும் குமுதமுங் கயலுங் கூடிய
விமரிசை மாதரின் விழிகள், சுத்தனின்
அமைதியை யறிந்ததும், அஞ்சிச் சென்றவே.

திருமிகு கன்னியர் சேனை, கோமகன்
தருமிகு பரிசினைத் தாங்கிச் செல்வதை
அருகிருந் தமைச்சுடன் அரசுங் கண்டுளங்
கருகினன், காதலின் குறிப்பைக் காணிலான்.

பொறிபுல னடக்கிய புலவர் கண்ணையும்,
பறிகணை வேல்விழி படைத்த பாவையர்
முறைமுறை முகமுகம் பார்த்து முன்னின்றும்,
அறிகிலர் இவன்மனம் ஆசை தூண்டவே !

காதலர் கண்கள்

இறுதியில் வந்த கன்னி ஏகலும், மன்னன் ஏங்கி,
உறுதியை யிழந்த போது, புதியநல் உயிரைப் போல,
முறுவலே முகமதாக, மூலத் தீச் சுடரைப் போன்ற
மறுவறு சாந்தன் பேணு மான்விழி யெதிரே நின்றாள்.

பெண்ணொடு பெண்ணளாவிப் பெருமைகள் பேசும் சுத்தன்
எண்ணமும் விழியும் உள்ளே யிருந்தனன். கௌரி வந்தாள்.
திண்ணென மின்சா ரத்தீ தெறிப்பது போலு ணர்ந்தான்,
கண்ணொடு கண்ண ளாவிக் கருத்துறக் கலந்த தம்மா !

அவனையே கண்ட கௌரி, அவனையே யெங்குங் கண்டாள்;
அவளையே கண்ட சுத்தன், அவளையே யெங்குங் கண்டான்;
இவனுக்கே அவள் பிறந்தாள் அவளுக்கே இவன் பிறந்தான்,
சிவனுக்கே உமை பிறந்தாள் என்றனன் சித்தி மானே !

பருவுட லிரண்டி னுள்ளே பற்றிய வுயிரொன் றாகி,
உருகிடுங் காதலர் தம் உளத்தினை உணர்ந்து மன்னன்
பருகிடும் ஆர்வத்தோடு பங்கய விழி பனிப்ப
ஒருநொடி பார்த்தான், "இந்த உலகினி உய்ந்த" தென்றான்.

கதிரிடுங் கமலக் கண்கள், கணையெனக் கூர்ந்த பார்வை,
மதிவளர் வதனம், செவ்வாய், மழையென மதர்த்த கூந்தல் ;
முதியமுத் துருளும் வேய்த்தோள், மோகனக் கனவு தோற்றும்
புதியமின் னழகு வீசும் பூங்கொடி யாங்கே சென்றாள்.

எழுந்தனன் மன்னவன் இசை முழங்கவே,
தொழுந்திரு முனிவரர் தூவ நன்மலர்,
எழுந்தனன் சுத்தனும் ஏறு போலவே ;
ஒழுங்குறச் சபையினர் ஊர்ந்து சென்றனர்.

நயம்பெறு செவிவிழி நாவி ருந்துடன்,
சயசய சயவெனத் தழைத்த பாட்டுடன்,
வியன்பெற நடந்தது விமலன் வந்தநாள்
பயனினிப் பழுத்திடும் பகலைப் பார்ப்பமால்.

# 3. கௌரி குலப் படலம்

## சத்தியன்

நகைவிரி நாணச் செவ்வாய், நாட்டிய கடைக்கண் பார்வை,
முகைவிரி காதல் காட்ட, முனிமகள் சுத்த னுக்குத்
தகையுறு மனைவியாகத் தக்கவள் என்று தேர்ந்து
வகையுற மன்னர் மன்னன் இந்திரை மகிழச் சொன்னான் :—

"மங்கலச் செய்தி கேளாய்..மங்கையர் மணியே, அன்று
சங்கரன் மணந்து கொண்ட தவத்திரு மகளே போன்று,
நங்குல மைந்த னுக்கு நற்றவக் கௌரி வந்தாள்,
பொங்கிய காதல் உள்ளம் பொருந்திய பொலிவைக் கண்டேன்.

மன்னவர் வந்து, தங்கண் மணியென வளர்த்த நல்ல
கன்னியர் தமையே சுத்தன் கடிமணம் புரிக என்றார்..
என்னினும் அவரைப் பாரான். இதயத்தில் அந்தக் கௌரி
தன்னையே நினைந்தாள் சித்தி மரபினித் தழைக்க வந்தோன் !

போதரி விழிகள் கூடிப் புதுமனம் பொருந்தி யுள்ளே
ஓதரும் உவகை தூண்டி, இருவரும் ஒருவ ராகி,
ஆதியிற் பிரிந்தார் மீண்டும் அணியுறக் கலந்ததே போல்,
காதலிற் கலந்தா ருக்கே இல்லறங் களிப்ப தாமே.

தக்கவர் தம்மைக் கொண்டுந் தகுமுறை சோதித் தன்னோர்
பக்குவக் காத லெல்லாம் பளிச்செனக் கண்டேன் ; இன்று
மிக்கவுன் மனம றிந்தால், கௌரிக்கு நமது வீடே
புக்ககம் ஆகும்" என்றான் புன்னகை பூத்த வாயான்.

### இந்திரை

தன்னுணர் முனியை நாளுந் தரிசனஞ் செய்யும் போது,
மின்னுயிர் வல்லி தன்னை மெத்தநான் அறிந்த துண்மை ;
என்னினும் அவளைப் பற்றி முனிவன்பால் இனிது கேட்ட
பின்னரே முடிவு செய்யப் பெறுவது நலம தாமே..

மனத்திற்குப் பிடித்த போதே மணவினை சிறப்பாம் ; என்னின்
இனத்திற்கும் பிடித்து விட்டால் இன்னமுஞ் சிறப்ப தாமே.
சனத்திற்கும், அமைச்ச ருக்கும் சார்ந்தசிற் றரச ருக்கும்,
அனைத்திற்கும் இனிதாம்' என்றாள் அரசனுக்கறிவு போன்றாள்.

### சத்தியன் சாந்த முனிவரை அழைத்து வருதல்

நலமது வென்று வேந்தன் ஞானவா னந்த னான,
குலகுரு வுடனே சென்று சாந்தனைக் கூட்டி வந்து,
நிலவுயர் பீட மேற்றி, நிகழ்ந்தவை யனைத்துஞ் சொல்லி,
இலகுறு கௌரி காதை யியம்பிட வேண்டி னானே..

### சாந்த முனிவன் சொன்ன, கௌரி சரித்திரம்

நும்பெருங் கருத்தினை நுவலு முன்னரே,
அன்புள காதலர் ஆர்வம் ஓர்ந்தனன்,
என்பெருஞ் செல்வியின் இயல்பைக் கேட்டபின்
இன்பமே யெய்திடும். எண்ணங் கூடுமே.

### திருமாவளவன்

அமிழ்தினும் இனிய தமிழ்மொழி வளரும்
தென்னாட் டினிலே முன்னாட் செழித்த
சேர சோழர் செம்பியர் மூவரும்
ஓர்குல மாகவே உலகினை யாண்டார்.
அத்தகை வேந்தருள் இத்தலம் புகழும்
திருமா வளவனின் சீர்த்திகள் கேளீர் :
இளஞ்சேட் சென்னி யீன்ற கரிகால்
வளவன் இளமையில் வஞ்சப் பகைவரின்
கூற்றிற் கொடிய கொலைவாள் துரத்த
மாறுவே டத்துடன் மறைந்து மறைந்தே
ஊர்தொறும் சுற்றி உலகையும் அறிந்தே,
வீறு பெருக்கி, வியன்பெரும் படையும்
சேர்த்துக் கருவூர் சேமமா யிருந்தான்.
மன்னனைத் தேர்கென மக்கள் விடுத்த
உறையூர் யானை உற்றவன் கழுத்தில்
மாலை சூட்டி வணங்கிடக் கண்டோர்,

இவனே கோமான் என்று மகிழ்ந்து,
பொன்முடி சூட்ட நன்னகர் கொணர்ந்தார்.
புல்லிய வஞ்சப் பொருமைப் பகைவர்
ஒல்லெனத் தாக்கி ஒழியெனக் கடுஞ்சிறை
இட்டுத் தீயிட் டெரித்திடத் துணிந்தார்.....
அஞ்சா வளவன் அனற்சிறை தப்பி,
பிடர்த்தலை என்னும் பீடுடை மாமனல்
படைத்திறல் கூட்டிப் பகைவரை ஒருங்கே
போரில் வீழ்த்திப் புலிக்கொடி நாட்டி,
ஊரெலாம் போற்ற உறையூர் ஆண்டான்.
அறிவுந் திருவும் அன்பும் வீரமும்
வழுவா நெறியும் வாய்மையுங் கொண்டு
மன்னுயிர்க் குடலாய் மன்னற வுயிராய்,
* ஆயமுங் † குழுவும் அரசரும் சூழத்
தேயம் புரந்தான் சீரிய கோவே.
கடற்படை நிலப்படை கணக்கறக் கூட்டி,
அடக்கிப் பகைவரை அரசை விரித்தான்.
செருசெரு வென்றே தினவெடுத் தலையும்
பொருமத மறவப் புலிகளைக் கொண்டே,
வாளுறு சேரனை, வலிமிகு குறும்பரை,
வேளிரைக் கோயில்—வெண்ணியில் வீழ்த்திச்
செந்தீப் பறக்கும் சினவா ளுடனே
நாகரை வடுகரை நானில வேந்தரை
வேகமா யடக்கி, வீரத் திருவுறத்
தென்னு டெல்லாந் தன்னு டாக்கிய
பின்னே வடக்கே பெரும்படை நடாத்தி,
வச்சிரம் அவந்தி மகதம் வணக்கி,
உச்சப் பனிமலை உயரச் சென்றே
புலிக்கொடி தன்னைப் பொலிவுறத் தீட்டி
நலிவிலாத் தமிழிசை நாட்டினன் இவனே.
வங்கப் போரிற் சிங்களம் வென்றான்
பொங்கும் பொருளாற் பொதுநலஞ் செய்தான்.
பழம்பதி புகாரிற் பட்டினங் கட்டி
வளம்பெறக் கப்பல் வாணிகஞ் செய்தான்.

---

* எண்பெரும் ஆயம்: *அமைச்சர், கருமாதிகாரர், சுற்றம், கடை காப்பாளர், நகர மக்கள், படைத் தலைவர், குதிரை வீரர், யானை வீரர்,*

† ஐம்பெருங் குழு : *அமைச்சர், புரோகிதர், படைத்தலைவர், தூதர், சாரணர்.*

காவிரி யணையாற் பூவளஞ் செய்தான்
நாவாய் நடத்தி நன்னிதி குவித்தான்.
சோனகர் யவனர் சீனகர் ஆனோர்
கோனகர் வணிகர் கொழுத்திடச் செழித்தார்.
கழகங் கண்டு கல்வியை வளர்த்துப்
பழகிய புலவர் பாடலும் பெற்றான்.
உருத்திரங் கண்ணனார் உரைத்த * பாலையும்
திருத்தகு கண்ணியார் செப்பிய † படையும்
புவிக்கிவன் புகழைப் புகலுவ தாமே.
கவிக்கினி தாகிய கரிகால் வளவன்
சொல்லறத் துடனே வில்லறந் தாங்கி,
இல்லறந் தனிலும் இன்ப மிகுந்தான்.
புதல்வர் நால்வர் புதல்வி யொருத்தி
மதிமிகப் பொலியத் துதிமிக வாழ்ந்தார்.

செங்குட்டுவன்

அருமைப் புதல்வி ஆதி மந்தியும்
பெருங்கலைச் செல்வி, விரும்பிய காதலால்,
பாட்டும் பரதமும் பயின்ற சேரன்
ஆட்ட னத்தியின் அரசியா னாளே.
சேர சோழர் சேர்ந்துவாழ்ந் தாரே.
தமிழர் சிங்கம் இமய வரம்பன்
நற்சோணை யுடனே நல்லறந் தாங்கி,
இருபெரு மக்களை ஈன்றான்.. ஒருவன்
செருநர் அஞ்சும் செங்குட் டுவனே.
இளந்திரு மைந்தன் இளங்கோ முனிவன்,
நலங்கெழு சிலப்பதி கார நவின்றோன்.
புவியர சவனே ; கவியர சிவனே.
கவியர சிசைத்த கதையினைக் கேளீர் :

கண்ணகி காதை

சீர்பெறும் புகாரிற் செல்வக் கோவலன்,
பார்மிகப் போற்றும் பத்தினி கண்ணகி
தன்னுடன் இல்லறந் தாங்குநன் னாளில்,
பண்ணுடன் பரதமும் பயில்விலை மாதாம்
மாதவி யழகில் மயங்கி, மணந்த
காதலி தன்னைக் கண்பா ராமல்,
சிற்றின் பத்திற் சிந்தை யிழந்தே,
பொற்றிரள் போக்கிப் புலனழிந் தானே..

* பட்டினப் பாலை
† முடத் தாமக் கண்ணியாரின் பொருநராற்றுப் படை.

களவுறு காமக் கணிகையின் வஞ்ச
உளமறிந் தவனை உதறித் தள்ளிப்
பொற்புறு மனையிற் புகுந்து கோவலன்
அற்புதக் கற்பின் அணங்கைப் புகழ்ந்து
“ மாசறு திருவே, வேசை மயக்கால்,
ஏசுறு நடையால் எல்லாம் இழந்தேன்...
வறுமை யுற்றேன். மதுரைக் கேகிச்
சிறுமை தீரச் செல்வ வாணிகம்
புரியக் கருதினேன் தருக நல்விடை,
அரிய கற்பின் அரசி ” என்றான்..
கண்ணகி வந்து கணவனை வணங்கி,
“ எண்ணிய கருமம் இயற்றிடத் துணையாய்
வருகிறேன் யானும் மணிப்பொற் சிலம்பைத்
தருகிறேன் விற்றுத் தழைப்போ ” மென்றாள்.
“ அதுசரி ” யென்றே ஆங்கவர் நடந்து,
மதுரைக் கேகி, மாதரி குடிலில்
தேவி யிருக்கவோர் சிலம்பை விற்க,
மேவினான் மதுரை வீதியிற் கோவலன்.
சிலம்பைக் கண்டோர் திருட்டுத் தட்டான்,
நிலம்புகழ் செழியன் இலம்புகுந் “ தரசே,
பாண்டிமா தேவியின் பரல்மிகு சிலம்பை
வேண்டித் திருடி விற்க வந்துள,
கள்ளனைப் பிடித்தேன் கையுங் களவுமாய்;
உள்ளமெப் படியோ உரைத்தது செய்வேன்...”
என்னலும் பாண்டியன் ஏதோ நினைப்பாய்க்
“ கொன்று கள்வனைக் கொணர்க சிலம்” பெனக்
காவலர் பணிந்தார்; கோவலன் மாண்டான் !
தேவிகண் ணகியும் சென்றாள் கொலைக்களம்,
கண்ணீ ருகுத்தாள்; காய்சினம் பொங்க
மண்ணாள் பாண்டியன் மனையிற் புகுந்தாள்.
உண்மை யுரைத்தாள் ; உள்ளவோர் சிலம்பைக்
கிண்ணென வுடைத்தாள் கிளரும் அரதனப்
பரலையும் பாண்டிமா பத்தினி சிலம்புள்
தரள மிருப்பதுந் தனித்தனி காட்டி,
“ காணாய் ! எனது கணவன் கள்வனா ?
வீணாய்க் கொன்றாய் மாணா வேந்தே ”
என்றுகர்ச் சித்தாள் ; மன்றம் அதிரவே !..
ஒன்றுந் தோன்றா நின்ற பாண்டியன்
“ யானோ வேந்தன் ! யானே கள்வன் !..
ஏனோ கொன்றேன் ஏழையை ” என்று

தரையில் உருண்டு தன்னுயிர் நீத்தான்.
அரைநொடி தன்னில் அரசியும் இறந்தாள்.
கற்புக் கனலைக் கண்ணகி ஏவி,
நற்பதி மதுரையை நாச மாக்கி,
வீரா வேசமாய் விரைந்து நடந்தே,
சேரநா டேகித் திருச்செங் குன்றில்
பத்தினிக் குரிய முத்திபெற் றனளே..
இத்திருக் கதையை இளங்கோ வடிகள்
சிலப்பதி காரச் செய்யுளாய்க் கோத்தே
உலப்பறு காலம் ஒளிரவைத் தாரே.
சேரன் இமாலயஞ் சென்றுகற் கொணர்ந்து,
வீரபத் தினிக்கு வியன்பெறுங் கோயில்
கட்டிச் சிலையை நட்டு வணங்கினன்.
எட்டுத் திசையும் இசைமுழங் கிடவே !
மாதவி கேட்டாள் மகளுடன் துறந்தாள்—
காதலைப் பகவன் கழலடி வைத்தே...

இளஞ்செழியன்

இசைநெடுஞ் செழியன் இறந்ததும் அவன்மகன்
திசையெலாம் புகழும் சேயிளஞ் செழியன்
அரியணை வகித்தான் ; அவன்பின் வந்தவன்
எரிசினப் படையுடன் எதிர்த்த பகைவரைத்
தலையா லங்கான் சமரில் அழித்தே,
கலைபெறு புலவர் கவியிசைத் தோதவே
அடும்பகை முடிந்ததும் அமைதியை நாட்டி
நெடும் புகழ் செழியனாய் நீடு வாழ்ந் தானே !
சேர சோழச் செழியர் சேர்ந்தே
வீரத் தமிழகம் விரைவுட னமைத்தார்.
திருமணக் கலப்பால் ஒருகுல வுணர்ச்சி
பெருகிட நாளும் பீடுற வாழ்ந்தார்.
சேர சோழத் திருமர புதித்த
நாரியை மணந்தான் வீரபாண் டியனே..

மாணிக்கவாசகர்

அவன்வழி வந்தார் அளப்பறு வீரர்.
அவருள் வரகுணன் ஆற்றலிற் பெரியான்..

இவனே
வாதவூ ரடிகளை மந்திரி யாக்கிப்
போதிய நிதியுடன் போர்ப்பரி வாங்கத்

தொண்டிக் கனுப்பினுன் ; பண்டைப் பயனுல்,
தொண்டிபோம் வழியே, தூயமெய்க் குருவை
மந்திரி யடைந்து மணிவா சராய்ச்
சிந்தனை யெல்லாம் சிவமய மாகித்
துறவறம் பூண்டு, தொகையறு நிதியை
அறவினை யுடனே ஆலயப் பணியும்,
செய்து மன்னன் சினத்திற் காளாய்
வெய்துய ரடைந்ததும், வெஞ்சிறைப் பட்டதும்,
நரிபரி யாகியும், பரிநரி யாகியும்,
கரையுடை வைகை கதங்கொண் டூரை
உண்ணப் புகுந்ததும், ஊரார் அனைவரும்
மண்ணைக் கொட்டி மன்னவன் ஆணையால்
கரைகட் டியதும் ; அரனருள் ஆங்கே
விரைந்தொரு கூலியாய் விளையா டியதும்
வன்னிபிட் டிற்கு மண்சுமந் தவனே
தென்னன் பிரம்பால் தீட்டப் பெற்றதும்,
அந்தப் பிரம்படி அரசன்மேற் பட்டதும்,
பிந்தக் கூலி பிடிமண் போட்டு
மறைந்ததும், வைகை வடிந்ததும் கண்டே
இறைவன் செயலை இனிதுணர் பாண்டியன்
சிவனடி யாரைச் சிறைவிடு வித்ததும்,
அவனையே பாடி அருள்மணி வாசகர்,
சிதம்பர சோதியைத் திருவாச கப்பொருள்
இஃதெனக் காட்டி இறையொளி கலந்ததும்..
தெரிந்த கதையே..திருவா சகரின்
அறிந்த சீடன் அரசன் வரகுணன்.

மாறவர்மன் மரபு

மன்னிள மைந்தன் மாற வர்மனே.
அன்னவன் மனையை அறவே துறந்தான்.
வீர மைந்தன் விக்கிர மனுக்குப்
பாரி னியல்பும் பரசிவ நேசமும்
சொல்லி, " மகனே, இல்லறந் தாங்கி,
நல்லியல் மைந்தர் வல்லவ ரானதும்,
அவனிச் செல்வம் அவர்க்கே தந்து,
சிவனடிச் செல்வமே சேரத் தவஞ்செய்.
வழிவழி யாய்மணி வாசகம் போற்றி.
அழியுட லுக்குள் அழியாப் பொருளையே
பற்றியுன் மரபு பற்றற வாழ்"கெனச்

சொற்றபின் அருட்பெருஞ் சோதியை நாடினுன்...
தலைமுறைக் கொருவர் தவவினை பூண்டே,
அலைமன மடக்கி, யருள்வழி நின்றுர்.
எந்தை சிவமணி அந்த வாறே
தந்தெனக் கெல்லாந் தவஞ்செய் தாரே.

### சாந்த முனிவன் வரலாறு

நானென் மகனே நாட்டியென் னிடத்தில்,
ஊனங் கடந்த ஒருவனை நினைந்தேன்.
இந்தக் காலம் வந்தது கலகம்.
நந்தமிழ் நாடு நலிந்தது நாளுமே.
போட்டி பொருமைப் புல்லர் எழுந்து,
நாட்டைப் பிறர்க்குக் காட்டிக் கொடுத்தார்.
அன்னியர் நாட்டில் ஆக்கம் பெற்றுர்.
என்னவர் அனைவரும் இகலிலே மாண்டார்.
என்மகள் பார்வதி பெண்மக வீன்று,
மின்னென மறைந்தாள்..இன்னலைத் தாண்டி
அப்பெண் மகவை அன்புடன் காத்தேன்...
இப்போ தென்னுடன் இருப்பவள் அவளே...
கலகக் காட்டைக் கடந்துபஞ் சவடியில்,
இலகுமா தவரிடை இவள்வளர்ந் தாளே !

### கௌரியின் பெருமை

இவளே கௌரி இவளென் குலமகள்..
இவளே தமிழகம் ஈன்றநல் லரசி..
சிவனுக் கேமலைச் சிகரமீ தமர்ந்து
தவங்கள் புரிந்த சக்தியே போன்றுள்.
சுடச்சுட நோற்ற சுடர்மணிப் பாவை
வடிவழ குடனே வரத்தால் வந்த
அருளழ குடையாள் ; ஆண்டவன் அன்பே
பொருளெனப் போற்றும் போத முடையாள் ;
தாரா யோகமும், சாத்திர ஞானமும்,
பூரண சக்தியும், பொலிவுறுங் கற்பினுள்.
அண்டையி லிருப்பினும், அருட்கன லேறும்
குண்டலி சக்திக் கொழுந்தே யனையாள்.
காவியக் கலையும் ஓவியக் கலையும்
ஆவியை உருக்கும் அமுதயாழ்க் கலையும்,
வேதக் கலையும், விரிதமிழ்க் கலையும்,
மாதவக் கலையும் மாசறப் பயின்றுள்.
தூவினைப் பெரியார் தொண்டுகள் செய்தாள் ;

தீவினை யாளரைத் தீபோற் காய்வாள்.
வீரருக் குரிய போர்க்கலை யறிந்தாள் ;
தீரருக் குரிய செய்கையுந் துணிந்தாள்.
இளகிய மனத்தினுள் ; ஈகையிற் சிறந்தாள்,
பழகிய நற்குணப் பாவை யிவளே..
கண்ணுக் கினியாள் கருத்திற் கினியாள்,
பண்ணுக் கினியாள், பணிகளுக் கினியாள்,
சொல்லறங் காக்கும் நல்லறச் செல்வி,
இல்லற மறிந்த கல்வியும் பெற்றுள்.
தொல்பெறுந் தமிழகந் தோற்றிய வீரச்
செல்வி யிவளே, செந்திரு வனையாள்.
சித்திமா மரபின் செங்கதி ரான
சுத்தனுக் கிவளே சத்தியா வாளே. 280
கண்டதுங் காதல் கொண்டனர் இருவரும்,
பண்டை நாளிற் பழகிப் பிரிந்தவர்.
இருவரும் உண்மையில் ஒருவரே யாவார்.
அருக்கனுங் கதிரும் அனையார் இவரே..
சீரிய கௌரியின் பேரியல் பனைத்தும்
நேரிலே காண்பீர் ; நிகழ்த்துவ திவையே..
இப்பெரு மனுளர் இல்லற வாழ்வால்
ஒப்பறு நலங்கள் உலகினுக் காமே..

இவ்வகை முனிவன் சொல்லக் கேட்டதும் இன்புற் றுங்கே,
எவ்வகை யானும் கௌரி எங்குடிக் கேற்ற கன்னி,
நவ்விளங் குமரனுக்கு நலம்பெறுந் துணைவி யாவாள்.
செவ்விய திரும ணத்தைச் செய்குவோம் என்றுன் வேந்தே..

இந்திரை மனமு வந்தாள், உறவினர் இனிதே யென்றுர் ;
தந்திரக் கிழவர் சென்னி யசைத்தனர் ; சனங்க ளெல்லாம்,
வந்தது சேம மென்றுர் ; நாடெலாம் வாழ்த்தொ லிக்கத்
துந்துமி முழங்கக் காண்போம் சுத்தகல் யாண நாளே ! 296

## 4. சம்மதப் படலம்

அனைவரின் விருப்பமும் அறிந்த சத்தியன்,
தனயனின் விருப்பமுந் தான் அறிந்திட,
*முனிவரர் இருவரின் முன்னும் சுத்தனை
வினவினன் சம்மதம் விதியின் வண்ணமே.

* *பாரத முனிவர், சாந்த முனிவர்*

சத்தியன்

நன்மன வுலகெலா நவிலு நாயக,
கன்மனக் கலியனின் காலன் போன்றவா,
என்மர பொளியென எழுந்த ஞாயிறே,
உன்மன முவந்திடுஞ் செயலொன் றுன்னினேன்..

முந்தையர் முறைப்படி முனிவர் சொற்படி,
மந்திரர் மனப்படி, மரபு வாழவோர்
செந்திரு மகளினைத் திரும ணஞ்செய
வந்தது மங்கல வசந்த நாளிதோ !

ஞானமுங் கல்வியு நல்லொ ழுக்கமும்,
வானெனக் கருணையும், வனப்புங் கொண்டவள்,
தேனென இனித்திடுந் தீஞ்சொற் கிஞ்சுகம்..
மானென மயிலென வளரு மேனியாள்..

வீரமு நீதியும் விரிந்த கல்வியும்,
ஆரமு தக்கவி யணியுங் கொண்டொளிர்,
சேரருஞ் சோழருஞ் செழிய ரும்வந்த
தீரரின் குலத்தினள் தெய்வக் கற்பினுள்.. 20

வரகுண பாண்டியன் இளைய மாமகன்
மரபினில் வழிவழி வந்த மாதவன்
கரம்வளர் கற்பகம் ; கடவுண் மாக்கலைச்
சிரம்வளர் பூரண யோகச் செல்வியே.

தென்னகம், சிங்களம், தீவு கள்பல
தன்னகங் கொண்டதோர் தமிழ கத்திலே,
இன்னியல் நீதியை இலக நாட்டிய
மன்னவர் மரபினை வாழ வைத்தவள்.

* நால்வரை வணங்கிய நல்ல தொண்டர்கள்,
† மூலரைக் கண்டவர் முனிவர் ஆசியைச்
சாலவும் பெற்றவர் தவம் பயின்றவர்,
சீலரிச் செந்தமிழ்த் திருவின் முன்னவர்.

அறிவினிற் சிறந்தவள் அருள்சி றந்தவள்,
நெறியினிற் சிறந்தவள் ; நேய மிக்கவள்,
பொறிபுல னடங்கிய யோகி போன்றவள்,
அறமகள் உனக்கென வமைந்தி ருக்கின்றுள்..

---

*மாணிக்கவாசகர், அப்பர், சுந்தரர், சம்பந்தர்.

† திருமூலர்

கண்கவர் சுந்தரி, கற்புத் தீயனுள்,
பண்கனி ரசம்பொழி பவள வாயினுள்
தண்முகில் மார்பிடைத் தாவு மின்னனுள்.
எண்ணுதற் கினியவள் இணையி லாதவள்..

அவ்வியல் அணங்குனக் கமைந்த தேநலம்.
திவ்விய மைந்தனே செஞ்சொற் கொண்டலே,
இவ்வகை யுன்மனம் இசைந்து நிற்குமேற்
செவ்விய திருமணஞ் செய்த லாகுமே..

அரிய தந்தை யறியத்தன் உள்ளத்தை,
விரிய லர்முகம் வேல்விழி நாட்டவே,
உரிய மைந்தன் உரைகளைத் தேர்ந்துடன்
பிரிய மாகப் பிழையறப் பேசினுன்:-

சுத்தன்

வணக்கம் என்னை வளர்த்தநல் ஐயனே !
கணக்க றிந்து கனிந்துரை செய்தனை..
மணக்க வேண்டும் வயதிலுன் சொற்படி
இணக்கம் வேண்டுவ தென்கட னுகுமே.

புரிந்து நன்மணம் பூமியைத் தாங்கயான்,
பிரிந்து நீயதைப் பேரின்ப வாழ்வினிற்
பரிந்து மெய்யருள் பற்றிப் பணிசெய்வாய்..
தெரிந்த துன்மனந் தெய்விகத் தந்தையே..

தந்தை சொல்லுந் தமிழிளங் கன்னிகை
எந்த வாறும் இனியவள் என்னினும்,
சொந்த மாகவுன் சுத்தனுக் கேதனைத்
* தந்தவள் எனிற் சம்மத மாகுமே..

ஒருத்தி அன்னவ ளேயென் னுயிர்த்துணை
ஒருத்தி யன்னவ ளேயென துள்ளமாம்.
ஒருத்தி யேயென் னுலகமும் வாழ்வுமாம்.
ஒருத்தி கௌரி யெனக்குறு சக்தியே.

எவளென் முற்பவத் தென்னெ டிணைந்தவள்,
எவளென் ஆர்வங்கள் எல்லாந் தெரிந்தவள்,
எவளென் உள்ளத்தி லேயிடங் கொண்டவள்,
அவளென் வாழ்வின் அருந்துணை யாவளே..

---

* *தன்னையே தந்த கௌரி*

பிறக்கும் போதும் எனக்கெனத் தோன்றினுள்.
இறக்கும் போதும் எனக்குயிர் ஈகுவாள்..
சிறக்கும் போதென் சிறப்பிற் கணிசெய்வாள்.
துறக்கும் போதுந் துறவினைத் தூண்டுவாள்.

பொன்னியே யவள் பூமுக நோக்கிடின்,
மின்னலே யந்த மென்மலர்ப் புன்னகை;
அன்னமே நடை ; ஆரமு தேமொழி ;
சொன்ன மேயவ ளின்சுடர் மேனியே....

கண்ணில் யோகக் கனலுகுங் கண்மையாள்,
பண்ணில் வேதப் பயனுறும் பாட்டினுள்,
எண்ணின் என்னுயிர் இன்புறும் அன்பினள்
பெண்ணின் சக்தி பிறங்கிடும் பெண்மையாள்.

கண்டதும் எனுட் காதல் பொழிந்தனள்,
விண்ட முல்லை முறுவலை வீசியே,
உண்டி யீந்தனள், என்மன முண்டனள்,
குண்ட லிக்கன லேறுங் கொழுந்தனுள்..

இமைய வெற்பில் இறைவனுக் கேதவம்,
அமைய நோற்றவள் ; அன்பினிற் கூடிய
உமையைப் போன்ற ஒருவளென் கண்களின்
இமையுங் காட்சியும் இன்பமும் போன்றவள்.

தந்தை கூறுந் தளிரிளஞ் செல்வியென்
சிந்தை கொண்ட திருமக ளேயெனின்
எந்தை சொல்லுக் கிரண்டிலை ; அன்னவள்
அந்தண் சாந்தன் அளித்த கவுரியே.

சத்தியன்

செவிகுளிர் வார்த்தை சொன்னுய் செல்வனே உன்ம னத்தில்
எவளைநீ காத லித்தாய் அவளையே யியம்பு கின்றேன்..
தவமுனி மகிழ்ந்தான்; உன்னைத் தந்ததாய் மகிழ்ந்தாள்; ஐய
சிவனுடன் உமையும் போலக் கௌரியைச் சேர்ந்து வாழ்வாய் !

சத்திமான் சாந்தன், செல்வி சங்கரி தந்த செல்வி,
பத்தினிக் குணங்க ளெல்லாம் பழுதறப் பழுத்த பாவை,
உத்தமி உனக்கே வந்தாள் ; உடலுடன் உயிரும் போலச்
சுத்தநீ வாழ்வாய் அந்தச் சுபமணி மகிழ நன்றே..

சுத்தன்

சித்திரத் தெழுதொ ணாத செழுந்திரு மகளைக் கூடிப்
புத்தமு தனைய போகம் புசிப்பதென் இன்பம் ; என்னின்
இத்ததி கடமை யொன்றென் எதிரினில் எதிர்ந்த தையே
அத்தை யான் முடித்தா லன்றி ஆறுதல் அடைவ தாமோ ?

உலகெலாங் கலிய ரக்கர் உயிர்களை நடுக்கி யாண்டு,
கலகமே வாழ்வாய்த் தீய கருமமே வளர்க்கின் றுரே..
நலமெலாந் தேய்ந்த திந்த நாட்டிலும் பேய ரக்கர்
கொலைநடம் புரிகின் றுரக் கொடுமையை யறிகு வோமால்..

உரைக்கொணுத் துன்ப மேவி, உலகெனைக் கூவு தம்மா..
அரைக்கணம் பூமி தேவி அழுகையைத் தாங்க மாட்டேன்..
இரக்கமென் உயிரை உந்தி யெழுத்தது தந்தாய்..தீய
அரக்கரை முடித்த பின்பே அணங்கினை மணந்து வாழ்வேன்..

தொல்லைசெய் அதர்மக் காட்டைத் தூருடன் அறுத்துத் தள்ளி,
இல்லையென் றிகலை நூறி, இத்திரு நாட்டி லெங்கும்
நல்லறஞ் செழிக்க நாட்டி, நானிலம் வாழ்த்த நாளே
இல்லறம் புகுவேன் ; எந்தாய், இதுவென திச்சை யாமே..

தேசமே எனக்கிப்போது தெய்வமும் வாழ்வு மாகும் ;
மாசறு பிரமசாரி யாகவே மாதா சேவை
தேசுறச் செய்துவெற்றித் திருக்கொடி நாட்டி யுன்றன்
ஆசியைப் பெற்ற பின்பே அடுத்தது முயலு வேனுல்.. 120

தீதகக் கலிஞன் இந்தச் சித்தியை நோக்கு கின்றுன்..
பாதகப் பகையைத் தீட்டிப் பழுதுறப் பிரித்து நாட்டைச்
சூதரின் கூட மாக்கிச் சூழ்ச்சிசெய் தரசர் தம்மை
மோதவிட் டிடையிற் கொள்ளை யடித்திட முளைத்து விட்டான்..

அத்தகைக் கொடியோன் போரில் அடியொடுஞ் சாய்ந்த பின்பே,
எத்தகை யாரும் இங்கே இன்புற லாகு மன்றே !
சித்தியின் பெருமை நாட்டிக் கலியனின் சிறுமை காட்டி
அத்தின மேயுன் இச்சை அழகுற முடிப்பேன் எந்தாய் !

சாந்த முனிவன்

மைந்தன் இவ்வகை மொழிதலும் மன்னவ னுங்கே
நைந்த சிந்தைய னுகவே " நலமெது " வென்றே
ஐந்த டக்கிய முனிவனின் அருண்முகம் பார்த்தான் ;
பைந்த மிழ்முனி பழுதறு நலத்தினைப் பகர்ந்தான்.

சாந்தன்

அற்புதம் உனது சிந்தை..அற்புதம்உனது வாழ்க்கை !
கற்பகக் கொம்ப ளுளைக் கடிமணம் புரிவ தாலே
நற்பலன் பெருகும் ஐய, நானதற் கிசைந்த தெல்லாம்
பொற்புறச் செய்வேன்என்றுன்பொலிதவக்காந்தம்போன்றுன்..

தேகத்தால் அனுப விக்குஞ் சிறியசிற் றின்ப மென்னே !
யோகத்தால் அனுப விக்கும் உள்ளின்ப வெள்ள மொன்றே
போகத்திற் சுத்த போகம் ; அப்பெரும் போகந் தன்னை
தாகத்தால் உண்ணு மட்டுந் தருவளுன் சக்தி கௌரி !.. 140

சுத்த னேசுப காரியந் தொடங்குக வுடனே..
எத்தகை யிடருங் கெடும் ; இனியவுன் விரதம்.
சத்தியம் பலிக்கும் ; கலி சாய்ந்திடும் அதற்கே
உத்த மப்பெருந் துணைவியாய் உற்றனள் கௌரி..

பெருத்த காதலிற் பேரின்பம் பெருகிடக் காணும்
ஒருத்தி, கௌரியின் உள்ளத்தைக் கொள்ளைகொண் டவனே,
திருத்த மாகவுன் கருத்தினைத் திட்டியங் கனுப்பாய் ;
பொருத்த மாம்விடை பொலிவுறக் கிடைத்திடும் உடனே.

நாளை நல்லநாள் நாண்மலர்ச் சோலையில் வீரக்
காளையே, வந்து கௌரியைக் கலந்துகொண் டுனது
மூளையே யவள் மூளையென் றறிந்தநீ நல்ல
வேளையே மண வினைநிறை வேறிட விரும்பாய் !..

என்ற லும்" இனி தினி "தென இணங்கினுன் புனிதன் ;
" நன்று நன்"றென மன்னனு நகைமுகம் பொலிந்தான்..
ஒன்றி யுள்ளமும் உள்ளமும் உறுதிகள் பூண்டு
மன்ற லுக்கிசைந் தெழுந்ததை மகிழ்வுறக் காண்போம்.. 156

# 5. கௌரி காதற் படலம்

காதல்

காதல் வாழிய ! காதலர் வாழிய !
காத லின்பக் கனல்வள மோங்குக !
காதலே யிந்தக் காணுயிர் வாழ்க்கையாம்.
காத லின்றியிக் காசினி யில்லையே !

விண் சுரந்து, விளைகனி தானியம்
மண் சுரந்துயிர் உண்டு வளர்வதும்,
பண் சுரந்து பறவைகள் ஆடலும்,
கண் சுரந்து கனிந்திடுங் காதலால்..

கண் கனிந்து கருத்தை யுணர்த்திடும்,
உண் கனியென் றுதடு நகைத்திடும்,
பண் கனிந்து பலகலே தந்திடும்,
விண் கனிந்த சுகமும் விளேக்குமே..

வான் சுடர்களும், வன்ன வசந்தமும்,
கான் மலர்களுங் காதற் கடிதமே !
மான், மயில்கிளி ,மாங்கனி வாய்க்குயில்,
தேன்வண் டன்னந் திருமிகு தூதரே !

சோதி ஞானச் சுடரென நம்பியை
நாத சக்தியென் றன்புறு நங்கையைக்,
கோதி லாது குலாவித் தியானித்தால்,
காத லுங்கட வுட்கன லாகுமே !

கௌரியின் காதல்

விண்ண முதென மெத்தவும் இன்னியற்
பெண்ண முதம் புனிதப் பிரானேயே,
கண்ணே நெஞ்சைக் கவர்ந்த சிவனென்றே,
பண்ணு டன்பரிந் தேத்திப் பணிந்தனள்.

இருளேப் போக்கும் இரவியைப் போலவே,
அருளேத் தூண்டிடும் அன்புள நெஞ்சிலே,
தெருளேக் கொண்ட சிவசக்திக் காதலின்
பொருளேக் கண்டனள் புண்ணியக் கௌரியே !

மாத வனே மனத்தில் உயிரென
ஓதி ஒன்றி யுணர்ந்த நிமையுடன்,
கோதை, மீரை யிராதையுங் கொண்டதோர்
காதல் கௌரியின் காதல் விளக்கமே.

மண்ண கத்தினில் வாழுயிர் யாவிலும்,
விண்ண கத்தில் விளங்குஞ் சுடரிலும்,
கண்ண கத்திலுங் காதல் ஒருவனே
எண்ணி யெண்ணி யிதயந் துடித்தனள்.

பொன்னேக் காணின் புனிதன் உடலென்பாள்,
மின்னேக் காணின் மிளிர்நகை யென்னுவாள்.
தன்னேக் காணின் அவனெனச் சாற்றுவாள்,
கன்னி, தூயனேக் கண்ட கவுரியே

மலே யருவி மணுளன் இசை யென்பாள்,
அலே கடலவ் வருட்கட லென்னுவாள்.
கலே மதியிரவி யவன் கண்ணென்பாள்.
தலே சிறந்த தனிப்பெருங் காதலால்,

வான வட்டம் வளைத்த உலகெல்லாம்
ஞான நாயகன் ஆலயம் என்னுவாள்.
மோனக் குன்றவன் உள்ளத்தில் ஊன்றியே
தியான மோனச் சிவமெனச் சாற்றுவாள்.

பாடு வோர்கள் அவன்புகழ் பாடுமின்,
ஆடு வோர்சுத்த ஓமென்றிங் காடுமின்.
தேடுந் தொண்டரெந் தெய்வத்தைத் தேடுமின்,
கூடும் இன்ப நலமெனக் கூறுவாள்.

குளிர்மதி சுடுவ தில்லை ; குமுதமும் பழிப்ப தில்லை ;
நளிர்வனத் தென்றல் மேனி நைந்திடத் துளைப்ப தில்லை ;
களிமிகுங் கடவுட் காதல் கண்டவர் இயற்கைக் குள்ளே
ஒளிமிகும் உயிரின் வள்ளல் ஒருவனைக் கலந்து வாழ்வார்.

## கௌரி தேவி காலை அருவியாடிச் சுத்தனை நினைத்தல்

தென்றலை உபசரித்துத் தேன்மண மூட்டுஞ் சோலை,
அன்றில்கள் கொஞ்சுஞ் சோலை, அருவியில் ஆடிக் கௌரி,
பொன்றிருக் கதிர்கள் வீசிப் பூத்திடும் அருணன் உள்ளம்,
தன்றிரு வுள்ள மான தலைவனைத் தியானித் தாளே !

காண்இயற் காட்சி யெல்லாம் காதலா வுனது கோயில்,
பேண்உயிர் உள்ள மெல்லாம் பெருமநின் சந்நி தானம் ;
நாண் மலர் அனைத்தும் அன்பு நாதன் பூ சனையா மென்றே
மாண் உயிர் வாழ்வுனக்கே மகிழ்வுற நிவேதிக் கின்றேன் !

நாவினுக் கரிதாம் ஆர்வ நயனநீர் பெய்து, நீண்ட
காவியக் கனவில் நட்டுக் காதலை வளர்த்தேன்..அன்புப்
பூவினைக் காணு வேனோ ? புனிதவுன் சித்தம் யாதோ ?
ஓவியத் தெழுதொ ணாத ஒருவனே ஒப்பி லானே !

அளவிலா உள்ளந் தன்னில் ஆறென ஊறும் ஆசை,
வளமுலை விம்மப் பாய்ந்து, வளர்ந்ததுன் உணர்வி னாலே..
களவிலாக் கன்னி யாசைக் கடலினைக் காணு வாயோ ?
எளியவர்க் கிரங்கி நாளும் இனியன புரியும் வேந்தே !

வேலையாய் விம்மி யாடும் வெண்ணிலாப் போல வந்தாய்.
சோலைவாய்க் குயில்க ளுக்குள் சொரூபத்தைப் பாடு கின்றேன்.
மாலைவாய் வசந்தத் திற்கென் மங்கல யாழி சைப்பேன் !
காலைவாய்ப் புட்க ளுக்கென் கனவுறு கதைகள் சொல்வேன் !

முல்லையின் முறுவல் வீசி மோகத்தீ யூட்டு கின்றாய்.
சில்லெனத் தென்ற லேறித் திசை திசை பவனி செல்வாய் !
எல்லையில் வானத் துன்றன் இச்சையை எழுதிக் காட்டிச்
சொல்லற வந்து வந்தென் சோகத்தைத் தூண்டு கின்றாய் ! 8

கறவொலி கேட்டுப் புட்கள் கண்விழித் திசைக்கு நாட்டில்,
மறவொலி யரக்கர் மாய வடிகளை தொடுத்த வீரா !
அறவொளி வீசுந் தூய அருள்விளை யாடல் செய்வாய்..
மறையொலி அமுத வாயா ! என்னுயிர் மணியே போற்றி !

என்பணி யெதுவு மில்லை..என்னைநான் உனக்கே தந்தேன்..
உன்பணிக் காளாய் இந்த உலகினிற் பிறந்தேன் ஐயா..
அன்பணி துரையே, என்றன் ஆருயிர்க் குயிரே, யுன்றன்
வன்பணி புரிந்தே வாழும் வாழ்வெனக் கருளு வாயே !

நாயகா உன்னைக் கோடி ஞாயிறுய்க் கண்ட போதே,
போயது கவலை மாறிப் புதுநலப் பிறவி பெற்றேன்..
ஆயுளும், யானும், எந்தை அருளிய சக்தி யாவும்,
நேயனே தூயனே ஓம்...! நின்னதே நினக்கே தந்தேன் !

சுத்தன் கடிதம்

இவ்வகை யாகக் கௌரி இறைவனை யெண்ணி யெண்ணி,
நவ்விளங் கொங்கை விம்மி, " நாத ஓ நாத " வென்றே
செவ்வரிக் கண்ப னிப்பத் தேன்மலர் சேர்த்து வந்தாள்.
அவ்விடம், தோழி அன்புக் கடிதமொன் றளித்தாள் மாதோ !

ஆவலாய்ப் படித்தாள் கௌரி ; * ஆழியைக் கண்ட சீதா
தேவியே யானாள் ; மார்பிற் சிரத்தினில் வைத்து மீண்டும்
காவியங் கண்ணீர் வாரக் காதலன் கடிதந் தன்னைப்
பூவினுல் அருச்சித் தன்பு பொலிவுறப் படித்தாள் மாதோ !100

''அன்புக் கிளியே, ஆர்வக் குயிலே,
நின்புது வாழ்க்கை நிலவுக நன்றே !
ஆன்மக் காதலின் பான்மை யறிந்த
மான்விழிப் பாவாய், தேன்மொழிச் செல்வீ,
புதனே நமக்குறு புதுமண நாளாம்.
அதன்முன் என்மனம் அறியக் கேளாய் !
பூமியில் ஆண்பெண் பொருந்திய வாழ்வு
காமிகள் வாழ்வினும் கருத்துயர் வாழ்வாம்.
ஆதி சக்திதன் ஆடல் வளரவே
காதல் என்னும் கனலைப் பரப்பினுள்.
இயற்கைக் காதல் இன்பமே யாகும்.
மயக்குங் காமம் மனத்தைக் கலக்கும்.
அடர்வனத் தீயும், அடங்காப் புலியும்,
இடர்தரும் பாம்பும், கடற்புய லும்போல்,
சீறுங் காமச் சிக்கினில் வீழாப்
பேறுபெற் றோரே பெரியவ ராவார் ;

* *கணையாழியை அனுமான் தரக் கண்ட சீதை.*

இருவி காரம் பெருகிய வுலகில்
நிருவி காரராய் நிலவுவார் அவரே !
பிணவுடற் போகம் கணமிருந் தகலும் ;
மணவினை யென்பது மன்னுயிர்க் கலப்பே.
இரண்டு கம்பிகள் இணைந்துமின் சாரம்
திரண்டு பரவுந் திறமே போல,
ஆணின் அறிவும், பெண்ணின் அன்பும்,
பேணிக் கலந்து பெருவாழ் வாகும்.
ஆணிற் பெண்ணும் பெண்ணிலே ஆணும்
பூணிற் பொன்போற் பொருந்துவ தாமே.
ஆணுட் சிவமும், பெண்ணுட் சக்தியும்
காணும் போதே காதல் இனிதாம்.
தேகங் கடந்த தேகியிற் கூடும்
யோகமே வாழ்வின் உட்பொரு ளாமே !
யோக வுணர்வில் ஏகமாங் காதலர்
சோக மோகச் சுழியிற் சிக்கார்.
உதயக் கதிர்போல் இதயக் குகையில்
வதியும் தூய வாய்மையே நாமாம்.
அதுவே சக்தி யாகிய பெண்மை.
அதுவே சுத்த மாகிய ஆண்மை.
அதுவே யானும், அதுவே நீயும்.
அதுவே விகார மற்ற சாட்சியாம்.
உலகுயிர்க் குலங்கள் ஒருயிர்ப் பான்மையே.
பலபல தோற்றம் பலவாம் ஒருமையே !
இந்த வுண்மை இனிதுநீ யறிவாய் ;
அந்தவுள் ளுண்மையில் அன்புடன் கூடி,
எடுத்த கருமம் முடித்த பிறகே,
அடுத்த கருமம் பிடித்து முயல்வோம்.
பஞ்ச வடியிற் படையுடன் வந்த
வஞ்சக் கலியன் வருவான் மீண்டும் ;
நாடெலாம் பாவக் காடெனச் செய்தான்
கேடெலாந் தீரக் கிளரமர் புரிவோம்..
இருளை விலக்கி இறைவன் சக்தியாம்
அருளைத் துலக்கி, அறத்தை நாட்டி—
என்னுயிர்ப் பணியை இயற்றும் வரையில்
அன்னை சக்திநீ அருந்தவத் துணைவியே..
என்பதை முன்பே யியம்பு கின்றேனே ;
சுத்தனுக் குன்மனந் துலக் கிடுவாயே.

### கௌரியின் பதில்

உள்ளம் பொங்கி உரைகடந் தன்பு
வெள்ளம் பெருக விமலனைப் போற்றிக்
கலையிலக் காக நிலைபொரு ளதனை
மலையிலக் காக மனங்கடந் துணர்ந்து,
"சுத்த ஓம்" என்றே தொழுதுதன் கொள்கையும்
இத்தகைத் தென்றே எழுதினள் கௌரி....

"என்னுயிர்க் குயிரே, என்விழிக் கொளியே !
உன்மனம் ஒன்றே என்மன மாகும்,
ஊடும் பாவும் கூடியே ஆடை ;
பீடுறும் ஆண்பெண், பிழையறக் கூடி,
ஈருட லுக்கும் ஒருயி ராகி,
பாரும், வளரும் பயிரும் போலே,
இகமும் பரமும் இணைந்திட வாழ்வதே
சுகமாம் ; அதுவே சுத்தான்ம வாழ்வாம்.
ஆண்பெண் உறவை ஆன்ம வுறவாய்
மாண்புறச் செய்ய வழியும் அறிவேன்..
வேதாக மத்தின் சாதனத் தாலே
ஆதார சக்தியை மீதேற்ற வல்லேன்..
கண்ணனும் ராதையும் பண்ணிய யோக
உண்மை யறிவேன் ; ஒளிர விளக்குவேன்.
ஆதலால் இருவரும் ஆன்மிய வுறவால்,
பேதமில் லாத பெருவாழ் வடைவமே.

எண்ணுவ துன்றன் எண்ணம் ; இயற்றுவ துன்றன் இச்சை ;
பண்ணுவ துனது நல்ல பணிகளே...பலன்க ளெல்லாம்
நண்ணுவ வுனக்கே, ஐயா ! நானுடல்; ஆவி நீயே
கண்ணுளே காணுங் கண்ணு, கவுரியின் கருத்தி தாமே !

சுத்தனும் வந்து கண்டான் ; சொல்லற நகைத்தான் மெல்ல
இத்ததி சாந்தன் வந்தே இருவரின் உளமும் போற்றி,
மெத்தவும் ஆசி கூறி, மேதினி யனைத்தி னுக்கும்
உத்தம வுறவைக் காட்டி " ஓங்குக நீவிர்" என்றான்..

மூவரும் ஆங்கே தியான மோனத்தில் மூழ்கி நின்று,
சிவமும் பரமும் ஒன்றித் திளைத்தபின், சுத்தன் "இந்தப்
பூவிலே ஆன்ம நேயம் பூரணம் பெற்று வாழ்ந்த
தேவரு முண்டோ? வென்னத் திருமுனி யருளு வானே.

# 6. இராமகிருஷ்ணப் படலம்

[சாந்த முனிவர், இராமகிருஷ்ண பரம ஹம்ஸரின் தூய வாழ்வையும், அவர் அருளால் விவேகானந்தர் செய்த அரிய பணிகளையும் விளக்குகிறார்.]

காப்பு

பத்திச் சுடரோங்கிப் பற்றற்ற வாழ்வோங்கிச்
சத்திச் சுடரோங்கிச் சண்டியருட்—சித்தனும்,
சாரதா நாதன் ஐயபரம ஹம்ஸனவன்
பாரதான் மாவெனவே பார்..

கல்லாத கல்விவளர் கடலே யானன்
  கலங்காத காளியருட் செல்வன் ; சித்தி
எல்லாமும் வல்லவனும்..இயற்கை யாக
  எம்மதமும் சம்மதமாய் ஏற்றுக் கொள்ளும்
சொல்லாளன், சொற்கடந்த பெருமை யாளன் ;
  சுத்தான்ம நேயத்தின் சுடரே யானேன் ;
எல்லாமாம் பரம்பொருளை யெங்குங் கண்டோன் ;
  இராமகிருஷ்ண பரமஹம்ஸன் இருதாள் போற்றி !

கால நிலை

நமது புண்ணிய நாடொரு காலத்தில்,
அமைதி கெட்டுள் ளறிவை யிழந்தது.
சமய வாதச் சமர்க்கள மானது—
மமதை பேசிய மாய மயக்கினல்.

கஞ்சிக் கல்வியும் அன்னியக் கல்வியே..
அஞ்சிச் செய்வினை அன்னியர் சேவகம் ;
நெஞ்சி லான்ம நிறைவு வறண்டதும்
பஞ்சை யாயினர் பாரத தேசத்தார்..

சிறந்த மேலவர் செப்பிய நன்னெறி,
மறந்த னர்பிற மாயைக் கடிமையாய்,
அறந் துறந்தனர் ; ஆத்தும சக்தியாந்
திறஞ் சிதைந்தனர் திவ்விய நாட்டினர்..

பொய் மினுக்குடன் போலி நடைகளும்
மெய்ய றிவை விழுங்கிட, மானிடர்..
வெய்ய துன்புற்ற வேளையில் வந்தனன்,
துய்ய ஹம்ஸன் அருட்சுடர் போலவே..

### பிறப்பு

பூமியின் முலைப்பால் போன்று பொங்கிடும் இமயக் கங்கை,
ஓமென வுயிர் செழிக்க ஓடிடும் வங்க நாட்டில்,
காமருபுக்கூரென்ற கண்களித் திலகும் ஊரில்,
காமமி லாத ஞானக் கதிர்மணி உதித்தான் மாதோ !

வரநதி போன்ற தூயர், எளியவர், வாய்மைச் செல்வர்,
பரமனிற் சித்தம் வைத்த பத்தராம் குட்டி ராமும்,
சரள சுபாவ முள்ள சந்திர மணியும் செய்த
விரதநற் பயனால், இந்த முனிக்கனி விளைந்த தம்மா !

### பால பரமஹம்ஸர்

சிந்தனை தூயன், செய்யுஞ் செய்கையிற் றூயன், வாக்கில்,
அந்தரங் கத்திற் றூயன், அன்பினிற் றூயன், அன்னோன் ;
சந்ததம் ஹரிநா மத்தைச் சாற்றியே ஆடிப் பாடும்,
விந்தையைக் கண்டு நல்லோர் வியந்திட வளர்ந்தா னம்மா !

மாலடி மனதை வைத்தான் ; வாக்கினைத் திருநா மத்தில் ;
சாலவும் விளையாட் டெல்லாம் சரிதைநா டகத்தில் வைத்தான்,
சீலமெய் யன்பர் நேயஞ் செய்வதிற் சித்தம் வைத்தான்..
ஞாலத்தின் கோல மெல்லாம் ஞானமாய்க் கண்ட சேயே !

கண்ணனை நடிக்கும் போது கண்ணனே யாவான் ; நெற்றிக்
கண்ணனை நடிக்கும் போது கயிலையஞ் சிவனைப் போல்வான்.
பெண்ணென நடிக்கும் போது பெண்மணி ராதை யாவான்..
மண்ணுல கெல்லாம் ஈசன் மயமெனக் கண்ட சேயே !

அஞ்சறு மனத்தான், மற்றோர் அரட்டினுக் கிணங்க மாட்டான்.
பிஞ்சிளஞ் சொற்க ளாலே பெரியவே தாந்தம் பேசி,
நெஞ்சினை அள்ளும் தெய்வக் கதைகளை நீளச் சொல்வான்..
அஞ்சிலே ஐம்ப தாண்டின் அறிவினை விளக்கி னானே !

துறவிகள் வரவைக் காணத் துறுதுறுத் தோடிச் செல்வான் ;
உறவுகொண் டவரைப் போலே உடையணிந் தன்னை முன்னே,
"ஹர ஹர" வென்று நிற்பான்..ஆனந்த நடனஞ் செய்வான்..
வரமிகு ஞானி, ஆடும் வயதிலே விளங்கி னானே !

### இயற்கைக் கல்வி

பிள்ளைக்குப் பூணூற் போட்டுப் பெற்றவர் கல்வி கற்கப்
பள்ளிக்குச் செலவி டுத்தார்..பளிச்செனப் பிரம்பினாலே
சுள்ளடி வாங்கி ஏட்டுச் சுவடியைப் பாடம் பண்ணும்
கள்ளையை வெறுத்தான் ; சீவ சகபர வுண்மை கண்டோன்

கலைமிகு புலவர் வாதங் கண்டுகண் டனங்கள் செய்வான் ;
உலையெனப் பொரியுஞ் சொல்லை உமியென ஊதித் தள்ளி,
மலையென மாண்பு மிக்க வாய்மையைத் தெளிவித் தென்றும்
நிலைபெறும் கடவுட் கல்வி இதுவென நினைக்கச் செய்வான்..

"காலட்சே பத்தி னுக்குக் காலரை சம்பா திக்க
நாலெழுத் தறியாப் பிள்ளை நமக்கென்ன பயனும்" என்றே..
ஓலமிட் டண்ணன் வாவென் றுடனழைத் தேகி, அந்தக்
காலத்தில் அவனே வைத்த கல்கத்தாப் பள்ளி சேர்த்தான்.

"ஈட்டுதற் கென்றே கற்கும் இழிமனக் கஞ்சிக் கல்வி,
ஏட்டினைத் துளைக்குங் கல்வி, எனக்கினி எதற்கே". யென்று
மூட்டையைக் கட்டி வைத்து, முன்செய்த படியே பிள்ளை
ஆட்டமும் பாட்டும் அன்பும் ஆர்வமுங் கொண்டே நின்றான்..

செல்வரின் மனையிற் பூஜை செய்குவான் ; பாடி யாடி
நல்லறக் கதைகள் சொல்லி, நாழிகை கழித்து வந்து,
மெல்லவோர் புத்த கத்தை மெல்லுவான் கருத்தே யின்றி ;
தொல்லையி தென்று மூத்தோன் சுடுமொழி கூறுவானே..

அண்ணல் ராமகுமார்

துடிப்பினை யடக்கிப் பாடஞ் சுறுசுறுப் பாய்க்கல் லாது
தடிப்பது நன்று யில்லை..தம்பிநீ உறுதி சொல்லாய்..
படிப்பதுன் விருப்பா ?..சும்மா பள்ளிக்கு வருவ தாக
நடிப்பதுன் விருப்பா தெய்வ நாமமுன் விருப்பமொன்றே ? 80

தம்பி கதாதரன் (இராமகிருஷ்ணர்)

அண்ணா சற்றே அன்புடன் கேளாய் ;
உண்மையே சொல்வேன்..உலகியற் கல்வி
வேண்டேன் எனது விருப்ப மெல்லாம்
ஆண்டவன் அறிவே.. அருளே.. அன்பே !
புத்தகச் சுமையாற் சித்தந் தெளியுமா ?
தத்துவப் பொருளைத் தருக்கந் தருமா ?
கண்டா லன்றோ காசியின் புண்ணியம்..
உண்டா லன்றோ உட்பசி தீரும்.
கனியை எண்ணினால் இனிமை தெரியுமா ?
கனியைச் சுவைப்பதே இனிமை தருவதாம்..
உண்ணுமுன் கூச்சல் உணும்போ துண்டோ ?
பண்ணுந் தருக்கம் பார்த்தபின் உண்டோ ?
பண்டிதக் கூச்சல் பரமனைத் தருமோ ?
உண்டிக் கேயவர் ஓலம் வைப்பார்.
பிணத்தையே நோக்கும் பிராந்து பறந்தும்;

பணத்தையே நோக்கும் பண்டிதக் கழுகு.
பழையபஞ் சாங்கம் மழையைச் சொட்டுமோ ?
விழைவுறு புத்தகம் விவேக மளிக்குமோ ?
கூவெனுஞ் சந்தைக் கூச்சலென் விளங்கும் ..?
ஓவெனுந் தொலையில் ; உறினே தெளிவாம்..
சுட்ட தோசை சுரீரென் றுதே..
எட்டிய பக்குவம் ஏடுபே சாதே..
அருந்தும் தேனீ ஆர்ப்பது முண்டோ ?
பொருந்தும் ஞானி பொருபொருப் பானோ ?
தியாகி யாவதே கீதா சாரம்.
விவேகி யாவதே வேதாந்த சாரம்..
பாகவ தத்தைப் பலமுறை படித்தும்
மோகம் விடாத மூடனுற் பயனென் ?
கண்டதைக் கற்றுக் கடமட வென்னேன்..
உண்டோர் உண்மை ; உள்ளறிந் துரைப்பேன்..
அதுவே ஆன்மா..அதுவே அனைத்தும்
பொதுவாம் அதுவே பொருளெனக் காமே..
என்று தம்பி எதிர்த்தறி வுறுத்த,
ஒன்றுந் தோன்று நின்றுன் அண்ணனே !..
" இப்படிப் பேசி எழுத்தறி யாதான்
எப்படிப் பிழைப்பான் " என்றனர் தமரே !

### தக்ஷிணேஸ்வரம் காளி கோயிலில்

இத்தகி தக்கிணேசம் இரசமணி ராணி " ஐய
சக்தி ஓம் காளிக்கே நான் சமைத்தநல் ஆல யத்தே,
நித்திய பூசை செய்ய நீர்வர வேண்டு " மென்ன
உத்தமத் தம்பி யோடும் அண்ணலும் உடனே சென்றான்.
சலசலத் தோடுங் கங்கைக் கருகிலே அந்தி சந்தி
கலகல வென்னப் புட்கள் கனியுண்டு பாடுங் காவில்,
பொலிவுட னமைந்த கோயிற் பூசையில் ஞானத் தம்பி,
உலகையே மறந்தான் ; சக்தி உருவையே நினைந்தான் மாதோ.
நானெனும் உணர்வே யின்றி, நானிலப் பற்றே யின்றி,
தானென வுள்ளந் தோறுந் தன்னையே காட்டி நிற்கும்,
ஞானவா னந்த ஜோதி ஞாயிறின் கதிரே யாகி
மோனத்தின் விளக்க மான மூலசக் தியை நினைந்தான் !..
மூத்தவன் இறந்த பின்னர், பூசனை முழுதுந் தானே
தித்தகும் ஆர்வம் பொங்கச் செய்தனன் ; செய்த கூத்தைப்
பார்த்தவர் அதிச யித்துப் " பைத்தியம் " என்றே சொன்னார்..
ஆர்த்தனை யறிந்த செல்வர் இருவரே யாகி னரே...

மாண்புறு ராணி, நல்ல மாப்பிள்ளை மதுர நாதர்,
நாண்மலர் போன்ற தூய நல்லபூ சாரி வாழ்விற்
காண்புதுக் கோல மெல்லாம் காளியின் விளையாட் டென்று
வீண்பழி மறுத்து, வேண்டும் உதவிகள் விரும்பிச் செய்தார்..

கான்மலர் மாலை சூட்டிக் கையினுல் அட்ட சோற்றைத்
தேன்மலர் தூவித் " தாயே திருவமு துண்"ணென் றுரர்ப்பான்.
ஊனுயி ரில்லாக் கல்லென் றுன்னிடான் ; உலகை யெல்லாம்
ஈன்றளித் தாளும் சக்தி இதுவென நம்பி ஞனே..

முறையீடு

" உருவென உள்ள தாயே.. ஓம் ஜய காளி சக்தி..
ஒருமொழி பேசாய்.. அம்மா உனக்கு நான் பிள்ளை யன்றோ !
இருளிலும் பகலும் உன்னை இதயத்திற் கூவு கின்றேன் ;
வருமொழி சொல்லா தேனோ மௌனமா யிருப்ப தென்னே!

"கண்ணெலாம், கண்ணிற் காணுங் காட்சிக ளெல்லாம், பாடும்
பண்ணெலாம், பாட்டளிக்கும் பயனெல்லாம், பாரி லுள்ள
பெண்ணெல்லாம்,பெண்ணுளத்தின் பெட்பெல்லாம்இடம்விரிந்த
விண்ணெல்லாம் தாயே..நீயே வீரிமா தங்கி காளீ !

திங்களாய் நிலாவு கின்றுய் ; தினகர ஜோதி யாகி,
மங்களப் பகல ளிப்பாய், மீனணி வான மாகி,
எங்குமே பரவி நிற்பாய் ; இமாலய முடியி னின்று
கங்கையாய் ஓடி வந்து, கருணையாய்ப் பயிர்வ ளர்ப்பாய்.

காரிருள் உடுத்துக் கோடிக் கனல்மணி மலர ணிந்து,
வீரிநீ மின்ன கைத்து, மெல்லிய தென்றல் வீசிப்
பாரெனுங் குழந்தை தன்னைப் படுத்துநன் றுறங்கச் செய்வாய் ;
ஆர்வமே பற்றிக் கூவும் அடியனுக் கருள்வ தென்றோ ?

தந்திரம் அறியேன் ; யோக சாதனம் அறியேன் ; வேத
மந்திரம் அறியேன் ; பொல்லா மமதையு மறியே னம்மா !
இந்தக்கல் லுருவி லேநீ இலகிடும் உண்மை தன்னை
முந்துநான் அறிவேன் ; பிள்ளை முன்வரக் கூசு வாயோ ?

எங்குமுன் கண்கள் கண்டேன் ; என்னிலை காணு தேனோ ?
எங்குமுன் செவிகள் கண்டேன் ; என்முறை கேளா தேனோ ?
எங்குமுன் ஒலியைக் கேட்டேன் ; எனக்கொரு மொழியிலாயோ?
எங்குமுன் கருணை கண்டேன் ; எனக்குநீ யிரங்கா தேனோ ?

நேசித்துத் தைல தாரை நிகரவே உனைநி னைத்துப்
பூசித்துத் தெண்ட னிட்டுப் புண்ணியப் புகழே பாடி ,
ஆசித்தேன் அருளை; அம்மா அம்மஓம் காளீ, காளீ !
வாசித்துக் காணு ஞான வாரியே போற்றி, போற்றி !

உருகினான் இராம க்ருஷ்ணன், உருவிலே திருவைக் காணக்
கருதினான்..கவலை கொண்டு, காளியின் அடியிற் கண்ணீர்
பெருகினான், பிள்ளை போலப் பேசினான், உறக்க மின்றி
" வருதிநீ வருதி " யென்று வாயைவிட் டலறி னானே..

சக்தி சாக்ஷாத்காரம்

தன்னினை வகன்றான் ; காலந் தன்னையு மறந்தான் ; சக்தி
அன்னைஓம் அன்னை யென்றே அழுதழு தயர்ந்தான் ; ஓர்நாள்
"இன்னநா ளுனைக்காட் டாயேல், இனியுயிர் பிழைக்க மாட்டேன்
உன்னடி எனதி ரத்தம் ஊற்றுவே" னென்றெ ழுந்தான்.
"ஒன்றுநீ யுண்டு ; சக்தி..ஒளிந்திினும் விளையா டாதே..
நன்றுனைக் காணு வாழ்வு நரகவாழ் வதனை வேண்டேன்..
இன்றுநீ இரங்கா விட்டால், இதேஅரி வாளால் என்னைக்
கொன்றுநான்பலிகொடுப்பேன்.. இதோபலிகொடுத்துவிட்டேன்!"
வாளினைக்கழுத்தில்வைத்தான்;அழுத்துமுன் மயக்கங்கண்டான்.
"காளி ஓம் சக்தி, கோடிக் கதிரொளிக் கனலை வீசி
நீளதிர் மின்னலென்ன நின்மல யோகி நெஞ்சம்
ஆளவே புகுந்து கோயில் அமர்ந்தனள் உலகு வாழ."
சுற்றிலுஞ் ஜோதி மின்னல்.. சுடர்க்கடல் குளித்தெ ழுந்து,
" பெற்றனன் பெற்றேன் உன்னைப் பெருந்திருக் கருணை யாலே
உற்றெனுட் கோயில் கொண்டாய், ஓம் சக்தி ஓம் ஓம் " என்றே
முற்றுணர் பரம ஹம்ஸன் முத்தனுய் எழுந்து நின்றான்.
"எத்திசையும் உன்முகமே யிலகக் கண்டேன்.
எப்பொருளும் உன்மயமே யென்னக் கண்டேன்.
சித்தமிசை உன்ஞான தீபங் கண்டேன்..
சிவசக பரமான ஒன்றைக் கண்டேன்.
சத்தியமே யென்வாக்கில் வளரக் கண்டேன்.
சர்வமத சமரஸமாம் பொருளைக் கண்டேன்..
சுத்தசுதந் தரசக்தி சொரூப மான
சுயம்சச்சி தானந்தச் சுடர்கண் டேனே !
ஊனுட லுள்ளே சக்தி புகுந்ததும் உயிரின் வாழ்க்கை
ஏன்வந்த தெனத்தெ ளிந்தான்..இருவினை யுலக மெல்லாம்
ஆன்மகோ டிகளைச் சூழும் இருளினை யகற்றி, ஞானத்
தேன்பொழிந் திதயத் தாகந் தீர்த்திட வேண்டி னானே..
முன்னிலும் சாதனங்கள் முதிர்ந்தன; பரம ஹம்ஸன்
அன்னையின் அருளின் மூழ்கி, ஐக்கியப் பட்டு ணர்ந்து,
நன்மலர் தனக்கே தூவி " நான்சக்தி " யென்பான் ; பூனை
தன்னையும் " அம்மா " வென்று தளிகையை யூட்டு வானே !

இருளடர் சோலை யொன்றில், இரவெல்லாம் ஐந்தா லின்கீழ்
அருளினை நினைந்து நிற்பான் ஆடையு நூலு நீப்பான்..
பொருளறி யாத சுற்றம் பொக்கெனச் சிரித்துப் பித்தம்
பெருகிய தினிமேற் பேயாம் எனப்புறம் பேசினரே..

பெண்பொரு ளாசை கொண்ட பேய்மத மாயப் பித்தர்
திண்புறத் துறந்த தூய தேவரைப் பித்த ரென்பார். .
பண்புறு கங்கை கண்டும், பன்றிக்குச் சேறே நன்றாம்..
புண்பொருக் குண்ணும் ஈக்குப் பூமது சுவைப்ப துண்டோ ?

திருமணம்

கண்டனள் பெற்ற தாயும்..கடிமணஞ் செய்தாற் பிள்ளை
கொண்டவே தாந்தப் பித்தம் குறைந்திடும் என்று தேர்ந்தே,
பெண்டிரை வைத்தி ருக்கும் பெற்றவர் தம்மைக் கேட்டாள்..
" ஒண்டொடி இவளே"யென்று காட்டினன் உரிய மைந்தன்..

"சீரமர் ஜயராம் பட்டி தன்னிலே செழித்த நல்லாள்,
காரமர் கருணைச் செல்வி, கருவிலே திருவைக் கண்ட
சாரதா தேவி யென்னுந் தளிரிளம் பாவை யேயென்
தார"மென் றுரைத்தான்; அந்தத் தையலேஅமைந்தா ளம்மா!
220

சமத்துவ சாதனம்

திருமண மான பின்பே திரும்பிய பரம ஹம்ஸன்
ஒருமன வுறுதி நாட்டி யோகத்தில் ஈடு பட்டான்..
அருகிருந் ததனைக் கண்டார் ஆயிர மடங்கா யின்னும்
பெருகிய தந்தோ ஞானப் பித்தெனச் சிரித்தார் மாதோ !

" அன்னைஓம் சக்தி"யென்றே ,அரிவையர் காலில் வீழ்வான்
பொன்னைமண் ணென்று நீரிற் போட்டுப்போ மாயை யென்பான்
ஈன்னுயர் சரிகைச் சால்வை மதிக்கிலான் மிதித்து நீப்பான்.
தன்னுயர் சாதி நூலுந் தாங்கிலான் சமதை பெற்றன்..

ஒருக்குலம் உலக மாந்தர் என்பதை உணர்ந்தே முற்றும்,
திருக்குலச் சேரி புக்கு, தெருக்களைச் சுத்தம் செய்வான்..
கருக்குண மான பாசம் கழன்றிவ்வா றிருக்கும் சித்தன்
இருக்கையை நாடி யோர்நாள் எழுந்தனள் அந்தண் மாதே..

பைரவி பிராம்மணி

பண்புள ஞானச் செல்வி பைரவி யென்னும் பேராள்,
எண்படி யோக மெல்லாம் எளிதினிற் பெற்ற நல்லாள் ;
விண்சுடர் போன்ற தூய விரதனைக் கண்ட போதே..
நண்புரை கூறி " நீயே நான்கண்ட கண்ணன் " என்றாள்.

"சத்திஓம்" எனவ ணங்கித் தாயிடம் பிள்ளை போலே,
" பித்தனென் றென்னை மற்றோர் பேசுவார் " என்றான் யோகி..
அத்திரு நங்கை " நீயே அவதரித் துலகைக் காக்கும்
சித்தன்; யான் தாந்தி ரீகச் சித்திகள் ஈவேன் " என்றாள்..

"பெண்ணுடன் பழகல் காமப் பிழையினைப் பெருக்கு மென்றே
உண்மைநன் றறியா மாந்தர் உரைப்பரவ் வுரைபொய் யாமே..
கண்மனந் தூய தானால், காமப்பேய் எட்டி நிற்கும்..
பெண்ணிடம் யோக சக்தி யின்பமே பெறுவ தாமே.."

என்றதுங் " குழந்தை போலே, என்னைநீ நடத்தாய் " என்ற
வன்றவக் கதிரைச் சக்தி மைந்தனென் றினிது போற்றித்
தன்றிரு யோக சக்தித் துணைவினைப் பெய்து நாளும்,
"வென்றனை தாந்திரீகம் விளைபயன் உனக்கே " யென்றாள்..

சாதனப் பயனுங் கண்டு சாத்திரப் பயனுங் கண்ட
வேதியர் முன்னே யோக வித்தகி " பரம ஹம்ஸன்,
ஈதினின் றுலகைக் காக்கத் திருவவ தரித்த கண்ணன்
போதசத் குருவே " யென்று போற்றினாள் புலவர் போற்ற.

" தத்துவ ஞான மின்றித் தனித்தனி யகந்தை மீறிச்
சத்திய சன்மார்க் கத்தைத் தவறியின் றுலகு மாயப்
பித்தமே பிடித்துச் செய்யும் பிழைகளைத் தீர்க்க வந்தான்..
இத்தகி இந்தக் கண்ணன் " என்றனர் அறிந்த மேலோர்.

தோதாபுரி

சக்தி யோகத்தின் சாதனம் யாவிலும்
சித்தி பெற்றவன், சின்மயத் தாயிடம்,
அத்து வைதச் சமாதி யளித்திடும்
வத்துவைப் பெற வேண்டி வணங்கினான்..

தன்னைத் தந்து சரண்புகு தூயவர்
என்ன வேண்டினும் ஈயும் பராம்பிகை,
தன்னைக் கண்டதோர் தத்துவ ஞானியை
முன்னி ருத்தினள் முத்திப் பிழம்பெற..

கட்டி லாதவன், காற்றினைப் போன்றவன்,
நெட்டை வைரச் சிலையினை நேர்பவன்
நிட்டை நின்று நிலைத்த தோதாபுரி..
அட்டமா சித்தி மான்அவ தூதனே.

தூய ஞானத் துறவி பராசக்தி
சேயைக் கண்டு திகைத்து, மகிழ்ந்துடன்,
வாய்மை யின்பறி வான சொரூபத்தை
நீய றிந்திட நிட்டை பயிலென்றான்..

சத்தி கட்டளை தாங்கித் தனயனும்,
சுத்த மான துறவற மேந்தியே,
வத்து ஞான வரத்தினைப் பெற்றனன்..
அத்து வைதத் துறவியின் அன்பினுல்..

கரும பந்தங் கழற்றி யெறிந்தனன்.
இருமை யற்றதன் இன்பப் பொருளிலே
ஒருமை யுற்றந்த உண்மைக் குருவினுல்
நிருவி கற்ப சமாதி நிலைத்தனன்.

பத்து மாதம் பயிற்சி யளித்தபின்,
சித்தன், உத்தமச் சீடனின் சீடனுய்ச்
சத்தி தத்துவந் தானறிந் தேகினுன்..
பத்தி யோகி பழுத்தனன் ஞானியாய்..

ஆறு மாதம் சமாதி யமர்ந்தபின்,
ஊறுஞ் சைதன்ய ஊற்றைப் பெருக்கியே,
வேறு வேறு சமயம் வியன்பெறக்
கூறு மொன்றைக் குறித்துள் ளுணர்ந்தனன்.

மதானுபவம்

கிருத்துசன் மார்க்கஞ் சென்ருன்; கிருத்துவின் காட்சி பெற்ருன்.
திருத்தகு குரானைப் போற்றித் தீனிஸ்லாம் சித்தி பெற்ருன்..
பொருத்தமாம்பெண்வேடத்தில்,இராதையைப்போன்ருன்;அன்பு
நிருத்தமே செய்யும் போது நிமையென நிலவி னுனே.

சாரதா பூஜை

ஆய்வுறு மதங்க ளெல்லாம் அறிந்தபின் மனைவி தானுந்
தாயெனக் கண்டான் ; அன்னை சாரதா தேவி, காளி
கோயிலுக் குற்று, நாதன் யோகத்திற் குலவித் தானுந்
தூயவ ளாகி, அன்புத் தொண்டுகள் செய்து வந்தாள்.

பெற்றதன் பெண்ணுக் கோர்தாய் பிரியமாய் அனுப வங்கள்
கற்றளித் திடுவ தேபோல், கடவுளங் கல்வி யெல்லாம்
பற்றறப் புகட்டி நாதன் பக்குவப் படுத்திச் சக்தி
உற்றெழச் செய்து, தேவி நீயென உபாசித் தானே !

" மாதரில் அன்னை கண்டு, வணங்கிடுந் தூய நேயா,
கோதறுத் தென்னை யாண்டு கொண்டனை ; குருவுந் தாயும்
நாதனும் உலகும் செல்வ நலங்களு நீயே ; உன்றன்
பாதமே மோட்ச மென்ருள் " பத்தினித் தெய்வ மாங்கே..

புண்ணியா போற்றி ! யோக பூரணு னந்தா போற்றி !
மண்ணெனப் பொன்னை நீத்த மாசிலாத் துறவி போற்றி !
பெண்ணினில் அன்னை கண்ட பெரியனே, எனது ஞானக்
கண்ணனே போற்றி ! கண்ணின் கதிரொளி யானுய் போற்றி !

பிடித்தனை யென்க ரத்தைப் பெற்றனன் புதிய வாழ்க்கை.
படித்ததெல் லாமுன் சித்தப் படிசெயும் பணிவே யெந்தாய் !
தடித்தகா மாதிப் பேய்கள், சங்கடஞ் செய்யா துன்றன்
அடித்திரு மலரை நெஞ்சில் அனுதினம் வழிபட் டேனே !

அடக்கரும் புலனை வென்றுய்..அருந்தவ முனிவர் தேவர்
கடக்கரும் வெய்ய காமக் கடலினைக் கடந்தாய் ; உன்னைத்
தொடத்தகுந் தூய தன்மை தொண்டுடன் அளித்தாய்; ஞானப்
படகென வந்து நானும் பவக்கடல் கடக்கச் செய்தாய் !

வென்றனை மனத்தை ; அன்பு வெறியெழத் தாயைக் கூவி
நன்றவள் அருளைப் பெற்றுய் ; ஞானமா மழைபொழிந்தாய்..
குன்ருெளிர் விளக்கே, காளி கோயிலின் குருவே, பாரில்
என்றுமுன் சக்தி யோங்கி யிலகுக புதிய வாழ்வே !

## பரமஹம்ஸர் வணக்கம்

இத்தகை அன்பு செய்யும் இனியநன் மனைவி தன்னை,
முத்தனும் பரம ஹம்ஸன், முன்அவ தரித்து நிற்கும்
சத்திதாய் என்று வாசச் சந்தனம், பூக்கள் கொண்டு
பத்தியாய்ப் பூசை செய்து, பரமவா னந்த ளுனுன் !

மாதவம் நீயே; சொல்லு மந்திரம் நீயே ; யோக
சாதனம் நீயே; தெய்வ சக்தியு நீயே; ஆத்ம
போதமு நீயே; சுத்த போகமு நீயே; ஜோதி
நாதமு நீயே; உன்னை நம்பினேன் ஞானத் தாயே !

தேவியே வணக்கம் ; மூலத் தீயைமே லேற்றி யென்றன்
ஆவியே ரின்பத் தேனை அருந்திடச் செய்யும் வீறு
மேவிய சுத்த சக்தி வெள்ளமே, கள்ள மின்றிப்
பூவடி மலரைப் பற்றித் தியானித்தேன் புனித வாழ்வே !

ஆலயத் திருக்கு மன்னை, அடியனைப் பெற்ற அன்னை,
ஞாலத்தில் ஆடும் அன்னை, ஞானத்தைத் தூண்டும் அன்னை,
காலத்தை யாளும் அன்னை, கருணைபூத் தன்பே யான
கோலத்தைக் கொண்டு யோக சித்தியைக் கொடுத்தா ளின்றே !

தீயநெஞ் சுடனே தீண்டத் தீமையே யாகும் ; என்றுந்
தூயநெஞ் சுடனே மாதைத் தொழத்தொழத் தூய்மை யாகும்.
பேய்மதக் காமம் போற்றிற் பேயெனத் துயரஞ் செய்யும் ;
தாயெனத் தியானஞ் செய்யச் சச்சிதா னந்த மாமே !

தாரத்தைத் தியான யோக தாரையென் ருக்கி மூலா
தாரத்தீ உச்சிக் கேற்றி ஆனந்த ஞான வள்ளல்,
காரொத்த மடமை நீங்கிக் காசினி வாழ ஞான
தீரத்தி னுலே நாளுந் திருவுப தேசஞ் செய்தான்..

உபதேசம்

வாருங்கள் விரைந்து ஞான மைந்தர்காள் ! அருட் பணிக்குச்
சேருங்கள் ! கவலை தீரத் திவ்விய மருந்திங் குண்டு..
வாருங்கள் அன்புச் சேய்காள்! வாரியென் அறிவுத் தேனைத்
தாருங்கள் உலகிற் கென்றே சக்திமான் அழைத்தான் மாதோ !

வந்தனர் அழைப்பைக் கேட்டு மஹா சக்தி அருளே யிங்கு
தந்த மெய்ப் புதல்வர் அன்புத் தங்கமே யாம்வி வேகா
னந்தர், பிரம்மா னந்தர், சாரதா னந்தர் இன்னோர் ;
மந்திர வாக்கினுலே மஹாகுரு வுபதே சித்தான் :

தாயின் அன்பும், சேயின் எளிமையும்,
பூவின் மகிழ்வும் புலரியின் அமைதியும்,
நீர்க்குட நங்கை நேரிய நினைவும்,
பார்க்கிறை யான பரமா தருவாய் !..
ஒருமின் சக்தி உலப்பறு விளக்காம் ;
ஒருபர சக்தியே உயிர்க்குயி ராமே—
மண்ணொன் றேயாம் ; மட்குடம் பலவாம் ;
பொன்னென் றேயாம் ; பொற்கலன் பலவாம்.
உலையா உயிர்களும், உலகும், வாழ்வும்,
அலையும் கடலும் அனைத்தென் றறிவாய்.
பட்டணம் சேரப் பாதை பலவாம்,
உட்பொருள் ஒன்றை உறுவழி பலவாம்.
பகல்நட் சத்திரம் பார்வைக் கில்லை.
அகத்திரைக் கில்லை ஆண்டவன் காட்சியே.
எண்ணெ யின்றேல் எரிவிளக் கென்னும் ?
மண்ணுயிர் ஈசனை மறந்தால் என்னும் ?
ஒன்றிலாச் சுன்னம் ஒருமதிப் பாமோ ?
இன்றேல் இறைவன் இகசுக மென்னே ?
அரசன் பிரதிநிதி அனுப்பி யாளுவான்,
ஆண்டவன் குருவை அனுப்பிக் காப்பான்.
உண்டார்க் கேகற் கண்டு சுவைக்கும் ;
கண்டா ருக்கே கடவு ளின்பமாம்.
தேன்மலர் தேடித் தேனீ வருமே;
ஞானியைத் தேடி நல்லோர் வருவரே.

தூணைப் பிடித்துச் சுற்றும் பிள்ளைபோல்,
மாணிறை பற்றி மண்ணகத் தாடு.
பலாப்பிசின் எண்ணெய்ப் பதத்திலொட் டாது,
உலகிருள் இறைவனை உன்னிலொட் டாதே.
தொளையெண் ணாதே ; தோசையை உண்ணு;
சளசளக் காதே ; சாதனம் பண்ணு..
பக்கிரி கேட்பதோர் பைசாப் பிச்சை ;
பாச்சா கேட்பது பலபைப் பிச்சை.
கரியினை நாய்கள் கண்டு குரைப்பதே
பெரியரை உலகோர் பரிகா சிப்பதாம்.
கணவனும் சுற்றமும் கணித்து நடக்கும்
மணமகள் போலே மதங்களைப் போற்று.
யானைகண் டோமெனும் அந்தகர் போலே,
தானே தனதே எனத்தருக் காடேல்.
நீரிலே படகு படகிலே நீரோ ?
பாரிலே ஞானி ஞானியுட் பாரோ ?
வீசுங் காற்றில் விசிறி வேண்டுமோ ?
தேசுறு பொன்னைத் தேய்க்க வேண்டுமோ ?
அடங்கிய ஞானி சடங்குகள் வேண்டான்.
ஆழ வெட்டினால் அகப்படும் ஊற்று.
மேகப் பற்றுபோல் தேகப் பற்றும்
சொரியச் சுகமாம் பின்னே துயராம்.
பேரா சைக்கிவ் வூர்கா ணாது ;
பாரா சைக்குப் பணங் காணாதே.
பாலில் வெண்ணெயும், தயிரில் வெண்ணெயும்,
போல்வர் பாசரும் பற்றறு புலவரும்.
விழித்த வீட்டிலே திருடன் மேவான் ;
விழித்த மனதில் விழைவு வராது.
தூண்டு கோலும் துருத்தியும் போலே
சான்றவர் நேசம் சக்தியை வளர்க்கும்.
உரிக்க உரிக்க உள்ளி தோலே ;
விரிக்க விரிக்க வெறுமையே மாயம்.
மின்மினி யைவிட மீன்கள் ; சந்திரன்;
மீன்களைக் காட்டிலும் சூரியன் வெளிச்சம்
திங்களைக் காட்டிலும் பொங்கிடும் ஒளியே..
எங்கள தேயென் றிறுமாக் காதீர்.
கடிக்கா விடினும் காரமாய்ச் சீறினால்
அடிக்குத் தப்பலாம் அஞ்சும் பாம்பே !
தாயார் அழைக்கத் தாவி வந்திடும்

சேய்போல் ஈசனைச் சேர ஓடிவா !
இளைய மூங்கிலே வளைவ தெளிதாம்,
முதுவேய் வளைத்தால் முறிந்து போகும்..
இளங்கிளி தனக்கே உளங்குளிர் பேச்சாம்.
அதுபோல் இளமையில் அறிவுநன் றேறும்.
இரசக்கண் ணாடி நிசமுகங் காட்டும்,
வசமுள தூய மனம்அருள் காட்டும்.
உள்ளே தேடி உள்ளதைக் கண்டால்,
உள்ளமும் அதுவே, உலகமும் அதுவே..
உன்னை நீயறி, உன்னையே பற்று
பின்னே உலகைப் பிழையிலா தறிவாய்...

இன்னியற் கதைக ளாலும், எளிதறி உவமை யாலும்,
நன்னய மொழிக ளாலும் நகைச்சுவை ததும்பப் பேசி,
தன்னுளே ஞான சக்தி தந்ததை அளந்த ளந்தே
மன்னுயி ருலகுக் கீந்தான் மகாதவ யோக சித்தன்..

சேய்களுந் தெரிந்து கொள்ளுந் தெளிவுடன் எளிதாய்ப் பேசி ;
வாய்மனங் கடந்த சுத்த வத்துவின் இயல்பு காட்டி,
நோய்மன மடக்கி, யந்த நுண்பொரு ளறியச் செய்து,
சேய்களைப் பரம ஞான தீரர்க ளாக்கி னானே..

“ வேதமே வடிவங் கொண்டு விரும்பிநாம் உய்ய வேண்டிப்
போதனை செய்த” தென்பார் ; “ புதுமையாய்ப் பழைய ஞானம்
ஈதலில் இவன்போ லில்லை ” என்னுவார், சீடர் “ அன்புச்
சோதியே சுடரே” யென்று தொழுதடி பணிந்து நிற்பார்.

பேய்மதக் காமக் கள்வர், பித்தர்கள், குடியர் ஆன்ம
நேயத்தை யறியார், தெய்வ நிந்தைசெய் அகந்தை யாளர்,
தாயினுங் கருணை மிக்க தயாபரன் அன்பி னாலே,
தூயவ ராகி யுண்மைத் தொண்டுகள் செய்தா ரம்மா !

ஆறுகள் எல்லாஞ் சேரும் அலைகடல் போலே பிரம்மம்
வேறுவே றுருகத் தோன்றும் விரிமத மதிலே சேரும்;
நீருடன் பனியைப் போல நிர்க்குண சகுண பேதம்..
நாருடன் மணிபோ லேநா னுவகை யுலக மாமே !

உள்ளிபோல் உலகம் ; ஆடி உறுதுகள் போலு மாயை
கிள்ளைபோல் நெஞ்சம் ; ஈசன் கிளர்ந்தெழுங் கற்ப கம்போல்
உள்ளுற வூன்றி ஆசா பாசத்தை உதறித் தள்ளிக்
கள்ளமில் அன்பு செய்வார் கடவுளைக் காணுவாரே

# 7. விவேகானந்தப் படலம்

இல்லறத் துறவி யாகும் இந்தமா முனியின் சீடர்
பல்லருள் மணிகளுள்ளே நரேந்திரன் பரிதி போல்வான்..
எல்லையில் இசைகள் பெற்றான் என்றலும் சுத்தன் ஆங்கே
"சொல்லுக எந்தாய் அந்தச் சுடர்மணி சரிதை" யென்றான்..

கங்கையணி சிவனருளால் கல்கத்தா தத்தர்குல மணியாய் வந்த
வங்கமணி, நல்லடியார் சங்கமணி, வரம்பெற்ற வேத ஞானச்
சிங்கமணி, பரம ஹம்ஸச் சீடர்மணி, நவபார தத்தின் வீரத்
தங்கமணி யானவிவேகானந்தத் தவமணியைச்சிந்தைசெய்வாம்!.

பாரின்பக் கலைபயின்றும் படர்கவலைக் கடல்கடக்கும் படகிலானும்ப்
" பேரின்பப் பெருக்கான பிரமத்தை நேராகப் பிறங்கக் காட்டி,
யாரின்பமளித்திடுவார் "எனயாங்கும்பரபரப்பாய் அலைந்தலைந்து,
நேரின்பப்பொருள்கண்டநிறையின்பஹம்ஸனடிநின்றான்மாதோ!

" அருவான கடவுளைநீர் அறிவீரோ? காட்டியெனக் கருளுவீரோ?
திருவாரும்பெரியாரே?"எனக்கேட்குந்திரனைமுன் கண்டு,"ஞானக்
கருவான கடவுளைநான்கண்ணாரக்காண்கின்றேன்;காட்டவல்லேன்;
உருவான திருவருளால்உணர்வாம்"என்றுரைத்தானவ்வுண்மை
கண்டோன்.

" தண்ணீரில் மூழ்கியவன் மூச்சுக்குத் தவிப்பதுபோல் ஆர்வங்
கொண்டே
கண்ணீரில் நீந்தியருட் கரைசேரக் காதலுறும் அன்ப ருள்ளம்
கண்ணாடி போலாகி மனவாக்கைக் கடந்ததொரு கடவுள்காட்டும் ;
உண்ணாடிப்பா"ரென்றுள்ளுணர்வெழுப்பிப்பரமகுரு வுதவினானே
20
கல்லெல்லாம்பிரமமயம்காடெல்லாம்பிரமமயம்;கண்ணாற்காணும்
புல்லெல்லாம் பூவெல்லாம் பூச்சிபுழு விலங்கெல்லாம் புமான்க
ளெல்லாம்,
சொல்லெல்லாம், செயலெல்லாம்,சொற்கடந்த நினைப்பெல்லாம்,
சொரூபமான
எல்லெல்லாம் பிரமமயம்எங்கெங்கும்பிரமமயம் என்றான்சீடன்!

பணியாலும் தவத்தாலுந் தியானத்தின் பயனாலும் பக்தியாலும்
தணியாத பேரின்பத் தாகத்தைத் தணித்தான்ம சித்திபெற்ற,
மணியான நரேந்திரனை மாசற்ற குருநாதன் தனது சக்திக்
கணியாக்கி, அன்பாக்கி, அருளூற்றி ஆனந்த னாக்கினானே !

வழக்கறிஞ ராந்தந்தை மரணத்தின்பின்குடும்பவருத்தத்தாலே,
உழக்குற்றுப்பசிகவலைஅமைதியினைஉண்ணும்போதருமைச்சீடன்,
"கிழக்குற்ற ஒளியென்னக் கிளர்ந்தகுரு தேவாவென் கேடு தீரப்
பழக்குற்ற உன்வாக்காற் பரசக்தி பரிந்தருளவேண்"டென்றானே!

"இவ்வாறு கேட்குமியல்பெனக்கில்லை நீயேகேள்" என்னஹம்ஸன்
முவ்வாறு ஜயகாளி சந்நிதியில் முழந்தாளைப் பணிந்து தன்னை
எவ்வாறுவறுமையிடர் செய்கிறதென்றியம்பிடவுமியலா ஞானச்
செவ்வாயி னின்றந்தச் சிந்தனையேவரவில்லைசெய்ததென்னே!—

"அன்பினை மிகவுந் தாராய் ! அறிவொளி தூண்டி மாயத்
துன்பினைத் தீராய் ; சக்தி, சுதந்தரச் செல்வ மீவாய் !
இன்பத்தி லின்பமாகும் இடையறுத் தியான மீவாய் ;
உன்பர மென்று வாழும் உறுதியை நல்கு வாயே !"

என்னையா னறிந்து மண்ணில் இலகுயிர்க் குயிராய் நிற்கும்
உன்னையா னறிந்துன் னுடல் உலகையா னறிந்துன் சக்தி
தன்னையான் அடைந்துன் இச்சை தாங்கிடுந் தொண்ட னாகி
மன்னுயிர்க் குதவி செய்யும் வாழ்வைநீ யருளு வாயே !

கற்பக நிழலைச் சார்ந்தும், காஞ்சிரங் காய்கேட் பாரோ ?
அற்பமாங் கீரை வேண்டி அரசனை யிறைஞ்சு வாரோ ?
கற்பனைச் செல்வம் வேண்டிக் கடவுளைத் தொடரு வாரோ
சிற்பரஞ் சோதி யின்பஞ் செறிந்திட நோற்குந் தூயர் ?..

உட்கினேன் வறுமையாலே என்னினும், உன்னை வேண்ட
வெட்கினேன்; குடும்ப மெல்லாம் விடுத்தனன் உனக்கே யென்று
மட்பொருள் வெறுத்த ஞான மணியினைப் பார்த்து நாதன்
"நட்புள தெய்வத் தொண்டர் நலிந்திட மாட்டார் " என்றான்.

"மற்றொன்றும் வேண்டேன்உன் மனமே என்றன்
மனமாகி வாழ்ந்திடவே மனது வைத்தேன்.
பற்றொன்றும் வேண்டேனிப் பாரில் வந்த
பயனெல்லாம் பரம்பொருளை யறிந்து தூய
நற்றொண்டும், நல்லடியார் உறவும் என்றே
நானறிந்து கொண்டேனிந் நாளில் ஐயா,
முற்றின்பப் பெருக்கே, யென் மோகந் தீர
முன்னிற்குங் குருவேயுன் னிருதாள் போற்றி !....."

என்றி றைஞ்சிடும் அன்பன் இதயத்தில்,
வன்ற வக்குரு சக்தியை வார்த்"தினி
ஒன்று மேகுறை யில்லை விவேகத்தால்
வென்று லகை விளங்"கெனக் கூறினான்..

### மஹா சமாதி

முத்தி பெற்ற முனிவரன் மெய்த்தவர்
சித்தி பெற்ற திருத்தலஞ் சுற்றினான் ;
பத்தி பற்றிடப் பாடினன் ஆடினான்.
சக்தி பற்றிடச் சாதனம் ஓதினான்.

தாக மென்றவர் தாகந் தணித்தனன் ;
மேகம் போலவே மெய்யரு ளூற்றினான்.
தேகந் தன்னை மறந்திடுந் தீமையால்,
வேக மாகப் பிணியும் விளைந்ததே..

தொண்டர் தாகந் துடைத்திடும் பேரன்புக்
கொண்ட லான குருவின் உடலுக்கே
கண்ட மாலை கடுமையாய் வந்ததைக்
கண்ட சீடர் கலங்கித் தவித்தனர்.

கருத்து முற்றுங் கடவுளுக் கீந்தவன்
மருத்து வன்கடு வாளுறக் கிறினும்
வருத்த மின்றி, வருபவர் யாவர்க்குந்
திருத்த மாகிய செம்மொழி செப்புவான்.

தன்ன தன்புத் தவமணி மைந்தரை
முன்னி றுத்தி"என் சக்தியுன் மூலமே..
மன்னு லகு மகிழப் பணி செயும்..
மின்னுட லினி வீழு"மென் றோதினான்..

தார மாகிய சாரதைக் கோர்பகல்
ஈர அன்புடன் " என்றவ சக்தியே..
கோர நோயுடல் கொண்டுமண் ணாயினென் ?
நேரி லுன்னுள் நிலைத்திருப் பே"னென்றான்..

" நம்பு ; நல்ல நரேந்திரச் செல்வனே..
என்பு தோலுடல் இன்றிறந் தாலுமே..
உன்பொன் னுள்ளத்தில் ஊற்றியென் சக்தியை
அன்ப ருக்கருள் செய்குவல் யா"னென்றான்..

தனி யிருத்தித் தனிப்பெருஞ் சீடனை
" இனி யென் சக்தி யிருப்பதுன் னுள் "ளென
நனி யதனை முழுவது நல்கியே..
" புனித, பூமியில் அற்புதஞ் செய் " யென்றான்..

பெற்றவர் பேணாக் காதல் பேணிய ஞானத் தந்தை..
நற்றவச் சீட ருக்குத் தன்னையே நல்கி, " மீண்டும்
உற்றிந்த உலகைக் காப்பேன் ஓம்சக்தி, காளி " யென்றே..
பற்றிய தேகந் தன்னைப் பற்றற உதறிச் சென்றான்..

" தத்துவ விதையை நட்டுச் சமரசக் கங்கை பாய்ச்சி,
சக்தியின் ஊட்டந் தந்து, தன்னலக் களையை வாங்கி,
நித்தியம் அன்பு பூத்து, நின்மல ஞான மான
முத்தியைப் பழுக்க வைத்த முதல்வனே போற்றி போற்றி !

சூழ்மத நதிக ளுண்ட தூயமெய்க் கடலே போற்றி !
ஆழ்ந்துளே அறிவின் முத்தை அள்ளிநீ யளித்தாய் போற்றி !
ஊழ்வினைப் பாச மெல்லாம் உதறிய முத்தா போற்றி !
வாழ்க நீ, அன்பு வள்ளால் வரகுரு நாதா ! போற்றி !"

ஆசியைப் பெற்ற சீடர் அன்பினுல் உருகி யாங்கே
காசிபூர் மயானந் தன்னிற் கடன்முறை நடத்தி, வந்து
மாசிலான் என்பின்மேற்ச மாதியொன் றமைத்து, நாளும்
பூசித்தார், பாரநாகூர் வீட்டிலப் புனித ரேற்றை.

அடியவர் இராமக்ருஷ்ண சங்கமொன் றமைத்து நாளும்,
மிடிதுயர் பொறுத்து ஞான மேன்மைக்கே தியானஞ் செய்து,
கடியவை ராக்கி யத்தாற் கலங்கறு பக்தி செய்து,
துடிமன மடக்கித் தூய துறவறஞ் சாதித் தாரே !

## குமரி முனையில் தியானம்

தலைமைவைத் தன்பர் சங்கம் தவசித்தி யடையச் செய்து,
தலமுயர் பரத நாட்டைத் தனியனுச் சுற்றிப் பார்த்து,
மலையினு மாண்பு மிக்க மாசிலா விவேகா னந்தன்
அலைகடற் குமரி முன்னே தியானத்தில் ஆழ்ந்தான் மாதோ! 120

பாரின்பப் பசுஞ்செல்வப் பயனளிக்கும் பாரதமே, பரமஞானப்
பேரின்ப கனிபழுக்கும்பெரியதவப்பொழிலேயுன்முகத்திலேநான்
ஓரின்பங் காணுமல் வறுமையிருளேகண்டென்உளந்துடித்தேன்!
நேரின்ப ஒளிதுலக்கி நின்பெருமைநிலைநாட்ட நினைக்கின் றேனே!

துணிவான துறவளிக்குஞ் சுதந்தரத்தைஉனதுசுடர்தூண்டுகின்ற
பணிவான திருப்பணிக்குப்பரிவாக நிவேதித்தேன்;பாசமெல்லாம்
அணியாகச் சூட்டியுன தன்பான அருளாசி யடைந்த போதே,
தணியாத மனத்தாகந் தணிந்தெனது சன்மசா பல்ய மாமே !

உருவாக வந்தென்னை உய்வித்த ஒப்பில்லாக் கருணை யாளன்,
குருநாதன் அருளாலேகுமரித்தாய் முன்கொண்ட விரதம்வெற்றி
தருமுண்மை ; கடல்கடந்து தனம்பொழியு வெண்ணுடு சார்ந்து செல்வத்
திருமொண்டு வந்துனது குறைதீரச் செயல்புரியுந் திட்ப மீவாய்.

## சிக்காகோ செல்லல்

சிந்தித்த செயல்கூடச் சிக்காகோ சர்வமத சங்கஞ் செல்லச்
செந்தமிழர் மணிகளுடன் சேதுபதி மஹராசன் செல்வ மீந்தான்.
வந்தித்துச் சாரதையைப் பாரதியை வீரமுனி வங்க மேறி..
சொந்தத்தாய் புகழோங்கச் சுகபோகத் தொழிலோங்கு நாடு சேர்ந்தான்.

"கடல்கடந் துற்றேன் உன்றன் கருணையாற் கடமை காக்கத்
திடமுள துணைநீ யன்புத் தெய்வமே, அநாதை யிங்கே
இடமிலேன், பணமு மில்லேன் அறிமுகம் எவரும் இல்லேன்..
அடியனை நடத்தாய் தேவா அனைத்துமுன் பாரம்" என்றான்

செல்வர்வாழ் சிக்காக் கோவில் செல்வர்கள் இனிது கூட்டும்,
பல்மதச் சங்க மேடை பாரதத் துறவி யேறத்
தொல்லைகள் முளைத்த தெல்லாம் திருவருள் துணையினாலே,
வெல்ல ஓர் †மாது வந்தாள் விவேகனும் வெற்றி கொண்டான்..

சர்வமத சபைப் பிரசங்கம்

சீரதிருந் திருச்சபையில் வேதாந்தச் சிங்கமன்று பொழிந்த செஞ்சொல்,
ஆரமுதக் கடல்போலே அவையதிரக் கரமதிர "ஹாஹா" வென்றே
பேரதிரப் புகழதிரச் சமரஸத்தின் பண்பதிரப் பெருமை பெற்றே,
ஊரதிரப் பாரதத்தின் ஒளியதிர, உலகதிர ஓங்கிற் றன்றே !

சலநிதியி லேநதிகள்சலசலத்துப்பாய்ந்தெல்லாஞ் சமதையாகும்,
உலகமதமெல்லாமும் உள்ளுண்மை ஒன்றினிலே ஒன்றிநிற்கும்
இலகுபொதுப்பொருளுக்குச் சாதியிலையினமில்லை இதனைஎண்ணிக்
கலகமற ஒருகுலமாய்க் கலந்தினிதுகருத்தொன்றிவாழுவோமே.

மெத்தவுல காயதத்தின் மினுக்கினிலே மோகித்த மேலைநாடாம்
வித்தமிகும் அமெரிக்கா, யுத்தமிகும்ஐரோப்பா வியக்கவெங்கும்,
அத்துவிதப் பொருள்காட்டி அருள்காட்டி, ஆன்மசுதந் தரத்தை நாட்டி,
சுத்தமிகு வெள்ளன்பர் தொடரவே தாய்நாட்டின் கரையைத் தொட்டான் !
புதுமையிதுபுதுமையெனப்புலவோர்கள்போற்றிசெயச்சேதுநாடன்
இதுபெரிய சம்பவமென் றெழுப்பியதோர் வெற்றித்தூண் முன்னே நின்று
முதுகடலைக் கடந்தொலித்த முனிஞான முரசென்னும் விவேகானந்தன்,
பொதுநலஞ்செய் யோகத்தைப் புரிந்திடவே பாரதரை அழைத்தான் மாதோ !

பாம்பனில் விவேகானந்தர் பிரசங்கம்

"பாரதத் தாயே ஞானப் பரிதியே எழுந்து நின்றுன்
பூரணக் கதிரை யெங்கும் புண்ணியம் பொலிய வீசாய் !
காரிருள் இன்றிக் கட்டுங் கவலையும் இன்றித் தெய்வ
வீரரின் அரசி யேயுன் வெற்றியால் உலகம் வாழ்க !

† Mrs. George Hale

இமயம்போல் எழுந்து நில்லாய் ! இணையிலாத் தாயே போற்றி,
சமயங்கள் அனைத்தும் ஆனாய், சாத்திரம் எல்லாந் தந்தாய்.
எமனையும் வெல்ல வல்லாய், இனியிந்த உலகுக் கெல்லாம்,
அமரவாழ் வருள வாராய் ஆத்தும சக்தி நீயே..

மண்மிசை யுனது மக்கள், வறுமையால் மடமை நோயால்,
புண்ணுழன் றடிமைத் தீயிற் புழுவெனத் துடிக்க லாமோ ?
உண்ணநல் லுணவு தாராய், உயர்நலக் கல்வி தாராய் !
கண்ணினீர் பெருகு மம்மா கதியிலார் தம்மைக் கண்டால் !

தங்குயிர் உலக மெல்லாம் தாமெனக் கண்ட மேலோர்
உங்களுக் குள்ளே யுள்ள உண்மையே கடவுள் என்றார்.
இங்கினிச் சண்டை வேண்டாம். இந்தியர் ஆத்ம ஞானச்
சிங்கம்போல் எழுந்து வாரீர் பொதுஜன சேவை செய்வோம் !

உடலினை உறுதி செய்வீர் ! உருக்கெனத் தசைவ ளர்ப்பீர் !
கடமையைக் காப்பீர், கஞ்சிக் கலயமும் அறிவும் ஏந்தி,
மடமையும் பசியுந் தீர்ப்பீர். மாண்புற வுழைப்பீர் ; நாளும்
திடமனங் கொண்டு வீர தீரராய் வாழ்வீர் மாதோ !

அன்னநல் லுபதே சங்கள் அருளிவி வேகா னந்தன்,
சென்னையில் மடம மைத்துச் சீடரை மிகவுங் கூட்டித்
தன்னறி வுடனே சேவா தருமமும் உணர்த்தி ஹம்ஸன்
பொன்னடி பணிந்தான் வாழும் புண்ணியப் பலனு மீந்தே..

"ஒன்றுநீ யுண்மை யென்னில் ஒளிந்தினி யாடல் ஏனோ,
இன்றுனைக் காட்டேல் வாளால் என்னையே பலிகொ டுப்பேன்,
என்றுளத் தார்வம் பொங்கி இறைவியைக் கதறிக் கண்ட
வன்றவக்கொழுந்தே,என்றன்வணக்கத்தை யுனக்கே தந்தேன்!

"என்செயல் எதுவும் இல்லை. ஏழையேன் உனது மைந்தன்,
உன்செயல் புரிய வந்தேன் ; பலனெல்லாம் உனக்கே எந்தாய் !
இன்சொலோ டாசி கூறி அனுப்பினை என்னை அன்னை..
நின்னருள் போற்றி தேவி, சாரதா நிமல சக்தி !

தன்னைத்தா னறிந்து பொங்கும் சச்சிதா னந்த ஊற்றில்
என்னைத்தான் ஆட்டி, உன்னை என்னுளே வைத்தாய் போற்றி!
பொன்னைத்தான்மதியாய் தெய்வப்பொருளையேமதித்தாய்எங்கள்
அன்னையப் பனுமாய் வந்தாய் அருட்குரு நாதா போற்றி !"

உலகெலாம் குருவை ஓத ஓய்வறு தொண்டு செய்தே,
பலபல சங்கங் கண்டு, பாரிசை மிகச்சு மந்தே,
நலமுள குருவ ழைக்க நலியுடற் சுமையை நீத்துப்
பொலிவுறும் ஆத்மா வாகப் போயினன் அறிவா னந்தன்!

இத்தகைப் பெருமை யெல்லாம் இராமகி ருட்டி னன்செய்
சத்திசா தனத்தால் வந்த தன்மையை அறியக் காட்டி
முத்திமா முனிவன் சாந்தன், அதுசெயு முறையுங் கூறி,
அத்தின வுபதேசத்தை அத்துடன் முடித்தான் மன்னோ !

"சத்திய ஞானனந்த வெள்ளமாய்த் தழைத்தென் மீது
நித்தியக் கருணை பூண்ட நிமலசத் குருவே போற்றி,
இத்தினஞ் சொன்ன தெல்லாம் என்னுயிர்க் கின்ப" மென்றே
சுத்தனும் கௌரி தாதை துணையடி பணிந்து சென்றான்.. 208

# 8. ஊர் மகிழ் படலம்

சத்தியன்

"வெள்ளமும் விளைநிலப் பயிரும் போலவே,
உள்ளமும், உள்ளமும் ஒன்று கூடியே,
அள்ளமு தளித்திடும் அன்பு வாழ்க்கையைத்
தெள்ளுற வளர்ப்பது தெய்வக் காதலே !

எங்குல வுயிரெனும் இரவி மைந்தனின்,
மங்கல நாளிது.. மகிழ்மின் யாவரும் !
தங்கருத் தொன்றிய தகுதி யாளர்கள்,
பொங்குநற் புதுமணம் புரிந்து வாழ்மினோ !

ஒருதனி மைந்தனுள் ளுவக்குஞ் சீரிய
திருமண நாளிது சிறக்க வேண்டியே,
இருபதி னாயிரம் இல்லம் நல்கினேன்..
பொருளற மின்பமும் பொருந்தி வாழவே..

சித்திமான்

நன்மண ஓலைகள் பறந்த நாடெலாம்..
பொன்னகர் பொலிந்தது போகநாடென
இன்னிசை எழுந்தன ; ஈகை யோங்கின.
மன்னுயிர் வளம்பெற மகிழு நாளிதே !

பாரத முனிவர்

பக்குவப் பயிருக்குப் பருவ மாரிபோல்,
சுக்கிரன் புதன்குரு சூரியன் மிளிர்,
மிக்கநல் ஓரையில் மேவும் இல்லறம்,
மக்களுக் கினிதெனும் வாய்மை காண்பமால். 20

சத்தியன்

இல்லற வீரருக் கினிமை யாகிடும்
நல்லறத் தொழில்பல நாட்டு நாளிதே..
செல்வத்தைப் பயன்பெறச் செய்யு நாளிதே..
அல்லலைத் தீர்த்திடும் அமுத நாளிதே..

ஈதலின் பொருளையும், ஈகை யோங்கிய
காதலின் பொருளையும், காதலோங்கிய
மாதரின் பொருளையும், மாதர் சக்தியால்
ஆதகும் பொருளையும் அறிஞர் கூறுமின் !

வண்மையும் உண்மையும் வாய்ந்த மன்னவன்,
கண்ணெனு மைந்தனின் கடிம ணத்திலே,
எண்ணறு நல்வினை யியற்ற நின்றனன்..
கண்ணிய அமைச்சவை கைகொ டுக்கவே !

மறவினைப் பாம்பென மறைந்து சீறிடும்,
உறவுள கலிஞனின் ஒற்றுஞ் சூழ்ச்சியும்
புறமதில் வரம்பிலும் புகாது சேனையைத்
திறமுற வைத்தனன் சித்தி மந்திரி.

“ தங்குல கோங்குக ! தருமம் ஓங்குக !
நங்குல மோங்குக ! நன்மை யோங்குக !
பொங்குக ஜயம் ! அருள் பொலிகவே !” யென
மங்கள பேரிகை மழையி னார்த்ததே !

உளங்குளிர் செய்தியைக் கேட்டவ் வூரினர்
கிளர்ந்தெழுந் திறைவனின் கீர்த்தி யோதியே,
இளந்திரு வரசனுக் கின்ப மோங்கவே,
வளம்பெறு கோயிலில் வணக்கஞ் செய்தனர்.

மனைதொறு மணவினை வந்த தேயெனப்
பனைகளை நட்டனர் பந்தல் வேய்ந்தனர்.
புனைமல ரணிமிகப் பொலியக் கோத்தனர்,
நனைமலர்க் கொம்புகள் செழிக்க நாட்டினார்.

சீரணி நன்னகர்த் தெருக்க ளெங்குமே
தோரணங் கட்டினர் கொடி துலக்கினார்.
பூரண கும்பங்கள் பொலிய வைத்தனர் ;
வாரண முலவினர் வரிசை யாகவே !

அதிர்முர சொலியுடன் அடிமிதித்துப் போர்க்
குதிரைகள், மண்ணிலங் குலுங்கத் தாவின..
மதில்களைச் சுற்றிலு மல்லர் நின்றனர்
சதிவினை வாடையுஞ் சார்ந்தி டாமலே..

நீதிநன் னிருபனை நிமலர் வாழ்த்தினார்,
வேதங்கள் அவரவர் விதி முறைப்படி
ஓதினர் ; சமரஸ வுள்ளங் கொண்டவர்,
வீதியில் வித்தகர் சொல் விளக்கினார்.

அருவியைப் போலிசை யார்த்து மன்னவர்,
பெருகிய பரிசனஞ் சூழப் பெட்புடன்,
அருமணித் திரளுடன் அணுகி வந்தனர்,
வருகவென் றேற்றிட மன்னர் மன்னனே.

வங்களர், கேரளர், வடுகர், கன்னடர்,
*அங்கியர், மாரதர், அங்கர், கூர்ச்சரர்,
‡சிங்கர்செந் தமிழர்கள் சித்தி மாபுரந்
தங்கினர் ஒருகுலத் தனய ரென்னவே !

சாதியுஞ் சமயமுஞ் சாத்தி ரங்களின்
பேதமும் பிறகிடப் பிறந்த யாவரும்,
தீதறும் பொதுநலச் சேவை தன்னிலே,
கோதற ஒன்றெனுங் கொள்கை பற்றினார்.

வகைவகை நடையுடை வாய்ந்த நாட்டினர்,
வகைவகை மொழியினர், மனமொத் தன்பினால்,
வகைவகை யாகிய வரிசை யேந்தியே,
தொகை தொகை யாகவே தோன்றி னார்கொலோ !

வந்தவர் வந்தவர் மனம கிழ்ந்திடச்
சிந்தையிற் களிமிகு சித்தி நண்பர்கள்,
" வந்தனம், வரு"கென வரவு கூறித்தம்
சுந்தர மாளிகை துலங்க ஏற்றனர்.

சமபந்தி விருந்துகள், சந்தப் பூச்சுகள்,
கமகம கமவெனுங் கதம்ப மாலைகள்,
அமரரும் விரும்பிடும் அமுத கானங்கள்,
விமரிசை நடனங்கள் வீடு தோறுமே !

பைந்தமிழ்ச் செல்வர்கள், பாசங் கொண்டுதம்
சொந்தமாம் குலக்கொடி,—சுத்த கௌரியை
வந்தனை யன்புடன் வாழ்த்திப் போற்றியே
ஐந்தமிழ் வளங்களை அன்பி னீந்தனர்.

---

* *ராஜபுத்திரர், அக்கினிகுல வீரர்*

‡ *சீக்கியர்*

நவமணி வில்லிட ,நயன ராசிகள்
அவனியின் அழகினை அதிச யித்திடத்
“ தவம்பெற்ற தவமணி சாந்த கௌரியும்
சிவம்பெற்ற சுத்தனுந் திகழ்க நீ”டென்றுார்..

முறைமுறை அவரவர் முந்து வந்துதம்
இறைவனை இளந்திரு வேந்தை ஏத்தியே
நிறைநலங் கூறினர் ; நீள் வரிசையாய்க்
குறையறு செல்வங்கள் குவித்து நின்றனர்.

விண்ணகம் இதுவென விளங்கும் பான்மையாய்க்
கண்ணகங் களித்திடக் கவின்செய் நன்னகர்,
எண்ணறு மின்பமுற் றிருக்கும் இந்தநாள்,
பண்ணவன் இல்லறம் பகரத் தோன்றினுன்..

அலையெனக் கூடிய அன்பர் கூட்டமும்,
தலைபெறு சுத்தனுஞ் சார்ந்து கேட்கவே,
நிலைபெறும் இல்லற நெறியைச் செப்பினுன்
கலைபெறு மன்றினிற் கனலு மாமுனி.

# 9. இல்லற வொழுக்கப் படலம்

(பாரத முனிவர் இல்லறம் எப்படி நடத்துவது என்பதைச் சொல்லுதல்)

### இல்லறம்

இல்லற மாகும் இயலறஞ் சொல்ல
நல்லவாக் கருளுக தில்லைச் சிவனே !
அன்புறு பெண்ணும் அறிவொளிர் ஆணும்
பண்புறக் கூடிப் பழுதற வாழும்
இல்லற வாழ்வே இப்புவி வாழ்வாம்.
இல்லற மின்றி இல்லையிப் புவியே !

### மனை

அகில மெல்லாம் ஆண்பெண் குடித்தனம்,
மனிதன் அன்பு மனைவியைப் பொருந்தி,
மக்களாய் விரிந்து, மன்னுயிர் அளாவி,
விளைநிலஞ் செழிக்கக் கிளைவிரி ஆறுபோல்,
பலதுறைப் பணியாற் பாரினுக் குதவிப்
பாருயிர் வடிவாம் பரமனை நாடி,
மாண்புறச் செய்வது மனைவாழ் வாமே.
வீட்டின் விரிவே நாட்டின் விரிவாம்.

## காதல்

ஊடும் பாவும் ஆடையா வதுபோல்,
காத லிருவர் கண்ணுங் கருத்தும்
கூடி வாழவே வீடு வாழுமே !
ஆதி சக்தி, அகிலம் வளரவே
காத லென்கிற கனலைத் தந்தாள்.
இயற்கைக் காதல் இன்பமே யாகும்.
மயக்குங் காமம் மனப்புய லாமே.
உள்ளுயிர்க் கலப்பின் உணர்வே காதலாம்.
அந்தக் காதல் ஆண்டவ னிடத்தில்
அமைந்து நின்றால் அருளின்ப மாமே.
மாணிக்க வாசகர் மாசறு காதலைச்
சிவனிடம் வைத்துச் சிவமய மானார்.
ஆண்டாள் காதலை அரங்க னிடமே
வைத்தவன் அருளை வாரி யணைந்தாள்.
இரண்டு கம்பிகள் இணைந்துமின் சாரந்
திரண்டு பரவுந் திறமே போல
ஆணின் அறிவும் அரிவையின் அன்பும்
பேணிக் கலந்து பெருகிய காதலால்,
அறம்பொரு ளின்பம் அடைவ தாகுமே.
ஆணிற் பெண்ணும் பெண்ணில் ஆணும்
பூணிற் பொன்போற் பொருந்துவ தாமே.

## சதிபதி தத்துவம்

ஆணுட் சிவமும் பெண்ணுட் சக்தியும்
காணும் போதே காதல் இனிதாம்.
தேகங் கடந்த தேகியிற் கூடும்
யோகமே வாழ்வின் உட்பொரு ளாமே.
இதயக் குகையில் உதயக் கதிர்போல்
வதியும் தூய வாய்மையே நாமாம்.
அதுவே சக்தி யாகிய பெண்மை ;
அதுவே சுத்தமாம் ஆண்மையென் றறிவீர்.
உயிருக் கதுவே உள்ளுயி ராமே.
பயிருக் கதுவே பசப்பு மாமே !
உலகுயிர் அந்த ஒருயிர்ப் பன்மையே.
பலபல தோற்றம் பலவாம் ஒருமையே.
இந்த வுண்மையைச் சிந்தனை செய்தால்,
ஆண்பெண் ணுறவே ஆன்ம நேயமாம்.
ஆன்ம நேயம் அருட்கலப் பாமே.

பாரும் வளரும் பயிரும் போலே,
இருவரைக் காதல் இணைப்ப தாகுமே.
ஒருவரை ஒருவர் மருவிய காதலால்
இருவரும் பூரணம் எய்திட லாமே.
இவ்வுள் ளுண்மை இருவரும் அறிந்தால்,
பெண்ஆண் உறவு பெருமை பெறுமே.
ஆணுக் குப்பெண் அடிமை யில்லை ;
ஆணும் பெண்ணிற் கடிமை இல்லையே.
இருவரும் காதலால் ஒருவரே யாவார்.
இருவரின் ஒருமையே இல்லற வுண்மை.
இருவரின் இன்பமே இல்லறப் பெருக்கம்.
வள்ளுவர்க் கமைந்த வாசுகி போலே,
காந்திக் கமைந்த கஸ்தூரி போலே,
அருந்ததி வசிட்டருக் கமைந்தது போலே,
பரம ஹம்ஸரின் பத்தினி போலே,
காதலுங் கற்பும் கடவு ளுணர்வும்
பொதுநலப் பணியும் பொருந்திய வாழ்வே
சதிபதி யோக சாதன மாமே..

### பெண்மையின் பெருமை

ஆணைப் பூரண மாக்கும் அருளே
உண்மைப் பெண்ணென் றுரைத்திட லாமே.
மாதெனக் காண்பது மகாசக்தி விளக்கம்,
அவளே வீட்டின் அரசியா வாளே
அவளே வாழ்வின் ஆனந்த மாமே.
அழகின் காந்தம், அன்பின் வசீகரம்,
சித்தங் குளிர முத்துத் திருநகை,
மயிலெனச் சாயல், குயிலெனப் பாட்டு,
கிளியெனப் பேச்சு, கிளர்ச்சி கொள்ளும்
அமுதச் செஞ்சொல் அளவிலாப் பொறுமை,
கணவனைப் பேணும் கற்பின் அற்புதம்,
அகமலர் மகிழ முகமலர்ப் பொலிவு,
கருத்தைப் பேசுங் கண்மலர்ப் பார்வை,
கவலை தீர்க்குங் கனிவாய் முத்தம்..
புலனுடன் மனமும் பூரித் துவக்கும்
அகப்புறப் புணர்ச்சி, ஆர்வங் கொண்ட
குழந்தைக ளாலே குலம்வளர் மாட்சி,
உரிய மணாளனைப் பிரியா நேயம்,
பெற்ற மக்களைப் பேணுங் கருணை—
ஆஹா, பெண்ணின் அருமையென் சொல்வேன் ! !

## இல்லாள்

இல்லாள் வீட்டின் இலக்குமி யாவாள்.
வீட்டைத் தினமும் கூட்டி மெழுகி,
கோலம் போட்டுக் கொய்மலர் வைத்து,
பாத்திரம் பண்டம் பதவிசாய் அடுக்கி,
குறித்த இடத்திற் குறித்ததை வைத்து
ஆத்திரப் படாமல் அமைதி யாகத்
தேய்ப்பன தேய்த்துத் தோய்ப்பன தோய்த்தே,
உலர்த்துவ துலர்த்தி உடம்பை வளைத்து
வீட்டுக் காரியம் வியனுறச் செய்து,
குடங்குட மாக நடைநீர் சுமந்து
தீயை மூட்டித் திருத்துவ திருத்தி,
மூன்று வேளை முறையாய்ச் சமைத்து,
மக்களுங் கணவனு மகிழ்ந்திட ஊட்டுங்
காம தேனுவே கற்புள பெண்ணும்.
வெளியில் அலைந்து வேலை செய்து
சம்பா திக்கும் தன்னுயிர்த் தலைவனை,
அன்பாய்ப் போற்றி அருந்துயர் மாற்றி,
மனங் கனிந்த மங்கல வுரையால்
உள்ளந் தன்னை உருக்கும் பாட்டால்,
அழகு கொஞ்சும் அன்ன நடையால்,
நாணம் பூத்த நகைமுக நோக்கால்,
திருவிளக் கேற்றித் திரியைத் தூண்டி,
மனையின் வாழ்வு மங்கல மாகவே
சேய்களுங் கணவனுஞ் சேம முறவே,
கற்பகக் கையாற் கடவுளை வணங்கும்
உத்தமத் துணைவி பத்தினித் தெய்வமே.
மனையைத் தேடி வந்த விருந்தை
அறுசுவை யூட்டி அகமகிழ் விப்பாள் ;
வரவிற் கேற்ற வகைசெல விட்டுப்
பக்குவ மான சிக்கனம் பேணி,
மந்திரி போலத் தந்திர முரைப்பாள்.
இல்லறஞ் செழிக்க நல்லது செய்வாள்.
இல்லை என்னும் ஏழைக் கீவாள்.
பரிவு கொண்டு பசிப்பிணி தீர்ப்பாள்.
உற்றார் உறவினர் உடம்பு படுத்தால்,
பதறிச் சென்று பச்சிலை கொணர்ந்து,
கஷாயந் தந்து கட்டிக் காத்துத்
தொண்டு செய்வாள் ; அண்டையி லிருந்தே,

வருத்தந் தீர்க்கும் மருந்தே யாவாள்,
உயிராங் கணவனின் உடலாம் அவளே.
குறிப்பறிந் தொழுகுங் குலமக ளான
பெண்ணின் பெருமையைப் பேசப் போமோ !
மண்ணுக் கேற்ற மரத்தைப் போலப்
பெண்ணுக் கேற்ற பெருமையாம் வீடே.

### ஆணின் பெருமை

ஆணின் பெருமை அளவில தாமே..
இல்லா ளுடனே இணங்கி வீட்டை
நடத்து கின்ற நாயகன் அவனே.
வாழ்வுப் பயிரின் வளநீர் அவனே.
வீட்டறங் காக்கும் வீரன் அவனே.
அகங்கோ ணது முகங்கோ ணது,
செய்கடன் அறிந்து செய்முறை செய்து,
சமய மறிந்து சாற்றுவ சாற்றி
ஊருக் குதவும் ஒருதொழி லாலே,
உண்ண வுடுக்க உழைத்துக் கொணர்ந்து,
மனைவி மக்களை மனமுறப் பேணி,
இன்முகங் காட்டி, இனியன சொல்லி
மனக்கசப் பின்றி மாண்புற நடந்து,
இங்கித மறிந்து நன்கட னாற்றி,
காத லெல்லாங் கருத்துற வைத்து,
கனவிலும் பிறமனை கருதா துள்ளம்
கொண்ட மனைவியே குலசக்தி யாகப்
போற்றுந் தீரனே புருஷனு வானே.
கற்பை இருவருங் காத்தல் கடனே.
ஒருமனை யுடனே திருவுற வாழ்ந்து,
காம வெறியைக் கட்டுப் படுத்தி,
சிவ சக்தியைத் திண்புறக் காத்து
மனப் பொருத்தமும் தினப் பொருத்தமும்,
வீரியத் தெம்பும், விரும்பு மிருவர்
உடலின் உறுதியும் உள்ளக் கிளர்ச்சியும்
இடமுங் காலமும் இயல்பு மறிந்தே
நடப்பது நன்மை நயப்பது வாமே.
மகப்பேறு வேண்டி உகப்புடன் கூடி
மற்ற நாளிலே மாதா சக்திபோல்
வாழ்க்கைத் துணைவியை மதித்தலே மாண்பாம்.
நல்ல நாலைந்து செல்வர் வந்ததும்,

காதலை யெல்லாம் கடவு ளிடமே
பொருந்த வைத்துத் திருந்தித் திருந்தி,
காமத் தைச்சிவ காமமாய் மாற்றுக !
இல்லறப் பயனை எய்திய காதலர்
பிறவிப் பயனைப் பெறுதலுந் தகவே.
மக்களை யடைந்த மானிடப் பிறவி,
கடவுளை யடையக் கருதலுங் கடனே.
ஒருவரை யொருவர் திருவுறத் திருத்தி,
இருவரும் பூரணம் எய்தலே வாழ்வாம்.
ஒருவரை யொருவர் உண்விழை வன்றே ;
ஒருவரை யொருவர் உயர்த்தலே வாழ்வாம்.

## மக்களை வளர்த்தல்

மக்களே மனையின் மங்கல விளக்காம்.
மகவிலா வீடு மலரிலா மரமே.
வித்தும் நிலமும் வீறுபெற் றுலே,
முத்துக் கனிகள் முளைப்ப தாமே.
நாதவிந் துக்களைச் சேதமாக் காமல்,
காதலுங் கற்புந் தீதறக் காத்து,
தனதுயிர் மனையைத் தானென வுணர்ந்து,
நிறைமுறை யான நேசம் பேணி,
உணவும் நினைவும் உறக்கமும் காத்து,
நல்லுட லெய்தி நன்மணங் காத்துப்
பிணிதுயர் கவலை பெருஞ்சின மில்லாச்
சாந்த வேளையிற் சதிபதி யானோர்,
இராமன் கண்ணன் இராச ராசன்
விசயன் சிவாஜி மீரா கோதை
கம்பன் வள்ளுவன் காளி தாஸன்
இனைய மகான்களை இதயத் தெண்ணின்
சீரிய மக்கட் செல்வமுண் டாமே.
மக்களை நல்ல வழியில் வளர்த்துத்
தக்கவ ராக்குதல் தந்தைதாய் கடனே.
இற்றைக் குழந்தை இனிவரும் மனிதன்,
தாயையுஞ் சேயையும் நோயறக் காத்தல்
பண்புறு நாட்டுப் பணியது வாமே.
தாய்ப்பா லூட்டித் தக்க வயதில்
நல்லுண வூட்டி, நனிவினை யாட்டி.
உடலைத் திருத்தி, உடையைத் திருத்திச்
சிறுசிறு கதைகளாற் சிந்தனை யுயர்த்தி,

இயற்கை யழகில் இன்புறச் செய்து,
பிரம சரிய விரதங் காத்துக்
காலம் போற்றுங் கல்வியைக் கற்றே
சீல முள்ள தீரராய் வாழப்
பிள்ளை வளர்ப்பது பெற்றோர் கடனே.

### குடும்ப ஒற்றுமை

மனமும் குணமும் மாறு படாமல்,
ஒன்றிய குலமே வென்றி யளிக்கும்.
இசையுடன் சுருதி இணைவது போலே,
குழலும் உயிர்ப்பும் குலாவிய தொப்பவே,
பூவழ குடனே பூமணம் போலே,
உள்ளமும் உள்ளமும் உருகிக் குழைந்து,
செருக்கிலா நடையும் சினமிலா வுணர்வும்,
கடுப்பிலா முகமும், கனிந்த முறுவலும்
கரவாத் தெளிவும், மறவா நினைவும்
அசடறு பேச்சும், கசடறு நேயமும்,
காரியத் திறனும், கருத்தும் கவனமும்
சிறுமை யில்லாச் சீரிய தன்மையும்
வறுமை யில்லா வளமும் வண்மையும்
அழியா முயற்சியும், அறிவுப் பயிற்சியும்,
தொழிலால் வந்த தூயநல் லுணவை
விருந்துடன் பகுத்தே அருந்திடும் இன்பமும்,
ஆருயிர்க் கருணையும், அன்பும், அறமும்
பாருயர் பொதுநலப் பணியும் பண்பும்
அருங்கலைப் பயிற்சியும், அறிவுப் பயிற்சியும்
அன்புப் பயிற்சியும் அருளுடன் போற்றி,
ஒவ்வொரு மூச்சையும் செவ்விய வேலையில்
உய்க்குந் திறனும், உட்புறத் தூய்மையும்,
கொண்ட வாழ்வே குலத்திற் கினிதாம்.
சண்டைச் சரவே சாரா தாங்கே.
பொழுதெலாம் பொன்னும் புனிதவாழ் வதுவே
இன்ப துன்பமாம் இல்லறத் தீயில்
பட்டுப் பட்டுப் பழுதை விலக்கிச்
சுட்டுப் பட்ட சுடர்ப்பொன் போலே
அன்புயிர் உருகி அமைதி சேருமே.
தன்னலச் செருக்கே இன்ன லாகுமே.
உண்மைத் தியாகமே ஒற்றுமை யாக்கும்.
ஒற்றுமை யிருந்தால் வெற்றிமேல் வெற்றியாம்.

நாட்கடன்

திவ்விய ஜீவன சித்தி பெறவே
ஒவ்வொரு நாளும் உயர்த்துக வாழ்வை.
நாட்குறிப் பெழுதல் நல்ல பழக்கமாம்.
அறுமணி நேரம் அயர்ந்து, காலை
நான்கு மணிக்கே நலமுட னெழுந்து
உடலும் குடலும் உடன் சுத்தி செய்தே
மாவேல் ஆலால் மாதுளம் பூவால்
பல்லை விளக்கிப் பத்து விழுங்கு,
நன்னீர் அருந்தி நல்ல காற்றில்
மூச்சை யிழுத்து முறையாய் விட்டு,
உடலைப் பயிற்றிக் குடலைப் பயிற்றி
சுற்ற மெல்லாம் சுத்தஞ் செய்து,
மனைமக் களுடன் வட்டமா யமர்ந்து
பெரியார் அருட்பா பிரியமாய்ப் பாடி,
இறைவனைத் தொழுதபின் இனமலர் கொய்து,
தேய்ப்பன தோய்ப்பன திருவுறச் செய்து,
புதுப்புன லாடிப் புத்துடை யணிந்து,
மனதை யடக்கி வாழ்வை உயர்த்தும்
அனுட்டா னங்களை அமைதியாய்ச் செய்து,
மனைவியும் கணவனு மக்களோ டமர்ந்து,
ஜெபமா லையிலே திருப்பெயர் ஜெபித்து,
திவ்விய ஜோதியைத் தியானஞ் செய்து,
கதிரை வணங்கிக் கடவு ளுணர்வுடன்
அருட்பெரி யாரின் அமுதவாக் கருந்தி,
பசிக்குத் தூய பண்ட மருந்திச்
சுறுசுறுப் பாகத் தொடங்குக நாளே.
ஒவ்வொரு மனிதனும் உழைத்தே யுண்க.
கோடித் தொழில்கள் குவலயந் தருமே.
உணவிற் காறு மணிப்பொழு துழைப்பைச்
செலவிட வாழ்வு செழிப்ப தாமே.
மாலை ஐந்தரை மணிக்கு வெளியே
ஒன்றரை மைல்கள் உலாவி வரலாம்.
வியர்க்க வியர்க்க விளையாடி வரலாம்.
தேக சுத்தம் செய்து கொண்டு,
தியானம் செய்து திருவிளக் கேற்றி
இனிய பண்ணுடன் இறைவனைப் போற்றுக.
பிறகு நல்ல பெரியார் நூல்களைப்
படித்து, விளக்கிப் பயனை யறிகவே.

பத்து மணிக்குப் பள்ளி கொள்கவே.
தானியம் பருப்பு தயிர்பால் காய்கறி
கடலை தேங்காய் கனிவகை தேர்ந்தே
சுசிருசி யாகப் பசிக்குத் தருக !
பட்சம் ஒருநாள் பட்டினி போடுக !
மாம்பழ மாயினும் மலம்வைத் துண்ணேல் !
ஐம்பூ தத்தால் அமைந்தது மேனி.
ஐந்து பூதமே அதற்கு மருந்தாம்.
மாசறு மனமே தேசுறும் உடலாம்.
மனமுட லுறுதியே வாழ்விற் இன்பம்.
வள்ளுவர் காட்டிய வழியிது வாமே.
இன்னும் பொதுவிதி இயம்புவேன் கேளீர்.

பொது விதிகள்

உள்ளந் தோறும் உள்ள பொருளே
அவன் அவள் நான்நீ அதுவென லாமே.
உள்ளறி வுடனே உலகப் பணிசெய்.
உள்ள மெப்படி அப்படி உலகம்.
அறவழி சென்ருல் அச்சமே யில்லை.
உண்மையே அறத்தின் உயிர்நிலை யாகும்.
அறத்தால் வருவதே அகமகிழ் வாகும்.
பிறப்பினும் ஒழுக்கமே சிறப்புடைத் தாகும்.
அடங்கி நடத்தலே அறிவிற் கழகாம்.
நாணுவ நாணிப் பேணுவ பேணுக.
நன்றிசெய் தாரை என்றுமே மறவேல்.
நடுநிலை யாளர் கெடுவதே யில்லை.
தீமையே புரிவார் செழிப்பது மிலையே.
நல்லது பொல்லது நாவின் வருமே.
இன்சொல் லாலே வன்சொல் மாற்றுக.
புறங்கூ ருதே ; பொருமைப் படாதே ;
பயனில் லாத பதரைத் தள்ளு.
முன்பின் னறிந்து நன்மொழி பேசு.
உலகைத் திருத்துமுன் உன்னையே திருத்து.
இனத்தைக் கெடுக்கும் சினத்தைக் கொல்லு.
மனச்சாட் சிக்கு மாறுசெய் யாதே.
புலா லுண்பது புண்ணை யுண்பதாம்.
கொல்லா விரதமே கொள்கையிற் பெரிதாம்.
கள்ளும் சூதும் களவும் பொய்யும்
விலைப்பெண் முயக்கும் கொலைசெயும் வாழ்வை.
கோள்சினம் பொருமை குடியைக் கெடுக்கும்.

தீயவர் உறவு நோயினுங் கொடிதாம்.
புல்லறி வாளர் சொல்வழி செல்லேல் !
அறிவுடை யாரே திருவுடை யாராம்.
மாசறு நல்லார் நேசமே இனிதாம்.
பெரியார் நேயம் பெருமைப் படுத்தும்.
அன்பால் ஆளை அறிந்துகொண் டிணங்கு.
அருட்பெரு மானின் திருவடி பற்று.
கற்றுக் கேட்டுக் கருதிநின் றொழுகு.
முயன்று முயன்று முடிந்ததைச் செய்கவே.
உழைத்துப் பிழைத்தே ஊருக் குதவு.
பயிரைப் பேணி உயிரைப் பேணுக.
உண்ண வுடுக்க உரிய தொழில்செய்.
பிச்சை கேட்பவன் பெருமை யிழப்பான்.
சோம்பலை விரட்டு ; சுறுசுறுப் பாயிரு.
ஆழ முயன்றால் ஆகாத தில்லை.
உறுதியும் உழைப்பும் இறுதியில் வெல்லும்.
பாட்டின் பயனைப் பங்குவைத் துண்ணு.
ஈந்த வாழ்வே இன்ப வாழ்வாம்.
ஈயாச் செல்வம் இன்னொரு நோயாம்.
மழையைப் போல மன்னுயிர்க் குதவு.
சுற்றத் துடனே பற்றுத லாயிரு.
கண்ணோட் டத்துடன் கனிவுரை பேசு.
பசிக்கே உண்டால் பலநோய் தீரும்.
நாடும் வீடும் பீடுற வாழு.
கொடுங்கோ லொழித்துச் செங்கோல் நாட்டு.
நடுக்குங் கொடுங்கோல் படக்கென் றொழியும்.
ஓவ்வொரு நாளும் உலகறிந் தொழுகு.
தாங்கிய நல்வினை தூங்கா தியற்று.
ஆகுந் தொழிலை ஆராய்ந் தாற்று,
காலமும் இடமும் கருதி வினைசெய்.
தகுதி நோக்கித் தருவதைத் தருக.
பலித்த மட்டும் பயனுள வினைசெய்.
தைரியத் தாலே சாவையும் சாடு.
வீரம் வீரம் வீரம் வேண்டும் !
பகைவர் அஞ்சப் பலத்தைப் பெருக்கு.
பண்பிலாப் பகைவர் நண்பரே யாகார்.
அரம்போல் உட்பகை ஆக்கந் தேய்க்கும்.
காலன் வரினும் கவலைப் படாதே.
ஆழி யென்றால் அலையு மிருக்கும்.

பார்வாழ் வென்றுற் போரும் இருக்கும்.
பொல்லரை ஒழிக்கப் போர்க்கலே வேண்டும்.
மானங் காத்தலே மனிதத் தன்மை.
உள்ள மட்டில் உலகம் உள்ளதே.
உலகம் பொய்யென உறங்கா தெழுந்திரு,
சுயநல மின்றிப் பொதுநலங் கருதி,
மனத்துற வுடனே மக்களுக் குதவி,
உள்ளுயிர் போலே உலகுயிர் கருதி, 360
உள்ளின் விரிவே உலகென் றுணர்ந்தே
உள்ளம் ஆன்ம வுறையுளென் றறிந்தே,
உள்ளப் போர்வையே உடலென் றெண்ணி
சுத்தான்ம நேயத் தொடர்புடன் எல்லாம்
இயல்புற வாழ்ந்தால் இன்புற லாமே.

மண்ணுயிர்க் குலங்கள் சுத்த சக்தியின் மக்கள் என்றே
எண்ணுமின் ; அறமும் அன்பும் இயற்றிடப் பொருளைச் சேர்மின்
கண்ணினம் எனவே காதற் கருத்தினில் ஒன்று கூடிப்
பெண்ணினப் பெருமை ஆணின் பெருமையாற் பொலிக வாழீர்!

அளப்பறுங் கலைகட் கெல்லாம் அளவுகோ லான ஞானி
விளக்கிய பொருளை நல்ல விளக்கொளி யென்னக் கொண்டே,
துளக்கறு சிந்தை கொண்ட சுத்தகௌ ரியரும் ஆங்கே
உளக்கருத் தொன்றி யவ்வா றெழுகிட விரதம் பூண்டார்.. 373

# 10. திருமணப் படலம்

### மணவறை

ஞால மின்புற நல்லவர் இன்புறக்
காலம் இன்புறக் கௌரியும் சுத்தனும்,
சீலம் போற்றுந் திருமண நாள்கொண்ட
கோலங் கண்டு குளிர்ந்தன கண்களே !

தேயங் கொண்ட திருக்களெல் லாங்கலைக்
கோயில் என்னக் குலாவு மணவறை,
தூய கற்புந் துகளறு வீரமும்,
நேயங் கொண்டு நிலாவிய தொத்தனர்.

வன்னச் சிற்பி வனைந்த மணவறை,
பொன்னிற் பூத்துப் பொலிமணி யாலன்று ;
கன்னி கௌரி கனியிளம் பொற்பிலே
மின்னிப் பூத்தெழில் வீசி மிளிர்ந்ததே !

பண்ணா மைந்த பனுவலின் இன்னியற்
கண்ணா மைந்த கவினுறு மண்டபம்,
திண்ணா மைந்தநந் தீரனுக் கேற்றதோர்
பெண்ணா மைந்த பெருமையைப் பேசிற்ருல்.

வேந்தர் வீரர், வியன்கலே வாணர்கள்,
சாந்தர் மேவுந் தரளப்பொன் மண்டபம்,
ஏந்தல் சுத்தன் இளந்திரு வீசிடுங்
காந்த மேவிக் கவர்ச்சி யளித்ததால்.

கள்ள மற்ற கலேவளர் நெஞ்சினேக்
கொள்ளே கொள்ளுங் கொழுமணி மண்டபம் ;
வள்ளல் சுத்தன் மணத்திருக் கோலத்தால்
விள்ள ரியவிண் ணின்பத்தை வென்றதே !

தேனேச் சுற்றிய தீங்குரல் வண்டெனக்
கானேச் சுற்றிக் கவின்செய் மலரெனக்
கோனேக் கோனின் குமரனேக் *கூர்விழி
மானேச் சுற்றி வளர்ந்ததம் மாசபை.

மாசி லாத மதியிர வியெனத்
தேசு லாவுந் திருமண வாளரை
ஆசையால் அளக்கும் விழி, அல்லியும்
வாச மாமரை வன்னமும் போன்றதே.

பொன் னழகுடன் பூத்தது ஞாயிறு.
பொன் னழகு பொலிந்தது வையகம்.
பொன் னழகு புதுமணப் பந்தலில் !
பொன் னழகு பொலங்கொள் உடலெலாம் !

இயலற மெனும் இல்லற வாழ்க்கையின்
பயனும் பண்பும் பழுதறச் சொல்லிடும்
வியனி சைகளே வித்தகர் பாடினர்.
இயலி சையுடன் கூத்து மியங்கவே.

தங்க யாழ்குழல் சல்லரி மத்தளம்,
பொங்கு நாதசு ரம்பொழி நல்லிசை
மங்கல முரசம் மணி யோசையால்
எங்கு மின்பத் தரங்கம் எழுந்ததே.

"நல்ல வேளே யிது"வென நான்மறை
வல்ல பாரத மாமுனி சாற்றினன்.
ஒல்லென் ருேம்சுத்த ஓம்சக்தி ஓம்என
எல்லே யற்ற குரல்கள் எழுந்தவே.

*கௌரி

மின்னைக் கூட்டி வியன்பெறச் செய்தநல்
அன்னங் கிள்ளை, அணிமயில் அன்னவர்,
இன்னி சைக்குயில் என்னப்பல் லாண்டுடன்
முன்வைத் தார்முளை யோங்கிய பாலிகை.

தோரம் ஆரந் தொகைதொகை யாகவே,
தார கைக்கணம் போலத் தழைத்திடும்,
சீர ணிந்த திருமண வேதிமுன்
பூரணக் குடம் பொற்புற வைத்தனர்.

தட்டுத் தட்டாய்த் தளிரிளம் பாவையர்,
அட்ட மங்கலம் ஆர்வமோ டேந்தியே,
வட்ட வேதிகை மாணுற வைத்தனர்..
எட்டுத் திக்கிலும் இன்பஞ் சிலிர்க்கவே !

மணாளர் திரு

கான்வளர் மானினள் கார் குழலினாள்,
மீன்வளர் விழியினள், மின்னி டையினள்,
தேன்வளர் மொழியினள், தெய்வக் கற்பினாள்,
வான்வளர் மதிமுகக் கௌரி வாழ்கவே !

கற்பனைக் கவிகளுக் கரிய காட்சியான்,
சிற்பர மேசனைச் சிந்தை செய்பவன்
கற்பகக் கையினான் கருணை யாழியான்
அற்புத வீரமும், அருளு மோங்கினான்.

வாய்மையும் தீரமும் வடிவு கொண்டவன்
தாயினும் அன்பினான்; தருண மாமழை
ஏயநல் லுலகிற்கே தன்னை யீந்தவன் ;
சேயினும் தெள்ளிய உள்ளங் கொண்டவன்.

மணிவரைத் தோளினான் ; வைர வாளினான் ;
அணியினு மணிமிகும் அருள ழகினான் ;
தணிவறு மொய்ம்பினான், சக்தி ஜோதியான்
மணமகன் வாழிய சுத்த மன்னனே !

நவமணித் திரளுக்கு நகை யளித்திடும்,
தவமணிச் செல்வரைச் சபையு ளாரெலாம்,
"அவளுடை யழகிற்கும் இவன ழகிற்கும்
எவ்வளவு பொருத்த"மென் றிசைத்து வாழ்த்தினர்.

ஓரையும் உள்ளமும் ஒத்த வேளையில்,
ஆரணம் ஓதினர் அறிந்த மேலவர் ;
பாரத முனிவரன் பரனை யெண்ணியே
சீரிய கடன்முறை செய்ய லுற்றனன்.

(இதுமுதல் கலியாணச் சடங்குகளும் அவற்றிற்குரிய மந்திரங்களும் விளக்கப்படும்.)

### மணவறை வாழ்த்து

இகபர சுகமெய்தி இல்லற வளமோங்கித்
தகவுறு தம்பதிகள் சந்ததம் வாழியவே!
நறுமண வறைசேர்ந்த நலங்கிளர் தம்பதிகள்,
அறம்பொருள் அழகின்பம் அளவற ஓங்குகவே..

பகலுடன் கதிர்போலே, பாலுறு சுவைபோலே
அகநகு காதலர்கள் அமுதென வாழியவே..
மணவினை நிறைவேறி மங்கலம் பொங்கிடவே
கணபதி சிவகௌரி கழலிணை பணிவோமே !

### திருவிளக்கெடுத்தல்

சந்தனங் குங்குமம் சாத்திப் பூவைத்தே,
சந்ததி தழைத்தவர் தங்கத் தீபங்கள்,
இந்திரை யுடன்வர இன்னி சையுடன்,
இந்திர தனுநிற மேந்தத் தூண்டினர்.

"மங்கள வள மோங்க, மணமகர் குலமோங்கப்
பொங்குக நல்"மென்றே பொன்விளக் கேற்றிடுவோம்..
இருளிட ரச்சமெலாம், ஏகிட வேகமுடன்,
அருளொளி தனிற் கூடி அன்பர்கள் வாழியவே !

விண்ணமு தளியாலே விளைபயிர் நிலம்போலே,
கண்கருத் தொன்றியநம் காதலர் வாழியவே
பொருள்செழித் துலகுதரும் போகமெ லாஞ்செழித்தே,
திருமனை வாழியவே தினகர சுபவொளிபோல் !

### வழிபாடு

சுத்த சதாசிவனைத் துரிய பரம்பொருளை
சக்தி மஹேச்வரியை ஐயமுறப் போற்றிடுவோம்..
புதுமலர் அணி சூட்டிப் பொதுநடப் பெருமானை
வதுவரர் நலமோங்க வாழ்த்தி வணங்கிடுவோம்.

### நிவேதனம்

மணவறை தனிலன்பர் வகைவகை யாய்வைத்த
அணிமணி யாவையுமே அருளிறை யேற்றருள்க !
மஞ்சளுங் குங்குமமும், மலர்கனி, சந்தனமும்,
பஞ்ச வமிருதமும், பால்தயிர் நெய்வகையும்,

வெற்றிலை பாக்குடனே விதவித வாசனையும்,
முற்றிய தேங்காயும், முளைநவ தானியமும்,
அறுசுவை யுண்டிகளும், அடுக்கிய வரிசைகளும்,
இறைவ நிவேதனமாய் ஏற்றருள் ஏற்றருளே !
பாத்திர வகையேற்றுப் பரமவுன் கிருபைக்குப்
பாத்திர மாக்கியருள் பாலி தயாநிதியே !
உடலுயிர் மனமுள்ளம், உடைமைகள் யாவையுமே
கடவுளே யேற்றருளிக் காத்தெமை யாளுவையே !

*புண்ணிய நீர் தெளித்தல்

உலகைக் குறிக்கவே இலையை விரிப்போம்
யாக்கையை வளர்க்கும் அரிசி பரப்புவோம்..
இதயங் குறிக்கப் பதுமம் செய்வோம்,
அதன்மேற் கலசமாம் அருளை நாட்டுவோம்.
மங்கல வாழ்வாம் மாங்கொத் திடுவோம்.
சிவத்தைக் குறிக்கும் தேங்காய் வைப்போம்
சந்தனங் குங்குமம் சாத்தித் தொழுவோம்,
கங்கை யமுனை காவிரி கிருட்டினை
சிந்துகோ தாவரி நருமதை சேர்ந்த
புண்ணியப் புனல்போல் பொங்குந் திருவருள்,
மனமுயி ருடலின் மாசினை நீக்கி,
வாழ்வுப் பயிரை வளமுறுத் துகவே,
புனிதன் பெயர்சொலிப் புண்ணிய நீரைத்
தெளிப்போம் அருளிற் குளிப்போம் யாமே !

அமுதுண்ணல்

பாலுந் தேனும் பழமும் பருகி,
பாலுறு நெய்போற் பசுவினிற் கலந்த
அமுதனை நினைப்போம் ; ஆருயிர் வாழ்வை
அமுதமே யாக்கும் அருளை வேண்டுவோம்..

* *நவதானியங்கள் நவக்கிரகங்களைக் குறிக்கும். கோதுமை சூரியன், நெல் சந்திரன், துவரை செவ்வாய், பயறு புதன், கடலை வியாழன், மொச்சை வெள்ளி, எள்ளு சனி, உழுந்து இராகு. விசாலமான இலைகளைப் போட்டு, இத் தானியங்களைத் தாமரை வடிவமாக அதன் மேல் அழகாகப் பரப்புக; அதன் மேல் நீர்க்கலசம் வைத்துக் கலசத்தின் மேல் மாவிலை, அதன் மேல் மஞ்சள் தடவிய தேங்காய் வைத்து, கலசத்திற்குச் சந்தனம் குங்குமம் இடுக.*

## நவக்கிரக வணக்கம்

நவக்கி ரகங்களை நலமுற வணங்குவோம்.
சூரியன் அருட்பெருஞ் ஜோதியைப் பொழிகவே !
சந்திரன் மகிழ்ச்சி தந்தருள் புரிகவே.
செவ்வாய் வீரத் திருவெமக் கருள்கவே !
புதன் எம் அறிவைப் பொலிவுறத் தூண்டுக !
வீறுந் திருவும் வியாழன் அருள்கவே !
சுக்கிரன் அருளுக சுகபோ கங்கள்.
சனியெமக் கருளுக மனம்வெல் யோகமே.
இருளை விழுங்குக இராகுகே துக்கள் !
வானச் சுடராய் வயங்கு மிறைவன்
ஞானச் சுடரை நல்குக வெமக்கே !

## † தீ வளர்த்தல்

துங்கநன் மனையறந் துலங்க வேண்டியே
கங்கணங் கட்டிக் கடமை யறிந்து,
குலமரம் பூத்துக் கொழுங்கனி குலுங்க,
நலமுறப் பாலிகை வலமுற வணங்கினோம்.
சோபனம் பெரியார் சொல்லிக் கொடுத்த
கூறை யணிந்து, கோடியு டுத்தே,
இருவரும் அன்பால் ஒருமனப் பட்டே,
திருக்கரம் பற்றித் திருவலம் வந்துன்
முன்னே யமர்ந்தோம் மூலக் கனலே,
சக்திச் சுடரே, சாந்தச் சுடரே
பக்தருக் கருளும் பாவனத் தீயே !
தாமத மாயை தன்னை விலக்கிச்
சேமந் தருவாய் சிவச்சுட ரொளியே !
அருட்பெருங் கனலே, ஆருயிர்க் கனலே,
இருட்டினை விரட்டும் இரவிக் கனலே,
நீயே சாட்சியாய், நிறையுடன் இருவரும்,
தூயநல் லான்ம நேயரே யாகி
இல்லற விரதம் ஏற்றோம் காவாய்,
நல்லற வீரர் வல்லமை யாவாய் !
தேயம் வாழுந் திருப்பணி செய்வோம்..
ஆயுளும் ஆற்றலும் அளிப்பாய் போற்றி!
அருளும் பொருளும் ஆக்குவாய் போற்றி!

---

† *ஆறிதழ்த் தாமரை வடிவாகக் கோலம் போட்டு, நடுவே ஓம குண்டம் வைத்துச் சமித்துக்களால் ஓமம் செய்தல்.*

மருளும் மதியை மாற்றுவாய் போற்றி.
துன்பந் துடைத்துத் துயரை விலக்கி
இன்பம் பெருக்கும் எழிலே போற்றி.
உள்ளன் புடனே உன்னை வணங்கினோம்.
தெள்ளிய கருணை வெள்ளமாய் வருவாய்
மரபு விளங்கநன் மக்களைத் தருவாய்
உழைத்த செல்வமும் ,உழைக்கும் ஆற்றலும்,
உலகிற் கினிதாம் உத்தமத் தொழிலும்,
வந்ததைப் பகுத்துணும் சிந்தையும் அருளாய்
சீர்மை யருளாய், நேர்மை யருளாய்.
அயரா முயற்சியும், அமைதி யுள்ளமும்,
கட்டுங் கவலையும் அற்ற மனமும்,
வீரிய பலமும், வெற்றித் திறனும்,
மங்கல வாழ்வும் எங்களுக் கருள்வாய்.
ஆவிக் குயிராம் தேவனில் வாழும்
தேவ ஜீவனத் திருவெமக் கருளாய்.
உலக மெல்லாம் ஒருகுல மாக
அருள்வழி வாழும் ஆன்ம நேயராய்,
யோகமும் சுத்த போகமுங் கொண்ட
பூரண ராய்நர நாரண ராக
சாந்தமும், சிவமும், சக்தியும், பத்தியும்,
அழகும், அணியும், அமைந்து வாழவே,
நாங்கள் வாழ்ந்து நற்பணி புரியும்,
களிப்பைத் தருவாய் கடவுட் கனலே !
எங்கள் மனைக்கு மங்கள மருளாய்,
கடமையைக் காக்கக் கருத்தும் கவனமும்,
உடல்மனத் திட்பமும், உறுதியுந் தருவாய்.
கற்புடன் இருவரும் கண்ணுடன் மணிபோல்,
சேர்ந்து வாழுந் திறமையைத் தருவாய்,
ஒருவரை ஒருவர் உயர்த்திட வருளாய்..
பாரெலாம் பரவிய பராபரக் கனலே,
சித்தி யளிக்கும் சின்மயச் சுடரே,
அரக்கரை யழிக்கும் உருத்திரக் கனலே,
அமரவாழ் வளிக்கும், அருந்தவக் கனலே,
முருகவே ளாக முளைத்த கனலே,
குமுறிமே லேறுங் குண்டலிக் கனலே,
போற்றி போற்றியுன் புண்ணிய மேனி
ஓம்சு வாகஓம், ஓம்சுபம் எனவே !

ஓமெனத் தீயினைச் சுற்றி உத்தமர்,
சேமமாய் வாழ்கெனச் செஞ்சொல் ஆர்த்திட
மாமுனி மகளுடன் மாசில் சுத்தனும்,
கோமளத் திருக்கரங் கோத்து நின்றனர்.

ஏகமாய் இகபர மிணைந்த காட்சியோ !
போகமும் யோகமும் பொருந்தும் பண்பிதோ !
தேகமும் தேகியும் போலச் சேர்ந்துமை
பாகனைப் போன்றனர் பரிதி போன்றனர்.

அற்புத மணமகன் அம்பொன் மாலையைக்
கற்பிளம் பாவையின் கழுத்திற் சூட்டுமுன்,
சிற்பர மாத்மனைத் தியானம் செய்துதன்
இற்புகு பத்தினிக் 'கினைய சொல்லினன்.

திருமண வுறுதி—சுத்தன்

அக்கினி முன்பும், ஆன்றோர் முன்பும்,
பெற்றோர் முன்பும், உற்றோர் முன்பும்,
உறுதி கூறி உயிரெனக் காப்பேன்..
வாழ்க்கைத் துணையாய் வரிக்கிறேன் உன்னை..
மனதை யறிந்தே மணவினை புரிந்தேன்.
இல்லறத் தேரை இருவரும் நடத்தி,
நல்லறங் காத்து நலமுற வாழ்வோம்.
பொன்னுங் கலனும் பூவும் மணமும்,
கண்ணுங் கண்ணுங் கலந்தது போலே,
ஒன்று பட்டோம் என்றும் பிரியோம்.
நீயென் உலகம், நீயென் உடலம்,
நானுன் வாழ்க்கை, நானுன் உயிரே.
உன்னலம் என்னலம், என்னலம், உன்னலம் ;
உனக்குறு துயரம் எனக்குறு துயராம்.
பெண்மையிற் சிறந்த உண்மைத் துணைவீ,
ஆண்மைக் கேற்ற கேண்மை யுடனே,
மானே, உனது மானங் காப்பேன்.
உடல்மனங் களிக்கக் கடமையைச் செய்வேன்.
நீயென் சக்தி, நானுன் சிவமே.
ஆத்தும நேயம் பூத்துக் கனிந்து,
குடும்பந் தழைக்கக் குவலயந் தழைக்க,
அறம்பொரு ளின்பமும் அருளும் பெருக,
ஒன்றாய் இல்லற யோகம் புரிவோம்..
வென்றித் திருவே வீட்டிற் கரசியே..

சுத்த சக்தியாம் அர்த்தநா ரீசனை,
மனதில் எண்ணி மணமாலை சூட்டினேன்..
மங்கல மாகுக நங்குல வாழ்வே !..

### மணமகள் (மாலை சூட்டி)

இருபா லுள்ளும் ஒருதா னாகும்,
இறைவா இன்ப நிறைவெமக் கருளாய் !
இவரே என்னுயிர் இன்புறுங் கணவர்.
இவரென் வாழ்க்கை இவரென் னவரே !
இவரே ஆணுடல் ஏந்திய நானும்.
இவரென் இறைவர் நானவர் இயற்கை.
இவரே என்றன் இதயத் துடிப்பாம்.
என்னுளம் இவர்மனை. இவருளம் என்மனை.
என்மூச் செல்லாம் இவர்பணிக் கீந்தேன்.
வடமீன் போன்ற திடமன துடனே,
கற்பைக் காத்துக் கண்கருத் தொன்றி,
யோகத் துணைவியாய், போகத் துணைவியாய்,
அவர்குலம் பெருகவே அவர்மன மகிழவே,
வாழ்விலும் தாழ்விலும் வாழ்க்கைப் போரிலும்,
இணைபிரி யாமல் என்றும் வாழ்வேன்..
அக்கினி சாட்சி, ஆன்றோர் சாட்சி !
என்னை வளர்த்த முன்னோர் சாட்சி ;
ஆயுள் மலர்களை அன்பு மாலையாய்த்
தொடுத்திவர் மார்பிலே சூட்டுகின் றேனே !
எனையிவர்க் கீந்தேன்..இறைவா போற்றியே !

### பெரியார் வாழ்த்து

நீடுவா ழியரோ நீடுவா ழியரோ !
பீடுறு நம்பியும் பெட்புறு நங்கையும்,
கண்ணிரண் டென்னக் கருத்துறக் கலந்து,
புண்ணிய யோகமும் போகமும் பொலிய,
அன்பும், அறமும், அருளும் பெருகிப்
பண்பும் பயனும் பழுத்தினி தோங்கி,
இகபர சுகங்கள் எல்லாம் எய்தி,
மங்கல மாக வாழ்க வாழ்கவே !
நங்குல நன்மை நாளும் பெருகவே !

### பாரத முனிவர்

**ப**ண்ணுடன் சுருதி போலப் பகலுடன் கதிரே போலத்
தண்பயிர், அதனைத் தாங்குந் தரையையும் போலக் காணுங்
கண்ணுடன் மணியும் போலக் கௌரியும் சுத்த னாரும்
எண்ணுறு நலங்க ளெல்லாம் எய்திநீ டூழி வாழ்க !

சாந்த முனிவன்

உள்ளமே தில்லையாக, உயிர்தொறு நடனஞ் செய்யும்,
வள்ளலின் கருணை யாலே வளமையும் இளமை யின்பும்,
தெள்ளறி வாற்றல் யாவுந் திருவுடன் பெருகி நாளும்,
வள்ளியு முருக னும்போல் வதுவரர் வாழ்க மாதோ !

எல்லாரும்

நன்று வாழுக நன்மனை யறத்தினுக் குயிராய்
நின்று வாழுக ! நிலவுல குயிர்களின் அன்பை
வென்று வாழுக ! பொதுநலம் விளங்கிட நீடு
மன்று ளானருள் ஓங்கிட மணாளர்வா ழியவே !

இந்திரை, பெண்மணிகள் ஆலத்தி யெடுத்து

பொலிக பொலிக புதுமண வாழ்க்கை..
நலிக தீமை, நன்மையே வளர்க !
அழிக துன்பம் அமுத கங்கைபோல்
பொழிகபே ரின்பம் பொங்குக சுபமே !..

சத்தியன்

அருமை நாட்டீர், அரியீர், பெரியீர்..
என்னுயிர்ச் செல்வன், இத்திரு நாட்டின்
மன்னுயிர் நாளை வாழ்த்திடு மன்னவன்,
சித்தி மரபின் சிரோமணி யான
சுத்தன் எங்கள் சுடர்பெறு மைந்தன்,
சாந்த முனிவன் தவத்திற் பழுத்துப்
பழந்தமிழ் மரபின் பாக்கியக் கனியாம்
கௌரியை ,மாசறு கற்புச் செல்வியை
அறிவும் திருவும் அருளும் பெற்ற
பெண்மைக் கனியை உண்மைக் காதலால்,
அரசியாய்ப் பெற்றான்..ஆண்டவன் அருளால்..
இனியுல கிற்கெலாம் இன்பமே யாகும்.
இவ்வுல கெல்லாம் இன்பவீ டாமே;
மன்னுயிர்த் தொண்டே இன்னுயிர் வாழ்வாம்.
என்னுங் கொள்கை இருவருங் கொண்டார்.
உத்தம முனிவர் உரைத்தநல் லாசியும்,
அரசர் வாழ்த்தும் அமைச்சர் வாழ்த்தும்,
பெற்றோர் வாழ்த்தும் பெற்றதம் பதிகள்,
எனக்கு விடுதலை யீந்தென் செங்கோல்
ஏந்துந் திருநாள் இதோவரும் புதனும்..
ஆதலின் அரசரும், அன்பரும், அறிஞரும்,

அணிநகர்க் கணியாய் அதுவரை யிருந்தே
சுடர்நேமி தாங்குஞ் சுத்தகௌ ரியரை,
ஆசீர் வதித்தே அருள்புரி வீரே !

சத்திய னுரைத்த மாற்றம் "சரிசரி" யென்று மற்றோர்,
மெத்தவும் ஆமோ தித்து, விரிமலர் தூவித் தூவி
"சுத்தமா மன்னன் வாழ்க ! சுந்தரக் கௌரி வாழ்க !
இத்தினம்போலேஇன்பம்என்றுமேபொலிக "! வென்றார்..

### சித்திமான்

வன்மனக் கலியர் மாய வலையணு காத வண்ணம்,
நன்மண வைப வத்தை நாமின்று கண்ட வாறே..
மன்னுயிர்க் கினிமை செய்ய வதுவரர் அடுத்த வாரம்
பொன்னுறு மகுடந் தாங்கிப் பொலிகநீ டூழி மாதோ !

### திருமணவழகு

வாயுரை கடந்தது மனங்க டந்ததே.
ஆயிரம் விழிகட்கும் அரிய காட்சியாம்,—
தூயனும் கௌரியும் துலங்குஞ் செவ்வியில்
கோயில்கொண் டழகெலாங் கொலுவி ருந்தவே.

மலையெனக் குவிந்தநல் லாசி மாமலர் !
மலையெனப் பரிசுகள் வரிசை யாகவே !
கலைகளின் விளக்கமும் கான வெள்ளத்தின்
அலைகளும் அழகுடை அமுதக் காட்சியே !

"சோபனம் சோபனம் சோபனம்" என
நாபதி ஞயிரம் நன்றி சைத்திட,
தூபமுந் திபமுந் துலங்கும் பந்தலில்
பூபதி மகிழ்ந்திடப் புனிதர் ஆடினார்..

### நலங்கு

கானக் குயிலார் கனகங்குழை மாதர்
தேனிசை பாடத் திருமண நல்லார்,
மானிணை போல மயிலிணை போல,
நானம் பூசி நலங்குவைத் தாரே !

கூவிக் கூவி நெஞ்ச மான குயிலிழைக்கு துன்னையே..
தாவித் தாவி ஆர்வவெள்ளந் தழுவுதுன்றன் ஆவியை..
இன்ப மான வாசத் தென்றல் இனியதூது சொல்லுமே..
அன்புக் கூட்டிற் கிஞ்சுகமுன் ஆசைபற்றிப் பேசுமே.
வாரும் வாரும் பூசு கின்றேன் வாரிவாரிச் சந்தனம்..

தாரும்தாரும் தாமரைக்கை தாருமோர் மலர்நகை..
செங்குழம்பு தீட்டுகின்றேன் சேவடி மலரிலே..
மங்கல மலர்முடித்து வாசநீர் தெளிக்கின்றேன்..
செண்டுகட்டி யாடுவேன்.. சிரித்தமா முகத்தினைக்
கண்டுகண் குளிர்ந்தியாழிற் காதலின்பம் பாடுவேன்..

## பூச்செண்டாடல்

கண்டார் உள்ளங் களிகூத் தாடச்
செண்டாடினரே திருமண வாளர்..
தேன்மலர்கள் கொய்துகொய்து செண்டுகட்டி யாடுவோம்.
வான்மலர்க ளூடுசெல்லும் வாண்மதி முகத்தியே.

வந்து வந்து செல்லு கின்ற வாழ்க்கை மின்னைப் போலேவே..
உந்தி உந்திப் பந்தடிப்போம்—உள்ள மின்ப மோங்கவே !
எற்றியெற்றிச் சுற்றிடும் இருவினைக் கவலையை,
வெற்றிவெற்றி யென்றுவேக மாகப்பந் தடிப்பமே !
பாம்பின்மேல் நடம்புரிந்த பங்கயத் திருவடி
தாங்கி, அச்சம் நீங்கித் தாவித் தாவிப்பந் தடிப்பமே !
செம்பொன்அம்ப லத்தில்ஆடுஞ் சிவநாதன் பாதத்தை
நம்பிநம்பி யாடுவோம் நமச்சிவாய ஓமென்றே !
சித்திமன்னர் வெல்கெனத் திசைகள் ஆர்க்கஆர்க்கவே..
சுத்தசக்தி சக்தியென்று சொல்லிப்பந் தடிப்பமே..

## திருவூஞ்சலாடல்

தேனாகி ஆனந்தத் தெளிவு மாகித்
திருத்தொண்டர் துணையான தெய்வ மாகித்
தானாகித் தன்மயமே எவையு மாகிச்
சக்தியுடன் சிவபெருமான் ஆடி ரூஞ்சல்..

வானாகி வளியாகி, ஒளியு மாகி,
வாழுயிருக் குயிராகி, வளமையாகி,
ஆனந்த நடனசபா பதியு மாகி,
அமிர்தவல்லி யோடுசிவன் ஆடி ரூஞ்சல்..

அன்புறுதி யென்கின்ற கால்கள் நாட்டி,
ஆர்வமெனும் சங்கிலிகள் அமையப் பூட்டி,
இன்பமிகு தியானமெனும் பலகை நீட்டி,
இதயேசன் எங்களுடன் ஆடி ரூஞ்சல்..

பெண்ணாகி ஆணாகிப் பிரபஞ்ச மாகிப்
பேசரிய துரியபர பிரம மாகி,—
கண்ணாகிக் கதிராகிக் காட்சி யாகிக்
கதியாகும் அருட்சோதி ஆடி ரூஞ்சல்..

எத்திக்கும் அருளாட்சி இலகி வாழ்க !..
    எந்தாயின் இசையோங்கி யென்றும் வாழ்க !
தித்திக்குந் திருநாமச் செல்வம் வாழ்க !
    தீயகலி யச்சமறத் தேசம் வாழ்க !

பத்தர்செயும் அருட்பணியின் பயன்கள் வாழ்க !
    பரிசுத்த சன்மார்க்கப் பண்பு வாழ்க !
நித்தியமாம் அருளாட்சி நிலவி வாழ்க...
    நீடூழி சுத்தசக்தி ஆடி ரூஞ்சல்..

சித்திரத் தெழுதொ ணுத செழுந்திரு மதி முகத்தாள்,
முத்துருள் பவள வாயாள், முதல்வன்பால் உயிரை முற்றும்
வைத்தவள் அன்பே யான வடிவினள், கமலக் கண்ணுள்,
பத்தினித் தெய்வம் சுத்த பரமனின் அருளால் வாழ்க !

"நலமெலாம் உருவெடுத்த ஞாயிறு போன்ற செல்வன்,
நிலமெலாம் வளம்பெற் றோங்க நிருதரைச் செற்ற வீரன்,
அலகிலாத் திறமை சான்றுன், அருளினுற் பிறந்த வள்ளல்,
பொலிக நம் சுத்த"னென்றே பூமழை பொழிந்த தம்மா !

பல்கிய வுவகை எங்கும் பரவிடக் கற்று நின்ற
நல்லவர் வாழ்த்தெ டுக்க, நாதசா கரத்தி னூடே,
செல்லுமா னந்தத் தோணி யிரண்டென வதுவ ரர்கள், 400
மல்லிகை ரோஜா மேவு மலரணை சென்றுர் மாதோ !

மன்றினுக் கினிது கூறி, மன்னவர் மன்னன் ஆங்கே
பொன்றிணிப் பரிசில் ஈந்து, பொதுநலம் பலவும் போற்றி,
நன்றிகள் யாங்கு மேற்று, நன்மண மான தென்றே
வென்றிகொள் முரச மார்க்க வியன்மகிழ் வெய்தி னுனே !

பொம்மெனக் கீத மெங்கும் ! புதுப்புது விளையாட் டெங்கும் !
கொம்மையந் திருவின் மிக்கார் குடமுலை குலுங்கத் தாவிக்
கும்மிகள் அடித்தார் ! நல்ல குரலுடன் விரலுஞ் சேர
ஜிம்மென வீணை மீட்டித் தேனிசை யளித்தார் மாதோ !

பகவனை அன்பு செய்யும் பாகவ தோத்த மர்கள்,
இகபர சுகங்க ளீயும் இல்லறக் கற்பின் மிக்க
பகவதி கௌரி, சீதா, பத்மினி, திரு, சாவித்ரி
குகனுடன் வள்ளி காதை குயிலெனப் பாடினுரே !

வாசுகி கற்பின் செல்வி, வள்ளுவர் மனை யொழுக்கம்,
தேசுறு குறளின் மாண்பு தெளிவுறச் சாந்தன் ஆங்கே
பேசிடக் கேட்டா ரெல்லாம் பெரும்பய னடைந்தோ மென்றுர்...
மாசறு கதைக ளாலே மணவினை முடிந்த தம்மா ! 417

# 11. வாழ்க்கைப் படலம்

பொய்யறு மனத்தைப் போலே புண்ணிய நதியின் பாங்கர்,
துய்யவெண் சலவைக் கல்லால் சுடருறச் சமைத்த வீடு..
மொய்ம்மலர்ச் சோலே தன்னை முத்தமிட் டாடுந் தென்றல்,
பையவந் தினிது வீசும் பரிமள வசந்த வீடே..

பலமுயர் தென்னை,வாழை, நாரத்தை, பலா,மா, பாக்கு
நலமுயர் வில்வம் வேம்பு நாவல்சண் பகங்க டம்பு
புலமுயர் பசும்ப யிர்கள் பூஞ்செடி வகைசெ ழித்துத்
தலமுயர் சித்தி பூமி தாங்கிய *ஐயவீ டம்மா !

ஒவ்விய வாசல் கூடம் உள்ளறை, முற்றம் ; ஓங்கும்
செவ்விய மாடி யெல்லாம் சிற்பநூல் அறிந்த மேலோர்
இவ்வகை இன்ன தாயின் இதுசுப வீடாம் என்றே
அவ்வகை யமைந்த கோயில்—அழகின திருக்கை யம்மா !

எத்திசை நோக்கி னாலும், இனமணி யுடன்செம் பொன்போல்,
பத்திசேர் பூக்கள் காணும்; பழங்களின் செழுமை காணும்.
சுத்தகௌ ரியரைக் கூவுஞ் சுதந்தரப் புட்கள் காணும்;
சித்திரப் பவன மெல்லாந் திருநட மாடக் காணும்.

கொடுவெயிற் காலந் தன்னிற் குளுகுளு வென்றி ருக்கும்
கடும்பனி மழைக்கா லத்திற் கதகத வென்றி ருக்கும் ;
நெடும்பக லிரவு மாங்கே நித்திய வசந்த மாகும் ;
தொடும்பரு வங்க ளாறுஞ் சுகத்தையே விளைக்கு மன்றே..

முத்தணி வானில் இன்பம், முழுமதி நிலவில் இன்பம்,
பத்தரை மாற்றுப் பொன்போற் பளிச்சிடும் பரிதி யின்பம்.
புத்தலர் நகையில் இன்பம், புள்ளிசை யின்பம்..இங்கே
எத்திசை நோக்கி னாலும் இன்பமே காண லாமே..

மலைநிமிர் மாண்பில் இன்பம் ; வளநதிப் பாட்டில் இன்பம் ;
இலையடர் கானி லின்பம் ; இளமையின் வனப்பில் இன்பம்..
கலைப்பெறுஞ் † சலவை காட்டுங் கனவினில் அழகின் இன்பம்..
நிலைபெறு முலகை யின்ப நிலையமென் றிலக்கு மம்மா !

இத்தகை யின்ப வீட்டின் இன்னுளத் துடிப்பே யாகி,
முத்தியே பரமபோக உடல்கொண்ட முறையைப் போலே,
பத்தினி யுடனே சுத்தன் பண்ணுடன் பனுவல் போலே
சத்தியும் சிவனும் போலே தவத்திரு வாழ்க்கை சேர்ந்தான்.

மனங்கொண்ட மாண்பி னாலே, மங்கலக் காதற் செல்வர்
தினங்கொண்ட விரத மேவுந் தீங்கலே வாழ்வை நோக்கிக்
கனங்கொண்ட கரும்பு வில்லுங் கணைகளுந் தளர விட்டே,
அனங்கனும் திகைத்து நின்றான்..முனிவரும் அதிச யித்தார் !

---

* மனை நூலிற் சொல்லப் பெற்ற உயர்ந்த அழகும் சிறப்புச் செல்வமும் உடைய வீடு.

† சலவைக்கல் மாளிகை.

ஈருடல் இயற்கை யாலே எய்தினும் இரண்டு பேரும்,
ஓருயிர், ஓரன் போங்கும், ஒருமையிற் கலந்து நாளும்,
பாருயர் பணிகள் செய்து, பகவனைப் பத்தி செய்து,
வேருடன் இலையும் போல விரிந்தநல் வாழ்க்கை சேர்ந்தார்.

சேவகர் ஏவல் செய்யச் சேடியர் பணிந்து நிற்கப்
பாவலர் துதிகள் ஓதப் பாடகர் இசைக்க, நல்ல
நாவலர் செவிகள் கொள்ளும் நாவிருந் தருத்தத் தூயர்
சீவனம் சிவபோ கத்தின் சிகரவிண் போன்ற தம்மா !

பண்ணமை யாழும் பாட்டும் பரதமும், கூத்தும் சூழப்
பெண்ணின முறுவல் சூழப் பெருஞ்சுவை விருந்து சூழக்
கண்ணினைக் கவரு கின்ற காட்சிக ளெல்லாஞ் சூழப்
புண்ணிய வசந்தம் போலப் பொலிந்ததப் புனிதர் வாழ்வே !

மானினத் துடனே செல்லு மான்மத மணமே போலும்,
தேன்மது வண்டி னுள்ளே சிலம்புமோங் காரம் போலும்,
கான்மலர் சூடுங் காலைக் கனிமுகச் சாந்தம் போலும்,
வான்சுதை யினிமை போலும் வளர்ந்தது மாசில் வாழ்வே!

பனிமலர்க் காலை அன்னார் பங்கய விழியை நோக்கும் ;
கனிமுக அருணன், அன்னார் கடவுளைத் தியானஞ் செய்து,
புனிதநாண் மலர் சொரிந்து பூசனை செய்யக் காணும் ;
இனியநல் லிசை யருந்தி இரவித்தேர் நடக்கு மன்றே.

மரபுள கடன்கள் செய்து மலர்கனி கொண்டு தூயர்,
அரியமெய்த் தவரை நாடி அடிபணிந் தமர்ந்து, ஞான
விரிவுரை கேட்டு வந்து, வேகமாய்த் தேச சேவை
புரிகுவர் பலனை யீசன் பொன்னடிக் கென்று தந்தே !

உடலினை உழைப்பில் வாட்டி, உயிர்க்கனல் பெருக்கி, நாளும்,
சுடர் விடப் பசித்த போது சுசிருசி யாக வுண்பார் ;
படபடப் பின்றி நல்ல பயனுறப் பேசு வார்கள் ;
இடம்பொழு தறிந்து செய்யுஞ் செய்கையை யினிது செய்வார்.

இன்னுண வருந்தும் போதும், இரவினில் உறங்கும் போதும்,
தன்னறம் பயிலும் போதும் , தனித்திருந் தெண்ணும் போதும்
உன்னதப் பொருளின் போக்கை, உலகுயிர் பெறுநல் வாழ்வை
மன்னுயிர்ச் சேமந் தன்னை மறந்திலார் ; துறந்தி லாரே !

தந்தைதாய், குருமார், சாந்த மாமுனி, தம்மைச் சேர்ந்த
பந்துவர்க் கங்கள் போற்றப் பகலிர வின்றித் தூயர்
சிந்தையைச் சிவத்தில் வைத்துச் செய்தகு செய்கை யெல்லாம்
அந்தரங் கத்தில் அன்பும் ஆர்வமுங் கொண்டு செய்தார் !

அவள் விழி யவனுட் காணும், அவன்விழி யவளுட் பார்க்கும்.
அவன் மனம் அவளுட் பேசும்,அவள் மனம்அவனுள் எண்ணும்
அவன் செயல் அவளைப்போற்றும், அவள் சக்திஅவனைத்தூண்டும்
தவஞ்செய்த தழலிற் கூடுஞ் சதிபதி வாழ்வி தம்மா !

வெய்யிலில் ஆடுவார்கள் வீழ்புனல் மூழ்கு வார்கள் ;
கொய்மலர் மாலைசூடிக் குளிர்வன முலாவு வார்கள் ;
துய்யனைத் தியானிப் பார்கள் ; சுற்றிடும் சித்தந் தன்னைப்
பையவுள் ளடக்கி யோகம் பயிலுவார் துயிலு முன்னே..

உடலினில் உறுதி கொண்டார்; உள்ளத்தில் உறுதி கொண்டார் ;
கடமையைக் காக்கும் போது கருத்தினில் உறுதி கொண்டார் ;
இடம்பொரு ளேவல் கண்டே எதனையும் இயற்ற வல்லார் ;
தொடங்கியசெயல்களெல்லாம் தொடர்ந்துவெல் லுறுதிகண்டார்.

“கண்ணினுள் மணியே, முத்தே, காதலி னுயிரே, இன்பப்
பண்ணினு மினிய சொல்லாய் ! பருகிடத் தெவிட்டாத் தேனே !
விண்ணவர் அமுதே” யென்று வியப்புறப் போற்றிச் சுத்தன்
பெண்ணினுக் குள்ளே யுள்ள சக்தியைப் பெருமை செய்வான்..

“ என்னுயிர் குயிரு நீயே..என்விழிக் கிரவி நீயே..
மன்னவா, நெஞ்சி லுள்ள மாசிலாப் பொருளு நீயே..
என்னவா, எனது வாழ்வின் இகபர சுகமே” என்று
தன்னவன் மகிழக் கௌரி சாற்றுவாள், போற்று வாளே..

பாலுடன் தேனும் போலப் பண்புடன் கலந்த தூயர்
வேலனும் வள்ளி யும்போல், வீறுபெற் றிலகி நாளும்,
சீலமுந் திருவும் சக்தித் தீக்கன லொளியும் ஓங்கி
ஞாலமும் வானும் போலே நலம்பெறத் துலங்கி னரே..

திறமிகு சுத்தன் இந்தத் தேசத்தை யாள வேண்டி
அறமிகு செங்கோ லாட்சி அரசன்பால், அமைச்ச ரின்பால்,
மறுவறக் கற்றான் ; போரின் மாகலை தேர்ந்த வீரன்,
விறன்மிகு விஜய னோடு வெல்படை நடத்தி னானே..

வலைவிரித் தெங்கும் ஒற்றர் வஞ்சகக் கலகந் தூண்ட,
தலைதெறித் தாடு கின்ற தாமத வரக்க னானோன்,
நிலையழி கலிஞன், ஆன்றோர் நீதியைக் குண்டு வீசிக்
கொலைசெயுங்கொள்ளைநோய்போற்கொழுத்ததைவழுத்துவானே.

நச்சராப் போன்ற நெஞ்சன், நல்லதை வெறுக்குந் தீயன்
பச்சைமோ கினிபி டித்த பாதகன் காமக் கள்ளன்,
துச்சமாங் கலியன் செய்யுஞ் சூழ்ச்சியைத் துகளே யாக்கும்
இச்சையே கொண்டு சுத்தன் இணையிலாப் படைகள் சேர்த்தான்.

போர்க்களம் புகுந்த வீரர் புண்களை யாற்ற வேண்டி,
ஆரமு தூட்ட வேண்டி, ஆபத்து வந்த வேளை,
திரவாள் பிடிக்க வேண்டித் திருவையர் படையொன் றாக்கித்
தாரத்தின் கடமை செய்தாள் சமர்க்கலை யறிந்த கௌரி ! 112

# 12. சிந்தனைப் படலம்

இருவரும் இவ்வகை இனிது வாழுநாள்,
திருமுடி சூட்டிடுந் தினமும் வந்ததால்,
வருபொறுப் பனைத்தையு மனதி லெண்ணியே
துருவுறு சிந்தையிற் சுத்தன் ஆழ்ந்தனன்..

அத்ததி கௌரியும் அணி யிளங்கிளி
ஒத்தநல் லுரையுடன் ஓடி வந்தனள்..
சுத்தனின் சோர்வினைத் துருவிக் கேட்டனள்
எத்தகைத் துயரையும் போக்கும் இன்சொலாள் !

சுத்தன்

கண்ணே ஞானக் கட்டிக் கரும்பே,
சாந்தன் வளர்த்த தத்துவக் கிளியே,
வரமென வந்த வாழ்க்கைத் துணையே,
இலகுயிர் உடலின் இயல்பை நினைத்தேன்..
மனித வாழ்வின் மயக்கை நினைத்தேன்.
எனக்கொரு குறையிலை என்பர் உலகோர் ;
மன்னருக் குரிய உன்னதச் செல்வம்,
மரபினுக் குரித்தாம் அரசியற் பெருமை,
பிறப்பினால் வந்த சிறப்புகள் ஆயிரம்,
அரியணைச் செல்வம், அழகிய மாளிகை,
அஞ்சிப் பணியும் ஆயிரம் ஆட்கள்,
கட்டிக் காத்துக் கைதொழும் தொண்டர்,
தங்க ரேக்கும், சத்துள பொருளும்,
மல்கி மணக்கும் பல்வகை விருந்துகள்,
செவியை யெங்கே திருப்பினும் புகழ்ச்சி,
பழுத்த கவிகளின் பாராட் டுரைகள் ;
இந்திரன் சந்திரன் இறைவன் என்றெனைப்
புராணம் பாடியும் புகழ்பவர் உண்டு.
விலையில் லாத கலைகளின் இன்பம்..
குழலும் வீணையும் குயிலும் கொஞ்சக்
கீதம் பாடிக் கிளர்ச்சி யுடனே
ஆடு கின்றார் அரம்பை மாதரே ;
உருவை எழுதி ஓவியர் மகிழ்வார் ;

சிலையிற் செதுக்கிச் சிற்பிகள் புகழ்வார்.
அணிமணி பூட்டி யழகு செய்தே,
பிணமாம் உடலைப் பெருமை செய்து,
கண்ணனே ராமனே கந்தனே வென்றே
போற்று கின்றார் நாற்றிசை மாந்தர்.
இவையெலாம் என்னை ஏளனம் செயுமே !...
கற்பன கேட்பன கற்றேன் கேட்டேன் !
நன்னூல் ஆய்ந்தேன் பன்னூல் படித்தேன்..
எனினும் அறிவை எட்ட வில்லையே !
அரியணை என்னை அழைக்கும் போதே,
போரின் முரசும் பொங்கி முழங்குமே.
ஆபத் தில்லாப் பூபதி யாரே ?
அரசென் றாலே அமர்க்களம் பலவே..
கனத்த கவலையே கனத்த மகுடமாம்.
தலையில் அதனைத் தாங்கிய வுடனே,
பொறுப்புகள் எத்தனை, வெறுப்புகள் எத்தனை,
செருக்குக ளெத்தனை, செருக்கள மெத்தனை,
பொய்ப்புகழ் எத்தனை, பொறாமை யெத்தனை,
எதிர்ப்புகள் எத்தனை, ஏமாற்ற மெத்தனை,
வலைகள் எத்தனை கொலைகள் எத்தனை,
முகத்துதி யாளர் மோசமெத் தனையோ!
எனக்கே யின்னும் இன்பங் காணேன் ;
என்னுட் குறைகள் எண்ணு யிரங்கள்..
மன்னுயிர்க் கெல்லா மனக்குறை நீக்கியே
பசிபிணி யின்றிப் பாவமு மின்றி
அகமகிழ் விக்கும் அரசொன் றெதுவே ?
கொலைக்கள மில்லாக் கொற்றநா டுண்டோ ?
வாட்படை யில்லா வளநா டுண்டோ ?
ஒற்றினம் இல்லாக் கொற்றனும் உண்டோ ?
எளியரைத் திருடா வலியரு முண்டோ ?
எனதியா னென்றே இறுமாந் துலகில்,
அயலார் தம்மை அடிமை கொண்டே
பேச்சிலும் எழுத்திலும் மூச்சிலும் அடக்கு
முறைகளைப் புகுத்திக் குறைகளைப் பெருக்கி,
மனிதான் மாவை மாய்க்குங் கொடுமை
எங்குங் காண்கிறோம் !..எத்தனை காலமாய்
உயர்ந்த நீதி ஒளிர்ந்த பாரதம்
இருளில் வருந்தும் இன்னலைக் கண்டோம்.
கண்ணால் உலகைக் கண்டேன் மானே !

கவலை முகத்திற் கண்ணீர் கண்டேன்..
வான்மழை பொழிய மாநிலம் விளைய,
நாடெலாம் வளமை நல்கிடும் போது,
பட்டினி கிடக்கும் பஞ்சைகள் இருப்பதேன் ?
வயிறு டாமல் மாளிகைச் சுகத்தில்
புரளு கின்றார் போகச் செல்வர்..
உழைத்துழைத் தோடாய்ப் பிழைப்பிற் கின்றி,
அரைவயிற் றிற்கும் ஆதர வின்றி,
ஏங்கித் தவிக்கும் ஏழைகள் மிகுவதேன் ?
மானம் விற்கும் மாதர் மலிவதேன் ?
பிச்சைப் படைகள் பெருகுவ தேனோ ?
வறுமையாற் புலவர் வருந்தலு மேனோ ?
பாலுந் தேனும் பழமும் பொழியும்,
பசுவள நாட்டிற் பட்டினி ஏனோ ?
புண்ணிய வேதம் பூத்தநன் னாட்டில்
பஞ்சமா பாதகம் படர்வதும் ஏனோ ?
கொலைகள வின்றிக் கொடுமைக ளின்றி,
நடுநிலை யாக நாட்டு வளத்தை
அனைவ ருக்கும் அளந்து கொடுத்தே
இடம்ப மின்றி எளிமை பூண்டு,
கொடுவரி போன்ற கடுவரி யின்றி,
உழைப்பும் தகுந்த பிழைப்புந் தந்தே,
வறுமை தீர்த்து மடமை நீங்கக்
கல்வி பரப்பிக் கைத்தொழில் பெருக்கி,
நாட்டாள ரெல்லாம் பாட்டாள ராக
ஆன்மநே யத்தில் அனைவரும் வாழ,
ஊரார் உண்டபின் உண்டு மகிழும்
சீரார் வேந்தன் செகத்தினில் உண்டோ ?
அடக்கு முறையிலா அரசொன் றுளதோ ?
குருதி தோயாக் கோலொன் றுளதோ ?
பயமில் லாத பல்லக் குண்டோ ?
சினவா ளில்லாச் செழுமுடி யுண்டோ ?
அமரில் லாத அரியணை யுண்டோ ?
மண்ணு காத மண்ணர சுண்டோ ?
ஒருநாள் ஒழியா உடலும் உண்டோ ?
எப்படிப் போற்றினும் எவ்வகை காத்தும்,
எல்லாம் ஒருநாள் இல்லையென் றுமே !
உண்மை யறிந்தேன் ! உண்மை யறிந்தேன் !..
பொய்யை விலக்கி மெய்யைப் போற்றி,

ஆத்தும சாந்தம் அடைவதென் கடனே..
இவ்வுல காளும் எந்தையைக் காட்டிலும்,
சாந்த முனிவன் சாந்த வாழ்க்கையே
இன்ப மென்பதை எதிரெதிர் கண்டேன்..
அணிமணிப் பாவாய், ஆருயிர்த் துணைவீ..
நாளையே யிந்த வேளையே நானும்
பொன்முடி சூடிப் புவியைத் தாங்க,
முன்னே நிற்பேன் ; முதுகடல் போலே—
செயசெய முழக்கம் செய்வார் பெரியார் ;
ஆட்டமும் பாட்டமும் அளவறப் பெருகும்.
அடுத்த நாளே.. ஹாஹா பெரும்போர் !
கொள்ளை நோய்போல், கூற்றின் படைபோல்..
கலியன் ஊரைக் கௌவிட வருவான்..
பொழுது முழுதும் போர்க்களம், போர்க்களம் !
வீரக் கொலைகள் ! வீடுகள் கொள்ளை !
தீயின் ஆடல் ! தேசம் நாசம் !
பஞ்சம், பாவம், பட்டினி, கண்ணீர்..
சாவின் வேட்டை, சங்கடம், சங்கடம் !
இவையே போரின் இன்னாக் காட்சியாம்..
இரத்தக் காட்சி யென்முன் காணுதே..
சித்தியைச் சுற்றிச் செந்நீ ரோடை..
காண்கிறேன்..அந்தோ..கவலை, கவலை !..
பாம்பும் புலியும் பார்த்தால் அஞ்சுவோம்..
மனித மனத்தில் மமதைப் புலியும்
பொறாமைப் பாம்பும் புகுந்துல கத்தைக்
கொலைக்கா டாக்கும் கொடுமையென் சொல்வேன் !..
மனது திருந்தினால் இனமுந் திருந்தும்,
அகப்போர் ஒழிந்தால் சகப்போர் ஒழியும்.
உள்ளந் திருந்தினால் உலகுந் திருந்தும்..
திருந்துவ தெப்படி ?..மருந்ததற் கென்னே ?
மருந்தா..மகுடமா ?..விருந்தா விரதமா ?..
அரசா, துறவா ? அறியேன் கண்ணே..
வாழ்வின் புதிரென மயக்குது பெண்ணே !

* * *

இவ்வா றேங்கும் இறைவனைத் தேற்றி,
ஞானக் கிளிமொழி நவில்கின் றனளே :

# 13. மாயா மானஸப் படலம்

இதற்கோ கலக்கம் என்னுயிர்க் குயிரே !..
வாழ்க்கை யென்னும் வலிய புதிரை
அவிழ்க்கும் வகையை அனுபவித் தறிந்த
மாயா மானஸர் மாகதை கேளாய்.
இதய புரியின் இறைவ னாகிய
மானஸ ராஜன் வாழ்க்கையின் போக்கை
எண்ணி யெண்ணிக் கண்ணீர் வடித்தான்..
காமம் வெகுளி கலக்க மாகிய
தாமத வரக்கர் சாந்த மழித்துப்
புரட்சி செய்து பொய்யிருள் பரப்பி..
அறிவைக் கெடுக்கும் அக்கிர மத்தைக்
கண்டு மன்னன் கலங்கி யழுது..
வாழ்வே துன்பம், வலியத் துறந்து
காட்டிற் கோடலே கடமை யென்று
மாயை என்னும் மனைவியை விட்டு,
சித்தா ரண்யம் சேர்ந்தொரு குடிலில்
கண்ணை மூடிக் கடுந்தவ முயன்றான்...
வீரக் கோமான் விரக்தியைக் கண்டு..
பகைவர் நாட்டைப் படையெடுத் தாரே..
அரசி தானே அரியணை வகித்துப்
பெரும்படை கொண்டு பிறகிடப் பகைவர்
வீரப் போரில் வெற்றி பெற்று
மானங் காத்தாள் மாயா தேவியே !
புறப்பகை வென்றதும், பொருளுணர் மாயை
கணவனைத் திருத்தக் கருத்துடன் எழுந்தாள்..
சித்த வனத்திற் சிறுகுடி லமர்ந்து
மானஸ ராஜன் மனப்போர் புரிந்தான்.
உடலை வெறுத்தால் உள்ளம் அடங்கும்,
பட்டினி போட்டால் பத்தும் அடங்கும்..
என்று மானஸன் எல்லாம் உதறிக்
கட்டையை நீட்டிக் கல்லிற் படுத்தான்..
சித்தப் புயல்கள் சீறி யடித்தன..
பசியும் பிணியும் பாய்ந்து கௌவின..
"வாழ்வையும் அறியேன்..வனத்தை யடைந்தும்
துறவையும் அறியேன் முறையோ" வென்று
கதறும் போது களிநகை பூத்த
அழகிளந் துறவி ஆங்கே வந்தான்..

"வாராய் ! துறவின் வகையைச் சொல்லாய்.."
என்று மானஸன் ஏங்கி யழுதான்.
"விட்டலே துற" வென விளம்பினுன் முனிவன்.
"விட்டேன் ஆடை, விட்டேன் ஓட்டை,
விட்டேன் தண்டு, விட்டேன் குடிலை"
என்று மானஸன் எல்லாம் எரித்து
ஆற்றிற் சாம்பலை அள்ளிப் போட்டு
முத்தி பெற்றேன் சித்தன்யா னென்றே
எண்ணி ஒருகணம் கண்ணை மூடினுன்.
ஆஹா மனப்புயல் அடித்தது மீண்டும் !..
" இன்னுமென் செய்வேன்..இளந்திரு முனியே"
என்று கதறினுன் ஏங்கிய மானஸன்..
" விட்டலே துற " வென விளம்பினுன் முனியே.
" இருந்த குடிலையும் எரித்து விட்டேன்..
இன்னும் பாக்கி இவ்வூன் குடிலே..
அதையும் நதியில் ஆழ்த்தி விடுகிறேன் ..."
என்றடி வைத்தான்..எதோ பின்னே
நின்று தடுக்க நினைவற நின்ருன்..
பிறகு தைரியம் பிறந்து தாவி
இன்றுன் சுமையை எறிந்தேன் உடலே !
என்று வெள்ளம் இழுத்திடச் சென்ருன் !
ஐயோ தெய்வமே.. ஆருயிர் காவாய்...
கூக்குரல் எழுந்தது மூக்கினீர் ஏறவே !
ஆற்றுடன் போரிட் டலறினுன் பாவி !
முனிவன் குதித்து, முடியைப் பற்றிக்
கரையிற் சேர்த்துக் காத்தான் ஆளை..
" துறவினி வருமோ ?..சுதந்தரம் வருமோ ?.."
என்று புலம்பும் ஏழையை நோக்கி
"ஏனிக் கவலை ? இயம்பாய் யார் நீ ?..
உன்கதை யறிந்தபின் ஓதுவேன் வழி"யென
இளமுனி கேட்டவே, " இதய புரியின்
அரசன் மானஸன் யானே ; வாழ்வின்
தொந்த விகாரத் தொல்லையைத் தாங்கேன்.
புரட்சிப் புயலைப் பொறுக்க மாட்டேன்..
துன்பமே கண்டு துறந்திவண் வந்தேன்.
இன்ப விடுதலை எய்தவே முயன்றேன்..
இன்னுந் துன்பமே என்விதி முனியே ;
நாட்டைத் துறந்தேன் ; வீட்டை விட்டேன்,
குடிலை விட்டேன் கோவணம் விட்டேன் ...

உடம்பையும் விட்டேன்..உயிர்விடப் போனேன்..
துறக்கும் வழியைத் துலக்காய் '' என்றான்..
"விட்டலே துற"வென விளம்பினன் முனிவன்..
" எதையினி விடுவேன்.. எளியேன் ஐயா..
மனது நிலைக்க வழியுங் காணேன்...
வறட்டுத் துறவால் வருபயன் காணேன்''
என்று மானஸன் இரங்கும் போது..
இளமுனி நன்றாய் உளந்திறந் துரைத்தான் :—
"விட்ட லென்பது வீட்டை யன்று,
நாட்டை யன்று நல்லுட லன்றே..
ஆணவப் பாசம் அறவே விட்டலே..
மனப்பற் றறுத்தலே மாசிலாத் துறவாம்.
ஆளுக் குள்ளே அமரன் உள்ளான்.
அவன்சுத் தாத்மன் அறிவே யானோன்—
அவனே மனிதன், அவனே தேவன்—
அவன்அவள் நீநான் அவைஅது வெல்லாம்.
உடலவன் பூணும் உடையே யாகும்.
உயிரும் அன்னோன் உயிர்ப்பே யாகும்.
ஐம்பொறி புலன்கள் அவனுணர் கருவியாம்.
அந்தக் கரணம் மந்திரி போலாம்.
அவனே புருடன், அவனுறை வீடே
இயற்கை யுடல்மன மெல்லா மாமே.
தனுவொரு விளக்குத் தண்டு போலாம்.
உள்ளம் தகழியாம் ; உணர்வே நெய்யாம்.
சுத்தான் மாவே நித்தியச் சுடராம்.
உயிர்த்திரி மேலே உணர்வுண் டொளிரும்
சுத்த ஜோதியே சத்தியப் பொருளாம்.
அதனைச் சார்ந்தே அனைத்தும் மெய்யாம்.
துய்யதன் வீடே மெய்யெனப் படுமே..
மெய்களின் வீடே மேதினி யாமே.
உள்ள மட்டும் உலகுடல் உண்டாம்.
உள்ளறி வுடனே உடலுல கத்தைத்
தெள்ளத் தெரிந்து திருவுற வாழ்ந்தால்,
மானிட வாழ்வு மங்கல மாமே..
பளிங்காற் பார்த்தாற் பலநிறங் காண்பபோல்,
மனத்தால் நோக்கின் மண்ணியல் பலவாம்.
முக்குண தொந்தச் சிக்கலில் லாமல்,
நல்லது வரினும் பொல்லது வரினும்,
சமதை யுடனே தாங்கிவென் றடங்கி

அகமும் புறமும் ஆனந்த மாகிப்
பிறவிப் பயனைப் பெற்றிட லாமே.
மண்ணில் லாது மலர்கனி யுண்டோ ?
பெண்ணில் லாமற் பேரா னுண்டோ ?
கண்ணில் லாமற் காட்சியு முண்டோ ?
உடலில் லாமல் உயிர்வாழ் வுண்டோ ?
குடிலில் லாமற் குடித்தன முண்டோ ?
அகத்திற் குப்புறம் ஆதார மாகும்.
தரையே நீரைத் தாங்குவ தொப்பவே
உள்ள பொருளை உடையது புறமாம்.
அகம்புறக் கலப்பே இகவாழ் வாமே.
உள்ளுணர் வுடனே உலகைக் கண்டால்,
எப்பொருள் யானோ அப்பொருள் உலகாம்
சகவாழ் வென்பது சாதன நிலயம்.
உள்ள நிலத்தை உழவுசெய் யாது,
சும்மா போட்டுச் சோம்பி யிருந்தால்,
பிழைப்பு நடக்குமா ? உழைப்பி னாலே
பயிர்விளை வித்தால் உயிர்களுக் குதவும்.
அதுபோல், காணும் அகில வுலகையும்,
அநித்தியம் என்றுநாம் அசட்டை செய்தால்,
பெருநிலப் பயனைப் பெறுமல் இழப்போம்.
ஊனுடல் பொய்யென் றுதறி வெறுத்தால்,
உடலின் பயனை அடைந்திட மாட்டோம்.
மகவுநோ யுற்றால் மருந்தால் ஆற்றி,
அன்புடன் கொஞ்சும் அன்னையே போலே,
மனநோய் தீர்த்து வாழ்க்கையைப் போற்றி
வாழ்வாங்கு வாழலே வாய்மை நெறியாம்.
கவலை மனத்தின் கலக்கமே யாகும்.
அகந்தை மனத்தின் அழுக்கே யாகும்.
இயற்கை யான்மா இன்ப மயமாம்.
அகில வாழ்வாம் அகநா டகத்தில்,
ஒவ்வொரு வர்க்கும் ஒவ்விய வேடம்.
இயற்கை யாகவே இருப்பதைக் காணீர்..
இயல்பாம் வேடம் இயல்பாய் நடித்தே,
இயல்பா யிருந்தால் இன்புற லாமே !
இறந்ததைப் பற்றி வருந்தியென் பயனோ ?
உள்ள மட்டிலும் உள்ளதைக் கொண்டு
தன்னிலை கண்டு முன்னிலை யுலகம்
சிவமய மான திருக்கோயி லென்றே,

அருட்பணி செய்வோம்..அதனுல் ஆன்மா
விசால மாகும், விகாரம் ஒழியும்.
அறிந்த சனகன் அரியணை யமர்ந்து
புரிந்த செயலைப் புரிவது நலமே.
ஆருல கெல்லாம் அனுபவச் சாலை.
நமக்கியல் பான நலங்களைச் செய்து,
பலனை ஈசன் பதத்தில் வைத்து,
வழிபா டாக வாழ்வை வாழ்வோம்....."
என்னும் இளமுனி இன்சொலைப் பருகி..
" மாயா, கண்ணே நீயும் இப்படி
உபதேசித்தாய்..உண்மை இதுவே..
காற்றும் பாரும், கதிரும் கடலும்,
இயல்பாய்க் கடமையை இயற்றுவ தொப்பவே..
நமக்கேற் பட்ட நல்ல கடமையை
அகந்தை யின்றி ஆண்டவன் பூசையாய்
உள்ள மட்டும் உண்மையாய்ச் செய்தால்..
மற்றவை இறைவன் மனப்படி நடக்கும்..
விட்டேன் எனது விநோதத் துறவை..
மனத்துற வுடனே மன்னறம் புரிவேன்..
மாயா என்னை மன்னிப் பாயா..."
என்று மானஸன் எழுந்து நிற்கையில்
காஷா யத்தைக் களுக்கென் றுதறி..
இளமுனி..மாயையாய் இலகிநின் றுனே !
ஒருவரை யொருவர் உள்ளறிந் திருவரும்
இதய புரிசென் றினிதர சேந்தி
இகபர சுகங்கள் எய்திவாழ்ந் தாரே !

சுத்தன்

கண்ணே நல்ல கதையி னுலே
உண்மைப் பொருளை உணர்த்தினை வாழி !
சித்தந் தெளிந்தது.. தேசப் பணியே
தெய்வப் பணியெனச் செய்வோம் வாராய் !
தந்தை தந்த தங்க முடியைத்
தரிப்போம் ..அரியணை யிருப்போம்... எனினும்
வறுமை மடமை வஞ்சக் கலியன்
கொடுமை நீங்கிக் குவலயம் வாழவே
அள்ளி யளிப்போம் ஆருயிர் வாழ்வை..
அத்தகை வாழ்விற் கமைந்த சக்தியே !

கௌரி

ஏற்போம் பொன்முடி இருவரும் ஒன்றாய்,
நாட்டுப் பணிக்கே நம்முயி ரீவோம்..
எங்கே சுத்தன் அங்கே கௌரி..
ஒவ்வொரு மூச்சும் திவ்விய சேவை..
யோகங் கலந்து தியாகம் புரிவோம்.
உடலும், இரத்தமும், உயிரும் உமக்கே..
அமைதி தன்னிலும், அமர்க்கள நடுவும்
உம்முட னிருப்பேன்.. உயிருடன் உடல்போல்.
அன்புப் பணியில் ஆருடல் போயினும்..
ஆத்தும சுத்தியால், அருந்தவச் சக்தியால்.
அருவா யுதவுவேன்.. உருவொன் றேந்தியும்
வருவேன் வெற்றி தருவேன் உமக்கே!
உருவாய் அருவாய் உமக்கென வாழ்வதே
இன்ப மனைத்திலும் இன்பமா வதுவே.
"என்மன மாவதும் உன்மன"மென்றே
சுத்த னுங்கே சொல்லும் பொழுதே,
"வாழ்க வாழ்க.. வரம்பெறு காதலர்..
அன்புக் காதலர் ஆருயிர்க் காதலர்;
உங்கள் வாழ்வால் உலகம் வாழ்"கெனப்
பாரத முனியுடன் பார்த்திபன் வந்தான்.
இருவரும் பெரியார் இணையடி வணங்கித்
தத்தம துள்ளஞ் சாற்றிய பின்னர்,
" நாளை யுனக்கு நளிர்முடித் திருநாள்..
இன்றுனக் கினியவை இயம்பக் கேளாய்.."
என்றலுந் "தந்தை, இச்சை புரி"கென..
வணக்க முடனே மகனுந் தொடர்ந்தான்.
பாரத முனியும் பாராள் வேந்தும்
மன்னுயிர் காக்கும் மன்னறந் தன்னை
இனிவரும் வேந்தனுக் கியம்பினார்; அதனை
நாளைக் .. காலை நாட்டார் முன்னே
சுத்த ராஜன் சுடர் முடி சூடிப்
பேசிய பேச்சிற் பேசிடு வோமே!

# 14. பட்டாபிஷேகப் படலம்

அங்க திர்க்கொடி ஆனந்தத் தென்றலிற்
பொங்கி யாடிப் புகழ்பெறுஞ் சித்தியில்,
மங்க லக்கதிர் மாண்புற வீசியே,
செங்கதிர் தருஞ் செல்வன் எழுந்தனன்..

தன்னைத் தாங்குந் தருமக் கொடியினைப்
பொன்னைத் தாங்கும் புதுநகை வீசியே..
உன்னைத் தாங்கிடும் உத்தமன் வாழ்கென
வன்னக் காலை மகிழ்வுற் றெழுந்ததால்.,

விண் விழித்தது ; வேக வினைப்புவி
கண் விழித்தது ; காற்றுக் குழலினிற்
பண் விழித்தது ; பாண்வண் டிசைத்திடத்
தண் டலைமலர் தாங்கி விழித்ததால்.

" இறைவன் வெல்"கென் றியம்பி இனிமையாய்ப்
பறவைக் கூட்டமும் பாடிக் களித்தன.
கறவை மாடுகள் கட்டறத் துள்ளின ;
நறவை யூற்றின நாண்மலர்க் கூட்டமே !

பரம சுந்தரி பார்வதி பூமகள்,
வரம ருள்கலை வாணி யிலக்குமி,
அரம களிரும் ஆர்கலி போலவே
குரவை யாடினர் கொங்கை குலுங்கவே.

அரசன் வாழ்கென் றரிய கவிகளின்
குரலி சைத்த ; குழலுடன் வீணையும்
சரள நல்லிசை தந்தன; மங்கல
முரசொ லித்தன மூரி முழக்கொடே.

அணிகள் ஆடும் அழகிய சித்தியின்
மணிகள் ஆடின ; மந்திர மார்த்தன;
வணிகச் செல்வமும் வாட்படை வீரமும்,
பணிக ளேந்திப் பரபரத் தாடின.

அவனி மாந்தர் அரசனைப் போற்றியே
பவனி வந்து பஜனைகள் செய்தனர் ;
தவம் பலித்தது சத்தியம் வென்றது,
நவயு கச்சுடர் நாடிய தென்றனர்.

திரும்பு மெத்திசை சித்தியை நோக்கினும்,
மருங்கெ லா,மனை வாயில்க ளெங்குமே
கரும்பு வாழை, கமுகிள நீர் பனை
அரும்பு பூக்கள் அணிநகை செய்தவே !

பொன்னும் பூவும் பொலிமணி யாரமும்,
மின்னி வில்லிடு மெல்லிடை மாதரார்,
அன்னங் கிள்ளை யணிமயில் கற்பகம்
என்ன மங்கலம் ஏந்தி நடந்தனர்.

வீறு மிக்க விறலணி வீரர்கள்,
நூறு நுண்கலை நுட்பம் விளங்கிடும்
பேறு மிக்க பெருந்திருத் தாங்கியே,
ஏறு போலத் தலைநிமிர்ந் தேகினார்.

தேரில்,முத்துச் சிவிகையில் ஏறியே
பாரின் மன்னர் பரிசுடன் வந்தனர்,
வீரர் யானையில் வேகப் புரவியில்,
பேர ருவிப் பெருக்கெனப் போந்தனர்.

## திருமுடி மண்டபம்

மன்னன் வாழ்கென வாழ்த்தி யனைவரும்,
பொன்னின் மாமணி மண்டபம் புக்கதும்,
அன்னனாருக் கமைந்த நிலையிலே
அன்னனார்முறை யாக வமர்ந்தனர்.

வச்சி ரத்தின் வளைவுகள் ஏந்திய
பச்சை நீலம் பவள மிழைத்ததூண்,
மெச்சு நற்கலை மேவிய பொற்சுவர்
உச்ச மாமணி ஓங்குயர் கோயிலே.

கோம ணிச்சபை கொண்ட அரியணை,
தூம ணிகள் சுடரவிண் மீனென,
மாம யில்வடி வாகி, மனங்கவர்
தாம ரைத்தவி சேந்திய தானமே. 60

பரத னார்முதற் பாரத மன்னவர்
அரத னமுடி தாங்கி யறத்தினை
விரத மாக வியனுறக் காத்ததிச்
சரத மாகிய தங்கத் தவிசிலே..

முதுந லத்தையும் முன்னால கந்தரும்
புதுந லத்தையும் பொன்னெனப் போற்றிய
சதுரர் ஆண்டு தழைத்த பழம்பெரும்
பொதுந லப்புகழ் பூண்ட தவிசிதே.

தரும தேவதை தாங்கும் அரியணை,
கரும வீரர்கள் காத்தசிங் காதனம்.
திருவி னோங்கிய தீரர் உயிர்தரப்
பெருமை கொள்பலி பீடமி தென்னாவாம்..

இத்தகை யிசை யேறிய பீடத்தில்,
சத்தியன் கரந் தாங்குசெங் கோலையே
சுத்த னேந்திச் சுடர்முடி சூடிட
ஒத்த வேளைவந் துற்றது காண்மினோ !

சுத்த கௌரியர் எழுந்தருளல்

மங்கல மறைக ளோத, வாத்தியம் பலமு ழங்கப்
பொங்கிய உவகை தூண்டப் புண்ணியப் புனலில் ஆடி,
தங்கமு மணியும் பட்டுந் தாமமும் அணிந்து சுத்தன்
மங்கல மனைவி யோடு மரகதத் தேரில் வந்தான்..

கற்பனை கடந்த வீரக் கதிர்மணி யழகன் றன்னைக்
கற்பகப் பூங்கொம் பேந்துங் கனகமா மயில னானை,
"அற்புதம்", என்று போற்றி ஆடவர் மலர்சொ ரிந்தார்.
கற்புள மாதர் பாடி ஆலத்தி காட்டி னாரே !

பொங்கிய உவகை பூத்த பொதுஜனம் வாழ்த்தெ டுக்கத்
திங்களார் கடலைப் போலச் செயசெய முழக்க மோங்க,
மங்கல வாத்தி யங்கள் வழங்கிநல் வரவு கூறச்
சங்கின முழங்கச் சுத்த கௌரியர் சபைக்கு வந்தார்.

அரசன் கோலங் கண்டு சபை மகிழ்வுறுதல்

சுடர்பெறு மைந்தன் கோலங் கண்டதுந் தூய பெற்றோர்..
உடல் சிலிர்த் துவகைகூற உளமெலாம் பேரின் பத்தின்
கடல்மடை திறந்து பாயக் கண்மலர் களிதேன் சிந்தப்
படபடத் தன்பு பொங்கும் பரவசங் கொண்டார் மாதோ !

சத்தியன் மகனை அணைத்து வரவேற்றல்

துங்கமா மலையைப் போலே தோளுயர்ந் துவகை விம்மத்
தங்கமாப் புதல்வன் றன்னைச் சத்தியன் மகிழ்ந்து போற்றி,
"நங்குல மணியே, சித்தி நாயகா வாழ்க !" வென்றே
செங்கையா லணைத்து வீரச் செல்வன்மார் பணைந்தான் மாதோ!

அரியணை வகித்தல்

தாயினை வணங்கித் தந்தை தாளினைப் பணிந்து, தன்னைச்
சேயென வளர்நல் லாசான் சேவடி பணிந்து, மற்றும்
நேயங்கொள் சித்தி மானை நீதியிற் சிறந்தார் தம்மைத்
தூயனுந் துணைவி யோடு தொழுதணை யேறி னானே..

வேந்தர் மாலை சூட்டல்

குஞ்சர நடையி னானும் குலவன்ன நடையி னாளும்
அஞ்சுடர் மணிகள் வீசும் அரியணை யேறும் போதே,
நெஞ்சுயர் ஆர்வம் விம்ம நீண்மலர் மாரி பெய்து,
செஞ்சுடர் மாலை சூட்டி, ஜெய ஜெய வென்றார் வேந்தர் !..

"ஒவ்விய வேளை" யென்று பாரத முனிவன் ஓதத்
திவ்விய கீத மார்க்கத் தேவரும் ஆசி கூற,
செவ்வரி படர்ந்த கண்ணன் சித்தியை ஆண்ட மன்னன்,
அவ்வவை அடங்கிக் கேட்க ஆர்வங்கொண் டினைய சொன்னான்..

சத்தியன்

தங்குயிர்க் குலத்திற் கெல்லாந் தயாபர மூர்த்தி யாகி,
எங்குல தெய்வமாகி, இப்புவிக் கோயி லுக்கு,
மங்கலப் பணிகள் செய்ய மதித்தெம்மை அருளி னூட்டும்
துங்க மாம் சுத்த சக்தி துணை நலம் போற்று வோமே !..

புண்ணிய பூமி மக்காள், புலவர்காள், அமைச்சர் காளென்
வெண்மதிக் குடைக்கீழ் ஓங்கும் வேந்தர்காள், சாந்தச் செல்வீர்,
திண்மன வூழியர்காள், சித்தியின் செங்கோ லாட்சி,
எண்பதாண் டுகளாய்த் தாங்கி இயல்புற நீதி காத்தேன்..

திருவரு ளாலே இந்தத் திவ்விய மைந்தன் வந்தான் ;
குருவருள் பெற்றுன் செய்ய குணமலை யான தூயன்.
பொருவறு வீரன் ; இந்தப் புண்ணிய பூமி வாழுந்
தருமமே யனையான் ; ஞான சாகரன் கௌரி நாதன் !..

நாசஞ்செய் கலியை வீழ்த்தி நாட்டிடப் புதுயு கத்தைத்
தேசஞ்செய் தவத்தால் வந்தோன்..சித்தியின் சிகர ஜோதி.
நேசஞ்செய் அன்ப ருக்கு நிகரிலாத் துணைவன் ; செல்வி
வாசஞ்செய் மார்பன்; அன்னுென் மன்னவன் ஆவான் இன்றே.

எண்ணமுஞ் செயலுஞ் சொல்லும் ஈகையும் அருளும் இந்த
மண்ணில மாந்தர் வாழ மாசிலாப் பணிக ளாக
நண்ணிய கரும வீரன், ஞானத்திற் பெரிய தீரன்,
புண்ணியக் குரிசில் உங்கள் புரவல னுென் மாதோ !

கதந்தரும் அரக்கர் சேனை காடெனச் சூழ்ந்த போதும்,
மதந்தரு மவர்செ ருக்கை வாளினுல் வெட்டிச் சாய்ப்பான்..
இதந்தரும் தவத்தி னுலும் இரத்தத்தைச் சிந்திடாமற்
சுதந்தரந் தருவான் கௌரி காந்தனும் சுத்த வேந்தன்..

இந்திரன் போன்ற தீரன், இவனுக்கென் இறுதி நாளில்,
முந்தையர் வழியே வந்த முடியுடன் கொடியுங் கோலுந்
தந்தனன் ; பொதுஜ னத்தின் சம்மதம் அதுவே யாகும்,
மந்திரக் கிழவ ரெல்லாம் மதித்தநன் முடிபி தாமே..

முன்செய்த தீர்மா னத்தின் முறைப்படி மகனை இன்றே
மன்செய்து நானும் என்றன் மனைவியு மகிழ்வோம் என்றே
பொன்செய்த மகுடஞ் செங்கோல் பொலிகதிர்க் கொடியுந்தந்து
மின்செய்த முறுவல் காட்டி முனிவனை விரும்பிப்பார்த்தான்.

### முடி சூட்டல்

நாரத முனிவன் ஆங்கே பரிசுத்தக் கைக ளாலே,
பூரண மகுடம் வாங்கிப் புண்ணிய மலர் சொரிந்து,
ஆரணம் ஓதி, ஈசன் அருளினைப் போற்றி செய்து,
பேரணி மன்றி லுள்ள பெரியவர் ஆசி பெற்றான்.

அலைகடல் போல வேத கீதங்கள் ஆர்க்க, ஆர்க்க,
விலையிலா மணிப திந்து வியனுறப் புலவர் பொன்னின்
கலையெலாந் துலங்கச் செய்த கவின்முடி கௌரி சுத்தன்
தலையினிற் சூட்டி ஆசான் 'சயசய' முழக்கஞ் செய்தான்..

கொழுமணி நிலவ நாப்பண், கோகினூர் வைரம் வைத்த
செழுமணி மகுடந் தாங்குஞ் செம்மலைப் பார்த்துப் பார்த்து,
முழுமன முவகை தூண்ட முறைமுறை அமைச்சர், மன்னர்
தொழுதனர் "சுத்த ராஜன் சுபமுற வாழ்க" வென்றே..

ஆழிசூழ் உலக மெல்லாம் அன்புடன் அறமும் ஓங்கத்
தோழமை கொண்டு மாந்தர் சுதந்தரந் தழைத்து வாழ,
வாழிய சுத்த ராஜன் வாழிய கௌரி ராணி,
வாழிய சித்தி மன்னர் வழிவழி வாழ்க மாதோ !

### ஆசிகள்

தண்மலர் பொழிந்தன ; தரள மாலைகள்
எண்ணில பொழிந்தன ; இசைபொ ழிந்தன.
கண்மலர் பொழிந்தன ; களிது ளக்குறப்
பண்மலர் பொழிந்தன பாலுந் தேனும்போல் !.. 160

வெல்கநம் வேந்தென வீரர் ஆர்த்தனர்,
நல்லிசைப் பாவலர் நன்றி சைத்தனர் ;
செல்வரும் அரசருந் திரைக ளீந்தனர் ;
பல்வகைத் தானங்கள் பரந்த வெங்குமே !

### பொதுஜன மகிழ்வுரை

இல்லற மறிந்தவன் ; இனிய வாழ்வுசேர்
நல்லற மறிந்தவன் ; நாட்டை யாண்டிடுந்
தொல்லற மறிந்தவன் ; சூரன் வீரன்;செஞ்
சொல்லற மறிந்தவன் சுத்தன் வாழ்கவே !

காலத்தை யறிந்தவன் ; காலம் வேண்டிய
கோலத்தை யறிந்தவன் ; குறைகள் போக்கியே
ஞாலத்தைத் திருத்திடு ஞான வீரனும்
மாலொத்த கருணையம் மன்னன் வாழ்கவே !

நவையறு கேள்வியன், நல்ல நூல்களின்
சுவைகளைத் துய்த்தவன், சொல்லைச் செய்பவன்.
அவைகளுக் கணிகல மான பண்டிதன் ;
புவியினும் பரவிய புத்தி மிக்கவன்.

அருந்தவச் செல்வரின் ஆசி பெற்றவன் ;
பெருந்தவ முயன்றவன் ; பிறருந் தானெனுந்
திருந்திய சிந்தையன் ; தேச சேவையே
பொருந்திய தவமெனப் புரியுந் தீரனே.

வெங்குல வரக்கரை வீழ்த்தி வென்றவன் ;
சிங்கத்தின் வீரமும் சித்தர் உள்ளமும்,
பொங்கிய பூரணப் புலவன் ; இன்னவன்
எங்களுக் கரசெனின் இன்ப மென்சொல்வோம்..

இவைபொது ஜனங்களின் இதய வாக்கென
நவையறு மந்திரர் நவிலக் கேட்டதும்,
அவையினில் உள்ளவர் அகம கிழ்ந்தனர் ;
அவரவர் திருமுடி யடைந்த தொப்பவே !

## 15. சுத்த வாசகப் படலம்

பூரி போன்று முழங்கு சபையினர்
ஆர வாரம் அடங்கி அமர்ந்ததும்,
சூரியச் சுடர் போலநம் சுத்தனும்
சீரிய பல செப்ப வெழுந்தனன்..

எல்லாம் வல்லவன் இறைவன் ஒருவனே.
எல்லா வுலகும் இறைவன் ஆலயமே..
உயிர்க்குலம் இறைவன் உடலென லாமே.
அவனை முற்றிலும் அடைக்கலம் புகுந்து,
தந்தையுந் தாயுந் தந்தநல் லரசை,
அந்தண் முனிவர் ஆசியைப் பெற்று,
மந்திரிக் கிழவர், மகிதல மக்கள்,
சம்மதம் பெற்றுச் சான்றோர் நாட்டும்
அறவழி நாட்டை ஆளப் புகுந்தேன்.
ஆட்சி யென்பது மாட்சிமை கொண்ட
பொதுநலத் தொண்டெனப் புகலுவ தாமே.
அரசன் வருவான், அரசன் போவான்,
அரசும் குடியும் அறமும் நிலையாம்.
என்னுயிர் மக்காள், என்னர சாட்சியில்
மன்னன் பொதுஜன மனமே யாகும்.

நெருங்கிரு நன்றென நீண்ட தோளால்,
எந்தை தாங்கி யிசைபெறும் அரசில்,
இன்னும் இன்னும் இன்புற நீங்கள்,
செங்கோல் செலுத்தலே சிறப்பெனக் காமே.
அறிவிற் சிறந்தீர், அன்பிற் சிறந்தீர்,
பெரியீர், உங்கள் உரிமையை மதித்தே
நாடே எனது வீடென மதித்தே,
நிறைநல மோங்க முறைவகுத் தாளும்,
ஆர்வங் கொண்டேன், அருந்துணை தருவீர்.
கள்ளுங் கவறும், கற்பின் அழிவும்,
கொலைவளர் ஊனும் விலைமகள் வாழ்வும்,
சாதிப் பித்தமும், சமய வெறிகளும்,
இடம்பக் கூத்தும், இரணியச் செருக்கும்,
அடிமைத் தனமும் கொடிய வறுமையும்,
மடமைப் பிணியும், மாற்றார் தொல்லையும்,
வஞ்ச நரிகளின் இலஞ்ச வலையும்,
இந்த நாட்டில் இல்லா தாக்குவேன்.
அன்புப் பெருக்கால், ஆன்மநே யத்தால்,
ஒற்றுமை யோங்கி ஒருகுல மாகவே
மக்களெல் லாரும் வாழச் செய்வேன்.
ஒற்றுமை நாட்டின் உயிரே யாமே !
கல்வி யறிவே கண்ணென லாமே.
எண்ணும் எழுத்தும், இவ்வுல கறிவும்,
ஒருகைத் தொழிலும் ஒவ்வொரு வர்க்கும்,
இனமாய் உதவுதல் என்முதற் கடனே.
அவரவர் புலமையை அளவறத் தூண்டி,
கலைகளைப் போற்றிப் புலவரைப் போற்றி,
உலகெலாம் ஞான ஒளிபெறச் செய்வேன்.
ஒவ்வொரு கையும் உழைத்தே உண்ண
வேலை வகுப்பேன், வேலையின் பயனை
அவரவர் முறைப்படி அனுபவிப் பாரே.
எனது குடைக்கீழ் எந்த உயிரும்,
பட்டினி கிடக்கப் பாரேன், கேளேன்.
உலக மக்கள் உண்டதன் பிறகே
மணிய டித்ததும் மன்னன் உண்பான்.
உலக மக்கள் உடுத்த நாளே
ஆடைகள் வாங்கி அரசன் அணிவான்.
பிச்சைப் பிழைப்பும் கொச்சை நினைவும்
அச்சப் பேயும், அடிமை விலங்கும்,

மனிதனை மனிதன் மதியாச் செருக்கும்,
ஒருவர் உணவை ஒருவர் பறித்தலும்,
நோவினைச் செய்யும் தீவினை யாமே..
குடிகளின் இன்பமே கொற்றவன் இன்பம்,
குடிபடுந் துன்பமே கோவுறுந் துயராம்.
சுயநலம் வஞ்சச் சூழ்ச்சிக் கிடமாம்.
அடக்கு முறைகள் ஆத்திரங் கிளப்பும்.
பொய்கோள் பொறாமை புரட்சியைக் கிளப்பும்,
குடிகளின் உள்ளக் குறைகளை யறிந்தே,
கையென உதவிக் கண்ணென மதித்து,
நடுநிலை யாட்சி நடுவதென் கடனே.
அன்பே அரசின் ஆணிவே ராகும்.
வாளினும் அன்பே வலிமை யுடையதாம்.
ஆருயிர் வாழ்க்கை அன்பே யானால்,
கலியன் இருக்கக் காரண மேனோ ?
அன்பிலாக் கொடியரின் ஆணவச் செருக்கே,
அருளிலாத் தீயரின் ஆசைப் பிணியே,
இகலாய்ப் பெருகி இன்னல் செயுமே.
அன்பே ஆக்கம், அன்பே நோக்கம்.
அன்பே என்றன் ஆயுத மாமே.
மன்னுயி ருடலே என்னுயி ருடலாம்.
எந்த வேளையும், எந்த வுயிரும்,
மணியை யடித்தால், மன்னன் விரைந்து
வழக்கைக் கேட்டு வருத்தந் தீர்ப்பான்.
அமைச்ச ருடனே ஆராய்ந் துடனே,
குறையைக் களைவான் ; குலமுறை யிதுவே.
சிறியரென் றெவரையுஞ் சிறுமை செய்யான் ;
பெரியார் சொல்லைப் பேணி நடப்பான்
களைகளை யெல்லாங் களைந்து, செழுமைப்
பயனே மிகுந்த பயிர்களை வளர்ப்பான்.
மாற்றார் மனதை மாற்றப் பார்ப்பான்,
கூற்றே யாகிற் கூற்றெனப் புடைப்பான்.
புதர்ப்புலி போன்று பொல்லன செய்யும்
அதர்மப் பேய்களை அழிக்கக் கூசான்.
மனிதனைத் தேவனாய் மாற்றுங் குணங்களை
வளர்த்தலே இந்த மன்னவன் கருத்தாம்.
காட்டு விலங்கினுங் கடைக்குணக் கலியரை
வேரோ டழித்தலே வீரர் கடமையாம்.
குடிலிற் புகுந்த கொடுவிடப் பாம்பைத்

தடவிக் கொடுக்கும் தயவினை வேண்டேன்..
நச்சுப் பார்வை நலித்தலே கடனும்..
பாம்பினுந் தேளினும் பாயும் புலியினும்
கொடியரைப் புடைத்துக் குவலய மாந்தர்
பயமற வாழவே படைத்திறல் சேர்த்தேன்.
இதோ நம் பகைவன் அதர்ம வெறியன்
அசுரப் படையுடன் அமர்க்களஞ் செய்வான்;
ஆயுதப் படைகள் ஆயிரந் திரட்டி
எதிர்மை விழ்த்தி இந்தநந் நாட்டில்,
அன்பும் அறமும், அருளான்ம வாழ்வும்
பண்புட னோங்கப் பணிபுரி தற்கே
தருமக் கொடியைத் தாங்குகின் றேனே..
முன்னோர் தந்த பொன்னார் கொடியிது
தந்தை யளித்த தருமக் கொடியிது ;
விண்சுடர் பொலியும் வெற்றிக் கொடியிது ;
கணக்கறு வீரர் காத்த கொடியிது ;
மன்னுயிர்க் கின்பமே வழங்குங் கொடியிது ;
அறத்தைத் தாங்கும் அருட்கொடி யிதனை
மங்கல மான மணிக்கொடி யிதனை,
சக்தி மிகுந்த சக்கரக் கொடியை,
புண்ணிய பூமி புகழ்பெற நாட்டிக்
கண்விழித் திருந்து காவல் புரிவோம்.
இந்தக் கொடிக்கீழ் இருக்கும் மக்கள்
எல்லா நலமும் எய்தி வாழவே,
கடமை காக்கக் காவல னானேன்..
ஈன்றோர் மனமும், சான்றோர் மனமும்,
மக்கள் மனமு மிக்கவு மகிழச்
செங்கோல் செலுத்தித் தேசப் பணிசெய,
சுத்த ஓம் சக்தி துணைதந் தருள்கவே !

பண்கெழு வேந்தன் பேச்சைப் பருகிடத் தெவிட்டா மன்றம்,
கண்களே யிமைக்க வில்லை.. காதுகள் சலிக்க வில்லை..
விண்கதிர் செலுத்துங் காலப் புரவியும் விரைய வில்லை..
திண்ணுயிர்ச் சிலைகள் போன்று திகழ்ந்தது மகிழ்ந்த தம்மா !

ஏனினிப் பகைவர் கொட்டம், ஏனினிச் சாதி பேதம்,
ஏனினி அதர்மக் கொள்ளை.. எவரையார் அடிமை யென்பார் ?..
ஊனுயிர் உலவுங் கோயில், உள்ளது கடவு ளொன்றே..
மானிடம் அமர வாழ்க்கை வாய்ந்ததிம் மன்ன னாலே..

அச்சமொன் றில்லை ; எம்முன் அன்பென வந்த மன்னன்,
இச்சையைப் புரிவோம்.. இங்கே ஏழைகள் யாரு மில்லை ;
நச்சிடும் பந்த மில்லை ; நரகெனுஞ் சிறுமை யில்லை..
உச்சமாம் அறிவி னோங்கி உலகெலாம் வாழு வோமே !..
துயர்களை யழித்தான் மக்கள் சுகமுறத் தரும வெற்றி
உயர்வுறக் கருணை யாலே உயர்த்திய கொடியைப் போற்றி
அயர்வறத் தொண்டு செய்வோம்..அன்பினால் எந்த நாளும்
சயசய சுத்த வென்றே சபையினர் எழுந்தா ரம்மா !

நாளெலாம் விருந்தே; அந்த நாளெலாந் தான மாரி ;
நாளெலாம் ஆடல் பாடல் அரங்கமே.. சுத்தன் ஆண்ட
நாளெலாந் தரும தேவி நகைமுகம் பொலிந்தாள் ; வீரர்
தோளெலாம் வாகை மாலை சுமந்தன வெற்றி யோங்கி..

வாழ்கநம் சுத்த ராஜன். வாழிய சுத்த ராஜ்யம்..
வீழ்கவெம் பகைக்கு லங்கள், வெற்றியே நாளும் ஓங்கி
வாழ்கநந் தீரர் கூட்டம்..வரம்பிலாக் கடவுள் போலே
வாழ்கசுத் தான்ம நேயச் சுடரொளி வைய மெல்லாம் !..

## 16. நன்றி யுரைத்த படலம்

வந்த காரிய மானதும் வரமுனிக் கணங்கள்,
பந்த மற்றவர், தவவினை பயின்றிட வேண்டி,
நந்தி யாதிய நாதர்கள் ஆதியி லிருந்த
கந்தரந் திகழ் இமாலயக் கான்செல வுவந்தார்.

சங்க மோங்கிய முனிவரர் தலைவனும் சாந்தன்,
இங்கு சத்தியன் இந்திரை யிடம்விடை பெற்றே,
மங்க லம்பெறு மனையென மாநிலம் வகிக்கும்
துங்கச் செல்வியும் சுத்தனு நலமுறச் சொல்வான் :—

அருமைச் செல்வியே, அருட்பெருந் தூயநல் லரசே,
திரும ணத்துடன் செயமுடி புனைந்ததுங் கண்டேன்;
இருவ ருக்குமென் ஆசிகள் ஈந்தினி யிமயம்
மருவி மாதவந் தொடருவேன் மாணவ ருடனே.

சொன்ன சொல்லினைத் துகளறச் செயலிலே துலக்கி,
மன்னர் மன்னவ மாண்புறு சுத்தநின் னாட்சி
இன்னு யிர்க்கெலா மினிதென வியம்பலு மிகையே—
அன்னை தந்தையர் அன்பினுக் குரையள வாமோ ?

உனது நன்மையே உயிரெனக் காத்துனைப் பிரியாள்
எனது செல்வியின் இச்சைகள் பலித்தன வினிதே ;
மனது கூடிய மங்கல மனையறம் புரிந்து,
புனித கௌரியர் வாழ்வதும் புலனுறக் கண்டேன்.

கண்ணி னன்றெனக் காசினி வாழ்வினி லிணைந்தே
பண்ணு டன்சுதி யெனவளர் பான்மையைப் பார்த்தேன்.
பெண்ணும் ஆணும் பெருமையைப் பேசிடக் கண்டேன்.
எண்ண மோங்கிய சிலர்காள், இசைபெற வாழ்வீர் !

தரைசெ ழித்திடத் தண்முகில் வழங்கிடத் தயனன்
திரை முகப்பது போலவே நிறைபிறை சேர்த்து,
வரையி லாத்தொழில் வளர்த்துவெவ் வறுமையைத் தீர்த்தே
கரையி லாக்கலை பரப்பிடுங் கருத்தையுங் கண்டேன்.

கல்வி யூட்டினை, கருத்துடன் கைத்தொழி லீந்தாய் ;
நல்ல வீரரின் செம்மையை நாட்டினை ; மாந்தர்
சொல்லுஞ் செய்கையுந் தொடர்புறத் துலங்கிடச் செய்தாய் ;
இல்ல றத்தினை யியல்புற வளர்த்தனை யிசையோய் !

புலவர் கல்வியைப் போலவே பூவையர் கற்பைப்
பொலிவு றுத்திடப் போற்றினை ; புனிதசன் மார்க்கம்
இலகச் செய்தனை ; இன்னுயிர் உன்னுயி ரெனவே
நலம்பெற் றோங்கிட நாட்டினுக் குதவினை நல்லோய் !

அச்ச மற்றனர் ; அதர்மத்தை வெறுத்தனர் ; அறிவின்
உச்ச முற்றனர், ஊருக்கு வாழ்ந்திட வுவந்தார் ;
துச்ச மாகிய கலியினைத் துகைத்திடத் துணிந்தார் ;
பட்ச மாகநீ பணிசெயும் பாரத வீரர். 40

கள்ள மற்றனர் ; கரந்தெழு புரட்சிக ளற்றார் ;
உள்ள முன்னுடன் ஒன்றினர் உன்னுயிர் மக்கள் ;
அள்ளு மன்புடன் ஆண்மையும் கொண்டுன தரசை
முள்ள கற்றிநன் முனைசெழித் தோங்கிட முயன்றார்.

உண்மை யாத்தும நேயத்தில் ஒன்றிய வுலகும்,
வண்மை மிக்கநல் வளம்பெறு மன்னன்செங் கோலும்,
ஒண்மை மிக்கநல் லொழுக்கமும், வீரமும் ஓங்கும்
திண்மை யானவுன் றாட்சியைத் தேவரு மதிப்பார்.

வன்றவத் தொழில் வாய்ந்தவென் மாண்பினைக் காத்தாய்,
என்றவத் திருக் கௌரியை அரசியாய் ஏற்றாய்;
இன்றிம் மாநில மினிதுற வாழ்வெலாம் ஈந்தாய் ;
நன்றி நன்றியெந் நாளுநல் லறந்தரு நண்பா !

இற்றை நாளினுன் றாட்சியால் இன்புறும் உலகைக்
கற்றையங் கதிர்ச் செல்வனைக் கௌவிடும் இருள்போல்,
சுற்றி வெங்கலி சூழ்ந்திடச் சூழ்வதை யறிவாய் ;
பிற்றை நாளுறு பெருஞ்செயல் பேசிய தறிவாய்.

அந்த நாளினுக் காகிய நன்மைகள் அனைத்தும்,
வந்த மைந்திட மாதவக் கனலினை வளர்க்க,
முந்தென் மாணவ முனிவரை யிமாலய முடிக்கே
இந்த நல்லநாள் அழைத்துடன் ஏகிடு வேனுல்.

பதியின் சக்தியைப் பதின்மடங் காக்கியென் பாவை
மதி மிகுந்தநின் மனைக்குறு மங்கலந் தருக !
நதி வளஞ்செயு நிலத்தினைப் போலவே நாட்டைத்
துதி மிகுந்தொளிர் நீதியே சூழுக நிறைவே !

சுத்தன்

முன்னரே செய்த முடிபிது முனிவருக் கரசே,
உன்னருஞ் செயலுாக்கத்திற் கெதிரெதும் உரையேன்.
என்னினும் எமக் கித்ததி சக்தியீந் துயர்த்தும்
உன்னரும் உப தேசத்தை உளமுவந் துரைப்பாய் !

சாந்தன்

என்று சுத்தனுங் கௌரியும் வணக்கமோ டிசைக்க:
"நன்று நன்றுரை நன்றியோ டுரைக்குதுங் கேளாய்.
அன்று கண்டதும் ஆரிய ராமனை யறிந்தாய் ;
இன்று கண்ணனைக் கீதையை யினிதுநீ யறிவாய்..

கண்ணன் வாழ்க்கையுங் கீதையுங் காசினிக் கெல்லாம்
திண்ண மாநலஞ் செய்திடுந் தீரவாழ் வளிக்கும் ;
உண்மை யன்பரும் வீரரும் உம்முடன் கேட்கும்
வண்ணஞ் செய்"கென வரமுனி வழுத்தின னுங்கே....

சித்த மென்றுடன் சித்தியின் கோமுடிச் செல்வன்,
உத்தமன் உப தேசத்தை ஊரெலாங் கேட்கச்
சுத்த மாகிய சூழலைச் சுடர்பெற வமைத்தான்
மெத்தவும் ஒலி பெருக்கிடும் விசைகளு மிணைத்தே.

வீரர் வித்தகர் வேந்தர்கள் விரும்பிய சனங்கள்
பூரணத் தவ முனிவரின் பொன்னுரை பருகப்
பேர வாவுடன் பேச்சற வமர்ந்தனர் ; அரசன்
ஆரஞ் சூட்டினன் ; சாந்தனும் அருண்மொழி பூத்தான்

சுத்த கௌரியின் சுருதியாழ் சொல்லிசை தழுவ,
மத்தளஞ் சுர கெத்துடன் மழலைபோற் கொஞ்ச,
பத்தர் பேரின்பம் பருகிடப் பாவனக் கண்ணன்
உத்தமச் சரி தத்தினை முனிவரன் உரைத்தான்.

# 17. கண்ணன் படலம்

தேனொடு பாலுங் கண்டுந் தீங்கனி ரசமுங் கூட்டி,
வானவர் அமுதும் பெய்து, வானிலாத் தென்றல் வீச
மேனகை யரம்பை மாதர் மென்கர முதவ, நாளும்
பானஞ்செய் சுகமுந் தெய்வ பக்தியின் சுகம தாமோ ?

மகவினைத் தந்தை கூவ மரமெலாம் "ஏன்ஏன்" என்ன
அகண்டப்ர மைக்கி யத்தில் அதுமய மாக வாழ்ந்த,
சுகமுனி பரிட்சித் திற்குச் சொல்லிய கண்ணன் காதை,
தகவுடன் கேட்டார் உள்ளஞ் சச்சிதா னந்த மாமே !

வெய்யவா ளரக்கர் மீண்டும் வேந்தரென் றுருவந் தாங்கிப்
பொய் சினங் காமம் வஞ்சம், போர்மத வெறிக ளேறித்
தெய்வநிந் தனைகள் செய்து, சேனையின் பலத்தி னாலே
வையக மாந்த ரஞ்சி வருந்திடக் கொடுமை செய்தார் !

எங்குமே அசுர மாயம் ! எங்குமே போராட் டங்கள் !
எங்குமே இரத்த வெள்ளம் ! எளியரின் கூக்கு ரல்கள் !
சங்கடந் தாங்கி டாத சகமெனுங் காம தேனு
மங்கல நாத னுக்கு மனத்துயர் கூவிற் றம்மா !

மண்ணிலும் வாழ யோக மாயையால் அவதரித்துப்
புண்ணியங் காத்துத் தீய புல்லுரு விகளைப் போக்கி,
எண்ணரு மன்பர்க் கின்பம் ஈந்தவன் உலகம் போற்றும்
கண்ணனும் ; அவன் செயல்கள் கரும்பினு மினிப்பதாமே !

முதுகுல மாகி, நல்ல முறையுடன் கடவுள் போற்றும்
யதுகுல மதனிற் சூர சேனனும் இனிய மன்னன்
மதுரையில் ஆண்டான் ; அன்னோன்மகன்வசுதேவன் என்பான்;
புதுமணப் பவனி வந்தான் புனிதத் தேவகியோ டாங்கே !

போசர்கோன் உக்ர சேனன் புதல்வனும் கொடிய கஞ்சன்,
ஆசையாய் வதுவ ரர்கள் அமர்ந்ததே ரோட்டும் போது,
"மாசறு கம்ஸா வுன்னை மணமகள் எட்டாஞ் சேயே
நாசஞ்செய்வா"னென் றுங்கோர் நாதமொன் றெழுந்த தம்மா!

"பிறக்குமுன், பகைவன் தாயைப் பிளந்துயிர் குடிப்பேன்" என்று
கறுக்கொண்டு வாளை வீசுங் கம்ஸனைத் தடுத்துத் தேவன்,
வெறுக்கொண்ட கொலையேன்?சேயைவிடுவனுன்னிடமேயென்ன
மறுக்கொண்ட மனது மாறி, மாநகர் வந்து சேர்ந்தான் .

தேவகி மகனை யெண்ணித் திகைப்பினால் அரக்க னாகித்
தாவிச்சென் றரசைப் பற்றித் தந்தையைக் கொடுமை செய்து,
தேவனைத் தேவி தன்னைச் சிறையினி லடைத்தன் னாரின்
ஆவியின் அரிய சேய்கள் அறுவரைக் கொலைசெய் தானே.

உற்றனெ மூராங்க ருப்பம் உரோகிணி வயிற்றிற் கேகி,
மற்றது பலராம் என்னு மாண்புறு மதலை யாக ;
அற்றைநாள் யசோதை யென்னும் ஆயர்கோன் மனைவி தானும்
பெற்றனள் மாயை யான பெண்மக வருளி னாலே.

பூவெலாம் உவகை பொங்கப் புண்ணியர் உளஞ்சி லிர்க்கத்
தேவர்கள் ஆசி கூறத் திருவிலி யரக்கர் சோரத்
தேவகி எட்டாஞ் சேயைத் திவ்வியக் கருவு யிர்த்துக்
காவலின் கடவுளைத்தன் கைகுவித் திறைஞ்சி னாளே :—

"உண்மையே உருவ மாகி, உண்மையே உள்ள மாகி,
உண்மையர் உண்மை யாலே உண்மையாய் உணரப் பெற்றாய்
உண்மையே போற்றி வாழும் உன்னடி யாருக் கென்றும்
உண்மையே வெல்லு மென்னும் உறுதியை யளித்த மெய்யா !

வெம்மையே செய்வா ருள்ளும் விற்றிருந் தவரை மாற்றி,
நன்மையே செய்யு நண்பா, நானெனு மகந்தை யின்றித்
தம்மையே தந்த வர்க்குத் தன்னையே தந்த வள்ளால்,
மும்மையா முலகுக் கெல்லா முதலிடை கடையு மானாய்..

கண்ணினிற் காண்பாய் நீயே ; காணுல கெல்லா நீயே,
எண்ணுறு புத்தி தன்னில் இலகுறு மறிவு நீயே ;
மண்ணுயிர்க் குயிராய் வாழு மன்னுயிர் இறைவா நீசெய்
தண்ணரு ளாலே துன்பச் சங்கிலி நீங்கி டாதோ ?

மானிட வாழ்வில் வீசும் வலியவெங் கவலை யெல்லாம்,
ஊனுட லிடமாய்க் கொண்ட உன்னைநன் றறிந்த போதே
பானுவைக் கதிரின் முன்னே பனியென நீங்கு மன்றே ;
ஏனினுந் துயர மெம்மை இடர்செய்வ தெம்பி ரானே ?

யாதவர் குலத்தி னுக்கே எமனென முளைத்த கஞ்சன்,
வேதனை பொறுக்க மாட்டோம் ; வேறொரு துணையுங் காணோம்
கோதிலார் துயரந் தீர்க்குங் குணமணிக் குன்றே போற்றி !
சோதனை வேண்டா மின்னுந் தூயரைக் காக்க வாராய் !

நெஞ்சகங் கோயில் கொண்ட நிமலனே, நெடிய மாலே,
வஞ்சமொன் றறியோம் ; இந்த வன்சிறை வந்த தேனோ ?
தஞ்சமென் றடைந்தோ முன்னை ; விடுதலை தருவாய் ; நாங்கள்
அஞ்சிடா துனக்கே யாளாய் வாழச்செய் அருளின் வேந்தே !"

இன்னவா றிறைஞ்சும் அன்பர் எதிரிலே விஷ்ணு தோன்றி,
"அன்னையே அச்சமில்லை; விடுதலை யளிப்பேன் ; யானே
உன்னிடைப் பிறப்பேன் ; எந்தை உடனெடுத் தெசோதை பக்கம்
என்னைவிட் டவள்பெண் சேயை இங்குகொண் டுய்க்க"வென்றான்.

"நல்லவர் தம்மைக் காக்க, நாத்திகச் செருக்கர் வீழத்
தொல்லறஞ் சிறக்கப் பாவந் தொலைந்திட, மனித ஜாதி
கொல்பகை யின்றி, பச்சக் கொடுமைக ளின்றி ஒன்றி,
மல்கிடச் செய்வே" னென்று மங்கலத் தாயுட் புக்கான்.

நானில வுயிர்சி லிர்க்க நன்மழை மேகஞ் சூழும்
வானகம் வாழ்த்தத் தாயார் வருந்திய வருத்தந் தீர,
மோனநள் ளிரவில், யோக முத்தநட் சோதி போன்று,
ஞானபே ரந் தாங்கி நந்திருக் கண்ணன் வந்தான் !

தாயுடன் சொன்ன வாறே தந்தையுங் கவன மாகச்
சேயுடன் சிறையைத் தப்பித் திருவருள் வழியே காட்ட
ஆயர்பா டியில் யசோதை யருகில் வைத் தவ்ளுள் ஈன்ற
மாயைபா மகளோ டேகி வந்துடன் சிறையிற் புக்கான் !

உற்றனன் கஞ்சன் காலை ; உலையெனச் சினமு யிர்த்துப்
பெற்றவர் நடுநடுங்கப் பெண்மக வதனைப் பேய்போற்
பற்றினன் ; கல்லில் மோதிப் படுகொலை செய்யப் பார்த்தான் ;
மற்றது மாய மாகி வானொலி கேட்ட தம்மா :—

"அருக்கனைக் கோப மூச்சால் அணைத்திட முடிந்திட் டாலும்,
உருக்கிறைற் பிளந்து காற்றை ஓய்வுறச் செய்திட் டாலும்,
செருக்குறு வெறியா, நீயும் என்னையுஞ் சிதைப்பாய் கொல்லோ?
சுருக்கென உன்னைக் கொல்வோன் சுகமுற வளர்கின் றனே!

அறிவிலாய் அறிதி" யென்றுங் கற்புத மாயை செல்ல,
வெறிபிடித் தரக்கன் அந்தோ விடலாஞ் சிசுவைப் பற்றி,
மறலிபோற் கொல்லச் செய்தான் ; மாதவன் வளரு கின்ற
நெறியுள கோகு லத்தும் நிருதரை ஏவி னனே !..

வாத வன்மைகொள் வஞ்ச வரக்கரின்
ஆத லத்தைத் தன் ஆடலிற் போக்கியே,
கோகு லத்திற் குழந்தை வளர்ந்தனன்
யோகி யுள்ளமர் யோகக் கனலென.

தீய வஞ்சத் திருட்டுப் பிசாசுகள்,
சேயைப் பற்றிச் சிதைத்துயி ருண்டிட
நோயைப் போல நுழைந்துள் ளறிஞர்முன்
மாயை போல மறைந்துமண் ணனவே !

விம்மு வெய்ய விடமுலைப் பூதனி
"அம்ம" பாலென் றளித்தனள் ; பாலனும்
அம்ம தங்கொள் அலகையின் ஆவியும்
இம்மெனக் குடித் தெக்களித் தாடினன்.

வண்டி, போலுருள் வஞ்சச் சகடனைத்
தண்ட விரடி தாக்கித் தகர்த்தனன் ;
அண்டிச் சூறையாய் அள்ளு மரக்கனைப்
பிண்ட மாகப் பிடித்தனன் பிள்ளையே !

ஆடு வானவன் ஆடலைப் போலவே
சாடு வானவன் சள்ளை யரக்கரை ;
பாடு வானவன் பாட்டுக் குழலுடன்
காடு மேடெலாங் கன்றுடன் சுற்றுவான்.

பூத்த மாமலர் போன்ற முகத்திரு;
தித்த ணலவன் செவ்விதட் புன்னகை
நீத்த முண்டு நிறைந்த முகில்வணம் ;
கோத்த முத்தவன் கொஞ்சுங் கிளிமொழி. 120

கண்ணன் ஞானக் கதிரொளி வீசினான் !
கண்ணன் உள்ளங் கவர்ந்தனன் காந்தம்போல் ;
கண்ணன் காட்சி களிதருங் காட்சியாம் ;
கண்ணன் காதல் கடவுளின் காதலே.

கருதியபோதுகண்ணெதிர்வந்து காரியக்கள்ளனாய் மறைவான்
மருவிய தோழர் மகிழ்ந்திடப் புகுந்து,மனைதொறுஞ்சேட்டைகள் செய்வான் ;
துறுதுறுப் படக்கத் தாயொரு காலை, தும்புடன் உரலினிற் கட்ட,
மருதிடைத் தவழ்ந்தாங் கிருவருக் கின்ப வான்பெறும் விடுதலை யளித்தான் !

கன்றென வந்த நிருதனை வீசிக் கனிகளையுதிர்த்தனன்கண்ணன்
தின்றிட வந்த நாரையைப் பிளந்தான் சினத்துடன் விழுங்கிய பாம்பைக்
கொன்றுயிர் குடித்தான்; காளிந்திப் பாம்பின் கொடுவிட முடிமிசை குதித்தான்;
பொன்றுறக் காளை யரக்கனைக் கொம்பாற் பொடித்தனன் கோகுலங் காத்தான்!

அழகிளங் கோபி மார்களின்உயிராய்ஆனந்தலீலைகள்புரிந்தான்;
குழலிசை யாலே யவருளங் கொள்ளை கொண்டுகூத் தாடுவான் குழந்தை;
பழகிய தோழர் பரவச முறவே, பயனுறுகுறும்புகள்பயில்வான்;
செழிதிருபிருந்தாவனமுயிர்அன்புத்தெய்வமாம்யாதவர்திலகன்

வாள்விழி மாதர் மனமவனிடமே;வஞ்சமில்இடையர்நெஞ்சவனே
கேள்வனு மவனே ; கடவுளு மவனே ;கிருட்டினு, கேசவாளன்று
நாளுமெய் யன்பர் நாமசா தனஞ்செய் நாரணநம்பியு மவனே ;
வேள்வியு மவனே ; விரதமு மவனே; வேதத்தின் உட்பொருள்
அவனே ! 140

இடையர்கள் வழக்கப் படியொருநாளில்இந்திர விழவணிசெய்தே,
படையமு தெல்லாம்படைக்குமுன்கண்ணன் பசுக்களுக்கீந்தனன்;
மகவான்
கடைவெளம் போன்றுங் கிடிமழை கொட்டிக் கடுஞ்சினப்
பகையினைக் காட்டக்
குடையென பிடித்துக் கோவளர் மலையை, மாதவன் கோகுலங்
காத்தான்.

காடடர் முல்லை நிலத்திலே கன்று பசுக்களைக்காத்திடுஞ்சிறுவன்;
வேடமேபூண்டவிஷ்ணுவேஅன்பர்வேட்கையைத்தீர்த்திடவந்தாய்!
ஆடலாய்க் கோடி அதிசயங் காட்டி ஆருயி ருலகினை ஆண்டாய் !
பாடலார் குழலால்இயற்கையும்உலகும்பரவசமெய்திடச்செய்தாய்.

மானிடவாழ்க்கைமடுவிடமாகும்மமதையாம்பாம்பினை அடக்காய்;
மேனியெலாமுன் வீடெனக் கொண்டுவிரும்பிய படிவிளையாடாய்;
நானெனு மனத்தைநலியமெய்ஞானநடம்புரிதிருவருளிறைவா;
ஊனுயி ருள்ளே உயிர்த்திடும் உயிரே, உன்னையே சரண்புகுந்
தொழிந்தோம்.

இவ்வகை வணங்கி இந்திரனுதி இறைவரு மனிதரு மாங்கே,
உய்வகை கண்டு மகிழ்ந்திடக்கண்ணன்உலவிடுநாட்களிற்கம்ஸன்,
எவ்வகை யேனும் இவனுயிர் வாங்குமுயற்சியில்ஈடுபட்டழிந்தும்,
வெவ்விய பொறுமை விடந்தலைக் கேறி வேறொரு தந்திரம்
பயின்றன்.

அனலுடன் புகையும் போலே அச்சமும் பகையுங் கொண்டு
சினமிகு கஞ்சன் வஞ்சன் சேயினைக் கொல்லக் கேசி
யெனுமொரு புரவிதன்னை ஏவினன் ; அதனு யிர்ப்பைத்
தனதிளங் கையாற் போக்கித்தழைத்தனன்அரக்கர்காலன். 160

அந்தவோ செய்வ தென்னென் றறிகிலேன் ; அரக்கர் தம்மை
விந்தையாய்க் கொன்றன்ஐயோ;வீண்செயல்செய்துதோற்றேன்;
இந்தக் கோபாலன், பாலன், இனியுயி ருடனி ருந்தால்
வந்தது மோசம் என்றன் உயிரையும் வாங்கு வானல்....

தொல்லையுற் றிவ்வா றந்தத் துகளுறு சூழ்ச்சி யாளன்,
"வில்லுடை வேள்வி செய்வோம் ; விரைவினில் ஆயர் பாடி
செல்லந்த நந்த கோபன் சேயினை அழைத்த தாகச்
சொல்லி நீ கொண்டா" வென்று தூதனை யனுப்பி னுனல்.

அக்குரு ரன்எனும்அவ் வன்புடைத் தூதன் வந்து,
மிக்கவும் பணிந்து போற்றி வேந்தனின் செய்தி சொன்னான் ;
அக்கணங் கண்ணன் அண்ணன் பலனுடன் ஆலோ சித்துத்
தக்கநல் வேளை பார்த்துத் தனுமகங் காணச் சென்றான்.

பேயெனு மாமனின் பெரிய சூழ்ச்சிசெய்
ஆயிரம் இடர்களை அறிந்து தாண்டியே
தாயுடை விலங்கினைத் தகர்க்கக் கண்ணனும்
போயினன் மதுரமா புரிக்குள் வேகமாய் !

சுந்தர மாலைகள் சுதாமன் ஈந்தனன் ;
சந்தனந் தந்தனள் சாந்தக் கூனியும் ;
அந்தமாம் அணிமணி யணிந்து வீதியில்,
வந்தனர் பலவனும் வாசு தேவனும்.

வஞ்சமில் அன்பர்கள் வரவு கூறிடத்
தஞ்சமீந் தன்பரைத் தாங்குங் கேசவன்,
நெஞ்சினிற் கடும்பகை நெருப்பை யேவளர்
கஞ்சனின் மாளிகை கடிதி னேகினான்.

காற்றலை கடலெனக் கர்ச்சித் தேயெதிர்,
கூற்றெனக் குவலயக் குஞ்ச ரம்வர,
சீற்றங்கொள் யதுகுலச் சிங்கம் பாய்ந்துதன்
ஆற்றலாற் கொன்றதன் ஆவி யுண்டனன்.

முட்டிகன் என்றொரு முண்டன் சாடினான் ;
பட்டெனக் குத்தியே பலவன் வீழ்த்தினான் ;
சட்டெனச் சாணுரன் சவதங் கூறினான்
பொட்டெனக் கேசவன் பொருதி வென்றனன்.

வெல்லொணாச் சிறுவனை வீழ்த்திப் பிய்த்துயிர்
கொல்லுவேன் பாரெனக் கோபத் தீயெழப்
பல்லுறு மதமலை மானக் கஞ்சனும்
பல்லிய முழங்கிடப் பாய்ந்து பற்றினான்.

பற்றினன் கண்ணனும் பதகன் மேனியைச்
சுற்றியே தொடையொடுஞ் சுழற்றி வீசினான் ;
மற்றிற முற்றிட மார்பிற் குத்தினான் ;
அற்றதப் பாவியின் ஆவி யாங்கனே !

"விடுதலை ! விடுதலை ! வீரக் கண்ணனாற்
கொடுமைகள் ஒழிந்தன" வென்று கோதிலார்
சடசட வெனக்கரஞ் சத்த மிட்டனர் ;
மடமட வெனமலர் மாரி பெய்யவே !

சிறைகளைந் திறந்தனன் ; செய்ய பெற்றவர்
துறைகளைந் தீர்த்தனன் ; கொற்ற மாதவன் ;
இறைமையை உக்கிர சேனர்க் கீந்தனன் ;
மறைவளர் மதுரையின் வாழ்த்தொ லிக்கவே !

திருவுறச் செய்வன செய்து நம்பிரான்,
அருளறி வாற்றல்கள் யாவு மேவியும்,
பொருளறி சாந்திபன் புனிதச் சிடனாய்க்
குருதலக் கல்வியுங் கொண்டு தேறினான்.

தக்க காலத்திற் பொதுசனத் தலைவனென் றேற்க
மிக்க மாதவர் வாழ்த்திட, விளங்கிடத் தருமம்
சக்க ரத்துடன் சமநெறி தாங்கிய கண்ணன்
மக்களுக் கருள் புரிந்திட மதுரையைப் புரந்தான்.

ஈண்டு போர்செய் இராக்கத ராம்சரா சந்தன்
சீண்டு தீநர காசுரன் பாணன்வெஞ் செறுவில்
மாண்டு மண்ணுறச் செய்தபின் வலிமிகு கண்ணன்
மீண்டும் வைசிசு பாலனும் மிண்டனை வதைத்தான்.

தன்னையே யருட் காதலிற் கரைத்துளந் தவித்த
கன்னி யாம்உருக் குமணியைக் கருத்துற மணந்து,
பின்னும் சத்திய பாமையைப் பிரியமோ டிணைந்து,
மன்னன் மாதவன் மறுவறு மனையறங் காத்தான்.

புல்லு ருவி யரக்கரைப் பூண்டுடன்
கெல்லி யபின் இருட்டினான் இப்பெருந்
தொல்லு லகிற் புதுயுகந் தோற்றிட
வல்ல சீர்பணி வாய்மையி னாற்றினான்.

திருமி குந்த துவரைத் திருப்பெயர்
பெருகு நன்னகர் செய்தெம் பிரானங்கே
பொருளும் பேரின்பப் போகமு ஞானமும்
அருளு மோங்கும் அறத்தினை நாட்டினான்.

வான ளாவிய மாமணி மாடங்கள்,
தேன ளாவுஞ் செழுமலர்ச் சோலைகள்,
ஞான மோங்கிய நற்றவச் சாலைகள்,
கோநகர் கண் குளிர்ந்திடக் காணுமே !

ஆடல் பாடல் அழகணி, சித்திரம்,
நாடகக் கலை நல்ல கவிக்கலை,
தேட ரிய திருவருட் சோதியைக்
கூடி வாழுங் கொழுங்கலை யெங்குமே.

கண்ண னெவ்வொரு மாந்தர் கருத்திலும்;
கண்ண னெவ்வொரு கண்ணின் மணியிலும்;
கண்ணன் சக்திக் கதிர்விரி மாநகர்
மண்ணி லோங்கிய விண்மணிக் கோயிலே.

செய்வ தெல்லாந் திருவருட் சேவையே ;
மெய்யு ரைகள் விளங்குயர் மந்திரம் ;
உய்வ ருளுந் தியானம் உளமெலாம் ;
ஐயன் வேள்வியிவ் வாருயிர் வாழ்க்கையே.

இன்ன சீரமை இன்ப நகரிலே,
மன்னு பூரண யோகியெம் மாதவன்,
உன்னி யுன்னி யுலக நிலையினை
என்ன செய்வதென் றெண்ணி யிருந்தனன். 252

## 18. மகாபாரதப் படலம்

அந்த நாளில் அரவக் கொடியனும்
அந்த கன்மக னன சுயோதனன்,
எந்த நேரமும் இன்னலையே செய்து
சிந்தை தூயரைச் சீரழித் தானம்மா.

அத்தை குந்தி யளித்தநல் ஐவராம்
உத்த மரின் உறுதுயர் யாவையும்
பக்தனும் அக்கு ரூரன் பகர்ந்திடச்
சிந்தங் கொண்டிவை செப்பினன் கேசவன்.

தருமன் பீமன் விசயன் சகாதேவன்
அருமைத் தம்பி நகுலன் அறம் வளர்
கரும வீரர், கடமை வழுவிலார்,
ஒருமை கொண்டவென் உண்மை யடியவர்.

புண்ணியந் தரும் பாண்டவ புத்திரர்
மண்ணில் வாழ மனஞ்சகி யாமலே,
எண்ணி யின்ன லிழைத்திடுங் கௌரவர்,
மண்ணிற் பாப மலைச்சுமை யாயினர்.

தஞ்சங்கொண்ட தருமச் சுடர்களாம்,
பஞ்ச பாண்டவர் தம்மையிப் பாதகர்
வஞ்சங் கொண்டு வருத்திடக் காண்பனோ ?
நஞ்சை மிஞ்ச விடுவது நன்மையோ ? 20

இரக்க மற்ற இராக்கதக் கௌரவர்
உறக்க மற்றிந்த உத்தமர் சாகவே
அரக்கு மாளிகைத் தீமூத லாகிய
வெறுக்கு மின்னல் விளைத்தனர் ஆயிரம்..

கூற்றின் மிக்க கொடுந்துரி யோதனன்
ஆற்றில் ஆழ்த்தினன் ஆற்றல்கொள் வீமனை.
நேற்று மட்டும் நினைத்த தனைத்திலும்
தோற்று மின்னுந் துயர் செயத் தோன்றினன்.

தருமர் அழைப்பு

சிந்தை செய்யுந் திருவருட் கண்ணனை
இந்திர நகரில் இசை யோங்கிய
நிந்தை யற்ற நிருபன் தருமனும்,
எந்தம் வேள்விக் கெழுகென் றழைத்தனன் :—

மன்னு மாநில மன்னர் மகிழ்ந்திட
இன்னி சையின் இராசசூ யாகமுன்
முன்னி லையின் முடிக்கக் கருதினேம் ;
அன்னையின் மிகும் அன்புக் கடவுளே..

நாடு மிக்க நலம்பெறு வேள்விகை
கூடு மின்பங் குலவுமுன் கூட்டினல் ;
ஆடு முன்னரு ளானந்தக் காட்சியே
தேடுஞ் செல்வத் திரளெமக் காகுமே. 40

வீரம் பூத்திடும், வெற்றி கனிந்திடும்,
கூர வெம்பகை கொத்துடன் வீழ்ந்திடும்.
பார மைதிப் பயனுறும் உன்னருள்
கோரி னெங்கள் குறைகள் விலகுமே.

கற்ற ஞானமும், காட்சிப் பயன்களும்
பெற்ற செல்வமும், பேரின்ப வீடதும்,
சுற்றுங் காலச் சுழலினில் உன்னையே
பற்றி நிற்கும் பரிசுத்த பக்தியே..

வருக கண்ணன் மகம்நிறை வேறிடத்
தருக மெய்த்துணை தஞ்சம் புகுந்தனம் ;
அருக ராகி யருளினில் வாழ்ந்திசை
பெருகச் செய்யெங்கள் பேரின்பத் தெய்வமே..

திவ்விய குண தீரர் அழைப்பினை
அவ்வ கையின் அருளுடன் ஏற்றுடன்
உவ்வகை தரும் உத்தமக் கண்ணனும்
ஒவ்வ ரிய மகத்தினுக் குற்றனன்.

பக்குவம் பெறு பாண்டவர் ஐவரும்
தக்க பாத்திரர் சத்திய தர்மத்தின்
மிக்க சீலரென் வீரரென் றச்சுதன்
அக்கணம் எழுந்தான் அவர் காணவே...

தூண்டு மன்பு துளிர்த்திடத் துள்ளியே,
யாண்டவர் பரந் தாமனைக் கும்பிட்டே
"ஆண்டவா வர வேண்டும் அருளினி
ஈண்டும் ; வெற்றியுன் னிச்சை" யென் றேற்றனர்.

வசையுறு கௌர வர்க்கு வளரப் பொறாமை, மன்றின்
மிசையுறு முனிவர் வாழ்த்தி, வேதங்கள் ஓதி நிற்க,
திசைதிசை மன்னர் செல்வத் திரள்களைக் குவித்துப் போற்ற,
விசைபெறும் அரச வேள்வி வெற்றியைக் கண்ட தன்றே..

"கண்ணவுன் அருளி னாலே காரிய சித்தி பெற்றோம் ;
எண்ணலும் எதிரே நின்றெம் இன்னிய துணைவ னுவாய் ;
புண்ணியா நீயே யெங்கள் புக" லெனப் பாண்ட வர்கள்,
பண்ணுடன் வணங்கித் தங்கள் பத்தியை நிவேதித் தாரே.

"தன்னலஞ் சிறிது மில்லார், சத்தியம் போற்றுந் தூயர்
என்னையே பரமென் றுள்ளார் என்னுளே யிருப்பா ரென்றும் ;
இன்னலைத் தாண்டி நாளும் இன்பமே பெருகி வாழ்வார் ;
அன்னவர் ஐவர் நீ"ரென் றச்சுதன் விடைபெற் றனே.

மாயச் சூது

ஏனெனக் கேட்பா ரின்றி, இழிமன வழியே சென்று,
நானென மார்பு தட்டி, நல்லவர்க் கிடும்பை செய்து,
கோனெனப் பெருமை பேசும் பாம்புயர் கொடியோன், ஐவர்
கானகங் காக்க வேண்டிக் கடியதோர் சூழ்ச்சி செய்தான்.

தந்திரச் சகுனி மாமன் சாற்றிய படியே மிக்கச்
சொந்தமார் முகநகைத்தேன் சொட்டவே தூது பேசி,
"எந்தமா நகரில் வந்தெம் விருந்தினை ஏல்க" வென்றான்.
சிந்தையில் வஞ்ச மின்றிப் பாண்டவர் சென்ற ரம்மா !

விருந்துகள் பலமாய்ச் செய்தான்; வியன்மொழிபலவுஞ்சொல்லி
வருந்திநன் றுபச ரித்தான் ; வஞ்சகச் சகுனி கையில்,
பொருந்திட வைத்தான் ; மிக்கப் பொறைமிகு தரும னுரை
இருந்துசூ தாடச் செய்தான் இப்புறஞ் சிரித்த பாவி.

துதிமிகு தரும னும், சகுனியின் சூதிற் சிக்கி,
மதிமிக மயங்கி, மண்ணை மனைவியைத் தம்பி மாரைச்
சதிமிகு பகைவர் தூண்டச் சகலமும் வைத்தி ழந்தான்..
கொதிமனங் குளிர் சுயோதன் குதித்தனன் எக்க ளித்தான்..

வெற்றியின் மமதை யேறி, வெய்யவன் "வேக மாகப்
பற்றிவா பாஞ்சா லத்துப் பாவையைத் தம்பி" யென்றான்.
மற்றவன் மனை விலக்க மானமா தாவை "வாடீ
கொற்றவை"யென்றுபற்றிக்கொணர்ந்தனன்; கொடுமையந்தோ!

கண்ணிலான் பெற்ற ஞானக் கண்ணிலான் சபையின் முன்னே,
பெண்ணுல கேத்து நின்ற பெண்ணுருத் தெய்வந் தன்னைக்
கண்ணுறுங் கணவர் முன்னே, கழிசடைத் தம்பி கையால்
திண்ணெனத் துயிலுரிக்கச் செய்தனன் பாவி யந்தோ!

பாஞ்சாலி முறையீடு

ஈன ரென்னை இழிவுசெய் கின்றனர்
மானங் காக்க மனங்கொள் ஹரி ஹரி!
தீன ரக்ஷக சேவடி பற்றினேன்—
யானைக் கன்றரு ளீந்த தயாபரா!

கட்டை யென்று கருதியென் காதலன்
வட்டி லென்னையும் வைத்திழந் தானந்தோ!
கட்டிக் கொண்ட கணவருங் கையினைக்
கட்டிக் கொண்டிக் கொடுமையைக் காண்கின்றார்!

விதி விதியிது வெய்ய தலைவிதி!
பதி யெனக்கும் பகடை யுருட்டியிக்
கதி கொணர்ந்தனன்! கண்ணநின் சக்தியாற்
பதிதர் சூழ்ச்சிகள் பாழ்படச் செய்குவாய்!

கண்ணி லாத கபோதியின் பிள்ளைகள்!
பெண்ணின் மானங் கெடுத்திடும் பேடிகள்!
மண்ணுக்குச் சுமை யான மடயர்கள்!
எண்ண மண்ணுறச் செய்யென் னிறைவனே!

கண்டு கேட்டுக் கனலுகப் பீமன்வெ
குண்டெ ழுந்தனன்; கோபப் புயலுடன்;
சண்ட வேகச் சரத்தை விஜயன்கைக்
கொண்டெ ழுந்தனன் கொற்றவை யஞ்சவே!

வில்லி ருக்க விறல்பெறு தோளனுங்
கல்லி ருக்கக் கருணையி லாதிந்தப்
புல்லர் பத்தினி மானத்தைப் போக்கிடக்
கல்லைப் போலக் கணவருங் காண்பதோ?

பதை பதைக்குதென் பத்தினி மானத்தை
வதைசெய் பாதகர் மாள்க வுடனெனக்
கதை சுழற்றிக் கதங்கொளும் பீமனை
முதிய வன்முனி வாற்றி யமர்த்தினன்:—

"நில்லு நில்லு ! நியாய மிருக்கினும்
வில்லுக்கும் கதைக் கும்,விற லுக்குமே,
சொல்லுக் கும்துணி வாகிய நேரமி ஃ
தில்லை யில்லை ! இறைவன் இருக்கின்றான் !..

வருவ தெல்லாம் வருக பொறுமையாய்க்
கருமத் தின்பயன் கண்டு நுகருவோம் ;
தருமம் வெல்லும் ; அதர்மம் அழிந்திடும் ;
இரும னத்தை யறிவின் இணக்குவோம்.

அறிவ றிந்த பெரியவர் ஆத்தும
நெறி யறிந்த நிமலரிப் பாரிலே,
குறி குணங்கள் குறித்திடும் ஆடலைப்
பொறை யுடன் கண்டு புன்னகை செய்வரால்."

தரும னிம்மொழி சாற்றி யமர்ந்ததும்,
தரும தேவதை சான்ற திரௌபதை,
வருணச் சேலை வளர்ந்ததை வாரிய
திருவி லான்கை திடுக்கென் றயர்ந்ததே.

பெண்ணின் மானத்தைப் பேரவை தன்னிலே
கண்ணன் காத்துக் கருணையைக் காட்டினான் ;
வெண்ணகை செய்த வீணர் வியந்தனர் ;
பெண்ணகை செய்து பேசினள் கேண்மினோ :

பாஞ்சாலி சபதம்

கூந்தலை யிழுத்து வந்து கொடியவர் கூட்டங் கூடி,
வேந்தவை நிறுத்தி, இந்த வீரவிற் கணவர் முன்னே,
ஏந்திழைக் கின்னல் செய்தார் இரத்தத்தில் ஆட்டி யன்றிக்
கூந்தலை முடியேன் இன்று கொண்டனன் சபதங் கேளீர் !

உண்மைமேல் ஆணை ! யென்னை உய்வித்தான் பேரில்ஆணை;
பெண்மைமே லாணை! கற்பின் பெருமைமே லாணை! என்றன்
கண்மைமே லாணை ! வீரக் கணவர்மே லாணை கொண்டேன் !
புண்ணிழை யரக்கர் வீழ்ந்து, புண்ணியர் வாழக் காண்பேன்.

அவ்வகை வீம னும் அருச்சுன னதி யோரும்
ஒவ்விய சபதம் செய்ய "உரிமையைத் தருக "வென்றே
செவ்விய விதுரன் சொன்னான்;செவிகொளாப் பகைவன் மீண்டும்
"வெவ்விய சூதில் வென்றால்வென்றதைத்தருவேன்"என்றான்.

மறுபடி மாயச் சூதில் வலிவுற மடக்கி வென்று,
துறுகணன் "சாது வான தருமனுந் தம்பி மாரும்,
உறுகவெங் கானம் பன்னி ராண்டினும் உருக் கரந்தே
உறைக ஓ ராண்",டென் றோதி ஓட்டினன் ஊரி னின்றே.

## வன வாசம்

கோதிலாப் பாண்டு மைந்தர் குந்திபாஞ் சாலிகூடப்
பாதக ருக்கு நாட்டைப் பறிகொடுத் தடவி சென்றே,
மாதவ ருடனு றைந்து, மாசறு கனிக ளுண்டு,
நீதற வாழ்ந்தார் ; ஆங்குந் தீயவன் கொடுமை செய்தான்.

நல்லவர் தமை யழிக்க, நல்லவர் தம்மைத் தூண்டிப்
புல்லிய வேள்வி செய்தோர் பூதத்தை யேவி விட்டான் ;
கொல்விடங் குளத்திலிட்டான் ;கொலைசெயப்பலவுஞ் செய்தான் ;
அல்லலைத் தீர்க்குங் கண்ணன் அன்பரைக் காத்தான் மாதோ !

திசைதிசை மலர்க ளெல்லாம் சிவார்ப்பணஞ் செய்யும் அன்பு
விசயனும் கைலை யூன்றி வியன்பெறுந் தவங்கள் செய்து
பசுபதி யருளி னாலே பாசுப தாத்தி ரத்தை
விசையுறப் பெற்று வந்தான் வீரப்போர் புரிய வம்மா !

## பாரதப் போர்

சொன்னவா றிந்த நல்லோர், சொல்லினைக் காத்த தூயர்
பன்னிரண் டாண்டு காட்டிற் படுதுயர் பொறுத்தோ ராண்டு
மன்னுருக் கரந்து றைந்து, வந்தனர் ; மறுத்தி டாமல்
அன்னவர்க் குரிய நாட்டை அளியென விதுரன்சொன்னான். 180

பாண்டவர் தூதனுகக் கண்ணனே பரிந்து சென்று,
வேண்டிய மட்டுஞ் சொன்னான் ; வெட்கமில் லாத பொல்லோன்
"ஈண்டடி மண்ணுந் தாரேன்" என்றனன் இரக்க மின்றி ;
ஆண்டமர் தொடுக்கக்கண்ணன் அன்பரைப் பணித்தெழுந்தான்.

பூப்பொறை நீக்க வந்த புண்ணிய யோகி சொல்லே,
காப்பெனக் கொண்டெ ழுந்தான் கார்முகச் சிங்க வீரன் ;
தீப்பொறி சிந்த வீமன் சிலைபெறுந் தோள்கள் கொட்டி,
நீப்பனிந் நீதி யற்ற நிருதரை யென்றெ ழுந்தான் !

சாரதி யாகிக் கண்ணன் சண்டையில் விசய னுக்குத்
தேரினை நடத்திச் சாட்சி சேதன னாயி ருந்தே,
போரினை நடத்தி யுண்மைப் பொறுமையும் அறமும் இந்தப்
பாரினில் வெல்லு மென்று பளிச்செனக் காட்டி னான்.

என்று மாமுனி இத்துட னிக்கதை
நின்று நாளை நிமல னருளிய
வென்றி வீரரின் வேதமாங் கீதையை
நன்றிந் நேர நவில்வனென் றேகினான். 196

# 19. பகவத் கீதைப் படலம்

மூண்டது கொடிய வெம்போர் முதியது ரோண னுங்கே
ஈண்டிய சேனை தாங்கி இகலெடுத் துற்ற நாளில்,
மாண்டவர் தொகையையெண்ணி,மாளுவோர்எவரென்றெண்ணிப்
பாண்டவ வீரன் உள்ளம் பதைத்தனன் பதறி னுனே !

வீரன் சோர்வு

சங்கொ லித்தனன் சக்கரக் கண்ணன்...
    தாவிச் சேனை சமர்செயும் வேலை...
"அங்கு நிற்பவர் என்கிளை ஆசார்...
    அவரைக் கொன்றர சாள விரும்பேன்...
இங்கு லகைத் துறந்திரந் துண்பேன்..."
    என்று வில்லை யெறிந்து கவலை
பொங்கு வீர விஜயனைத் தேற்றிப்
    புன்னகை செய்து கண்ணன் புகல்வான்.

கண்ணன் உபதேசம்

சாடி வெஞ்சர மாரி பொழியுந்
    தருமப் போரிடையே தளர் வெய்திப்
பேடி போலப் பிதற்றிடு வாயோ ......?
    பெரிய வீரப் பெருமைக் கழகோ ?
கூடி நிற்குங் கொடியரைக் கொன்றே...
    குவல யத்திற்செங் கோலை நிறுத்தாய்....
வாடி நிற்கும் அறமகள் வாழும்
    வன்பணி யிதென் அன்பு விஜயா ! 20

இதயத் தேரில் இருந்துரைக் கின்றேன் :
    எங்கு முள்ள பரம்பொருள் யானே...
மதி மயங்கா தெழுந்துநில் வீரா....!
    வாழ்வின் முக்குணப் போரினுக் கஞ்சேல்...
சதிசெய் ஆசை அகந்தையின் கூட்டம்
    சாயத் தூய சுதந்தரம் வாழப்
புதிய விண்ணர சோங்கிப் பொலியப்...
    போர்செய் சிங்கத்தைப் போல விஜயா !

அழிவறும் ஆன்மா

பாசத்தால் என் பணிமறுக் காதே.
    பாய்ந்து போர்செய் பகைவர் நடுங்க !
வீசு வெங்கணை ! வெற்றி யுனக்கே !
    வீரர் தம்வினை செய்திடக் கூசார்.
நாச மாவது நாறுடற் சட்டை ;
    நன்று வாழ்வது பொன்றறும் ஆன்மா.
மாசி லாதது ; வாளுக்குந் தீக்கும்
    வணங்கி டாதது வாழ்விற் குயிராம்.

## உண்மைப் பொருள்

உண்மை யாவதும், உள்ள பொருளும்,
உறுதி யாவதும், ஒன்று பலவாய்
மண்ணுடல் கொண்டு வாழ்வது மிங்கே
மாசி லாத சுயம்பர மாத்மா
எண்ணி லாத பிறப்பிறப் பெல்லாம்,
இன்ப துன்ப விகற்பங்க ளெல்லாம்
கண்ணிற் காணுமிக் காயத்திற் கேயாம்.
கலங்கி டாரிதைக் கண்ட புலவர்.

## சமத்துவம்

வெற்றி தோல்வி, விருப்பு வெறுப்பு,
வெம்மை தண்மை விகற்பங்க ளின்றிப்
பற்று நீங்கிப் பலன்விழை வின்றிப்
பழுதறப் பணி செய்வது யோகம் ;
முற்றும் உள்ளச் சமத்துவம் யோகம்...
மூளையைக் கலக்கும் புல னைந்தைச்
செற்றுச் சுற்று மனத்தைச் செயித்தே
சேம நல்லறஞ் செய்பவர் மேலோர்.

## நிலைத்த ஞானி

ஆசை யச்சம் அகந்தையைப் போக்கி,
ஆமை போற்புலன் ஐந்தும் அடக்கிப்
பாச மோகப் படர்சினம் விட்டுப்
பகைநட் பின்றிப் பகலிர வின்றி,
மாசி லாத மனத்தெளி வுற்றோன்,
மாறி லாதமர் மாகடல் போன்றோன்.
பேச லில்லா நிலைபெறு ஞானி...
பெரிய மோனி, பிறப்பிறப் பில்லான்.

## வினைசெய் ஞானி

இந்த ஞானங்கை வந்த புலவன்,
ஏது செய்யினுந் தீதுற மாட்டான் ;
சந்த தமுஞ் சமநிலை நின்றே
தன்ன றத்தினைத் தாங்கிடுந் தீரன்;
பந்த மற்ற சுதந்தர னாகப்
பாரி லேயவன் சீர்வினை செய்வான்.
அந்த மாதி யிலாதுள் ளமரும்
ஆன்ம சத்துவம் தானென் றறிவான்.

### கரும யக்ஞம்

கருமம் விட்டதுங் கட்டற மாட்டாய் ;
கரும மின்றிக் கணமுந் தரியோம்.
பெரு வினைக்களன் போலு முலகே !
பிரம சக்கரம் பீடுறு வாழ்வே
விரியு ஞான வியன்சுட ரோங்கும்,
வேள்வி யாக வினைகளைச் செய்வாய் ;
பரம னுக்குயர் வேள்வியில் லாத
பாழும் வாழ்வு பழுதுறு வாழ்வே !

### ஞான வேள்வி

விரதம் கல்வி, தவம், உப சாந்தம்,
விந்த டக்கம், வை ராக்கிய வீரம்,
பரம் பொருளைப் பணிவுடன் போற்றல்,
பாயு மூச்சை யடக்கி நிறுத்தல்,
பிரமத் தீயில் அனைத்தும் வழங்கிப்
பிரம மாகுஞ் சகஜ சமாதி,
அரிய வேள்விக ளாமிவை செய்தார்
அறி வொளிரும் அமைதி பெறுவார்.

### பிரம்ம யக்ஞம்

வேக மான புலனை யடக்கி,
வேறு செய்யும் அவித்தையை நூறி
சோக மோகத் துயரைத் துடைத்தே,
தொந்த மற்ற பதம்பெறு ஞானி,
யோக யுக்தன், விசுத்தன், விமுக்தன்.
உள்ளத் துள்ளும், உலகிலும், எங்கும்,
ஏக மான பிரம வொளிக்கே
ஈந்து தன்னை அதுமய மாவான்.

### பணி செய்

திநர குறுத்தும் சினங் காமம்,
சிறுமை லோபப் பகைகளைச் செற்றே,
யானென தெனும் ஆணவ மின்றி,
யாதுஞ் செய்வ தியற்கையென் றெண்ணி,
வானு லகம் வளர்நலம் போற்றி,
வரும் பலாபல னையெனக் கீந்தே,
நானிஞ் ஞாலம் வகிப்பதை யெண்ணி
நன்று நின்கட னாற்றிடு நண்பா !

### அவதாரம்

நலியத் தியன நல்லறம் வாழ,
*நால்வகைத் தொழிலும் நனி யோங்க,
உலகந் தெய்வ நிலைக்கெழுந் துய்ய,
யோகத் தாலிங் கவதரிக் கின்றேன்.
அளவி லாவினை யாடல் புரிந்தும்,
அமைதி விண்ணில் அசைவற் றமர்வேன்.
இலகு ஞானிகள் எத்தொழில் செய்தும்,
இதயத் தென்னுடன் கூடி யிருப்பார்.

### ஆத்ம ஞானம்

தன்னைத் தன்னால் உயர்த்தித் தழைப்பாய்
தன்னைத் தாழ்த்திட லேதனக் கின்னல்
தன்னைத் தன்வச மாக்கி யமர்ந்தே,
சலன மற்ற விளக்கென் றொளிர்வாய்,
தன்னிக ரென யாவையுங் காண்பாய்,
சங்கற்ப விகற் பங்க ளொழிப்பாய் ;
தன்னைப் பெற்றவன் பின்னெதும் வேண்டான் ;
தானே யின்பந் தனக்கென் றறிவாய்.

### யோகம்

ஆச னத்தில் அசைவற் றமர்ந்தே
அமைதி யான மனத்தினி லூன்றி
"மாசி லாதசுத் தாத்மா நான்" என்றே
மறுவி லாத தியானம் புரிவாய்.
ஆசை பற்றி யலையும் புலனை,
அங்கங்கே யிழுத் துள்ளத் தடக்காய்.
பேச ரிய பெரும்பொரு ளாவாய்
பேரின்பத் தவ யோக மிதாமே.

### யோக யுக்தன்

யோக யுக்தன் உலகினுக் கஞ்சான் ;
உள்ள டங்கி யுவந்தொளி கூடி
ஏக மாகிய பிரமநிர் வாணன்,
எங்குந் தன்னை யினிதுறக் காண்பான்.
தாக மோகந் தவிர்த்த சமர்த்தன்,
சமநிலை யினிற் சாந்த மடைந்தோன்,
யாக முண்ணும் இறைவனைத் தேர்ந்தோன் ;
ஆயிரஞ் செய்தும் பற்றற நிற்பான்.

---

* *நால்வகைத் தொழில்*— குண கர்ம விபாகம் :
1. *அந்தணர்க்கு உரிய அறிவுத் தொழில்;* 2. *அறங் காக்கும் வீரத்தொழில்;* 3. *திருவோங்கும் பயிர், பசு காத்தல், வாணிகம் கைத்தொழில்;* 4. *பொதுநலமான தொண்டுகள்.*

### எனக்கினியவன்

என்னின் அன்னியம் யாங்கிலும் இல்லை.
என்னிலே தொடுப் புற்றன வெல்லாம்.
என்னி யற்கை *யிரண்டும் உலகாய்
இன்னுயிர்க் குல மானதை யெண்ணுய்.
என்னை யன்புசெய் யும்அறி வோனே
எனக் கினியவ ைவனெப் போதும்.
என்னி லேயவ னின்புற் றிருப்பான்,
என்றும் யானவ னுள்ளத் திருப்பேன்.

### உய்வகை

எவ்வ கையினர் என்னைக் குறித்தே
எவ்வகை வழி பாடுகள் செய்தும்,
அவ்வ கையினர்க் கவ்வழி தோன்றி,
அன்பை யேற்றிங் கருள்பவன் யானே.
செவ்வை யாகிய சித்தம் வகித்தென்
சித்தம் செய்வகை செய்பவர் மேலோர்.
உய்வகை யிதுவே—உணர்ந் துள்ளே
ஒருமை கொண்ட கரும நிறைவே.

### இறுதி எண்ணம்

எண்ணம் எவ்வகை யவ்வகை வாழ்வாம்.
இறுதி யெண்ணம் இனிவரும் வாழ்வாம்.
எண்ணி லாத பரஞ்சுட ரொன்றே
எண்ணு மன்பனுக் கின்ப மியல்பாம்.
உண்மை யுன்னத நன்னிலை யெய்வான்—
உன்னி யென்னை யுயிர்விடும் யோகி.
புண்ணியம் பிறி தில்லையெப் போதும்,
பொருந்தி யோகத் திருந்திடு வீரா...

### என்னில் அடக்கம்

வானிலே யடங்கும் வளி போலே
வையம் வாழுயிர் என்னில் அடங்கும்.
யானென் மாயையால் ஆக்கி யளிப்பேன்.
யானிலா தில்லை யாங்கனு மெஃதும்.
ஈனப் பாவியும் உய்வனென் அன்பால்.
எனைநினைந் தெனக்கே யனைத்தும் செய்
ஆணை ! அன்பன் அழிவுற மாட்டான் ;
அன்ப னின்பொறுப் பென்பொறுப் பாகும்.

---

* இயற்கை இரண்டு: பரப்ரகிருதி, அபரப்ரகிருதி.

### எல்லாம் யானே

முதலிடை கடை முற்றிலும் யானே.
மூன்று கால நிகழ்ச்சியும் யானே.
ஸதஸத் தாகிடுந் தன்மைகள் யானே
ஸர்வ பூத மஹேசனும் யானே.
இதயந் தோறும் இருப்பவன் யானே
இயற்கை யான பொருள்களும் யானே
அதிசயச் சிறப் பென்சிறப் பாகும்.
அகில மெல்லாமென் அம்ஸமொன் றேயாம்.

### விசுவரூப தரிசனம்

விஜயன்

யான்சுத் தான்மன் எனத்தெளி வுற்றேன் ;
எம்பி ரானுன் அருளிது வாயின்,
வான்புவி நிறைந் தோங்கிப் பெருகும்
வடிவைக் கண்டிடக் காட்டிடு வாயே.

கண்ணன்

ஊன்வி ழிக்கரி தாகுமென் உண்மை—
உலக ளாவும் அகண்ட சொரூபம்.
ஞானக் கண்ணைத் திறக்கிறேன் பாராய்
ஞால மாகுமென் கோலத்தை நன்றே !

விஜயன்

கண்கொளா வியன் காட்சி யடாடா !
கதிர்க ளாயிரங் காந்திடுஞ் சோதி !
விண்ணு மண்ணும் விரிந்தொளிர் உன்னுள்
விளக்குப் பூச்சிபோல் வீழ்ந்தனர் வெய்யர் !
எண்கொ ளாத்தலை, ஆயுதக் கைகள் !
இகற் படையை நொறுக்கிடும் பற்கள் !
புண்ணியர் தொழு கின்றனர் உன்னை !
பூமி யெங்கும் பொலியுமுன் சக்தி !

### கண்டேன் ! கண்டேன் !

கண்டேன்! கண்டேன்! காசினி யெல்லாம்.
அண்டமும் அப்பா லானவை தாமும்
கண்டேன் உன்னுட் கண்ணநின் பெருமை
விண்டேன், வியந்தேன் வேதப் பொருளே...
மகுடமும் தண்டும் வலயமுந் தாங்கினை...
தேசோ ராசியாய்த் திகழ்ந்தனை யெங்கும்.
ஆக்குவாய் காப்பாய் அழிப்பாய் நீயே...

அளவிடற் கரியாய் அழிவிலாப் பொருளே.
உலகுயிர்க் கெல்லாம் உறையு ளாவாய்.
ஆதியு நடுவும் அந்தமும் ஆனாய்,
கதிர்மதிக் கண்ணா, கனலெறி முகத்தாய்
எட்டுத் திக்கும் சுட்டுப் பொசுக்கினை
சித்தரும் இயக்கருந் தேவரு, முனிவரும்,
போற்றிசெய் துன்னைப் பூங்கழல் பணிவார்.
ஆறுகள் கடலை அடைவதே யொப்ப
உன்னுட் புகுந்தனர் உலகின ரெல்லாம்.
வணக்கம், வணக்கம், வான்புவி கடந்தோய் !
ஆஹா....அரக்கரை வேகமாய்த் தின்றாய்....
உக்கிர வடிவே உரை நீ யாரென..
உன்முன் அஞ்சினேன் ஓங்குயர் பரனே.

கண்ணன்

யானே காலன் ; அழிக்கப் புகுந்தேன் !
உன்னைத் தவிர உண்பேன் அனைத்தும்.
முன்பே இவரை முடியக் கொன்றேன்...
நிமித்த காரண மாகவே நின்று...
போர்புரி யன்பா....புகழெலாம் உனக்கே

விஜயன்

சரணம் சரணம் சத்குரு மஹாத்மனே !
ஆதிப் பொருளே....அனந்த குணனே,
உலகிற் கெல்லாம் உயர்பெறு நிலையமே.
அறிவே அறிஞர் அறியும் பொருளே,
ஆயிரந் தடவை அடியேன் வணக்கம்.
முன்புறம் வணக்கம், பின்புறம் வணக்கம்.
எல்லாப் புறமும் இறைவனே வணக்கம்.
மனிதத் தோழன் என்றுனை மதித்தேன்.
அன்பி னாலும் அசட்டை யாலும்
அன்பா கண்ணா யாதவா என்றேன்.
உண்ணும் போதும், உறங்கும் போதும்,
ஆடும் போதும், அமரும் போதும்,
நண்பர் முன்பும் நாயினேன் உன்னை
விளையாட் டாக வினய மின்றிப்
பேசினேன் ; என்பெரும் பிழைகளைப் பொறுப்பாய்..
மன்னித் திடுவாய் மாதவா போற்றி !
சராசர வுலகத் தந்தை நீயே...
ஒப்புயர் வற்ற உண்மை நீயே—

நீயே வையகம் ; நீயே வானகம்.
தந்தை தனயனைப் பொறுப்பது போலே
நண்பனை நண்பன் பொறுப்பது போலே
காதலன் காந்தையைப் பொறுப்பது போலே
தேவா பொறுத்தருள் சிறியேன் பிழையை....

ஆதி யப்பவொப் பற்ற பரமா,
அடைக்கலம் என் பிழைபொறுத் தாளாய்...
போதும் இந்த உருத்திரக் காட்சி
பொறுக்கி லேன்இயல் பாகப் பொலிவாய்.

### கண்ணபரமாத்மா விசுவரூபத்தை மறைத்து

வேதந் தானந் தவம் விளம் பாதாம்.
வீர பக்தி விரதத்தி னலே....
யாதினும் பெரும் அற்புதங் கண்டாய்.
யானெ லாமென் றறிந்தனை யன்பா !

### அருமை யன்பன்

கருத ரிய கடவுளைக் கண்டோன்.
கானு யிர்கள் அதுமய மென்போன்,
இருமை, அச்சம், பகைசெருக் கற்றோன்,
இன்ன லின்றி எவர்க்கும் இனியன்,
கருணை நேயன் சமநிலைச் சாந்தன்,
கலங்கிடா மனத் தூயன், விதேயன்,
அரு ளமைதி யறிவொளிர் யோகி,
அருமை யன்பன் அவனெனக் காவான்.

### புருஷன், பிரகிருதி

†தத்துவம் இரு பத்தொடு நான்கும்
சார்ந்த தாகும் இயற்கைச் சடலம்.
சுத்த சாட்சி புருஷ னதனுள் ;
சுதந்தரன் அறியும் அறி வானேன்.
சித்த மூன்றுந் தியானத்தி னலும்,
செய்ய ஞான விசாரத்தி னலும்,
பத்தி யாலும், அருட்பணி யாலும்
பார்த்தவர் பர மானந்த ராவார்.

---

†24 தத்துவங்கள்:பூதங்கள் 5,தன்மாத்திரை5,ஞானேந்திரியம் 5, கர்மேந்திரியம் 5,அந்தக்கரணம் 4—ஆக 24

### ஞானம்

தன் னுறுதி யடக்கம், பொறுமை,
சாது சங்கம், பெரியவர் சேவை,
இன்னுயிர்க் கருணை மனத் தூய்மை,
இந்த்ரிய ஜயம், சித்தவை ராக்யம்,
என்ன தென்னிறு மாப்புக ளின்மை ;
இதய சாந்தி, சமநிலை யோகம்
உன்னதப் பொருளை யுணர் விக்கும்,
உண்மை ஞான வொளியினை நல்கும்.

### பிரம நிலை

சுகம், அவா, இருள் ஆணவத் தாலே
சூழு முக்குண மாயையைத் தாண்டி,
பகைநட் பற்ற சமப்பத மெய்தி,
பற்றி லாது பதைப்பதில் லாது,
சகத்தி னுடலைச் சாட்சியாய்க் காண்போன்,
சந்தத மெளனச் சிந்தையில் வைப்போன்,
அகங்கி ளம்பா தடங்கிய சாந்தன்,
அவன் பிரம நிலைபெறு யோகி.

### வாழ்க்கை

ஆதி ப்ரம்மனில் ஊன்றி விரியும்
அரசைப் போன்றதிம் முக்குண வாழ்க்கை.
பேத புத்தி அகந்தையின் பற்றால்
பெருகுந் துன்பமிப் பேதுறு வாழ்வில்.
நீதி மைழத்திடும் ஆசையைச் செற்றார்
செருக்கிலார், தொந்த பந்தமில் லாதார்,
சோதி நாதனைப் பெற்றுச் சுகிப்பார்..
சுவர்க்கம் அன்னவர் தூயநல் வாழ்வே.

### புருஷோத்தமன்

வினை முதல்வன் விளம்பிடில் யானே.
விளை பயிரை வளர்ப்பவன் யானே.
தினக ரனிற் றிகழொளி யானே.
தின்றதைச் செரி யக்கினி யானே.
அனைத்தி னுள்ளமுங் கோயில்கொண் டுள்ளேன்.
அற்பு தங்களென் அம்ஸமொன் றேயாம்.
எனைப் புருஷ ப்ரகிர்திக்கப் பாலாம்
ஈடிலாப் புரு ஷோத்தம னென்பாய் !

## தேவாசுர சம்பத்து

தீரம் உட்புறத் தூய்மை, அஹிம்ஸை,
    திண்மை, உண்மை யறிவி னுறுதி,
சீர்மை, நேர்மை, பொறுமை, அமைதி,
    தியாகம், தெய்வத்தன் மைக ளிவையாம்.
கூரம், பொய்யிறு மாப்பு, பகைமை,
    கொடுமை, வெங்கொலை நாத்திகத் திறு,
கார்நரகிற் புகுத்தும் பொறாமை,
    காமம் ஆசை அசுரக் குணமாம்.

## சிரத்தை, தவம்

சிரத்தை யெப்படி யப்படி மாந்தர் ;
    சிரத்தை முக்குணச் சீர்மை யுடைத்தாம்.
உரை, யுணவு, நடை நினை வுள்ளம்
    உண்மை யான வொழுங்கொ டமைக.
பிரம சர்யம் குருவழி பாடு,
    பேச்சி லுண்மைநற் கல்வி, யறிவு
பரம னன்பு, மவுனம் அடக்கம்
    பழுதி லாத்தவ மாகும் இவையே.

## ஓம் தத் ஸத்

சொல்வ தெல்லாம் சுருதியும் ஆகும்,
    தூய நல்வினை வேள்வி துலங்கும்.
தொல்லுல கெல்லாந் தன்மயந் தோன்றும்.
    சுத்த முத்தி துளிர்த்திடும் வாழ்வில்.
எல்லை யற்ற சமரஸங் காணும்
    இன்னு யிர்களுக் கொற்றுமை யெய்தும்.
அல்லல் போம் பிரமநிலை யாகும்,
    அறிக ஓம்தத்ஸத் ஓமெனும் உண்மை.

## மறுவறு மின்பம்

வினைப்பற் றற்று, விழை மனமற்று
    விரதம், வேள்வி, தியாகம் விரும்பி,
எனதி யானென் செருக்கை விலக்கி,
    இறைவனை யுணர்ந் தெங்கு மெதிலும்,
இனிய நஞ்சாம் புலச்சுக மின்றி,
    இன்ப மாத்ம சுகமென் றறிந்தே,
மன மயக்கினை மாசற வென்றே
    வாழ்வை யோக மெனச்செய் மனிதா !

### நன்னறம்

சமதமந் தவங் காத்திடும் பார்ப்பார்,
சமர்வென் றுளுஞ் சவுரிய வீரர்,
அமைவுறப் பணி செய்திடும் அன்பர்,
ஆ, பயிர், பொருள் ஆக்கும் வணிகர்
தமக் குரிய தருமத்தைப் பேணிச்
சமுக சேவைசெய் யாவரும் ஒன்றே.
சுமையுறும் அகங் காரமில் லாதே
தொண்டு செய்யென் சுதந்தர வீரா !

### பரமஹம்ஸன்

முத்தூய்மை யுறுதிபெறக் காம மாதி
முக்குணதொந் தங்களெலா முடிய வீட்டிப்
புத்தியினைத் தெளிவாக்கிப் புலனை வென்று,
போதவடி வாந்தன்னுட் பொருந்தி நிற்கும்
சித்தனே பரமஹம்ஸன் சிற்சு காத்மன்,
சித்தஜயன், பரமாத்ம நிலையிற் சேர்வான்.
சுத்தனவன் எதுசெயினுந் தோஷ மில்லான்,
சுற்றுலகின் விளையாட்டிற் பற்றில்லானே. 340

### சரண் புகுவாய்

இன்னுயிரின் இதயத்தில் இறைவன் உள்ளான்.
எல்லாந்தன் மாயையினில் இயங்கச் செய்வான்.
அன்னவனுக் காளாவாய் ; அருள்பா லிப்பான்.
அச்சமிலை, இடரில்லை, அழிவு மில்லை.....
என்மனத்தன், என்னன்பன், எனைப்பூ சிப்போன்,
என்மய னுவான் ; யானே அவனுள் வாழ்வேன்.
சொன்மனத்தைக் கடந்தசுகப் பொருளாம் என்னைத்
தூயசரண் புகுந்தின்பந் துலங்கு வாயே !

### விஜயன்

மோகம் விடுமுக் குணதொந்த மறு.
வேகப் புலனைந் தையும்வென் றுசதா
யோகத் திரு....வென்றனை யுள்ளமரும்
ஏகப் பொருளே எனதாண் டவனே...

விடுவாய் அறமில்லன ; வேண்டியெனை
நடுவாய், யடைவாய் ; நலியும் கலியே....
அடுவாய் பகையென் றனைஅச் சுதனே,
விடுவேன் கணையுன் செயல்வென் றிடவே......

பண்ணும் பணியும், பயனும், பரிசும்,
எண்ணும் நினைவும் உனதே யிறைவா....
விண்ணும் புவியும் விளையா டுகிறாய்.
கண்ணு கருணைக் கடலே சரணம் !

கிளி

வேதப் பொருளே, விண்ணின் பழுதே,
சோதிச் சுடரே, சுகநற் கனியே !
ஆதிப் பொருளே யருளும் அறிவே !
கீதக் குயிலே, கிளருள் ளிசையே !

# 20. பொய்வேடப் படலம்

காப்பு

மன்னுறு பாரத சக்தி மாகதை,
என்னுயிர்ப் பாகிய இனிய மாகவி,
பொன்னெனப் பொலிந்திடப் புலவர் தெய்வமே
உன்னருட் சுடரினை யுதவி யாளுவாய் !

கலியன்

தேவரும் ஒடுங்கிடத் திறல்கொள் என்னையும்,
பூவிலே ஓர்சிறு புல்லன் வெல்வதோ !
யாவரும் வணங்கிடும் என்னை மீறியே,
கோவென ஒருவனுங் கோல் பிடிப்பதோ !

ஞானமா முனிவரை நலிக்க விறுடன்
போனவர் மீண்டிலர். போர்ப்ப டைகளைக்
கானக மெங்குமே காவல் வைத்தவன்
கோனெனப் புரக்கிறான் ; கொடுமை யென்சொல்வேன் !

மெத்தவென் சூழ்வினை விழலுக் காவதோ ?
சித்தியிற் சுத்தனுஞ் சிறந்து வாழ்வதோ ?
இத்தகை யெதிரியின் இரத்த முண்ணவென்
கத்தியுந் துடித்தது கடிய வேட்கையால்.

முனிவரைக் கொன்றிந்த மூது லகிலே,
இனியறங் கடவுளென் றெவரும் பேசிடாத்
தனியர சாட்சியைத் தாங்கக் கோரினேன் ;
சனியனாய் வந்தனன் சத்தி யன்மகன்.

எடுத்ததும் தோற்றனன் ; எனது காரியங்
கெடுத்தவன் வாழ்கிறான் கேடி லாமலே !
விடுத்தவெங் கணைகளென் விழியிற் பாய்ந்தவே !
தொடுத்தபோர் எனக்கொரு தொல்லை யானதே !

உய்வகை காணு தாங்கே உறுதிகெட் டழிந்து மேலுஞ்
செய்வகை நினைத் தயர்ந்த கலியனைத் தேற்ற ஆங்கே,
பொய்வலை வீசி வஞ்சப் புன்னகை குலுங்கத் தண்டை
கைவளை கலகலக்கக் காமமோ கினியும் வந்தாள்.

கலியன்

நானி லத்தை நடுக்கி யடக்கியே,
கோனெனப் புகழ் கொள்ளுங் கருத்தெலாம்
வேனிற் கால வெறுங்கன வானதே !
ஏனினும் உயி ரேந்தி யிருப்பதோ ?

மோகி

கொற்ற வீரர்கள் கொடுஞ்சமர் தன்னிலே தோல்வி
யுற்ற போதுந்தம் உறுதியை நழுவவி டாமல்,
மற்றடம் புயங் கொட்டுவார் ; மாற்றவர் நடுங்க !
வெற்றி யன்னவர்க் கேயென விளம்புவ தாமே !

கலக்க மேனினிக் கலிநகர் காவலா, உடனே
அலக்க ணற்றிடும் அதிசயச் சூழ்ச்சியொன் றுரைப்பேன்...
வலக்கை போலுனக் குதவிடும் வகையது வென்ன,
துலக்கதை யெனக் கலிஞனுந் துள்ளினு னுங்கே !

பகைசெய் வாளினைப் பதுக்கிநம் அகம்பரப் படைகள்,
சிகையுங் காவியும் சாம்பலுஞ் செம்மையாய்ப் புனைந்தே
மிகைசெய் தாந்திரச் சாமிகள் வேடங்கொண் டாங்கே
நகைசெய் நாடகம் நடித்திடின் ஊரெலா நமக்கே !

நம்பு லான்மது போகத்தை வெளிப்பட நடத்தி,
சம்பு பைரவி சக்திஓம் சரணனெனச் சாற்றி,
வம்பி லாதொரு மாணவக் கூட்டமும் வளைத்தே,
பின்பு நாட்டினைப் பிடித்திடப் பெரும்படை விடுவோம்.

கலிஞன்

நல்ல தந்திர மொன்று நவின்றனை
செல்வ மேயென் செருக்கினைக் காத்தனை.
கல்வி கற்ற கசட்டுக் குருடரை
வெல்லு மென்றன் விரதம் பலித்ததே.

கொஞ்சு மின்பக் குயிலிசைப் பாவையே,
நஞ்சும் வேலு நயனங்க ளாகிய
வஞ்சியே யென் மயக்கந் தவிர்த்தனை ;
நெஞ்சை யள்ளுமென் ஆசை நெருப்புநீ

வெஞ்சி னப்படை, வேகு நெருப்பெதிர்
பஞ்செ னப்படச் செய்த பகைவனை
வஞ்சந் தீர்க்கும் வகையொன் றளித்தனை
என்சுகக் கிளி யேஎன தாவியே !

கொள்ளை போன குடியென் றெனதுளம்,
சள்ளை யுற்றது ; சங்கடந் தீர்த்தனை,
அள்ளி யுன்னை அணைவதென் ஆனந்தம் !
கள்ளினுஞ் சுவை காட்டிடுங் காமமே !

மது மயக்கமும், வாய்ந்த மகிழ்வுறும்
புது மயக்கமும், போக மயக்கமாய்,
எது வரையிருந் தாரென் றறிகிலோம் ;
கதுமெனப் படை முன்கலி நின்றனன்...

மோகி சொன்ன முழுநரிச் சூழ்ச்சியை
சாக சத்துடன் சாற்றிடக் கேட்டதும்,
"ஆககா சரி யான" தென் றோர் படை
வேக மாகப்பொய் வேடம் புனைந்ததால் !

காலிக் கூட்டமுங் காவி யுடுத்திய
போலிக் கூட்டமும், புண்ணியம் பேசிடுங்
கேலிக் கூட்டமுங் கேடுறு மோகியின்
நீலிக் கூட்டமும் சென்றிட நின்றதால்.

கால தாமத மின்றிக் கயவரைக்
கோல முற்ற குறிப்பினுக் கேற்பமார்ச்
சாலஞ் செய்யத் தயாரித் தனுப்பினான்
ஞாலம் வேண்டிய நாத்திகப் பித்தனே.

தடித்த தந்திரத் தாமதச் சாமிகள்,
படித்த வித்தையின் பண்பும் பயன்களும்,
நடித்த போதினி நாமும் அறிவதே
அடுத்த நாடகத் திற்கழ காகுமே !

தூயர் போன்றிந்தத் தொல்லைசெய் தந்திரப்
பேயர் கூட்டம் பிரிந்தபின் வெங்கலி
தீய ராகித் திருவில செய்திடும்
நேய ருக்கு நிகழ்வன செப்பினான்.

கலியன்

அகம் பரனுக் கமைந்தநற் சீடர்போல்,
இகம் பரமென் றெளிதுரை பேசியே,
சக மகிழ்ந்திடுஞ் சாதுக்க ளாகியான்
அக மகிழ்ந்திடும் அல்ல லிழைமினோ !

தடையி லாதுநந் தந்திரச் சாமிகள்
அடைந்து சித்தியை ஆக்கிர மித்ததும்,
புடை யொளிந்து புனையுருக் கொண்டுளே
படை நடத்திப் பகைவரை வெட்டுவோம்.

முத்தி வேண்டிக்கண் மூடி யுறங்கிடும்
பித்தர் ஊரைப் பிடித்திட நாமின்று
சத்த மின்றிமுன் சாம்பற் புலியினை
ஒத்த வேலை உளவறிந் தாற்றுவோம். 100

இவ்வகைக் கலிஞனு மியம்பி யின்னமும்
வெவ்வகைச் சூழ்ச்சிகள் விதைக்க வூணரோ (டு)
ஒவ்விய தனியறை யுற்றபின் பிறர்
அவ்வறைச் செய்தியை அறிதற் பாலதோ ! 104

# 21. கார்த்திகைப் படலம்

## சத்தியன் சாது சங்கம்

சாந்தமா முனிவர் கூட்டந் தவஞ்செயப் போன பின்பு,
தேர்ந்தமா முனிவ ருக்குத் திருமட மெழுப்பி யாங்கே,
தீந்தமிழ் ஆரியஞ் சேர் திருவருள் வேத மோதி,
வேந்தனுந் தனது நாட்டில் விவேகத்தை வளரச் செய்தான் !

சுத்தனுக் கரசைத் தந்து, சுதந்தரம் பெற்ற தந்தை
சத்தியன், முதிய நாளைச் சாதுக்க ளுடனே வாழ்ந்து,
முத்திநன் னெறி பயின்று, முனிவரர் தொண்டு செய்து,
சித்தத்தைச் சிவன்பால் வைத்துச் சென்மத்தின் பயனைப்
பெற்றுன்.

வேதமும் உபநி ஷத்தும், வியாசசூத் திரமுங் கண்ணன்
கீதையும், குறளும் அன்பிற் கிளர்திரு முறையின் வாக்கும்,
ஆதிசங் கரரின் வாக்கும், அருட்பிர காசர் வாக்கும்,
ஓதியும் ஓது வித்தும் ஒழுகினுர் உண்மை தேர்ந்தார் !

தேவர்க்கும் பெரியா ருக்குந் திருவிழா நடத்து வார்கள்.
பூவிற்கு நன்மை செய்த புண்ணியர் புகழ்கொண் டாடி
நாவிற்குஞ் செவிக்கும் இன்பம் நயந்திடு விருந்த ளிப்பார்..
யாவர்க்கும் அன்பு பேணும் இதயவி சாலங் கொண்டார்.

பாடலாற் பத்தி ஞானப் பனுவலாற் கதையாற் பேச்சால்,
வீடெலாம், வீதி யெல்லாம், வித்தியா சாலை யெல்லாம்,
நாடெலாம் தூய வுண்மை நன்னெறி பரவச் செய்தார்—
காடெலாம் பர்ண சாலை கட்டிநற் றவஞ்செய் தாரே ! 20

மன்னவன் படைக ளுக்கு மாபெரும் வீரர் செய்கை
இன்னிசைக் கருவி மீட்டி இயம்புவார் ; ஊக்க மீவார்,
புன்னெறி யரக்க ரிங்கே பூண்டுடன் அழியத் தூய
முன்னவர் செய்த வீர முயற்சியை விளக்கு வாரே !

பாரத முனிவன் வேண்டப் பரம்பொருட் கனலே யாகிச்
சூரனைக் காய்ந்த வெற்றிச் சுடர்மணி வேலனுக்கு,
வீர நும் யோக ஞான விரத நும் கார்த்தி கைநாள்,
சீரிய முறையிற் சோதி திருவிழா நடத்தி னாரே.

முருகன் வழிபாடு

முருகனென் றுரைத்தநும் ஊரு ளோரெலாம்,
உருகிய காதலால் உள்ளம் பொங்கியே,
பெருகிய நல்லணி பிறங்கச் செய்தனர்,
திருநகர் அழகொளி திகழ வெங்குமே !

சிவக்கன லாகிய செந்தில் ஆண்டவன்,
பவத்துய ரொழித்திடும் பரம பாவனன்,
அவத்தினைச் செய்திடும் அரக்கர் கூட்டத்தைத்
தவக்கன லாலின்று தகர்க்க வேண்டினார்...

வீதியிற் சிறுவரும் வேலன் வேலினாற்
காதகப் பகைவனைக் கடிதல் ஆடினர்.
மாதிர மதிர்ந்திட மல்லர் சேனைகள்,
போதரும் போரினைப் பொருது வென்றவே..

ஊறுசெய் கலியனின் ஊற்றம் யாவையும்,
கூறுபட் டொழிந்திடக் கொடிய போரிலே,
நூறுவோம் என்றனர் நுதிகொள் வேலுடன்
ஏறென நடந்தனர் எமனு மஞ்சவே !

இன்னிய நாட்கட னியற்றித் தூயராய்,
முன்னரு முனிவரும் முதுபு லவரும்,
மன்னரும் அமைச்சரும் மல்லின் வீரரும்,
பொன்னணி மந்திரம் புகுந்து நின்றனர்.

பகலினிற் பட்டினி விரதங் கொண்டவர்,
இகல்கெட வுலகெலாம் இன்ப மோங்கவே,
அகங்குவிந் திறைஞ்சினர் ; அரக்கர் காலனுங்
குகனையுள் ளன்புடன் கூட்ட மாகவே !

மாமறை முழங்கினர், மந்தி ரஞ்சொல்லிப்
பூமழை சொரிந்தனர், புண்ணி யந்தரும்
நாமங்கள் பாடினர் ; நடன மாடினர் ;
ஓமங்கள் வளர்த்தனர் "ஓம்குகா" வென்றே !

வாய்மனங் கடந்தவன், வடிவொன் றற்றவன்,
ஓய்வறத் தொழில் செய்தும் ஒட்டி லாதவன்,
ஆய்வுறு வேதமும் அறிகிலாச் சிவன்
சேயினை வணங்கினர் வேள்வித் தீயிலே !

காலத்தின் போக்கையுங் கலியின் போக்கையும்,
ஞாலத்தின் போக்கையு நவின்ற பின், வடி
வேலவன் அருட்கனல் வெற்றி நல்கெனுஅச்
சீலர்கள் செப்பிய செபத்தைச் செப்புவாம் :

முருக ஜபம்

‡அருணமுகத் திருவழகா, கருணைவிழிக் குழகா !
தருணமழை போலுதவும் தயைமிகுந்த குமரா !
இருளரக்கர் குலமழியப் பொருதுசுடர் வேலா !
குருபரஓம் சிவக்கனலே ! குகனே சண் முகனே !

அன்புமண மலர்மாலை ஆர்வமுடன் சூட்டி,
என்புருக மனங்குழைந்தே எம்முகம்பார் என்றோம் !
துன்ப மிகும் பகைக்குலத்தைத் தூருடனே நூறி,
இன்பமுறும் வெற்றியருள், எம்முயிருக் குயிரே !

கண்ணற்ற காமவெறிக் காளான கலியர்
புண்ணுற்ற பொய்வினையே போற்றுகின்ற புல்லர்,
மண்ணுற்ற பாவமென மல்குமவர் ஒழியக்
கண்ணுற்றுன் பண்பாடிக் களிநடனம் புரிவோம் !

போரொடுங்கி இருமனத்தின் புகையொடுங்கித் தீதின்
வேரொடுங்கிப் பேராசை வித்தொடுங்கி, மறத்தின்
கூரொடுங்கி, அறவாழ்வே குலவியுன தருளிற்
பாரடங்கி வாழ்ந்திடவே பார்க்குமகிழ் வருளாய்.

வஞ்சனைசெய் மாயமற, வாய்மையொளி காட்டாய்,
அஞ்சவருந் தீவினையை அக்கணமே மாற்றாய்.
நெஞ்சினிலே நீண்டுணருஞ் சிவஞான நெருப்பே,
தஞ்சமுனை யன்றியிலை, சண்முகனே சரணம்.

பற்றலரின் படுமாயப் பாழ்வினைகள் சிந்திப்
பெற்றதொரு தாயினரும் பிள்ளைகளைப் போலே
ஒற்றுமையாய், உலகமெல்லாம் ஒருகுலமாய் வாழும்
பெற்றியினை யீந்தருளாய், பிரியமுள்ள முருகா !

---

‡*சந்தம்: தனனதன தனனதன தனதனன தனனு; இராகம் காம்போதி; ரூபக தாளம்.*

வாளுக்குக் கனலீவாய் ; வங்கணரை அழிக்கத்
தோளுக்குப் பலமீவாய் துட்டர்களை வீழ்த்த,
நாளுக்கு நாளுயர்ந்தே நன்மைவளர்ந் திடவே,
ஆளெம்மை அரசேயெம் அறிவான முருகா !

கலகமிடுஞ் சினவெறியர், கட்காம வெறியர்,
நலமழிக்குங் கொலைவெறியர், நாத்திகத் தீ நாவர்
புலனடங்காப் பொய்வெறியர் பொல்லாங்கைத் தடுக்கப்
பலமருள்வாய் சூரபத்மன் பலமழித்த குமரா !

எனதுனதென் றிறுமாக்கும் ஈனவெறி யின்றி,
மனிதனுக்கு மனிதனுறு மரியாதை காட்டி,
மனமொன்றி, இனமொன்றி, மயக்கமறப் பொதுவில்,
தினமொன்றி வாழவருள் செவ்வியவேல் முருகா !

பாருண்மை வழியறிந்தே பயபந்த மின்றி,
போரின்றிப் பொய்யின்றிப் புன்பொ றுமை யின்றி,
ஓருண்மை, ஓருள்ளம், ஓருயர்ந்த கடவுள்,
ஓரரசுங் கொண்டினிதே ஓங்கவருள் புரிவாய்..

பித்துலகப் பிரிவினைசெய் பெருந்துயர்கள் திரத்
தொத்தடிமைத் துயர்திரச் சுதந்தரமே பெருகப்
புத்துயிரும் புதுயுகமும் புதுவாழ்வும் பொலியச்
சுத்தமக ராஜனுக்குத் துணையருளாய் முருகா !

விண்ணகத்தே நிலவுகின்ற வெண்சுடரைப் போலே
மண்ணகத்தே இருள்போக்க வந்தசுடர் மணியாம்,
எண்ணகத்தே இனிக்கின்ற எங்கள் மகாராசன்,
புண்ணியத்தால் வானரசு பூமிசையே பொலிக !

சாந்த சிவ மோனவொளி தந்ததவக் கனலே,
காந்தமெனத் தொண்டர்மனங் கவருகின்ற குருவே,
மாந்தர் பயம் ஒழித்திடவே வந்தமயில் வேலா
தீந்தமிழின் சுவையெனவே தித்திப்பதுன்றன் பெயரே !

மங்குதலில் வாழ்வென்னும் மணிவிளக்கைத் தூண்டாய் ;
சிங்கமென விறுபடை சிவசக்தி தருவாய் !
தங்கமெனப் பொலிகின்ற சத்தியவேல் முருகா !
பொங்குகநின் னருளாலே பூரணமிவ் வுலகே !

காலையிலே எழுந்திலகுங் கதிரழகுன் அழகே,
மாலையிலே பூத்தமுல்லை மலர்நகையுன் னகையே !
வேலையிலே நடமாடும் வேகமுன திசையே !
சோலையிலே மணத்தென்றல் சொல்லுவதுன் சொல்லே !

மலைமேலே மலைபோலே மாண்புடனே வசிப்பாய்,
அலைவீசும் அருவியிலே அருள்வீசி வருவாய் !
கலைவீசும் புலவருளங் கவியூற்றாய் வளர்வாய் !
வலைவீசிக் காதலரை வசஞ்செயிளங் குமரா !

வருவாயெங் கலிதீர்க்க வள்ளிமண வாளா !
தருவாயுன் ஆசியினைத் தருமவினை வெல்ல !
திருவாரும் தேவர்குலம் திகழவுல கெல்லாம்
குருவாக வருவாய்ஓம் குகனேஷண் முகனே !

ஓவடி வாகிய ஒளியிற் றோன்றிய
தீவடி வாகிய சிவத்தின் செல்வனை
நாவமு தூறிட நவின்று நன்மலர்
தூவினர் தூயவர் சுத்த ஓமெனாஅ !

அத்ததி யனைவரும் அமைதி யெய்தித்தம்
சித்தத்தைக் குவித்துளே தியானஞ் செய்தனர்.
இத்தகைக் கூட்டத்தின் இதயம் பொங்கவே
சுத்தனுஞ் சிலமொழி சொல்ல லுற்றனன் :—

சுத்தன்

கந்தனுக் கேற்ற கார்த்திகை நாளில்,
குகைக்கனல் முன்னே கூடிய பெரியீர் !
எனது செங்கோல் இனிது நடக்க
மனதுவைத் துதவும் வாய்மையன் புடையீர்,
இன்று காறும் இந்தநன் னாட்டில்,
அறம்பொரு ளின்பமும் அருளும் அமைதியும்
இறைவன் கருணையால் இலகிடக் கண்டோம் !
ஆனாற் கலியின் அதர்மப் படைகள்,
ஆயிரஞ் சூழ்ச்சிகள் பேயெனச் செய்து,
நாட்டைக் கலக்க நாளையே வரலாம்.
ஒற்றர் சொல்லும் உளவைக் கண்டால்,
ஓசையில் லாமல், ஒன்னலர் வந்து,
மோசஞ் செய்ய முனைவா ருண்மையே.
சாந்தமே நமது சத்தியக் கொள்கை ;
என்னினும் பல்லோர் இருக்கும் வீட்டில்,
பாம்பும் புலியும் பசக்கெனப் புகுந்தால்,
அவற்றை அடலே அமைதிக் கெளிதாம்.
மனிதர் கூட்டம் இனிதுவா ழாமல்,
போரும் பொறாமையும் போட்டியுங் கொண்டு
சீரழிக் குங்கலிச் சேனையை இன்று

வேருடன் அழிக்கவே வீறுகொண் டெழுந்தோம்..
தோள்வலி யுண்டு ; வாள்வலி யுண்டு ;
வேள்வலி யுண்டு வெற்றி நமக்கே...
அச்ச மில்லை, அருளும், ஆண்மையும்
நச்சரா போன்ற நாசரை நலிக்கும்.
ஆணவங் கொள்ளும் அரக்கரை யொடுக்கும்,
கதிர்வேல் சக்தி காப்பெமக் காமே..
என்னுயிர்க் குயிராம் இன்னுயிர் மக்காள்,
அறப்போர் முனையில் அருங்கள னுற்றத்
தயாரா யிருங்கள் ! சத்துருப் படைகள்
பூனைபோற் புகுந்து புலிபோற் பாயும்.
வேடம் போட்டு விஷமஞ் செய்யும்,
கண்விழித் திருங்கள், கத்தியுங் கையுமாய்த்
துணிவுகொண் டிருங்கள் ! பணிவுகொண் டொன்றித்
தலைவர் ஆணையைத் தாங்கி நடமினே !
சுத்த சக்திச் சுடர்மணி வேலன்,
வீரமும் தீரமும் வெற்றியுந் தருவான்..
வெல்லுக தருமம் விளங்குக மெய்யே.

ஜனங்கள்

வெல்லுக வேந்தன் விளங்குக சக்தி
என்று பெரியார் நின்றுவாழ்த் தெடுக்க
வேந்தனும் அமர்ந்தான் ; விரதம் முடிந்தது.
பசித்தா ரெல்லாம் பால்பழம் புசித்தார்.
உலகம் அனைத்தும் நிலவிய தன்பே.

மாதவ முனிவருக்கு மகேசுர பூசை யாங்கே
தீதற நடக்கும் போது, "சிவசிவ சிவ ஓம் சக்தி
ஆதிபை ரவிஓம் காளி ஹம்படேஸ் வாஹா" வென்றே
மாதிரம் அதிரக் கூவி வந்ததோர் சாமிக் கூட்டம்.

நீற்றினைப் பூசிக் காவி நீள்சடை தாடிமீசை
தோற்றிய புதியர் தம்மைத் துறவிக ளென்றே தூயர்,
ஏற்றனர் ; உணவளித்தார் இருப்பிடந் தந்தார் ; அன்னோர்
கூற்றெனக் கிளர்ந்த வஞ்சக்கொடுமையையறிகுவோமால் ! 191

# 22. போலித் துறவிகள் படலம்

துள்ளிடும் புலனடக்கித் துறுதுறுத் திடுமனத்தை
மெள்ளவுள் ளடக்கி நானுர் எனச்சதா வினவி னுங்கே,
உள்ளத்தி லுள்ள சுத்த வுண்மைநான் ஆன்மா என்றே
தெள்ளுறத் தெளிந்த பேரே திருவரு ளறிஞ ராவார்...

அத்தகை யறிஞர் சற்றும் ஆணவ மின்றிப் போலிப்
பித்தரின் வேட மின்றிப் பிறரையுந் தாமென் றெண்ணி,
இத்தலத் துயிர்க ளுக்கும் இயன்றநன் னலங்கள் செய்து,
சித்தத்தைச் சிவன்பால் வைத்துச் சிக்கற வாழு வாரே !

அன்பினுல் அருளைத் தேடி, அருளினுல் அறிவ றிந்தே,
இன்புறப் பொதுநலஞ்செய் திருவினைக் கட்டு மின்றித்
துன்புறு மாசை யின்றித் துகளுறு செருக்கு மின்றிப்
பண்புற வாழுவாரே பழுத்தநற் றுறவோ ராவார்..

அவ்வகைத் துறவோ ருக்கும், ஆளையே மாற்ற வந்தே
ஒவ்வறு நடை யினுலே ஊரினைக் கெடுக்கும் வஞ்சத்
தெவ்வகைத் துறவி னர்க்கும் வேற்றுமை தெரியவேண்டி
செவ்விய ஒற்றர் பின்னேசித்தினி பவனஞ் சேர்வாம்...

சித்தினி பவனம்

சுற்றிலுங் காவல் வைத்த சோலையி னடுவ மைந்தே
முற்றிலுங் கருங்கல் லாலே முடிந்ததப் பவனம் ; ஆங்கே
பற்றுத லுடையார் சென்று வருவதைப் பார்ப்போ மேனும்,
இற்றெனச் செயலைக் காற்றும் இயம்பிட முடியா தம்மா ?

மாடமா ளிகையின் மீது மணிவிளக் கணிகள் காண்போம்,
பாடலுங் கேட்கு மேனும் பகலிரவாக ஆங்கே
கூடியனுர் செய்யும் விந்தை இதுவெனக் குறிப்பார் யாரே !
மூடிமந் திரங்கள் ஒற்றர் முயற்சிக்கும் ஒளிப்ப தாமே !

எப்படிப் புகுந்தார் ? இங்கே எப்படி நிலைத்தார் ? எந்தச்
செப்பிடு வித்தை யாலே செனங்களின் மனங்க வர்ந்தார் ?
எப்படிப் பகலில் வாழ்ந்தார் ? எப்படி இரவில் வாழ்ந்தார் ?
இப்படிச் செய்வோர் யாரென் றியம்பிடக் கேளீ ரையா !

வெம்மனக் கொலைஞர் கொண்ட வெருவுறு முகத்தைப்போலே,
கும்மிருட் டுலகைக் கௌவுங் குளிரினைப் போர்த்த ஓர்நாள்,
செம்மனத் துறவி போலச் சீடர்கள் சூழ நால்வர்,
"பொம்மகா தேவ" வென்றே அகம்பரன் புகுந்தா னம்மா !

கோட்டையின் காவலர்க்குக் குறிசொலித் திருநீ றீந்து,
பாட்டுகள் பாடி, மிக்கப் பரவசங் காட்டிக் காலை
நாட்டினுன் உள்ளே இந்த நாடகங் கண்ட போதே
நாட்டினுக் குறுதி தெண்ணி நடுங்கிற்றந் நகர மம்மா !

வெண்ணிறப் பொடியைப் பூசி, மெய்யுள பூதமைந்தும்
உண்ணகக் காஷாயத்தை உடுத்தித்தா வடங்கள் சூடி,
கண்ணையண் ணுந்து நிட்டை காட்டிடக் கால்மடக்கி,
மண்ணையே மனதில் வைத்து வஞ்சனைசெய்தான்அன்னுேன்

கண்டவர் திகைத்து நிற்கக் கரடிபோல் மூச்சி ழுத்து
மண்டிநீர்க் குளத்திற் கொக்கு மாதிரி மௌனங் காப்பான்...
பெண்டிரைக் கண்டுவிட்டால், பிரியமாய்ப் புன்ன கைப்பான்,
வெண்டிரு வாய்மலர்ந்து வேதமும் உளறித் தீர்ப்பான் !

கடபட வென்று ஞானக் கச்சந்தி பவிழ்த்துக் கொட்டி,
மடையரைப் பயமு றுத்தி, மாணவ ராகக் கொள்வோன்,
படிபுல வர்கள் வந்தாற் பசக்கென மௌனங் காத்துச்
"சடவிவ காரம் வேண்டேன் சத்துநான்" என்றி ருப்பான்.

சைவர்கள் வந்துவிட்டாற் சைவமே பெரிய தென்பான்,
வைணவர் வந்தால், ஶ்ரீநி வாசனே சரண மென்பான்,
கைவல்யச் சாமி வந்தால், கண்டது மித்தை யென்பான்,
பையவிழ் செல்வர் வந்தால் பணத்துற வியம்பு வானே !

எத்தராஞ் சீடர் தாமும் இராகமா லிகையி ழுத்துச்
சித்தரின் கடைக்கண் பேசச் சிக்கெனத் தாளங் கொட்டி,
"பக்தர்காள் கேளீர் கேளீர் ! பாக்கிய வசத்தால் ,எங்கள்
உத்தமக் குருவின் மேன்மை உரைத்திடப் பெற்றோம்"என்பார்.

குரு மகிமை

நந்திதேவர் மரபினிலே வந்த திரு மூலர்,
நாதர்கள் யாவருக்குந் தாதாவாம் இவரே !
தொந்தி முனி மச்சமுனி, சோதிமுனி முதலாய்ச்
சொக்குமுனி வரையிலிவர் சொல்லிவைத்த சீடர்.

கதிர்காமக் காட்டினிலே கடுந்தவங்கள் புரிந்தே
கந்தனருள் பெற்றுவந்தார் இந்தவுல குய்ய,
முதிர்சருகை உண்டுபர முத்திதருங் கயிலை
முடிமிசையே தவம்புரிந்து முதல்வனருள் பெற்றார்.

தாருகா வனத்தினிலே சாதனைகள் செய்தே,
தாந்திரிகச் சித்தியெல்லாம் வாய்ந்திடவே பெற்றார்.
பாருலகில் விளையாடிப் பத்தரைக்காத் திடவே,
பரமனரு ளேந்திவந்தார் பழுத்ததவ ராசர்

பிள்ளையில்லாப் பெண்களுக்குப் பிள்ளைவர மீவார்,
பேய்தீர்ப்பார், நோய் தீர்ப்பார், பெருங்கவலை தீர்ப்பார்,
அள்ளியள்ளிப் பொன்னளிப்பார் அரியரச வாதர்,
அடிபணிந்த தொண்டருக்கு முடியரசுந் தருவார்.

குருடர்பலர் செவிடர்பலர் குணமானார் இவரால்,
கொடுங்கூற்றும் நடுங்குமிவர் கோபவிழி கண்டால்.
கருடனைக்காண் பாம்பெனவே கடும்பகைவர் நலிவார்.
காலில்விழும் அடிமை களே கைலாசம் பெறுவார்.

தேவரும் ஒப்பிலர் செகத்தி லுள்ளவர்
ஏவரும் ஒப்பிலர், இவர்சி றப்பினை,
நாவினி லெப்படி நவிலு வேனையா,
சாவினை வென்றவர் என்று சாற்றினர்....

மாணவர் கதைகளை வளர்க்கக் கேட்டதும்,
காணிக்கை கொடுநிதங் கணக்கி லாதவர்,
காணிய வந்தவர் ; காலில் வீழ்ந்துதம்,
வேணவா தீர்த்திட விளம்பி நின்றனர்.

பெண்ணினை வேண்டுவர் ; பெரிய கும்பலாய்ப்
பொன்னினை வேண்டுவர், புருடர் வேண்டுவார்,
மன்னரின் அன்புடன் மதிப்பும் பட்டமும்,
ஒன்னலர் வீழ்ச்சியும் உதவ வேண்டுவார்..

எடுத்ததை முடித்திடும் ஏற்றம் வேண்டுவார்,
அடுத்தவர் வாழ்வினுக் கழிவை வேண்டுவார்,
கொடுத்தவர் மறந்திடுங் குணத்தை வேண்டுவார்,
தடுத்தவர் தடைகளைத் தகர்க்க வேண்டுவார்.

நோயினைத் தீர்த்திட நுடங்கல் போக்கிட,
ஆயிரம் பேரிவர் அடியைப் பற்றுவார் ;
பேயினைத் தீர்த்திடப் பெண்கள் கூடுவார்...
வாய் வரம் வழங்குவார் மாயச் சித்தரே !

சுற்றிலு மிவர்புகழ் சொல்லக் கேட்டவர்,
பெற்றிட வரங்களைப் பின்னுங் கூடினர் ;
மற்றவ ருடனினு மற்ற மாணவர்,
உற்றனர் பெண்டிரும் உடனுற் றுர்கொலே....

வஞ்சகக் குருவுடன் வஞ்ச மாணவர்
நெஞ்சினிற் கொண்டதை நிறைவு றுத்தவே,
அஞ்சிடும் பாமரர் அடிமை யாகவே,
எஞ்சிய சூழ்ச்சிகள் இயற்றி வென்றனர் !

காரியக் குருடராய்க் கண்பெற்றே மென்பார்,
காரியச் செவிடராய்க் காதுற் றேமென்பார்,
காரிய ஊமராய்க் களித்துப் பேசுவார்,
காரியக் குருமணி கருணை காட்டவே !

பேயெனப் பிதற்றியோர் பெண்ணும் ஆடுவாள்,
சீயெனக் குருமணி சிறிது நீறிடப்
போயொழி வேனெனப் புகன்று பேய்செலும்..
ஆயவோ அதிசயம் என்பர் அண்டையோர் !

குப்பியிற் செப்புடன் குப்பை மேனியும்,
உப்பொடு துத்தமும் உருக்கி என்னவோ
செப்பிடு சாலங்கள் செய்து செம்பொனை
ஒப்ப உலோகத்தை ஒளிரக் காட்டுவார்.

பொன்வெறி கொண்டவர் பொருளைக் கொட்டியே
மின்னிடுந் தங்கத்தை மிரளக் காணுவார்...
அன்னவர் ஆசைகள் அவல மானபின்
உன்வினை யிதுவென உரைப்பர் சீடரே !

பலபல தந்திரம் பயிலும் சித்தரோ
மலடிக்கும் கிழவிக்கும் மகவை நல்குவார் !
பலபல மந்திரம் பலிக்கும் செய்தியும்,
கலியுருக் குள்ளெனக் கண்டு கொள்ளுவாம்....

இந்த வாறுளே எண்ணறும் இகலவர் வரவே,
அந்தமாம் ஒரு தோட்டத்தில் மாளிகை யமைத்துத்
தந்திரம் பெறு தாந்திரச் சாதனம் புரிய
மந்தை கூடினர் மதுவுடன் மாதரும் வரவே !

மூல குண்டலிக் கனலினை மூட்டுவோம் எனவே,
போலிச் சாமிகள் புணர்ந்தனர் நீலிக ளுடனே !
காலபைரவன் கருணையைக் கள்ளினால் அடைந்தார்.
வாலைஓம் என வாலிபப் பெண்களை வலித்தார்.

இளங்கைம் பெண்களும், *இருமனப் பெண்களும், இந்தக்
களங்க முற்றிடுங் கள்வெறிக் கூத்தரை நம்பி,
உளங்க விழ்ந்தனர் உயிரையு மிழந்தனர் சிலபேர்,
வளர் வயிற்றுடன் கலிநகர் வந்தனர் சிலபேர் !

நல்ல நாட்களிற் கூடிடு நல்லவ ருடனிப்
புல்லர் கூட்டமும் போலிவே தாந்தங்கள் பேசி,
மெல்லத் தம்வலை விரித்திடும் விதத்தினைக் கண்டோம்,
கல்வி யாளர்கள் கூடிய கார்த்திகை நாளே !

கள்ளுங் காமமுங் களவுடன் கைத்திமிர் காட்ட
மெள்ளத் தம்முளே விறல்பெறும் படைவலி சேர்த்தே,
உள்ளி ருந்துமப் புறத்தினி லிருந்துமே ஒன்றாய்
வள்ளன் மாநகர்க் கோட்டையை வளைத்திடச் சூழ்ந்தார்..

இரவு தோறுந்தம் இரகசி யப்படை கூட்டி
மரபு பற்றிய மானிட நீதியைப் பழிப்பார் ;
பரவு நாரியர் முயக்கிலே பரவச ரானார்
அரசு வீழவு முயற்சிகள் புரிபவ ரானார்.

---

* விலைமாதர்

கலியி னாட்சியைக் களிப்புறு மாட்சியென் றிசைப்பார்,
நலிக மாமறை நவின்றிடுந் தேவென நவில்வார்,
பொலிக நாத்திகப் புதுமைக ளெனப்புக ழுரைப்பார்,—
புலிக ளாகவே மாறினர் பூனைபோற் புகுந்தார்.

புல்லுக் கட்டிலும் விறகிலும் ஆயுதம் புதைத்து,
மல்லர் மல்லன்மா நகரினில் வஞ்சமாய்ப் புகுந்தே,
கொல்லு வெங்கலிப் படையின்கை கொடுத்துருக் கரந்தார் ;
அல்லின் போர்வையில் அமர்க்களம் பண்ணவுந் துணிந்தார்.

ஊன் மதுக்கடை உடல்விலை யாடிடும் விடுதி,
ஞான நூல்களைத் தூற்றிடு நாத்திகச் செருக்கு,
கோனி னாட்சியைக் குமைத்திடக் கோதுறுஞ் சூழ்ச்சி
ஆன தீமைகள் யாவையும் அரசனும் அறிந்தான்...

சிந்தை தூயரை ஒற்றராய்ச் செலவிடுத் திறைவன்,
வந்த தாந்திரர் வஞ்சகப் பகைவரென் றறிந்தான்,
முந்த மைச்சவை கூட்டினன் ; முதலமைச் சோதத்
தந்தி ரர்க்கொரு தந்திரப் பொறியினைச் சமைத்தான் !

கலியன் சூழ்ச்சியைக் கடிதினிற் கண்டநல் லமைச்சன்,
வலிய சேனையால் சித்தினி பவனத்தை வளைத்தான் ;
கிலிபி டித்தவர் அரசனைக் கீழ்ப்படிந் துள்ளே
புலியைப் போன்றவர் புரிந்திடும் புன்மையைப் புகன்றார்..

கள்ள வஞ்சகக் கயவரைக் கையுடன் பிடிக்க
நள்ளி ராவினில் விசயனார் நடத்திடும் வீரர்
மெள்ள மீமதி லேறியே விரைந்துளே நிறைந்து,
கொள்ளைக் கூட்டத்தைக் கொடுஞ்சிறைப் பிடித்ததென் வியப்பே!

மிகுந்த கள்ளினைப் பருகியே மிடுக்குற நடந்தே
உகந்த நீலியை யணைந்துடல் பிழிந்திடக் கூடும்,
அகம்ப ரன்றனை அப்படி யேவிலங் கிட்டு,
மிகுந்த பேர்களை வேறொரு வெஞ்சிறை யடைத்தார்.

மூலை மூலையிற் பதுங்கிய முரடரை வளைத்தே,
மேலுந் தண்டனை விதித்தனன் ; விசாரணை வைத்தே ;
போலிச் சாமியின் புரட்டெலாம் அம்பலம் புரிந்தார் ;
ாலை மன்றத்திற் சென்றவர் கதைகளைக் காண்பாம்.

# 23. புரட்சிப் படலம்

ஆதி நல்லறம் அன்புறத் தாங்கிடும்,
நீதி வேந்து நியமித்த மந்திரி,
தீதி ழைத்த திருடரைத் தண்டிக்கக்
கோதி லாத குரவரைக் கூட்டினான்.

சத்தி யத்தைத் தனதுயி ராக்கிய
சித்தி மானத் திருவிலி வஞ்சரின்,
மித்தை யெல்லாம் விளம்பென, ஒற்றர்கோன்
வித்த கனும் விளங்குறப் பேசினன்.

விந்தகன்

காவி யணிந்த கலிப்படை யிங்கே,
அகம்பர னுடன்செய் அழிசெயல் அறிந்தோம்.
நால்வ ருடனே நகருட் புகுந்த
போலித் துறவி பொய்ப்புகழ் பெற்றான்.
சீட ரென்றும் சேவக ரென்றும்,
"நோய்கெட வந்தோம், பேய்கெட வந்தோம்,
பெரியார் அருளைப் பெறவே" என்றும்
புறத்தி லொளிந்த பொய்யரும் புகுந்தார்.
நருடனென் றொருவன் கோல்பிடித் துறுவான்.
கபடச் சாமி கண்ணைத் தடவுவான்.
உடனே சீடன் "உற்றது பார்வை,
ஆஹா சித்தின் அதிசயம் என்னே"
என்று குதிப்பான் ; எவரும் வியப்பார்.
செவிடென மற்றொரு சீடன் வருவான் ;
காதுக் குள்ளே ஏதோ சொன்னதும்,
பெற்றேன் கேள்வி வெற்றியென் றுடுவான்.
இந்தப் படியே எண்ணிலா மக்களை
வஞ்சித் தானப் பஞ்சமா பாதகன்.
இரச வாதி யென்னும் பகட்டால்,
பலர் பொருட் குவையைப் பறித்தான் பாவி.
பிள்ளை வரமெனப் பெண்டிரைக் கெடுத்தான்.
கலியன் அனுப்பிய காரிகை யாரும்,
சாமியைக் காணத் தந்திர மாகப்
பேய்நோ யென்று பிதற்றிப் புகுந்தார்.
பெண்கள் கிடைத்ததும் பிறரையே மாற்றத்
தாந்திர யோக சாதன மென்றோர்,
மாயங் கிளப்பி மங்கையர் பலரைக்
கற்பழித் தாரிக் கயவர் கூட்டம்.
சித்தினி பவனம் வைத்திவர் செய்த
சேட்டைக ளெல்லாம் செப்பினும் வாய்வேம்.
குடித்துக் களித்துக் கூடிக் குதித்தலும்,
பொய்நகை காட்டிப் பொன்னைப் பறிப்பதும்,
சித்தியைப் பிடிக்கக் கத்திதீட் டுவதும்,

அரசைக் கவிழ்க்கப் புரட்சி மூட்டலும்,
அறத்தைப் பழிப்பதும், அதரு மத்தையே
உபதே சிப்பதும் ஊரில் மெல்லக்
கலகத் தீயைக் கனலச் செய்வதும்,
புல்லும் விறகும் புதுப்புதுப் பண்டமும்,
கொணர்பவர் போலக் கொலைக்கரு விகளைக்
கொண்டு வந்து கொடியார்க் கீவதும்.
தந்திர மாகத் தானை திரட்டலும்,
இந்தப் போலிகள் இழைக்குந் தீமையே.
சித்திமான் உடனே எத்தரைப் பற்றி
இன்னது செய்தீர் ஏனெனக் கேட்டான்.

சித்திமான்

பசுவுரி போர்த்துப் பாய்புலி போன்றீர்,
அகம்பரக் கூத்தீர் அளிவிடை யாதோ ?

அகம்பரன்

மந்திரத் தலைவா, தாந்திரத் தலைவன்,
என்செய லெல்லாம் எனக்கு நியாயமே.
சொல்லிய குற்றம் புல்லிய பொய்யே.
கலிநீ திக்கே கட்டுப் பட்டோம்.
ஆகா யத்தை அண்ணுந்து பார்த்து,
சாமி பூதம் சாத்திரம் மோட்சம்,
புரோகிதம் என்னும் புரட்டுக ளின்றிக்
கண்ணுற் காண்பதே காட்சி யென்றும்,
உலகே நிலைபொருள், உடலே உண்மை,
என்றும் கண்டுநாம் வென்றுல கெல்லாம்,
ஆளுவ தற்கே ஆசைகொண் டோமே.
ஊன்மது, மாதர், உலகியற் போகம்,
இவைதரும் இன்பமே இன்பமென் றுடையோம்
தாந்திரி கத்தின் சம்மத மிதுவே...

சித்திமான்

தாந்தி ரீகமாம்! சக்திசா தனத்தை
ஞான முனிவர் நவிலுக சற்றே.

பாரத முனிவர்

இல்லறங் காக்கும் நல்லறத் தார்கள்,
ஆணும் பெண்ணும் ஆன்ம உணர்வில்,
கூடி வாழ்ந்து குலசக்தி வளர்ப்பதே
தாந்திர யோக சாதன மாமே.

கள்ளும் பிறமனைக் காமமும் தீதே.
தூய மனமும், தூய உணவும்,
தூய நடையும், தூய பழக்கமும்,
கற்பும் உண்மைக் கடவு ளன்பும்,
மாதரைத் தாயென மதிக்கும் சிந்தையும்
கொண்டவ ருக்கே குண்டலி யோகமாம்.

சித்திமான்

அகம்பர தாந்திரம் அழிசெய லாகும்,
என்பதை அறிந்தோம். எண்ணரும் இன்னல்
புரிந்தீர் உமது போலித் தனத்தால்.
ஆயிரம் மக்கள் அத்தாட்சி சொன்னர்.
உமது வாயே உள்ளதைச் சொன்னது.
உயிர்வாழ் விற்கும் உலகநன் மைக்கும்,
உங்கள் கொள்கை ஊறு விளைப்பதே ;
கொடிய தீய குற்றம் விளைத்த
அகம்பர ருக்கிங் காயுட் சிறையாம்.
சித்தினி பவனம் இத்தினந் தொட்டே,
பத்திச் சாதகர் பவன மாகுகவே.
அதிலிருந் தழிசெயல் ஆற்றிய கலியர்,
காவலி லிருந்து கடும்பணி செய்கவே,
சிரிய நியாயத் தீர்ப்பும் இதுவே.
தீர்ப்பை மீறித் தீங்கினிச் செய்தால்,
தூக்கி லிட்டுச் சுடுவோம் உடனே...
காவலர் இவர்களைக் கார்சிறை யிடுமினே !

ஒற்றன்

சித்திமான் இப்படிச் செப்பிய போதே
ஒற்ற னொருவன் ஓடோடி வந்து,
"கொடுமை கொடுமை ! கொடிய புரட்சி !....
கலியர் இங்கே கரந்தின் றெழுந்தார்.
வாளுந் துபாக்கியும் வேலுங் கொண்டு
சாது ஜனங்களைத் தாக்குகின் றுரே !"

சித்திமான்

செல்லுக சேனை ; சீறுக வாளே !
புரட்சியை யடக்கிப் புகுந்த பகைவரைப்
பற்றிச் சிறையிட, பாய்ந்து செல்மினே !
சித்திமான் ஆணை செல்லும் பொழுதே,
அரண்மனை முன்னே ஆர்த்தனர் பகைவர்..
விசயன் சேனை விரைந்தது முன்னே.

இந்தச் சமயம் இன்னொரு சேவகன்
கடிதங் கொடுத்தான்—கலியன் கடிதமே !

கலியன் கடிதம்

“சித்திக் குரிய திறம்பெறு மன்னர்
நாமே, நாமே; நமது நாட்டை
நாமே பற்றி நம்வழி யாளுவோம்.
துறவியர் மடமே சுத்தனுக் கேற்றதாம்.
உடனே செல்க.. உடன்படா விட்டால்,
கொடும்போர் மூண்டு கொலையிலே முடியும்—
என்னவ ரைச்சிறை யிட்டதே காரணம்...”
என்று படித்ததும் இதயந் துடிக்க,
இரத்த விழிகள் இகற்கனல் சிந்த,
“மூண்டது போர்வினை ! முரசுகள் கொட்டுக !
கலியை முடித்தே கத்தி யுறங்குக...
துட்டரை வெட்டுமின், சுட்டுப் பொசுக்குமின் !.......”
என்று கட்டளை இட்டதும் சித்திமான்,
போர்ச்சபை கூட்டப் பொருக்கெனச் சென்றான்.
“போரோ போ” ரென வீரர் கூவி,
மின்வாள் வீசி மிண்டரை யழித்தனர்...
புரட்சிக் கலியர் புழுதியி லுருண்டார் !
பதறிச் சிதறிப் பயந்து சிலபேர்,
அடைக்கலம் புகுந்தார்......ஆயினும் கலிப்படை
கோட்டைப் புறத்திற் கொட்ட மடித்ததால்....
நாட்டைக் காக்க நமது மன்னன்
கூட்டிய போர்ச்சபை நாட்டிய தறிவமே......

# 24. போர்ச்சபைப் படலம்

மேதகு சுத்தனும் விரதத் தந்தையும்,
நீதறும் அமைச்சருஞ் சிற்ற ரசரும்,
காதகக் கலியனைக் கவிழ்க்கக் கூடினர்,
நீதியின் கோயிலாய் நிலவு மன்னவை .

வரமிகு தமிழனும், வலிய வங்கனும்,
உரமிகு மராடனும், உரத்த சிங்கனும்
தரமிகு கூர்ச்சரத் தலைவன், சூரனும்
முரசதிர் மன்னவை முந்தி வந்தனர்.

பாரெலாம் எதிர்க்கினும் ஒருகை பார்த்திடும்,
வீரருந் தீரரும் வினைவல் லாளரும்,
போரெனக் கேட்டதும் புயங்கள் விம்மினர்,
வார்முர சதிர்ந்ததும் வாழி பாடினர் .

## போர்ப் பாட்டு

**கா**ரிருட் புயல் வான் பளிச்சிடுங்
கம்பி மின்னலைப் போலவே !
போரிலே சுடர் வாளைவீசிப்
பொறுமைப் புல்லரை வெட்டுவோம்..
பாரி லேயறம் வாழ்கவே கொடும்
பாவிகள் முடி வீழ்கவே !
வீரசக்தி பவானி நங்கொடி
வெல்கவே துணை நல்கவே !

நலந்தரு சக்தியை நன்று சிந்தித்தே,
நிலந்தரு வேந்தனு நீண்ட மன்றத்தை,
அளந்ததன் காரியம் அறிந்து ணர்ந்து, தன்
உளந்தனி லுள்ளதை உரையிற் கோத்தனன்.

### சுந்தன்

நன்றியிற் பெரியீர் வெற்றி நாடிய நல்லீர், உள்ளம்
ஒன்றிய நாட்டீர், நெஞ்சில் உறுதிகொள் வீரச் செல்வீர்,
வென்றிடும் உண்மை யென்ற வேதவாக் கறிந்த நீவிர்,
இன்றிடர் அறிவீர் ; நாளை இயற்றுவ தறியக் கேளீர் !

வீட்டிலே புகுந்த கள்வர் வீந்தனர் வகையில் லாதே ;
நாட்டிலே அறமழிக்க, நாத்திகத் திமிர்கொள் வாளைக்
காட்டியே யெழுந்த பொல்லாக் கலியனை யடக்க நாமுந்
தீட்டிய வீரங்கொண்டு சேனையைச் செலுத்து வோமே !

கோட்டையை வளைத்த துட்டர் குமைந்திடச் சுடுமின் இங்கே ;
*காட்டகங் குவிந்த சேனை கலிநக ரதனைத் தாக்கி
வாட்டுக பகைக்கு லத்தை ! வளைத்திரு பக்கஞ் சூழ்ந்தால்,
சேட்டைசெய் அரக்கர் நங்கை சிக்குவ துறுதி யாமே !

நம்புத லுள்ள வீரர் நாட்டிய பயிற்சி மிக்க
வெம்படை யுள்ள தாங்கே, நாயகன் ஒருவன் வேண்டும்.
அம்புடன் அறிவுஞ் சூழ்ச்சி யதனுடன் அறமுங் கொண்டு,
வம்புசெய் கலிய னுக்கு வல்விடை பகர வேண்டும் !

*பஞ்சவடிக் காடு

சத்தியன்

தனயனிவ் வாறு பேசச் சத்தியன் முன்னே நின்று,
''வனமுறு படை நடத்தி, வஞ்சகரை முறிய டிப்பேன் !
எனதறம் அதுவே ; நாட்டின் இன்னலைத் தீர்க்க வேண்டி
மனதெனைத் தூண்டு தையே; மன்னவை சொல்வ தென்னே?

அரசினை மகன்கை யீந்தே, அறப்பணி செய்யச் சென்றேன் !
பரிசனந் துறந்தி ருந்தேன் ; பாவிகள் படை யெடுத்து,
முரசொலி கேட்ட பின்பென் முதுமையும் இளமை கொண்டு,
நரசமு கத்தின் சேவை நலமென நாடு தையே !

நாளையென் றில்லை ; இன்றே நல்விடை தருவீர்; வீரக்
காளைக ளுடனே அந்தக் கலிநகர் பிடிப்பேன்'' என்று
தோளையு நோக்கிக் கையிற் சுறுசுறுப் பாக மின்னும்
வாளையு நோக்கி மன்னை, மன்றினை நோக்கி னனே !

சித்திமான்

முன்னவன் சொல்லைக் கேட்டு முதற்பெறும் அமைச்ச னுங்கே,
மன்னவன் மனமு மற்றை மந்திரர் மனமுந் தேர்ந்து,
''தன்னல மற்ற வீரத் தந்தைநீ உறுதி கொண்டு
சொன்னது சொன்னவாறே ; தொடருக கரும'' மென்றான்...

சத்தியன்

செல்கிறேன்...இங்கே நீவீர் சித்தியைக் காமின். அங்கே
வெல்கிறேன் கலியை'' யென்று சத்தியன் வீட்டிற் கேகி,
செல்வனை மனைவி தன்னைத் தேற்றியே கவசம் பூண்டு
நல்விடை கொண்ட காதை அடுத்துநாம் நவிலு வோமே... 60

தருமத்தை உயிரைப் போலத் தாங்கிடும் தந்தை செய்கை,
ஒருமித்த சபையின் வீர உணர்ச்சியை எழுப்ப, வேந்து
நிருமித்த படியே, சித்தி நிலையத்தில் வெற்றி நாட்டுங்
கருமத்தைக் காக்க மேலோர் கருத்தினில் உறுதி கொண்டார் !

சூத்தன்

வருந்திடுந் தருமம் வாழ, வஞ்சகர் செருக்கு வீழத்
திருந்திய வீறு கொண்ட தீரர்காள், இனிநாம் இங்கே
இருந்திட நேரமில்லை, எழுந்திகல் நடுங்க, வாட்கு
விருந்திடச் செல்வோம் வாரீர், விசயனுர் ஆணை கொண்டே !

சிற்றரசர்

கலிசெய்த கொடுமைமுன் கண்ணை மூடியே
புலிசெய்த கொடுமையைப் போன்ற தந்தகோ !
வலியவந் தடுசமர் வளர்த்த பாவிகள்,
நலிகநற் றருமமே நாளும் வாழ்கவே !

வீரர்

இருந்திடிற் சுதந்தர ரென் றிருப்பதாம்
இறந்திடின் கடமைசெய் திறந்து வாழ்வதாம்.
அறந்தவிர் வாழ்க்கையும், அடிமை வாழ்க்கையும்
மறந்தொரு கனவிலு மனத்தி லெண்ணிடோம்!

தேசம் வாழ்ந்திடச் செங்க திர்க்கொடி,
சேனு லாவப் பறந்திட
நேசர் வாழ்ந்திட, மோசஞ் செய்த
நிருதர் வெம்படை வீழ்ந்திட !
காசினித் துயர் நீங்க மாதரின்
கற்பு வாழ்ந்திடப் போர்செய்வோம் !
மாசி லாத சுயேச்சை வீரர்
வருக, வெற்றி பெறுகவே !

அன்னை ஆரமு துண்ட நன்றி
அமர்க் களத்தில் விளக்குவோம்.
இன்னரே இடு தாளை நீக்கி,
உறங்கு வாளை எடுத்தனம் !
மின்னி மின்னிப் பறந்து செவ்வொளி
வீசி வீசிச் சுழலவே !
தின்னு தோள்தின வாறப் போர்புரி
வோம் ! பராசக்தி ஓமெனுஅ !

சுந்தன்

முந்து செல்க முதற்படை வீரர்கள் !
எந்தையை விடை ஈந்து விடுத்ததும்,
இந்தி ரையின் இளந்திரு மைந்தனும்
வந்து போர்முனை வாட்கட னாற்றுவான்..

# 25. பகதூர் படலம்

[சத்தியன் தன் மனைவி இந்திரை யிடம் விடை பெறுகிறான். இந்திரை கலங்குகிறாள். அவளுக்குச் சிக்கிய குருவான தேஜ் பகதூர் வரலாற்றைச் சொல்லி ஆறுதல் அளித்து விடை பெறு கிறான். அச் சமயமே சுத்தராஜன் வந்து தந்தையைப்பணிகிறான்.]

அரிய காரியம் ஆயினும் ஆருயிர்க் (கு)
உரிய நாதனை ஓர்கண மாயினும்
பிரிகி லாத பெருந்தகை யிந்திரை,
எரியை அஞ்சும் இணர்க்கொடி போன்றனள் !

இந்திரை

ஆவிபோல் அறத்தைக் காக்கும், அன்புடை யரசே, இன்று
மேவிய கடமை தன்னை மெத்தவும் அறிவேன் ; என்னின்
பூவைநின் பிரிவு தாங்கேன் ! போர்முனை வீரர் தம்மை
ஏவிநீ இருப்பாய் ; இன்றேல் என்னையும் அழைத்துச் செல்வாய்!

சத்தியன்

காரிடி கலக்கும் மின்போற் கலங்கினை கண்ணே ; நாட்டின்
வேரிடி யுறுவ தேபோல், வெங்கலி போர் தொடுத்தான் !
யாரினி உண்டு றங்கி இல்லத்திற் சுகித்தி ருப்பார் ?
வீரரின் கடமை காக்க விரைகுவேன் ; விடைத ராயே !

வையக மிருக்கத் தூய வரதனிங் கரசி ருக்கத்
துய்யவர் துணையி ருக்கத் துகளறும் அமைச்சி ருக்க,
தெய்வசம் மதமி ருக்கச் சித்தியி லிருந்து தேசம்
உய்பணி செய்வாய் ; அன்புள் ளுயிரினைப் பிரிவ துண்டோ ?

இந்திரை

வில்லினைப் பிடித்த வீர வேந்தர்தங் கடமை செய்யச்
செல்லுவ துறுதி யேனுஞ் சீர்பெறுஞ் சித்திக் கோட்டை
எல்லையைத் தாண்டி இந்த முதுமையில் ஏகுஞ் செய்கை
சொல்லொணுத் துன்ப மாகும்...துடிக்குதென் னுவி யந்தோ ?

சத்தியன்

வருவது வருவதேயாம் ; வராதது வராத தேயாம் ;
பொருவது பொருவ தேயாம் ; புண்ணிய வீர ருக்குக்
கருமமே கண்ணும். தேசக் கடமையே உயிராம். இந்தத்
தருமத்தை முன்னே காத்த தீரனின் சரிதை கேளாய் !

தேஜ்பகதூர் வரலாறு

நீங்கறு முயற்சி யாளர், நீதிசெய் காத லாளர்,
தூங்கினுங் கடமை தூங்காத் துணிவுடை கரும வீரர்,
தீங்கறு தெய்வ பக்தர், தியாகமே வாழ்க்கை யானுர் ;
ஓங்கிசை பெற்ற சீக்கர் ஓதிடுங் குருக்க ளாவார் !

துங்கசத் குருநா னக்கின் வழிவழி துலங்கும் ஆசார்,
அங்கதன், உமர்தாஸ் ராம்தாஸ்,அருச்சுனன்முதற்கோவிந்தன்
தங்கமாம் ஹரிகி ருஷ்ணன் ஆதியோர் தழைத்த பின்பு
சிங்கம்போல் எழுந்தான் ஆத்ம தீரனும் பகதூர் தேஜன்.

ஆற்றலும் அறிவு மிக்கான், ஆத்தும சக்தி மிக்கான்,
கூற்றெதிர் வரினும்அஞ்சான்,கொள்கைக்கே உயிர்கொடுப்பான்.
நாற்றிசை புகழும் அன்னேன் நல்லறத் துணைவி யாக
ஏற்றவள் கற்பு மிக்க கூர்ஜரி என்னும் பேராள் !

அறம்பொருள் இன்பம் பூத்தே அருண்மணங் கமழும் இன்னூர்
சிறந்திடும் இல்லறத்தின் செழுங்கனி யாக வந்தோன்,
துறந்தவர்ப் பெரியான் ; வீர சூரரிற் பெரியான் ; செய்ய
திறந்தனிற் பெரிய சீலன்; கோவிந்த சிங்க னென்பான் !

குருமணி யாகச் சிக்கர் குலமணி யாக, நாட்டுத்
திருமணி யாக ஞானத் திரள் மணியாகக் கண்ணின்
கருமணி போன்ற சேயைக் கருத்துடன் பயிற்றித் தன்பின்
வருமணிச் சுடரைத் தந்தை வரமெனா வளர்த்தான் மாதோ !

அத்ததி தில்லி சுல்தான் அவுரங்க ஜிபும், இஸ்லாம்
பத்தியைப் பரப்ப வேண்டிப் பரபரத் தெழுந்து நின்றான் ;
எத்ததி அரசர் யாவர் அவர்மதம் ஏற்ற மாதல்
இத்தலத் தியல்ப தாகும் என்பதே சரித உண்மை !

வீரமுந் தவமுந் தேச விரதமுங் கொண்ட தூய
ஆரிய ரான சிக்கர் அல்குரான் அன்ப ராகக்
கோரிய சுல்தான் அன்னோர் குருவினைக் கைது செய்து,
"சீரிய மனையைக் கண்டு, தில்லிக்கு வருக" வென்றான்.

கூர்ஜரி தேவி

மண்டல மன்னன் ஆணை மறலியின் அழைப்பே யென்று
விண்டனள் மனைவி ; சோர்ந்து விம்மினள் ; இருக்க வேண்டிக்
கொண்டனள்; கவலைக் கண்ணீர்கொட்டினள்அணைந்தமார்பில்.
பெண்டிராய்ப் பிறந்தாருக்கே பிரிதுயர் தெரியு மம்மா !

நெஞ்சடைத் துரைக்கொ ணாது, நீலக்கண் மலர்கள் வாடிப்
பஞ்சடைத் தாவி,ஊச லாடியே பதறு கின்ற
வஞ்சமில் கற்பி னாளை வாய்மைக்கே வாழு கின்ற
அஞ்சறு கணவன் ஆற்றி ஆறுதல் கூறி னானே !

பகதூர்

மெய்யறங் காப்ப தற்கே மேனியைச் சுமந்த நல்லோர்,
செய்தவப் பயனாய் வந்த செல்வியே, அல்லல் ஏனோ ?
பொய்தவிர் தியாக வேள்விப் புகையெனை யழைத்த தாங்கே,
பெய்தென தாவி யந்தப் பெருங்கனல் வளர்ப்ப தாமே !

நச்சரா சீறி னாலும், நமன் வந்து மிரட்டி னாலும்,
துச்சநெஞ் சுடைய வெய்யர் சுடுசரம் பாய்ச்சி னாலும்,
அச்சமொன் றறியாத் தீரர் அதர்மத்தை எதிர்ப்ப தன்றி,
எச்சம யத்துந் தீமைக் கிணங்கிநாம் அறிந்த துண்டோ ?

தளர்வறும் உறுதி கொண்ட சுகமணி தாங்கு நெஞ்சம்,
அளவறு சக்தி மிக்க அருச்சுனன் அமைத்த உள்ளம்,
களவுறு சூழ்ச்சி யாலே உண்மையைக் கரப்ப துண்டோ ?
இளகிய மனத்தினாய் நீ இவ்வகை நினைந்து தேறாய் !

சோகமென் பதுவே மாயை ; துயரமு மனத்தின் மாசு.
தேகமுந் தேயுஞ் சட்டை, தேகிக்குச் சாவொன் றில்லை.
ஏகனும் அகாலன் என்னை அழைக்கின்றான் ; ஏழையே நீ
மோகத்தை விடுவாய் ; அந்த முதல்வனை நினைகு வாயே !

தடைகளைத் தகர்த்தெறிந்து, தருமமென் றறிந்த வீரக்
கடமையைக் காக்கு மென்னைக் கண்புனல் கலக்க லாமோ ?
மடமையை விடுவாய் ; ராம தாஸனின் மாண்பைப் பாராய் !
உடலினைத் தாண்டி உள்ளே உள்ளதை யறிந்து தேறாய் ! 80

கூர்ஜரி

என்றுதன் கணவர்சொல்லக் கூர்ஜரி இணக்கங் கொண்டே
"நன்று ; நம் இறைவன் உண்மை நாட்டிடச் செல்லு முன்பே,
இன்றுநம் மகனுக் கேற்ற கடமையை யியம்பும்" என்றாள்.
வன்றவக் குருவும் ஆங்கே மைந்தனைத் தழுவிச் சொன்னான்....

இவ்வணம் பேசும் போதே இந்திரை அமைதி யாகிச்
"செய்வணஞ் செய்க, செய்யுஞ் செயல்களை" என்றாள் ; ஆங்கே
கைவணத் தாலே இன்று கலியினைக் கலக்கி ,ஞாலம்
உய்வணம் அவதரித்த உத்தமச் சுத்தன் வந்தான்...

"அன்னமே பயப்படாதே அரக்கரை வென்று வாரேன்"
என்னுநல் லுரைக ளாலே இந்திரைக் கினிது சொல்லி,
மன்னவ னுன மைந்தன் மனதினில் உணரும் வண்ணம்,
பொன்னுரை சொன்னான் சித்தி யரசினைப் புரந்த வேந்தே ! 92

# 26. சத்தியன் உறுதிப் படலம்

சுத்தன்

பேருஞ் சத்தியம் பீடுறு வாழ்க்கையின்
சீருஞ் சத்தியம், செய்கையுஞ் சத்தியம்,
யாரு னக்கிணை யாகுவர் எந்தையே ?
பாருன் பாதம் பணிந்து வணங்குமே !

வீட்டி னின்பம் விளைந்திடத் துய்த்தநீ,
நாட்டிற் கின்ப நயந்திட வேண்டியே,
காட்டி னின்று கலியினை வென்றிசை
நாட்ட வேண்டி நடக்கத் துணிந்தனை !

நெருப்பி லிட்டு நிலவிடுந் தங்கம்போல்,
உருக்கி வார்த்த உருக்கின் உறுதிபோல்,
நெருக்கி நீண்டு நிலைத்த அனுபவம்,
உருக்கப் புத்துரு வுற்றதுன் வாழ்க்கையே!

வார்த்தை யெல்லாம் செயலை வளர்த்திடும்
நேர்த்தி யான நினது மனசினைப்
பார்த்துப் பார்த்துப் பரவசங் கொண்டனன்,
சீர்த்தி யோங்கிடுஞ் சித்திக் கதிபனே !

இனைய நன்மகன் இவ்வகை செப்பிட
மனை யறத்தின் மகுடமிவ் வின்பமே,
எனநி னைந்து மகிழ்ந்திளங் காளையை
இனிது நோக்கி இசைத்தனன் சத்தியன்.

சத்தியன்

கண்மணிச் செல்வநின் கனிவு ரைகளால்
எண்ணுற மகிழ்ந்தனன் இனிது வாழ்கநீ !
மண்ணியல் வாழ்க்கையை மண்ணி லத்திற்கே
புண்ணியப் பலியெனப் போக்க முன்னின்றேன் !

அருமை யான தவங்களை யாற்றிய
பெருமை தந்த பெரும்புகழ்ச் செல்வனே,
கருமவீரர்கள் காத்தபொன் னாட்டினைத்
தரும வீரந் தழைத்திடத் தாங்குவாய்.

இடை யறாமல் உலகிற் கினியன
தடை யிலாது தழைத்திடச் செய்யுமுன்
குடை நிழலிற் குளித்து மகிழ்ந்து, நீ
படை நடத்திடும் பான்மையுங் கண்டனன் !

ஆய்ந்த கொள்கையும், ஆண்மையும், வீரமும்,
வாய்ந்த நீயிவ் வலிய சமரிலே,
பாய்ந்த ஊக்கம் பலன்பெறத் தொண்டிலே
தோய்ந்த தீரர் துணைபல செய்கவே.

சுந்தன்

சுற்றிலும் புயல்வந்து சூழ்ந்த போதிலும்,
பற்றறப் பளிச்சிடும் பகலைப் போலவே,
பற்றலர் கொடுமைகள் பாய்ந்து கௌவினும்,
வெற்றியின் விளக்கொளிர் வீறு நம்மதே !

வீட்டினை மறந்தனர் ; வீரர் ஆவியை
நாட்டினுக் குதவிட நடந்து, வேகமாய்க்
கோட்டையை வளைத்திடுங் கொடியர் அஞ்சிடத்
திட்டினர் ; நாட்டினர் சீர்த்தி யித்ததி.

அரசியும், அமைச்சனும், அறிஞர் மன்றமும்,
பரிசன நன்றியும், பாரின் ஒற்றுமை,
புரிதரு நன்மையும் புலவர் பாடலும்,
அரியநின் ஆசியும் அளிக்கும் வெற்றியே !

சித்திமான் முதலிய தேர்ந்த மந்திரர்,
பத்திமா ஞகிய படைத் தலைவனே,
எத்திறம் பணித்தனர் ஏகி யத்திறம்,
வித்தகர் போற்றிடும் வெற்றி யாவதே !

ஈங்குள வினைகளை யியற்றி நல்லிசை
தாங்கிட யாதொரு தடையு மில்லையே !
ஆங்குநீ கலியனை அடக்கி யுன்புகழ்
ஓங்குற மீளுக உண்மை வீரனே !

சத்தியன்

கலியினை மட்டுமோ ? கலியைத் தூண்டிய
புலியரை அன்னவர் புதரிற் சாடுவேன் !
நலிவறும் அறத்தினை நாட்டவே யெனைப்
பலியிடு மின்பமே பாரி லின்ப மாம் !

இம்முது யாக்கையின் இரத்தம் ஊற்றியே
நம்மறப் பயிரினை வளர்க்க நாடினேன் ;
வெம்மன வூணரை வீழ்த்தி னல்லது
நிம்மதி யில்லையிந் நீதி நாட்டிலே.

பூப்பொறை யாகிய பொய்ய ரக்கரை
மாப்பெரு முயற்சியால் வாட்டி னல்லது,
கோப்பெரு மைந்தநின் கொள்கை செல்லுமோ ?
நீப்பறு போர்வினை நிற்ப தாகுமோ ?

நயமுறச் செய்வன நயந்து செய்குவேன் ;
பயமுறச் செய்வன பயமற் றெய்துவேன்,
வியனுற முன்வழி விளங்கும் ; செல்கின்றேன் ;
சயமுறுஞ் சத்திய தரும மேதுணை.

சுத்தன்

இம்மையு மறுமையு மினி துணர்ந்தனை ;
மும்மையு முணர்ந்தனை முதிய தந்தையே !
எம்மையும் உணர்ந்தனை, இயற்று நற்பணி
செம்மையி னுணர்ந்தனை செய்க நின்மனம் !

எவ்விட ரெய்தினும் இறுதி மட்டிலும்,
தெவ்வரைப் பொருதுநாம் செயத்தை நாட்டுவோம்.
இவ்வையி னுள்ளதை இயற்று கின்றனம் ;
அவ்வையி னுன்பணி அளவி லாததே !

எல்லையி லுலகெலாம் இன்ப மெய்தவும்,
புல்லரின் வஞ்சனை பூண்டொ டோய்ந்தினி
நல்லறம் வாழவும் ஞான வாக்கினுல்
*வெல்லற மொழிகளை விளம்பிச் செல்லுவாய் !

* காரியத்தை வெல்லும் அறமொழிகள்

சத்தியன்

இன்றென துளமிசை யிலகு சத்தியக்
குன்றொளி யெனவளர் குருவின் மாண்பினை
நன்றுனக் குணர்வுற நவின்று செல்லுவேன் ;
வென்றியை விளைக்குமவ் வீரன் செய்கையே ! 88

# 27. குருகோவிந்தப் படலம்

தியாக வீரன்

தீயிடை அகிலைப் போலும், திட்டிய வயிரம் போலும்,
வேய்கடை நெருப்பைப் போலும், விளைகனி மரத்தைப் போலும்,
தாய்மனப் பாசம் போலும், தட்டிய ஏலம் போலும்,
தூயதி யாக வீரர் வாழ்க்கையுந் துணிபு மம்மா !

அத்தகைத் தியாக வீரன், அகாலியர் தந்தை யானோன் ;
சக்திஓம் சண்டி தாஸன், சத்குரு பஹதூர் மைந்தன் ;
வித்தக ஞான சீலன், விடுதலைத் தவ முயன்ற
சித்தனும் குருகோ விந்தன் சிங்கமென் றிசைபெற் றேனே !

தந்தை மொழி

ஆவியை அறத்திற் கீயத் தில்லியின் அரசன் முன்னே
மேவுமுன் அருமைத் தந்தை, "மேன்மைகொள் மைந்தநீயென்
சீவிய சிரங் கொணர்ந்து, சிரார்த்தங்கள் செய்து, பின்பு
பூவினில் அதர்மம் பொன்றப் போர்புரி"யென்று சொன்னான் !

மன்னுயிர் நலத்தைப் பேணி, மாசறு தொண்டு செய்து,
பொன்னென மானங் காத்துப் பொல்லரைப் போரில் வீழ்த்தித்
தன்னலம் விடுத்து, நாட்டுத் தருமத்தைக் காக்க வேண்டி,
என்னையுன் னுள்ளே வைத்துச் செல்கிறேன் எனது செல்வா !

தனயன் உறுதி

கலங்கறு தந்தை சொன்ன கனல்பெறும் வீரச் செஞ்சொல்
புலங்கொளப் பருகி யாங்கே, புண்ணியப் புதல்வன் சொன்னான்!
பலங்கொளு மட்டும் இந்தப் பாரத தருமம் வெற்றி
யிலங்கிட வாழ்வேன் எந்தாய் இனிதுநீ என்னில் வாழ்வாய்!

நன்றுநீ சொன்னாய் வாழு நாளெலாம் வார்த்து வார்த்துக்
குன்றணி விளக்கைப் போலுன் கொற்றநல் லிசையெக் காலும்,
நின்றெரிந் துலகம் போற்றி நிலவிடச் செய்வேன் உண்மை
என்றதும் ஆசி பூத்தாங் கேகினான் இறப்பை வென்றான் !

பசுமரத் தாணி போலே பண்புடை மைந்த னுள்ளும்,
விசைபெறு தந்தை செய்கை வியனுறப் பாய்ந்து பற்றி,
அசைவறும் உறுதி தூண்டி, அகாலனின் அறத்தைக் காத்தே
வசையற நாட்டைப் போற்றும் வீரமாய் வளர்ந்த தன்றே !

தியாக பலி

சகமெலாங் கோயில் ; சுத்த சத்தியம் இறைவன் என்னும்
சுகமணி பாடிக்கொண்டே, துணிவுள பகதூர் வந்தான்.
முகலவன் வியந்து நோக்கி, " முகம்மது மதத்தைச் சேர்வாய்
புகலுனக் களிப்பேன் இன்றேற் பொன்றுவ துறுதி"யென்றான்.

பகதூர்

"அரசநீ கேளா"யென்றே அன்புடன் குருவுஞ் சொல்வான் ;
"பரசம யத்தை யென்றும் பகைத்திடாச் சமதை கொண்டு,
நரசமு தாயத் தார்தம் குருவழி நடந்தால், இங்கே
விரசமாஞ் சண்டை யில்லை, வெறிகளு மில்லை யன்றோ ?

ஒருவனே பரமன் ; இந்த உலகெலாம் பரவி நிற்கும்
அருவனும் அவனே ; அன்பர்க் கன்பனும் என்னும் எங்கள்
குருமணி வகுத்த கொள்கை கூறிடின் சீக்க-முஸ்லிம்
இருவரின் கொள்கை என்னின், இகலினுக் கிடமும் உண்டோ?

ஆறுதல் அளிக்கும் ஸத்ஸ்ரீ அகாலனைக் கருதுஞ் சிந்தை,
மீறியிவ் வுடலுக் காக மெய்யினை மறுப்ப துண்டோ ?
கூறுசெய் தாலும் என்னைக் கொள்கையிற் பிசகேன் ஐயா ;
மாறிடேன் சமய"மென்றான் மறலியைப் புறங்கண் டானே !

இம்மியும் அஞ்சா தானை எரியெழ நோக்கிச் சுல்தான்,
ஹம்மென்றான், கொலைவாள் ஆங்கே அகாலனை நினைத்த வீரச்
செம்மலின் சிரத்தைக் கொய்து, செந்நகை புரிந்த தந்தோ !
இம்மத வெறியைக் கண்டே இரவியுந் திகைத்த தம்மா !

தந்தை தலை முன்

முன்சென்ற தந்தைக் காகு முடிவினை யறிந்து மைந்தன்
பின்சென்று கொலைக்க ளத்திற் பேரிடர் தாண்டி, மெல்ல,
தன்சுய தருமத் திற்கே பலியெனத் தந்த தந்தை
சென்னியைக்கொணர்ந்திவ்வாறுசெங்கணீர்பெருகச்சொன்னான்:

அப்பநீ அறத்திற் காவி யளித்தனை அமர னானாய் !
ஒப்பரும் உனது பீடத் தமர்ந்துநான் உறுதி சொன்னேன் !
எப்பெருங் கொள்கைக் காக உடற்பலி ஈந்தாய், எந்தாய்
அப்பெருங் கொள்கைக் கேயென் ஆவியைப் பலிசெய் வேனே !

பூவியல் வாழ்வை வீரப் புகழ்மணங் கமழ வைத்துத்
தேவியல் வாழ்வு பெற்றாய் ; சிற்றுடல் வருந்து கின்ற
சாவியல் உனக்கும் உண்டோ ? தந்தையே மைந்த னுள்ளே
ஆவியை வைத்துன் சித்தம், ஆகிட வாழ வாயே !

ஞானத்தின் எல்லை கண்ட பாரத நாட்டின் ஆத்ம
கானத்தைப் பருகி வாழ்ந்த கண்ணனின் கீதை கற்றேன் !
மானத்தைக் காக்க வேண்டி, மஹாசக்தி பெற்று, நீயும்
வானத்தி னின்று வாழ்த்த வாளினைச் சுழற்று வேனே !

அருமைத் தந்தை கடன்முறை யானதும்,
உருகும் உள்ளம் உருக்கினைக் கொண்ட சேய்
கருது காரியங் கையினிற் கூடவே
பெருகு மாதவம் பேண முனைந்தனன்.

பத்தைந் தாண்டிடைப் பண்பன் யமுனைக்கான்,
பத்தைந் தாண்டு பகலிர வின்றியே,
சத்தி சண்டி தவக்கனல் வீசவே—
சுத்த வீரச் சுடர்மணி யாயினான்.

கல்வி, செஞ்சொற் கவிதையில், வாட்சமர்,
வல்ல வீறு வளர்தவஞ் செய்யுநாள்,
அல்லல் போக்கும் அருட்குரு நாடுற
நல்ல சீடர் நயந்து முறையிட்டார்.

சீடர்

துணிந்தெந் துன்பந் துடைக்கக் கடுந்தவம்
அணிந்து நோற்கும் அருட்குரு நாதனே,
பணிந்துன் அன்பர் பரிதபம் பார்த்துநீ
இணங்கி நாட்டிற் கெழுந்திட வேண்டினோம் !

தணிந்த சென்னியுந் தாழ்விரி கூந்தலும்,
பிணைந்த கைகளும் பேசறு துன்பமும்,
இணைந்து சோகம் எழுதிய பாவைபோல்,
உணங்கு கின்றனள் ; உண்மை ; நம் அன்னையே !

கொழுந்து வீசுங் கொடுந்தவச் செல்வனே,
அழுந் திருளை அகற்றிடுஞ் சோதியே,
எழுந்து நீயொன் றியம்பிடின் அக்கணம்,
எழுந்து நாடுன திச்சையைச் செய்யுமே !

துடி துடிக்குஞ் சுதந்தர சக்தியால்,
அடிய வருன் அருட்பணி யாற்றுவோம்;
நெடிது துன்ப நிலையினி லுன்னவர்
வடிக ணீர்துடை ; வந்தருள் வள்ளலே.

## குரு கோவிந்தன்

சீல மிக்க செழுமனச் சீடர்காள்,
ஞாலந் தன்னை நலிக்குந் துயர்கெடச்
சூலந் தாங்கிச் சுதந்தரம் பெற்றிடக்
கால சக்தியின் கட்டளை வேண்டினேன் !

மன வரங்கில் மஹாசக்தி தூண்டவே
வினை யரங்கினி லேவினை யாடுவேன் !
எனது பூரணம் எய்திடு மட்டிலுந்
தனிமை செய்தவ மேயினி தாகுமே !

சின மகந்தை சிறுமைக ளின்றியே,
மன சுதந்தர மாண்புடை தீரரே,
வினை சுதந்தர வேகத்தி னுல்வரும்
சன சுதந்தரந் தந்திட வல்லவர்.

தன்னை வெல்லுஞ் சமாதியி லூன்றிநான்
என்னை வென்றுள் எனதுசு யாட்சியை,
முன்ன டைந்து, முழுமை யடைந்ததும்,
பின்னு லகிற் பெரும்பணி செய்குவேன் ....

தெருளி லாத சிறுமதிக் கூச்சல்கள்,
பொருளி லாதவர் போட்டியைப் போலவாம்.
உருளை யெல்லாம் உருவா யிருந்துமென் ?
கருவி சக்திக் கனலின்றி ஓடுமோ ?

உண்மை கண்டது வாகி யுளத்திலே
திண்மை கண்டு திருவருட் சக்தியால்,
எண்ணும் எண்ணம் இயற்றிடுங் காலத்தைக்
கண்ணுற் றன்பர் களிப்பர் உறுதியே !

வஞ்ச மின்றி மலரடி பற்றினேன் ;
தஞ்ச மீந்தனள் சண்டி பராசக்தி,
துஞ்ச லின்றித் துணைசெய் பலம் அவள் ;
அஞ்ச லஞ்சலென் அன்புள சீடர்காள்!

முற்ற யோகம் முடித்து வருகின்றேன்,
உற்ற தீங்கை உடைத்துத் தகர்க்கின்றேன்.
சுற்றும் வீரச் சுடர்க்கொழுந் தோங்கிய
வெற்றி வீரர் வினைசெயக் காண்கின்றேன் !

அன்ன வாறுள மாகெனச் சீடர்கள்
பொன்ன ணிதரப் பொங்கும் யமுனையில்
இன்ன வையெனக் கேனென வீசியே
அன்னை சண்டியை அன்புறக் கூவினன்.

சண்டி துதி

†சக்தி ஓம்ஜய சண்டி பவானி,
சங்கரீ சரணம் ஜய காளி
பக்தனை முகம் பார்பர தேவீ !
பைரவீ ஜய பார்வதி தாயே !

முக்தி வேண்டி முறையிட வில்லை,
மூல குண்டலி மூண்டனல் வீசும்
சக்தி வேண்டித் தவம்புரி கின்றேன்
தருமம் வாழ்ந்திடச் சத்தியம் ஓங்க !

பொறுமை யாகப் புரிதவ யோகம்
பூர ணம்பெறப் போற்றி யருளாய் !
திறமை யெல்லாந் திருவுட னீவாய் !
தீர வீரரின் சேனையை யீவாய் !

சங்க நாதம் தழைக்க முழங்கித்
தாவித் தாவிப் பகைவரைச் சாடிச்
சிங்க நாதங்கள் செய்து முன்னேறும்
செருபடை தருவாய் ஜெய காளீ !

அலைவி லாவுள் ளமைதி தருவாய் !
ஆத்ம சக்தி அளவற நல்காய் ;
கலை வரந்தரு வாய்கவி யீவாய் !
கல்வி யாகிய செல்வந் தருவாய்.

சித்த சுத்தி திகழ்மணிக் கோயில்,
செய்ய நெஞ்சந் திருமலர்ப் பீடம்,
பத்தி யோங்கும் பணிவழி பாடாம் ;
பரிந்தென் பூசனை யேல்பர சக்தி.

பொய்ய கந்தையைச் சுட்டுப் பொசுக்கிப்
பூச லாக்கும் பொறுமையை நீக்கி
வெய்ய காம விகாரத்தைப் போக்கி
வீறு பெற்ற விவேக மருளாய் :

சுத்த ஞானச் சுகோதய வாழ்வும்
சோர்வி லாத சுதந்தரத் தொண்டும்,
சித்தி யாகிடச் செய்தருள் காளீ.
தேச மாகத் திகழ்பர சக்தி !

† *தன்ன தானன தானன தானு. பேஹாக் ராகம்; ஆதி தாளம்*

உடலெலாம் உள்ளமாகி, உள்ளெலாம் உருகிக் கண்ணீர்
மடைதிறந் தோடக் கண்ட மஹாசக்தி முன்னே தோன்றி,
"அடலரிச் சியம் போலே ஆண்மைகொண் டெழுந்து சென்றுன்
கடமையைப் புரிவாய் வாளிற் கனலுமென் சக்தி" யென்றுன் !

வந்தனன் குருகோ விந்தன் வன்றவச் சித்தி பெற்றுச்
சிந்தையுட் களித்துச் சீடர் "செயகுரு வருக" வென்றே
வந்தனை புரிய, நாட்டை வாழ்த்திநம் ஆத்ம வீரன்,
முந்தொரு சண்டி யாகம் செய்திட முனைந்தான் மாதோ !

எண்டிசை யன்பரெல்லாம் இனமலர் தன்னை மொய்க்கும்
வண்டெனக் கூடி, வேள்வி வகையுற நடக்க வேண்டுந்
தொண்டுகள் செய்தார் ; ஓமத் தீயினைத் தூண்டி, ஆசான்
"சண்டிஓம் சக்தி" யென்று தன்கையால் அவிசொ ரிந்தான் !

மந்திர வேள்வி முற்றி, வாளினை யேந்தி, வீரச்
சுந்தரத் தேசு வீசுஞ் சுதந்தரத் தலை நிமிர்ந்தே,
"சந்ததம் தருமம் வாழச் சமர்புரி"என்று சக்தி
இந்தவாள்இலகத்திபோல்இறங்கியொன் றிசைத்தாள் என்றுள் !

இரும்பொரு காந்த மாகி, இனத்தினை ஒன்று சேர்த்துத்
தருமத்தை நாட்டவேஅ தருமத்தைத் தாக்குங் கண்டீர் ;
கருமத்தைத் தொடரு முன்பு காளியின் ஆணை செய்ய
ஒருமித்தா னந்தக் கோட்டை ஒளிபெற வாரீர் என்றுன். 180

## கால்ஸா இயக்கம்

தேனுகு நாண்மலர் செறிந்த சோலைசூழ்
ஆனந்த புரத்தினில் அன்பு வீரர்கள்,
வானத்தின் மீனென வந்து கூடியே,
மோனமாய்க் குருதரு மொழியை வேண்டினர்...

திருத்தகு முடியினைத் தேசு சூழ்ந்திட
உருத்திரக் கண்கன லுகுக்க, ஓச்சிய
கரத்தினில் வீரவாள் களி துளக்கிட
உரத்தெழு மலையென உரவன் பேசினன்.

### குரு

"குருதி வேண்டும் ! கொடுப்பவர் என்பின்னே
வருதிர் ஐவர் இவ் வாளில் இறங்கியே
தரும தேவதை தாகந் தவிக்கின்றுள் ;
கருமம் வெல்லக் களப்பலி வேண்டுமே !"

ஊசி வீழினும் ஓசை கணீரெனப்
பேசும் அச்சபை பேசுத லற்றதே !
ஓசை யின்றி ஒதுங்கிப் பலர் உயிர்
ஆசை பற்றி மறைந்தனர் ஆங்கனே !

உலகு வாழ உயரறம் வாழவே,
நலியு டலினை நல்க நடுங்கிடும்
அலிக ளுக்கும் அருஞ்செய லாகுமோ ?
பலி கொடுப்பன் பகவதிக் கென்னையே !

என்னின் வீரனிங் கெய்தி யுமக்கினி
மன்னு மாண்மை வழங்குக வென்றுதன்
பொன்னு டல்கிழிக் கப்புகுந் தான்குரு..
முன்னின் றோர் தயலால் முறை செய்குவான்...

"ஏழை யைப்பலி ஏற்றருள்" என்றதும்,
வாழி யென்ன மலர்ந்த முகத்துடன்,
ஆழ நோக்கி அவனைக் குருவரன்,
கோழைக் கூட்டங் குனியக்கொண் டேகினன்.

குருதி கக்குங் கொடுநகை வாளுடன்
இரு நொடியில் எழுந்தினும் "யாரென்றே
குரு வினவிடக் கொள்கென் றெருருவனும்,
தருமன் என்ற தமிழனு நின்றனர் !

அடுத் திருவரும் ஆங்குற, மாபலி
கொடுத்து சக்தி குளிர்ந்தனள் யாமினி
எடுத்த காரியம் எய்திடும் வெற்றி;நீர்
அடுத்த நாளிங் கடைகென் றனுப்பினன் !

பஞ்சப்யாரா

ஐவரும் வெட்டுண் டாரென் றனைவரு நம்பிப் பின்னுள்
எய்திய போது, கண்ட தென்னென வதிச யித்தார் !
கொய்திலன் உயிரை ; வீரக் குருவரன் அவரைக் காட்டித்
"துய்யமெய் யன்பர் ஐவர் சோதனை வென்று" ரென்றான் !

பிறப்பினு லில்லை, செல்வம் பெற்றதா லில்லை ; பட்டச்
சிறப்பினு லில்லை ; கல்வித் தேர்ச்சியா லில்லை ; அச்சந்
துறப்பதால், உண்மை காக்கத் துணிவதாற் சுயந லத்தை
மறப்பதால் மனிதர் தெய்வ மாண்புறு வீர ராவார் !

குருமணி கொலுவி ருந்தே குளிர்ந்தபா னகநி ரம்பும்
இரும்புப்பாத் திரத்தை வாளால் இனிதுறக் கலக்கிச் சக்தி
தருமமு தென்று முன்னே சார்ந்த நல்லைவ ருக்கும்,
பெருந்திர ளான சீடர் குழுவிற்கும் பெட்பி னீந்தான் !

குரு

"சிலராம் ஐவர், முன்னே சேர்ந்திடக் கால்ஸா சங்கங்
கோலினேம் ; அகாலி வீரக் கூட்டத்தார் நீவி ரெல்லாம் !
காலனை அஞ்சோம், வீரக் கனல்வளர் சக்தி பெற்றேம்.
ஞாலத்தில் அறம் வளர்க்க நாடினேம்" என்று சொன்னன்.

கச்சத்தை இறுகக் கட்டிக் குடுமியிற் கங்கம் வைத்தார்.
இச்சகங் காக்க வேண்டி இரும்புக் கடாகம் பூண்டார்,
அச்சமற் றுடைவா ளேந்தி அருச்சுனர் தொகுத்த *நூலை
நிச்சலும் ஓதி ஸத்ஸ்ரீ அகாலென நினைத்த வீரர்.

மெலியரை வீர ராக்கி, வீரரைத் தருமந் தாங்க
வலியவ ராக்கிச் சிட்டுக் குருவியை வல்லூ றுக்கி,
கிலிகொளுஞ் சனத்தைப் போர்செய் கேசரி யாக்கி யன்பு
குலவிய சீட ருக்குக் குருமணி உபதே சித்தான். 240

குருமணி

பூவுமாய்ப் புலன்களாய்ப் புலன்கடந்த சக்தியாய்,
யாவுமாய் அறிவுமாய் எனைத்து யிர்க்கும் ஆவியாய்,
கோவுமாய்க் குருக்களாய்க் குணங்குறி யிலாததாய்,
மேவியெம்மை யாளுகின்ற மெய்ப்பொருளைப் போற்றுவோம்!

ஏங்குகின்ற காலமேகி ஏறுபோல் உலாவுவோம்
தூங்குகின்ற பேர்களைத் துணிவுதந் தெழுப்புவோம் !
ஓங்குவோம் அகாலிவீரர் ஒன்றிநின்று முன்சென்றே
தாங்குவோந் தருமத்தைத் தணலுகின்ற சக்தியால் !

அங்கமெல்லாம் ஆண்மையாண்மை ஆண்மையென்று பேசவே
சிங்கவீர தீரர்கள் சிலைப்புயத்தைக் கொட்டுமின்
பொங்குமார்வந் தூண்டவே புயலிடியைப் போலவே
எங்குமே பகைவரை எதிர்த்துப்போர் புரிமினே !

உண்மையான உள்ளமெல்லாம் ஒன்றுசேர வாருங்கள் !
திண்மையான தோள்களின் தினவுதீரப் போர்செய்வோம் !
வண்மைகொண்ட செல்வர்கள் வழங்குமின் பணத்திரள் !
நன்மைகொண்ட நம்மறந் தழைக்க விந்த நாட்டிலே !

சீடர்

தன்னலம் பொறாமைவஞ்சத் தானவக் குணங்கள்செய்
இன்னலாம் இடர்களை எடுத்து வீசி முன்செல்வோம் !
சொன்ன சொல்லுஞ் செய்கையுந் துலங்கவே துணிந்தநாம்
பொன்னெளிர் புதுயுகம் பொலியத் தீமை போக்குவோம் ! 280

* கிரந்த சாகெபு, சுகமணி

அறத்தினைப் பகைப்பவர் அனைவரும் பகைவரே
அறத்தினை வளர்ப்பவர் அனைவரும் இனியரே !
மறத்திமிர் மடிந்திட மறச்சமர் புரிகுவோம் !
அறத்தொளி விளங்கிடநம் ஆருயிர் வழங்குவோம் !

தைரியம் பிறந்த தெங்கள் சாபமுந் தொலைந்ததே !
வைரியான தொத்தடிமை வாடி யோடி வீழவே
சௌரியஞ் செறிந்ததோள் சுதந்தரத்தைத் தாங்குமே !
பைரவி பவானிசண்டி பக்தருக்கு வெற்றியே !

போர் புரிதல்

மடலரி வீரர்கள் வாளை யேந்தியே,
படையணி சேர்ந்தனர் பயந் தவிர்ந்தனர்.
திடமுள கோட்டையிற் செறிந்து போர்வினை
தொடர்ந்தனர் துருக்கரும் போர் தொடுக்கவே.

திருவுறு கோவிந்த சிங்கன் என்றதும்,
வெருவுறும் அலிகளும் வீறு கொண்டனர்.
குருமணி யென்றதுங் குதித் தெழுந்தனர் ;
பொருபல மடைந்தனர் புதிய ராயினர்.

குண்டருங் கோளருங் குண்டு ணிகளும்,
அண்டிய ஒற்றரும் அழிபொ ருமையால்,
உண்டிரண் டாற்றிடும் உலுத்தரும், பகை
கொண்டவர் குழுவுடன் குலைந்து போயினர் !

நரியெனு நாகனு *நாள நாடனும்
பொரிசினங் கொண்டெதிர்ப் போர் புரிந்தனர் ;
திரையெழு நுரையெனத் தெய்வ வீரனின்
பரசின்முன் அவர்பகை உடைந்து பட்டதே !

ஆற்றலைக் கண்டபின் அரசர் †சிற்சிலர்
போற்றினர் குருவினைப் போர்க்க ளத்திலே.
வேற்றொரு சிவாஜியின் வேகம் இஃதென
‡நாற்றிசை வேந்தனு நடுங்கி னுரோ

* இந்து மன்னன் நாகன், நாளகடத்து மன்னன் ஹரிச்சந்திரன் முதலியோர் எதிரியுடன் சேர்ந்து குருவை எதிர்த்தனர். குருவின் பரசு அவர்களை அழித்தது.

† கஹலூர் மன்னன் பீமசிங்கன் போன்றோர் குரு சேனைக்கு உதவினர்.

‡ தில்லி சுல்தான் நடுங்கி லாகூர் ஸர்ஹிந்தில் தங்கும் சுபே தார்களை ஏவிப் போர் புரிந்தான்.

ஆனந்தக் கோட்டையை ஆழி போலவே
தானேகள் வளைத்தன ; தாக்கி யுட்புக
யானைகள் முனைந்தன ; எதிர்அ காலியர்
சேனையும் பகைவரைச் சீறிக் கொல்லவே !

அடுபகை யெரிமலை அனலைப் போலவே
சுடுசரந் தொடுக்கினுந் துணிந்த சீடர்கள்
விடுதலை வேகத்தால் வெற்றி பெற்றனர் ;
கடுகொரு சிறிதெனிற் காரம் போகுமோ ?

அலையலை யாய்ப்புயல் அடித்து மோதினும்,
குலைவறு குன்றெனக் குருவின் வீரர்கள்
மலைவற நின்றனர் ; மயங்க வெம்பகை
சிலைக்கொரு சிற்றுளி செறிந்த தென்னவே !

முரண்செயும் வஞ்சரை முண்டித் தோட்டியே
அரண்செயும் அன்பரின் ஆண்மை யூக்கியே,
மரணத்தைப் பொழிந்திடு மன்னன் சேனையைத்
திரணமென் றெதிர்த்தனன் சிங்க தீரனே !

அருகின படைகளும் ஆயு தங்களும் ;
அருகின உணவுகள் ; ஆட்கள் ஓடினர்....
அருகிலா வேசத்தோ டங்கை வாளுடன்
ஒருவனே பகைவரை ஒறுத்து நின்றனன் !

மக்களை யிழந்தனன் மனையி ழந்தனன்.
பக்கநின் றுதவிய படையி ழந்தனன் ;
துக்கங்கள் எத்தனை சூழ்ந்த போதிலும்,
பக்குவ மிழக்கிலன் பழுத்த ஞானியே.

எஞ்சிய மனைவியை இரண்டு மக்களை
அஞ்சலென் றோரிடம் அனுப்பிக் காத்தனன்
வஞ்சக ஒற்றனும் வந்தச் சேய்களை
வெஞ்சினப் பகையிடம் விற்றுச் சென்றனன் !

வீரனின் குருதியில் விளைந்த சேய்களைக்
கூரிய வாளினைக் கொடியர் காட்டியே,
ஆருயிர் வேண்டிடின் அல்கு ரான்மதம்
சேருவீர் உடனெனத் தீயி னேக்கினர்.

செம்மன ஜொரபர்பத் தேக சிங்கரும்,
"உம்மதந் தழுவியிங் குயிர்க்க வேண்டிலோம்,
எம்மத ஒழுக்கத்தில் இறக்க வேண்டினேம்,
தம்மத வாழ்க்கையே தரும" மென்றனர் !

வெங்கனல் விழிகளை வெருள நோக்கினர் ;
"உங்களை உடலுடன் உயிரை வாங்குவோம்
இங்கெனச் செங்கலே எடுத்த டுக்கியே,
சிங்கனின் சேய்களைச் சமாது செய்தனர் !

பிஞ்சிளம் பாலரும் பெரிய வீரர்போல்,
அஞ்சிலர் கெஞ்சிலர் அகால ஓமெனும்
விஞ்சையை ஓதியே விண்ண டைந்தனர் !
வஞ்சகர் வெட்கினர் வாய்மை வாழ்ந்ததால் !

சிரிய புதல்வர்கள் செய்தி யாகமும்
வீரியத் துணிவுடன் விண்ண டைந்ததும்,
போரிடைக் கேட்டதுந் தந்தை பொங்கினன்
கோரிய வெற்றியுங் குலவிற் றென்னவே !

தனயரை யிழந்தான் வீரத் தளங்களை யிழந்தா னேனும்,
மனவலி யிழக்கா தின்னும் வன்சமர் கொடுக்கும் விந்தை
தனையதி சயத்து மாற்றுன் தந்திரத் தூத னுப்பி
நினையுய ரிடத்தில் வைப்போம்.நின்மதம் விடுதி யென்றான்.

வாயுறச் சிரித்து வீரன், வன்பகைக் கடிமை செய்து,
நாயென வாழும் பேதை நானகன் மரபில் இல்லை..
சீயம்போல் போர்பு ரிந்து செருநரைச் செற்று வாழுந்
தேயமெந் தேய மந்தத் தேயர்கோன் யானென் றனே !

பாரெலாம் பரிசெனப் பகைவ ரீயினும்
பேர்புகழ் பட்டங்கள் பெருக நல்கினும்
காரியங் கண்ணெனக் கருதிப் போர்செயும்
வீரர்தங் கொள்கையை விடுப்ப தாகுமோ ?

மாண்டனர் முதலிரு மைந்தர் ; மற்றவர்
வேண்டிலர் போர்வினை வேற்ற வர்களும்
தீண்டினர் கோட்டையைத் தீரச் சிங்கத்தைக்
கூண்டினிற் காணிலர் கொதிப்புற் றேகினர் !

எத்தகை இடரையும் எள்ளி முன்செலும்,
உத்தம வீரனும் உருக்க ரந்தினும்
சத்திய வீரரைத் தானை சேர்த்ததும்,
மொத்தினன் பகைவரை மூண்ட போரிலே !

சளைத்திலன் ; பூதிந் தாவிற் சத்குரு தானை சேர்த்து
வளைத்தனன் பகையை; முத்தி சரஸிலே வாட்டி, வீரர்
களிப்புறத் தம்தமாரிற் கடுஞ்சமர் புரிந்து வென்றான் ;
களைப்புறு முகலோன் மீண்டுங் கனிமொழி விடுத்த ழைத்தான்!

## குரு

"செல்வரைக் கொன்றீர் ; எங்கள் சித்தரைக் கொன்றீர்; ஆன்ற
நல்லறம் பற்றி வாழு நானகச் சீட ருக்குத்
தொல்லைகள் செய்தீர் ; அந்தத் துயரங்கள் அனைத்தி னுக்கும்
எல்லையைக் காண்ப தல்லால் இணங்குதல் வீர மாமோ ?

இடமகல் அரசைத் தோற்றும், இல்லொளிர் மரபைத் தோற்றும்,
படைவலி முழுதுந் தோற்றும், பாரினு தரவைத் தோற்றும்,
கடமையைத் தோலேன் ; இந்தக் கத்தியை உறையிற் போடேன்;
உடலினில் உயிர்க்கு மட்டும் உள்ளுணர் வீரம் போமோ ?

வருவது மில்லை யும்பால் ; வந்துநான் உரிமை தன்னைப்
பெறுவது மில்லை ; செஞ்சொற் பிறழ்வது மில்லை ; நீரெந்
தருமமு மதிப்ப தில்லை ; சமயமாற் றமுமிங் கில்லை ;
கருமமே கருத்தென் றின்னும் கத்தியைப் பிடித்தான் வீரன்!

மாண்டனன் அரங்க சீபு மனமுடைந் தடுக ளத்தில் ;
ஆண்டனன் பகதூர் ஷாபின் ; அவன்குரு மணியைப் போற்றி,
வேண்டிய நண்பனுகி வெறுப்பினை யொழித்தான் ; ஆங்கே
பூண்டது வீர வாகை புண்ணியக் கடமை யம்மா !

பொருசினந் தணிந்த யோகி, புதல்வர்க்குத் தந்தை போலே,
குருமணித் தவிசி ருந்து குலவிய சீட ருக்குத்
தருமமுந் தவமுந் தூய தியாகமும் சக்தி யோங்குங்
கருமமுஞ் சொல்லித் தெய்வக் கவிகளுந் தொடுத்தான் மாதோ

அளவறும் அன்பிற் போற்றும் அன்னியச் சிறுவர் ஒர்நாள்
வளர்கடா மார்பிற் பாய்ந்த கதையினை வாளாற் காட்ட,
உளங்கொதி சீட ருக்கு நன்மொழி யுரைத்து, நெஞ்சிற்
களங்கமில் குருவும் ஈசன் கழலிணை யடைந்தான் மாதோ !

## இறுதி மொழி

"அன்னிய ராட்சி வீழும்; அகாலியர் பெருமை யோங்கும்.
என்னவர் ஐவர் கூடி இறைவனைத் துதிக்கு மாங்கே
மின்னென மறைந்தி ருப்பேன் விழுமிய இரந்த மாசான்
என்னநீர் மதித்துப் போற்றி இனிதுற வாழு வீரே !"

"சண்டி ஓம் சக்தி" என்றே சடலத்தை யுதறிச் சென்ற
பண்டித வீர தீர பராக்ரம குருவின் வாக்கைக்
கொண்டுயர் சீடர் கூட்டம் குவலயம் வியக்குஞ் செய்ய
தொண்டுகள் செய்து வெற்றி துலங்கிய தெந்த நாளும் !

சத்தியன்

சுத்தநீ செய்வ தாகுஞ் சுதந்தரக் கடமை தன்னில்
இத்தகைக் குருவின் வீர உணர்ச்சியே இலகக் காண்பாய் ;
உத்தம வீரர் கூட்டம் ஒற்றுமை யாகக் கூடிச்
சித்தியைக் காத்து நின்றுற் செயமுனக் கெய்வ தாமே !

சுத்தன்

உத்தமத் தந்தையேயுன் னுரைநலம் உள்ளங் கொண்டேன்,
சித்தியின் வீர ரெல்லாம் கோவிந்த சிங்க ராகிப்
பத்தியும் பணியுங் காத்துப் பகையற உரிமை நாட்டி
ஒத்தினி தோங்குவாரென் றேநிறுன் கோதி லானே !

தந்தையு மகனு மாங்கே பிரிந்திடத் தயங்கும் போது,
தொந்தொமென் றமர்க்க ளத்திற் சுடுமுர சறைந்த தம்மா,
முந்தொரு தூதன் வந்து மொழிந்ததைக் கேட்டு மன்னன்
"எந்தையே கடமை காக்கச்செல்லுவோம் இனியென் றுனே!420

# 28. படை யெழுந்த படலம்

கன்னில மடந்தை வாழ்த்தக் கடவுண்மா முனிவர் வாழ்த்தப்
பண்ணுடன் முரசு வாழ்த்தப் பாவலர் பலரும் வாழ்த்தப்
புண்ணிய மைந்தன் வாழ்த்தப் புறப்பட்டான் சத்ய ராஜன்
எண்ணிய கருமஞ் செய்யப் பிறகதை இயம்பு வாமே !

ஒன்னலர் முரசம் இங்கே ஒலிப்பதால், வெள்ளம் போலத்
தன்னல மாயன் சேனை தணல்பெறச் சித்திக் கோட்டை
முன்னரே வந்து சுற்றி முற்றுகை யிடுவ தாலே,
பின்னரே கலியுங் காணப் பெறுவதால், வருவோ மிங்கே !

சித்திமான் சேனைகளுக்கு உரைத்தல்

கத்தி வீசுங் கடற்புய லென்னவே
சித்தி சேனை யெழுந்ததன் முன்னரே,
புத்திமான் பலவான் புக ழோங்கிய
சித்திமானிவை செப்பலுற் றனரோ !—

போரெ ழுந்தது ! பொம்மிப் புடைத்தெழும்
கார்வ ரைப்புயங் காட்டி வருகின்ற
வீரர்காள் இன்று வெல்க கதிர்க்கொடி ;—
கோர ராக்ஷஸர் கொட்ட மடங்கவே !

பாரு யிர்கள் பயமற வாழவே
ஆருயிர்ப் பணி யாற்றிடுந் தீரர்காள் !
வேரு டன்கலி வீழ்ந்து மடியவே,
போரு டன்று புகழினை நாட்டுவீர் !

இந்த மானிட யாக்கை யெவர்க்குமே
சொந்த மில்லை. சுயநலம் விட்டதை
அந்தகன் வருமுன் அறஞ் செய்யவே
தந்தவர் புகழே தழைத் தோங்குமே !

புதுமை யாகப் பொலியும் இளமையும்,
முதுமை யாகி முகந்திரை கண்டிடும் ;
பொது நலஞ்செயும் புண்ணிய மன்றியே
எதுநம் வாழ்விற் கினிய பயனரோ ?

கொடிய மாயனும் கொல்லுங் கலியனும்
படை யெடுத்துநம் பக்கம் வருகின்றார்.
அடிமை மோகம் அலறி யொழிந்திடக்
கடமை நாட்டுங் களம்பெற வாருங்கள் !

ஒண்ட வந்த உலுத்தப் பிசாசுகள்,
உண்டு தித்துநம் ஊரை யழிப்பதோ !
அண்ட வந்தோன் அகத்தைப் பறிப்பதோ ?
கண்டு நாமிதைக் கைகட்டி நிற்பமோ ?

ஒருவ ருக்கொரு வர்உள மாறிடத்
திருகு தாளஞ்செய் திநய வஞ்சரை,
கருவ ழித்திடுங் காம வரக்கரைப்
பொருது வீழ்த்திடல் புண்ணிய மாகுமே ! 40

புதர் நரியெனப் பாயும் புலியெனச்
சதிசெய் தானவ சேனரைச் சாடிநாம்,
பிதிருலகிற் கனுப்பிய பின்னரே
புதிய வாழ்வு பொருந்துத லாகுமே !

கரித்த மாயங் கவர்ந்துநந் தேசத்தைப்
பிரித்துச் சண்டை பெருக்கி நலத்தினை
உரித்துண் டின்ன லுறுத்துமுன் வீழ்த்தியே
சரித்தி ரத்திற் சுகப்புக ழெய்துவோம் !

ஒல்லெனப் படையணி உள்ளெ ழுந்துடன்
கொல்பகை கொல்லுமுன் கொன்று, போரினை
வெல்வடி வேல்கணை வீசு வாளுறப்
புல்லரைத் தகர்த்திடப் புடைபெ யர்ந்ததே !

கலிப்படை யிடைமிகக் கவலை பற்றியே,
கிலிப்படைந் திடமிகக் கிளர்ச்சி கொண்டுலாம்
புலிப்படை அரிப்படை போலச் சித்தியின்
சலிப்படை யாச்சமர் வீரர் சென்றனர் !

சீரிய திறமை மிக்க சித்திமான் உரைத்த வண்ணம்
போரறி விசயன் எல்லாப் புறங்களும் பாதுகாக்க,
வீரரை யணிவகுத்து, விண்ணினுக் குரைப்ப போன்று
சூரியக் கொடியு யர்த்தித் *தும்பையும் புனைந்து நின்றான்.

நீட்டிய சேனை யெல்லா நெடுந்தொலை நோக்கி யாலே
நாட்டுடை யரச னுக்கு நலமுற விசயன் சுற்றிக்
காட்டிமுக் கோண மாகக் கணக்குற வகுத்த தாலே
வாட்டமில் லாது மாற்றார் வலியினை யொடுக்கு மென்றான்.

எறிவெடி மருந்து தாங்கி எமனென வுலவும் வண்டி,
பொறிகளைச் சுமந்து பேய்போற் போந்திடும் விசையின் வண்டி,
முறிநெரிக் குதவும் வண்டி, உணவுடை வழங்கும் வண்டி,
அறைமுர சேந்தும் வண்டி யணிகளை அரசன் கண்டான்.

சாரணர் ஒற்றர் முன்னே தவழ்ந்திடும் வாக னங்கள்,
போரினில் விழ்ந்தார் கொண்டு போகநல் வாகனங்கள்,
கார்சிறைக் கோட்டத் திற்குக் கைதிகள் செல்லும் வண்டி
நீர்சுமந் துலவும் வண்டி நெடுகிலுஞ் செல்லக் கண்டான்.

சுத்தன்

†கூட்டமும், அணி படை தானையும்,
கொற்றமாம் செயமுடன் விசயமும்,
காட்டரண் மதிலரண் கதுமெனக்
கண்கருத் தயர்வறக் கதுவுமின் !
வேட்டுகள் படபடத் திடுகவே !
விசயனார் ஆணையிற் படிமினோ !
ஓட்டுதாக் கெதிர்வளை யொளிகெனு
உரைகுறிப் புடனுடன் பணிமினோ !

ஊக்குறு, வீழ்ந்தவர்க் குறுதுணை
உதவிடப் பெண்படை வருகவே !
காக்குமெய்க் காவலன் கோட்டையுட்
காதகர் கும்பலைக் கடிமினே !

---

* போரறி பூக்கள்: *வெட்சி—பசுக்கவர்தல், கரந்தை பசு மீட்டல்—காஞ்சி போரெடுத்தல், நாடுகாத்தல்—நொச்சி, அரண் காத்தல்—உழிஞை அரண் வளைத்தல்—தும்பை போர்புரிதல்—வாகை—வெற்றி முழக்கல்.*

† 10. *வீரர் ஒரு கூட்டம்* 10. *கூ ஒரு படை;* 10. *படை, ஒரு தானை;* 10. *தா—ஒரு செயம்;* 10. *செ—ஒரு விசயம்;* 10,00000 *வீரர்.*

தாக்கினுர் தம்மையே தாக்குமின்,
தழுவினுர் தம்மையா தரிமினே !
வாக்கினுல் மனதினுற் செயலினுல்,
வாய்மையுந் தருமமும் வளர்மினே !

பாலரைப் பெண்டிரைப் பசுவினைப்
பண்புடை முனிவரை, கவிஞரை
சிலரைக் கல்வியின் செல்வரை,
சேமமாய்க் காமினே சேனையீர் !

சுத்தனுர் இவ்வகை சொன்னதும்,
சுறுசுறுப் பாகிய படைகளும்,
சத்தமிட் டுவகையைச் சாற்றியே
சக்திஓம் சுத்தஓம் என்றவே.

போர்வீரர் முழக்கம்

தூண்டு வீர சுதந்த ரச்சுடர்
துஞ்சி டாதினி நெஞ்சிலே !
ஈண்டு வெம்பகை திண்டு முன்னதை
ஈட ழித்திட ஓடுவோம் !

பொன்றி டாதுயிர் நின்றி டாதுடல்,
புகழு றுஞ்சமர் புரிகுவோம் !
என்றும் வெற்றி எடுத்த காரியம்
எங்கும் வெற்றி துலங்குவோம் !

நீண்ட மாமலை போ லெழுந்து
நிருதர் சேனையை நெட்டுவோம் !
பாண்டவர்க் கருள் ஆண்டவன் எமைப்
பாது காத்திடத் திதிலோம் !

சாவு மஞ்சிச் சலாம் வகித்திடச்
சாடுவோம் எதி ராடுவோம் !
தாவித் தாவிச் சமர் புரிந்திடுஞ்
சக்தி வீரர் சலிப்பரோ !

ஒற்றுமையுற உண்மை காத்திடும்
உத்தமப் படை வாட்கணம்
வெற்றி பெற்று விளங்கி டத்துணை
வீர சக்தி பவானியே !

வீரரின் பேரிகை விம்மு மெல்லையில்
வாரணி முரசுடன் வஞ்சி பூண்டுயர்
காரணிக் கொடியினைக் காட்டி மாயனும்
போரெனக் கதறினுன் ; போரு மூண்டதே !

# 29. மாயன் வதைப் படலம்

[மாயன் சித்திக்கோட்டையை முற்றுகையிடுகிறான். விஜயன் சேனை அவனைத் துரத்தி யழிக்கிறது.]

"வஞ்சரை நீறு செய்ய வாழிகள் பொழிமி" னென்று
செஞ்சின விசயன் கூறச் சித்தியின் வீர ராங்கே,
"தஞ்சம் ஓம் சக்தி" யென்றே தண்டறி கொடி, யசைத்து,
வெஞ்சின மாயன் சேனை வெருவிட முன்சென் றாரே !

துடிதடாரிகள் இடியிடிக்கவே,
தடதடவெனச் சகடை யேகவே,
படபடவெனப் புரவி பாயவே,
கொடிகுறிக்கவே படை நடந்ததே !

மடமடவென வடவை போலே
கொடிய குண்டனல் கொட்டி வீசவே !
குடல்கலங்கிடக் கடிய ராக்ஷஸர்
பொடிபடத்திசை படைகள் மோதின !

தடையளந்துறுஞ் சமரளந்துமேல்
நடையளந்துபோர்க் களநடுங்கவே,
கடலு டன்கடல் கலந்த தென்னவே
இடை நெருங்கின படையிரண்டுமே !

மாயனோடுகலி மல்லர்சேனையிறு
மாந்திரத்தவெறி யேறியே,
பேயெனக்கதறி நோயெனப்பரவிப்
பெரிய கோட்டைமதில் அணுகவே..

காய்சினப்பொறிகள் காட்டி வேட்டதிரக்
கனல னோடுசெறி கலகனும்,
தீயுமிழ்ந்துவரச் சித்திமான் படைகள்
செருநரைப் புழுதி செய்தனர் !

குண்டுபட்டவுயிர் துண்டுபட்டுவிழக்
குருதி மாரியெனக் கொட்டவே !
கண்டதுண்டமுறக் காயவாழ்க்கையினைக்
கழுகு நாய் நரிகள் கௌவுமே !

இரவிமுன் பனியெனத்,
தரும சேனை பொருதவே,
அரனெரித்த புரமேன
நிருதர் சேனை பட்டதே.

சுற்றினர் சுற்றிவளைத்தார்
பற்றினர்ப் பற்றி மிதித்தார்
எற்றின ரெற்றி யடித்தார்
பற்றலர் சட்டினி யானார்.

சாய்ந்து சாய்ந் தரக்கருந்
தேய்ந்து தேய்ந்து வீழவே,
பாய்ந்து பாய்ந்து வீரருங்
காய்ந்து காய்ந்து மோதினார்

சடசடென்று சாடியே,
சுடுசரங்கள் சுட்டன,
படுகொலைப் பகைவரின்
குடல்குருதி கக்கவே !

தலைவன் ஆணை தாங்கியே
மலையைப் போன்ற மல்லர்கள்,
அலையலையாய் மோதினார்—
நிலைகுலைய நிருதரே !

சகடுலாந் தணற்பொறி,
முகடு கீறி முந்திமண்
அகடுகீறி அண்டமுஞ்
செவிடுறத் தெறித்ததே !

சங்கையற்ற தானவர்
அங்கபங்க மாகியே,
வெங்குருதி வெள்ளத்தில்
கும்பலாய்க் குவிந்தனர்.

இழிந்திகற் களத்திலே
வழிந்த ஊனைவாரியே
பிழிந்து பேயிருட்கணம்
குழம்பையுண்டு கூவின.

வில்லும் வாளும் வேல்களும்,
பல்படைக் கலங்களும்,
கொல்லெனக் கொதித்தெழுந்து
ஒல்லென ஒடிந்தவே !

தேரிழந்து, விறலு மிழந்து,
கார்மதக்கரி மாக்க ளிழந்து,
ஆர்முரசும் அடங்கிய மாயன்
போரிழந்து பொலிவு மிழந்தான்.

மடையுடைந் ததுவென மாப்பெரும்
படையுடன் மாயனுர் பலமெலாம்
உடைபடச் சித்தியின் உத்தமர்,
இடையரு தெதிரியைப் பொருதினுர்.

வெங்கனல் கக்கிடும் வெடிகளும்,
பொங்கியண் டங்களும் பொடிபட
மங்கிவாய் மூடின ; வாய்மைமுன்
பங்கமுற் றிடுபொயின் பான்மைபோல்.

பகலுடன் இரவுபோலப் பகலிர வாகப் போர்செய்
தகைபெறு விசயன் முன்னே தணல்பெற நின்ற மாயன்
அகமழிந் தாளழிந்து, படைக்கல மழிந்து, நெஞ்சந்
திகிலுற நிற்கும் போது, சிரமழிந் திறந்தா னம்மா !

நச்சராப் போன்ற வெய்ய நாத்திகத் திமிர் பிடித்த
பச்சையூன் புசிக்கும் தீய பகாசுர மாய னுரை
அச்சமில் அறவோர், சித்தி அளித்தநல் வீரர் வென்ருர்.
இச்செயல் இனிய தென்றே இசைத்தனர் புலவ ரெல்லாம்.

மதிலரண் முன்னே மற்ருேர் தசையரண், அதனைச் சுற்றி
உதிரவா ருேடிற் றம்மா ! உருத்திரக் காளி பொங்க !
துதிபெறுஞ் சித்தி வீரர் சுதந்தர முரச டித்தார்.
கதமுறு கலிஞ னின்னுங் கச்சையைக் கட்டினுனே !

# 30. பிரதாபசிங்கப் படலம்

வென்றியின் மகிழ்ந்த வீரர் வெருவிட ஒற்றர் வந்து,
"கன்றிய கனலு மிழ்ந்து கலிசினங் கக்கி நம்மைக்
கொன்றுயி ருண்ண வஞ்சர் கூட்டத்தைத் தூண்டு கின்ருன்"
என்றலும் சிலபேர் நெஞ்சில் இரியல்கொண் டேங்கி னுரே !

அறந்தவிர் கலிய னுங்கே அடுகளத் தயர்ந்து, மாயன்
இறந்ததன் செய்தி தன்னை இடிவிழுந் ததுபோற் கேட்டு,
"மறந்திலேன் இதனைச் சித்தி மதிலினைத் தகர்த்துட் சென்று,
திறந்தனைக் காட்டி,வென்ருேர்சிரந்தனைக்கொய்வேன்" என்ருன்.

நாகமும் புலியுங் கோடி நரகநாய்க் கூட்டம் போலும்,
வேகவெங் கனலைக் கக்கும் வெவ்வெரி மலையைப் போலும்,
பூகம்பப் புயலைப் போலும், போரிடி முழக்கஞ் செய்து,
மோகங்கொள் வெறியர் தம்மை முடுக்கினுன் செருக்கி னுனே !

கொள்ளையுங் கொலையுந் தீயுங் கொடுமையும் கொண்டு தீய
கள்ளரின் படைகள் வெய்ய காலனின் படைகள் போலே,
துள்ளிமுன் பிணக்கா டெல்லாந் துருவிநள் ளிரவில், ஊரை
அள்ளிட விரையு மாற்றம் அறிந்தனன் சுத்த னாங்கே!...

நாயகர் புண்ணீர் சோர, நாரியர் கண்ணீர் சோரத்
தாய்மனப் பாசம் விம்மத் தந்தையர் தளர, வாடிச்
சேயினங் கதறச் செய்யுஞ் செஞ்சினப் போர்க் களத்தில்
ஓய்வற வுழன்ற வீரர் உலைந்ததை நோக்கி னானே !

சோர்வுறும் வீர ரோர்பால், சூழ்ச்சிசெய் வஞ்சர் ஓர்பால்,
நேர்மையில் அரசர் ஆங்கே நிகழ்த்திடுஞ் சதிகள் ஓர்பால்,
போர்வினை உறுதி யாகப் புரிதரப் போவ தோர்பால்
பார்நலம் பயப்ப தோர்பாற் பழுதறச் சிந்தித் தானே !

சோவுறும் இடுக்க ணெல்லாந் துரும்பெனத் துடைத்தெ றிந்து,
சாவையும் எதிர்த்து நின்று தருமப்போர் புரிந்த வீரன்,
பாவலர் புகழும் ராணா சிங்கனைப் பாடிச் சுத்தன்,
ஏவினான் படைக ளெல்லாம் இக்கதை கேட்க வென்றே !

மாசறு மன்ன னாணை மதித்தநல் வீரர் கூட்டம்,
தேசுறு பிரதாப சிங்கன் சீரிய கதை படித்துத்
தேசத்திற் குயிரை நல்கத் திறங்கொண்ட வகையை யிங்கே
பேசுவோம் பெரியார் காதை பேரின்ப மளிப்ப தாமே !

### பிரதாபசிங்கன் வரலாறு

சூரியன் வழி துலங்கிய தொல்லிசை மன்னர்,
ஆரியர் புகழ் அக்கினி குலத்தவர், அரிய
போரரித் திரள் போன்றவர் புரந்தமே வாரில்
சிரு யர்ந்தசித் தூரெனும் தேசுறு நகராம் !

மின்னு பொன்மணி மாடங்கள் மேவுமிந் நகரில்,
அன்னை சக்தி பவானியின் அருள்செறிந் தோங்கும்,
சென்னகை புரி வாளினாற் செருபகை வென்ற
மன்னு பப்பனின் மரபினர் மாண்புடன் ஆண்டார்.

கற்பி னோங்கிய பத்மினி, கண்ணனுக் காளாய்,
அற்புதத் திருப் பாடல்கள் அருளிய மீரா,
சொற்ப டிச்செயல் புரிந்திடு சூரராம் ராணா
பொற்பு றும்புகழ் சூட்டிய புண்ணிய மரபே !

போரினி லிறந்த போசன் புரந்தநன் னாட்டைத் தம்பி
வீரனும் உதய சிங்கன் விதிப்படி யாண்டு வந்தான்.
பாரினை யாளும் அக்பர் படைகளை யனுப்பி யன்னோன்
ஊரினைப் பிடித்துக் கொள்ள உலைவறு போர்கள் செய்தான்.

கடலிலைப் புயலினாழி கௌவிய கடுமை போலே,
திடம்பெறும் உதய சிங்கன் தில்லியின் படையைச் சாடி,
அடம்பெறுஞ் சமர்கொ டுத்தே அயர்ந்துயிர் துடிக்கும் போது,
தடம்பெறு மார்ப னான தனயனை நோக்கி னானே !

வீரமே பெற்ற வீரன் விஜயனைப் போன்ற வில்லன்,
போரதிர் முரசங் கேட்டுப் பொம்மிடுந் திண்பு யத்தான்,
சூரிய குலத்து தித்த சுடர்மணி பிரதாப சிங்கன்
சீரிய தந்தையே நின் செருவையான் செயிப்பே னென்றான் !

“மைந்தநீ என்வா ளேந்தி மரபுள தருமங் காத்தே
சொந்தநாட் டுரிமை பேணச் சுதந்தரச் சமர்செய்” யென்ற
தந்தைசொல் மந்தி ரத்தைத் தாங்கிய தனயன் வீரம்
கொந்தளித் திகலை நூறக் கொதித்தது கதித்த தம்மா !

உடலினை யுதறிச் சென்ற உத்தமத் தந்தைக் கான
கடன்முறை செய்த பின்பு, காளிசந் நிதியிற் கூடி,
திடமுள வீரர் வாழ்த்தித் திருமுடி சூட்டும் போது,
கடல்மடை திறந்த தென்னக் கருத்தினை யுரைத்தான் சிங்கன்;

பிரதாப சிங்கன்

ஏக லிங்க பவானி இறைவியின்
வேக நல்லருள் வெற்றி யளித்துநல்
வாகை யேந்திய வான்புகழ் போனபின்
மோக மன்றி முடிபுனைந் தென்னையே !

வீடி லாத வியன்குல வாழ்க்கையும்,
பிடி லாத பெருஞ்சொல் விளக்கமும்,
ஏடி லாஎழுத் தாணியு மென்னவே
நாடி லாமுடி நம்மை நகுவதே !

ஐயப வானி பராசக்தி யென்னவே
புயங்கள் விம்மிப் பொருகள னாடினர்
உயரிசை மன முட்கிய பின்கடுந்
துயர மின்றிச் சுதந்தர முள்ளதோ ?

பங்க மாகிப் படைக ளொடுங்கியே
நங்கு லம்பெறு நாட்டினைத் தோற்றபின்,
சிங்க வீரர் கவித்த செழுமுடி
தங்க மன்று ; தணல்முடி யல்லவோ ?

வீழ்ச்சி யுற்றநம் வீர மணிக்கொடி
தாழ்ச்சி யற்றுத் தலைநிமிர்ந் தோங்கிடச்
சூழ்ச்சி செய்து சுதந்தர மாகநம்
ஆட்சி நாட்டிடின் ஆளென லாகுமே !

வீர வாளுடன் வெங்கணை கொண்டநல்
ஆரி யர்களின் றச்சப் படுவரோ ?
போர்செய் வோம்புறங் காட்டி நடுங்கிடோம்,
வாருங்கள் வலி வோங்கிய மல்லர்காள் !

வீரர்

தேவி சக்தி திருவருட் சந்நிதி,
மேவி யின்று விரத முரைக்கின்றேம் !
ஆவி தன்னின் அறத்தை மதித்தனம்,
பூவி லுன்புகழ் பொங்குக சிங்கமே !

புண்ணு ழன்றும் பொறுமை யிழந்திலோம்.
மண்ணி ழந்தும் மனவலி குன்றிலோம்.
விண்ணி ழக்கினும் வீர மிழந்திலோம்.
அண்ண லேயுன தாருயிர்த் தோழர்யாம் !

உரத்த திண்புயம் உண்டுவில் லுண்டுவாள் ;
அறத்தைக் காத்திடும் ஆண்மையுண் டோர்துளி
இரத்தம் எம்முள் இருந்திடு மட்டிலும்,
வருத்த மின்றிப் பொருதுவம் வாய்மைக்கே !

ஆத லாலெம தாருயி ராணையாய்க்
கீதை யுள்ளமுங் கேண்மையுங் கொண்டிங்கே,
காத லோடுன் கருமத்திற் கேயெமை
ஈத லேகட னென்றுமுன் னின்றனம் !

பிரதாபசிங்கன்

நன்று நன்றிது, நாட்டினுக் கேயுயிர்
என்று றுதி யியம்பிய வீரர்காள்,
இன்று நாமோர் விரதம்கொண் டவ்வழி
நின்று வெற்றி நிலவிட வேண்டுமே.

தலைமுடி வளர்ப்போம், தரையிலே படுப்போம்,
சமர்செயத் தானைகள் சேர்ப்போம் ;
மலைமிசை வசிப்போம், வறுமையைப் பொறுப்போம் ;
மண்மகள் அளித்ததைப் புசிப்போம்.

சிலையினை வளைப்போம், பகைவரைச் செகுப்போம்,
தேசத்தை மறுபடி செயிப்போம்,
நிலைபெறும் தரும நீதியை வளர்ப்போம்,
நிச்சயம் பவானிமுன் னுரைத்தோம் !

இன்னரிந் நாட்டின் இழிநிலை போக்கி,
இகல்செயும் கொடுமையை நீக்கி,
மன்னுயிர் கொண்ட மயக்கத்தை மாற்றி,
மாதரின் கற்பினைக் காத்து,

மின்னுவாள் வீசி விடுதலை பெற்றே,
வீரர்நாம் வெற்றிகள் கூறி,
அன்னையின் பாலுக் காகிய நன்றி
ஆற்றிய மனிதர்க ளாவோம்!

வஞ்சரின் வஞ்ச வலைகளைக் கிழிப்போம்!
மாயையின் மயக்கினை ஒழிப்போம்
நஞ்சுவா ளேந்து நலிபகைக் கஞ்சோம்,
நமனெறி பாசத்திற் கஞ்சோம்!
துஞ்சினுந் தேசச் சுதந்தர மறவோம்
தோற்கினும் விடாதுபோர் தொடுப்போம்
நெஞ்சிலே வீர நெருப்பினை வளர்ப்போம்—
நிறைவருள் சக்திஓம் எனவே!

வில்லினை உயர்த்தினர் வீரர் மன்னனின்
சொல்லினைச் சுதந்தர தேவி சொல்லென்றார்;
இல்லினைத் துறந்தனர் எளிமை பூண்டனர்.
அல்லலை நகைத்தனர் ஆண்மை கொண்டனர்.

அரவிலிக் காட்டினில் அன்பர் சூழவே,
உரமலி பில்லரை ஒருங்கு சேர்த்துடன்
அறமலி சிங்கனும் அன்னி யர்களைப்
பொரவலி பெருக்கினன் பொறுமை யாகவே!

கணவனைப் பிரிவறுங் கற்பின் செல்வியாம்
*குணவதி ஐந்துநற் குழந்தை பின்வர
மணவிருந் தருந்திய மாளிகை யொரீஇ
இணங்கினள் காட்டிடை யிருந்து வாழவே!

தெறுமனப் பகைவரைச் சினக்கும் சிந்தையான்,
பொறுமையின் கொடுமையும், புவியி ழந்துறுஞ்
சிறுமையின் கொடுமையும், சிங்க நெஞ்சுடன்
வறுமையின் கொடுமையும் வலியத் தாங்கினான்.

தன்னரு முயற்சியிற் சலித்தி டாமலே,
சொன்மனஞ் செய்கையுந் தோய்ந்த சிங்கனின்,
கன்மமும் விரதமுங் கண்ட ஒன்னலர்
கன்மனங் கரைந்தது கனல ரக்கெனாஅ.

---

*பிரதாபசிங்கன் மனைவி குணவதி; அமரன், அக்ஷயன், சுந்தரன், சம்பாவதி, சுவர்ணகுமாரி ஆகிய ஐவர் மக்கள்.

ஆணவப் புலன்களை யடக்கித் தன்னைத்தான்
காணுறத் தவஞ்செயுங் கடிய யோகிபோல்,
மாணுறு சுதந்தர வரத்தை நாடியே
ஆணரி போன்றவன் அமர்செய் தானரோ !

காட்டக மளித்திடுங் கனிகள் காயிலை
வாட்டிய பசிக்கனல் வருத்த வுண்டனன்.
ஏட்டினி லெழுதொணு இடர் சுமந்தனன்,
நாட்டினில் விடுதலை நாட்ட வேண்டியே.

பட்டமும் பதவியும் பணமும் போகமும்,
இட்டிடப் பகைவரைக் கீழ்ப்ப டிந்தவர்
கட்டியங் கூறிடுங் கால மாந்தரை
வெட்டிரு துண்டென வெட்கப் பேசினுன் :

மானசிங் சபதம்

பெருந்தகை அக்பரின் பிரியம் பெற்றவன்,
அரும்படைத் தலைமையை ஆளும் மானசிங்,
வருந்திய வீரனை வசப்ப டுத்தவே
பொருந்தினன் ஓர்பகல் புன்சி ரிப்புடன்.

வந்தமான் சிங்கனை வரவு கூறியே,
அந்தமாய் விருந்துநன் றளித்துத் தானுடன்
குந்தியவ் விருந்தினைக் கொள மறுத்தனன்,
சொந்தநல் லறத்தினைத் துணிந்து பேணுவான்.

வினயத்தை யறிந்தமான் வெட்கிச் சிங்கனைத்
தனிவிருந் திடுதலின் சழக்கைக் கேட்டனன் !
புனிதநல் வீரனும் பொறுமை யாகவே
இனியவ கேளென இடித்துப் பேசினுன்.

பிரதாபசிங்கன்

தகைபெறும் என்குல சத்தி ரீயனே,
பகைவனைப் பணிந்தனை பணியும் ஏற்றனை,
முகலவர் முறுவலின் மோக முற்றனை,
பகலவன் மரபினைப் பாழ்ப டுத்தினை.

ஆருயிர் போலத்தம் அறத்தைப் பேணிய
வீரரின் விந்தினில் விளைந்த வீரனே,
நாரியை அன்னியன் கொள்ள நல்கினை,
ஆரியன் உன்னெடும் அருந்த லாகுமோ ?

சுயநலச் சோம்பலின் சுகத்தை நாடியே
இயலறந் துறந்தநீ இயற்றுஞ் செய்கையால்,
அயலவர் ஆளுனர், ஆண்மை யுள்ளவர்
புயலிலும் பனியிலும் பொறுமை காக்கின்றுர்.

### மானசிங்

சொந்த நாட்டுச் சுதந்தர நோன்பினுன்,
இந்த வண்ணம் இடித்துரை கூறவே,
வெந்து வெஞ்சினம் வீசி விளம்பினுன்,
வந்த மானசிங் வஞ்சப் பொருமையால்.

" சொந்த நாடு சுகம்பெற வேண்டியே
இந்து முஸ்லிம் இணைப்பினை வேண்டினேன் ;
உந்த னுக்கும் உரைத்திட வேயிவண்
வந்த னன்னை வன்சொல் வழங்கினை.

பொறுமை கொண்டிந்தப் புண்ணிய பூமியின்
சிறுமை நீக்கத் திகழுமுன் வீரத்தைப்
பெருமை யாகப் பெரிய விடத்திலும்,
அருமை யாக உரைத்தனன் ஐயனே !

தேவர் கோனுக்குந் தெள்ளறி வாளர்க்கும்
நாவ டங்கிய நல்லுரை வேண்டுமே.
மேவி நம்பு விருந்தினை ஏசினுய்,
கூவிக் கொண்டனை கொற்றவன் போரினை."

### சிங்கன்

உன்னை யில்லை ; உன் பெண்ணை மணந்திடும்
மன்னை யில்லை ; மனிதர் மதியையே
உன்னிக் காலத்தின் ஊழலைச் செப்பினேன்
அன்ன துண்மை ; அருங்கட னுகுமே.

### மானசிங்

நாளை யிங்கு நடந்திடும் போரிலே,
வாளி னுலெதிர் கூறுவல் வாவெனு,
மூளு வெஞ்சின முற்றிய மானசிங்
ஆளும் அக்பர்முன் அக்கணஞ் சென்றனன்.

துணிந்த வீரன், சுதந்தர சக்தியை
அணிந்த வீரன், அரசினுக் காபத்தாம் ;
பணிந் திவன்வரப் பாருமென் ரேுதினுன்,
வணங்கி மானசிங் வஞ்சனை தீரவே !

### போர்

செய்வினைப் பயன் சேர்வது போலவே,
மைவினைப் படை வந்து வளைக்கவே,
தொய்வினை யடை யாத சுதந்தரன்
வெய்ய போருக் கெழுந்தனன் வேகமாய் !

## பிரதாபசிங்கன் போர் புரிதல்

நீலவேணி மீதுதாவி நீள்படை நடத்தியே,
கால தண்ட முங்கலங்கக் கைகலந்த சிங்கனும்
ஓலமிட்டு வெம்பகைவர் ஓடஓட ஓடவே !
கோல மின்னல் போலவாளைக் கொல்லெனச் சுழற்றினுன் !

பகை நிறைந்த ஒன்னலர் படைக்கடல் குமுறியே
தொகை நிறைந்து தாக்கவே, தொடர்ந்து தாக்கிப் போரரி
தகைத்தனன் வளைத்தனன், சடைத்தனன் மிதித்தனன்
துகைத்தனன், வதைத்தனன் துணிந்தபோர் அணிந்தவன் !

பண்டி லூசி பாய்வபோற் பகழிகள் விடுத்தனன்,
முண்டி முண்டி முன்னிடைந்த மூர்க்கரை முடித்தனன்.
சண்டமாரு தம்பிடுங்கி வீசிடுந் தருக்கள் போல்,
எண்டி சையும் வீரரை எடுத்தெடுத்து வீசினுன்....

கண்டகண்ட திக்கெலாங் கரமலை தலைமலை,
கண்டகண்ட கண்டகர் கலங்கி ஓடும் வேளையில்
விண்டுமார் வெடித்துச் சேது வென்னும் வீர வாசியும்,
அண்டையில் விழுந்ததால், அருமை வீரன் ஓடினுன்.

## சிங்கன் தப்பிப் பிழைத்தல்

வெவ்விடங் கலந்தனர் விடாய்தணிக்கு நீரெலாம்,
உய்விடம் எனப்புகுந் துணவு கொள்ளு வேளையில்,
தெவ்வர் கூடிக் கொல்லெனச் செறிந்தனர் துரத்தினர்
அவ்விடரை வாயினுல் அறைத லென்று மாகுமோ ? 240

இல்லவள் உணவினை யிடும்பொழு திகலவர்,
கொல்லவந்து சூழுவார். கொடும்பசியைத் தாங்கியே,
பில்லரின் உதவியால் பெருந்தகைதன் வீட்டுடன்
அல்லலுற் றமைதி தேடி அங்குமிங்கு மோடுவான்—

களைத்த சிங்கத் தைமத கடங்கள் சூழு மாறுபோல்,
வளைத்தவெம் பகைவரை மறைந்து தப்பி யோடியே,
இளைத்த சிங்கன் ஓரிருட் கடத்திலே குதித்தனன்.
சளைத்தனர் பகைவரும் ; சமர்த்தனும் பிழைத்தனன்.

## துயரம்

சுற்றிலுங் கரிய காடு. துயர்களுக் கெல்லை யில்லை,
பற்றிய வடவைத் தீபோற் பசிக்குப்பச் சிலையடைத்து,
பற்றெலாம் சொந்த நாட்டின் பந்தனை நீங்கி யின்பம்
பெற்றிடு நினைப்பில் வைத்தான்,பேசரும் உறுதி பூண்டான்.

கருமியின் கையும், கொல்வோன் கடுமுக நோக்கும் போல,
வெருவுறு கணவாய் தன்னில் வேங்கையும் அரியுஞ் சீறும்,
கருமணி நாகஞ் சுற்றும் ; கண்மணி மக்கள் ஊணை
வெருகுகள் கௌவிச் செல்லும் வேதனை சொல்ல வாமோ ?

வந்தனன் உருக்க ரந்து மன்னவன் அக்பர் ஓர்நாள்,
தந்துதன் உணவைச் சம்பா வதிவெறுந் தரையிற் சாய்ந்தாள்.
வந்தவன் "வறுமை தீர, வணக்கமென் றுலே போதும்,
முந்துனக் கரசுமீவான் முகலவன்" என்று சென்ருன்..

சட்டென மகளெழுந்து " தந்தையே இந்த யாக்கை
பட்டென வீழுமுன்னே பகருவேன் உண்மை ; தில்லிச்
சட்டத்திற் கிணங்கின், கொண்ட சத்திய விரதம் பாழாம் ;
விட்டதை, வீரப்போரே விரும்பி"டென் றிறந்தா ளந்தோ !

மத்துடைத் தயிரைப் போலும், மணையுடை பஞ்சைப் போலும்,
கத்துசெக் கினிலே யாடும் எள்ளையுங் கடுப்பச் சிங்கன்
இத்துயர் தாங்கிடாமல், இருகணீர் வார ஆங்கே
சத்தி பவானி தேவி சரண்புகுந் திறைஞ்சி ஞனே !

சிங்கன் முறையீடு

"ஓடினேன் பசியு ழன்றேன், உள்ளுடைந் திளைத்தேன், மேனி
வாடினேன்; எனினும் இன்னும் வாழ்வினைப் பலிகொடுத்து
நாடினேன் எனது சொந்த நாட்டினை மீட்க வேண்டித்
தேடினேன் வகை ; யெனக்குத் திருவருள் புரிஓம் சக்தி !

பத்தியிற் பழுதோ ? யான்செய் பணியினிற் பழுதோ ? சித்த
சுத்தியிற் பழுதோ ? பட்ட துன்பத்திற் குறையோ சொல்லாய் ?
எத்திசை யிலுமி ருந்து கருணைசெய் இறைவியே நீ
இத்ததி புகல ளித்தென் இன்னலைத் துடைத்தி டாயோ ?

அருட்குலத் தாயே, உன்றன் அடிபிடித் திறைஞ்சு கின்றேன் ;
மருட்குல மாயஞ் செய்யும் வலியவெந் துயர்கள் போக்கி,
இருட்கண வாயி லேயின் றென்விதி முடிந்தி டாமல்,
தெருட்பெறுஞ் சோதி காட்டித் தேசத்தை உய்விப் பாயே !

வெற்றி

வெல்குறி யீந்தாள் அன்னை, விரும்பிய கருமம் கூடச்
செல்கநீ சிந்து நோக்கிச் செய்யநற் றுணையி ஞலே,
வெல்கநீ அரசை யென்று மின்னென நெஞ்சி லெண்ணம்
மல்கிடச் செய்தாள் ; அந்த வழிச்சென்ருன் வீர வள்ளல் !

அன்னரே சேர்ந்தா ராங்கே அரியநல் லன்பு வீரர் ;
“தன்னலந் தவிர்த்துத் தேச தருமத்திற் குயிர்த்துக் கோடி
இன்னலைப் பொறுத்தாய்; நாட்டின் இன்பமே நினைந்தாய் வாழி
உன்னருட் பணியே எங்கள் உயர்கடீ” னென்றார் மாதோ!

கற்புடை யரசி, வீரக் கனல்பெறு மைந்தர், அஞ்சா
விற்படை பில்லர், போரில் வீறுடை நண்பர் சூழ,
வெற்பினின் றிறங்கும் போது மேவினன் சேவை செய்ய
மற்படை கொண்டு சித்தூர் மந்திரி விஜய சிங்கன்.

“என்னருஞ் செல்வமெல்லாம், ஏற்றமாம் படைக ளெல்லாம்
உன்னுடைச் செல்வ மாக உதவினேன் உவந்து கொள்ளாய்,
மன்னவா உன்ப ணிக்கே மகிழ்வுடன் போந்தேன்” என்றான்,
அன்னவன் அன்பை மெச்சி அரசனு முன்சென் றானே !

அடுத்தநல் வீரர் தம்மை அணிவகுத் துடனே சிங்கம்
தொடுத்தனன் பெரிய போரைத் துணிந்தநல் வெற்றிகண்டான்
பிடித்தனன் கோமல் மீரை, ஆம்பலைப் பிறநல் லூரை ;
இடைத்தது மேவா ராட்சி, கேடெலாம் விலகிற் றன்றே ! 300

இழந்தனன் மான சிங்கன் இகற்களம் ; பகையின் வெம்மை,
ஒழிந்தது; தில்லி சுல்தான் “உண்மை நீ தீரன்” என்றான்..
எழுந்தது பிரதாப சிங்கன் இசைபெறு முழக்க மெங்கும்,
தொழுந்திரு வீர னாகத் துலங்கினான் உலகில் அன்னோன் !

நீக்கறுங் கால வேடன் நெஞ்சிலே யம்பு பாய்ச்சிச்
சூக்குமங் குறுகி யாவி புள்ளெனத் துடிக்கும் போது,
“யாக்கையிங் குள்ள மட்டும் யான்செய்த விரதந் தன்னைக்
காக்கவென் மைந்த” னென்று கடைசிமூச் செறிந்தான் மாதோ!

இத்தகைச் சிங்க நெஞ்சம் இருந்திடின் இகலை வென்று
சித்தியின் கொடியை விண்ணின் சிகரத்திற் பிடிப்போம்..வாரீர்
சத்தியம் வெல்லும் ஆன்ற தருமமே நிலைக்கும்; தேச
பக்தியிற் பழுது மில்லை ; பரனருள் காப்பதாமே.... 312

# 31. போரணிந்த படலம்

சிங்கனின் சரிதை கேட்ட சித்தியின் வீர ரெல்லாம்,
பொங்கிய வுவகை தூண்டப் போர்க்களஞ் சென்று தாவி,
வெங்கதக் கலியும் அஞ்ச வேகமாய்ச் சரங்கள் கோத்துத்
தங்கடன் புரிந்து நின்றார் தருமமு மகிழ மாதோ !

பொழிந்தனர் சித்தி வீரர் புகைத்தெரி கக்குங் குண்டு,
கொழுந்தெரி குண்டு மாரி கொட்டினர் கலிய ரக்கர்.
அழிந்தனர் இங்கும் அங்கும் ஆயிரம் அரிய வீரர்.
எழுந்தனர் தோள்பு டைத்தே எண்ணிலார் இன்னும்இன்னும்!

தடதட வென்னத் தேர்கள் சரமழை பெய்து தாவச்
சடசட வென்னக் கைகால் கழுத்திடை முறிந்து வீரர்,
படபடத் துயிர் துடிக்கப் பாரினில் வீழுங் காட்சி
நடுநடுங் கிடவே சேனை நாயகன் கண்டான் மாதோ !

செறுத்து வீசினன் தீயுமிழ் சிலைகளை விசயன்,
அறுத்து வீசினன் கலிப்படை நடத்திடும் கனலன்,
ஒறுத்து வீசினன் ஊழித்தீ யுமிழ்சரம் விசயன்,
வெறுத்து வீசினன் கனலனும் விதவிதக் கணையே !

சாடு வேகத்திற் சகடைகள் மோதியே சரிந்த,
ஓடு வேகத்திற் குதிரைகள் ஒன்றோடொன் றுடன்ற
‡கோடு கோடுடன் மோதிய யானைகள் குலைந்த;
காடு மேடெலாம் கழுகிற்குங் காக்கைக்கும் விருந்தே! 20

தூர நோக்கியால் அமர்க்களத் துயரினைக் கண்ட
பாரின் வேந்தனும் சுத்தனும் பகையின்கை மிஞ்சும்
ஓர நிகுறி தெரிந்ததும் உடனொரு கணத்தே
நேர வந்தடு சமரினை நிகழ்த்திட முனைந்தான் !

ஒற்றர் அத்ததி ஓடிவந் துவப்புடன் "அரசே
வெற்றி பெற்றது தந்தையின் வீரமாப் படையே ;
செற்றனர் பல செருநரக் கலிநகர் தனையே
பற்று கின்றனன் பழையநல் லர"செனப் பகர்ந்தான்.

அரிய செய்தியென் றரசனும் ஆண்மைகொள் படையை
உரிய காலத்தில் கலிநகர் உட்புக வனுப்பிப்
பெரிய போர்க்களம் புகுமுனர் பிரிவிடை பெறவே,
உரிய கௌரிமுன் வந்துதன் உணர்வினை யுரைத்தான்.

சுத்தன்

கண்ணே அன்புக் கௌரி தேவியே,
போர்முனை செல்கிறேன் புன்னகை யாலே
என்னை ஊக்கி இன்விடை தருவாய்...
பொன்னே மணியே புண்ணிய விளக்கே !

‡ கொம்பு

கௌரி

என்னுயிர்க் குயிரே, என்கண் காணும்
வீரத் தெய்வமே, வெல்கநின் ஆண்மை !
கலிக்குன் பெயரே இலியாம் ; உன்னைக்
கண்டதும் அச்ச முண்டவன் பதறி
வணங்குவான் ; இன்றேல் வகையறி யாமல்,
நரகத் தீயை நாற்புறங் கக்கும்
பீரங்கி களையும் கூரம் புகளையும்,
கோபத் தீயுடன் கொட்டித் தீர்ப்பான்...
எனக்கவன் செய்யும் இகல்வினை தெரியும்.
நாதா, யாதுந் தீதுவ ராமல்,
யானும் உம்முடன் இருந்துபோர்க் களத்தில்
உதவி செய்ய உவந்தே யருள்கவே !

சுத்தன்

கலியின் கொடுமையைக் கட்டுடன் ஒழிக்கும்
இக்கொடும் போரில் மிக்கவுள் ளன்புடன்
பெண்மணிப் படையைப் பீடுற நடத்தி,
வீரருக் குணவு விருப்புட னளித்தே
காயம் பட்டவர் நோய்தனை யாற்றி,
அன்னை போலே ஆறுதல் கூறும்,
அந்தநற் பணியே அரிவையர்க் கழகாம்....
இரத்த வெறியும் எமனும் ஆடும்
கடும்போர்க் களத்தைக் காண்பதுந் தீதே.
மெல்லிய பணியே மேன்மையாம் உனக்கே....

கௌரி

கட்டளைப் படியே காயமுண் டவர்க்குச்
சிகிச்சை செய்வேன். செருக்களந் தனையும்,
தொலைநோக் காடியால் துருவிக் காண்பேன்.
என்னுயிர் தன்னின் இனிய மணாளா,
அறிவுக் கதிரும், அன்புக் கதிரும்,
வீசும் இருமலர் விழியா லென்னை
மகிழச் செய்யும் மதிமுகக் கண்ணா !
மணிக்குர லெடுத்து மந்திர மொழிகள்,
அருமையாய்ப் பேசியென் அறிவைத் தூண்டும்,
ஞானச் சுடரே, நானுன் பாதி.
பிறந்தும் பிரியேன் இறந்தும் பிரியேன்;
வீட்டிலும் பிரியேன் ; காட்டிலும் பிரியேன்;

நாட்டிலும் பிரியேன் ஞாலத் துயிரே,
பத்தினி கடமை இத்தினம் புரிய,
உத்தர வருளாய் உலகிற் கொளியே !

சுந்தன்

வீரத் திருவே, போரில் எனக்குத்
தீங்கு நேர்ந்தால் ஆங்குநீ வருக !
கற்பும் வீரக் கடமை காக்கவே !
நன்பொழில் உலாவும் நல்லிளங் காலே,
ஊற்றெனத் தெளியும், உள்ளமே, உன்னால்
கூற்றையும் வெல்லும் ஆற்றலைப் பெற்றேன்.
கலியை வெல்வது கணப்பொழு தாகும்.
உன்னை உளங்கொண் டென்கடன் செய்யச்
செல்வேன் கௌரி தேவியென் ஆவியே.......

கௌரி

"வெற்றி வெற்றி, வீறு பெற்ற
சத்திய குமாரர் தருமவா ளுக்கே
வெற்றி யாகுக....வீரச் சுடரே !
பொன்னணி பூட்டிப் போரணி புன்கை,
மின்வா ளீந்து புன்னகை வீசிக்
கண்ணால் அழகைக் களிப்புறப் பருகி,
கருத்திலே உருவைக் கவின்பெறத் தீட்டி
சுத்த சக்தியைத் தொழுதுமை யனுப்பி,
எண்ணிய கடமையை இயற்றிடத் துணிவேன்..."
என்றுதன் முன்னே நின்ற மணாளனைப்
போர்க்கவ சங்கள் பூட்டிக் கவனமாய்ப்
பாசத் துடனே பரிந்தலங் கரித்து,
வாடா மல்லிகை மாலையுஞ் சூட்டி,
வெல்க நலமென வீரவா ளீந்து,
கெடுக தீதெனக் கேடயந் தந்து,
பலம்வளர் கென்று பாற்புட் டருத்தி
மார்புறத் தழுவி மகாசக்தி யளித்து,
புன்னகை யாலே புன்கணீர் துடைத்தே
சிறிது நேரம் தியானத் திருத்திப்
புகழுடன் வருகெனப் பொலிமுகங் காட்டி,
நல்வழி யனுப்பினள் இல்லறத் திருவே !
அருமைத் தாயும் ஆசையோ டணைத்தே
"என்னுயிர் மகனே இந்திரன் போலநீ

அறமிலி யரக்கரை அழித்தறம் பொலிய
வருகென்'' றனுப்பினுள் வாழிய வென்றே....
இறைவனைத் தூயன் இறைஞ்சினுன் ஆங்கே.

குழைந்தேன் புவியின் குறைகளை யெண்ணிக் குறையிரந்தேன்;
உழைந்தேன் உளங்கரைந் தேன்சிவ னேயுன் உதவியினுல்,
விழைந்தேன் கலியினை வீழ்த்திநல் லன்பு விளைத்திடவே,
எழுந்தேன் இறைவாஎன் பக்க மிருப்பாய் இகல்வெல்லவே !

வாட்டுங் கலியை வருத்திக் களத்தில் வலியொழித்தே
ஓட்டும் பொழுதும், உலகினில் அன்புடன் ஒற்றுமையை
நாட்டும் பொழுதும், பசுபதியே யெற்கு நல்லவழி
காட்டி நடத்தாய் கலைகணே கண்ணின் கதிரொளியே !

தொழுவார்க் கருளுந் துரையே கருணைச் சுடரொளியே,
மழுவார் சிவனேயென் மன்றினி லாடும் வரமணியே !
வழுவாதென் உள்ளம் வழுத்தி வணங்கும் மனேதயனே !
எழுவாயென்னேடும் அரக்கரை யான்வெல்லு மிப்பணிக்கே! 120

இளகியுள் ளிரங்கி யிவ்வா றேத்திடு மன்ப னுள்ளே,
ஒளிமய மாகத் தூய ஒருவனின் கதிர் இறங்கி,
அறிவளர் சக்தி யாகி, அனல்பெறும் ஆற்ற லாகித்
தெளிவுறச் சுழலும் போது தெரிந்ததோர் தெய்வக் காட்சி.

விரிகுழலும் எரிவிழியும் வெறிநகையும்,
புலிநாவும் வெட்டு மின்னிற்
பொருவாளும் செஞ்சினமும், பொல்லாரின்
சிரமாலை பொலியு மார்பும்,
திரிசூலப் படையணியும் திகழ்காளி
மாதங்கி "தீரனேசெல் ,
புரிபோ" ரென் றுதயதிசை புதுமையுறப்
போந்தாளப் புனிதன் முன்னே !

ஒருநொடியிற் கடமையறிந் துடனெழுந்து, களனடைந்தே ஒப்பி
லாதான்,
வருசமரின்வகையறிந்துவாட்படையுங்கனற்படையும்வரிசைசெய்து
பொருமுனையிற்பெரியபீரங்கிகளைப் பகையஞ்சப் பொருந்தவைத்தே
திருவருளை நினைத்தறமே செழிக்கவெனச் செய்கடனைச் செய்தான்
மன்னே ! 136

# 32. கலி கலங்கிய படலம்

அதிதியன்னை அருள்நகை தூண்டவே,
ஆயி ரங்கதி ரான்ஒளி வீசவே !
புதனும் அக்னியும் போற்றிகள் கூறவே,
புரவி தன்னை அசுவினி ஓட்டவே,
கதிசெய் வேகம் மருத்துக்கள் காட்டவே,
கலையுஞ் செல்வியும் காப்புகள் சொல்லவே !
சதிசெய் பொய்யரைச் சாடிடத் தேவர்கோன்
தானை யூர்ந்த தவம்பெறு காட்சியோ ?

கந்தன் வீரக் கதிர்வடி வேலையும்,
கண்ணன் சக்கர முங்கதை யுந்தர,
அந்தி வண்ணன் அவுணரைச் சீறவே,
அசனி யாற்பகை ஆணவஞ் செற்றவன்,
இந்திரன் இவ னேயென மூத்தவர்,
இகலொடுக்கி எழுந்திடுஞ் சுத்தனூர்
வந்த காட்சியை வன்கலி கண்டதும்,
வார்த்தை யாடி மடக்கிட வந்தனன்.

அருணெறிக் கரசை, வாழும் ஆருயி ருலகுக் கெல்லாம்,
கருணையே செய்யும் வேந்தைக் கலியனுங் கண்ணிற் கண்டான்;
பொருநெறி தெரிகி லாமற், போகவு மனமி லாமல்,
இருதலைக் கொள்ளி யாகி எதிர்நின்றான் பதரன் னுனே!

சுத்தன்

அன்புரை கேளாய் என்றன் அப்பனுக் கிளைய னுனய் ;
பின்புவாள் பிடிப்போம், முன்புன் பிழைகளை எண்ணிப் பாராய்!
உன்பழஞ் சீரும் பேரும் உயர்குல நலனுங் காணுய் ;
தன்பிழை கண்டு கொள்வான் சான்றவ னுவா னன்றே !

சத்தியன் மரபில் வந்துந் தானவர் மோகங் கொண்டு,
புத்தியை யிழந்து, பெற்ற புண்ணியத் தாயின் மார்பிற்
கத்தியை வைத்தாய் ; உன்னைக் கண்ணெனப் பாது காத்த
சித்தியைப் பகைத்தாய் ; வெய்ய சேனையுங் கொண்டு வந்தாய் !

மறுத்தனை மரபு தன்னை, மாசறும் அறத்தின் வேரை
அறுத்தனை, உனது வாழ்வை ஆயிரம் பேய்கள் சூழ,
வெறுத்தனை நல்லோர் தம்மை ; வெறியரின் அடிமை யானுய்;
நிறுத்தியுன் பகையை ஐய நேசமாய் வாழ லாமே !

ஒருவர்பே ராசை யாலே, உலகெலாம் அணிவ குத்துச்
செருநில மாகிச் செந்நீர் சிந்திடுந் தீதைப் பாராய் !
பொருதிமிர் உள்ள தாகில், இருவரும் பொருதிப் பார்ப்போம்—
இருநில மக்கள் கோடி இன்னுயிர் பிழைக்க லாமே !

பஞ்சமா பதகி மோகிப் பகட்டிலே மதியி ழந்து,
நஞ்சினை அன்னைக் கூட்டி நலம்பெறு மைந்த னுண்டோ ?
கொஞ்சியே மூச்ச ணைக்குங் கொடியரை நம்ப லாமோ?
துஞ்சிய வீட்டிற் கொள்ளி சொருகிடும் கொடுமை செய்தாய் !

நரிபுலி ஓநாய் நாகம் உலவிடு நச்சுக் காட்டின்
விரியிருள் போன்ற வஞ்சர் வீசிய வலையிற் பட்டாய் ;
பெரியவர் மனது நோகப் பேய்மதங் கொண்டு வந்தாய் !
உரிமையை யிழந்தாய் ; நாட்டில் ஒற்றுமை குலைய வைத்தாய்!

வன்றிறல் அரக்கர் மாய வலைப்படல் எளிது ; நாட்டில்
ஒன்றிய சமுதா யத்தை உலைத்தலும் எளிது ; போரிற்
கொன்றிடல் எளிது ; கெட்டுக் குலைந்தநல் லறத்தை நாட்டி
வென்றிடல் அரிது நீயிவ் வினைவினைச் சிந்திப் பாயே !

உனதுபே ராசைக் காக உலகெலாம் பரித விக்க,
மனதடங் காத மூர்க்க வழியினில் ஓடு கின்றாய்....
சினமடங் காத மூடச் செருக்கினால் இன்றுன் சொந்த
இனமடங் கலும் வருந்தும் இகல்வினை பெருக்கி நின்றாய்.

ஊழித்தீ யுமிழ்ந்து வாட்டி உயிர்களைக் கொடுமை யாகப்
பேழைவா யடைக்கும் சண்டைப் பேயினைக் கட்ட விழ்த்தாய் ;
பாழும் பொறுமை யாலே பாரத தருமத் திற்கே
சூழுனை யிடும்பை; அந்த வினையுனைச் சுடுவ தாமே !

இருக்கினும் வாய்மை யின்றி யிருத்தலே யிறத்த லாகும்.
இறக்கினும் வாய்மை பேணி யிறத்தலே யிருத்த லாகும்.
மறக்கள மாக்கிப் பூவை யாள்வதே மடிவ தாகும்;
அறக்களத் துயிர்கொ டுத்தல் ஆருயிர் பிழைத்த லாமே !

என்னைப்பார் எனது பக்கம் இருப்பவர் தன்மை யைப்பார் ;
உன்னைப்பார் உனது பக்கம் உள்ளவர் உருவைப் பாராய் ;
சின்னப்பா எனக்குன் மேலே யாதொரு சினமு மில்லை..
என்னப்பா மௌனமானாய்; இதயத்தைத் தொட்டுச் சொல்வாய் !

கலியன்

காட்சி யாளர்க்குங் கள்ளர்க்கு மேமனச்
சாட்சி மெய்யினைச் சாற்றுதல் உண்மையால்,
வாட்சி வந்த கலியன் மனத்திலும்,
மாட்சி யுற்ற மயக்கம் எழுந்ததால் !

புன்சொ லேன்புலை நாயினுங் கேடனேன்,
என்செய் தேன்?இறு மாப்பினில் மூழ்கினேன் ;
இன்சொ லாளன் இளகிய வாய்மையென்
வன்சி னத்தினை மாற்றிய தென்னையே !

விதியி னாலொரு வேசியைக் கூடினேன் ;
மதியி ழந்துமண் ணானதென் வாழ்க்கையே !
சதிசெய் தேனென் மரபினைச் சாய்க்கவே ;
கதியி ழந்தனன் கண்ணுமி ழந்தனன் !

மன்னு லகை மடித்தர சாண்டிட
மின்னு வாளை மிடுக்குட னேந்தினேன்,
முன்னு லகினில் மூட்டிய போர்க்கனல்
என்ம னத்தை எரியென வாட்டுமே.

சித்தி யைப்பகைத் தேனிலை சீரிய
சத்தி யத்தைத் தகைக்க முயன்றனன் ;
பித்தர் போன்று பெரியரைத் தூற்றினேன் ;
எத்தனைப் பிழை செய்தனன் ஏழையேன் ?

பரிந்த மேலவர் பண்புரை கேட்டிலேன்,
விரிந்த ஞான விளக்கினைத் தூண்டிலேன் !
கரிந்த வஞ்சக் கடுமனச் சூழ்ச்சியாற்
பிரிந்து வாழும் பெரும்பிழை செய்தனன் !

கள்ளும் ஊனுங் கலந்துணக் கற்றனன் ;
உள்ளம் பாம்பின் உறையுளென் றாக்கினேன்.
பிள்ளை யற்றவர் சொத்தைப் பிடுங்கினேன் ;
வெள்ளி பொன்னெனின் வேட்கைகொண் டோடினேன் !

அன்னி யர்மனைக் காசை மிகக்கொண்டேன்,
மின்னி டையை விலைப்பொரு ளாக்கினேன் !
பொன்னை மாதரைப் பூமியைப் போகத்தை,
என்ன தாக்குவ தின்பமென் றெண்ணினேன் !

கொழுத்த செல்வர் குவித்திடப் பொன்மலை—
உழைக்கும் ஏழை உணவறச் செய்தனன் ;
செழிக்கு நாட்டைத் திருடியென் னூரிலே
தழைக்கச் செய்தனன் சங்கடக் கூட்டமே

சகம் வருந்தத் தனியுண வுண்டனன் ;
மகவு வாட மடுவைப் பருகினேன் !
அகமி குந்துல காளப் புகுந்தனன் ;
புகுந்த வீட்டிற் புலியென லாயினேன் !

பஞ்சம் பட்டினி பாவம் பகைதுயர்,
வஞ்சம் பொய்கள வாகிய மாசுகள்
பஞ்ச பூத வுலகினைப் பாழ்செய
நஞ்சனேன் பெரு நாசம் புரிந்தனன்.

அங்க ரக்கர் அடக்கு முறைகளால்
இங்க நாட்டினைச் செம்மறி யாக்கினேன் !
இங்கு மென்னிறு மாப்பிற் கிடம்பெற
வெங்கு லப்படை கொண்டு விரைந்தனன்....

இன்ன வாறு கலியும் இரங்கியே
என்ன சொல்வதென் றேயறி யாமலே,
முன்னி ருக்கும் புனிதன் முகத்தினைக்
கன்னக் கையுடன் கண்டு கசிந்தனன்.

அந்த வேளையில் அதர்மனும் அரக்கனும் அடைந்தே
இந்த வாலிபன் வாயுரைக் கித்தனை யிடரேன் ?
முந்தொர் குண்டினுல் முடிவுரை கூறெனத் தூண்டி
வெந்தழல் வெடி வீசினுன் கலியனும் விழித்தான் !

கொல்ல லேயுனைக் கடனெனக் குதித்தெழுங் கலியை
வெல்ல லேகட னென்றுநம் வீரனும் விரைந்தே,
மல்லர் சேனையை மாகடல் அலையெனக் கிளப்பிச்
சொல்லுஞ் செய்கையு மாகிவெஞ் சுடுசரந் தொடுத்தான் !

கடலு டன்கடல் கலந்துகர் ஜிப்பதே போலப்
படையு டன்படை நெருங்கின படைக்கலங் கொதித்த ;
நடையுடன் நடை நெருங்கின ; நலிந்தன உடல்கள்,
தொடையுங் கால்களுங் கைகளுந் துண்டுபட் டனவே !

வீறு பேசிய கலியினர் வெறிபிடித் திரத்த
ஆறு செய்தனர் ; அதன்மிசை அயர்ந்துடன் மிதந்தார்,
மாறு செய்தவர் மண்ணுணிப் புழுவென மாண்டார்,
கூறு செய்தது பகைவரைக் கூற்றெனத் தருமம்.

ஆளைத் தோற்றுநல் லறிவினைத்தோற் றிகல் கொண்ட
வாளைத் தோற்றுத்தன் மானமுந் தோற்றழுங் கலியைக்
காளை போலினுங் கடுஞ்சமர் கலக்கிய தூயன்
நாளை வாளுடன் வாவென நயமுற விடுத்தான்.

குன்று குன்றெனக் குவிபிணக் குவையினைச் சற்றே
நின்று கண்டுளங் கருணையால் நெக்குநெக் குருகி
என்று போர்வெறி யின்றியிங் கமைதிசேர்ந் திடுமோ
அன்று வெற்றியென் றகன்றனன் அரசனு மாங்கே !

# 33. உறுதிப் படலம்

முல்லைகள் முறுவ லிக்க, முளரிகண் மூடித் தூங்க,
அல்லிகை விரித்து வாவென் றம்புலி தனைய ழைக்க,
மெல்லிய தென்றல் வந்து வீரருக் கினிது வீச,
எல்லியைப் போர்த்தி யற்கை இந்திர சாலஞ் செய்தாள் !

வென்றனம் என்று சித்தி வீரர்கள் ஆடிப் பாடி,
ஒன்றிய உவகை கூர்ந்த வுடனிளைப் பாறு கின்றார் ;
தென்றலு நிலவும் பேசுஞ் செய்தியைக் கேட்கக் காலம்
நின்றது ; சாந்த மெங்கு நிறைந்தது பரந்த ஊரில்.

ஆர்ப்புகள் அடங்கிச் சாவின் ஆட்டங்கள் அடங்கி, யானை
தேர்ப்பரி காலாட் சேனை திரிபர பரப்ப டங்கி,
போர்ப்புய லடங்கி, நெஞ்சப் பொருபொருப் படங்கி, அன்னப்
பார்ப்புகள் போன்று மாந்தர் பள்ளிகொண் டமைதி சேர்ந்தார்.

காவலர் உலவு கின்ற காலடிச் சத்த மல்லால்,
நாவொடு நடையுங் கையும் ஞானியர் சமாதி போன்று,
மேவின மோனந் தன்னில், விமலனே ஒருவன் ஆங்கே
காவியங் கண்வி ழித்துக் கத்தியிற் கனவு கண்டான் !

## கௌரி வருதல்

யாழிசை குழலிசை யினிது வீக்கிடும்
ஏழிசை கேட்டனன் ; "இறைவன் வாழ்" கெனச்
சூழிசை கேட்டனன் சுத்தன் ; கௌரியின்
வாழிசை கேட்டனன் வரிசை யாகவே ! 20

சேவகருஞ் சேடியருஞ் செய்முறைகள் செய்தே,
ஏவல்கள் முடிந்ததுவும் ஏகினர் புறத்தே.
ஆவலுடன் அன்னநடை மின்னிடையோ டாட
மேவினள் இளங்கவுரி மீனணி நிலாப்போல் ;

வன்சமரில் வாகையுற வந்தமண வாளன் ;
தன்சம ரளித்திடு தளர்ச்சியை விலக்கிப்
பொன்செய்நகை பூத்தகனி வாயமுது பொங்க,
"என்கணவன் வாழ்" கென இளங்கொடி பணிந்தாள்.

தேசுமிகு தேவிவரு கென்றுதிரு வாளன்
மாசறு மனத்துடன் மலர்தவி சிருத்தி,
வாசமிகு மாலைகள் மகிழ்ச்சியுறச் சூட்டி
நேசமிகு புன்னகை நிலாவவர வேற்றான்.

அருகருகிருவரும் அமர்ந்து, சின்மயம்
பருகினர் ; மறுவிலர் பத்தி வேகத்தால்
உருகினர் ; உயிர்மனம் ஒன்றி நின்றருள்
பெருகினர் ; யோகத்தின் பெருமை காணவே.

தெய்வநற் கனல்வளர் தியான மானதும்,
பொய்வளர் அரக்கர்செய் புண்க ளின்றியே,
வையகம் உய்திட வாய்மை யோங்கிடச்
செய்தகு செயல்களைச் சிந்தித் தோதினர்.

சுத்தன்

எனது வாழ்வின் இன்பமே, அன்பே,
பூரண யோகப் பொன்னொளிச் சுடரே,
மங்கலம் பொங்கும் மதிமுகச் செல்வியே,
விட்டர சாட்சியும், நாட்டர சாட்சியும்,
வெற்றிபெற் றோங்க விரும்பி, என்னுடன்
உள்ள மொன்றி யுழைக்கும் துணைவியே,
கற்பிற் சிறந்த கண்மணி யேநின்
அழகையென் சொல்வேன் ! அழகினு மினிய
குணத்தையென் சொல்வேன் ! குணத்திற் இனிய
அறிவையென் சொல்வேன் ! அறிவிற் இனிய
ஒழுக்கமென் சொல்வேன் ! ஒழுக்கம் பழுத்த
யோகமென் சொல்வேன் ! யோக சித்தியால்
ஊறும் சக்தி வீறென் சொல்வேன் !
குகையில் வளரும் குண்டலிக் கனலே,
கலிப்படை முழுதும் கண்ட துண்டமாய்ச்
சிதறிய தேனும், பதகரைக் கொண்டே,
உறங்கும் சித்தியைப் புறங்கண் டிடவே
தந்திரக் கலியன் வந்திடர் செய்வான்.
ஒற்றர் இந்த உண்மை யுரைத்தார் ;
அடிபோர் வென்றும் அமைதியைக் காணேன்.
மண்மிசை யிரண்டு மாயச் செருக்கர்
எனதுன தென்றே இறுமாந் துலகைப்
பங்கு போடப் பங்கம் விளைத்தே,
பொல்லாங் கறியாப் பொதுஜனங் களையே,
ஊனுங் கள்ளும் உயிர்க்கொலை வெறியும்,
ஏற்றிப் போரில் இழுத்து நிறுத்திப்
பிரங்கி வாயிற் பிணம்படச் செய்யும்
அதர்மக் கொடுமை அழியுநாள் என்றோ ?
அவரவர் உழைப்பால் அவரவர் பிழைத்தே,

அமைதியாய் வாழும் அந்தநாள் வருமோ ?
கொன்றேன் பிணங்களைக் குவித்தேன் மலைபோல்,
இன்னுமென் வாளின் இரத்தத் தாகம்
தீரா தின்றொரு போர்வினை வந்ததே.
இரக்கம் என்னை இடைமறிக் கின்றதே !
அரசும் ஆட்சியும் ஆணவத் திமிரும்,
போருந் தொல்லையும் பொய்யென விலக்கி,
ஞானங் கண்ட நன்முனி போலே
யானும் உலகை யெற்றி யெறிந்து,
மோனமாய்ச் சென்றோர் முழையிற் பதுங்கவோ ?
களத்தில் உடற்சுமை களைந்தினும் மீளா
வாழ்வை யெய்தவோ ? வகையறி யேனே !
நின்னுளஞ் சொல்லாய் என்னுயிர் அணங்கே !

கௌரி

பூமியி னுள்ளே பொங்கிடுஞ் சூடே
எரிமலை யாகப் பொரிவது போலே,
உடலுக் குள்ளே ஊறிய சூடே
காய்ச்ச லாகக் கழிவது போலே,
மனித வியல்பின் மாசுக ளெல்லாம்,
காமக் குரோதக் கசண்டுக ளெல்லாம்,
போராய்க் கிளம்பி வேருடன் போமே.
அறுத்துப் புண்ணை ஆற்றுவ தேபோல்,
வாளால் உலகின் வன்பிணி தன்னை,
பேரா சைதரும் பேய்மதக் காய்ச்சலை
ஆளைக் கெடுக்கும் அதரும நோயைக்
களத்திற் பொருதிக் களைவது கடனே !
பொறுமை யினியும் வாராது விலக்கிப்
பொய்ப்பே ராசை, புலன்கெடு காமம்,
ஆணவ மாயம் ஆகிய தீமைகள்,
அடியோ டொழிந்தே படிப்படி யாக
மாந்தர் நல்ல மாறுத லெய்தி
அன்பும் அறமும் ஆன்ம சுயேச்சையும்,
பண்புறப் பயின்றே பகைசினந் தவிர்த்தே,
ஓர்குல மாகப் பாரெலாம் வாழ்ந்தால்,
போரெனும் பேச்சே வாரா தொழியும்.
வெளிவே டங்களும் விதவித மதங்களும்,
மண்பொன் வெறியும், மனத்தின் விகாரமும்,
உள்ள மட்டிலும் உலகம் கலகமே !
மனிதர் ஐந்து வகைநிலை யுடையார்.

ஐம்புல னறிவால் அடைந்ததை நுகர்ந்து,
கல்வி யின்றிக் காட்டு விலங்குபோல்,
உண்டுடன் றுறங்கி உடற்கடன் முடித்தவர்
மானிட விலங்கென மதித்த லாகுமே.
கற்பன கற்றுக் கேட்பன கேட்டு,
மதிப்பொலி வுடனே மனைநலங் காத்துப்
பொருளைச் சேர்த்துப் பொதுநலஞ் செய்வார்
மானிட மனிதராய் மதிக்கப் பெறுவரே.
அறிவும் பலமும் திருவும் தியாகமுங்
கொண்டுல கிற்கே கொள்கையி னுதவி,
கலையும் வீரமுங் காட்டிப் புகழ்சேர்
செயற்கருஞ் செயல்கள் செய்யும் மனிதர்
வீர மனிதராய் விளங்குவர் தாமே. 1
அறிபவை யறிந்தே, அறிவிற் கறிவாம்
பொருளை யுளத்திற் பொலிவுறக் கண்டு,
அனைத்தும் அதுவென் றறிந்தன் புடனே,
அருட்சுடர் பரவும் அருந்தவ யோகிகள்—
பெரிய மனிதராய்ப் பெருமை பெறுவரே.
தீவிர யோக சித்தியி னாலே,
ஏழா தாரமும் எழிலுற மலர்த்தி,
துரிய நிலையில் சுகங்கண் டுள்ளே
பரம்பொருள் கூடிப் பண்புறப் பழுத்தே,
சச்சிதா னந்தந் தழைத்த சித்தரே
தேவ மனிதராய்ச் சிறப்புறு வாரே !
எதுதன் னுள்ளோ அதுவே பிரமம் ;
எல்லா ருள்ளும் இருப்பது பிரமம் ;
என்றறிந் தெவர்க்கும் இனிது நினைந்தே,
ஆருயிர்க் கெல்லாம் அமைதியே கோரி
நல்லது பேசி, நல்லது செய்து,
நன்மையே விளைத்து நாடும் உலகும்
தெய்வ நிலைபெறச் செந்நெறி காட்டுந்
தேவ மனிதரே பூவிற் சிறந்தோர்.
விலங்கு மனிதன் வீர மனிதனாய், 14
வீர மனிதன் வித்தக மனிதனாய்,
வித்தக மனிதன் தத்துவ மனிதனாய்த்
தத்துவ மனிதன் சுத்த சித்தியால்
மானிடத் தேவனாய் மாறிப் பிறந்தால்,
உள்ளிருந் தியற்கை உயர்ந்திறை கண்டால்,
உலகம் விண்ணென் றிலகுவ தாமே !

விலங்கு மனிதரால் விலங்குவாழ் வாகும்,
வீர மனிதரால் வீரவாழ் வாகும்,
தேவ மனிதரால், திவ்விய வாழ்வாம்.
அவ்வகை வாழ்வை ஆயிரம் யோகிகள்
நீண்ட தவத்தால் நிலைநாட்டி னாலே,
அருட்சுடர் பரவி, ஆத்தும சக்திக்
கதிரொளி விரிந்து புதுமை பெற்று
மானிடச் சாதி மாறிப் பிறக்குமே.
வானர சாட்சி மண்ணகத் தோங்குமே,
கலியின் கொடுமை நலித்துல கெல்லாம்
சத்திய யுகமே நித்திய மோங்குமே.
இப்பணிக் கேநாம் இருவரும் உரியமே.

சுத்தன்

சிறந்த உண்மையைச் செவ்வையாய்ச் சொன்னாய்.
கண்ணே ஞானக் கௌரியே, இந்தக்
கலியை ஒழித்துக் கடுந்தவம் புரிந்து
தேவ ஜாதியைத் திருவுற நாட்டும்
பணியே நமது பண்பும் பயனுமாம்.

கௌரி

வெய்ய கலியை வீழ்த்திடும் போரில்,
யானும் உன்னுடன் இணைபிரி யாமல்,
வாட்பணி புரிய வந்தது சமயம்.
கவசம் போலுனைக் காத்துநம் சித்தித்
துவசந் தன்னைத் தூக்கிப் பிடிப்பேன்.

சுத்தன்

கலையும் யோகமும் கற்றனை; யுனக்குத்
தெரியா வித்தை செகத்தினி லுண்டோ ?
எனினும் முன்பே இயம்பிய வாறே,
பெண்ணுக் குரிய மென்கட னாற்றிப்
போர்க்களம் புகாது பொறையுட னிருத்தலே,
உனக்கழ காகும் எனக்குநல் லுயிரே !

கௌரி

இருவர் உள்ளும் ஒருவரே என்னின்,
உன்போர் என்போர் உன்சயம் என்சயம்,
வீட்டிலும் வியன்பெறு நாட்டிலும் என்றும்
இணைபிரி யாமல் இருப்பதென் மகிழ்வே !
கடமை காக்கக் களத்திலுங் குதிப்பேன்.
பெண்ணெனப் படுபவள் பேதை யல்லள்.

உலக சரித்திரம் உரைக்கும் வீரப்
பெண்கள் கணக்கிலர் பேசிடக் கேளாய் :—
பிரிட்டனை உரோமர் பிடித்த போது,
சுதந்தரப் போர்செயத் துணிந்தவள் பொடீஸியா.
பிரான்ஸை ஆங்கிலர் பிடித்த போது,
அல்லிக் கொடியை ஆண்மையோ டேந்தி,
ஆர்லியன் போரில் அனலாய்க் கிளம்பிக்
கடுஞ்சமர் வென்ற கன்னிஜோந் தார்க்கை
அறியாப் புலவர் அவனியில் உண்டோ ?
தசரதன் செய்த சம்பரப் போரில்
கைகொடுத் துதவினள் கைகசி யரசி.
பிருதிவி ராசன் பெருஞ்சமர் புரியத்
தானும் ஆணுடை தரித்துக் களத்தில்
கணவனைக் காக்கக் கடுஞ்சமர் புரிந்த
சம்யுக்தை யென்னும் சக்தியை அறிவீர்.
தாரா பாயின் சூர மறிவீர்,
திப்புசுல் தானின் சேனையை யெதிர்த்து
வென்றநல் அஞ்சிலி வீரமும் அறிவீர்.
கைக்குழந் தையுடன் களத்திற் பகைவரைப்
பொருது நலித்த புகழ்மணி இலக்குமி
காட்டிய தீரக் கதைகளை யறிவீர்.
ஆதலால் யானும் அமர்க்களம் புகுந்தே,
பக்க மிருந்து பகையை வீழ்த்தும்
ஆசையுங் கொண்டேன் ஆற்றலு முடையேன்.
எந்தை யெனக்குத் தந்த போர்க்கலை
பயன்பெற வந்தது நயமுறு வாய்ப்பே....
ஆமென ஓர்மொழி அன்புடன் வந்ததும்,
போரங்கி பூண்டு புறப்படு வேனே.

சுத்தன்

கண்ணே உனது கருத்தை நடத்தாய்.
ஆனுற் கலிப்படை ஆத்திரத் துடனே
கொடுமை செய்யும். கொலைக்களந் தனிலே
எண்ணிலா உடல்களுள் என்னுயி ரான
உன்னுடல் கண்டால் உயிரெனக் குண்டோ ?

கௌரி

வரும்போம் உடலம் ; வரவுபோக் கற்றே
என்றும் உள்ளதே இருவரும் ஆவோம் ;
ஆயிரம் உடல்கள் ஆகும் அழியும் ;

ஆன்மா உண்மை ; அழிவிலாச் சக்தி.
அதுவே நானென் றறிந்தபின் எனக்குப்
பிறப்பு மில்லை இறப்பு மில்லையே.
மறப்பு மில்லை மயக்கு மில்லையே.
அட்டாங்க யோகம் அளித்த சித்தியால்,
இவ்வுடல் போயின் இன்னோ ருடலிற்
புகுந்தென் கடமை புரிந்திடு வேனே.
இச்சம ருடனே இகல் ஒடுங்காதே.
தோற்ற கலிஞன் ஆற்றலை வளர்ப்பான்.
தானவத் தீவினைத் தாங்கும் அரக்கர்
மண்ணை வெல்லப் புண்ணீர் இரைப்பார்.
இந்தநாட் டிற்கும் வந்திடர் செய்வார்.
அந்தக் கதையெல்லாம் அறிந்த கதையே.
இந்தப் போரில் இவ்வுடல் போனால்,
அங்கே வாழும் அரக்கரை ஒடுக்கி
சுத்தசே வைக்கே சக்தியாய் வருவேன் ;
புத்துடல் தாங்கிப் பொலிவுற வருவேன்....
ஆதலால் என்னை அமைதியாய் ஏற்றுப்
போர்முனை செல்வீர் ஆருயிர் நீரே !

* * *

இப்படிக் கௌரி யியம்பிடும் போதே,
கேட்டது முரசம்; கோட்டையைக் கலியன்
வளைத்தான் என்று வந்தான் விசயன்...
உடனே சுத்தன் உருவிய வாளுடன்
"சென்று கலியை வென்றே வருவேன்
கண்ணே" யென்று கனிநகை பூத்துச்
சிங்கம் போலச் செருக்களங் கண்டான்.
உடனே கௌரியும் உடைகளை மாற்றி,
இளந்திரு வீரன் எனப்பிறர் நினைக்கக்
கணவனைக் காக்கக் கரந்துபின் சென்றாள்...
போரைக் காணப் போவோம் நாமுமே !

# 34. இறுதிப் படலம்

மண்ணு றங்கிய நிசியிலே, மல்லெனக் கேட்டுக்
கண்ணு றங்கிய வீரர்கள் கதுமென வெழுந்தே,
புண்ணு றங்கிய உடலினிற் போரணி பூண்டு
திண்ணு ரங்கொளத் தீட்டிய வாளுடன் செறிந்தார்.

காடு மேடெலாம் கனைமெலாங் கார்வரை யெல்லாம்,
வீடு கொண்டுறைந் தொளிந்தனல் வீசிடும் பகையைச்
சூடு தைத்திடச் சூழலைக் குறிவைத்துச் சுட்டார் ;
ஓடி னார்சிலர் ஒல்லெனக் கிளர்ந்தனர் சிலரே !

முன்செல் சுத்தனின் மூரிவெஞ் சிலையினை யஞ்சிப்
பின்சென் றார்சிலர் ; பேயெனப் பெருங்கன லுமிழ்ந்து
வன்சமர் தொடுத் தார்சிலர்; வாய்மதங் கொண்டு,
புன்சொ லான்மனப் புண்விளைத் தார்சில புல்லோர் !

துஞ்சும் ஊரினைப் பிடித்திடத் துணிவுடன் எழுந்த
வஞ்ச கக்கலி யரக்கர்கள், வலியதோர் சேனை
வெஞ்ச மர்தொடுத் தெதிர்வெடி வீசிடக் கண்டே
அஞ்சி னார்; பிற ககந்தைகள் அரற்றிமுன் வந்தார் !

உருக்கி னல்உல காளுவோம். உயிர்பிழிந் துண்போம்.
செருக்கி னலெமை எதிர்ப்பவர் சிரங்களைச் செகுப்போம் ;
பொருக் கெனச்சரண் புகுமினென் றிறைந்தனர் பொல்லார்.
"சருக்கு வீ"ரெனச் சிரித்ததோர் எதிரொலி தழைத்தே !

எங்க ரக்கரென் றிமைப்பறத் தேடிச்சென் றிறைவன்
அங்க ரக்கரை ஆணவ வெறிகெட அழித்தான்.
பொங்கு வெஞ்சினம் புகைந்திடப் போரெடுத் துற்றான்—
சிங்கத் தின்முனர் புலியெனச் செருமிகு கலியன் !

"அழிகவே கலி ! அறவினை வெல்கவே !" என்று
பொழியும் அம்புகள் பொய்துளை மனமெனக் கலக்க,
வழியும் வேர்வையுங் குருதியும் வசைகளு மாக
ஒழிந்தொ ளிந்தனன் ஒருமுறை ஒய்வறு கலியன் !

கேடு சூழ்ந்திடுங் கிளர்ச்சியிற் சிறந்தநங் கலியன்,
பிடி லாவழி சுத்தனைப் பிடித்திட முயன்றான்,
வாடு வேங்கைக்கும் வஞ்சக நரிக்குநள் ளிரவில்
ஓடு காலிக்கும் உளத்தினில் உறுதியொன் றுண்டோ ?

பாண்டி லுக்கிசை பதமெடுத் ததிர்நடை பயின்றே,
ஈண்டு வார்இரு புறத்திலும் எமனுடன் விதிபோல் ;
தீண்டு வார்பகைத் தீயுடன் பகைவளர் தீயை ;
மூண்ட போரிடை முண்டுவார் பிண்டமாய் முடிப்பார் !

ஊனுங் கள்ளுடன் ஒருமயில் நாறிட உயிர்த்தே,
ஈன வெங்கலி இருட்படை எதிர்த்திடும் ஆங்கே ;
ஞாலச் செங்கதிர் ஞாயிறு போன்றவன் கணையால்
போன திக்கறி யாமலே பொய்ப்பகை புகையும்.

இந்த வாறு நடக்கும் இகலினுல்,
வந்த காரியம் வாய்ந்திட லின்றியே,
சிந்தி ரத்தஞ் சிதறிடத் தன்படை
சிந்தை தேக்கிக் கலியுந் திகைத்தனன்...

காற்றிலே பதர் என்னக் கலியரைத்
தூற்றி முன்முன் துரத்தி வரும்படைக் (கு)
ஆற்றிலா னுடனே அமரின் முறை
மாற்றி னுெரு மாயம் புரியவே !

கற்ற திக்கணை யாவுங் கரிந்துகச்
செற்ற சித்தியின் வீர சிகாமணி,
சுற்றி நின்ற பகைவர் சுருக்கென
வற்றி ஓடி மறைவதைக் கண்டனன் !

வில்வி னையை விடுத்துக் கலியனும்,
வல்வி னையர் படையை மறைத்துத்தன்
மல்வி னையை மளக்கெனக் காட்டிப்பின்
கொல்வி னையைக் குறிக்க நினைத்தனன் !

அடு களத்தினுக் கஞ்சினர் போலவே,
தொடு கணையைச் சுருக்கி யரக்கர்கள்,
விடு விடென்று விரைந்திடக் கண்டதும்
சுடுசுடு வெனச் சுத்தன் துரத்தினுன்....

தொடர்ந்து சென்ற துகளறு வீரனை
அடர்ந்த காட்டில் அரக்கர் வளைத்தனர் ;
இடர்கள் ஆயிரம் எய்தின சுற்றிலும்,
படர் துயரைப் பகழியின் மாற்றினுன்.

குழியிலே இலைப ரப்பிக் குஞ்சரம் பிடிக்குஞ் சூழ்ச்சி
வழியெலாஞ் செய்து வைத்து, மருந்துடன் கொடிப ரப்பிப்
பழிகொலைப் பதகர் தம்மைப் பதுங்கிடச் செய்த தர்மன்
அழிவுறத் தானும் ஆங்கே அடக்கமாய் மறைந்தான் மாதோ !

காட்டுடன் காடி தென்றே, காண்பசும் புதர டர்ந்த
மேட்டினிற் சுத்தன் வாசி மிதிக்கப்போம் போதோர் வீரன்,
ஓட்டிமுன் குதிரை தன்னை, "ஓவிது சூழ்ச்சி" யென்று
தீட்டிய கணைகள் விட்டுத் தீயரை வெளியிட் டானே !

அக்கணங் குழியி னின்றே அதர்மனே எழுந்து நின்று,
வக்கிர தந்தங் காட்டி, வகையுடன் அம்பெ றிந்தான்..
அக்கணை தாக்கு முன்னே அருங்கலை யிளநல் வீரன்
மிக்கவெங் கணையால் அன்னோன், மேனிலைக் கேறச் செய்தான் !

அதர்மனைக் கொன்ற வீரன் அவனையே கொல்ல வேண்டிப்
புதர்மறை புல்ல ரெல்லாம், பொருகணை தொடுக்கத் தானும்,
எதிர்கணை முடிந்த மட்டும் ஏவிநம் இளைய சிங்கம்,
விதிவினை நிர்ந்த தென்று விழுந்துயிர் துடிது டித்தான் !

தனக்குறு நமனைச்செற்ற சத்திய வீரன் ஆங்கே,
தனிச்சமர் புரிந்து வீழ்ந்த தடத்தினுக் கேகிச் சுத்தன்
இனிப்பகை யரக்கர் வாரா திருபுறம் படை விரித்தே
குனிப்புற நோக்கி யந்த வீரனைக் குறித்தான் மாதோ !

ஆரந்த வீரன் என்றே அறிகுமுன் ஆவி துள்ளப்
பொரங்கி பூண்ட கௌரி புருடனை மகிழ்ந்து நோக்கி,
"நீரங்கொள் சேவை செய்து செல்கிறேன் ; வருவேன் மீண்டும்
பாரெங்கும் உனது சீர்த்தி பரப்ப"வென் றடங்கி னாளே !

பூதங்கள் அடங்கிப் பத்துப் பொறிபுல னடங்கி, நாடி
நாதங்கள் அடங்கி, அந்தக் கரணமு நனிய டங்கிப்
போதங்கொள் ஆன்மா தேக புரிவிடுத் தேகும் போது,
சோதியொன்றெழுந்து விண்ணிற் சுழன்றுடன் மறைந்ததம்மா !

ஆறுதல் கூறு முன்னே அதர்மனைக் கொன்ற கௌரி
மாறிலா நேயஞ் சொல்லி மறைந்ததைக் கண்டு நாதன்,
ஈறிலாத் துயர மெய்தி, இருகணீர் அருவி பாய்ச்சி,
மீறிய சோகத் தாலே விம்மினன் விதியை நொந்தான் !

எத்துணை அன்பு கொண்டாய் ! எத்தனை அறிவு சொன்னாய் !
எத்தனை யோக சக்தி ஈந்தெனை மகிழு வித்தாய் !...
உத்தம மனைவிக் குன்னின் உதாரண முண்டோ ? நல்ல
பத்தினித் தெய்வ மே,நான் பிழைத்திடப் பலியுமானாய்.

ஆரெனக் காணு முன்னே அபாயத்தை விலக்க வேண்டி
ஓரிளம் வீர னாக உருவினை மாற்றி வந்தே,
போர்கொடுத் ததர்மன் மார்பைப் போழ்ந்தொரு சுடுச ரத்தை
மார்பினில் ஏந்தி யிந்த மண்ணுடற் சுமையைத் தீர்த்தாய்.

என்னுர்க் குயிரே யானாய், என்விழி மணியே யானாய்,
இன்னுயிர்த் துணைவி யானாய், இறுதிமூச் செனக்கே யீந்தாய்,
மன்னுயி ருள்ள மட்டும் வானில முள்ள மட்டும்,
அன்னையின் அன்பு மிக்காய், ஆருனை மறப்பா ரிங்கே !

கண்டதுங் காதலித்தேன் ; காதலிற் கடவுள் கண்டேன்,
அண்டியுள் ளணைந்த போதுன் அருந்தவக் கனல ணைந்தேன்
விண்டநல் லுரையி லெல்லாம் விவேகத்தைப் பெற்றேன் ; சக்தி
கொண்டதோர்புனிதப் பெண்ணின் கோலமேயுன்னுட் கண்டேன்!

கன்னியர் கனியே, கற்பின் காட்சியே, கருணை வாழ்வே,
மின்னொளிச் சுடர்போல் வந்து வீரத்தி யாகச் சென்றாய்..
முன்னிர வினிலே நன்று மொழிந்தவா றினிது மீண்டும்
உன்னை யான் அடைகு வேனோ வாய்திறந் துரைத்தி டாயோ ?

உயிர்க்கிளி பறந்தும், இன்னும் ஒளிதரு முகமென் பாசத்
துயர்முகம் பார்த்து, நல்ல துணிவுரை பேசு தம்மா !
பயிர்பழுத் துதிர்ந்து மீண்டும் பயிர்முளைப் பதுபோல், யானுன்
இயலுடல் இன்னொன் றேந்தி ஏகுவேன் என்கின் றாயால் !

ஆழ்ந்தநங் காதல் ஆன்மக் காதலே யன்றி, வாழ்ந்து
வீழ்ந்துமண் ணாகும் யாக்கை விளைத்திடு மோக மன்றே !
ஏழ்பிறப் பினிலும் உள்ளே இருவரும் பிரிவ துண்டோ ?
சூழ்சுக துக்க மில்லாத் தூயநல் லான்மா நாமே.

ஆதலால் அழுகை யின்றி, அகக்கண்ணீர் வார்த்துன் புண்ணில்,
போதரு கின்றேன்; பொல்லாப் புல்லரைக் குமைத்துன் சொல்லை
ஆதரிக் கின்றேன் ; வெற்றி யலங்கலைச் சூட்டு கின்றேன் ;
பூதரு மேனி யாளே பூமியில் உறங்கு கண்ணே !

காதலங் கனியை மெல்லக் கைம்மல ராலே யள்ளிக்
கோதறு மார்பிற் சேர்த்துக் குளிர்கணீ ராட்டி யாங்கே,
மாதரின் சிகிச்சை வண்டி யேற்றிநன் மனையி லுய்த்து,
மோதிய பகைக்கு லத்தை முடித்திட முனைந்தான் மன்னே!

## 35. வெற்றிப் படலம்

விருப்புடன் வெறுப்பும் போல விளக்குடன் இருளும் போல,
நெருப்புடன் காற்றும் போல, நினைவுடன் மறதி போலே ,
உருப்பெயர் தாங்கி நிற்கும், உள்விகா ரங்கள், ஆங்கே
செருக்களம் புகுந்து போர்கள் செய்வதைக் காணு வோமால்.

"சித்திமான் சிரத்தை வாங்கி உன்னையும் சிறைப்பி டித்துப்
பத்தியா சார மென்னும் பையித்தியம் பிடித்தார் வைகும்
சித்தியிற் கொடியை நாட்டிச் செய்கிறேன் ஆட்சி" யென்றே
பித்துறு கலிய னின்னும் பெருஞ்சமர் தொடுத்தா னம்மா !

இலங்கைப்போர், பாரதப்போர், திரிபுர மெரித்த வெம்போர்,
கலங்கறு பாணன் செய்போர், கந்தவேள் புரிந்த போர்கள்,
இலங்குசி வாஜி சிங்கன் இருவரும் செய்த போரும்
விலங்கறு குடும்பப் போரும் வெட்குமிப் போர்முன் அம்மா !

அறங்கெடு மரக்கர் சேனை யனைத்தையுங் கொண்டு வந்து,
மறங்கெழு போரி லூக்கி வாளுடன் வலையும் வீசி,
அறங்கெழு சித்தி சேனை யனைத்தையும் அழிக்க, வெய்யோன்
புறங்கொடா வீரர் மீது பொழிந்தனன் குண்டு மாரி—

குண்டிற்குக் குண்டு விட்டுக் குத்திற்குக் குத்து விட்டு,
மண்டைக்கு மண்டை பேர்த்து, வலக்கைக்கு வலக்கை வாங்கி,
சண்டைக்குச் சண்டை யிந்து சரிசம னாக நிற்கக்
கண்டுதன் கைகள் மிஞ்சிக் கலியனுங் கனன்று வந்தான்...

விரைந்துறுந் தேர்களோடு விரைந்துறுந் தேர்கள் மோதப்
பறந்துறும் புரவி யோடு பறந்துறும் புரவி மோதக்
கரந்துறும் படைக ளோடு கரந்துறும் படைகள் மோதச்
சுரந்திடுங் குருதி நீந்தித் தூயனுங் கலியைக் கண்டான் !

ஆர்த்தனன் இடிகுரல் ; ஆத்தி ரத்தினல்,
வேர்த்தனன், விதிர்த்தனன் ; "வெட்டு வே" னெனப்
பார்த்தனன் சுத்தனைப் பதகன் வெஞ்சினந்
தீர்த்திடப் பாய்ந்தனன் திக்கனை யுடன் !

"உனதற மில்லையினி உலக மெங்குமே
எனதறம் பரவு"மென் றிடிமு ழக்கினன்,
இனிதெனச் சுத்தனும் ஈட்டி கொண்டவன்
வினையுடல் அகந்தையை விண்டு வீழ்த்தினன்....

"தொகைமிகப் பெற்றுமென் ? சுடு சரங்களை
மிகமிக விட்டுமென் ? வீரங் கூறியென் ?
அகமக மென்றெழும் அதர்மம் பாழ்படும் ;
திகழறம் வென்றிடும்" என்று செப்பினன் !

நெருங்கினர் நெட்டினர் ; நெடும் படைக்கலம்
நொருங்கிடப் பிதுங்கிட நொய்ய ஊனுடல்
சரங்களும் வெடிகளுஞ் சடசடத்திடச்
சிரங்களுங் கரங்களுஞ் சிதையப் போர்செய்தார் !

கொழுகொழு கொழுவெனக் கொழுத்த குண்டர்கள்,
புழுதியில் உருண்டிடப் புரட்டி, நாய்நரி
கழுகுகள் உண்டிடக் கலியுங் கண்டனன்..
அழுதனன் இன்னமும் அமர்தொ டுத்தனன் !

மின்றிரள் வெட்டினவோ வொளிர் வாட்கணம்
வீசி மிளிர்ந்தனவோ ?
வன்மழை மூடியதோ மத யானைகள்
மண்ணை விழுங்கினவோ ?

வெண்சுடர் மங்கியதோ வெடி யின்புகை
விண்ணை மறைத்ததுவோ ?
கண்ணறு போர்விளைவோ, கனல் வாட்டிய
காலன் விருந்துகளோ ?

செம்மலர் தூவியதோ துருவித்தசை
சிந்தி விரிந்ததுவோ ?
கைம்மலை யின்றொடரோ, கறையாறு
கனன்று செலுங் கரையோ ?
வெம்மன ரின்சிரமோ வரையின்முடி
விண்டு குவிந்தனவோ ?
மண்மகள் மூடினளோவிழி விண்ணுறு
மண்டமர் வாய்த் துகளோ !

மாரி பொழிந்ததுவோ சுடு வெஞ்சர
மாரி பொழிந்ததுவோ ?
போருயிர் வெம்புகையோ நமனின்கரும்
போர்வைகளின் சுருளோ !
கார்புயல் சாய் மரமோ சமர்வேகங்
கவிழ்க்கும் உடற் குவையோ !
வீரர் முரசொலியோ, தருமஞ் செயும்
வெற்றி முரசொலியோ !

செம்மலர் மேனி பூத்துச் சிதைந்துதன் படைக ளெல்லாம்
தம்மிடந் தெரியா தோடித் தட்டழிந் துலைந்த தாலே,
விம்மிய மமதை முற்றும் வெற்றுநி ராவி யாகி,
அம்மவென் றயர்ந்து கையில் அகப்பட்டான் கலிய னங்கே !

கலி

"ஐயநின் னாற்றல் முற்றும் அறிந்துன தடிப ணிந்தேன்,
செய்யவர் உறையு மிந்தச் சித்தியின் பக்கம் வாரேன் !
உய்யநான் விடுதி" யென்றே ஓலமிட் டவனைத் தூயன்,
மெய்யுரை யிதுவென்றுலுன் விடுதலை பெறுதியென்றான்..

ஆருயிர் உலகிற் கெல்லாம் அறந்தவிர் கேடு சூழாப்
பேருயர் உறுதி வாங்கிப் பெரியமன் னிப்பைத் தந்து,
சோருயிர் தாங்கி நிற்குங் கலியனைத் தூய மன்னன்,
வேருடன் அழித்தி டாமல், விடுதலை செய்தான் மாதோ ?

வாயினால் உறுதி சொல்லி, வஞ்சத்தை நெஞ்சில் வைத்தே,
போயினன் கலியன்.இன்னும்பொருபடைகொணர்வோமென்றே!
வாயிலை யணுகும் போதே சத்தியன் வயத்தி லேதன்
கோயிலும் ஊருங் காணக் கொதித்துளம் பதைத்து நின்றான் ;

காலடி வைத்த போதே கைதிநீ என்று வீரர்
வேலோடு நடத்தி யாங்கே வெஞ்சிறை யடைத்து விட்டார் ;
வாலிழந் தான யிட்ட நரியென வஞ்சன், வெற்றிக்
கோலதிர் முரசங் கேட்டுக் கூகுவென் றழுது சோர்ந்தான் !

முதியநல் லிளைஞ னான சத்தியன் அறிவின் மிக்கான்,
கருமித சேனை கொண்டு, காட்டினின் றெழுந்து வந்தே,
கொதிகொளுங் கலியன் மூலக் கொடும்படை சித்தி நோக்கிக்
குதிகொளச் செல்லுமப்போ கோட்டையைவளைத்துக்கொண்டான்!

கலியனுர் வைத்த வெய்ய காவலின் படைக ளெல்லாம்
எலியனுர் போற்ப துங்கி எங்கெங்கோ சிதறி யோடப்
புலியனுர் போலச் சிறிப் புடைத்ததத மாக்கி நம்மின்
வலியனுர் என்றரக்கர் வணங்கிடச் செய்தான் மெய்யன்.

மன்னனுக் காசைப்பட்டு மனுளனை யிழந்தாள் போலே,
இன்னொரு நாட்டை வேட்டே யிருப்பதைத் தோற்ற மூடன்
கன்மன வகந்தை யின்னுங் கரைந்திலான் சாம்பற் பூத்த
வன்னெருப் பென்ன வுள்ளே வஞ்சகச் சூழ்ச்சி செய்தான்.

சிறையினின் றுடனே தப்பித் தானவஞ் செல்ல நோக்கி
மறைமுக மாகச் சூழ்ச்சி வகையுறச் செய்தோர் நாளில்,
கறையிருள் உலகை முற்றுங் கௌவிய நிசியில் ஆங்கே
உறைமன மோகி பின்னே உருக்கரந் தோடினனே !

வந்தொரு விமான மாங்கே வாரிச்சென் றிருவர் தம்மை
விந்தையாய் மறைந்த மாற்றம் ஒற்றரும் விளம்பக் கேட்டே,
முந்துதன் னிடத்தி னுக்கோர் முதியகா வலனை நாட்டி,
மைந்தனுக் கோலை விட்டு, வாய்மையன் புறப்பட் டானே !

"காவலைக் கடந்த மோகி—கலியர் விமான மேறி
நாவலந் தீவைத் தாண்டி நாத்திகத் தான வர்கள்
மேவிடுந் தீவைச் சேர விரைந்தனர் ; யானு மாங்கே
போவது கடனே; நல்ல புண்ணிய ஒளிகொண்'' டென்றான்.

"பஞ்சர வுடலில் ஆன்மா பற்றற வாழு மட்டும்,
அஞ்சுவ தொன்று மில்லை, அருட்பணி நன்று செய்தே
துஞ்சுறு யாக்கைச் சட்டை துஞ்சுக மனந்து ணிந்தே
வஞ்சகர் திருந்தச் சொல்வேன் வாய்மை'' யென் றெழுந்தான்
வல்லோன் !

உடலினும் உள்ளம் மேலாம் ; உளத்தினும் உயிரே மேலாம் ;
உடலுயிர் தன்னின் ஆன்மா உயர்வுல கதனின் மேலாம்,
கடவுளே உலகிற் கெல்லாம் காவல னுயின், அன்னேன்
கடமைசெய் திறமு மீவான் கவலையேன் என்றெ ழுந்தான்!

இளவலைக் கெடுத்த தீயர் இரகசி யங்க ளெல்லாம்
களவுறு சூழ்ச்சி யெல்லாங் கலிநகர்ப் பிடித்த போதே
உளவுறக் கண்டு கொண்ட உண்மையன் கப்ப லேறி
மளமள வென்று சென்று மரகதத் தீவிற் புக்கான்......

சத்தியன் செய்தி யெல்லாந் தானவ காண்டஞ் சொல்லும்,
சுத்தனின் செய்தி காணச் சுதந்தர மன வேகத்திற்
சித்திமா நகரஞ் செல்வோம்..செயமுர சொலியைக் கேட்போம்;
வித்தக நல்லீர் என்பின் விருப்புடன் வருகு வீரே ! 128

# 36. கௌரி விலாசப் படலம்

உண்மைக்கு வெற்றி, கற்பின் உறுதிக்கு வெற்றி, தூய
பெண்மைக்கு வெற்றி, மாந்தர் பிறவிக்கு வெற்றி, தெய்வத்
தன்மைக்கு வெற்றி, ஆன்ற தருமத்திற் கினிய வெற்றி,
நன்மைக்கு வெற்றி யென்றே நகரெலாம் இசைத்த தம்மா !

கன்னியர் ஆடல் பாடல், காளையர் வீர வேலை,
நன்மனை தோறு நல்கு நாவுடன் செவி விருந்து,
'மன்னவன் வாழி' யென்னு மந்திர நாத மெங்கும்—!
பொன்னகர் கலையின் போக நகரெனப் பொலிந்த தம்மா !

அத்தனை அரக்கர் சேனை நீறுபட் டழியச் செய்த
சுத்தனின் வீரந் தன்னைச் சுதந்தரக் கவிகள் சொல்வார்,
பத்தினி கௌரி தியாக பலியினைப் புகழ்வார்; ஆங்கே
சத்தியக் கிழவன் பெற்ற வெற்றியைச் சாற்று வாரே !

ஒழிந்தனன் கலியன் என்பார், ஓங்கிய தறமே யென்பார்,
அழிந்தது தீமை யென்பார் ; அரசனின் ஆண்மை யாலே
கழிந்தது கவலை யென்பார் ; கடுஞ்சமர் தீர்ந்த தென்பார்;
பொழிந்தது சாந்த மென்பார் பொன்னக ருள்ள நல்லோர் !

சத்திய சுத்தர் வென்று தருமத்தை நாட்டு நன்னாள்,
புத்துயிர் பெற்ற சாந்தப் புதியநாள், பொலிக வென்றே,
அத்திரு நகர மாக்கள் அரசனின் ஆணை யாலே,
ஒத்தொரு பந்தலின் கீழ் உவகைகொண் டாடி னாரே !

பத்தினி யாக்கை தன்னைப் பன்மல ரணிகள் செய்து,
சித்தியின் புறத்தே அன்னாள் தேசத்திற் குயிர் கொடுத்த
உத்தமத் தானந் தன்னில் உறுகடன் செய்து வைத்த
அத்தகு சூழ லின்று விழாவினுக் கமைந்த தம்மா !

மயனுக்கே நிகராம் சிற்பப் புலவர்கள் வகுத்து, நல்ல
நயமுறு கலை விளங்க நாட்டிய பந்த லின்கீழ்,
சயமுறு வேந்தன் ஆசான் மந்திரி சபையோர் வீரர்,
இயல்புடை இல்லறத்தார் அனைவரும் இலகி னாரே !

கலைதரு புலவர் தந்த கண்-செவி விருந்திற் கப்பால்,
மலையெனத் திண்டோள் பெற்ற மல்லரின் வேலைக் கப்பால்,
விலையிலா உயிரைத் தந்து வெற்றிக்குத் துணைபு ரிந்த
நிலைபெறு பத்தி னிக்கு நினைவுகொண் டாடி னாரே !

பத்தினி பெயரால் ஆங்கே பல்கலைக் கழகங் காணச்
சுந்தரன் முடிவு செய்யத் தொல்பெரும் அமைச்சர் மெச்ச,
உத்தமப் பணிக்கந் நாளே உரியதோர் கிரியை யோடும்
அத்திவா ரத்தை நாட்டக் கணவனே அமைந்து நின்றான்..

சுந்தரன்

என்னருங் குடிகாள், வெற்றி யெய்தினோம் கலியை வீழ்த்தி
என்றும்போ தென்முன் வீரர் இரத்தமே காண்ப தாமே !
நன்னரும் உயிரைத் தந்து, தருமத்தைக் காத்த வீரர்
பொன்னெழுத் தாலே யிங்கு பொலிகநற் புகழி னோங்கி !

நாட்டினுக் குயிர் கொடுத்த நல்லிசை வீரர் வாழ்ந்த,
வீட்டினுக் குதவி செய்தோம், வியன்புகழ் பெற்று வாழும்
வாட்டமில் வீர ருக்குப் பரிசுகள் வழங்கி விட்டோம் ;
மீட்டுமோர் வீரப் பெண்ணின் அருமையை விளம்பு வோமால்..

நொடிக்கொரு மாற்ற மெய்தும் உலகிலே நூறாண் டென்பார்.
சடக்கென முறிந்து வீழுங் கொம்பெனச் சாவார் கோடி,
நடுக்குறும் அரக்கர் போரில் நாதனைக் காக்க வேண்டி
இடுக்கணைத் தீர்த்தி றந்தாள் இளங்கொடி யிவளே யம்மா !

நாயகன் அன்பு மிக்காள் ; நன்மனைத் திருவே யன்னாள்,
தூயகற் பரசி ; யோக சித்தினி சுத்த கௌரி,
தேயத்தை உயர்த்த நல்ல சிந்தனை செய்து சொல்லும்
நேயத்திற் பெரியாள் ; என்னை நினைவிலும் பிரிந்தி டாதாள் !

கலகமில் லாது, நெஞ்சக் கவலையில் லாது, மாய
வலைகளில் லாது, தீய வறுமையில் லாது, வெய்ய
கொலைகளில் லாது, மாந்தர் குலமொன்றாய் வாழ வேண்டி
உலகெலாம் தொண்டு செய்ய ஊக்கினாள் உயிரே யன்னாள் !

அன்றுநீள் இரவில் என்பால் அன்புடன் கொஞ்சிக் கொஞ்சி,
“இன்றுல கின்னல் மாற, மனிதரின் இதய மாற்றம்
ஒன்றுதல் வழியென் றா”ளவ் வுத்தமி சொன்ன தெல்லாம்,
இன்றுநான் செயலிற் காட்ட முயலுவேன் இனிது நல்லீர் !

கப்பற் காட்சி

துந்துபி முழங்கதுவ சங்களொடு தொண்டர்,
சந்ததமும் வெல்கதரு மம்வளர்க வென்றே,
இந்திரனுக் கேற்றஇர தப்பவனி கொண்டே
முந்தொலிசெய் மூரியின்முன் மூரியென நின்றார் !

மாந்தர்களு மாதர்களு மங்கல மிசைக்கப்
போந்துபுக ழேந்திய புவிக்குரிய வேந்தன்,
தேர்ந்தகலை வாணர்கைத் திறம்பட வமைத்தே
நீந்துபுணை கண்டெதிர் நிமிர்ந்துள மகிழ்ந்தான் !

சூகக்கனி யுண்டவன் தொகுத்த தீவிதோ !
தகைமிகு தமிழர்கள் சமைத்த சேதுவோ !
திகைதரு திமிங்கிலஞ் சேர்ந்த கூட்டமோ ?
தொகைபெறு மரக்கலந் தொடர்ந்த காட்சியே.

தண்கட லுடுத்திய தரைக ளேந்திடும்
பண்புறு துறையெலாம் பரந்த ளந்தது,
எண்ணரு போர்வினை எளிதில் வென்றது ;
புண்ணிய மெனப்பெயர் போந்த கப்பலே !

செய்பொருள் விற்றருஞ் செம்பொன் ஈந்தது,
மெய்வழித் தொண்டர்க்கு வெற்றி செய்தது ;
துய்யவர் துணையெனத் துலங்கு மப்புணை
வெய்யவர் நமனென விளங்கும் வேகத்தால்.

நீண்டிடு பயணத்தை நிறைவு றுத்தவே
வேண்டிய பொருட்குவை விளங்குங் கப்பலில்,
ஈண்டிய வீரரோ டெழுந்த சத்தியன்
ஆண்டவன் அருள்கென அமர்ந்து கொண்டனன் !

அடர்திரை சிலிர்த்தெழும் ஆழிச் சிங்கத்தின்,
பிடர்தலை யேறிய பெரிய வீரனும்
இடர்களைத் தாண்டியான் எண்ணும் புண்ணியக்
கடமைகள் கூடிடக் கடவுள் காப்பென்றான் !

"ஆதி சக்தி யருந்துணை நல்குக !
நீதி லாதவுன் செய்கை விளங்குக !
போதி, போந்து வருகுதி" என்றனன்
ஈதலே யற மென்கிற சாந்திமான்.

"நன்றி நன்றி நடுநிலை மன்னவா;
சென்று மீளுதும்" என்றனன் சித்திபன் ;
"வென்றி ! வென்றி" யென் றேவிரை மாமலர்
ஒன்று சேர்ந்த உளங்கள் உதிர்த்தவே !

சத்தி துணை சத்தியஞ் சயமெனக் குரல்கள்
ஒத்திசை முழங்கிட முரசுகள் ஒலிக்க,
முத்துபளிங் கித்தரையில் முன்னுருள்வ தேபோல்,
சத்தியன் புணைகளுந் தவழ்ந்தன விரைந்தே !

# 3. கடற் படலம்

வான மீன்கள் சூழநல் வழியனுப்பி வாணிலா
போனதும் பசுஞ்சுடர் புலர்ந்து பொற்கை நீட்டியே,
'தானவர் அதர்மத்தைத் தகர்த்த வேந்தன் வாழ்' கென
மோனஆசி கூறியே வழிநடத்த முன்னின்றான் !

கண்வளர் திசையெலாங் களிவளர் திரைக்குழாம்,
மின்வளர் முறுவல்வீசி விந்தைவிந்தை யாகவே,
பொன்வளர் கதிர்க்குலத்தைப் புல்லிப்புல்லி யாடிடும்
இன்பமான காட்சியும் இறைவனுடுங் காட்சியே !

கதிர் வணக்கம்

வளிநிறை வெளியிலே, வரம்பிலாத வானிலே,
அளிநிறை மழையிலே, அலைபுரள் கடலிலே,
ஒளிநிறை கதிரிலே, உயர்மலை யளித்திடுந்
தெளிநிறை நதியிலே திருநடம் புரிவதார் ?

காலவான் கருவிமா மழைதருங் கதிரவன்,
கோலமா முகத்திலே குலாவுசோதி யாகவே,
ஞாலவான் பயிரையும் உயிரையும் நடத்திடும்,
மூலசக்தி நாதனே முழுமுதற் கடவுளே !

விண்ணுமண்ணு மந்தரத்தும் வித்தகர் அறிவிலுங்
கண்ணிலுங் கருத்திலும் கனலருட் கதிரவன்,
எண்ணுமெங்கள் எண்ணத்தை இனிதுற வுயர்த்தியே
புண்ணியப் பொலிவுடன் பொருந்தியெம்முள் வாழ்கவே !

தூயநல்ல சிந்தையுந் துலங்கு ஞான சக்தியும்,
நோயிலாத யாக்கையும், நுவலரும் தியானமும்,
ஆயுளாற்றல் ஆண்மைவீரம் அன்புமின்ப வாழ்க்கையுஞ்
சேய்களுக்குத் தாயெனத் தினகரன் அருள்கவே !

உள்ளமான வானிலே ஒளிவளருஞ் சோதியே,
தெள்ளறிவைத் தூண்டியெம்மைத் தேவராக்கிப் பேரின்ப
வெள்ளமாம் அருளிலே வினையுயிர்சென் றுன்னையே
அள்ளிநன் றணைந்திடும் அரியமுத்தி நல்குவாய் !

தேய்ந்திருள் விலகிடத் திருநகை புரிந்திடும்,
சாந்தமான சோதியைத் தலைவணங்கி யிவ்வகை
வேந்தனோடு வீரர்கள் விரும்பியோது மெல்லையில்,
ஏந்து வங்கம் இந்தியக் கடல்கடந்து சென்றதே !

## உலக யாத்திரை

மற்கடல் கடந்த வீரர் மன்னன் கப்பல் வந்ததும்
கற்கடத்தி ராசியின் கடற்றுறை வகிப்பவர்,
‘நிற்க’ வென் றுபசரித்து, ‘நீடு வாழி’ யென்னவே
முற்பட விடுத்தனர் ‘முயற்சி வெல்’ கென் றோதியே !

அடுத்தடுத்த தீவகத் தரக்கர்வந் திழைத்திடுங்
கடுத்ததொல்லை யின்கதை கணக்கிலாது கேட்டனர் ;
தடுத்திடச் செயலிலோமத் தானவர் குழுவினைப்
பிடித்தொடுக்க வல்லவர் பெரியவீரர் என்றனர்.

ஐங்கடல் உடுத்தபாரில், ஐந்துகண்ட மெங்குமே
ஐந்திணையுந் தேடியும் அரக்கர்தீ வறிந்திலார்.
ஐம்பொறி புலன்களால், அருமுயற்சி செய்துமே,
ஐம்பிழைத் தொழிலினர் அகப்படா தொளிந்தனர் !

மோதுநீள் கடலிலே, முடிவிலா நெடுந்தொலை
போதலால் இளைத்தின்றோடு போதுமென்னும் வீரர்க்கு,
ஓதிக் [1] குக், [2] கொலம்பஸ் [3] காமர் உன்னத முயற்சியை
மீதுஞ் செல்லத் தூண்டுவான் விடாமுயற்சி கொண்டவன்....

தென்பரவைத் தீவுடன் , செழித்த சீனம் ஜப்பனைப்
பொன்பர வமெரிக்காவைப் போர்வளர் ஐரோப்பியை
தொன்மைஆப்ப ரிக்கத்தைச் சுழன்று சுற்றிப் பார்த்துமே
வன்பகை யரக்கரின் மறைவிடம் அறிந்திலான்.

சென்றசென்ற திக்கெலாஞ் சிறப்பொடேற்று மன்னனை,
வென்றி கூறுவார் அரக்கர் வெஞ்செயலுங் கூறுவார் ;
தொன்று தொட்ட சீர்மிகத் துலங்கு ரஷ்ஷி யாவிலும்,
இன்றுமிக்க சீர்த்தியோங்கும் இங்கிலாந்துங் கண்டனன் !

ஆக்கமிக்க ஜெர்மன்ப்ரான்ஸ் இதாலி நார்வே * சீடனில்
ஊக்கமிக்க மன்னவன் உறைந்துறைந்து தேடியும்,
தூக்கமற் றிடும்பைசெய்யுந் துட்டர் போரைக் கேட்டனன்,
தாக்கு கின்ற தானவத்தைத் தாரணியிற் காணிலான் !

1. Captain Cook 2. Columbus 3. Vas code gama *ஸ்வீடன்

எவ்வணத்தர், எக்குலத்தர், எவ்விடம் இருப்பவர்,
இவ்வணத்தர் இங்கிருப்பர் என்றுசொல்வ ரில்லையால்,
வெவ்விய கவலையுற்ற வேந்தன்சிக ரத்திலே,
தெய்வமே துணையெனத் தியானஞ்செய் திறங்கினன்.

பொங்குமாழி செஞ்சுடர் பொலியப்புன் சிரிப்புடன்,
செங்கதிர் விடைபெற்றேகித் திக்கெலாங் கறுத்ததும்,
இங்குளேனென் றின்பமான தண்கதிர் இறைத்துவெண்
திங்கள்,வான மீனெடுந் திருப்பவனி வந்தனன் !

விழிநடந்த திக்கெலாம் வினவியே அலுத்தவர்,
பழிநடந்த தானவர் பதுங்குதீவைக் காணிலார்,
வழிநடந் தயர்ந்தவர் மதிநிலாவி லாடியே
சுழிநடந்த ஆழியைத் துயருழன்று நோக்கினர் !

வீரர்

நாமறிந்த நாடெலாந் துருவி நன்றுச் சோதித்தோம்.
சேமமின்னுங் காணிலோந் திரும்பின் ஆண்மை மாசுறும் ;
பூமியின் வடமுனை பொருந்தி யின்னுங் காணுவோம்—
கோமகற் குயிரையுங் கொடுத்திடத் துணிந்தநாம்...

மன்னன்

இன்ன லுற்ற வீரர்காள், இனிநமக் குறுதுணை
அன்னை சுத்த சக்தியே ; அவள் அருளைப் பாடுவோம்,
முன்னமக் கருளிய முதல்வியின் றருள்கவே
என்னமன்னன் வீரரோடும் இவ்வகை துதித்தனன் :—

பெருத்தபா ரகத்திலே, பெயர்வடிவ பேதமாய்,
ஒருத்திநீ பராபரை உலப்பிலாடல் செய்குவாய் ;
திருத்த முற்ற தீரருக்குத் தீந்துணைசெய் யன்னையாய்
வருத்தமெல்லா நீக்கும் அன்பின் ஆழிவாழி வாழியே !

கனத்திடுங் கவலைகள் கரந்து நோக வாட்டினும்,
சினத்துடன் இயற்கையின் புயல்கள்சீறித் தாக்கினும்,
மனத்தமைதி கொண்டுனை மதித்திறைஞ்சி அன்புடன்
நினைத்தனம் ; அனைத்துநீ நினைத்ததே நடக்குமால் !

தாய்நிலம் விடுத்து நீண்ட தண்கடலைத் தாண்டினோம்,
தீயதான வர்கள்வாழுந் தீவையின்னுங் காணிலோம்,
நேயரும் அறிகிலார் ; நினைத்தவிர வேறிலோம்,
தூய சக்தி யன்னையே துணைசெய் வீர சண்டியே !

சுருளலைக் கடல்கடந்து, துட்டர் வாழுந் தீவிலே,
இருளலைப் புயல்களை இடரிலாது மாற்றியே
அருளலையை வீசநாளும் ஆசைகொண் டெழுந்தனம் ;
கருணைசக்தி யம்மையெம்மைக் காப்பதுன் கடமையே...

எண்ணி யிவ்வகை யேத்திடும் வீரர்கள்
"பெண்க ளைக்கள வாண்டிடும் பேயினர் ;
திண்ணெ னப்புடை மின்" எனச் சீகரர்,
அண்மை யில்வர யாதென் றறிந்தனர்.

தோத்திரஞ் செயுந் தொண்டரைக் கண்டபின்
ஆத்திரந் தணிந் தன்புள சீகரன்,
சீர்த்தி யோங்கிய சித்திப வாவெனப்
பூத்து வகை புரங்கொடு சென்றனன்....

# 4. சீகரப் படலம்

இன்ப மின்பமென் றின்னியற் சீகரன்,
முன்பி ளைப்பினை முற்றிலும் ஆற்றென
நன் மனைக்கு நடத்தி நிருபனை
அன்பு மிக்க விருந்தணி யாற்றினுன்.

தென்னை வீசிடுந் தென்றல் வருடிட,
தன்னி டர்களைச் சற்று மறந்தவன்,
இன்ன மைதியில் ஆழ்ந்திளைப் பாறியே,
பொன்னைப் பூசும் புலரியைக் கண்டனன்.

பழந்த மிழென்ப் பண்கள் முழங்கவே,
எழுந்த சத்தியன் இன்கட னுற்றியே,
இழந்த நெஞ்சம் இருமடங் கெய்தபின்,
தொழுது சுத்தனைத் தோத்திரஞ் செய்தனன்.

புதியநாண் மலரைப் போன்ற புன்னகைப் பொலிவு நல்காய்,
கதிரவன் போன்ற தூய கவலையில் வாழ்வை நல்காய்,
பதியறி வருளாய், நாளும் பரிந்துயிர்ப் பணிசெய் துன்னைத்
துதிபுரி சொல்லை நல்காய் சுத்தசை தன்ய னேஓம் !

புனிதன் றந்தை புகழ்பெற் றெளிர்கென
இனிய சீகரன் எய்தி யிருந்துதன்
மனது றுந்துயர் மன்னனுக் கோதியே
தனது செல்வமுந் தந்தனன் ஆங்கனே !

சீகரன்

பேயென நிசியிற் போந்து பெண்களைத் திருடு கின்றார்.
தீயுமிட் டிடும்பை செய்வார்; செல்வத்தைக் கொள்ளை கொள்வார்
ஏயெனும் பொழுதிற் கள்ளர் இயந்திர ஊர்தி யேறி,
மாயமாய் மறைவார் ; நாங்கள் மடக்கவும் இயலோம் ஐயா !

கேளென தருமை நண்பா கெடுமதி யரக்கர் என்றன்
வாள்விழி அழகி தன்னை வஞ்சமாய்க் கடத்திச் சென்றார் !
மீளருந் துயர முற்றேன் ; மிண்டரை அடக்க என்பால்
ஆளுண்டு ; தான வத்தின் அமர்திசை யறிகி லேனே !

சொல்லொணுக் கலையின் செல்வி, சுந்தரி யெனது பாவை,
வெல்லொணுத்திருக்கள்கொண்டு விளங்கினாள்; சித்தி யெல்லாம்
வல்லவன் போகன் காப்பில் வளர்ந்தவள், அவனை அந்தப்
புல்லர்கோன் அரசி யாகப் பொருந்தினான் என்றுஞ் சொல்வார்!

வட்டமா வுலக ளந்த வளமிகு போகன், ஊகன்,
அட்டமா சித்தி வல்லான், அருந்தவம் புரிந்த றிந்தே
துட்டரின் சூழல் காணச் சூத்திரப் புரவி செய்தான் ;
இட்டசித் திகளை யீவான் எனக்கொரு வாக்கும் ஈந்தான்...

அல்லலிற் கைகொ டுக்கும் அருந்தவப் போகன், "இங்கே
வல்லவன் வருவான் ; இந்த வான்பொறி அவனொ டூர்ந்தே
செல்லுதும் தானவத்தைச் சேர்குதும், அரக்கர் தம்மை
வெல்லுதும்" என்றுசொன்னான்வீரநாம்அவனைக்காண்போம்!40

சத்தியன்

அறிகுவன் யோகி போகன் அட்டமா சித்தன், அன்னோன்
புரிவிமா னத்தி லேறிப் புகன்றவா றேகி, நானும்
எரிசின அரக்கர் தீவில் இரக்கமும் அறமும் நாட்டிப்
பரிவுடன் பணிசெய் வேனுன் பாவையைக் காண்பேன் ஐயா !

* * *

இவ்வகை இரண்டு பேரும் எண்ணத்திற் கலந்து கொண்டு,
திவ்விய முனிவன் முன்னே சேவடி பணிந்து நின்றார் ;
துவ்விய போக னுங்கே "தூயனே ஈன்ற மெய்யா,
செவ்விய மன்ன, வீர தீரனே வருக" வென்றான்.....

சத்தியன்

மாதவ வந்தேன் ; மிக்க மாகடல் கடந்து நாளும்
வேதனை யடைந்தேன் ; கொண்ட வினையெனைக் கடுமையாகச்
சோதனை செய்ததைய ; துட்டரின் சூழல் கண்டு
தீதினைத் தீர்க்க வேண்டுந் திறமெனக் கருளு வாயே !

காதல்வாய்ப் புலன்கள் போலும், கடன்பட்டார் கவலை போலும்,
ஈதலில் லாது பூட்டி இரும்பினில் உறங்கு கின்ற
மேதகைச் செல்வம் போலும், வீண்சுமை யாகி வாழ்க்கை
வாதனைப் பட்டதையே வழியெனக் கருளு வாயே !

போகன்

இனிக்குறை யில்லை, யில்லை ; இறைவநல் வகையும் உண்டு ;
மனக்குறை தீராய், ஐய மாவலி யாளுந் தீவை
நினைக்குமுன் அடைவோம் ; அந்த நீள்பணி புரிய வேண்டி,
உனக்குநான் காத்தி ருந்தேன், உண்மையின் உருவ மானாய்!

பரனருட் சக்தி யாலே பாரதத் துதித்து, மாந்தர்
மரபினை வாழ வைத்த மைந்தனை யீன்ற மெய்யா,
இரவினில் இடும்பை செய்யும் இராக்கதர் தான வத்தை
ஒருவனீ வெல்ல வல்லாய் உண்டதற் கினிய சூழ்ச்சி.

சத்தியன்

அலைபுரள் காற்றைக் கேட்டேன், அந்தர மீனைக் கேட்டேன்,
நிலைதுரு வனையுங் கேட்டேன் ; நிலவுமோர் வழியுங் காணேன்,
இலையினிக் கதியென் றேங்கி, இறைவனைத் தொழுதேன்; ஐய
தலைசிறந் தோங்கு கின்ற தவத்திரு வள்ளால் போற்றி !

முன்னிலை நோக்கின், ஈங்கே முழங்கிடுங் கவலை யாழி ;
பின்னிலை சென்றால் ஆங்கே பிழையுறும் எனது மானம் !
எந்நிலை செல்வோம் என்றே, ஏங்கினேன் என்னைக் காத்தாய்,
உன்னருள் வழியே செல்வேன் உறுதியிஃ துறுதி சொன்னேன்!

போகன்

போந்தனை துணிந்து நீயே புல்லரின் வலியொ டுக்க
வேந்தரின் வேந்த, வுன்றன் வித்தகச் செல்வன் யோக
சாந்தத்திற் பரப்பு கின்ற சக்தியே வெல்லு மேனும்,
வாய்ந்தநற் பணியு னக்கும் வகுத்துள தறிகு வாயே !

சித்தியின் வீரர் தம்மைச் சீகர னிடம்வி டுத்து,
சத்திய நீயென் னோடு தானவம் வருவாய் ; முன்னே ;
நித்திய வாலி பத்தை நினக்கருள் சாத னஞ்செய் ;
இத்தகைச் சாத னத்தால் முதுமையும் இளமை யாமே !

சத்தியன்

காயத்தைப் பொன்னாய் மாற்றுங் கற்பகக் கனியும் வாய்ந்தால்
ஏயநல் லுவகை யொன்றே யெய்திடும் ; இறைவ நீசொல் ;
வாய்மைசேர் வழியைப் பற்றி வகுத்தநற் றவங்கள் செய்வேன் ;
தாயினுங் கருணை மிக்காய், தயவுசெய் தருளு வாயே !

போகன்

கனிகிழங் கிலைபால் கொத்துக் கடலையே யுண்ணல், காற்றும்
இனியவெ யிலுந்தண் ணீரும் இயல்வழி யுபயோ கித்தல்,
மனதைநிம் மதியாய்த் தியான மோனத்தின் வழிநி றுத்தி,
எனதுறு தெய்வ சக்தி ஏற்றதும் இளமை யாமே.

அத்துடன் இளம்வல் லாரை *ஒரிதழ் †அம்மான், ‡காணி
சத்துள §தண்ணீர் விட்டான் தூதுளை, மணத்தக்காளி,
சித்தர்கள் செய்யுஞ் செம்பொன் சேர்ரச குளிகை யுண்டால்,
எத்தகைத் தளர்வு மின்றி இளமையோ டிருக்க லாமே !

சுபந்தரு சுத்த சக்தி ஓமெனச் சுருதி பற்றிச்
செபதப மியற்ற லாலுந் தியானத்தி னாலும், ஈசன்
அபயத்தை யளிப்பான் ஐய ; அறமுனக் கருளும் வெற்றி ;
சபதத்தை முடிக்க வல்லாய் சாதனம் செய்ய வாராய் !

* * *

களிமிகு மெய்ய னாங்கே, கடிதினில் யோகங் கூடி,
அளிமிகு சக்தி யேறி அக்கண முதுமை மாறி,
இளவனப் பெய்திப் போகன் ஈந்திடும் அமரானந்தக்
குளிகையும்உண்டு செல்லக் குறித்தநாள் குறித்து நின்றான் ! 100

"அன்பனே, இளைய மெய்யா, அமைந்தது வேளை" யென்று
தன்பொரு வற்ற போகன் சாற்றிட வேந்த னாங்கே,
'முன்செல்வாய்பின்செல்வேன்யான்முனிவர' வென்னும்போதே
நன்கமை விமானங் கொண்டு சீகர நாதன் வந்தான் !

சந்திரியன்

எண்ணருந் துயர்பொ றுத்த வீரரை இனிது நோக்கிக்
"கண்ணெனுங் கடமை காத்துக் கதுமெனத் திரும்பு மட்டும்,
திண்ணென ஊணர் வந்து, சீகரத் திடர்கள் செய்யா
வண்ணநீர் காப்பீர்" என்றான் வாய்மையிற் பெரிய கோமான்.

வீரர்

காதலால் உன்ப ணிக்கே கருதியுன் னுடனே வந்தோம்,
சாதலுந் துணிந்தோம்; வேந்த, தருமத்தின் வெற்றிக் கெம்மை
ஈதலே கடமை யாகும் ; எமையிடைப் பிரிந்துச் செல்லல்
நீதியோ ? உன்னை நீத்து நிம்மதி யடைவ தாமோ ?

சந்திரியன்

அருந்தவ முனிவன் சொல்லும் ஆணையே கடமை யாகப்
பெரும்பணி நோக்கிச் செல்வேன் பிரியங்கொள் வீர ரேநீர்
விரும்பிய படியே, நாங்கள் விரைவினில் வெற்றி கொண்டு
திரும்புவோம் பிறகு சேர்ந்து தேசத்தை நோக்கு வோமே.

* ஒரிதழ்த் தாமரை † அம்மான் பச்சரிசி
‡ பொன்னாங்காணி § தண்ணீர் விட்டான் கிழங்கு

வீரர்

வேந்தநின் ஆணை செய்தல் வீரரின் கடமை யாகும் ;
போந்துநீ வந்தா லன்றிப் புண்ணிய பூமி சேரோம்.
சாந்தமாய் இங்கிருந்து தானவர் இடரை நீப்போம் ;
மாந்தருக் கினிய வெற்றி வாய்ந்துநீ வருக, வாழ்க !

சத்தியன்

தாயினை மறக்கினுந் தான்பெற் றன்புறுஞ்
சேயினை மறக்கினுந் தேச நன்மைக்கே,
பாய்கடற் பணியினிற் பங்கு கொண்டமெய்ந்
நேயரை மறப்பனோ ? நீடு வாழ்கநீர் !

கொஞ்சமும் படையினைக் கொண்டு சென்றிடின்
வஞ்சகர் பீரங்கி, வஞ்சந் தீர்க்குமால் ;
அஞ்சலிர் தனியனென் றசுரர் கோடியின்
மிஞ்சிய தறமென விளங்கக் காணுவீர்.

வீரர்

தேற்றிநல் வீரரைச் சீகரன் கொணர்
காற்றினுங் கடியதாங் ககனத் தேரிலே,
வீற்றிருந் தருந்தவ வேந்த னேடுமன்
போற்றிசெய் பூமழை பொழியப் போந்தனன் !

வித்தகப் போகனும் விண் பொறியினைச்
சக்திஓம் என்றொரு விசையைத் தள்ளியே,
சித்தியால் அந்தரஞ் செலுத்தி, நீள்சிறை
ஒத்தினி தசைந்திட உம்பர் ஏறினன்.

விடயவா சனைகளை வென்று முன்செலுந்
திடமனத் துறவிபோற் சிறகு வீசியே
இடமுடன் காலமும் எதிர்த்து வென்றுவிண்
படகொரு நொடியினிற் பறந்து போனதே....

விண்ணினைத் துருவிடும் வேகக் கப்பலைக்
கண்ணெட்டு மட்டிலுங் கண்டு சீகரன்,
புண்ணியப் பணிநலம் பொலிக வென்றுளே
எண்ணிநல் வீரரோ டிருக்கை சேர்ந்தனன்.

## 5. தானவர் தோன்றிய படலம்

சத்தியன்

இசையுறும் படகி லேறி, இருமடங் காற்ற லூன்றி
விசையுடன் செல்லும் போது, வேந்தனு முனியை நோக்கி,
திசைதிசை பறந்து சென்று தீவினை புரிந்து வாழும்,
தசைவளர் வலி மிகுந்த தானவர் பேச்செ டுத்தான்.

விந்தையாய் விமானஞ்செய்து, விண்ணிடை எனைக்கொண் டேகுந்
தந்தையே இனியெனக்குத் தானவர் சரிதை சொல்லாய் ;
முந்தவர் முளைத்த தெங்கே மொய்வலி பெற்ற தெங்கே,
அந்தத்தி வாழும் வேந்தன் யாரவன் அருள்வாய் என்றான்...

போகன்

தக்கது கேட்டாய் வேந்த தானவர் பிறப்பைச் சொல்வேன் ;
இக்கலி யுகத்தின் பாபம் எவற்றினும் அகந்தை யாசை
மிக்கதென் றறிவாய் ; அந்த மிகையதே தான வம்வாழ்
துர்க்குணக் கூட்ட மென்ற துணிவுடன் கதையைக் கேளாய் !

எனதுமு தாதை ஆதி போகனார் இமைக்கு முன்னே
வனமலை நாடு சென்று வானிலும் உலவ வல்லார் ;
நினைசெயல் இயற்ற வல்ல நித்தியச் சித்தர் ; அன்னார்
தனியிடந் தேடி வந்தார் தானவத் தீவின் கண்ணே !

கொதித்திடுஞ் சகாரா தன்னிற் கொடுந்தவம் புரிந்த பின்னர்,
மதிப்பறுங் குளிர் வனத்தில் மாதவம் புரிய நேர்ந்தார் ;
துதிப்பினும் புல்லர் தம்மைத் தூற்றினும் இருவிகாரக்
கதிர்ப்பிலார் குளிர்வெப் பத்தைக் கலந்தனு பவிப்பா ரன்றே! 20

கொடையிலாக் கருமி போலக் குளிருலாம் வறட்டுக் காடு,
புடைநிற்கும் கடலைச் சூழ்ந்து பொருதிமிங் கில கிலத்தின்
படைநிற்கும் ; புதரில் வஞ்ச நரிகளே பதுங்கி நிற்கும் ;
கடையரின் குணத்தைப் போன்ற தானவக் காட்சி யிஃதே !

நானெனு மனம டங்கி, நாதலங் காரம் பற்றித்
தானெனும் உணர்வு கண்டு, தன்னறி வாக நின்று,
மோனமாம் பரசாந் தத்தை முற்றிலுங் கலந்து போன
ஞானமா முனிவ னுக்குத் தனிமையே நலம தாமே !

நடுநிலைத் துடிப்ப டங்கி, நலிவறச் சமாதி சேர்ந்து,
விடுதலை யின்ப மெய்தி, வீறுகொள் போக னுங்கே,
கிடுகிடுத் திடத்தி சைகள் கீழ்மன வகங்கா ரத்தின்
கெடுபிடி செய்யுஞ் சத்தங் கேட்டெழுந் ததிச யித்தான் !

இடி முழக்கம்

நடுநடுங்கி நரிகளும் ஓடிடப்
படபடப்பொடு பாதளம் ஆடிட,
கடகடத்தெழு காற்றும் பதறிட
இடி முழக்கம் எழுந்ததவ் வெல்லையே !

குன்றுகள் பொடிந்தவோ ? குமுத மிட்டலை
இன்றுல கனைத்துமுண் டேப்பம் விட்டதோ ?
கொன்றுணும் கொடியபேய்க் கூச்ச லிட்டதோ ?
அன்றெனில் ஊழியங் காந்து வீறிற்றோ ?

### இருள் மாயை

யாரென தரசினில் ? எந்த நாடடா ?
பேரென ? ஊரென ? பேசி டாயெனில்,
பாருனைப் பிளந்துயிர் பருகு வேன்எனப்
பேரிடிப் புயலெனப் பேயுங் கூவிற்றே !

### போகர்

மனிதன் யான் ; மனதூர் ; புவி நாடென்முன்
இனிது வந்துன் கதையை இயம்பென,
தனியன் சாற்றிடச் சத்த மடங்கியே
முனி வியந்திட மோகினி வந்தனள்.

### இருள் மாயை

நிறஞ் சிவந்த நெருப்பெரி மாலையில்,
பறந்து வந்து பளிச்சிடு மின்னென,
கறங்கெனச் சுழல் கண்வலை வீசியே,
பிறந்த மேனிக் கிருந்தனள் பெண்மகள் !

கொழகொ ழென்னக் கொழுத்த சதையினள்,
செழுசெ ழென்னத் திரண்ட முலையினள்,
வழவ ழென்னவம் பாடிடும் வாயினள்,
அழக ரக்கி அசைந்து நெருங்கினள்.

பொன்னி றத்தினைப் பூசிய பூதகி,
புன்ன கைத்தனள் போலிப்பல் காட்டியே ;
மின்னி டையை மினுக்கி வளைத்து'நீ
என்னு டன்வினை யா'டென் றியம்பினள் !

### போகன்

நஞ்சுங் கூற்று நயனத் தொளித்தநீ,
வஞ்ச மோகினி மையல் வடிவமோ ?
கொஞ்சி வந்து குமரரைப் பற்றியே
பஞ்சை யாக்கிடும் பாசப் பரத்தையோ ?

இன்னல் செய்யும் இழிமனப் பேயளே,
முன்மொ ழிந்த கடுமொழி யுன்னதோ ?
என்முன் வந்த எரிமலைக் காமியே
பின்செல் உன்சொல் பிழையுறு வஞ்சமே !

உச்ச மேறிய என்னை உருட்டியே
நச்ச ராகொள் நரகத்தில் வீழ்த்திடப்
பச்சை மோகினிப் பாசத்தை வீசினுய்
சிச்சி உன்னை நினைப்பதுந் தீமையே !

இருள் மாயை

அந்தண் மாமுனிக் காத்திர மாகுமோ ?
இந்தக் கோபத்திற் கென்பிழை செய்தனன் ?
முந்தென் காதையை முற்றிலுங் கேளென
வந்த மாயை வளர்கதை பேசினுள் !

வானவரைப் பணிகொண்டு மானிடரை
மனநடுக்கி மண்ணை யாண்ட
தானவரென் முதுகுரவர் தணியாத
முடிவேந்தர் தசமு கன்போல் ;
மானமிகு தாருகனுந் தாடகையுந்
திதியும்வளர் மரபில் வந்தேன் ;
யானரசி யான் அரக்கி, யான் குமரி
என்னழகை இனிது காணுய்.

சரங்கொண்டு, நகங்கொண்டு, நயவஞ்ச நகைகொண்டு
சக்தி வேலைக்
கரங்கொண்டு கால்கொண்டு கண்கொண்டு கதங்கொண்ட
கருவங் கொண்டும்,
நரங்கொண்ட தேவர்களெம் வரங்கொண்ட நாயகரை
நலித்தார் ஐயா !
உரங்கொண்டிங் கொளிந்தவருள் உடல்கொண்ட உயிரரக்கி
ஒருத்தி யானே !

பசியாலுங் குளிராலும் பரிதவிக்கும்
பாவியெனைப் பருவப் பாசம்
விசையாகப் பிணித்ததை விரைவாக
விடுவித்தால், விருப்பா லுன்னைப்
புசியாது விடுவேனுன் புலனடக்கும்
புரட்டுகளைப் புரட்டிப் பார்ப்பேன்.
அசையாமல் இருந்தாலும் அசைப்பேனுன்
அருந்தவத்தை மாயை யானே !

போகன்

எலும்பு தசை நாரிஞெ டிணைந்தபுழுக் கூடே,
சிலந்திகள் இரண்டுறச் செறிந்தமட மார்பே !
பலந்தனை யுறுஞ்சிடப் பசப்புமொழி சொல்வாய்
நலந்தெரி விவேகிநர கத்தையணை வானே ?

மோகவிருள் மாயை, முனிவர்க்கெதிர் இழைக்கும்
சாகசியுன் பேய்வலையைத் தப்பினர் பிழைத்தார் ;
வேகமுறச் சிக்கிமடி வார்விரைவில் வீணர்,
போகனிடம் சூழ்ச்சிபலி யாதினிது போபோ !

இணங்கினவர் ஆயுளை இரக்கமறத் தேய்த்துப்
பிணஞ்செய்து பிசைந்துணும் பெருந்துயர நோயே !
நிணந்தனை நிணந்தர நிரப்புநர கேஉன்
வணங்கரு மனத்தினை வணக்கிநல மோங்காய்.

வெம்புலி மறைத்தொரு விகாரநகை செய்யும்
அம்புலி முகத்தில்விழி யம்பினை விடுத்தென்,
இன்பமய யோகமிழி வாகிட முயன்றாய் !
நம்பியுனை ஞானியர் நலங்கெடுவ தாமோ ?

இருள் மாயை

வன்றவம் பயின்றனை வரங்கள் பெற்றனை ;
என்றனுக் குறுதுணை யியற்றக் கூசினை,
என்றவம் பயின்றனை ஏழை மானிடா ?
ஒன்றிய உவகையை உணரும் வாழ்விலாய். 120

ஐயநீ ஐங்கணைக் கஞ்சிக் கூசினை
ஐயநீ கொண்டனை அலியைப் போலவே.
மெய்யறி வின்பவே தாந்த மீறினை ;
மெய்யறி யின்பத்தை வெறுத்த வீணனே !

புண்புழு நரகெனப் பொய்ந பும்சகர்
பெண்களைப் பழித்தனர் பெண்ணின் வந்தவர் ;
கண்ணென்றுங் கனிரஸக் கட்டி யென்றுமே
விண்ணுறப் புகழ்ந்தனர் வீரச் சாதகர்.

*மகன் மணங் கெடுத்தனன் வலைச்சி காதலன் ;
†மிகமனை தவிர்த்தனன் வேசி காதலன் ;
‡பகவனை நடத்தினன் பரவை காதலன்
சகநிலை காதலின் சரிதை யாகுமே !

§அணங்கினை மறுத்தவன் அலியு மாயினன்,
||இணங்கிட மறுத்தவன் இகலை ஊக்கினன் ;
வணங்கறு தசமுகன் வாட்கண் பாவைக்கே
நிணங்கெழு போர்செய்த நிகழ்ச்சி காணுவாய் !

---

*சந்தனு—சத்தியவதி. †கோவலன்—கண்ணகி, மாதவி.
‡சுந்தரர்–பரவை நாச்சியார். §விஜயன் ஊர்வசியை மறுத்தது.
||இராமன் சூர்ப்பணகையை மறுத்ததால் இலங்கைப் போராக்கினன்.

காதைகள் பிறந்ததும், பெண்ணின் காதலால்
வாதைகள் வளர்ந்ததும் பெண் மறுப்பினால்
தாதைகள் பிறந்ததும் தனயர் வந்ததும்
பேதைகள் என்கிற பெண்க ளாலன்றோ!

அலகிலை, அணியிலை, அரிய தொன்றிலை,
உலகிலை உயிரிலை, உடலு மில்லையே ;
கலகிலை வெற்றியின் காட்சி யில்லையே,
இலகுயிர் பெண்களின் இன்பம் இல்லையேல் !

உடலுயிர் இன்பத்தை உண்மைக் காதலர்
படகெனக் கொண்டுயர் பதவி சேருவார் ;
கடமையிற் பெரியது காதற் காத்தலே ;
மடமையிற் பெரியது மாதை நீத்தலே !

காலமெய் வாழ்வினைக் கவர்ந்து செல்லுமுன்,
கோலமெய் மாதினைக் கூடி வாழ்விலே
நாலையும் பெற்றிட நாடி டாயெனில்,
சீலமுந் தோல்வியுன் சென்மந் தோல்வியே !

அலியென மறுத்தனை அழகை ; யுன்னையான்
புலியெனப் பற்றியென் புலமை காட்டுவேன் !
எலியென ஓடுவாய்....இனியுனைப் பெறும்
வலியெனக் குளதுநல் வாழ்வை வாழ்கிலாய் !

போகன் ஓடுதல்

ஓடினான் மாதவன் ஓபெரும் பேயெனத்
தேடினான் மறைவிடஞ் சென்றுசென் றெங்குமே.
ஊடறு ஊசிநூ லொப்பவே அப்பெணுங்
கூடினாள் கூற்றையுங் கூடிடக் கொஞ்சுவாள்.

அள்ளினாள் பெண்மையால் ஆண்மையை வென்றனள் ;
உள்ளமுங் கட்டவிழ்ந் தோடிட மாதவன்,
கள்ளியின் காமத்திற் கண்ணிழந் தொன்றினான் ;
விள்வதென் ? மோகத்தால் வீழ்ந்தவர் கோடியே !

அந்தியிற் சுற்றுலாம் ஆசையி ருட்கணம்
முந்துதந் தீவினை முற்றுதற் காவலாய்,
வந்திருள் மாயையுள் வாகுறச் சேர்ந்தன ;
சந்ததம் பூவினிற் சண்டைகள் செய்யவே !

ஆப்பிழு குரங்கின் காதை யாமென உறுதி நெஞ்சின்
காப்பிழந் தரக்கி கையிற் கடுமையாய்ச் சிக்கி னானே !
தீப்பொறி யெனக் கிளம்பித் தின்றிடுங் காமநோயை
நீப்பவர் நீத்தார் என்ற நினைவையு நினைந்தான் அன்னான் !

கணையெனக் கண்கள் வீசிக் கடும்புய லெழுப்பி வாழ்க்கைப்
புணையினைச் சுழியி லாழ்த்திப் புந்தியைச் சீர ழித்துப்
பிணிதரும் காமா வேசப் பேய்தவக் குகையி னுள்ளுந்
துணிந்ததை யெண்ணிப் போகன் சொல்லொணுத் துன்பமுற்றுன்!

நேரிலாக் கலவியாலே நிரம்பிய மாயை யாங்கு,
வீரியப் பகைவன் மைகள் விதவித வுருவந் தாங்கும்
பூரியர் தம்மை வெய்ய புதல்வராய்ப் பெற்ற பின்பு
காரிய மான தென்று கரியபே யுருவங் கொண்டாள் !

காய்சினக் காம மோகக் கடுமதக் கள்ள வஞ்சப்
பேய்களை மாயைக் கீந்த பிழையினை நொந்த போகன்,
தூயமா தவத்தி ஞலே துயரினை நீக்க வேண்டிப்
போயினிப் பிழைக்க யோகம் புரிகுவன் என்று சொன்னுன் !

இருள் மாயை

தானவர் தந்தை யாகி, மனப்பசி தணித்த தாலே
போனக மாக்கா துன்னைப் போவென விடைகொ டுத்தேன் ;
மானவர் குலமும், எங்கள் மரபினை முன்ன ழித்த
வானவர் குலமும் அஞ்ச வாழ்வதென் கடமை யாமே !

ஆதி போகர்

தன்றிறச் செருக்கு மிக்க தானவர் உனது மைந்தர்,
வென்றிறல் உடையா ரேனும், விழுமிய புனிதர் தம்மைக்
கொன்றிட முனைந்தா ராகிற் கொன்றிடும் அறமே, உண்மை
வென்றிடும் ; யோக சக்தி வீழ்த்திடும் அரக்கர் வாழ்வை !
தன்னலச் செருக்கி ஞலே தரங்கெடுந் தானவர்கள்
இன்னல்கள் செய்து வீழ்ந்தார்; இன்னமும் இன்னல்செய்தால்,
முன்கதை முளைக்கு மென்று முடிவுறக் கூறிப் போகன்,
தென்புறந் திரும்பி வந்து சிகரஞ் சேர்ந்தான் மாதோ !
கனியுடன் பாலும் உண்டு காற்றுடன் வெயிலுந் தோய்ந்து,
தனிமையி லூன்றி மோனத் தணலினை வளர்த்து, சாந்த
மனதையும் உள்ள டக்கி மலர்ந்திடச் சக்க ரங்கள்,
முனிவரன் ஸஹஸ்ரா ரத்தில் முத்தியை மீண்டுங் கண்டான்...

உலகெலாஞ் சுற்றி வந்தே, உடலினை உதறிப் போகன்
இலகுறு விதேக முத்தி எய்திய பிறகுஞ் சீடர்
நலமுற யோக சக்தி நல்குவான் அருவ மாக,
பலரவன் அருளைப் பெற்றுர் ; பண்பருள் ஒருவன் யானே !
வன்றவத் திறமை யாலே வழி வழி யாக வந்த
பொன்றறு சித்தியெல்லாம் பொருந்தினன் யானும் ஆங்கே
என்றலும் போகன், மெய்யன் "இனிதினி தினியவ் வூணர்
ஒன்றிய கூட்ட மாக ஓங்கிய கதைசொல்" என்றுன் !

# 6. மாவலி எழுந்த படலம்

துன்மதி, வெறியன், பாசன், சூடுசரன், கொடிய காமன்,
கன்மதி, கலகன், பேயன், கவந்தன்,வஞ் சகன், புரட்டன்,
தன்னலத் தூம கேது, தந்திர நரியன், பொய்யன்,
குன்ம நோய் போன்று மாந்தர் வருந்திடக் குலவி னாரே !

வெருவுறு காம மாதி வேதனை தடித்த பொல்லார்,
பெருகினர் உலகமெங்கும் பெண்களைத் திருடி வந்தே,
கருதிய தியன்ற தென்றே, களிப்புறு மாயை ஓர்நாள்
“பொருகவிப் புவியை”யென்று போந்தனள் உடலை நீத்தே.

நிலைபெறு தருமந் தாழ, நேரிய வாய்மை சோரத்
தலைபெறு கூரன், கோளன், சங்கடன், கலகன், ஆதி
கொலைவளர் அரக்கர் வாளின் கொடிபிடித் தழிவு செய்து,
பலபலர் ஆண்ட பின்பு, பரிவிலாச் சிங்கன் வந்தான் ;

கலிங்கத்தின் கன்னி யான கமலியைக் கூடிச் சிங்கன்,
வலிமிகு மைந்த ரான மாவலி அனலோன், மோகி
பலியிர ணியரைப் பெற்றுப் பலமுற வளர்த்தான் ; அன்னோர்
புலியினுங் கொடியர் ; சாந்தப் புண்ணிய நாட்டின் ஒன்னார் !

அருந்தமிழ் வள்ளலார் அறிந்து தேர்ந்துரை,
குரங்கினுங் கொடுமனக் குடும்ப கோரம்போல்,
பெருந்துயர் செய்திடும் பேய்ம காரிவர்
புரிந்ததைச் சொல்லிடிற் புராண மாகுமே ! 20

துள்ளுவர்; துயிலிளஞ் சேய்க ளைத்தொடை
கிள்ளுவர்; கிழவரைப் பாழ்கி ணற்றிலே
தள்ளுவர், எள்ளுவர் ; சண்டை மூட்டுவார் ;
கொள்ளியைக் கூரையிற் செருகிக் கூவென்பார் !

ஆரையுந் திட்டுவர் ; ஆட லாகவே
போரரங் காக்குவர் ; பொறாமை பற்றிடிற்
பாரையும் மண்டையிற் பாயத் தள்ளுவார் ;
வேரொடு மரங்களைப் பிடுங்கி வீசுவார் !

மலைமுடி தாவுவர் ; மற்க டங்கள்போல் ;
அலைகடல் கலக்குவார் ஆளை ஆழ்த்துவார் ;
கொலைமதம் பிடித்தவர், கொள்ளைக் காரர்கள்,
புலைமது புசிப்பவர் புலியின் வெம்மையர் !

அறங்கெடச் சினப்பவர், ஆசை யாணவம்
பிறங்கிடச் செய்திடும் பெரிய வேங்கையர் ;
உறங்குவர் பகலினில் இரவில் ஊரெலாங்
கறங்கெனச் சுற்றுவர் காம வேகத்தால் !

மெத்தவுஞ் சொல்வதென் விஷ விருட்சத்தின்
வித்தினில் விடமுறல் விந்தை யாகுமோ ?
கொத்திடும் பாம்பினக் குணமும் போகுமோ ?
அத்தகைக் கொடியவர் அரக்கர் கூட்டமே !

இத்தகைத் தீயவர் இயந்தி ரங்களின்
சித்தியும், செருமிகச் செய்யும் ஆற்றலும்,
புத்தியும் போகமும் புவியை யாண்டிடும்,
பித்தமும் கொண்டிடிற் பேச வேண்டுமோ ?

சாத்திரப் பெரும்புலி, தந்தி ரப்புலி,
நாத்திகப் புலியெனப் புகழை நாட்டிய
தீத்தணல் போன்றகஞ் சினந்த வெள்ளியே
ஆத்திரங் கொள்குரு வாகிற் கேள்வியேன் ?

கத்தியைச் சுழற்றவுங் கனலை வீசவும்,
புத்தியை மயக்கவும் போரைத் தூண்டவும்,
வித்தைகள் பயிற்றினன் வெள்ளி மாந்தரைச்
சத்துரு வாக்கினன் தான வத்திற்கே !

எனதுடல், எனதுயிர், எனது செல்வமே,
எனதுல கெனதுவிண் எனது போகமே
எனதிசை எனதறி வெனது கட்டளை,
எனதென தெனுமவர் இழிபொ ருமையே !

மாவலி யாளல்

சிங்கனின் முகத்தில் மூப்பு சித்திரஞ் செதுக்கங் கண்டு,
"நங்குல உரிமை நானே நன்முறை வகிப்ப"னென்று,
மங்கள வாரந் தன்னில் மரணயோ கத்தைப் பார்த்துத்
தங்கமா முடித ரித்தான் மாவலி தான வேசன் !

வாளதே செங்கோலாக, வாட்கொடி பறக்க விட்டுக்
கோளர்மந் திரிக ளாகக் கொடுஞ்சமர் நீதி யாகத்
தோள்வலி சட்ட மாகத் துட்டரே துணைவ ராக
*வேளென நின்றன் மண்ணின் வெறியினுற் கொலையே
சூழ்ந்தான்.

*அரசன்

அரக்கியர் கவரி வீச வாட்படை யரக்கர் சூழச்
செருக்கொடு காமங் கோபந் தெய்வத்தின் மேலும் வன்மம்
கருக்கொளும் வெறிகள் கோடி, காட்டிமா வலி விளங்குந்
திருக்கொலு கண்டா ருள்ளந் திடுக்கிடற் கைய முண்டோ ?

வெண்ணகை வாளே, அன்னர் மீசைகள் வாளே, கையின்
வண்ணமும் வாளே, காக்கும் வரிசையும் வாளே, எண்ணும்
எண்ணமும் வாளே, ஒன்றை இயற்றலும் வாளே, ஆட்சி
பண்ணலும் வாளே, திட்டும் பகையிலும் வாளே யம்மா !

"மண்ணிலும் இணையி லாதேன் மாவலி அரக்கர் சிங்கம் ;
விண்ணிலும் இணையி லாதேன்; இரணியன் வியக்கு நெஞ்சேன்,
புண்ணியப் பகைவன் யானே புவியெலாம் எனதே" என்னும்
எண்ணத்தால் இறுமாந் தெங்கும் இகல்வினை தூண்டி னனே.

"பூவிலென் கொடியே ஆடப் பொருபடை பெருக்கி யாள்வேன்;
ஏவலைச் செய்யா ருக்கென் ஆணையே எமனும் ; என்றுந்
தேவரின் வணக்கங் கொள்வேன், இராவணச் சிங்கம் போலே
மாவலிச் சிங்க மாவேன்" என்றனன் மமதைச் சிங்கம். 80

அடங்கறு காம வெப்பம் ஆறிட வல்ல ரக்கன்
இடமகல் உலக மெல்லாம் இச்சைகொண் டலைந்து தேடி,
முடிவினிற் சிக ரத்தான் மூத்தபெண் அழகி தன்னைக்
கடிதினிற் கடத்தி வந்து, கடிமணம் புரிந்து கொண்டான் !

கலையுடன் கடவு ளன்புங் கருணையுந் தயவுங் கொண்டாள்,
இலைமறு வழியென் றெண்ணி அரக்கனுக் கிணங்கி வாழ்ந்தாள்;
மலையென மாண்பு மிக்காள் வயிற்றினிற் சக்தி யென்னும்
பொலிவுறு பெண்பி றந்தாள் புண்ணிய வடிவு கொண்டே.

செருகுல வூணர் நாப்பண் சேற்றினிற் பூவைப் போல
வருகுல மணியாம் சக்தி வாய்மையுந் தூய கற்பும்,
கருவிலே திருவுங் கொண்ட கன்னிகை யானள் ; அன்னள்
குருவென உய்ப்பேன் உன்னைக் கொள்கைபின் வெல்வ தாமே!

தானவர் கதையி தென்னச் சாற்றிய போக னங்கே,
வான்பட கதனைத் தாழ்த்தித் "தானவம் வந்தோம்" என்றன்;
சூனியத் தீவு முன்னே, சுந்தர மொளிரக் கண்டு,
ஞானியும் வியந்து மெய்ய, நாமுள்ளே புகுவோம் என்றன் ! 96

# 7. நிசாசரப் படலம்

விண்ணிலே பறந்த நாவாய் விசையினை மடக்கி யாங்கே,
மண்ணிலே புதைத்துச் சென்று, மாவலி நாட்டுக் கேற்ற
திண்ணிய வேடங் கொண்டு, சித்தெலாம் உட்க ரந்து,
புண்ணிய சிலர் உள்ளே புகுந்தனர் பூனை போலே !

இசைவலோ ஞக மெய்யன், இன்குழ லோனுய்ப் போகன்
வசையறு வேடம் பூண்டு, வளநகர் காணு முன்பே
விசையினிற் சுந்த ரிக்கு விருப்பமாம் கீத மொன்றை
இசைவுற மெய்ய னுக்குப் பயிற்றினுன் இருடி யாங்கே !

அழலின்முன் குளிர்காய்ந் தாங்கே அமர்ந்தவர்,இடையர்,இந்தக்
குழலிசை கேட்டு வந்து, குதூகலித் "தின்னும்" என்ருர் ;
பழவுணு வளித்தார், கோரைப் பாயினில் இடங்கொ டுத்தார்.
எழுசுரக் கீத நாதம் எவரையும் இழுக்கு மன்ருே ?

தானவர் கூட்ட மான தடிமனக் குடிய ரேனும்,
கானத்தின் மயக்கத் தாலே கன்மனங் கரைந்து சொட்டுந்
தேனென நயந்து பேசித் தேசவி சாரஞ் செய்தே,
ஆனதங் கதைக ளெல்லாம் அளந்தனர் அளவி லாமே !

போகன்

ஊரெலாம் எங்கள் ஊரே, உலகெலாம் எங்கள் நாடே,
சாரமாய்க் கீதங் கேட்பார் சகோதர ராவார் ; இங்கே
வீரராம் செல்வ ருள்ளே வியனிசைக் கலை விரும்பும்
பேர்களைச் சொல்லின் எங்கும் பேசுவோம் உமது நன்றி ! 20

இடையர்

வீடெலாம் பாட்டே, எங்கள் விருந்தெலாம் பாட்டே ; இந்த
நாடெலாம் பாட்டி னுக்கு நடம்புரிந் தினிய செய்யும் ;
ஊடுவார் கூட லுக்கும் உவந்தன கள்ளும் பாட்டும் ;
பாடுவார்க் கெங்கள் வேந்தன் பரிசினை யள்ளி யீவான் !

இல்லெங்கும் இசைமு ழங்கும் இப்பெருந் தான வத்திற்,
சொல்லிசை மிக்க செல்வி சுந்தரி எமது கோவின்
வல்லபி யாயி ருந்து, தனித்தின்று வாழு கின்ருள் ;
அல்லலிற் கைகொ டுப்பாள் அவளைநீர் காணு வீரால் !

போகன்

"கேட்டுளோம் ஐயா அந்தக் கீர்த்திசேர் அழகி வீட்டைக்
காட்டுவீர்" என்னப் போகன் கனகமா வீதி சென்று
கேட்டிடின் உடனே சொல்வார் கிழக்குப்பார்த் தமைந்து,முன்னே
தோட்டங்கொள் வீடஃ தொன்றே துன்னுவீர் என்று ரன்னோர் !

"வந்தனம்" என்று போகன் மன்னனே டுருட் சென்று,
முந்துள காவ லர்க்கு, முகமனும் விடையுங் கூறிப்
பிந்துதம் முடனே வந்த ஒற்றரைப் பிரிந்து சென்று,
விந்தையாந் தான வத்தின் விநோதங்கள் அனைத்துங் கண்டார்!

தெருவணி கண்டார் ; எங்குஞ் சித்திரக் கலைகள் கண்டார் ;
இரவினைப் பகல்செய் கின்ற விளக்கணி யிலகக் கண்டார் ;
வரையெனப் பளிங்கு மாட வரிசைகள் கண்டார் ; எங்கும்
கரையிலாப் போக வாழ்வைக் கண்டனர் கண்க ளாலே !

கள்ளுண்டு பிதற்று வாரும், காமனுர் குறிவைத் தெய்த
வில்லுண்டு பிதற்று வாரும்; வெறிகொண்ட கொடியைப் போலக்
கல்லுண்ட வூணர் தோளைக் கட்டியே பிதற்று வாரும்,
மல்லுண்டு பிதற்று வாரும், மருங்குண்ட காட்சி யம்மா!

உரையெலாம் போதை நாறும் ; ஊனெலாம் புலவு நாறும்,
தரையெலாங் குருதி நாறும், தடம்பெறு கப்ப லோடுங்
கரையெலாங் கொள்ளை நாறும், காற்றெலாம் குண்டு நாறும் ;
வரையிலாப் போக மெல்லாம் வஞ்சமே நாறு மம்மா !

நானெனுஞ் செருக்கி னுள்ளே நாத்திகங் கலந்து வீசும்,
தேனெனும் பேச்சி னுள்ளே திருட்டுணர் வொளிந்து வீசும்,
கோனெனுங் கொள்கை யுள்ளே கொடுஞ்சமர் கொளுவி வீசும்,
ஏனெனக் கேட்டால் வாளின் எரிநகை வீசு மன்றே !

பொன்னெங்கே, வெள்ளி யெங்கே, போகபோக் கியங்கள் எங்கே,
மின்னிடை மாதர் எங்கே, வெறிதரும் குடிகள் எங்கே,
தன்னனப் பாட லெங்கே தாசியர் ஆட லெங்கே,
இன்னலைச் செய்யப் போர்கள் எங்கெனத் திரிகு வாரே !

விண்ணினைத் துருவிச் செல்வார் ; வியன்பெருங் கப்ப லேறித்
தண்கடல் உழுது செல்வார் ; தானவர் பகலு றங்கித்
திண்ணெனக் கிளம்பி, இன்பந் தேடுவார் இரவில் ; அன்னுர்
மண்ணிடை யின்ப மெல்லாம் மாதரார் இன்ப மென்பார் !

ஊன்மது முட்டை மீனுண் டுதித்தவர், திமிர் பிடித்தார் ;
ஆனையும் பிடியும் அன்னுர், அனங்கமா புரமுந் தோன்ற,
மானமில் லாமல் ஆடிப் பாடித்தம் அழகை யெல்லாம்
ஈனமாய் மினுக்க ரங்கம் எக்களித் திடுமிவ் வூரே !

பொறிகளைப் பெருக்கி, ஐந்து பொறிகளாற் போர்தொ டுப்பார் ;
அறிவினைப் பெருக்கிக் கொல்லும் ஆயுதம் பெருக்கு வார்கள்.
கறியினைப் பெருக்கித் தீய காமத்தைப் பெருக்கு வார்கள் ;
வெறியினைப் பெருக்கி, மாந்தர் வேதனை பெருக்கு வாரே !

அலகறு கொடிய காட்சி அகந்துடித் திடவே கண்டு,
புலவரும், வண்டு நல்ல பூவினைத் தேடல் போலே,
இலகுசுந் தரியின் யிருக்கும் இல்லத்தைக் கண்டு முன்னே
பலமலர் மணக்குந் தோட்டப் பந்தலிற் புகுந்தா ரன்றே !

மதிமிகு நல்லா ரேனும், வாழ்வகை யறிந்தா ரேனும்,
புதியரைக் காணின், ஊணர் புல்லியல் இடும்பை செய்வார்,
அதஞ்செயும் அரக்கர் கையில் அகப்படா திவரைக் காக்கப்
பதமுறுங் குளிர்வான் ஆங்கே பனித்திரை யிட்ட தம்மா !

கறைசெறி வாளுங் குண்டுங் கரதலத் தேந்தி, நாளும்
பறையடித் திடும்பைப் போர்செய் பதகரின் பாபக் காட்சி
பொறைமிகு மெய்யன் காணிற் பொறுமையை யிழப்பான்என்றே,
உறைபனித் திரையால் வானம் உலகினைக் கவர்ந்த தம்மா !

கருக்கொளும் பதகர் காணிற் கடும்பகை தொடுப்பார் என்றே
சுருக்கென விண்ணு மேகச் சுருளிலே மறைந்த தேயோ ?
இருட்பனி புதைத்த திவம் எழிலிழந் தொளிந்த காட்சி,
அருட்பொலி வில்லார் நெஞ்சின் அகந்தையைப் போன்ற தம்மா!

கௌவுவெம் புலியைப் போலக் கடும்பனி வாடை வீச,
வெவ்விருட் குகையி னுள்ளே மேற்செல முடிகி லாதார்,
உய்விடம் இதுவே யென்றோர் உயர்நிலைப் படியி லேறித்
தெய்வமே யென்றி ருந்து சிறிதிளைப் பாறி னரே !

பீரங்கிப் பவனி

இடம்விரி திண்ணையில் இளைப்பு நீங்கினர்,
அடம்புரி வாடையின் ஆக்கந் தாழ்ந்ததும்,
கடம்படம் பும்மெனக் கனை முழக்கமும்
நடம்புரி பவனியு நண்ணக் கண்டனர் !

போரங்கி பூண்டவர், போற்றுந் தெய்வமாம்
பீரங்கிக் கணி செய்து பெரிய பேயர்கள்
ஆரங்கள் சூடிவெவ் வாயு தத்துடன்
"பாரெங்கள் பாரெ"னப் பாய்ந்து வந்தனர் !

"ஊழிக்கும் அஞ்சிலோம் உம்பர்க் கஞ்சிலோம்,
ஆழிக்கும் அஞ்சிலோம் ; அவனிக் கஞ்சிலோம் ;
வாழிய மாவலி மன்னன் வாட்கொடி !
வாழிய பல"மென வலியர் கூவினர் !

"மணிமுடி மன்னரெம் மன்னன் சேவகர் ;
அணிமணிப் பாவையர் ஆசை தீர்ப்பவர் ;
பணிவுடன் பயந்தவர் பாரில் வாழலாம் ;
துணிவுறு மாந்தரைச் சுடுவம்" என்றனர்.

குடிவெறி யேறிய குண்டர் கூச்சலைக்
கடிதினி லறிமுனி "கலியன் ஏவிடும்
கொடியவர் புண்ணியக் கொடி யறுத்திடும்
இடியினைப் போன்றவர்" என்று நொந்தனன் !

தப்பிய கலியனித் தான வத்திலே
இப்பொழு திருப்பதும், இகலைத் தூண்டலும்,
அப்பதர் மோகியின் அண்ணல் பொங்கிடச்
செப்பிடும் பொய்களுஞ் செய்யன் சிந்தித்தான் !

படபடத் திடமனம் பதறச் சத்தியன்
இடரினைச் சொல்லிக்கொண் டிருக்கும் போதொரு,
சுடரொளி தெரிந்தது ; சுருதி செய்திசை,
யுடன்குழ லூதிட ஒத்தி சைத்தனன் !

பாட்டு

கார்மழை யிருட்டிலுங் கம்பி மின்னல்போல்
பாரெனப் பளிச்சிடும் பரம சக்தியே,
ஆருயிர்க் குயிர்தரும் அறிவென் றுய்ந்தபின்
யாரெவர்க் கஞ்சுதல் ? அச்ச மில்லையே !

கரியிலும் வயிரத்தைக் காட்டுஞ் சோதியே,
எரியிலும் தங்கத்தை இலக்குஞ் சோதியே,
அரியநல் லன்பருள் அறியும் ஒன்றது,
பிரிவற நிற்கையிற் பேதுற் றஞ்சலேன் ?

சாளரந் திறந்தது ; சன்ன மென்குரல்,
ஆளடை யாளத்தை அறியக் கேட்டது ;
வாள்விழி பார்த்தது ; ‘ வணக்கம் ’ என்றது
நீளறி வாளனு நிலையி தென்றனன் !

மோகன ராகத்தில் உணர்ச்சி மூண்டிடப்
பாகிளந் தமிழிசை பாய்ந்து வந்ததும்,
சீகரச் சுந்தரி தெரிந்து கொண்டனள் ;
போகனும் அறிந்தனன் ; புகலுங் கண்டனன் !

ஒற்றன்

சாடையாய் இருவருஞ் சரிதை பேசுழி,
பீடையாய் வந்தொரு பேய்க்கண் ஒற்றனும்,
வாடையின் ஒண்டிய வஞ்சங் காட்டியே,
கோடையின் இடியெனக் கூச்ச லிட்டனன் !

“ யாரிங்கே அன்னியர் யாங்குற் றீ”ரெனப்
போர்செயச் * சனியனைப் பூட்ட விழ்த்திடும்
கோரமா நிருதனைக் குறித்துப் போகனும்,
வீரமா மொழிகளை விளங்கப் பேசினன்.

*துப்பாக்கிச் சனியன்

" பாடகர் யாமிந்தப் பாரைச் சுற்றியும்
பீடுறு நாட்டினிற் பிரியங்கொண் டுற்றேம் !
ஆடலும் பாடலும் அழகும் வீரமுங்
கூடிய மன்னவன் கொலுவுங் காண்பமால் !

" அநுசரி " அன்னிய ரான நீங்களெம்
முதல்மரி யாதையை முன்பெற் றென்னுடன்
பதமுற வம்மினென் றந்தப் பாதகன்
கதமுறச் சிறையினிற் கட்டிப் பூட்டினன் !

சிகையுறு தீபத்தைத் திருப்பிக் காட்டியே,
திகையுறு மிருவரைச் செங்கைச் சாடையால்,
வகையுறு தந்திரம் வகுத்துக் காட்டியே
தகையுறு சுந்தரி தாவிச் சென்றனள்.

கறையுண்ட கையினர் காக்குங் காரிருட்
சிறையுண்ட செவ்வியர், சிறிது நொந்தபின்,
பொறைமிகு புலமையாற் புகலி தென்றனர்.
அறைகுவன் விடுதலை யான தன்மையே ! 156

# 8. மாவலி இசைந்த படலம்

கடுஞ்சிறை ; சுற்றிலுங் கண்ணுங் காவலும் ;
இரும்புறு கையுமாய் இருக்கும் ஊணர்கள் ;
கரும்பெனப் பேசினுங் கடுக்குஞ் சொல்லினர்—
பெருந்தகை யாரிவர் பிடியிற் பட்டனர் !

### சத்தியன் வருந்தல்

மண்ணினில் அறம்வளர் மங்கலப் பெரும்
புண்ணிய நாட்டினைப் புறம்விட் டிங்குற்றேன் ;
கண்ணறு கொடியவர் கையிற் சிக்கினேன் ;
எண்ணிய தெய்திலேன் என்ன செய்குவேன் ?

திருட்டுறும் அரக்கரைத் திருத்த வந்தயான்,
இருட்டுறுஞ் சிறையினில் எய்தி வாடினேன் ;
மருட்டிடு வஞ்சர்கை மாளு முன்னிறை
அருட்டுணை தந்தெனை ஆத ரிக்குமோ ?

சதிமிகு தானவர் சண்டை தீரயான்,
மதிமிகு முனியுடன் மகிழ்ந்து வந்தனன் ;
விதியெனை யிப்படி விட்ட தே;யினிக்
கதியளித் திறைவனும் காப்ப தாகுமோ ?

இணங்கறு மவுணர்கள் இணங்கி, நல்லறம்
அணிந்திடப் பணிசெயும் ஆசை கொண்டனன் ;
துணிந்தநல் வினைக்கொரு துணையுங் காணிலேன் ;
பணிந்திடும் அடிமையாய்ப் பாரில் வாழ்வனோ ?

போரையும் விடுத்தனன் ; புனிதன் வாழ்கின்ற
ஊரையும் விடுத்தனன் ; ஊர்த்தொண் டாற்றிடும்
சீரையும் விடுத்தனன் ; சீக ரத்திலே
யாரையான் காத்திட விமானம் ஏறினேன் ?

பொல்லவர் புரியினைப் புண்ணி யத்தினால்
வெல்லவும் வாய்ப்பிலை ; வீறும் போர்முனை
கொல்லவும் வாய்ப்பிலை ; கொடியர் காவலில்
அல்லலுற் றென்னுயிர் அழுங்க லாகுமோ ?

செங்கதிர்க் கொடியுடன் சேமங் கண்டிடப்
பொங்கலை சூழ்ந்திடும் புவிகண் டிங்குற்றேன் ;
மங்கல முயற்சியும் வாட்ட முற்றதே ;
என்கவ லைக்கினி யெல்லை யுண்டரோ ?

செய்வதென் இனியெனச் சிந்தை தேக்கிடும்
மெய்யனைப் போகனு மெல்லப் பாடெனப்
பையத்தன் பூங்குழல் பண்செய் தானந்தப்
பொய்கைக்காற் றென்னக்காம் போதி ஊதினான் !

பாட்டு

மாநில மஞ்சிட வந்த மாவலி,
தானவர் காவலன் சபை சிறக்கவே
கானஞ்செய் பாடகர் கவலை கொண்டனர்
ஏனெனக் கேட்பவர் எவரு மில்லையோ ?

தோளினால் உலகினைத் தூக்க வல்லவன் ;
வாளினால் விருந்திடும் வண்மை மிக்கவன் ;
ஆளர சவையினில் அமரும் பாடகர்—
நீள்சிறை காப்பது நீதி யாகுமோ ?

மாவலி எனவரும் மகிழ்சங் கீதத்தை,
ஆவலாய்க் கேட்டனர் அரக்கர் கூட்டமாய் ;
காவலர் களித்தனர், கைகள் கொட்டினார் ;
பாவமு தினிதெனப் பருகி யாடினார் !

ஓவிதென் புதுமையென் றுற்றார் தீட்டியே,
மேவினர் வேந்திடம் விளம்பிக் காட்டினார் ;
மாவலி புகழென மகிழ்ந்து கூறினார் ;
பாவலர் மீதொரு பழியுங் கூட்டினார்.

பொய்கல வாதுரை புகல வாயிலார்—
"ஐயநீ கடவுளை அஞ்சி ருயெனப்
பையத்தம் பாட்டுடன் பாடக் கேட்டனம் ;
தெய்வத்தை உன்னிணை செப்பினு" ரென்றுர்.

"மன்னகோ சிறையுறு மனிதர் பாடிய
உன்னதத் தமிழிசை ஊரை யேய்த்திடும்
தன்னலச் சூழ்ச்சியித் தான வத்திலே
அன்னியர் இன்னிசை யாகுமோ" வென்ருர்.

மாவலி

ஒற்றரின் குயுத்தியை உணரக் கேட்டபின்,
கொற்றவன் பாடலைக் குறித்து நோக்கியே,
வெற்றுரை யிலையிதில் விஷம மொன்றிலை;
கற்றவர் என்புகழ் கதைக்க லாமென்ருன்.

"கடவுளைப் பாடிடிற் கைத்துப் பாக்கியாற்
சுடுவதைத் தவிரவோர் சொல்லு மில்லையே ;
மடவுளம் பிதற்றிடு மதமொன் றில்லையே ;
அடிகளிற் பிசகிலை அறிஞர் பாட்" டென்ருன்.

இகத்தினை மெய்யெனும் எனது நீதியாம்
பகுத்தறி வேதத்தைப் பயின்ற பாவலர்,
சுகத்தினை யென்னிடந் துலங்கக் காட்டியே
முகத்துதி பாடினு முறைமை யாகுமே !

ஆயினும் எவ்வகை அவரிங் குற்றனர் ?
நேயரோ ? பகைவரோ ? நிருதர் அன்றியெத்
தேயரும் அறிகிலாத் தீவில் எங்கனம்
காய்சினக் காவலைக் கடந்துற் ருரென்ருன்.

ஒற்றர்

தாடியை வளர்த்தவர் சாது வானவர் ;
பாடிடும் வாலிபன் பசுவைப் போன்றவன்.
நாடொறுஞ் சென்றிவர் நல்ல செல்வரை
நாடியே பிழைத்திடும் பஞ்சை நாட்டினர்.

வெருட்டினும் வெருண்டிலர் மெலிந்த மானிடர்
அரட்டினு மரண்டிலர் அமைதி வேண்டினர் ;
விரட்டினும் ஓடுவர் ; வித்தை யிற்பொருள்
திரட்டினு நம்மவர் திருட்டை மீறிலார்.

தானவத் தீவிற்கித் தனிய ராகிய
மானிடப் பசுக்களால் வருவ தொன்றிலை ;
ஏனிடர் என்றலும், இணையில் ஒற்றர்கள்
கோனிடர் நீங்கிச்சுந் தரியைக் கூவினன்....

சுந்தரி வருதல்

சந்தமென் ருலதைத் தணிக்கை செய்திடத்
தந்திர மாவலி தான ழைத்திடும்,
சுந்தரி வந்தொரு சுடரு மென்னகை
அந்தமா யவனுளம் அழிய வீசினுள்.

வாட்டத்தைப் போக்கிடும் வனப்பின் செல்வியே
பாட்டிதன் பதவுரை படித்துச் சொல்லெனக்
காட்டலும், சுந்தரி கருத்துள் இன்புற
நீட்டுரை இசையுற நிகழ்த்தி னளரோ !

சுந்தரி

இத்தலந் தோளினில் ஏந்த வல்லநின்
சத்தியைப் பண்ணுறச் சாற்றும் இக்கவி ;
கத்திகொண் டுலகினைக் கடியுந் தானவா,
உத்தமர் வாக்கிதன் உண்மை பொய்க்குமோ ?

விண்ணிலு மண்ணிலும் விளங்கு முன்புகழ்,
பண்ணினில் அமைத்தவர் பாழ்சி றையிலே,
கண்ணிலாச் சேயெனக் கலங்க லாகுமோ ?
திண்ணென விடுதலை செய்க மன்னனே.

எம்மிடம் வீணையும் இனிது சேர்ந்திடப்
பொம்மெனக் குழலுடன் புலவர் பாடுவார் ;
நம்மகள் சக்தியு நாத வித்தையைச்
செம்மையா யறிந்திடச் செய்வ தாகுமே !

மாவலி

கானத்தைக் கேட்பதிற் களிக்கும் என்னுளம் ;
வானகப் புரட்டினை வஞ்சந் தீர்க்குமால்,
தானவர் சட்டத்தைத் தழுவிப் பாடிடத்
தேன்மொழி யாய்,அவர் தெரியக் கூறுவாய்.

கடவுளுங் கிடவுளுங் கலந்தென் காதினைக்
குடைந்திடின், அவர்களைக் கொன்று போடுவேன்.
திடமிகு லூஸிஃபர் செருக்கைப் பாடினல்,
அடைகுவர் மதிப்பென அறியச் சொல்லுவாய்.

சுந்தரி

கடுத்திலை ; அன்னவர் கடவு ளோடும்போர்
தொடுத்ததைத் தானையே துணிந்து பாடுவார் ;
விடுத்தவர் சிறையினை வெளிவந் தென்னிடம்
அடுத்ததும் பிடித்ததை அவருக் கோதுவேன்.

முன்னரப் பாடகர் முறைமை யாகவே,
என்னிடங் கற்றபின், ஏற்ற நாளிலே
உன்னிடம் இசைத்திட ஒழுங்கு செய்குவேன் ;
நன்மையி தாமென நயந்து கூறுவேன்.

மாவலி

தந்தனன் விடுதலை ; சாது மானிடர்
நந்திருக் கொள்கையை நன்குக் கற்றபின்,
எந்திருச் சபையிலே யிசைக்கச் செய்குவாய் ;
சுந்தரி, என்னுடற் சுகத்தின் பாவையே !

கவிகளும் வந்தனர் ; காவல் விட்டதும் ;
தவங்கனிந் ததுவெனத் தக்க சூழ்ச்சியால்
அவம்பெறு தானவர் அதர்ம வாழ்வினைச்
சிவம்பெறத் திருத்திடத் திருவுஞ் சிந்தித்தாள்.

சுந்தரி, முனிவனைத் தூய மெய்யனை
வந்தனம் வருகென விருந்து வைத்தபின்,
அந்தரங் கத்தினை அவரி டஞ்சொலி,
விந்தைகள் செய்ததை விளம்பு வாமரோ. 136

# 9. அந்தரங்கப் படலம்

**கா**ரிருட் சிறையை நீத்துக் கட்டுகள் விலகச் செய்த
பேரருள் அழகி கேட்கப் *பிதாவின்சே மங்கள் சொல்லிப்
பாரத நாட்டுச் செய்தி, முற்றிலும் பகர்ந்து, போகன்
"வீரசுந் தரியுன் காதை விரிவுறக் கூ"றென் றுனே !

சுந்தரி

"கோனுடன் அருளின் வந்த குருமணி போற்றி ! இந்தத்
தானவந் திருந்த நல்ல தருமமே போல வந்தீர் ;
யானெதிர் பார்த்தி ருந்தேன் ; இன்றெனக் கின்ப" மென்றே
மான்விழி மலர நோக்கிச் சுந்தரி மற்றுஞ் சொன்னுள் :—

எந்தையே இந்த நாட்டில் இருசெவி சுவர்க்கும் உண்டு
சுந்தரி பட்ட பாட்டைச் சுருக்கமாய்ச் சொல்வேன் ; எல்லாம்
அந்தரங் கத்தில் வைத்தே, அருட்பணி செய்ய வேண்டும் ;
இந்தரா க்ஷஸரை மாற்றும் மாற்றமும் இயம்பு வேனுல்.

* சீகரன்

அன்னைபோல் எனைவ ளர்த்தாய் ; அறிவுடன் கலைக ளீந்தாய் ;
என்னையே எனக்க ளித்தாய் ; இணையிலாச் சித்த ரேறே,
உன்னரும் பெயரான், ஆதி போகனால் உதித்த ஊனர் ,
இன்னலே யாஞ ரிந்த உலகெலாம் இடும்பை செய்தார்...

"உண்மைகற் புயர்ந்த நீதி ஒப்புர வுயிரி ரக்கம்,
புண்ணிய மென்ப தெல்லாம் புராணிகள் புரட்டே"யென்பார் ;
எண்ணத்திற் கொடியார், ஈசன் என்னினு நாசி கொய்வார்.
மண்வெறி கொண்டி ரத்த வாள்பிடித் தலைவா ரந்தோ !

ஈயென மொய்ப்பார் ; ஈந்தால் இன்னமும் என்று நைப்பார் ;
வாயினால் இல்லை யென்றால், வயிறெரி பொறாமை கொண்டு,
நாயென விழுவார் ; நாக்கில் நரம்பின்றித் தூற்றி, ஆளைப்
பேயெனப் படுத்து வார்கள்—பிரிவினைப் பித்தர் இன்னோர் !

அஞ்சினார்க் கழிவு செய்வார் ; அடுத்தவர் வாழ வொட்டார் ;
கெஞ்சினால் மிஞ்சு வார்கள் ; எதிர்த்திடிற் கேடு சூழ்வார் ;
துஞ்சினார் தலையிற் கல்லைத் துணிவுடன் உருட்டு வார்கள் ;
கொஞ்சியுங் கழுத்த றுப்பார் குடிலுக்குக் கொள்ளி வைப்பார் !

போகன்

மின்னணி யன்ன மேநீ வெய்யர்கைப் பட்டிங் கேகி,
அன்னவர்க் கரசி யான செய்தியை அறிவோம் ; சக்தி
உன்னரும் புதல்வி கௌரி உயிர்கலந் திலகும் பெற்றி
முன்னரே அறிவேன்; பின்பு முளைத்ததைப் பேசு வாயே.

சுந்தரி

அளவறு சித்தி வல்லாய், அரசியென் றென்னை யேற்ற
வளமைகள் யாவு, மின்று மறைந்தன ; மாவ லிக்குப்
பளபளச் சாயம் பூசிப் பல்வைத்துச் சிரிக்கு மின்னோர்
உளரவர் மோகம் பற்றி, என்னையும் உதறி னனே.

வேகமாய் எனைக்கொ ணர்ந்த வெறியனுக் கிணங்கி டாது,
மோகமாப் பிதற்ற லெல்லாம் கண்டித்து, முகந்தி ருப்பிச்
சோகமாச் சுழலி னீந்தித் தூயவென் கற்பைக் காத்தேன் ;
தேகமும் விடத்து ணிந்தேன் சேயிழை, தனியள் யானே.

சீதையைக் காவல் வைத்தும் ,செய்கையிற் சோடை போன
பேதையி ராவ ணன்போல் எண்ணினை பெண்ணே என்னை ;
ஈதென தியற்கை யென்றே இருகையால் அள்ளிக் கொண்டென்
காதலின் உறுதி யின்றிக் கற்பினைக் கெடுத்தா னையா !

கதிரொளி தாக்கி டாது, கையவிழ் கமலம் போலச்
சதிபதி நேய மின்றித் தாமதக் காமத் தாலே,
விதிமுறை யின்றி, உண்மை விருப்பின்றி அணைந்த கைகள்
மதியிலார் நிதியைப் போல மாண்பறத் தேய்ந்த தம்மா !

படங்கிளர் பாம்பைப் போலும், பசிமிகு புலியைப் போலும்,
விடங்கிளர் வெறியி லென்னை வேட்டவன் கைவிட் டின்று
குடங்களை யுண்டு போக சாலையிற் பெண்க ளோடு
நடங்களைப் புரியுந் தன்மை நாளையே காண்பீ ரையா !

மனைவியிங் கிருக்க, கண்ட மாதரைச் சேரு வானை
இனியொருக் காலுந் தீண்டேன் என்றொரு விரதம் பூண்டேன்
எனக்கிந்த மனையுந் தந்தான் ; இருமுறை உண்ணத் தந்தான்;
தனக்கினி யார்களோடு தாண்டவ மாடு கின்றான் .

என்னுடைச் செல்வி சக்தி, யியல்பையுங் கெடுக்க வேண்டித்
தன்னுடன் வைத்துக் கொண்டு தானவம் பயிற்று கின்றான் ;
அன்னவள் ஒருநாள் "யானே கௌரியென் றறிவீர்" என்றாள்;
"என்னவன் சுத்தன்"என்றாள்இனும்பலமொழிந்திட்டாளே.

மெய்யன்

சித்திபன் எனது செல்வன் கலியினைச் செகுக்குங் காலை
பத்தினி கௌரி தானும் படுசமர்க் களத்திற் பட்டாள்,
அத்தினம் அவள்சுத் தாத்மா அழகியுன் அருமைச் செல்வி
சத்தியுட் புகுந்த துண்மை; சகநலந் தழைக்க வேண்டி.

சுந்தரி

அறிகுவன் ஐய முற்றும் ; ஐயநின் புனித நாட்டில்
வெறிகொளுங் கலியன் கொண்ட வீரியத் தினவி னாலே,
பொறிகொளுஞ் சண்டை செய்து புனிதனால் வீழ்த்தப் பெற்று
நெறியிலா முயற்சி செய்ய நிருதரை யண்டி னானே.

ஆயுதப் போரில் வீழ்ந்த கலியனிங் கவுணர் கூட்டால்,
மாயங்கள் புரிந்து, மாந்தர் வாழ்வினைக் கெடுத்து னாட்டைப்
பேயெனப் பிடிக்க வேண்டிப் பெருஞ்சதி செய்துன் செல்வன்
தூயனைக் கொல்ல நாளுந் துறுதுறுத் தலைகின் றானால்...

மெய்யன்

கலியனு மோகி யுஞ்செய் காதகச் சூழ்ச்சி யெல்லாம்
உலகறிந் தவையாம் ; இங்கே ஊணரின் உதவி யாலே
கலகஞ்செய் தழிந்த பின்னர், கன்மனக் கொடுமை செய்து
நலங்களை யழிக்கப் புக்கான் மெய்யைப்பொய் நலிப்ப தாமோ ?

கள்ளிடை மயங்கிக் காமக் களிப்பெனும் புளிப்பு மிஞ்சித்
துள்ளிடுந் தான வத்தைத் தூய்மைசெய் வழியைச் சொல்லாய் ;
உள்ளிந்த ஊணர் மாறின், உலகமும் திருந்த லாகும் ;
வெள்ளிடை மலையி தென்றே மெய்யனும் விளம்பி னானே.

போகன்

கலகத்தா லில்லை ; மீண்டுங் கத்தியா லில்லை ; தக்க
புலவர்செய் கலையின் பத்தாற் புலன்களைக் கவர்ந்து, மெல்ல
நலங்களைப் பயிற்றி யிந்த, நாணமில் அவுணர் தீய
குலந்தனைத் திருத்தி னலே குவலயந் திருந்த லாமே...

சுந்தரி

இதுசொல நினைத்தேன்; முன்னே இயம்பினை அறிவின்மிக்காய்;
மதுவெறி மண்ணின் ஆசை மாதரின் மயக்கங் கொண்டார்
புதுநலப் பாடல் ஆடல் கூத்துகள் புரியக் காண்பார்—
முதுபெருங் கலைக ளாலே முற்றிலுந் திருந்த லாமே !

மாதரை யிழிவு செய்வார், மமதையாற் பொறுமை கொண்டு,
கோதையர் கற்பைப் போட்டி போட்டவர் கொலையுஞ் செய்வார் ;
காதலைக் காம மாக்கிக் காமத்தைக் குரோத மாக்கி,
மோதுவார் சண்டை யிட்டு, மோகப்பேய் கொண்ட ஊனர்.

காரியம் ஆன பின்பு, கைவிடும் வஞ்ச நெஞ்சப்
பூரியர் மோசத்தாலே புண்பட்டு மனது வேகும்
நாரியர் என்னைப் போன்றார் உள்ளனர் நமக்கி சைந்த
சீரிய பணிகள் செய்வார் ; திருக்கலைச் சங்கங் காண்போம்.

மாவலி தம்பி யான அனலன்ஆ ணவத்தை யாள்வான் ;
பாவலன் ; என்னை வேட்கப் பறந்துபின் புறம்போந் துள்ளான்;
நாவலர் கலைஞர் கூத்தர் நல்லிசை வாண ருக்குத்
தேவையாம் உதவி செய்வான்;திருக்கலைச்சங்கங்காண்போம். 100

அண்ணனுந் தம்பி மாரும் அடிதடி வரைக்குஞ் செல்லும்
வண்ணமாப் பொறுமையாலேமமதைகொண் டொருமையற்றார்..
புண்ணியப் புவியை யின்னார் பிரித்தறம் போக்க வேயின்
றெண்ணினர் பலனை யிங்கே இவரனு பவிப்பா ரன்றே !

ஒருவன்கொள் பெண்ணைமற்றோர் உடன்பிறந்தானுங்கொள்ளத்
திருகுதா ளங்கள் செய்வான் ; சேயிழை மனம யங்கி
ஒருவனுக் கிணங்கின், மற்றோன் வாளினை உருவிக் கொல்வான்;
இருவருக் கிணங்கும் வாழ்வின் இறப்பதே யின்ப மாமே !

கலையினல் ஒருமை தன்னைக் காணலாம். கண்ட பின்பு
நிலைபெறு சன்மார்க் கத்தை நேயருக் குணர்த்த லாகும் ;
கொலைகள வற்ப புத்தி, கொடுமைபொ றாமை காம,
வலைதருந் தீமை மாற்ற வல்லநற் பணிசெய் வோமே !

தினந்தினங் கற்ப ழிக்குந் தீயவர் திருந்தா ராயின்,
அனங்கனை யெரித்த தீயும், முப்புரம் அழித்த தீயும்,
சினங்கொளுந் தட்ச னுரைச் செகுத்தசெந் தீயும், என்றன்
மனங்கொளுந் தீயும் வூணர் நாட்டினை வாட்டு மன்றே !

மதிமலர் முகத்திற் செய்ய மலர்க்கர முறுத்திச் சற்றே
கதியிதென் றழகி செய்ய கண்பனிப் பெய்த நோக்கித்
துதிபெறுங் குருவே சங்கந் தொடங்கியிந் நாளைக் கேற்ற
விதியினைக் கடைப்பி டித்துவெல்லுவோம்என்றுசொன்னாள்.

கீதத்திற் காதல் கொண்டான் கேட்பனும் பாட்டை யோர்நாள் ;
மாதரைக் கூடும் போக மாளிகை தனிலே உங்கள்
நாதநல் விருந்தை நன்கு நடத்திட வேண்டும் ; யானும்
மேதகு வீணை மீட்டி விருந்தினிற் கலந்து கொள்வேன்.

நாத்திகத் திமிர்பி டித்த மாவலி நயக்கும் பாட்டில்,
ஆத்திக வாடை கண்டால், அக்கணஞ் சினந்து கொல்வான் ;
கூத்தினுக் கேற்ற வேடங் கொள்வதே கடமை யாகும் ;
சாத்தனின் புரட்சிப் பாட்டைச் சபைக்குநாம் பாடு வோமே...

பாங்குற மில்த னேடு பைபிளும் பகரு கின்ற,
தீங்குறு சைத்தான், தேவ தேவனை எதிர்த்து, விண்ணை,
நீங்கியே நரகில் வந்து நெருப்பெழப் பேசு கின்ற
ஓங்கிய செருக்கை நாமும் உணர்வுற நடிக்க லாமே.

பாடலைச் செய்து முன்பு, பண்ணிசை யமைத்துப் பாடி,
நாடகந் தேர்ந்து நன்று நவரசங் காட்டி யிங்கே
ஆடலும் பயின்ற பின்னர், அரக்கனின் போக சாலை
நாடலாம் என்று நங்கை நவின்றிது வழியென் றுளே !

"அழகிசொல் வார்த்தை யெல்லாம் அமுதமு"தென்னமெய்யன்
குழலுடன் வீணை கொஞ்சுங் * குதியிசை யினிது பாடி,
முழவுடன் ஆடி, ஊணன் முகலமர்ந் திடச்செய் வேலை
பழகுவோம் "சரிகா ஸாபா பதநி"யென் றுரம் பித்தான் !

ஆவலோ டினைய நண்பர் பயின்றிடும் ஆட்டம் பாட்டம்
காவலன் போக சாலை காணுமுன், அரச மன்று
மேவியங் குலகை வெல்ல வெவ்விய சூழ்ச்சி செய்யும்
மாவலி யரக்க னுரின் மமதைநா டகத்தைக் காண்போம் !

---

* கூத்திசை

# 10. அசுராலோசனைப் படலம்

மாவலி கொலுவிற்றிருத்தல்

மின்னலு மீன்களு மிளிரச் செம்மலை,
பொன்மலை மீதினிற் பொருந்தும் பான்மைபோல்,
கன்னகை பளிச்சிடக் கத்தி யேந்தியே
மன்னவை வகித்தனன் மாவ லாசுரன் !

வயிரங்கள் சூடிய வயிர மேனியான் ;
வயிரங்கொள் வாளினன், வயிர நெஞ்சினன் ;
வயிரத்தால் வயிரமே வளர்க்கும் சேனையான்,
வயிரப்பொன் முடியணி மன்னன் மாவலி.

வாளென மீசையும், வாள்வி ழிகளும்,
வாளென மின்னிடு வாய்மு றுவலும்,
தோளுயர் வீரத்தைச் சொல்லும் வாகையும்,
வாளுயர் வீரரும் வயங்க மேவினன்.

பற்றுறும் அமைச்சரும், படைத்த லைவரும்,
கற்றறி குருவுடன், கலியுங், காவலும்,
சுற்றிலுங் குன்றெனத் துலங்க மாவலி
பொற்றிரு மலையெனப் பொலிவு கொண்டனன்.

துன்மதி, வக்கிரன், தூம கேதராம்,
வன்மதி யமைச்சரும், வஞ்ச வெள்ளியும்,
கன்மதி நாசனுங் கலியு, மோகியும்,
தன்மனந் தழுவிடத் தானி ருந்தனன்.

காரிய தூதர்கள், கடமை காத்திடப்
போரியல் அரக்கர்கள் பொங்கி விம்மிடப்
பாரதிர் செருக்குடன், பதந்தெ றித்திட
வீரிய ராக்ஷஸன் விளம்ப லுற்றனன் :

மாவலி பேச்சு

என்னலங் கருதிடும் எனது தொண்டர்காள்,
என்மனம் புரிந்திடும் இனிய நேயர்காள்,
என்னறி வாகிடும் இன்ப வேள்ளியே,
மன்னவன் மாவலி மதிக்கும் அன்பர்காள் !

மண்ணுல கனைத்துமென் வாளி னுண்டிடும்
எண்ணமே கொண்டநம் இகல்கள் யாவையும்,
திண்ணமாய் வென்றிடுஞ் செய்தி கேட்கவே
அண்மையில் உங்களை அழைத்த தாகுமே.

பஞ்சபூ தங்களைப் பகுத்துப் பாரெலாம்
அஞ்சுறும் பொறிகளை அமைத்துப் போர்செய்தோம் ;
மஞ்சளும் பசுமையு மல்கு நாடெலாம்—
எஞ்சற நம்மிடம் இருப்ப தாகுமே !

புண்ணியப் புரட்டுகள், புராணக் கற்பனை,
கண்ணுக்குக் கண்ணெனுங் கடவுட் கற்பனை,
விண்ணகக் கற்பனை, வேதக் கற்பனை
திண்ணமா யிவைகெடச் செய்த சேவையென் ?

நீதியுந் தெய்வமு நிலவு பாரதம்,
இதுற நம்படை சென்று தோற்றதென் ?
மாதவர் மல்கிய மாநி லத்திலே
பாதகஞ் செய்தது பயனற் றானதென் ?

தானவர் தாசனெந் *தங்கை காதலன்,
சேனையிற் சேர்ந்துநஞ் சேனை போர்செய்தும்,
ஏன்கலி தோற்றனன் ? ஏனிச் சுத்தனும்
ஞானவே தாந்தியே நம்மை வென்றனன் ?

மாதவங் கீதவம் என்று மானிடர்
போதினைப் போக்கியும் போரில் வெல்வதேன் ?
போதிய கருவியும் பொறியும் தானவர்
மேதையுந் துணைசெய்த கலியன் வீழ்ந்ததேன் ?

†அமரகம், ‡ஐரகம், §அதகம், ||ஆப்ரகம்,
எமதக மாதலில் இன்னும் ஏனிடர் ?
சமனையும் வென்றிடச் சபதம் கூறினேம் ;
நமதுவாட் கொடியினு நடுங்க வேண்மோ ?

விம்முயர் தோளிற்கும் விமானக் குண்டிற்கும்,
பொம்மெனப் பொருதிடும் போர்ம தத்திற்கும்,
வெம்மனக் கொதிப்பிற்கும் வேலை யீந்திடின்—
நம்மதே உலகென நாட்ட லாகுமே ?

பொன்மணி வளங்களும், பூவ ளங்களும்,
பெண்மணி வளங்களும், பிறவ ளங்களும்,
கண்ணினிற் காண்புவி கைக்கு வந்திடப்
பண்ணுறு வளங்களும் படைக்க வேண்டுமே.

---

* *கலி* † *அமெரிக்கா* ‡ *ஐரோப்பா* § *ஆத்திரேலியா*
|| *ஆப்பரிக்கா*

வித்தகப் பௌதிகர், வியன்ர சாயனர்,
புத்தகப் பூச்சிக ளின்றிப் போரிலே,
சித்திகள் பெற்றிடச் செய்த யந்திரம்
எத்தனை எத்தனை இருந்தும் என்பயன் ?

குண்டுகள் கண்ணிகள், கொல்லும் வெம்புகை,
அண்டமும் கிழித்திடும் அழி கருவிகள்,
பண்டிகள் சூத்திரப் படகு கள்விரி
விண்டல மளந்திடும் விமான ராசிகள்—

கரியிரும் பெண்ணெய்வெங் கனல்மின் சாரத்தால்
பெரியயந் திரங்களைப் பிழையி லாதுசெய்
அரியநற் கணக்கரும் ஆழ்ந்த சிற்பரும்,
எரிகுண்டு வீரரும் இருக்கத் தோல்வியேன் ?

பரவுல கனைத்துமெப் பாஷை தன்னிலும்
விரவிய செய்தியை விரைந்து வீட்டிலே
தரவல வானொலி சமைத்த நம்மையும்
இரவினைப் பகலென இதரர் ஏய்ப்பதோ ?

வெள்ளியுந் தங்கமும், விரிந்த போகமும்,
அள்ளிநான் உங்களுக் களித்த சீரெலாம்,
எள்ளிடுந் தோல்வியை யெய்த வேண்டியோ
கொள்ளையுங் கொடுமையுங் கொலையுங் கொண்டுளீர்.

நினைகுமின் சூழ்ச்சியை நினைந்து கூறுமின்—
அனைவரும் என்னர சடிமை யாகவே ;
புனையற மொழிந்திடப் பூமி யெங்குமே
எனைமிகப் பணிந்திடு மின்ப மெய்தவே !

துன்மதி

பஞ்ச பூதம் படைத்த உலகெலாம்,
அஞ்சும் உன்னை அரக்கரின் சிங்கமே ;
வஞ்ச மெத்தனை மானிடர் செய்யினும்,
மிஞ்சி யுன்னை வினைத்திறன் உள்ளதோ ?

விரவு மின்சக்தி யின்வினை யாட்டினால்,
இரவி னைப்பக லென்றினி தாக்கினோம் ;
பரவை வான்புவி யெங்கும் பரவியே
அரிய தாகிடும் அற்புதஞ் செய்கின்றோம்.

ஓர் நொடியினில் ஊரை யழித்திடும்
பே ரணுவெடி பெய்ய வலியுளோம் ;
யார் நமக்கிணை யிந்த உலகிலே ?
போரும் வெற்றியும் போகமு நம்மதே !

இன்று தோற்றிடின் என்ன? நம் போர்வினை
நன்று செய்தினும் நாளைவெல் வோம்ஐய
தொன்று தொட்ட சுதந்தர பாரதம்
ஒன்றி வெற்றி யடைந்த துறுதியே !

ஒற்று மையை உலைத்தங்கு தெய்வத்தின்
பற்று தலைப் பயனறச் செய்திடின்—
சற்று நம்கலி தானவ வேலையை
முற்ற வைத்திடின் முற்றுமத் தொல்லையே.

ஏனை நாட்டில், இயந்திர வேலைகள்
ஆன போதிலும், அன்பைச் சிதைத்து, விஞ்
ஞான மெல்லாம் கொலையினை நாடவே—
போன நம்புகழ் பொங்கிப் பொலியுமே !

திங்கள் வான்கதிர் சென்றொளிர் திக்கெலாம்,
தங்கம் வெள்ளி தழைபசு நாடெலாம்,
எங்க ளுக்கென் றியம்பிய பின்னரும்,
பங்கு போடுவர் பாரினில் யாவரே ?

அண்ட கோளத்தை அம்மனை யாடுவோம் !
செண்டு ருட்டுவம் சேர்ந்தொளிர் மீன்களை ;
வண்டி யாக்குவம் வான்வளை பூமியை ;
உண்டு மெய்வலி ஊணர் தலைவனே ! 120

கந்த கமும் இரும்புங் கரியுடன்
சொந்த மான சுரங்கப் பொருள்களும்,
வந்து நம்மை வலுவில் அடைந்தபின்,
எந்தக் காரியம் எய்தற் கரியதே !

சோலைச் செல்வம், சுறுசுறுப் பாந்தொழிற்
சாலைச் செல்வம், சமர்க்களச் செல்வங்கள்,
வேலைச் செல்வம் வியாபாரச் செல்வங்கள்,
ஞாலச் செல்வ மனைத்து நமக்கரோ ?

காரி லேறிக் ககன முலாவுவோம்,
நீரி னுள்ளு நிலமென் றுலாவுவோம் ;
பாரி னுள்ளம் பலவகுப் பாகியே
போரி னுள்ளம தாகப் புரிகுவோம்...

வருந்த லையநம் வாளுண்டு ; நாளுண்டு ;
பருந்து போலப் பறந்துல கெங்குமே
விரைந்து குண்டெறி வேட்டை நமக்குண்டு ;
அருந்து போகம் அளவற்றுண் டாகுமே !

மாவலி

வீரியஞ் சரிசரி, வியப்பெ லாஞ்சரி ;
காரிய வெற்றியைக் காண வேண்டுமால்,
பாரத பூமியைப் பற்றி நங்கலி
கோரிய தாற்றமுன் கூறும் ஓர்வழி !

சுத்தனும் அவன்பெருஞ் சூரனுந் தவப்
பித்தனும் பேரின்பப் பிதற்ற னும்அவன் !
சித்திப னுய்நமைச் செயித்த வெட்கத்தை
இத்தின மாற்றுதற் கேது சொல்லுவீர் !

வக்கிரன்

இத்திறம் தானவன் இயம்பக் கேட்டலும்,
குத்திரங் கோள்பொயின் குடித் தலைமகன்,
எத்திற நாட்டிலும் இகலை ஆழமாய்
வித்திடும் வக்கிரன் வெறித்துக் கூறினன் !

உக்கிர மாகிய உறுதி கொண்டுநம்
சக்கர வேகத்தைத் தடைசெய் பாரதம்,
எக்கிர மத்தினல் ஏற்றம் பெற்றது ?
வக்கிரன் அறிந்ததன் வாய்மை கேட்டியால்.

புவியெலாங் கறங்கெனப் போந்து சுற்றினேன் ;
அவரவர் இயல்பினை அளந்து திட்டினேன் ;
செவியிலும் விழியிலுந் திரட்டிச் சேர்த்ததை
அவிழ்த்துவிட் டமருவன் அரக்கர் மாசபை !

மாவலி என்றிடின் மாந்தர் மட்டுமோ,
தேவரும் அஞ்சுவர் திசைகள் எட்டுமே.
பூவினில் இதைவிடப் புகழுண் டாகுமோ ?
கூவிடுங் கூற்றுமுன் குண்டிற் கஞ்சுமே !

பிஞ்சிளஞ் சேயுமுன் பெயரைச் சொன்னதும்,
அஞ்சிடும் ; அன்னைசொல் அமையக் கேட்டுடன்
துஞ்சிடும் என்றபின், சுத்த னுட்டிலே,
நஞ்செயக் கொடியினி நாட்ட வேண்டுமோ ?

மாவலி

வக்கிர தந்தநீ வாய்மை கூறினும்,
இக்கலி மோகியர் இழந்த மானத்தை
எக்கதி யாலினி எய்த வல்லமோ
அக்கதிக் கேற்றதை அறிந்து சொல்லுவாய் !

வக்கிரன்

பொறிகளைக் கடந்தொரு புலமை கண்டிடும்,
அறிவெனக் குன்னருள் அளிக்க வில்லையால்,
சுறுசுறுப் பாகநான் சுற்றுங் கண்டதே
மறுவறச் சொல்லுவேன் மற்ற துன்மனம் !

காற்றினைப் போலவுங், கன்றைப் போலவும்,
நீற்றணி பூனையை நிகரவும், கொடுங்
கூற்றினைப் போலவுங் குலவி, நண்பரை
ஏற்றிடு நாட்டினில் இருந்து சுற்றினேன் !

கண்டவர் விரும்பிடக் கதைகள் பேசினேன் ;
சிண்டுகள் முடித்திடு நலமுந் தேடினேன் ;
பெண்டுகள் கணவரைப் பிரிய வஞ்சித்தேன் ;
சண்டைகள் மூட்டியென் சபதஞ் சாதித்தேன்.

அழிவுசெய் கலியருக் காக்கந் தேடலே
தொழிலெனப் பூண்டுநான் சுற்றி, ஐம்பெரும்
பழிசெயும் பாதைக்குப் பரம்ப டித்தனன் !
வழிசெய்தும் வந்திலர் வம்பு நாட்டினர் !

மதுவினைக் குடியெனில் மாட்டுப் பாலுண்பார் ;
பொதுமகள் சுகமெனிற் கற்பைப் போதிப்பார் ;
எதுநலம் என்றுநாம் இயம்பு வோம்அதை
இதுமிகத் தீயதென் றெள்ளி வீசுவார் !

படுகொலை செய்வதைப் பார்க்கக் கூசுவார் ;
கடவுளைப் பழித்திடிற் காதைப் பொத்துவார் ;
உடலினில் ஆத்துமா உண்டென் றேமிகத்
திடமுள தியானங்கள் செய்து சிந்திப்பார் !

வாய்செயும் வாதத்தை மறுத்துக் கூறவே,
ஆயிரம் பாடல்கள் அடுக்கு நாட்டினர் ;
தேயமுந் தெய்வமும் செறிசுத் தாத்தும
நேயமுங் கொண்டவர் நீடு வாழ்கின்றார்....

போகத்தை நாமெலாம் பொருளென் றெண்ணுவோம்
யோகத்தை யேயவர் உயர்வென் றோதுவார் ;
தேகத்தி னுள்ளொரு திறமை கொண்டுளார் ;
ஏகத்தில் வாழ்ந்திடும் இவர்கள் சீரிதே.

இதற்குமேல் உரைப்பதொன் றில்லை ; பாரதர்
சுதந்தர சக்தியொன் றுடையர் ; சுத்தனே
அதற்கொரு நிலையமாய் அமைந்துளான் ; அதைப்
பதமுடன் ஒழித்திடிற் பரந்த வெற்றியே !

மாவலி

வக்கிரன் சொன்னது வாய்மை யாயினும்,
உக்கிர யோகத்தால் உள்ளு யிர்க்கனல்
மிக்கவர் பெற்றெனை வீழ்த்தும் பொய்க்கதை
அக்கிர மக்கதை ; அதனை நம்பிடேன் !

சுண்ணமு மஞ்சளுந் தொகுத்துச் செவ்விய
வண்ணத்தைக் காட்டிடும் வகையி லிவ்வுடல்
எண்ணுறு மூளையோ டிணைந்த தோற்றமே
நுண்ணிய மனத்தினு னுண்மை யில்லையே.

ஆத்துமப் புரட்டரின் ஆற்றல் யாவையும்
இத்தனல் பெய்யுமென் சேனை யின்முனே
பூத்தணல் கொண்டதைப் போலத் தீர்வதை
ஆத்திரந் தீரயான் அருகிற் காண்பனே !

நேசனுங் கலியிசை நிலவ நாட்டுவேன்,
ஆசையுந் தீர்ப்பதற் கடுச மர்ப்படை
நாசக நடத்தென நவில மாவலி,
வேசுறக் கலியனும் விளம்பு வானரோ.

கலியன்

இரணியன், கம்ஸன் முஞ்சன், இராவணன் ஆவி யெல்லாம்,
அரணெனப் புகுந்து வாழும் அரக்கனே அமைந்து கேளாய் :
முரணிலா தோங்கு கின்ற முதுபுகழ்ச் சித்தி நாடு
மரணத்தை வென்ற ஞான மாசிலார் நாட தாமே !

காலபா சத்தைப் போலக் காசினி தன்னைக் கௌவிச்
சாலவுந் தொல்லை செய்யும் தானவர் தலைவா கேளாய் ,
தோலுடல் வலியி னலே துப்பாக்கிபி ரங்கி யாலே
தோல்வியே கண்ட தல்லாற் சுகமொன்றுங் காண்கி லேனே !

எனக்குன தருளால் வந்த படைகளை யெல்லாம் அந்தக்
கனற்பொறிப் படைகள் வல்ல கடும்பயல் வீழ்த்தி விட்டான் ;
மனக்கிலே சத்தி னலே மாநகர் புகுந்த போது,
தனிச் சமர் புரிந்து வென்ற சத்தியன் சிறைப்பி டித்தான் !

அப்பனும் பலவான் ; சுத்தன் அப்பனுக் கேற்ற பிள்ளை ;
ஒப்பறும் படைக ளோடும் ஒருவரும் அறியா வண்ணம்,
செப்பரும் பலமொன் றுள்ளே சேமித்து வெல்லு கின்றார் ;
இப்பெரும் வீரர் தம்மை இனிப்படை செகுப்ப தாமோ ?

களத்தினைத் தோற்றென் இன்பக் கலிநகர் தோற்று, வாழு
நிலத்தினைத் தோற்று வெய்ய நீள்சிறைப் பட்டுத் தப்பி,
நலத்தினைத் தோற்று நின்றேன், நலித்தினுங் கொல்லவந்தான்
புலத்தினும் வேக மாகச் சத்தியன் பொறியி லேறி.....

காவல்செய் விமானந் தன்னைக் கடலினில் ஆழ்த்தி விட்டான் ;
ஆவியைக் கொண்டு மோகி யளித்தநல் லுதவி யாலே
மேவினே னிங்குன் றுலே விடுதலை கண்டேன் ; ஐயா,
நோவுறு போரின் பேச்சை நுவலினும் அச்ச மாமே !

சமயத்திற் கேற்ற சூழ்ச்சி தந்திர மாகச் செய்தே,
அமைதியாய் வெடிவைத் தானை அடியுடன் அழித்து, மேலே
எமபுரம் அனுப்ப வல்ல சத்தியன் எங்கு ளானோ ?
நமதிட மறிந்து வந்தால், நாளெலாம் நடுக்கந் தானே !

ஆதலால் இவரை வெல்லல் அரிதரி தாயு தத்தால்,
வாதிலும் தோலார் வாக்கின் வரம்பெற்ற கவிஞர் அன்னோர் ;
பூதசக் தியிலுந் தோலார் புண்ணியப் புனித வாழ்க்கை
சாதலே அவரை வென்று தானவர் தழைத்த லாமே.

மாவலி

தோள்வலி யாலே, பூமி யஞ்சிடத் தூக்கி நிற்கும்
வாள்வலி யாலே, நாளும் வரிசையாய் அனுப்பும் ஒற்றர்
கோள்வலி யாலே, வெற்றி கொண்டிட முடியா தென்னில்,
ஆள்வலி தன்னை மற்றோர் அரங்கத்திற் கனுப்ப லாமே !

பல்கிடுந் தான வர்க்குப் பாரெலாம் வீடு வேண்டும் ;
கொல்கொலை கொள்ளைகொண்ட போகத்திற் கொழுக்கவேண்டும்.
இல்லெனின் மலட்டுப் பூமி இதிற்கரி யிரும்பே யன்றி,
நல்லதோர் பொருளு மில்லை ; நாமிதை யறிந்து ளோமே ! 260

பொன்செய வேண்டும் ; பொன்னுற் பொருள் செயவேண்டும் ; அஃதால்
மின்பொறி செய்ய வேண்டும் ; வெவ்விய சேனை கூட்டி
மன்பதை பதைக்க வென்று, மாநில மாள வேண்டும் ;
என்கொடி யொன்றே வான்கீழ் இடமெங்கும் பறக்க வேண்டும்.

ஆழியின் செல்வம், சாமி ஆலயச் செல்வம், அஞ்சுங்
கோழையின் செல்வம், கைம்பெண்குவித்தசெல்வங்களெல்லாம்
சூழநஞ் செல்வ மாகத் துலங்கிட வேண்டு கின்றேன் ;
ஆழநீர் சிந்தித் தென்னை அகமகிழ் விப்பீ ரின்றே !

காதகக் கனக மேனுங் கனகமே எனது தெய்வம் ;
வீதம்வைத் ததனை வீசம் பொதுநலம் விளையத் தந்து,
மாதர்க்கும் போகத் திற்கும் மற்றொரு காலுந் தந்து ;
மீதியைக் குண்டுபோடும் விருந்தினுக் கீவ தாமே !

புண்ணிய பூமி எங்கள் பொன்வெறி திரா தாகில்
வெண்ணவர்நிலத்திலேனும் விதைத்துநங் கொள்கையெல்லாம்,
எண்ணத்தைநிறைவு செய்வோம்;ஏற்றதோர் சூழ்ச்சிசொல்லாய்
அண்ணலே வெள்ளி யேயென் அறிவெனத் தக்காய் நீயே !

வெள்ளி

தேகமே மெய்யென் றெண்ணுந் திவுடை யரசே, புன்றன்
மோகத்தைப் புனித நாடே முற்றுவித் திடுமென் றெண்ணுய் !
ஆகம வேதசாஸ்த்ர புராணமாம் அரிய நூலால்,
யோகத்தில் உறங்கு கின்ற ஒருமைசேர் நாடு மஃதே !

உச்சநா கரிகங் கொண்ட உலகிலே பெரிய நாட்டார்,
பச்சைபொன் வளமை யோங்கும் பாரத நாட்டார், நெஞ்சில்
அச்சமொன் றறியா நாட்டார், அடிமைசெய் யாத நாட்டார்,
மெச்சிசை விளங்கு நாட்டார், விண்ணவ ரென்ன லாமே !

வண்டுகள் பாடும் சோலை, மாபலா வாழை தென்னை
கொண்டொளிர் கனிவ ளங்கள் குடைநிழல் பரப்பு நாடே !
பண்டக சாலையாகப் பாரினுக் குதவு நாட்டைக்
கண்டனு பவித்த மோகி கவியென வருணிப் பாளே :

மோகி

இளங்குயில்கள் கூடியிசை பாடமயி லாட,
விலங்குகள் பழங்களை உருட்டிவிளை யாடும் ;
இலங்குமலை யாறுவன மின்னியல் வளத்தால்
உளங்கவரு மொப்புயர்வி லாதபசு நாடே !

தேன்மலர் மணம்பருகித் தென்றலினி தாடும்,
வான்மழை மிகப்பருகி மண்பயிர்கள் ஆடும் ;
கான்கனிக ளுண்டுகளி துள்ளிவிளை யாடும்
வான்பறவை கள்வளர் வனப்புமிகு நாடே !

வித்தகரும் வீரமிகு வேந்தரும்வே தாந்தப்
பித்தர்களும் சித்தர்களும் பேசுபுகழ் நாடே ;
முத்துநவ ரத்தின முகந்துலவுங் கப்பல்
இத்தலமெ லாஞ்செலும் இசைபெருகு நாடே !

நன்றுவளர் நால்வர்மறை நாதமறை நான்கும்,
இன்றுவளர் எம்மறையும் எண்ணரிய பாட்டும்
ஒன்றிவரு காற்றிசை யுடன்கடன் முடித்த
வென்றியிசை யின்பம்விளை யாடுகிற நாடே !

மாவலி

அத்தகை நாட்டினை இனிதென் ஆட்சியில்
வைத்திட வேண்டினேன் ; வகைசொல் வெள்ளியே ;
மெத்தவு மின்பங்கள் மேவு நாட்டில்வாழ்
வித்தகர் பெருமையை விளம்பக் கேட்பனுல் :

வெள்ளி

மன்னனே கேளாய் பஞ்சு, மயிர்பட்டு நூலி முத்துச்
சன்னமாய் ஆடை நெய்வார் ; சகமெலாம் விற்றுச் செல்வார் ;
பொன்மணி யிரும்பு செம்பு, பொலிவெள்ளி மண்ம ரத்தாற்
பன்மணிப் பொருள்கள் செய்து பளிச்செனக் கடையில் வைப்பார்!

அல்லிநூ லாடை நெய்வார், அழகணிச் சிற்பஞ் செய்வார் ;
நெல்கரும் பினைய செய்வார் ; நிலத்தினைப் பசுமை செய்வார் ;
கொல்லர்கள், குயவர், தச்சர், கொத்தர்கள், பத்தர், கூத்தர்,
மல்லர்கள் வில்லர் செல்வர் மல்கிய நாட தாமே !

மந்திரம் மணிம ருந்து வானநூல், கணிதம் வல்லார் ;
எந்திரம் இரதம், நாவாய் நம்மினும் எளிதிற் செய்வார் ;
அந்தர மளப்பர் ; மண்ணை அகழ்ந்துபொன் மணியெ டுப்பார் ;
கொந்தளி கடலில் முத்துக் குளிப்பரம் முதிய நாட்டார் !

மனைக்கொரு தரும சாலை ; மருங்கெலாம் புலவர் சங்கம் ;
முனைக்கொரு மருந்துச் சாலை ; முடுக்கெலாம் கலையின் வண்மை ;
வினைக்கொரு பயிற்சிக் கூடம், வெளியெலாம் வீர ராட்டம் ;
தனைத்துய ரணுகா நாட்டின் சரித்திர மிதுவே கேளாய் !

முன்னவர் தமிழர் இந்த முதுநிலம் பரவி வாழ்ந்தார்,
பின்னர் ஆரியர்கள் வந்தார்; பிறகுற்றுர் யவனர் சோனர்,
இன்னமும் பலரும் வந்தார் என்னினும் அவர்க ளெல்லாம்
பன்னெடுங் கால மாகப் பாரத நாட்டா ராணுர் !

கங்கையின் செல்வர் சேதுக் கரையினில் அறங்கள் செய்வார் ;
சிங்களத் தந்தஞ் செய்த சிவிகையில் கூர்க்கர் செல்வார் ;
வங்கரின் கலையைக் கொண்டு வண்டமிழ் அமுத மீவார் ;
மங்கல மருதப் பாட்டை மலைவளர் குறவர் கேட்பார் !

முகில்வினை யாடு மாடம் , முத்தமிழ் ஆடுஞ் சங்கம் ;
புகழ்வினை யாடும் வீரப் போர்பயில் மைதா னங்கள் ;
சுகம்வளர் அருட்பா டல்கள் சுதந்தர இசைகள் ஆடும்
அகங்களே எங்குங் காணும் ஆத்தும நேயர் நாடே !

போர்முர சொலிக்கக் கேட்டுப் பொக்கெனத் தாய்தன் செல்வ
ஓர்மகன் கையில் வாளை உருவித்தந் தனுப்புங் காட்சி ;
மார்பிலே அம்பு பட்ட மகனைக்கண் டுவகை யெய்தும்
வீரத்தாய் மாரின் காட்சி வியன்பெருங் காட்சி யாமே !

ஒன்றிய சங்க வாழ்வும், உயிர்க்குயிர் உணர்ந்த பண்பும்,
குன்றெனக் குவிந்த தோளும், கோபுரத் தலைநி மிர்வும்,
வன்றிறற் படைச் செருக்கும், வளர்கலை யொளியும் கொண்டு
வென்றிமேல் வெற்றி பெற்று விளங்கிடு நாட தாமே !

மாவலி

செவிவளர் காதற் பெண்ணைத் திருவிழி கண்ட தேபோல்
புவிவளர் காத லிந்தப் புண்ணிய பூமி யாலே
அவிதலில் லாத தீபோல் ஆசையால் வளர்ந்த தம்மா !
இவளவு செழித்த நாட்டை எனதுநா டென்ப தென்றோ !

எனக்கெதி ராவ தெல்லாம் இருக்குமந் நாட்டி லேபோய்
எனக்கினி தாவ தெல்லாம் இடம்பெறப் பரப்பு மெல்ல ;
உனக்குநான் அரிய நண்பர் உதவியை அனுப்பு கின்றேன்
மனக்குவந் ததுசெய் என்றன் மாப்பிள்ளை கலியே கேளாய் !

பால்வளஞ் சுரக்குங் காராம் பசுவினைக் கண்ட பின்பும்,
வாலிற்கும் உதைக்கும் அஞ்சி வாயினைக் கட்டு வோமோ ?
கால்வைத்து விட்டோம்;பின்னே,கண்டிப்பாய்ச்செல்லமாட்டோம்;
சேல்விழி மோகி நாதா செல்லினி வெல்வ தாமே !

கலி

அஞ்சிலேன் செல்வேன் என்றன் அரக்கமைத் துனனே கேளாய்,
சஞ்சல வலைவி ரித்துச் சன்னமாய் ஊசி வைத்து,
வஞ்சனைப் பிரிவு செய்துன் வருந்துணை பார்த்தி ருப்பேன் ;
மிஞ்சிடின் வாள்பிடித்தென் வீரத்தைக் காட்டி வெல்வேன் ! 360

மாவலி

கொஞ்சிடு நேயம்போலக் குரல்வளை பிடிக்கக் கற்றுய்,
நஞ்சிலே வெல்லம் போட்டு மருந்தென நல்கக் கற்றுய்,
கெஞ்சிநீ புகுந்து மக்கள் குணத்தினைக் கெடுக்க வேண்டித்
துஞ்சற விழித்தி ருக்குந் துணையுனக் கனுப்பு வேனே !

திறக்கட்டும் போக சாலை ; சேல்விழி மாதர் கள்ளைச்
சுரக்கட்டும் ; ஆடல் பாடல் சுகமுற நடந்து நாளை
மறக்கட்டுங் ; கலிய-மோகி களித்துநம் முடனே யாடிப்
பறக்கட்டுங் காலை நேரம் பாரத நாட்டின் பாலே.

வருகசுந் தரியும் ஆங்கே வந்தநல் லிசைஞர் கூடத்
தருகநஞ் செவிக்கின் பத்தைத் தாண்டவ மாடும் போது ;
திருவைய ருடன்சே ருங்கள் செழித்தபோ கங்கள் உண்ண
மருவுவீர் என்றெ ழுந்தான் மாவலிச் சிங்க மாங்கே ! 372

# 11. போக சாலைப் படலம்

சித்தி ரக்கலை சிற்பக் கலைகளில்
எத்தனை வகை இன்ப மிருக்குமோ
அத்த னையும் அமைந்திளங் காமுகர்
சித்தங் கொள்ளைகொள் சிற்றின்பச் சாலையே !

வான வில்லணி யென்ன வருணங்கள் !
தேன்ம லரணி தேக்கும் வனப்புகள் !
மினணி யென மின்னும் விளக்குகள் ;
தான வர்களின் தாண்டவச் சாலையே !

திரைகள் பற்பல, திந்திம் எனக்குதி
துறைகள் பற்பல, காதலர் துய்த்திடும்
அறைகள் பற்பல, ஆட்டத்தை ஊக்கிடும்
பறைகள் பற்பல பான்மை யிருக்குமே !

இந்தி ரர்க்கும் எளிதிற் கிடைத்திடாச்
சுந்த ராங்கிகள் சூடும் அணிமணி
சந்தி ரனுடன் தாரகைப் பத்திபோல்,
அந்த காரம் அழியச் சிரிக்குமே !

தட்டு தட்டாய்த் தசைவளர் உண்டிகள்,
புட்டி புட்டியாய்ப் போதைசெய் கள்ளினம்,
கட்டு கட்டாய்க் கரிய சுருட்டுகள்,
மட்டி லாத மருந்து வகைகளே !

நாண மற்ற நடனங்கள் ஓர்புறம் ;
காணக் கூசுங் களிச்சுழல் ஓர்புறம் ,
வாணம் போல வருதலும் ஓர்புறம் ;
கோண மாகக் குதித்தலும் ஓர்புறம்.

போக சாலையிற் புக்க நிசாசரர்
ஏக மாகி யினியன துய்த்த பின்,
தாகந் தீர்மது வுண்டு தலைசுழல்
வேகத் தோடு விரசமாய்ப் பாடினர் !

மட்டி லாத மதுவெறி கொண்டிளம்
பட்டி மாதரைப் பற்றி நடஞ்செய்வார் ;
கொட்டுக் கேற்ப, குதித்துக்கை கோத்தவர்
வட்டஞ் சுற்றி மனப்படி யாடுவார்.

முத்த மிட்டு முகத்தைத் தடவுவார்,
அத்த மிட்டிரு மார்பும் அணைகுவார்,
பித்த முற்றிப் பிழைபல செய்குவார் ;
சத்த முற்றிய சண்டையுங் காணுமே.

கனவிற் காணினுங் காம நெருப்பினால்,
மனவலி கெட வாள்விழி வீசிடுந்
தனமலை தருந் தாசியர் கூட்டத்தைத்
தனமலை களைத் தந்து தழுவினார் !

வெறிபி டித்த விழைமனத் தானவர்
அறிவி ழந்தனர் ; ஆண்பெண் ணியல்புறும்
நெறியி ழந்தனர் ; நேர்மை யிழந்தனர் ;
பொறியி ழந்தனர் புட்டியின் வேகத்தால் !

இன்னு மின்னு மெனக்குடித் தூணரின்
மன்னன் மாவலி மங்கையர் தோளிலே
பின்னிக் கையைப் பிறரை நடத்தினான்—
மன்ன னெவ்வழி மக்களும் அவ்வழி !

சந்தி ரன்முகங் கண்டு மனக்கடல்
கொந்த ளித்துக் குதித்திட மாவலி
சுந்த ரிக்கொரு தூதை யனுப்பியே
வந்த பாடக ரைவரச் செய்தனன் !

ஆணை பெற்றதும் அக்கணம் பாடகர் தொடர,
வீணை யேந்திய சுந்தரி வியன்மக ளுடனே
நாண மேந்திய நாட்டத்தைக் குனித்துமன் மதனார்
பாண மேந்திய சாலைக்குப் பதைபதைத் தெழுந்தாள் !

கொடியர் நாண்மலர்க் கொடியெனு மாதரைக் கூடிக்
குடி வெறியினிற் கூச்சலிட் டோடுவார் பிடிப்பார் ;
தடியர் கூத்தினிற் கலியனைச் சத்தியன் கண்டே
இடிவி ழுந்தது போலுளந் திகைத்தவ னிருந்தான்.

மாலுறு மனத்தினர் மடந்தை நாணத்தாற்
காலுற நோக்கிக்கண் கசியு மெல்லையில்,
வேலுறு விழியினள் வெறிகொள் மோகியும்
ஏலுமென் றினுமது வீந்து தூண்டினாள்.

ஊகமும் உள்ளமும் உயிரு மின்றியே
தேகமுந் தேகமும் தீண்டும் வீரிய
மோகமுந் தாகமும் முனிந்த மெய்யனிப்
போகமுங் கண்டுகண் புதைத்து நின்றனன்.

தசையலங் காரத்தைத் தழுவிப் பித்தனர்
மிசைமிசை ஈர்த்தனர் மென்ம லர்களை.
வசைகளைக் கூவினர்.....மெய்யன் வந்ததும்
இசையிசை யென்றனர் இணைந்த கையினர்.

சுந்தரீஇ எனமது சுழற்று மாவலி
தந்தகை உதறியே தாவி மேடையில்
அந்தநல் லழகியும் அகார மீட்டியே
சந்தமு மெடுத்தனள் போகன் சாடையால்.

## சாத்தான் வீழ்ச்சி

வானத் தேபர மாத்துமத் தந்தை
மகனை வாழ்த்தி மகுடமும் சூட்டி
'ஏனைத் தேவர் இவனைப் பணிக'
என்று கட்டளை யிட்டனன் ஆங்கே.

ஞானத் தேவர் நயந்து பணிந்தார் ;
நல்லிசை மலர் நன்றெனத் தூவி.
நானெனப் பகை ஆசை அகந்தை
நாட்டிப் பேய்திமிர் காட்டி நடித்தான்.

அச்ச மில்லை அடிமையிங் கில்லை
ஆண்டவன் அர சாட்சியும் இல்லை.
பச்சை யாகப் பகருவன் கேளீர் :
பகவ னுக்குப் பணிந்திட மாட்டோம்;

நாமுந் தேவர் நமதிவ் வுலகே.
நமக்குச் சட்டஞ்செய் நாயகன் இல்லை.
தீமை செய்திடுஞ் செந்நகை வாளால்,
தேவதேவனை வென்றுல காள்வோம்.

நல்ல வானில் அவன்அர சாண்டால்
நரகம் உள்ளது நாமதை யாள்வோம்.
மெல்ல ஈடன் வனத்தினைப் பற்றி,
வீடு கொண்டு வினோதங்கள் செய்வோம்.

சாப மிட்டெனைத் தள்ளிய தந்தை
தந்த மாநிலம் சத்தியங் கெட்டே
பாபக் காடெனப் பண்ணிநம் ஆட்சி
பழுதி லாது பரவிடச் செய்வோம்.

வானடி மையாய் வாழ்வது சாவாம் ;
வளர் சுயேச்சை நரகமும் வாழ்வாம்.
யான ரசன் எனக்கர சாரே ?
என்னை யன்றி யிறைவனும் உண்டோ ?

அறிவை முற்றிலும் ஆயுதம் ஆக்கி,
அரசுடன்அர சாட்சி பொருத
வெறியை யூட்டி விரோதங்கள் மூட்டி,
விண்ண ரசினை வீணெனச் செய்வேன்.

மண்போன் மாதர் மயக்குள மட்டும்,
மமதை கொள்பொய் மனமுள மட்டும்,
விண்ண மைதி விளைவதும் உண்டோ ?
வேற்று மைகள் விலகுவ துண்டோ ?

* * * * *

" நல்ல பாட்டு ! நடனத்திற் கேற்ற
நல்ல மெட்டு ! நடக்கட்டும் ! " என்றே
சொல்லி மாவலி சொக்கினில் ஆழ்ந்தான்
சுந்த ரியைச் சுடர்பெற நோக்கி.

இன்னு மின்னுமென் றாணர்கள் ஊக்கி,
இடிகரம் அடித்தார் இசை யின்பால்.
இன்னல் செய்யும் இழிமனச் சாத்தான்—
இழிந்த காதை யிசைத்தனர் மேலோர்.

பாடகர்

இன்பமுள்ள ஈடன் வனம், ஏவாளுடன் ஆதாம்
இதயமொன்றி வாழ்ந்திருந்தார் இறைவனரு ளாலே.
அன்புமிக்க வாழ்வினிலே அமைதியொளி சேர
அமரரெனக் கவலையின்றி அழகினிலே திளைத்தார்.

பெண்மையுடன் ஆண்மகனும் பிறந்தபடி திரிந்தான்
பேதமன மில்லையந்தச் சோதிவன வாழ்வில்
உண்மையறி வின்பமுள்ளார் ஒருகுறையும் இல்லார்
உள்ளுருகப் பாடுகின்றார் புள்ளினத்தைப் போலே.

இருவர் வாழ்வை இழிவுசெய் யத்தன்,
இயலு ருவைக் கரந்தர வாகி
இருவி காரக் கனியினை ஏவாள்
இன்பனுக் கதை ஈந்துணச் செய்தான்.

மனவி காரத்தி னாலிந்த மண்ணில்
மமதை காம மயக்கம் பரவி,
இனிய ஈட னிழந்து மனிதர்
இன்ன லுற்றனர், ஏழைய ரானார்.

கொலை களவு பொறாமை கொடுங்கோல்,
கோப தாபங் குலவிய போரால்
அலை யுலகில் அதர்மப் பிசாசே
அரசு செய்தனன் ஆணவத் தாலே !

வஞ்சப் பேயின் வலிவை யொடுக்கி,
வானரசைப் புவிமிசை நாட்டப்
பஞ்ச பாதகம் பட்டெனத் தீரப்
பரமனின் அருட் பாலகன் வந்தான் ;

பெத்தல் ஹாமில் பிறந்த கிறிஸ்து,
பெருந் தவங்கள் இயற்றிய பின்னர்,
சித்தஞ் சோதித்த தீமனப் பேயைச்
"சீபின் போ" வென ஓட்டிச் செயித்தான்.

மடைய ராக்ஷஸன் ஆட்சி மண்ணுக,
வாய்மை யன்பு வழியில் வளரும்
கடவு ளாட்சி கதிர்விட் டொளிரக்
கண்டு லகிற் களித்திடு வோமே !

மாவலி

வெறுத்த பேச்சை விளம்பினிர் சீ சீ !
நிறுத்தும் பாட்டை நிசமறி யாதீர் !
அறத்தை ஈசனை அன்பைப் புகழ்ந்தீர்—
துரத்துவேன் சுடுவேன் உமைப் பாரீர் !

மாவ லியின் மனத்தை யறிந்தே,
காவ லன்று கதைத்த கவியைப்,
பாவ லர்களும் பாடிய பின்னர்—
போவி டுத்தனன் புண்ணிய வாளன் !

விரிகலைப் புலவர் தம்மை வெறுங்கையோ டனுப்பி மீண்டும்,
பரிவிலா நெஞ்சன், போகப் பணியினில் ஈடு பட்டே
அரிவையர் நடுநடுங்கும் அக்கிர மங்கள் செய்தான் ;
இரவருள் உறக்கம் வாழி ! இல்லெனில் இன்னுந் தீதே !

காட்டுக்கூப் பாடு போட்டுக் கட்குடி வெறிக ளேறி
ஆட்டுமட் டாடி ஓடி அயர்ந்துபின், சாத்தான் பாடும்
பாட்டினை உளறிக் கொண்டான் அதன்பயன் அழகி சக்தி
வீட்டினிற் காண்போம் வாரீர் வித்தகக் கலைவல் லீரே !

## 12. சக்தி விருப்பப் படலம்

இனைய ஊணர் இராவினிற் செய்ததீ
வினையை மெய்யன் வெறுப்புடன் எண்ணியே,
தனையு மெண்ணிக் கலியன்செய் தந்திரந்
தனையு மெண்ணி முனியிடஞ் சாற்றுவான் :

மெய்யன்

வன்ற வக்கதி ரேயிந்த மாவலி
கொன்ற ருந்திக் குடித்துக் களித்திடும்
பன்றி வாழ்வினைப் பார்த்தபின் எப்படி
நன்று செய்திட நல்லவர் வல்லரே ?

நீச னான நிருதக் கலியனும்
பாச மோகியும் பாரத பூமியை
நாச மாக்க நடந்தனர் காலையே ;
ஊச லாடுமென் உள்ள உறுதியே ;

பஞ்ச பாதகன் பாரத நாட்டிலே,
வஞ்ச மற்ற மனிதர் அழியவே
நஞ்ச மாகிய நாத்திக மாயத்தால்
பஞ்ச ரித்துப் பழங்கதை செய்குவான்.

மதம் பிடித்து மதுவெறி யேறிய,
அதர்ம சேனை அவனுடன் செல்வதை
கதி ரெழுந்ததுங் கண்டவென் ஆத்திரம்,
கொதி யெழுந்து குமைத்திடத் துள்ளுமே !

உலக மெங்குமிவ் வூணர் படையுடன்
நலிய நன்மை, நடந்திடத் தீமையே
கலகஞ் செய்யக் கலித்தெழு மாவலி
வலியொ டுக்க வகையுமுண் டாகுமோ ?

பாந்தள் போலப் படமெடுத் தாடிடும்,
மாந்தர் சத்துரு மாவலி ஆணவந்
தேய்ந்தித் தீவு திருந்த இருவரின்
சாந்தச் சேவையுஞ் சாதக மாகுமோ ?

ஆண்ட வனை அணுவு மதித்திலான் ;
ஈண்டு நாம்சொலும் இன்சொலைக் கேட்பனோ ?
பூண்ட நம்வினை பூத்துக் கனியுமோ ?
தாண்டிச் சென்று தருமத்தைக் காப்பதோ ?

போகன்

தனிய னென்றினிச் சஞ்சலங் கொள்வதேன் ?
இனிய சுந்தரி பக்க மிருக்கின்றாள் ;
புனித சக்தி யுனக்கெனப் போந்திங்கே
தினமும் சுத்தனைச் சிந்தித் தொழுகுவாள்.

ஆண வத்தில் அனலன் முதலியோர்
வேண துன்பம் விளைத்திட வல்லவர் ;
ஊணர் தீமையவ் வூணர் செருக்கினால்
வாண மென்ன வயங்கிக் கரியுமே !

நாட்டுவோம் சபை ; நல்லசன் மார்க்கத்தைக்
காட்டுவோம் ; இவர் கல்வி யறிவினைத்
தீட்டுவோம் ; சமர் செய்யும் வெறியினை
ஓட்டுவோம் ; மன முண்டு வழியுண்டே.

சக்தி வருதல்

முத்த னிச்சொல் மொழிந்திடும் போதிலே,
சுத்த ஓமெனச் சொல்லி யுளத்தெழும்
பத்தி கண்ணிற் பளிச்சிட, கௌரியாம்
சத்தி வந்து சரண்என நின்றனள்.

புகையறப் பொலிதீ யன்னாள் ; பூரண மதி முகத்தாள் ;
பகைசுடும் பாலைத் தீவிற் பரிவுள சோலை போன்றாள் ;
முகமலர் மூர லென்னும் முத்துதிர் அமுதச் செல்வி ;
அகமலர் அன்புத் தேறல் அளாவிய செம்பொன் வல்லி !

சுந்தரி யழகுங் கௌரி-சுத்தனின் எழிலுங் கொண்டாள் ;
பந்தெனத் துள்ளுங் காலும், பரபரப் பான கையும்,
சிந்தையிற் கருணை யூற்றும், செஞ்சொலில் வஞ்ச மற்ற
மந்திரத் திறமை கொண்ட கன்னிகை வாழி மாதோ !

யாவரும் விரும்பு கின்ற எளிமையும் தெளிவுங் கொண்டாள் ;
தேவருக் கரிய கற்புத் தெய்வம்; இத் திருவின் சேயை
மாவலி தானும் அன்பு வைத்திட மதித்தான் என்னில்,
பூவினில் யாரே யிந்தப் புனிதையை மதித்தி டாதார் ?

"வணக்கம் ஓம்" என்று நின்ற மலர்நகைச் செல்வி தன்னை
இணக்கமாய் மெய்யன் போகன், இருவென அருக மர்த்தி,
நுணுக்கமாய் நோக்கி நோக்கி, நுவலரு மின்ப மெய்தி,
அணுக்கமாய்ப் பேசிப்பேசி அந்தரங் கத்தைக் கண்டார்.

போகன்

செல்வமே கௌரி தன்னை எப்படித் தெரிந்து கொண்டாய் ?
எல்லையில் ஆழி தாண்டி எப்படிச் சுத்த னையுன்
அல்லிமென் விழிகள் கண்ட ; எனமுனி அவளைக் கேட்க
முல்லையின் முறுவல் காட்டி மொழிந்தனள் அமுத வாயாள்.

சக்தி

புண்ணிய பூமி யென்றுற் புத்துணர் வடையும் உள்ளம் ;
விண்ணினைக் கண்ட தோர்நாள் ; விழியயர் கனவில் வந்து,
தண்ணருட் சோதி யாகத் தவத்தணல் வீசி யென்னுள்
பெண்ணுயிர் புகுந்து, கௌரி யெனப்பெயர் பேசிற் றம்மா!

அத்தையின் கணவன் செய்யும் அதர்மப்போர் கண்டேன்; வீர
சுத்தனின் வெற்றி கண்டேன் ; சுதந்தரப் போரிற் கௌரி
பத்தினிக் கடமை காத்துப் பலிச்சென உடலை விட்டேன்
புத்திளம் உயிர் கலந்து பொலிந்திடக் கண்டேன் ஐயா.

அருணனே முகமாம் ; காலை அருமறை விழியாம் ; ஆழ்ந்த
கருணையே மனமாம் ; வீரக் கனலுறு செவ்வேள், அந்தக்
கரணத்திற் புகுந்தென் வாழ்வைக் கனிநகை யுடனே ஏற்றான்;
இரணமும் சுடரும் போலே கெழுமிய நேயங் கொண்டோம்.

உள்ளத்திற் கோயில் கொண்ட சுத்தனின் முகத்தைக் கண்டேன்
தெள்ளிய ஒளிப்பி ழம்பாய்த் தியானத்தில் வருவான் என்று
விள்ளரும் இன்ப மூறச் சக்தியும் விளம்பும் போது,
மெள்ள 'நீ கௌரி' யென்று விளம்பினன் மெய்ய னங்கே !

மீளவும் கௌரி சக்தி "விசனமேன் கலியன் பூமி
ஆளவு மாட்டான் ; தீமை அளவில செய்து வீழ்வான் ;
ஆளுநா யகனைப் பாட யாழிசை அறியச் செய்வாய் ;
நாளுமுள் ளன்பு செய்தால் வெற்றியே நல்கு" மென்றாள்.

சுந்தரி

வியப்புடன் சக்தி பேச்சை விருப்புடன் கேட்டு வந்தே,
"தயக்கமில் லாது நீவிர் தானவன் கீதம் பாடீர் ;
மயக்கமேன் ? இசையைக் கேட்க மாவலி வந்து விட்டான்—
நயக்கநான் உள்ளேன்" என்று நன்மன வழகி வந்தாள்.

(போகன், மெய்யன் பாடல்.)

பாரே ஈவீர் ! பணமே ஈவீர் ! படியீரேல்,
போரே யீவீர் ! புவியீர் உம்மைப் புறங் காண்பேன் ;
யாரே நிற்பார் என்படை முன்னென் றவுணர்கோன்
பேரோ சைசெய் பேரிகை கொட்டிப் பெயர்ந்தானே.

சுந்தரி பாட்டு மிக்கச் சொகுசென நடன மாடி
வந்தனன் அவுணர் கோனும், வாஞ்சையாய்ச் சக்தி தன்னைச்
சிந்தனை குளிரப் புல்லிச் "செல்வமே" என்ற போதே
சந்தமார் கீதங் கற்பேன் சம்மதி யென்றாள் சக்தி.

கண்டனன் அவுணர் வேந்தன் கவிகளைக் கள்ளும் ஊனும்
உண்டதன் மயக்கமின்றி, உளமுற ஊன்றிப் பார்த்தான் ;
கண்டனன் போகன் கண்ணிற் கனலுறுங் கதிரை ; இன்பங்
கொண்டனன் இவன் எமக்குக் குழலிசை யடிமை யென்றே !

வெண்ணகை முகமும் வீர விறுவிறுப் பொளிரு ஞானக்
கண்ணொளிக் கனலும், நீண்ட கைகளும் இருபு யத்தின்
திண்மையும் இளமை சொட்டுந் திருவுடன் பொலியு மெய்யன்
உண்மை நம் அடிமை யென்றே உவந்தனன் அவுணன் ஆங்கே.

மாவலி

தாண்டுதற் கரிய ஆழி தாண்டினை ; கண்ணு றங்கா
நீண்டவென் காவல் மீறி எப்படி நீயிங் குற்றாய் ?
காண்டலுக் கரிய இவ்வூர் கண்டதெவ் வாறு சொல்லாய்
ஈண்டென ஊணன் கேட்க இனியனும் இதமாய்ச் சொன்னான் :

மெய்யன்

முகைவிரி முறுவல் காந்த, மொழிமொழி கனிவு கூறத்
"தகைவிரி யவுணர் கோனே, தாரணி முழுதும் அஞ்சப்
பகைவிரி புகழோய், உன்னைப் பார்ப்பதற் கென்றே நாங்கள்
சகவிரி வெல்லாங் கண்டு தானவம் வந்து சேர்ந்தோம்.

பாட்டுடன் குழலு மூதிப் பரிவுள ரசிகர் தந்த
கூட்டுற வாலே நாங்கள் கோமளத் தீவில் வந்த
நீட்டநல் விமான மேறி நின்னர சுற்றோம் ; எம்மை
வாட்டிய வருத்தம் இங்கே வந்தது தீர்ந்த தையா !

இசையின்பக் கடலென் றுன்னைப் புலவர்கள் இயம்பக் கேட்டோம்,
வசையறும் அரசி யான சுந்தரி வளமை கேட்டோம்,
திசைதிசை சுற்றி யின்றே தெரிசனங் கண்டோம் ; ஐய
அசைவறும் உன்றன் ஆணை அளித்திடின் அதுவே செய்வோம்.

மாவலி

எனதருஞ் செல்வி சக்தி இசைத்திடக் குழலும் யாழும்
இனிதுறப் பயிற்றி நாளும் என்புகழ் ஒன்றே பாட
மனதுவைத் திடவே செய்வாய் ; மானிடர் போற்றுகின்ற
புனிதமும் தேவும் ஏழாம் பொருத்தமென் கொள்கைக் காமே!

போகன்

சித்தமே சித்தம் ; இந்தச் செல்வியின் விருப்பும் அஃதே ;
வித்தகர் கண்ட காந்தம், மின்னணு, வெப்ப மான
சத்தியை இயற்கை தந்த சராசர வியப்பைப் பாட
உத்தர வுண்டோ சொல்லாய் ஒப்பிலா ஊணர் கோனே !

மாவலி

பொருளென முன்னே காட்டும் போதிவே தியரின் கொள்கை
மருளிலா உண்மை ; அந்த வாய்மையே சக்தி யென்பேன்.
அருளிறை அருவென் றோதி ஆட்களை யேய்க்குங் கொள்கை
இருளென வெறுப்பேன் ஹெக்கல் இங்கர்ஸால் நண்பன் யானே.

சக்தியைப் பயன்ப டுத்திச் சகத்தினை வெற்றி கொண்ட
வித்தகர் சரிதை, குண்டு வீரரின் சரிதை, எங்கள்
உத்தமப் பெரியா ரான தானவர் உயர்ந்த காதை
மெத்தவும் இனிய பாட்டாய் விளங்குதல் விருப்ப மாமே.

"அன்னதே அமைதி" யென்று மெய்யனும் அன்பு காட்டிக்
கன்னியின் முகத்தை நோக்கக் கருத்தறிந் தவளும் சென்று,
தன்னிக ரற்ற நல்ல தங்கயாழ் எடுத்து வந்தே,
மின்னகை புரிந்து மீட்டி, மெட்டினைத் தடவி னளே.

மாவலி

பொங்கிய உவகை கொண்டு "பூமுகச் செல்வி யேந்,
இங்குவந் திருக்கும் இந்த எளியநல் லிசைவா ணர்கள்
எங்குண மறிந்து வாழ மட்டமென் னிசையை மீட்டாய்
மங்கல முனக்குண்" டென்று மாவலி வாழ்த்தி னனே!

சக்தி

"சரிசரி அப்பா" வென்றே சக்தியும் புன்ன கைத்துச்
சரிகம பதநீ யென்று தடவிடும் போது, வெள்ளி
"அரசவை வருக" வென்றோர் அவசரச் செய்தி விட்டான் ;
பரிசனத் துடனே வூணன் பாட்டையுந் துறந்து சென்றான் 152

# 13. வெள்ளி நீதிப் படலம்

காற்றுடன் கதிருமே கடந்து சென்றிடாக்
கூற்றிற்கும் புகலரும் குகையில், வெள்ளியும்
ஆற்றல்சால் அமைச்சரும் அமரின் வீரனும்
வீற்றிருந் தினையன விளம்ப லுற்றனர்.

நுன்மதி

ஒற்றர்கள் கூறிய உண்மை நோக்கிடின்,
கற்றநம் இயந்திரக் கனற்ப டையினும்
பற்றலர் படைமிகப் பலமென் றுய்தகும் ;
வெற்றியின் முன்னொரு வேலை யுள்ளதான்.

வரையெனப் பெரும்பெரும் வங்கம் பாரதக்
கரைகரை சூழ்ந்தன கடிய காவலாய் ;
விரைபகைக் கலங்களை விழித்த வீரர்கள்
திரைக்கிரை யாக்கிடுஞ் செய்தி கேட்டனம்.

தந்திரச் சூழ்ச்சிகள் சமைந்த பின்னரே,
நந்திறப் படைகளை நடத்த வேண்டுமால்,
யந்திரக் கலைகளில் இணையில் வீரனே
கந்தகப் புகையின்முன் கனலைச் செய்வமால்.

*பொட்டிலுப் புடன்புணர் பொலிவுக் கட்டிபோல்,
பட்டென வெடிக்குதென் பாறை நெஞ்சமே !
கட்டிய †கனிக்கரி கந்த கப்புளி
அட்டிய தெனப்புகை அகத்தில் ஏறுமே !

தைரியப் புலிகளாந் தான வர்களும்,
வைரிமுன் குருவிபோல் வணங்கி நிற்பதோ ?
வைரத்தை அறுத்திட வைரம் வந்ததோ ?
‡கைரியம் வேண்டிடிற் கடுமை வேண்டுமால்.

சினப்படை மிகப்பல கொண்டு செல்லுமின் ;
வனப்புடை நாட்டினை வளைத்துப் பற்றுமின்,
தனக்குவை கொணருமின் ; தான வர்க்கதே
இனக்குறிப் பாகிடும்-இகல்வி ளைப்பதே ;

கலிமுதற் சென்றுபோர்க் கனலை மூட்டுக ;
புலியெனச் சென்றந்தப் புலியை வீழ்த்திநான்,
கிலிபிடித் திடநரர் கிடுகி டுக்கமண்
வலிமையைக் காட்டலே மதிப்ப தாகுமே !

எனையறி யாமலென் இயற்கை யின்வலி
தனையறி யாதுநீர் சாந்த மாகிய
வினையினைச் சாற்றினீர் ; விரும்புஞ் செய்கையை
அனைவரும் அழியினும் அடைந்து தீருவேன் !

அருநிதி யளித்திடும் அந்தப் புண்ணியத்
திருவுறு நாட்டினைச் செயிக்க வேண்டினேன் ;
உருவுள சூழ்ச்சியை உடனு ரைத்திடாய்
குருவென நான்மனங் கொண்ட வெள்ளியே !

வெள்ளி நீதி

பூவுக் கிப்பெரும் புண்ணிய பூமியே,
ஆவி யாகும்; அத் யாத்தும சக்தியே
மேவு மாற்றலும் வீரமுங் கொண்டது ;
தேவர் நாடெனச் செப்பிடத் தக்கதே !

வாய்மை, யன்பு, மறுவறு நன்னடை
தூய்மை வீரத் துணிவுள ஒற்றுமை ;
நேயங் கொண்ட நிகரறு வித்தகர்
மேய நாட்டினை வெல்வது மாகுமோ ?

---

* பொடாசியம் பெர்மாங்கனேட்டும், பாஸ்பரசும் சேர்ந்தால் வெடிக்கும்.

† மாங்கனீஸ் உப்புடன் கந்தக திராவகம் சேர்ந்ததுபோல் மனம் புகைகிறது.

‡ பொன்.

சீதை வேண்டித் தசமுகன் சீர்கெட்டான் ;
மாதை வேண்டி மடிந்தனன் கீசகன் ;
ஈதல் வேண்டி மகாபலி பீழுற்றான் ;
ஆத லால்அரக் கர்க்கழி வானதே !

‖நீறு செய்தவர் நீறுபட்டார் ; மிக
ஊறு செய்தவர் ஊறுபட்டார் ; நம்மைக்
கூறு செய்திட வேடங்கள் கொண்டுநல்—
வீறு பெற்றுறு விண்டுவின் சூழ்ச்சியால்.

இல்லை யென்ற இரணியச் சிங்கத்தைக்
கொல்ல வந்த கொடுநர சிங்கமே
தொல்லை செய்திடத் தோன்றினுந் தோன்றுவான் ;
அல்லல் கோடி அரக்கருக் காகுமே !

மாவலி

அஞ்சிலேன் அவன் அப்பன்வந் தாலுமே !
வஞ்சித் தென்குல வாழ்வைச் சிதைத்தவர்,
எஞ்சி நிற்க இதயம் பொறுக்குமோ ?
நெஞ்சில் வேகு நெருப்பும் அணையுமோ ?

வெள்ளி

உலகை ஆளும் உபாயம் கேளாய்;
பலமும் படையும் படைத்தமா வலியே !
அருள்பொருள் என்னும் இருதிறன் உலகை
ஆளும் வகையை அறிவாய் நீயும்.
பாரத சக்தியே தீரரை ஆக்கும்
ஆத்தும சக்தியாம் அருளொளி யாமே.
பொருளுறு சக்தி பௌதிக சக்தியாம்.
போதி வேதி பொருளா தாரம்,
கணிதம் யந்திரம் காட்சி யறிவாம்
அனைத்துந் தேர்ந்தே, அரும்பொரு ளாக்கிப்
போகந் துய்க்கும் வேகம தாகும்.
இரண்டும் சேர்ந்தால் இப்புவி வாழ்க்கை
யோக போகமாய் ஒளிருமெந் நாளுமே.
அருளும் பொருளும் அமைந்த பாரதம்
அசுர பலத்தையும் அடித்து வீழ்த்துமே.
இரண்டையும் பிரித்தலே இரண்டு பக்கமும்
சுரண்டி நம்மிசை துலக்கும் வழியாம்
பாரத சக்தியாம் பரமாத்ம ஞானம்

‖ பஸ்மாசுரன் விஷ்ணு மோகினியால் எரிந்தான்.

உதவுந் தவமும் யோகமும் அழிந்தால்,
புண்ணிய பூமி புகலற் றுப்போம்.
இறைவன் ஆன்மா என்பது பொய்யே,
உடலே உண்மை உலகே உண்மை
என்னு முணர்ச்சி எழுந்தால், ஆங்கே
வேதக் கூச்சல் விழலுக் காகும்.
தொல்லற மெல்லாம் அல்லற மாகும்
சொல்லற மெல்லாம் மல்லற மாகும்.
நாத்திக மான நமது கொள்கையை
ஆத்திரங் கொண்டநம் அண்ணல் கலியால்,
எங்கும் விதைத்திடின், ஏளனஞ் செய்து,
நாட்டிற் குரிய நல்லறஞ் செகுத்திடின்,
இல்லறந் துறவறம் இரண்டுந் தேய்ந்து,
மக்கள் வாழ்க்கை துக்கமே யாகும் ;
அறிவொளி யவிந்தால் அகவிருள் சூழும்.
சிந்தனை யெல்லாம் பந்தனைக் குள்ளாம்.
நாத்திக வாத நாப்பறை யாலே
ஆத்திக மாகும் யாழொலி மறையும்.
உலகாய தத்தை உள்ளுற வளர்த்தால்,
கலகாஸ் பதங்கள் கணக்கறக் கிளம்பும்.
போக வாழ்விலே புலன்கள் புகுந்தால்,
யோக சித்திகள் உருப்படி யாகா.
ஆதியில் ஓர்குல மாகிய மக்களைச்
சாதிப் பித்தந் தலைக்கே றிடவே,
பிரித்து வைத்துப் பிணங்கச் செய்தால்,
அன்னிய பலத்திற் காதர வாகும்.
தத்துவ மற்ற தத்தா றிகளைப்
பத்திரி கைகளிற் பச்சை பச்சையாய்,
எழுத வைத்தலே, இரண்டுங் கெட்டுப்
பொதுசன மூளை புரட்சியின் பெயரால்,
பண்டை நலமும் இன்றைய நலமும்
அழிந்தொழிந் தடிமை யாகிட வழியாம்.
மாதவ சிலரை மடையரென் றேசி,
நவீன மான நாக ரிகமெனும்
மயக்கை யூட்டி, மாந்தரை யிழுத்தால்,
தயக்கமில் லாதறந் தட்டழிந் தொழியும்.
பிரிவினை செய்த பிறகுநும் மிடையே
ஒற்றுமை யில்லெனும் ஓயாப் பல்லவி
பாடுனல், என்றும் பயமிலா தாளலாம்.

வதைப்பும் கட்சியும் வளர்த்தே நாட்டில்,
ஒன்றிற் கொன்று சண்டை வளர்த்தே
அச்சமும் மேடையும் அதிரப் பேசி,
நாச்சி லம்பமும் பேனைச் சிலம்பமும்,
காகிதப் போரும், கண்டனப் போரும்
வளர வசைநூ லுறச் செய்தால்,
வெற்றுவா தங்கள் வேதனை செய்தால்,
ஒற்றுமை முயற்சி உதவா தொழியும்.
இரண்டு கட்சிகள் இணைந்து வந்தால்,
இருபது கட்சிகள் எதிர்க்கச் செய்வோம்.
அதுவே நாட்டை ஆளும் சூழ்ச்சியாம்.
தொல்பெருஞ் சுவடிகள் செல்லரித் தொழிய,
அனுட்டா னங்கள் அலங்கோல மாக,
பிழைக்கும் வழியெனப் பெயரினை வைத்து,
வசைநூல் பரவினால் அசையா திருக்கலாம்.
கள்ளுங் கொலையும் காமமும் சூதும்,
களவும் புதிய வளமுடன் வளர்ந்தால்,
புண்ணிய மெல்லாம் கண்ணீர் சிந்தும்.
சைவ உணவே சன்மார்க்க உணவெனப்
புகலும் மாந்தர் புலாலுணச் செய்தால்,
இயற்கை யழிவார் ; இகலை வளர்ப்பார் ;
இரக்க மொழியும் இராக்கதம் பெருகும் ;
ஆட்டை யறுத்தகை ஆளை யறுக்கும்.
கொலைமதம் பெருகிக் கொடுமை பெருகும் ;
கொடும்போர் நமது கொடியினைத் தாங்குமே.
ஆத்தும ஞானமே பூத்திட லின்றி,
சுத்தசன் மார்க்கந் தூருடன் ஒழியச்
சாரு வாகமே தழைத்திடக் குறித்துக்
கல்வியை வகுத்துக் கலைகளைத் திருத்தினால்,
பொறிகள் பாழாய், அறிவும் பாழாம் ;
மடமையும் வறுமையும் அடிமைத் தனமும்,
தாண்டவ மாடித் தானவர்க் கிதமாம்.
என்மதம், என்வகை, எனதே கட்சி
எனதியான் என்னும் இறுமாப் போங்கின்,
பொதுநல மென்பதும் போலித் தனமாம்,
பிரம சரியப் பேச்சே யின்றி
ஆண்பெண் காமம் அளவறப் பெருகி,
மனையறஞ் சிதைந்து, மாதர் கற்புங்
குலைந்திடின், அசுரக் குலமே தழைக்கும்.

பொன்விலை பேசிப் பொய்மணம் புரிந்து,
கன்னி யழியக் கைம்பெண் பெருக,
இளமணத் தாலே வளமெலாம் வற்றக்
களவியற் காமம் கண்கெட் டலைய,
காதல் மணமெனுங் கதையெலாம் ஒழிந்தே,
மணவினை யெல்லாம் பணவினை யாகி,
பணவினை யெல்லாம் பகட்டுக ளாகி
வீட்டறம் உண்ணும் விடுதிக ளாகி,
பலமணத் தாலே கலகம் வளர்ந்து,
வலிவிழந் தாண்மை மெலிந்தே தேயும் ;
அழகை நாமே அனுப விக்கலாம்.
ஆண்பெண் வாழ்வை அல்லற் படுத்தலே,
அசுர நீதியின் ஆரம்ப மாமே.
நாட்டின் விளைவை நாமே பறித்துச்
செய்பொரு ளாக்கிச் சிக்கென விற்றால்,
பணமெலாம் இங்கே பறந்துவந் தோங்கும்.
வறுமையே அங்கே வளர்ந்து பெருகுமே.
சகமெலாம் நமது சந்தையே யானால்,
திராசெலாம் நமது திருக்கையி லிருந்தால்,
வாணிகம் பெருகி, வளமை பெருகித்
தொழில்கள் பெருகிச் சுதந்தர மாகப்
புதுப்புதுக் கருவிகள் கதுமெனப் பெருகிச்
செல்வம் பெருகிச் செல்வாக் கோங்கிப்
பாரின் பத்தின் பயனெலாங் காண்போம் ;
பணமும் நமதாம் ; படையும் நமதாம்,
பொறாமை கொண்டு போட்டி போடுவார்,
போர்க்களத் தழியப் புதுப்பொறி காண்போம்.
மண்வெறி கொண்டார், மண்வெறி கொண்டே
நம்மை யெதிர்த்தால், இம்மெனச் சுடுவோம்.
வெம்மையே நமது வேதவே தாந்தம்.
இன்ன சூழ்ச்சியால் இவ்வுல கெல்லாம்,
தானவ மயமாய்த் தந்திரம் பயின்று,
மாந்தரைக் கெடுத்து மாவலி மதத்தை
மெல்லப் புகுத்தினால், வெல்லுந் திறமாம்.
மெலித்த பிறகு வலிமை காட்டுவோம்.
வல்லவ ராகி வல்லமை காட்டுவோம் ;
நட்பு நடித்தே நமனெனப் பாய்வோம் ;
பிரிவினை செய்தே பெருவினை தொடர்வோம் ;
வேரைப் பறித்தே போரிற் சாய்ப்போம் ;

ஒற்றுமை யழித்தே பற்றுவோம் நாட்டை ;
ஒருவரைத் தாங்கி, ஒருவரை நீங்கி,
இருவரும் நமக்கே இணங்கச் செய்வோம் ;
அவர்வலி வாலே அவர்வலி யுடைப்போம்,
அவர் மெலிவாலே அவரை மெலிப்போம் ;
அவர் வாளாலே அறுவடை செய்வோம் ;
அவர்துணை யாலே அவர்புவி வெல்வோம் ;
அவர்பிரி வாலே அவரைநாம் ஆள்வோம்.
அவரவர் வேற்றுமை அவரவர் பகையாம் ;
அவரவர் மடமையே அவரவர் விலங்காம் ;
அவரவர் இருளே அவரவர் நரகமாம் ;
அவரவர் உறக்கமே அவரவர் வீழ்வாம்.
பயந்தவர் மீது படைவலி காட்டிச்
சகமெலாம் ஆள்வோம் தானவர் வேந்தே !

மாவலி

இதுவே சூழ்ச்சி இதுவே நம்வழி !
நன்றாய்ச் சொன்னாய் நானினி வெல்வேன் !
மாவலிக் கெதிரே மனிதர் நிற்பரோ !
பொன்னுரை யெல்லாம் பொருந்தக் கூறினை ;
கலியுடன் அதர்மக் கடும்படை சென்றது ;
போதா தின்னும் சாதிவேற் றுமையும்,
துன்மார்க் கங்களும் தோன்றிப் பரவக்
கால பாசன் கனத்த படையுடன்
மோகிக் குதவ முன்னே செல்கவே !
அதர்மம் வளர்க அசுரர் ஆள்க.
அரக்கத் தோழர்காள் ! அடுத்த வினைக்குத்
தந்திரப் படையைத் தயார்செய் தங்கே
சிற்றர சர்க்குட் சிதைமனப் பிரிவினை
மூட்டிப் போர்வலி காட்டிட நாடுவோம்....
வையகம் புரக்க வருவீர் தோழரே !

# 14. கலி வழிப் படலம்

புண்ணியப் பூமியைப் புலிகள் பற்றிடப்
பண்ணிய சூழ்ச்சியைப் பகரக் கேட்டதும்,
திண்ணெனச் சத்தியன் செருவை வேண்டியே
அண்ணலுக் கினையவை அறைகு வானரோ !

மெய்யன்

போயுடன் கலியினைப் போரில் வென்றுநான்
ஏயநற் கடமையை யியற்றுவே னிந்தப்
பேய்நிலந் திருந்திடப் பிறகு காணுவோம்,
தாய்நிலம் உயிரினுந் தக்க சீரன்றோ ?

திடமுறு வீரர்கள் சொந்தத் தேசத்தின்
இடர்களைத் தவிர்ப்பதும் இகலை வீட்டலும்,
அடிமையை யகற்றலும் ஆண்மை கொண்டுதங்
கொடியினைக் காப்பதுங் கொற்ற மாகுமே.

என்முது நாட்டினர் இன்றும் என்றுமே
அன்னியர்க் கடிமைக ளாகி வழ்வதோ ?
ஒன்னலர் தந்திரம் ஊன்று முன்னரே
என்பணி செய்குவன் ஏகிப் போகனே.

போகன்

செய்ய வீரச் சிகாமணி யேமிகத்
துய்ய வீரத் துணிவுரை சொல்லினை ;
மெய்ய, உன்னிசை மிக்கதெ னினுமே,
கையிற் கொண்ட கடமையிங் குள்ளதே.

நரிபுலிக் குழுவென நாடுந் தானவர்
எரியினைப் பொருதிடும் விட்டில் என்னவே,
அரியநல் லாற்றலும் அருளுங் கொண்டநம்
பரிவுள சுத்தன்முன் பணியக் காணுவாய்.

அங்குறு கடமையைத் தூயன் ஆற்றுவான் ;
இங்குறு கடமையை இனிது காத்திடின்,
மங்கிய தருமமு மலர்ச்சி பெற்றிடும்
பொங்கிடும் உலகினிற் புனித வாழ்க்கையே.

தடித்திடும் ஆணவத் தான வர்குலம்
பொடித்திட உலகினைப் புரியும் போர்களால்,
வடித்திடும் பூமகள் வாட்கண் ணீரெலாம்
துடைத்திட மெய்வழி துலக்கி வாழுவோம்.

உலகினைக் கெடுத்திடும் ஊணர் மாறியே,
நலவழி நின்றிட நயமி குந்திடுங்
கலைவழி யுள்ளது ; கடிய தானவர்
கொலைவழி தவிர்த்திடுங் குணம தாகுமே.

அலைமனம் அடங்கிடும், அழகின் பத்தினல்,
விலையறு நன்மைகள் விளைந்து, வாழ்விலே
நிலைபெறுந் திருந்திய நேர்மை யாதலாற்
கலைவழி யிங்குநங் கடமை செய்வமே.

சுந்தரி

கலையி னால்உல கொற்றுமை காணுவோம் ;
 கலையி னாற்கருத் தைவிரி வாக்குவோம் ;
கலை மகளின் கவின்பெருங் கோயிலில்,
 கைகள் கோத்துக் களிநட மாடுவோம்,
விலையி லாமல் விரைந்திடுங் காலத்தை
 வீண்செ யாது கலைவினை வேற்றுவோம் ;
நிலையி லாநதி நேரிய வாழ்க்கையை
 நீண்ட காவிய மாக்குவந் தோழரே !

இய லழகை இலக்கியம் ஆக்குவோம் ;
 இயற்கை உள்ளத்தில் இன்னிசை காணுவோம் ;
இயலு ணர்வைச் சிலையில் இலக்குவோம்,
 எழுது வோம்பட மாயியல் வாழ்க்கையை ;
கயல்விழி கனிவாய் மலர்க் கைகளால்,
 கருதும் பாவனை காட்டி நடஞ்செய்வோம் ;
செயல்கள் ஆயிரஞ் செய்வோங் கலைகளாற்
 செகத்தி னிற்புதுச் சிற்பிக ளாகுவோம்.

அழகுத் தெய்வத்தை வாழ்த்தி வணங்குவோம் ;
 அழகுச் சோலையில் அன்புறக் கூடுவோம் ;
அழகின் இன்பத்தை ஆருயிர்க் கூட்டுவோம் ;
 அழகை வாழ்வெனும் வீணையில் மீட்டுவோம் ;
அழகு செய்கலை அத்தனை யுங்கொண்டே
 அரக்கர் தம்மை அமரர்க ளாக்குவோம் ;
பழகும் ஐம்பொறி பண்புறின், வாழ்க்கையும்
 பண்பட் டன்பு பழுப்பதைக் காணுவோம் !

மெய்யன்

மந்திர முனிவநின் மணிமொழி நன்றே ;
சுந்தரி யமுதச் சொல்லும் இனிதே !
கலைவழி பற்றிக் கடமை செய்து,
நிலைபெறும் பயனை நேர்மையாய்க் காண,
விரும்பினேன் அதற்கொரு வினைமுறை வகுப்போம் ;
கரும்பினும் இயிய கனிவுரை யீரே !
விரிகலை பொலிய விளங்குமே புதுமை ;
சரித்திரங் கண்ட சத்திய மிதுவே.
கான்ஸ்தாந்தி னேபிளிற் கனிந்த கலைமலர்
தேன்மணம் பரப்பித் திருந்திவெண் ணுடு
புதுவாழ் வெய்தப் பொலிந்ததை யறிவோம்;
பொதுநல மெல்லாம் புரிந்தது கலையே.

ஓமர், விர்ஜில், ஒப்பிலாத் தாந்தே,
ஷேக்ஸ்பியர் மில்தன், ஷெல்லிபோற் கவிகள் ;
வியாசர்வான் மீகி, வள்ளுவர் கம்பன்,
காளிதா ஸர்போற் கவியருள் பெரியார்,
வள்ளலார் போன்ற வரமிகு மகான்கள்,
ஆஞ்சிலோ போலும் அமரச் சிற்பிகள்,
மானிட வாழ்க்கை மறுமலர்ச் சிபெறத்
தோன்றிப் புதுமை துலக்கிய தறிவோம்.
பாட்டுங் கவிதையும் படமுஞ் சிற்பமும்,
கூத்தும் தகுமுறை குலவிய நாடுகள்
அழகின் சக்தியால் அன்புறக் கண்டோம்.
ஆதலால் அருங்கலை அனைத்துந் தேர்ந்தோய்,
செயல்முறை வகுத்துச் செய்வன செய்வமே.

போகன்

எங்கும் பசுமையுந் தங்கமும் பொலியக்
கங்குலை விழுங்கிக் கனிமுகங் காட்டும்
அருணோ தயம்போல் அருங்கலை எழுந்தே,
கருணைக் கதிர்களைக் கவின்பெற வீசவே,
கவலை யுள்ளமுங் கனிநகை புரியும்,
புவியினில் எத்தனைப் புத்திபே தங்கள்
சாதி மதநிறச் சண்டைகள் இருந்தும்,
கலைஅனை வரையுங் கட்டுப் படுத்தும் ;
சோர்ந்த நாட்டிற் சுதந்தர வீறும்,
வீழ்ந்த நாட்டில் வீரக் கனலும்,
ஆண்மையுந் தூண்டும் அழகுக் கலையே.
ஒவ்வொரு நாட்டின் உயர்நலப் புகழும்
கலைஞர் தந்த கவின்பெறு வரமாம் ;
ஆதலாற், கலையை ஆருயிர் போலப்
போற்றி வளர்த்துப் புதுமை துலக்குவோம்.
சக்தி, கௌரி சரஸ்வதி போல
யாழை மீட்டி ஏழிசை பாடுக !
நவரஸ நடனமும் நன்ருய்ப் பயில்க !
அவனைக் கொண்டே அசுரர் கோனை
இசைமகிழ் வூட்டி, இந்த நாட்டிலே,
கலைகளை வளர்க்கக் கட்டுவோம் கோயில்.
உலகெலாம் பொலியும் புலவர் மணிகளை
இங்கே கூட்டி இயல்புற நாளும்
அருங்கலைக் கோயிலை அழகு செய்து,
பெருங்கலைப் பணிகள் பிழையறச் செய்வோம் ;

காவியம், இலக்கியம், ஓவியம், சிற்பம்,
பாட்டு, நாடகம், பரத நாட்டியம்,
யாழ் குழல் மத்தளம் இனியவாத் தியங்கள்,
இவற்றால் அரக்கர் இனத்தையே ஈர்ப்போம்.
ஆடல் பாடலில் ஆண்மையும் வீரமும்
காதலுங் கற்பும், கல்வியும் ஒழுக்கமும்
அன்பும் பண்பும் அமையக் காட்டுவோம்.
பெண்களைத் திருத்திப் பெண்களைக் கொண்டே,
ஆண்களைத் திருத்தி, அழகு செய்தபின்,
பண்புள தானவ நண்பரைக் கூட்டிக்
கல்வியும் ஒழுக்கமும் பல்கிய நாடகம்,
நாட்டியம் பழக்கி ஆட்டுவோம் வாரீர்.
தானவம் ஆணவம் சார்ந்தபட் டினங்கள்
எல்லாம் கலையில் இணைந்திடச் செய்வோம்.
இம்முதற் படியை எட்டிய பிறகே,
செம்மனந் தழைக்கத் தியது விலகச்
சுத்தன் கண்ட சுத்தசன் மார்க்க
சங்க மீங்கே தழைத்திட லாமே.
கலைப்பணி முடிந்ததுங் ககனமார்க் கத்திற்
சென்றதற் கிசைவன செய்வேன் அன்பீர்.
சன்மார்க்க சாதனம் சரிவர நடந்தால்,
தம்போற் பிறரைத் தானவர் மதித்தால்,
ஆன்ம நேயம் அன்புட னெழுந்தால்,
புலாலுண வொழிந்தே போர்வெறி தணிந்தால்,
அரக்க வியல்பிலும் இரக்கம் புகுமே.

சத்தியன்

வந்தனம் முனியே, வழியைத் துலக்கினை ;
முன்கலை வெற்றியை முழங்குக யாழே !
சக்தியின் பாட்டு சயங்கூ றுகவே !

# 15. யாழிசைப் படலம்

அமுதப் பொன் அலைகள் வீசி, ஆனந்த கான வெள்ளம்
குமுதமிட் டெழுந்த தொப்பக் குளிரிளந் தென்ற லொப்பத்
தமிழ்கனிந் தருளு கின்ற சன்னதப் பாட லொப்பக்
கமகங்கள் இனிது பேசுங் கனகயா ழிசைய தாமே.

மனிதரைப் போலே பாட வல்லநல் வீணை தன்னில்,
இனிதமை ஏழு தந்தி, இருபத்து நான்கு மெட்டு,
கனிவுள மேளஞ்செய்து மீட்டிடுங் கலைக ளெல்லாம்
தனித்தனி குறித்துச் சொல்லிச் சுராவளி யிசைத்தான் மெய்யன்.

எழுவகை யிசையின் ஏற்றம் இறக்கமும் காட்டிக் கையால்,
எழுவகைத் தாளங் காட்டி இயங்குநாற் காலங் காட்டிப்
பழுதறு குரலி ணைந்து பாடிடும் பான்மை காட்டி
விழுமிய மெய்யன் முன்னே வீணையை மீட்டி ஈந்தான்.

''சுத்தஓம்'' என்று சக்தி தொழுதியாழ் வணங்கி, யேந்திப்
பத்தியாய் மேளஞ் செய்து, ''ஸரிகம பதநி'' என்றே
ஒத்திசைத் தமைதி யாக உள்ளத்தில் ஆர்வம் பொங்கத்
தத்தையுங் குயிலும் போலத் தமிழிசை மீட்டி னளே !

பன்னிரு சுரமும், நான்கு ஸ்தாயியும், பன்னி ரண்டு
பின்னுறு செண்டை, எட்டுச் செய்யலங் காரங் கற்று,
முன்னிய கீதம் வர்ணம் முற்றிய பிறகு, சக்தி
தன்னுளங் குளிரக் கான சாதனஞ் செய்தாள் மாதோ !

பாட்டுடன் கவியுந் தேர்ந்தே பதம்பல புனைந்து நாளும்,
ஏட்டினில் எழுதி டாமல், இதயத்தில் எழுதி வைத்தே,
வாட்டமு மகிழ்வு மெய்திச் சுத்தனின் வரவு வேண்டி,
மீட்டினுள் மின்னைப்போன்று விரல்களில் வேகங் கொண்டாள்.

அருணனே அகாரங் கேட்கும் ; ஆதவன் வேதங் கேட்கும் ;
குருதிவான் மாலை ஊணர் குலந்திருந் திசைகள் கேட்கும் ;
கருமணி யிரவு தூய கடவுளைப் பாடக் கேட்கும் ;
அருமணி சக்தி வாழ்க்கை அருளிசை யான தம்மா !

சுந்தரி குரலும், போகன் சுதந்தரக் குழலும், சக்தி
தந்திடு மதுர மான யாழிசை தானும், வேந்தன்
சிந்தையில் உயர்ந்த பாட்டும், சேர்ந்துமத் தளமுங் கூடிச்
சந்தமார் அருவியாகத் தழைத்தது கலையின் வாழ்வே.

அட்டதிம் பாலுடன் அளைந்த தேனும்போல்,
ஒட்டிய உடலுடன் உயிரும் போலவே,
மெட்டுடன் சொல்லணி மிடைந்த தென்னவே,
நட்டன பத்தியு நாத வேதமும்.

உண்மையுள் ளன்புடன் ஒருமை நெஞ்சமும்,
செம்மையும் ஒழுக்கமும் சித்த சுத்தியும்,
கண்மையுங் கலைவளர் கருத்துங் கொண்டிளம்
பெண்மையும் ஆண்மையைப் பெருமை செய்ததால்.

சத்தியக் கீதமும் சக்தி வீணையும்
வித்தகக் குழலுடன் விரவிக் கோகிலம்
ஒத்திசை நாளெலாம் உயிர் சிலிர்த்திடும் ;
நித்திய வசந்தமாய் நிலவும் வாழ்க்கையே.

தேறுறு குரலுடன் விரலுந் தேர்ந்தபின்,
தானவன் மகிழ்ந்திடுஞ் சரிதைப் பாடலை,
ஞானியும் பயிற்றிட நங்கை யாழுடன்
மேனியி லுணர்ச்சியு மேவக் கற்றனள்.

அழகியின் அழகிதன் அருமைச் செல்வியின்,
பழகிய வித்தையைப் பார்க்க வேண்டியே,
விழைவுறு மாவலி "வீணை யிட்" டென்றே
நுழைந்தனன் ஒரு பகல் கேள்வி நாறுடன்.

"நமதிளஞ் செல்விக்கிந் நண்பர் போரிசை
அமைவுறப் பயிற்றினர் ; அரிய ஓமரின்
விமரிசைக் காவிய வீரக் காட்சிகள்
தமையினிக் கேளென அழகி சாற்றினள்....

*எலனைப் பாரிஸ் எடுத்துவந் தின்புற்ற
பலனைப் பாடுக பாடுக வென்னவே,
புலனில் ஆசை பொருபொருத் தேறமா
வலி விளம்ப மகளிசைத் தாளரோ !

## திராய்ப் போர்

தங்க மேனி தழைத்த எலனுள்,
  தளிரி ளந்திருத் தாமரைக் கண்ணி ;
அங்க மெங்கும் அழகொளி வீசும்
  அரசன் மேனலன் வேட்கும் அரசி.

வீர மேனலன் ஸ்பார்ட்டர்க் கிறைவன்
  விரும்பி யோர்பகல் திராயிள வரசன்
பாரிசுக்கு விருந்தளி செய்தான் ;
  பாரி ஸின்விழி பாய்ந்த தெலன்மேல்!

தீபம் போன்ற வசீகரச் செல்வி,
  செங்கண் மூடி யுறங்கிய வேளை,
பாபஞ் செய்திடப் பாரிஸ் எழுந்தான்,
  பதறக் காலமும் தேசமும் ஆங்கே.

காரி ருளிற் கருமனப் பேயன்
  கற்பின் பாவையைக் கள்ளம தாக,
வாரிச் சென்று திராய்நக ரேகி
  வலிய மானங் கெடுத்தனன் அந்தோ !

---

*Helen, Paris.

கண்ட கிரேக்கரின் கண்கள் சிவந்தே
காமுகனைக் களத்தினில் வீழ்த்திப்
பெண்பெ ருமையைப் பேணிட வேண்டிப்
பெரிய சேனைகொண் டுரை வளைத்தார்.

*அச்சில், யூலிஸ், அஜாக்ஸ், அகமம்னன்
அனைய சூரர்கள் ஆயிரங் கூடி,
எச்சி லுண்ட இகலவன் ஊர்மேல்
எரிம லையென ஏவினர் பாணம் !

மாதின் இன்ப மயக்க வெறியால்,
மதியி ழந்த மடையனப் பாரிஸ்
தீதை நன்மை யெனச்செயும் தீயன்
செருக்க ளத்தினிற் சீறி யெழுந்தான்....

ஏழு வெம்புலி யின்பலங் கொண்ட
†எக்த ரென்னும் இணையறு வீரன்
வாழ்கத் ராயென வாள்பிடித் தேகி,
வலிய அச்சிலின் வாளையெ திர்த்தான்.

காற்றுந் தியுங் கடற்புயல் வீறுங்
கலந்து மோதிய காட்சியைப் போலே,
கூற்றும் அஞ்சக் கொடுஞ்சமர் செய்தார்
கொலை யுடலங் குவிய மலைபோல்!

கணைப றந்த ; கனல்கள் பறந்த ;
கற்பு யங்கள் கதமுற முட்டி
மணி முடிகள் உருண்டன மண்ணில்,
மல்லர் இன்னுஞ் சலித்திலர் மாதோ !

உண்ட வீட்டிற் கிரண்டகஞ் செய்தும்,
உடைந்தி டாது சமர்புரி வோனைச்
சண்டை நின்றொரு தந்திரத் தாலே,
தகர்க்க ஓர்மர வாசியைச் செய்தார்.

குதிரை தன்னைத்தங் கோட்டையி னுள்ளே,
கொண்டு சென்றனர் கோதுறு மாற்றார்.
அதிசயம் ! நிசியில் அதனின்றே
ஆயு தத்துடன் வீரர் குதித்தார்.

---

*Achilles, Ulysse, Ajax, Agamemnon.
†Hector

குதித்த வீரர் கொடுங்கொலை செய்தே
    கூற்றைப் போலத் திராயைக் குமைத்தார்.
கதித்தெ ழுந்த திராயினர் தாமும்,
    கனலெ ழுந்து கடுஞ்சமர் செய்தார்.

ஊழித் தீயெனப் போரிட யூலிஸ்,
    ஓங்கும் அச்சிலும் பைரசும் பாய,
ஆழி யுண்டிடும் ஆற்றினைப் போலே
    ஆண்மை யுண்ட தறத்தின் பகையை !

வீர எக்தர் விழுந்து மடிந்தார்,
    வீம்பு செய்த திராயினர் நீத்தார் ;
பாரிஸ் வீழ்ந்தனன் ; பாழு நகரும்
    பற்றுந் தீச்சுடப் பாழ்ந்தது பின்னும்....

மேன லன்பர மானந்த மெய்த
    வெற்றி பேரிகை விம்மிட வீரர்,
மான்வி ழியினள் மானத்தைக் காத்தார் ;
    வாழ்க கற்பினை வாழ்த்திடும் வீரம்....

சேட்டைவிட் டமைதி யான சித்திரப் பாவை யாகிக்
கேட்டனன் அரக்கன் ஓமர் கிளத்திய கதையின் சாரம் ;
ஊட்டிய அமுத மென்ன உள்ளுறக் கிளர்ந்த கீதம்,
வாட்டமுஞ் சினமுந் தீர்த்து, மமதையை இளக்கிற் றம்மா !

இளமையின் காதல் பேசும் இசைமணிக் குரலோ ! சேயின்
களிபெறு நகையிற் பூத்த கனிவுறு மழலை தானோ !
ஒளிமிகு வெண்ணி லாவில் உண்டிடும் விருந்தோ ! காலை
தெளிவுறப் பொழியுங் குன்றின் அருவியோ தெவிட்டாக் கீதம்.

வெம்மையைத்தண்மையாக்கும்;வெறுமையை வளமையாக்கும்;
வன்மையை மென்மை யாக்கும் ; மமதையைச் சமதையாக்கும்;
இம்மையில் அம்மை தோற்றும்; முதுமையை இளமை யாக்கும்;
தன்மய மாக்கும் இன்பந் தழைத்திடத் தவழும் பாட்டே !

செவிவழி யமுதுண் டென்னச் செவ்விய மதுரக் கீதம்,
கவிநய முடனே மாந்திக் களித்தமா வலி "என் சேயே
நவம்பெறு நாத சக்தி நயத்தினை யின்று கண்டேன்—
இவளவு கற்றநீயுன் இச்சையொன் றியம்பாய்" என்றான்...

தானவர் வேண்டாக் கற்பின் சங்கடந் தவிரப் பாட்டில்
ஏனைய பகுதி நன்றே எலனப கரமும் சீரே ;
யானெனில் ஸ்பார்ட்டா தன்னை எலனுடன் ஆண்டி ருப்பேன்,
நானிலக் கவிகள் என்னை நவின்றிடப் பணமும் ஈவேன் !

என்சமர் முரசிற் கிடே இல்லையிங் கெனினும் வீணை,
தன்சரி கமபதாவிற் சஞ்சரித் திடலும் இன்பே ;
பொன்செயு மகிழ்ச்சி, வெய்ய போர்செயு மகிழ்ச்சிக் கப்பால்
இன்சொலார் குழலும் யாழும் இசையமு தின்ப மாமே !

சக்தி

எனதுள விருப்பங் கேட்டாய் ; இயம்புவேன் எந்தை கேளாய் :
மனதினை மகிழச் செய்யும் வளமிகு சங்கீ தத்தை,
இனமுறு கலைக ளோடும் இந்தநா டெளிதிற் கற்கக்
கனமிகு புலவர் கூடக் கலைவளர் கோயில் வேண்டும்.

பார்ப்பதற் கின்பமான பலவளஞ் சூழ, நல்ல
பேர்ப்புதுக் கல்வி கற்கப் பெரியமா ளிகை யெழுப்பி,
ஆர்த்திடுங் கீதங், கூத்து, நாடகம், அரிய சிற்பம்,
சேர்த்துநாம் பயிற்ற வேண்டுஞ் செய்கலைக் கோயி லிங்கே.

மாவலி

புலன்களுக் கின்பமான புகழ்பெறுங் கலைக ளெல்லாம்
துலங்கிட வேண்டி நாளைத் தொடங்குவேன் கலையின் கோயில்,
இலங்கிடு மலையா றேடும் இயற்கையில் அமைப்பேன் சேயே ;
நலங்கெழு பணிசெய் திந்த நாட்டையின் புறுத்தாய் நன்றே. 160

# 16. கலைக்கோயிற் படலம்

தன்னை யொப்பவ ரிலையெனுந் தானவன் வெட்க,
உன்னைக் காட்டிலும் உயரியற் படப்பைக்காண் எனவே,
முன்னி ருந்துல கிறைவனின் பெருமையை மொழியும்,
பொன்மலை யெனும் பொற்புறும் சிற்பமார் மலையே.

அம்ம லையினில், அருந்தவ யோகியின் அகம்போல்,
செம்மை யாய்த்தெளிந் தோமெனத் திருமறை பாடிப்
பொம்மெ னத்தவழ் பூமணி யருவியின் பொழிவால்,
எம்ம ருங்கினும் எழில்பெறும் பயிர்வள மிலகும் !

அனைய பூவணி யாற்றரு கமைந்தநற் சோலை ;
இனம லர்களுங் கனிகளும் புட்களும் இலகும்
தளிர் வனப்புறு சோலையின் தண்ணிள மார்பில்
இனிய நற்கலைக் கோயிலை யெழுப்பினன் அரக்கன்.

செய்ய புண்ணிய வினைகளைச் சிரித்திழி வுறுத்தும்,
வெய்ய நாத்திக மாவலி விமரிசை யாக
மெய்யன் வேண்டிய கோயிலை வியனுறச் செய்த
செய்கை யேகலைச் சிறப்பினைச் செப்புவ தாமே !

சத்தி யுள்ளம்போல் வெள்ளையாம் சலவைக்கல் லாலே,
நித்தி லத்தல மலையென நிலவுற வமைந்தே,
சித்தி ரங்களுஞ் சிற்பமும் கலையெழில் செப்பப்
பத்தி பத்தியாய் எழுந்தது பலகலைக் கோயில்.

பாடலுக் கொலி யடக்கமாய்ப் பரவிடுங் கூடம் ;
ஆடலுக் கணி யரங்குநல் லதிசய மான
வேடங் கள்புனைந் தபிநய விளக்கமோ டாட
நாட கத்திரை மன்றுடன் அமைந்தன தனியே !

மான மோங்கிய மானவர் மதிக்குநல் லொழுக்கம்,
ஆனவை யிவை யெனச்சொலும் அழகிய படங்கள்,
ஈன மாகிய தீமையை எடுத்துரைச் சிற்பம்
தான வர்க்கொரு படிப்பினை தந்துநின் றனவே !

கொலைக்கு வேண்டிய கருவியே கொள்ளையாய்க் குவித்து,
நலிக்கு மாவலி நன்மனம் வைத்திந்த நாளில்,
கலைக்கு வேண்டிய கோயிலுங் கருவியு மளித்த
நிலைக்கு வந்ததும் பாட்டினல் என்றனர் நிருதர்.

இந்த மாளிகை யெழுப்பிடும் போதுநம் போகன்,
சுந்த ரிக்கருந் துணையெனத் துலங்கிய கலைஞர்
இந்தி ரையறி கலைஞர்,இ ரோப்பியக் கலைஞர்,
வந்து சேர்ந்திட வகைசெய்து பாடங்கள் வகுத்தான்.

இனைய காரியம் இனிதுற இயங்கிடு மெல்லை,
தனையொத் தூணர்கை தவித்திடுந் தானவ மாதர்,
அனைவ ருந்தமி ழிசையினை அருந்திட, அழகி
மனையிற் காலையு மாலையும் வந்தனர் மகிழ்ந்தே

இனிய கீர்த்தனுஞ் ஜலியினை யிசைத்திடு மியல்பால்,
புனித வாழ்க்கையும் புன்மது ஊன்கொலை தவிர்த்த
மனிதத் தன்மையாம் இரக்கமே மல்கிய நடையும்,
சினமில் சாந்தமும் பயின்றனர் சிரிய மாதர்.

நறும ணத்தொடு நட்டது நறுமணம் பெறுமே !
அறம ணத்துடன் அன்புறப் பொருந்தியோர் வாழ்க்கை
சிறும னத்தின வின்றியே தீஞ்சுவை யேறி,
மறுவி லாதநன் மாற்றத்தை யடைந்ததென் வியப்பே !

சுத்த னன்பினிற் சுகித்திடுஞ் சுடர்மணிப் பாவை,
சத்தி கீதத்தை மடுத்தவர், தானவர்க் குரிய
பித்து மாறினர், நாத்திகப் பிதற்றல்கள் இன்றிப்
பத்தி செய்தனர் ; பரம்பொருள் ஒன்றெனப் பகர்ந்தார்.

பாடுவார் ; கதை கேட்டதன் பயன்பெற முயல்வார் ;
ஆடுவார் மகிழ்ந் தானந்தப் பொருளினை உள்ளே
தேடுவார் ; தமர் திருந்திடத் தெளிவுரை சொல்வார் ;
வீடு நன்றுற வீதியு நன்றுறு மன்றோ !

இசைப யின்றனர், இலக்கியம் பயின்றனர் இளைஞர் ;
அசைவி லாதகற் பொழுக்கமும் அருளுடன் பயின்றார் ;
வசை யொழிந்தநல் வாழ்வினைக் கணவரும் பயிலும்
விசைக ளாயினர் ; வெறியிருள் கெடுவிளக் கானார்.

ஊனைக் காமமும் கோபமும் ஊர்கெடு கொலையும்,
ஆணவத் திமி ராலவர் அறமழிப் பதுவும்,
மாண்மை யாகிய மன்னனின் மங்கலப் பாட்டால்—
வேணு கானத்தால், அரவென வெறியடங் கினவே !

கலையின் சங்கத்தைச் சேர்ந்தவர் கள்ளினை நீத்தார் ;
கொலை யுணவையு நீத்தனர் ; கொண்டொரு மனைவி
விலையின் மாதரை நீத்தனர், வீட்டறங் காத்தார்,
அலைம னத்தையும் அடக்கினர் ஆத்திகர் ஆனார்.

கண்க ருத்தினைக் கற்புறக் காத்தரு ளின்பப்
பண்க ளாலுயர் வாழ்க்கையின் பண்பினைப் பகர்ந்தே,
திண்கொள் வாய்மையும் தெள்ளிய கருணையுங் கொண்ட,
பெண்கள் ஆண்களைப் பீடுறப் பெருமைசெய் வாரே !

திருந்தி வந்தவர் யாவருந் தினந்தினம் பயின்றே
அருங்க லைகளை வளர்ப்பதில் ஆர்வங்கொண் டமைந்தார் ;
பெருங்க லைப்புல வர்களும் பிரியமாய்ச் சேர்ந்து,
வருங்க லைத்திருக் கோயிலுக் காவன வகுத்தார்.

செங்கல் செங்கலாய் உயர்ந்திடுஞ் செழுமணிக் கோயில்,
இங்கெந் நாளிலே முடியுமென் றேங்கிய கலைஞர்
தங்க மாமுடி பொலியுமித் தரளவெண் கோயில்
"நன்க மைந்தது நயனத்தின் விருந்"தென நயந்தார்.

மறப்பி லாதருங் கலைகளை வளர்த்திடும் புலவர்,
திறப்பு நாளினை நடத்திடத் திருவணி செய்தார் ;
சிறப்பெ லாம்எனக் கேயென மாவலி திறந்தே
முறுக்கி மீசையை இடிகுரல் முழக்கினு னுங்கே :—

மாவலி

மேனிலை பெற்ற தானவ மக்காள் !
ஆளப் பிறந்த வாள்வீ ரர்காள்,
போரே நமக்குப் பொருந்திய கலையாம் ;
முரசே நமக்கு முன்னணி யிசையாம்.

இரத்த களத்தில் இறங்கிய வீரரை,
ஊக்கும் பாண்டுநாம் உவக்கும் நேரம்.
போரெலாம் வென்றபின் பொழுதினைப் போக்கவும்,
சுகபோக வாழ்விற் சொக்கவும் வேண்டியே,
யாழ்குழல் பிடிலுடன் இயங்கும் இசைகளை
நாமும் போற்ற நாடினோ மிங்கே.
எம்மகள் சக்தி இவ்விரு புலவரால்,
இசைக்கலை தேர்ந்தாள் ; இனும்பலர் கற்றார்.
அருமை மகளினும் அருங்கலை வளர்க்க
விரும்பிய தாலிவ் வியன்பெருங் கோயிலை
அழகிய காட்சியாய் அமைத்தவட் கீந்தோம்.
கோயில் என்றற் கோவாம் யாமே
அமைத்த இல்லென் றறிவீர் அவுணீர்.....
இக்கலை வீட்டில் இசையும் யாழும்
குழலும் பிடிலு முழவும் கூத்தும்,
நடமுஞ் சிற்பமும் படமும் வளர்கவே.
பயில்வோர் பயிற்றுவோர் பணிகளைச் செய்வோர்,
அனைவரும் எம்மை அண்டிய சேவகர் ;
எம்மர சிற்கும் எமதுகொள் கைக்கும்
தானவ விதிக்குந் தாறுமா றாக
நடந்தால், இதனை நாமே நலிப்போம்.
கோயிற் புலவர் கொள்கை முழுதும்
தானவ மயமாய் ஆனதன் பிறகே,
நிலைப்பிதற் குண்டென வெளிப்படச் சொல்வோம்.
சாமி சடங்கு, சாத்திரம் என்று
பகுத்தறி விற்குப் பற்றாச் செயல்களைக்
கண்டால் உடனே கண்டனம் செய்வோம்.
எல்லாரு மேயெம் உல்லாச வேளை
ஏவிய கலைப்பணி இயற்றுதல் கடனே....
கலைகளை யெல்லாம் விலையாக் கிடவும்,
வந்ததிற் பாதி வரியாய்க் கொள்ளவும்,
பாதி கோயிலின் பாதுகாப் பிற்கும்,
உத்தர விடுதல் உரிமை நமக்கே.
தனமிலா முயற்சி தானவர்க் கில்லை.
விலை யாகாத கலைக்கிட மில்லையே.
ஆதலால் மாணவர், ஆசிரி யர்கள்
கலைநாட கங்களைக் கனகமாக் குகவே.
இனிய மாதரும் இளந்திரு வாளரும்,
காதலும் வீரமும் கலந்தநா டகங்கள்

பழகிநா டெல்லாம் பயனுற நடித்துப்
பொருட்சுவை சேர்த்தெம் போருக் குதவினுல்,
கோயிலும் எனது கொடியும் சிறக்குமே.
புலவர் இந்தப் பொன்மொழி போற்றி,
அழகுடன் பொருளும் அளிக்கும் கலைகளை
நம்மனங் களிக்க நாளும் வளர்மினே !

* * *

என்று மாவலி இயம்பி யமர்ந்ததும்,
குன்றுத் தோளான் கோபுரச் சிரத்தான்
சபை நிரம்பிய சங்கித மெய்யன்,
போக முனிவன் பூங்குழ லூத,
இசையின் கருத்தை இசைத்தா னுங்கே !

* * *

"ஆர்வத் தியால் அன்புள் ளுருகி,
அருவி போல வருவது பாட்டாம்.
குரலும் சுருதியும் கூடிக் குழைந்து,
கமகமுந் தாளமுங் கனிவுறப் பொருந்திப்
பாட்டின் கருத்து பளிச்சென விளங்கக்
கேட்டா ருள்ளங் கிளர்ச்சி கொள்ள,
உணர்ச்சி ததும்ப உள்ளங் குழைய,
நவரஸ பாவனை நயமுறக் காட்டிப்
பரவையும் வஸந்தப் பறவையும் போலக்
கலையின் உள்ளங் கடவுளைக் காட்ட,
வீடு திருந்த, நாடு சிறக்கவே
இயல்பாய் இசைத்தல் இசையென லாமே ;
இன்பப் பொருளே இசையின் பயனும் !"

மாவலி செல்லல்

"நவரஸ பாவனை நயமுற" என்னப்
பாடும் பொழுதே பாய்ந்து வந்தோர்
ஒற்றன் ஏதோ ஓதினுன் காதில்....
உடனே மாவலி உடைவா ளுருவிக்
கோயிலி னுள்ளே குணுக்கெனச் சென்றுன்....
அவையும் சற்றே அஞ்சிநின் றதுவே !
சுந்தரி உடனே முந்திநின் றுரைப்பாள் :

சுந்தரி

"கலைவளர் நண்பீர், கலக்கமொன் றில்லை ;
அரசியற் காரியம் அழைக்கும் போதே

இயல்பாய் மன்னன் ஏகும் பழக்கமே.
பாட்டு முடிந்தது ; பண்புள கலைஞர்
தந்தங் கலைத்திறன் இத்தகைத் தென்றே
காட்டிட வாரீர் கண்கா தினிக்கவே''
எனலும், பரத விந்கை நடந்ததே !

நடனம்

ஞால வாழ்க்கையே நவரஸ நடனம்,
முதலில் எழுந்த மொழியா மொழியே
அபிநயமாகும் ; அங்கஹா ரத்தால்
முகபா வத்தால், முத்திரைக் கையால்,
பாட்டுந் தாளமும் பண்புறத் தழுவி,
இன்பம், கருணை, இழிவு, சாந்தம்,
அற்புதம், கோபம், அகந்தை, குற்சிதம்,
கருணை, வீரம், காதல், சாந்தம்,
அச்சம் உவகை ஆகிய உணர்ச்சிகள்,
விளங்கக் காட்டி உளங்கொள நடிப்பதே
நடனம் என்று நன்றறிந் தாடும்
சக்தியும் ஐந்து தானவப் பெண்களும்,
தந்தநாம் தாமெனச் சதிமிதித் தாங்கே
அழகுத் தெய்வம் அணிசெயும் பாட்டைப்
பாடி நிருத்தம் ஆடித் திளைத்தார். 180

கார்புயலை வெட்டு கின்ற கம்பிமின்னல் போலே,
கவலையிருள் ஓட்டி யென்னைக் கண்பார்த்து நின்ருள் ;
ஆரென்றே அதிசயித்தேன். அழகுமணித் தெய்வம்
அன்னை சக்தி வாழ்கவென்றே பொன்னடியிற் பணிந்தேன்.

காலைமலர்த் திருமுகத்திற் கருணையமு தீந்தாள் ;
கத்துகுயில் ஓசையிலே பத்தியங்கள் படித்தாள் ;
சோலைவளப் பொலிவினிலே சொக்குநகை புரிந்தாள் ;
சுரும்புகளின் பாட்டினிலே சுருதியெனக் களித்தாள்.

பளபளக்கும் பச்சைவளக் கம்பளத்தின் மீது,
பாய்ந்துநட மாடுகின்ருள் பண்ணருவி பாட ;
உளமகிழத் தென்றலிலே, இளந்தமிழ்யாழ் மீட்டி,
உருக்குகின்ருள் இன்பவெறி பெருக்குகின்ருள் அன்னை...

நாடகம்

நடன மானதும் நாடகக் கலையின்
பிறப்பும் பெருமையும் பேசினுர் சற்றே.
உலக வாழ்வே ஓயா நாடகம் ;

குணதோந் தங்கள் குமுறும் வாழ்வில்
கதையைக் காட்டிக் கண்ணும் செவியும்
உள்ளமும் உணர்ச்சி கொள்ள நடித்து,
மனிதனைத் திருத்தலே மாசறு நாடகம்.
அத்தகை நாடகம் அளவில நடத்திப்
பொதுசனப் பணிகள் புரிவோம் எனவே
உறுதி கொண்டபின், உருவைச் செதுக்கி
அற்புதங் காட்டும் சிற்பப் புலவர்
சிவக் கலையுறச் சித்திரம் வரைவோர்,
வசீகர மாக வருணந் தீட்டுவோர்
அஜந்தா, எலோரா, அன்ன வாசல்,
மதுரை தஞ்சை மாமல்ல புரத்தில்,
இலகும் சிற்பச் செல்வங் காட்டி,
உளியும் பீலியும் அழியா உருக்களைக்
கண்கவர் வனப்புடன் கருத்துடன் அமைக்கும்
கலையின் பெருமையைக் காட்டினு ராங்கே.
போகர் முடிவிற் புன்னகை பூத்துக்
"கலையால் வாழ்வைக் கவின்பெறச் செய்து,
நலத்தைப் புகட்டி, நடையைத் திருத்தித்
தனக்கும் புவிக்குந் தருமநி யாயமாய்
நடக்கும் வழியை நயமுற வகுப்போம் :
பாட்டும் பரதமும் படமும் சிற்பமும்
கவியும் எல்லாக் கலைகளும் பொருந்திய
நாடகக் கலையே நடுநா யகமாய்,
பெரியார் வாழ்வைப் பிழையற நடித்துப்
பொதுசன சேவையாம் புண்ணியம் புரிவோம்.
தானவம் ஆணவம் ஏனைநா டுகளில்
கலைத்திறங் காட்டி நலப்பணி செய்வோம்....
கலைக்கோ யிலிலே கருத்துறும் அன்பர்
ஊன்மது விலக்குமின், ஒருமனை யாளுடன்
இல்லறங் காமின்" என்று மொழிந்து
மழலைபோ லினிய குழல்விருந் தளித்து
மங்கலப் பாட்டுடன் மகிழ்விழா முடித்து,
மன்றிற் கினிய நன்றிகள் கூறி
ஓமெனப் பாடம் ஓதத் தொடங்கி
மாணவ ருக்கு வளர்கலை யளித்தான்.
கணக்கறு மாணவர் கலைபெற் றுரே !

* * *

போதிய மட்டும் ஓதிப் பயின்ற
நன்மா ணவர்க்கு நாடகம் பயிற்றி,

மெய்யனும் போகனும், துய்ய சக்தியும்,
சுந்தரி தேவியும் சுற்றிநா டெல்லாம்,
தமது கருத்தைத் தழைவுற நிறைத்தார்.
ஆணவந் தன்னில் அனலனும் அவரை
நல்வர வேற்று நற்கலை கண்டு,
தானுங் கலைவளர் ஞானம் போற்றிக்
கோயி லெழுப்பிக் கொழுங்கலை வாணரை
மெய்யன் அனுப்ப விருப்புடன் ஏற்றுப்
பாட்டும் அரங்கும் பரதமும் சிற்பமும்
யந்திரக் கலையும் இனிது பயிற்றினன்.
மெய்யனுக் கனலன் மெய்த்துணை யானன் ;
கலையின் வெற்றி கண்டபின் மெய்யன்
செய்த நல்வினை செப்புவேன் இனிதே !

# 17. சங்கப் படலம்

அருவி யார்க்கும் அழகிய பாங்கரில்,
குருவி யார்க்கக் குரலுடன் இன்னிசைக்
கருவி யார்க்கக் கலைச்செய லார்த்திடத்
திருவ ளர்ந்தது தீங்கலைக் கோயிலே !

மலர்கள் கொஞ்ச, மணத்தென்றல் கொஞ்சிடப்
பலநி றங்களும் பார்வையைக் கொஞ்சிடக்
கலக லென்னக் கருங்குயில் கொஞ்சிட
இலகு சோலையின் இன்பம் வளர்ந்ததே.

பாரை வெல்லும் பதற்றத்தில், மாவலி
போரை வெல்லும் புதுப்புதுச் சூழ்ச்சியால்,
நேரும் போது நினைப்பதல் லாலிங்கே
காரி யத்தினைக் காணக் கருதிலான்.

மனந் திருந்தி, மமதை திருந்தித்தம்
இனந் திருந்தி, இயற்கை திருந்தியே
சினந் திருந்தித்தம் செய்கை திருந்திடத்
தினந் திருத்தின செய்ய கலைகளே.

புண்ணி யத்தைப் புரட்டெனுந் தானவர்
பண்ணின் பத்திற் பழுத்தறஞ் செய்தனர்,
மண்ணின் பத்தை மதிக்கும் அரக்கர்கள்,
பெண்ணின் பத்தினும் பேரின்பம் உண்டென்றுர்.

பன்றிக் கிட்ட பதக்க மெனச் செஞ்சொல்
ஒன்றிலும் பொருந் தாத உலுத்தர்கள்,
இன்று நற்கலை எய்திய மெய்வழி
நின்று நல்ல நினைவுட னேங்கினர்.

மெல்ல மெல்லநம் மெய்யனும் போகனும்,
அல்ல லாக்கும் அரக்கர் திருந்தவே,
நல்ல நல்ல நடந்த கதைகளாற்,
கொல்லு நெஞ்சிற் குலவருள் ஏற்றினன்.

திருந்த ரக்கர் திசை திசை கூடியே,
மருந்தி னும்இனி தாயசன் மார்க்கத்தைப்
பொருந்தி யன்பு பொலிந்திட முன்வந்தே,
பெருந்து ணையுற மெய்யனைப் பேணினர்.

யோக சக்தியி னுலிணைந் துள்ளத்தில்,
வேக மாக விமலன் கருத்தினைப்
போகன் கண்டு புகல்பெறத் தானவர்
ஏக மாகச்சன் மார்க்க மியற்றினன்.

திருந்து தானவ சிலரை நாடெங்கும்,
அருந்துணை பெறுஞ் சங்கம தாக்கியே,
பொருந்து சாதன மார்க்கம் புகன்றனன்,
வருந்து ஞாலம் வசையற வாழவே. 40

சங்க விதி

உள்ளமும் உலகும் எங்கும் ஓங்கிய உண்மை யின்பம்
ஒள்ளிய கடவு ளென்போம் ; "ஓம்சுத்த சக்தி" யென்றே
தெள்ளிய உள்ளந் தன்னில் தியானிப்போம் அன்பர் கூடி ;
எள்ளருந் தூய வாழ்விற் கிதுமுதற் படியும் ஆமே !

கட்கொலை, காமஞ் சூது களவு பொய் யகந்தை நீத்து,
வெட்கிடத் தக்க மோக வெறிகளை அறவே போக்கி,
உட்கிட வரும் அதர்ம உணர்வினை உடனே மாற்றிப்
பெட்புடன் உயிர்க்கு லத்தைப் பிரியமாய்ப் பேணுவோமே.

வீரியத் தினவில் ஊறும் வேட்கைகள் அமைதி தன்னைக்
கூரிய கத்திபோலக் கொலைசெயும் கொடுமை கண்டே,
சீரிய சன்மார்க்கத்திற் சிந்தையுஞ் செயலும் ஊன்றி,
நேரிய நிமல ராக நிலத்தினில் வாழுவோமே.

ஆணவப் பேய்கள் போலே, அடுபுலி நரிகள் போலே,
கானுல கத்தைத் தீய காமத்தாற் கலக்கி வாழோம் ;
ஊனுடை உழைத்துக் காண்போம் ; ஒன்றையுங் கொள்ளை
கொள்ளோம் ;
ஆணுடன் பெண்ணும் கற்பை ஆருயிர் போலக் காப்போம்.

ஒருமனை யாளைக் கூடி, ஒருமைகொண் டின்பங் காண்போம் ;
திருவரு ளன்னை யென்றே சேயிழை யாரைக் காண்போம் ;
உருபெயர் அனைத்தும் ஒன்றன் உடலென உணர்ந்து நாளும்,
கருணையே கொண்டு தூய மனையறங் காத்து வாழ்வோம்.

மெல்லியர் தம்மைக் காம வெறியுடன் கள்ளு மேற்றிப்
புல்லியே நடன மாடும் போகசா லைக்குப் போகோம் ;
தொல்லைகள் வரினுந் தாங்கித் தொல்புவி புயிர்க்கு லத்தைக்
கொல்லு மதர்மப் போரின் கொடுமையை எதிர்த்துவெல்வோம்!

தானவந் திருந்தி நல்ல தருமத்தைப் போற்றி, எல்லா
மானவர் தலமும் இன்ப வழியினில் அச்ச மின்றி
ஞானத்தால் ஏக வேண்டி, நாட்டிய சங்கம் இன்று
மோனத்தால் வெற்றி யோங்க முயற்சியை அடங்கிச் செய்வோம்.

இந்தச்சன் மார்க்க சங்கம் இறைவனைத் தலைமை கொண்டு,
சிந்தனை செய்து தூய செயலுடன் ஒழுக வேண்டும் ;
அந்தரங் கத்தில் ஊன்றி, அவரவர் உள்ளத் துள்ளே
முந்திது வளர்ந்து, பின்னே முளைகளை பரவ வேண்டும்.

வெளிப்படைக் கூட்ட மில்லை, விழாவணி யெதுவும் இல்லை.
களிப்புடன் கைகோத் தாடக் ,கனவிருந் துகளும் இல்லை ;
புளிப்புடன் கட்சி யாடும் பொறுமையு மில்லை ; தன்னை
அளித்தருள் வழியே சென்றிவ் வறக்குழு வாழ்வ தாமே.

பணிவதும் பகவா னுக்கே, பார்ப்பதும் பரமன் ஒன்றே.
துணிவதும் அவன றத்தைத் துலக்கிடு முயற்சி யாமே ;
அணிவதும் அருளை ; உள்ளே அறிவதும் அருளை ; பேசு
மணிமொழி யருளே, நாங்கள் வாழ்வதும் அருளி னாலே !

உலகெலாங் குலமொன் றாகி, உட்சினப் பொறுமை தூண்டுங்
கலகங்க ளின்றி, ஆன்மச் சமரசங் கடைப்பி டித்து,
நிலவிடச் சாந்த மாக நினைவினை உயர்த்த வேண்டி,
இலகுமிச் சங்கம் வாழ்க இதயத்திற் கிதயந் தாவி...

கொல்லறம் ஒழிக ! ஞாலக் கோயிலில் அமைதி யாகப்
பல்லுயிர்க் குலமும் தெய்வப் பணிநலம் புரிந்து வாழ்க ;
அல்லல்கள் ஒழிக ! வெய்ய அதர்மங்கள் ஒழிக ! தூய
நல்லறம் பொலிக வென்றே நாடொறுந் தியானிப் போமே !

இவ்வகை போக ஜோதி, மெய்யனும் இதைவி ளக்க,
உய்வகை யிதுவே யென்ற உத்தமச் சங்க நேயர்,
செய்வகை யறிந்து செய்து, சிந்தையில் உயர்ந்து, தத்தம்
மெய்வகை நண்ப ரோடும் வீடொறும் பயின்று வந்தார்.

குணங்கெழு மாதர் தங்கள் கொழுநருக் கினிது சொல்லி
மணங்கெழும் அருளில் வாழும் வழியினை வாழ்ந்து காட்டி,
இணங்கிலார் இணங்க வைத்தார், ஏந்திழை யாரின் அன்பை
வணங்கியே திருந்தி னார்கள் மாதரை மதிக்கும் ஊணர்.

கண்ணினுற் கருத்தைச் சொல்லிக் கனியித ழாலே தாங்கள்
எண்ணிய தினிது பேசி, இயம்பறு காந்தத் தாலே
உண்ணிய வந்த கூற்றும் உள்ளிரங் கிடவே வெல்லும்,
பெண்ணியல் மின்சா ரத்திற் பிடிபடா மனமும் உண்டோ ?

மெய்யறி வின்ப வாழ்வை விரும்பிய காத லர்கள்
துய்யமின் மீட்டி யுள்ளே தொகுமிரு திறமும் போன்று,
தெய்வபக் தியிலே கூடித் திருவரு ளுக்கே இந்த
வையத்தில் அறமும் அன்பும் பொருளுடன் வளர வாழ்ந்தார்.

சத்தியன் அறிவே யாகச் சவுந்தரி ஆற்ற லாக,
உத்தம சக்தி அன்பின் உள்ளமாய்ப் போகன் யோக
சித்தியே ஒளியாய், மாந்தர் சேமமே செய்கை யாகச்
சுத்தனே உயிராய்க் கொண்டு துலங்கிய தறவோர் சங்கம்.

மல்லியல் மதமே கொண்ட மாவலி யாளு நாட்டிற்
கொல்லியற் கொடுமை போக்கிக் குணமுறு சாந்த மூக்கி ;
நல்லியல் அறம்ப யிற்றி, ஞானவா சனையி னாலே
அல்லியல் வாடை மாறி அருளியல் பூத்த தன்றே !

நுண்கலைக் கோயில் உள்ளே நூறுநல் லறிஞ ருக்கு
விண்கலை தெரிந்த யோகி, வியனுறு பொறிக ளாய்ந்து
கண்வெகு தொலையிற் காணக் காதுல கெல்லாங் கேட்கப்
பண்படு கருவி செய்து பாரத நிலையு ணர்ந்தான்....

தனதுநுண் கருவி யாலே தானவர் செல்லும் தேசம்,
மனதிலே நினைக்கும் எண்ணம், வாயுரை அந்த ரங்கம்,
புனிதனின் போக்கு, செய்கை பொருளுரை யனைத்துந் தேர்ந்து,
நினையுமுன் அதற் கேற்ற நிலைகளை மாற்றி னானே....

தாகசோ கங்க ளற்ற தடம்பெருந் தூய சாந்த
யோகியின் உள்ளந் தன்னை யோகிநன் றறித லாலே,
போகனும் இமயம் வாழும் பூரண சுத்த னான
யோகியும் உள்ளத் தாலே உலகெலாம் உணர்ந்தார் மாதோ !

கோல்கொளுங் குதிரை ஓட்டம், கொளுவுமின் சார ஓட்டம்,
வால்கொளு மின்ன லோட்டம், வானணு மின்னின் ஓட்டம்,
தால்கொளும் சொல்லி னோட்டம் தடையிலா மனத்தின் ஓட்டம்,
மேல்கொளும் ஆன்ம ஓட்ட வேகத்திற் கிணை யொன் றுமோ ?

யாவர்க்கும் அன்பு மிக்க வள்ளலாம் இனிய சுத்தன்,
மேவிய நிலையும், ஊணர் விளைத்திடுந் தீதுங் கேட்டே
காவலன் பட்ட நெஞ்சக் கவலைகள் மாறப் போகன்,
பூவினை யாடல் போகும் போக்கினை விளக்கி னானே.

சுத்தனின் யோக சக்தி சூட்சும மாக நாளும்
இத்தல மெங்கும், காறு எலக்ட்ரனின் கதிர்போற் சென்றே
உத்தமச் செயலை ஊக்கி ஊணரின் கொடுமை வீழும்
சத்தியாய்த் தழைத்த தென்று சத்தியன் அறியச் சொன்னான்.

ஒன்றுபட் டோன்றைக் கண்ட யோகியர் ஒருமை தன்னில்,
நின்றிடு மோனா னந்த நிலையிலே பரவிப் பாரில்,
இன்றியல் செயல்க ளெல்லாம் இயம்பிடற் கரிதாம் ; அன்பீர்,
நன்றெனைத் தொடர்ந்து வாரீர் நடப்பதைப் பார்க்க லாமே ! 140

தானவந் தன்னி லூன்றி ஆணவந் தன்னி லோங்கி,
மோனமாய் வளர்ந்த ரக்கர் மூலத்தை மாற்று கின்ற
ஞானமா சக்தி யாலே நற்பயன் விளைந்த தெல்லாம்
ஈனமா வலிக்குச் செய்த இடர்களைச் செப்பு வாமே ! 144

# 18. ஆத்திரப் படலம்

மண்ணின் ஆசைகொண் டுருவிய வாளினைப் பிடித்தோர்,
பெண்ணின் ஆசைகொண் டலைபவர், பெரும்பணத் தாசை
உண்ணுந் தியவர், அமைதியும் உறக்கமும் அறியார் ;
அண்ணா னுயினுந் தம்பியின் ஆக்கத்தைச் சகியார்.

அன்ன தன்மையின் மாவலி அவனியை ஆளத்
தின்னும் ஆசையால் சினவெறி யேறித்தன் இச்சை
முன்செ லாவண முயன்றிடுந் தம்பியை முனிந்தே
தன் பெருமையை நாட்டிடச் சதிமிகச் செய்தான்....

ஒத்த தானவத் தன்மையும், ஒப்பறு மதியும்,
ஒத்த சக்தியும், உலகினைப் புரந்திடும் உளமும்,
ஒத்த சேனையும் இயந்திர பலங்களும் உடையான் ;
எத்தி சையிலும் அண்ணலின் எதிரியாய் இருந்தான்.

எங்கு மாவலி சென்றனன், அங்கெலாஞ் சென்று,
நன்கு வாணிக முடன்பல தொழில்களை நாட்டி,
அங்குள் ளார்களைத் தந்திர முறைகளால் அடக்கிச்
செங்கு ருதியிற் சிங்கமார் கொடியினை நட்டான்....

சினமும் ஐயமுஞ் சிறுமையும் பொறுமையுஞ் செறிந்த
மனமுஞ் சேனையின் பெருக்கமும் வாய்ந்தமா வலியும்,
தனது தானெனும் ஆணவத் திமிரினல், ஒத்த
இனங்கொள் தம்பியை எதிர்த்திடச் சூழ்ச்சிகள் வகுத்தான்.

மாவலி

வானுல கெல்லாந் தானவ மாக்கப்
புகுந்த நமக்குப் போட்டியாய் வந்த
தம்பி செய்யும் வம்புக ளெல்லாம்
போருக் கிழுக்கும் பொறுமைக ளாகும்.
கலியன் ஆங்கே கலகந் தூண்டியே
புண்ணிய பூமியின் புண்ணியங் கெடுத்துத்
தருமஞ் சிதைத்துத் தானவக் கொள்கையை
நாட்டி நமக்கே நன்மை செய்கிறன்...
அதர்மப் படையும் அவனுட னிருந்து,
போக விலாச மோக மெழுப்பி,
ஞான நாடு தானவப் பான்மையாய்
எனக்கு வழியை இனிது துலக்குமே.
வணிகக் குழுவும் அணியணி யாகக்
கற்ற தொழிலைக் கடும்பொன் ஞக்க
எல்லா முயற்சியும் இயற்றுத லறிவோம்.
கலியனைப் பற்றிக் கடுஞ்சிறை யிட்டுப்
போட்டியில் லாமற் புண்ணிய பூமியை
ஆயுதப் படையால் ஆளுங் காலமும்
வந்தது சுத்தன் மறைந்து விட்டதால்...
சத்தியன் கடலிற் சாய்ந்தே யிறந்ததால்...
சித்தி யரசியைச் சித்திமா னுடனே
எளிதாய் வென்றுநம் இச்சையைப் பெறலாம்.
என்றிருந் தேனே ; இன்றுநந் தம்பி,
கலியன் மனதைக் கலைக்கப் புகுந்தான்.
எதிர்ப்பைத் தூண்டி இன்னல் செய்தான்.
ஐந்துகண் டத்தும் ஆணவக் கொடியை
நாட்டச் சூழ்ச்சி நாளும் செய்தான்.
ஐரோப் பாவில், அரசியற் புரட்சியும்,
அமெரிக் காவில் அளவறு வணிகமும்,
ஆப்பரிக் காவில் அம்பொற் குவையும்,
ஆசியா முழுதும் ஆக்கமும் பெற்றுன்...
போட்டி போட்டுப் புதுப்போர்க் கருவிகள்
சேர்த்துச் சேனை திரட்டு கின்றனே.

கப்பல், பறவைக் கப்பல், விரைரதம்
நாச காரிகள், நச்சுப் புகைகள்,
பறக்கும் வெடிகள், பாயும் வெடிகள்,
ஊர்களை ஒழிக்கும் பேரணு வெடிகள்,
இளைக்கா துழைக்கும் இயந்திர மனிதர்,
இறந்தவர் பிழைக்கவும் இரத்த மருந்துகள்,
புதுவா னொலிகள், புதுத்தொலைக் கருவிகள்
செய்து குவிக்கிறான்....சேனை பணிகளைப்
பயிற்றிப் பயிற்றிப் பலதிசை யனுப்பினான்...
நாமினி உறங்கவா ? நண்பீர் உடனே
பெரும்படை திரட்டி, இரும்பும் எண்ணெயும்,
கணக்கறச் சேர்த்துக் கருவிகள் ஒட்டி,
முன்னேறு வோனை முட்டித் தள்ளி,
ஆணவந் தனையும் அடித்துப் பறித்துத்
தம்பியின் செருக்கைத் தகர்த்திடு வோமே.
துன்மதி, என்ன சொல்லு கின்றாயே !

துன்மதி

அரசே, நாமும் ஆயுத பலத்தில்,
சேனைத் திரளில், செருக்களச் செருக்கில்,
அனலனைக் காட்டிலும் அதிகமே யாவோம்.
தம்பி ஆயிரம் டன்குண் டெறிந்தால்,
அண்ணன் இருபதி னாயிரம் போடலாம்.
குண்டுச் சாலை சண்டைத் தினவுடன்
ஒருசிறு தீப்பொறி வரவைப் பார்க்குமே
அதர்மப் படைகள் அன்புக் கலியுடன்
புண்ணிய பூமியிற் புரட்சி விதைத்தபின்,
ஏணியைத் தட்டிவிட் டெதிர்செய லினிதாம்.
ஆயினும் இடர்கள் அளவில வாமே.
வக்கிரன் சொல்லும் வாய்மையைப் பார்த்தால்,
சுத்தன் ஏதோ சூழ்ச்சி யாகவே
ஒருமலை மேலே ஒளிந்திருக் கின்றான்....
சத்தியன் எங்கோ தப்பித் திரிகிறான்.
அதனினும் தீமை அருங்கலைக் கோயிலில்
பாட்டும் ஆட்டமும் பழகுவோ ரெல்லாம்,
சன்மார்க்க சங்கமாம், சாதன யோகமாம்—
ஊன்குடி தவிர்த்தலாம், ஒருமனை யாளுடன்
இல்லறங் காத்தலாம், இன்ப மளிக்கும்

போக சாலையைப் புரையென நீத்தலாம்—
தியானமாம் மோனமாம் தவமாம், ஆத்தும
ஞானமாம் இரக்கமாம் தானமாம் இன்னும்
அதானவக் கொள்கைகள் ஆயிரம் விதைத்துப்
புலிகளைப் பசுக்களாய்ப் புரட்டப் பார்க்கிறார்....
பாடகர் இருவரும் பதுங்கிப் பதுங்கி,
ஆணவ னுடனே அன்புகொண் டங்கும்
கலைப்பணி போலே கத்திப் பணிக்கும்
வழிசெய் கின்றார்....பழிசெய் கின்றார்....
எப்படியோ நம் இரகசிய மெல்லாம்
எதிரிகள் உடனே இன்னதென் றறிந்து
மாறு செய்யும் வஞ்சனை அறிகிலேன்.
சுந்தரி சக்தி தந்திர மாக
சன்மார்க் கக்கலைச் சங்கத் திற்கே
உன்பண மெல்லாம் உதவுகின் றாராம்....
ஆதலால் அரசே, அன்னியப் பாடகர்
வஞ்சனை யின்னமும் வளரா வண்ணம்,
அடக்கு முறைகள் சடக்கெனப் போட்டுச்
சிறையிட வேண்டும்.....சிறையிட் டாலே,
பகைவன் பிடியிற் பாடகர் சிக்கார்.
சன்மார்க் கத்தைச் சவுக்கடி கொடுத்தலே
நம்மார்க் கத்தை நடத்திட வழியாம்
ஆணவன் தடுப்பான் ; அக்கணம் போரில்
நாண வைப்பதே நல்வழி யாமே !

மாளவி

களிப்புற நாட்டிய கலைக்கோ யிலிலே,
எனக்குத வாத ஏட்டற மெல்லாம்,
நாட்டிய பாடகர் நலியச் செய்வேன்...
சுந்தரி சூழ்ச்சியும் வந்தது வெளியே
காண்கிறேன் அவளை.....காண்கிறேன் கோயிலை...
என்னுடன் வருக இரண்டுபீ ரங்கிகள்
ஒற்றர்முன் சென்று தெற்றென ஆங்கே
நடப்பதைக் கொணர்க ! நானுடன் வருவேன்....
என்றுமா வலியும் இறுமாந் தெழுந்து
சினப்பசிப் புலிபோற் சீறிப் பாய்ந்து
கலைக்கோ யிலிலே கடுமையாய்ப் பேசிய
கடிய விந்தையைக் காண்போம் வாரீர்.

# 19. தெய்வ வாதப் படலம்

"உள்ளன்பர் சங்கந் தன்னை உருப்படி யின்றி யின்றே
கிள்ளுவேன் முளையி" லென்று கிளம்பிய ஊனன் ஆங்கே,
முள்ளடர் வேலி போன்று மூர்க்கசட் டங்கள் போட்டான் ;
கள்ளரிற் கரந்து வந்துங் கலகங்கள் செய்தா னம்மா !

காவல்கள் பலமாய் வைத்தான் ; கடுவரி மிகவி தித்தான் ;
தேவனைப் பேசு வோரைச் சேவகம் விலக்கிப் பூட்டி
"மாவலி சரணம்" என்னும் வரையிலும் விளாசித் தீர்த்தான்;
மேவிடும் இடர்கள் அன்பு வீரத்தை வளர்த்த மாதோ !

அகந்தையின் உச்சிக் கேறி, ஆசையின் இரத்த வாளால்
சகந்தனை ஆள நின்ற தந்திரச் சாத்தான் அன்னோன்,
உகந்ததைச் செய்யா நல்லோர் ஒழிந்திடச் செய்த தெல்லாம்
தகர்ந்ததைக்காணக் காணத்தணலெனக் கொதித்தான்மாதோ!

கெடுமதி யரக்கர் வந்து, கேடுகள் சூழச் சூழ
விடுதலை பெற்ற நெஞ்ச வீரராம் சன்மார்க் கத்தார்,
படுதுயர் பட்டுப் பட்டுப் பளிச்சிடும் பொன்போ லின்னும்,
சுடுதுயர் பொறுத்து வெல்லச் சுத்தயோ கமும்ப யின்றார்...

காவல்செய் அரக்கர் தாமும் கருணைகொண் டுள்ளம் மாறத்
தூவியல் கொண்ட நல்லார், துகளறு நடத்தை யாலே,
மாவலி நாட்டி லோங்கி அனலனின் மனதி லோங்கித்
தேவைக ளெல்லாம் பெற்றுச் செழித்தனர் விழித்தி ருந்தார். 20

பனிமலைத் தவத்தி லோங்கும் பழுதறு சுத்தன் சக்தி,
இனிதுளம் எழுந்து வீச, இயம்பறு மோனந் தன்னில்
மனமெனும் அதிக நுட்ப வானொலிப் பொறியில் ஆங்கே,
தினந்தினங் கேட்கும் ஆணை தினந்தினந் திருந்தச் செய்தார்.

சுத்தனை யறிந்தவர், சுத்த மார்க்கத்தில்
ஒத்துயர் அன்பர்கள் ஒன்று கூடியே,
இத்தினம் அரக்கர்வந் திடர்செய் வாரென்றே
சத்தியன் உரைத்திடச் சாற்றன் மேயினர்.

அன்பர்

வஞ்சருக் கஞ்சிலம்; வாளுக் கஞ்சிலோம்,
வெஞ்சிறைக் கஞ்சிலம் ; வெடிக்கும் அஞ்சிலோம்,
நஞ்சிற்கும் அஞ்சிலம் நமனுக் கஞ்சிலோம் ;
தஞ்சமென் றிறைவனைச் சரண்பு குந்தயாம்.

ஆண்களின் ஆண்மையும் பெண்கள் பெண்மையும்,
பூண்டுல காடலைப் போற்றும் புண்ணியன்,
ஆண்டவன் ஒருவனை அன்பு செய்பவர்
ஈண்டிடர்ப் படுவதும் இறைவன் இச்சையே !

எல்லையில் லாமலே இரக்க மற்றவர்
தொல்லைகள் யாவையுந் தொடர்ந்து மோதினும்,
அல்லலை நீக்கிடும் அருளி ருக்கையில்,
இல்லையோர் குறையெமக் கென்று மெங்குமே !

மெய்யன்

ஊனுடல் இருவினை உலக மாதலால்,
தேனுடன் ஈக்கடி செறிந்த தொப்பவே
மானிட முயற்சிக்கு மமதை யோடெதிர்
தானவர் இன்னலுந் தருவ தாகுமே !

இருவினை தாண்டியே இயற்கை யாகிய
திருவுறு சாந்தத்தைத் தியான யோகத்தாற்
குருவரன் அருளினாற் கொண்ட கோதிலார்
பொருவினை யுலகினைப் பொருட்ப டுத்திடார்.

ஆதலால் மெய்ந்நெறி யன்பர் யாவரும்,
ஏதமொன் றின்றியின் றிறைவன் சக்தியைப்
பேதமொன் றின்றியே பெறத் தியானத்தாற்
போதனை புரிகநம் போக யோகனே !

போகன்

அடலரிய மனக்குரங்கை அடக்கி னாலே,
அமைதிவரும் என்றெண்ணி அன்ப ரானோர்,
திடமுடனே சிவ விஷ்ணு பக்திசெய்வார் ;
தீர்த்தமுடன் மூர்த்தி தலம் சேவிப் பார்கள் ;
உடல் மடக்கிக் குடல்குலுக்கி மூச்சைக் கட்டி,
உரையடக்கி உணவடக்கி, மலைகான் ஓடி,
அடராஜ யோகங்கள் அமர்ந்து செய்வார்,
அவற்றாலே நாடிசுத்தி யாவ தாமே !

இயல்பான மூச்சினை "ஓம் சுத்த சக்தி"
என்றெண்ணிக் கவனித்தால் பிராணாயாமம்,
செயலான பலனாகும் ; சித்தம் ஊன்றும் ;
செயல்விளைவைத் தெய்வநிவே தனமே யாக்கிப்
பயனுள்ள பொதுநலங்கள் பரிந்து செய்தால்,
பார்வடிவாம் பரமனருள் பெறுத லாகும் ;
அயலெண்ணா துள்ளத்தில் அடங்கி விட்டால்,
அறிவான பரமாத்மன் அருளுவானே !

நான் நானென் றகங்கரிக்கு நச்சுப் பேயாம்,
நலந்தீதி லலைகின்ற நாசப் பேயாம்,
போனதையும் வந்ததையும் புரட்டும் பேயாம்,
பொல்லாத குரங்குமனம் போக்க டங்கி,
தானான தலைவனடி பணிந்து நின்றால்,
சகவிவகா ரங்களறச் சாந்த மான
மோனனந் தக்கடலில் மூழ்கி மூழ்கி,
முத்தான ஞானத்தை முகக்க லாமே !

பதரான நாருரித்துப் பகுத்தே ஓட்டைப்
பருப்படையும் பாங்காகப் படர்ந்த சித்தப்
புதர்நீக்கிப் பொய்யகந்தை ஓட்டை விண்டே
பொருளான தனையறிந்து பொருந்த லாமே.
அநுமயமாய் அனைத்தினையுங் காண லாயின்,
அவனியெலாந் தானென்றே அறித லாகும் ;
பொதுவினிலே யொருமித்து வாழு கின்ற
பூரணவாழ் வெய்துமிந்தப் போதத் தாலே.
பாழான பகையின்றிப் பொறாமை யின்றிப்
படுநாசப் போரின்றிப் பங்க மின்றிச்
சூழுலகம் சுத்தான்ம சித்தி பெற்றே,
சுதந்தரமாய் முன்னேறுஞ் சூட்சு மத்தை
ஆழ்ந்துள்ளே அறிந்துணரத் தியானம் ஒன்றே
அற்புதமாஞ் சாதனமாம் ; ஆத லாலே
வாழுலக நேயர்காள், மனத்தைக் கட்டி
மாசற்ற பரம்பொருளைத் தியானிப் பீரே !

எல்லாரும் தியானித்தல்

பதுமவா தனத்தில் ஊன்றிப் பங்கயக் கைகள் கோத்தே,
முதுவினை நினைவ டங்கி, முன்னிலை யுலக டங்கி,
எதுபொரு ளென்று நாடி இதயத்தி லாழ்ந்து தேடிப்
பொதுநிலை யான ஒன்றைப் புனிதருங் கூடி நின்றார்...
சக்தியின் தியானந் தன்னிற் சந்ததம் வந்தளிக்கும்,
சுத்தனின் சோதி யுள்ளே சுடரொளி பரவும் போது,
மெத்தவும் இன்ப மெய்தி விரதியர் இருக்கு மெல்லை,
சத்தமென் றெழுந்த தாங்கே தடதடத் திடியைப் போலே !

அரக்கர் புகுதல்

கதவு டைந்தது ; கட்டிட முற்றிலும்
அதிர்ந்த தாயிரம் பேய்க்குர லார்த்தன ;
முதிர்கள் விச்சமும் மூச்சை யடைத்தது,
பதற நல்லவர், பாதகர் வந்தனர் !

அரக்கர்

மண்ணை டுங்கிடு மாவலி யாட்சியிற்
புண்ணி யப்பொய் புகல்பவன் யாரடா !
கண்ணிற் காணக் கடவுளைக் காட்டடா ?
பெண்ணை யன்றியோர் பேரின்பஞ் சொல்லடா !

சுட்டு லகைச் சுதந்தர மாகநாம்
கட்டி யாளக் கடவு ளெதற்கடா ?
மட்டி ஞான மடையரின் கும்பலைக்
கட்டிக் கல்லைக் கடலினில் ஆழ்த்துவோம்...

திட்டி எள்ளிச் சிரித்துத் தடிகளாற்
பொட்டுப் பொட்டெனப் போட்டுப் பகாசுரர்
அட்ட காசங்கள் ஆயிரம் செய்யக் கை
கொட்டி நன்றெனக் கொற்றவன் வந்தனன் !

மாவலி

ஒண்ட வந்தவன் ஊரைக் கலக்கினாய் !
அண்டி வாழும் அடிமைக்குக் கூட்டமேன் ?
பெண்டிர் இத்தனை பேருனக் கேனடா ?
கொண்ட கொள்கையென் கோபத்தைத் தூண்டுதே !

கொற்ற லங்கையிற் பூந்த குரங்கின்று
மற்றும் ஓர்முறை மானிடங் கொண்டதோ ?
ஒற்றைக் கிங்கிரட் டைக்கவி யுற்றிங்கே
பற்ற வைத்தன பத்திக் கனலையே !

அடநின் ஆத்தும ஞானப் புரட்டெனுட்
சுடருந் தீயினிற் சுள்ளி செருகுதே ;
இடத்தைத் தந்த இரக்கத்தி னாலன்றோ
மடத்தைக் கொண்டனை மானிட மெய்யனே !

* * *

அந்த மான அரசியென் றுன்னை நான்
சொந்த மாகச் சுகமுற வைத்தனன் ;
சுந்த ரிக்குச் சுதந்தர மீந்ததும்
விந்தை யாகவென் வீட்டைக் கெடுத்தே !

சுந்தரி

கறந்த பாலெனக் கடுவிடக் கசடரை நம்பிப்
பறந்து வந்துநல் லன்பரின் பத்தியைச் சிதைத்தாய் ;
அறந்த விர்ந்தநின் அவலவாழ் வருள்வழிச் சென்று
சிறந்து வாழவே திருச்சபை சேர்ந்திடாய் அரசே !

ஞான வித்தகன் வாய்மையே உருவென மற்றுன்
ஊனை நாட்டுநுக் குற்றனன், உயர்நலம் புரிய ;
காணரிய சிந் தாமணி கைவந்த தனையான்,
காணவன் முகம்; உன்வெறி முகத்தையுங் காணாய் !

ஐயந் செருக் காற்றலை அனுவெனக் காட்டத்
தெய்வ சக்திகொண் டுற்றனன் சிறந்தநல் யோகி ;
வையம் வாழவே வாழ்கின்ற மாதவ முடையான்,
வெய்ய பாலையிற் பசுநில விளைவென விளைந்தான்.

பருந்தைப் போற்குழல் விழியிறைய், பகர்வதைக் கேளாய்,
வருந்தத் தக்கன பலபல வரம்பின்றிச் செய்தாய் ;
மறந்தெ னத்ததும் அறநெறி மதித்துநீ யினியுந்
திருந்தின் எம்முடன் சேர்ந்துநீ சீர்பெற லாமே

மாவலி

விற்றி றத்திலும் வீரப் படையிலுங்
கற்ற என்முன் கலைப்புல வர்களின்
சொற்றி றத்தைச் சொரிந்தனை சுந்தரி !—
மற்றி றத்தினை வார்த்தை மயக்குமோ ?

இன்ப மென்றுன் இளமையிற் கொண்டுவந்
தன்பு செய்தொரு சக்தி யளித்தனன் ;
பின்பென் ஆசை பிறரிடஞ் சென்றுமே
உன்பெண் சேயை உயிரெனப் போற்றினேன்....

அட்ட திக்கையும் ஆளும் அரக்கனின்
சட்டந் தன்னை அசட்டைசெய் தாயதேன் ?
மட்ட மான மனிதரைச் சார்ந்துநீ
கெட்டடென் செல்வ மகளைக் கெடுத்தனை...

கண்ணை மீறினை காதினை மீறினை,
பண்ணை மீறினை பாரினை மீறினை,
பெண்ணை மீறினை ஆணெனப் பேசினை,
எண்ணை மீறி யியற்றினை தீமையே !

கடவு ளென்றுங் கதியற மென்றுமென்
உடலெ ரிச்சலை ஓங்க வளர்த்தனை ;
*விட லரிய விருப்பத்தை விட்டுநீ
கடமை யென்று கலைகளைக் காத்தனை.

தேக மன்றியோர் தெய்வமுண் டென்றனை ;
போக சாலையைப் புல்லென நீத்தனை.
தாக மாகிய தானவ நெஞ்சத்தின்
மோக வேட்கை அழிய முயன்றனை.

* காமம்

மதுவை யுண்டிலர் மாமிச முண்டிலார் ;
பொது நடஞ்செயும் போகமும் உண்டிலார் ;
எதுவென் இன்பம் அதனை இகழ்ந்தனர்
புதுமை பெற்றுனைப் போற்றிய தானவர்.

தேடி வந்த தெருவிசை வாணரை,
வீடு தந்து வியன்கலைக் கோயிலில்
ஆடல் பாடல் அழகுகண் டானந்தங்
கூடி யென்னைக் குமைத்திடச் சூழ்ந்தனை....

மன்னு லகமும் மானிடர் கூட்டமும்
என்ன டிமைகள் ; என்சுக மோங்கவே
மின்ன டிமைகள் விங்கிளங் கொங்கையர்
என்னும் பேச்சை யெதிர்ப்பவன் யாரடா !

மெய்யன்

நிறுத்துன் பேச்சை நிருத நிருபனே
உறுத்து வெஞ்சொல் உளறியெம் உள்ளத்தை
ஒறுத்தனை உனக் குண்மை விளையுமோ
வறுத்த நெல்லும் வளர்பயி ராகுமோ ?

மடமை கொண்ட மமதைக் கடிமைநீ
குடமு லேக்குங் குடிக்கும் அடிமைநீ ;
படைக்க லத்திற்கும் பாழ்செயுஞ் சண்டைக்கும்
விட மனத்திற்கும் வெய்ய அடிமைநீ.

கொடிய சொற்களைக் கொட்டினைக் கோபத்தால்,
கடைய ருங்கரு தாதன செய்தனை ;
படையினும் பல மிக்கப் பகவனின்
அடியர் யார்க்கும் அடிமைக ளல்லரே

கோளைக் கேட்டுக் குதிக்குஞ் சினமிகு
வாளைக் காட்டினை ; வாளுக்கு வாளுண்டு ;
தோளும் உண்டு ; சுதந்தர வீரமெந்
நாளும் உண்டுன் செருக்கை நலிக்கவே !

மாவலி

மண்ணை யாண்டிடு மாவலிச் சிங்கமுன்
புண்ப டுஞ்சொல் புகன்றனை புல்லனே ;
கண்ணி மைக்குமுன் கண்டதுண் டஞ்செய்வேன்...
பண்ணொன் றென்குடில் பாழ்செயும் ஒற்றனே !

மகி நடுங்கிட மாவலிச் சிங்கத்தைப்
புகல் டைந்த புழுவிட நாகமாய்
அகந்தை கொள்ளுமேன் ஆணவத் தம்பியின்
இகலைத் தாண்புனை இன்கலைத் திறனால்.

மெய்யன்

இல்லை யில்லை எமக்குக் கலையலாற்
சொல்லு மில்லையுன் சோதர நண்பன்பாற்
செல்லுங் காரியம் சேமக் கலையினால்
வெல்லுங் காரியம் வேறொன்று மில்லையே !

பொய்யர் சொல்லும் புளுகுதனிக் கோள்களை
மெய்யென் றேற்று, மிகைபடப் பேசினை ;
ஐய மாவலி அன்புடன் கூறினேன்—
மெய்யன் சொல்வதுன் மேன்மைக்கென் றெண்ணுவாய் .

நல்ல தூய நடுநிலை யாளரின்
சொல்லைக் கேட்டுச் சுருதியைக் கேட்டெல்லாம்
வல்ல தெய்வத்தை வாழ்த்தி வணங்கியே
வெல்லு மாண்மை விளைந்திட வாழுவாய்.

வேறு நாட்டை விரும்பியம் மக்களைக்
கூறு செய்திடுங் கூற்றெனப் பாய்வதேன் ?
ஊறு செய்திட உன்னலை ; நீபெற்ற
பேறு நிற்கப் பெருநலம் பேணுவாய்.

ஊர ழிய உயிர்கள் அழிந்திடப்
பார ழியப் படுகொலைப் பாவத்தாற்
சீர ழியத் திருவழியப் பெரும்
போரி ழைத்தலை பூவுல கெங்குமே.

சீரு யர்ந்தநற் சிந்தனை யாளர்கள்,
பாரு யரப் பெருநலம் பாலிப்பார்,
ஆரு யிர்களை அன்புயிர் என்பவர்,
தீரர் அன்னவ ரேசெய மன்னராம்.

தொல்லு லகிற் சுதந்தர மூச்சினை
வல்லவன் வகுத்தான் வளர் நாட்டிற்கே ;
அல்லல் செய்தத னைக்கவர்ந் தாட்களைக்
கொல்லுங் கொற்றவன் கூற்றினுங் கூற்றனே !

ஆளு நாட்டை அறவழி யாண்டு நீ
தோளைக் கொண்டு சுதந்தரந் தாங்கியே,
வாளைக் கொண்டு வரும்பகை ஓட்டியே,
நீள மைதி நிலவிட வாழுவாய்....

அருளில் லாமல், அறிவுமில் லாமலே,
தெருளி லாது திரள்படை கொண்டிங்கே,
ஒருவன் ஆசை உலகை இரத்தத்தாற்
பெருகச் செய்திடும் பேய்க்குணம் வீழ்கவே !

பலருக் கின்பப் பயனுற வாழ்வதே
இலகு நல்லவர் வாழ்வின் இயற்கையாம் ;
சில கொடியர் திமிர்கொண்டு போர்செயக்
கொலை நரகங் குவலய மானதே !

உண்ணுஞ் சோற்றில், உயிர்க்கும் உயிர்ப்பிலே,
எண்ணும் எண்ணில் இயற்றுஞ் செயலிலே,
புண்ணி யத்தைப் பொலிவிப்பர் நல்லவர் ;
கண்ண றுங்கொலை காணுவர் தீயரே.

பஞ்ச பாதகப் பாமரப் பாழ்சின
நெஞ்சை மாற்றி நினைப்பைத் திருத்திடும்
வஞ்ச மற்ற கலையை வளர்க்கவே
அஞ்ச லற்றற மாம்பணி செய்கின்றோம்...

கலையி னாலும் கலைகள் அனைத்திற்குந்
தலைசி றந்தசன் மார்க்கத்தி னாலுமே,
கொலை புலைகுடி கூத்திக் கொடுமையில்
அலை யுலகிற் கமைதியை நல்குவோம். 260

தீய ரின்மனந் தீமையைக் காண்பதே ;
நேய ரின்மனம் நேர்மையைக் காணுமே ;
தூய ரின்மனந் தூய்மையைக் காணுமே ;
பேய ரின்மனம் பேய்நட மாடுமே.

துச்ச மான துடுக்குகள் பேசினை
அச்சத் தாலெமை அஞ்சி வருத்தினை ;
நச்சு வாளுக்கும், நாத்திகக் கோளுக்கும்,
உச்ச வாய்மை உளத்தினர் அஞ்சவோ ?

நாடெ லாமுனை நத்திப் பணியினும்,
ஆடெனப் பணியோம் ; அரி போலவே,
பீடு டைப்பெருந் தன்மையி னாலிங்கே
வீடு பெற்றனம் வீர வுறுதியால்...

பாடும் பாடலும் பத்தியின் பாடலே,
ஆடும் ஆட்டமும் ஆனந்த வாழ்க்கையே.
கூடுங் கூட்டமும் கொள்கை நடத்தவே
தேடுந் தேட்டந் திருவுறு நன்மையே...

வைய கத்திற்கு நன்னெறி வாழ்க்கையும்,
செய்ய சிந்தையுஞ் சீர்பெறுஞ் செய்கையும்
தெய்வ பக்தியுந் திவ்விய யோகமும்
உய்வெ னத்தரும் உண்மைக் கலைஞர்யாம்....

மாவலி

மெய்க ளென்று மினுக்குரை பேசினை
பொய்க ளத்தனை யும்;புரட் டென்னுவேன்,
வெய்ய வாள்வலி வெட்டிப் புதைக்கவே
தெய்வ மென்முன் உடன்வரச் செய்யடா ?

பின்னு முன்னும் பிதற்றி யலைகின்றாய்
முன்னி றுத்துன் முதற்பெருந் தெய்வத்தை;
அன்ன வன்சமர்த் தையென தாற்றலால்
என்ன செய்குவன் என்பதைக் காணுவாய்.

மெய்யன்

விண்வி ளக்கை வெறிப்புயல் ஊதுமோ ?
தண்க டலினைச் சங்கிலி கட்டுமோ ?
கண்க ருத்தனு காத கடவுளைத்
திண்பு யத்தின் சிறுவலி தீண்டுமோ ?

மட்டி ஆணவ மாயக் களிம்பிலே
கட்டித் தங்கக் கலையும் ஒளிருமோ ?
துட்ட தானவத் துன்பப் பிறவிக்கும்
சுட்ட ரியசுயம் பொருள் தோன்றுமோ ?

ஊனுங் கள்ளும் உவட்டுறுங் காமமும்
நானே னதெனு நாத்திக வேகமும்,
மோன சாதன முத்தர் உணர்ந்திடும்
ஞான வத்துவை நாடப் பெறுவதோ ?

பெருகுங் காமம் பிறர்மனை யாண்டிடப்
பெருகுஞ் சேனை பிறர்புவி யாண்டிடப்
பெருகும் ஆசை பிறரை யழித்திட;
உருகும் அன்புணர் ஒன்றினைக் காண்பையோ ?

செருக்கும் வஞ்சப் பொருமைச் சிறையிலே,
இருக்கும் உன்னை இருவினைக் கட்டிலே
தருக்கும் உன்னைச் சகச சுதந்தரர்
அருட் கதிரால் அறியறி வெட்டுமோ ?

மாவலி

உலக மன்றி உயர் பொரு ளொன்றில்லை ;
கலக மன்றியோர் காரிய வீறில்லை ;
புலனை மீறிப் பொருளில்லை ; உன்னுளே
இலகு தெய்வ வியல்பினைச் சொல்லடா.

மெய்யன்

என்றெய்வம் உண்மையறி வின்பத் தெய்வம் ;
இதயவெளி யெழுந்துநடம் இயற்றுந் தெய்வம் ;
கன்றைத்தாய் காப்பதுபோற் காதலன்பர்
கடைத்தேறக் காப்பாற்றுங் கருணைத் தெய்வம் ;
ஒன்றாகி அருட்பலவாய் ஒளிருந் தெய்வம் ;
ஓதுமறை ஓமென்னும் உயர்ந்த தெய்வம் ;
என்றென்றும் எல்லார்க்கும் இனிய தெய்வம்,
இருந்தபடி யிருந்துலவும் இயற்கை யாமே.

சூரியனுக் கொளியாகச் சுடருந் தெய்வம்,
தூயவுளக் கண்ணாடி துலக்குந் தெய்வம் ;
பேர்வடிவப் பேதமிலாப் பெரிய தெய்வம்,
பெருகுமத வாதங்கள் பேசாத் தெய்வம் ;
நேராகச் சக்தியினால் நிலவுந் தெய்வம்,
நெஞ்சத்திற் கோயில்கொண்டு நிறைந்த தெய்வம்,
ஓராமல் அன்னியத்தை உணருந் தெய்வம் ;
உள்ளத்தில் உள்ளபடி உள்ள தாமே.

தானேதா னாயிருக்குந் தனித்த தெய்வம்
சர்வாத்ம வடிவான சக்தித் தெய்வம்,
நானாகி நீயாகி நடுவு மாகி,
நானாபா வங்களிலும் ஒருமை யாகித்
தேனாகிப் பாலாகித் தீஞ்சா றாகித்
தெவிட்டாது தியானத்தி லினிக்குந் தெய்வம் ;
மோனத்தில் உணர்கின்ற முழுமை யின்பம்
மூலசக்தி யாகவொளிர் முதல்வ னாமே.

மாவலி

இருக்குது தெய்வம் என்றாய் என்னிலும் வலியன் என்றாய்
உருக்கிய செம்பு போலென் உதரக்கண் உமிழு கின்ற
நெருப்பின்முன் அதனைச் சற்றே நிறுத்தவு மாட்டாய் ; வீணே
உருக்கொளாத்தெய்வ மென்றாய்உடனதைச்சோதிப்பேனே.

அடியவர் தம்மைக் காக்கும் ஆற்றல்கொள் இறைவன் என்றும்
இடியினுங் கொடிய தாமென் பீரங்கிக் கெதிரே உன்னை
வெடிபட நுறுக்கு கின்றேன்; வேந்தன் யான்; இறைவன் உன்னை
அடிபடா தின்று காத்தால், அதிசயம் அறிகு வேனே !

மெய்யன்

புலன்களைக் கடந்த தெய்வப் பொருளுள தூண்மை யென்னில்,
இலகுயிர்க் குயிரா தென்னில், இரக்கமே உருவ மென்னில்,
அளவிலா விளையாட் டாலே ஐந்தொழில் புரியு மென்னில்,
விலகுக துன்ப மின்று விமலன்செய் யருளி னாலே !...

மெய்யனிவ் வகைது தித்து, மெய்ம்மறந் திருந்தான் ; போகன்
மையப்பின் சென்று, தியானம் பண்ணிமுன் பரிந்து வந்தான் ;
துய்யனை நினைத்துச் சக்தி "சுத்தனும் சக்தி" யென்றுள்,
வெய்யவன் "சுடுக" வென்று வெய்யரை யேவி னானே !

சக்தி

தடுத்தெதிர் நின்று சக்தி "தந்தையே விந்தையான
கொடுமைசெய் திடத்து ணிந்தாய் குடிவெறி மயக்கத் தாலே ;
கெடுகநின் புன்மை ; வெம்மை ; கேடுறச் சுடுவா யென்னிற்
சுடுசுடு என்னை" யென்று துணிந்துமார் காட்டி நின்றாள்...

சுந்தரி

படபடக் கின்றாய் ; சொன்ன பகுத்தறி வனைத்தும் அன்று
கடுவனுக் கிதமு ரைத்த புட்களின் கதையே போலும் !
நடுவுள தெய்வ முண்டேல் நம்பினோர் கெடார்நீ யென்னைச்
சுடுமுனென் றுங்கு நின்றாள் சுந்தரி துணிந்த நெஞ்சாள்..360

எல்லோரும்

திருந்துநல் லன்ப ரெல்லாந் "தெய்வமே துணைசெய்"யென்று,
மருந்துகெட் டித்து நிற்கும் பீரங்கி வாயின் முன்னே
வருந்துவோம்,அறத்தைக் காப்போம் வாய்மைக்கேஉயிரை நல்கி
இருந்துநற் பதவி சேர்வோம்" என்றெதிர் நின்று ரம்மா !

போக முனிவன்

அன்பறந் தூய்மை ,வாய்மை, அருளுடன் அடைத லாகும்
இன்பமெய்க் கடவுளுண்டென் இதயத்தில் அதுவே நின்று,
துன்பமே தொழிலாய்ச் செய்யுந் துட்டரைக் கட்டு கென்றே
செம்பொரு ளறிந்த போகன் மந்திரஞ் செபித்தா னுங்கே.

மாவலி

செல்வியைக் கண்டான் ; வீர சுந்தரி செய்கை கண்டான் ;
அல்லலுக் கஞ்சா நெஞ்சின் அன்பரைக் கண்டான் ; ஆங்கே
சொல்லொணுச் சக்தி யொன்று துலங்கிடஉணர்ந்தான்; ஊண
கல்லென நின்றான் ; ஆங்கோர் கதிரொளி வீசக் கண்டான்...

"சுத்தனும் சக்தி" யென்றே தோத்திரம் பாடி நிற்கும்,
பத்தரைக் காக்க வேண்டிப் பகவனே அருள்செய் தாரோ ?
சுத்தனின் யோகசக்தி தொண்டர்பால் வந்த தேயோ...
அத்தனை அரக்கர் தாமும் ஆற்றலற் றயர்ந்து விட்டார்....

பேய்மனப் பித்தர், கையாற் பீரங்கி தொடவே யொண்ணுர் ;
வாய்திறந் தியம்ப வொண்ணுர்; வன்கரம் உயர்த்த வொண்ணுர்
தீய்விழி காண வொண்ணுர் ; திகைத்தயர்ந் தாங்கே மண்ணில்
ஓய்ந்து வீழ்ந் துறங்கி ஞர்கள் ; ஓவிதென் வியப்பே யம்மா ! 380

சுந்தரி யந்த வேளை, சுடுகரு விகளை யெல்லாம்
தந்திர மாகத் தூக்கித் தாவிடும் ஆற்றில் ஆழ்த்தி,
அந்தவா ளரக்கர் தம்மை விசைவண்டி யதனில் ஏற்றிச்
சொந்தமா ளிகையிற் கொண்டு 'தூங்குமின்'எனவி டுத்தாள்...
384

## 20. மகாமுனிப் படலம்

மெய்யன்

திருந்திய ஒழுக்கமும் சிறந்த வாய்மையும்
பொருந்திய நல்லவர் பொருமைப் புல்லரால்
வருந்திய வருத்தங்கள், வலிய துன்பங்கள்
பெருந்திரு வருள்வரப் பெரிதுந் தீருமே.

ஆயினும் அருமறை யறிந்த போகனே,
பேயினும் கொடியவர் பிறிதும் வந்துளே
தீயினை மூட்டுவர், சிறையிற் கொல்லுவார்
தாயரின் மானமுந் தவிக்கச் செய்வரே.

வெருவுறும் பகைவரை வென்றித் தீவிலே,
தருமமே தழைத்திடத் தக்க சாந்தமாம்
ஒருவழி அருளினுல் உதிக்க லாகுமோ ?
திருவிலி அரக்கருந் திருந்தி வாழ்வரோ ?

சுந்தரி

வந்தது வருக;நம் வாய்மை வெல்லுக !
முந்துல கிலகிய முதன்மை வீரரின்
சிந்தனைக் கின்னிய செய்கை செய்குவோம் ;
தந்திரம் உள்ளது ; தருமம் வாழுமே.

* * *

தீரன் மஜினியும், திண்கரி பால்டியும்
முன்னே செய்ததை இன்னே செய்வமே :
ஆத்திரி யாவின் அடிமைநா டாகிய

விண்பொரும் இதாலியா விடுதலை பெறவே,
கண்பொரும் சுதந்தரங் கதிர்விட் டொளிரவே,
எழுந்தான் மஜினி இளந்திருவுடனே.....
இளம் இதாலியா எனும்பெருங் கழகம்
கண்டான் கொள்கை கனல்பெற வமைத்தான்
ஓய்ச்சலில் லாது பேச்சும் எழுத்தும்
செயலும் சிறையும் தியாகப் பொறுமையும்
புன்னகை யுடனே பொதுநலப் பணியுமாய்
வாழ்ந்தான் வாழிய வரம்பெறு வீரனே !
நாடு கடந்து நலிந்தும் மஜினி
சொந்த நாட்டின் சுதந்தரங் காத்தான்.
கரிபால் டியெனுங் கலங்கா வீரன்,
மறைந்துங் கரந்தும் மக்களை ஊக்கிப்
படைகளைத் திரட்டிப் பகைவரைப் பொருது,
விடுதலைப் போரை வியனுறச் செய்தான்.
சேனையும் ஒற்றரும் சிறையும் இடரும்
நலித்த ரஷ்ஷிய நாட்டை ஜாரின்
கொடுங்கோலி னின்று விடுதலை செய்யவே,
மார்க்ஸின் பொதுமை வழியைக் கண்டே
ஏழைக் கிரங்கும் இலெனின் வீரன்,
செல்வர் கொடுமைச் செருக்கைத் தகர்த்து,
நாட்டு மக்களை நடுக்கிய குலத்தை
விட்டுட னொழித்து விடுதலை நாட்டி
உலகம் உலகோர் உடைமையென் றானே !
அத்தகை வீரர்போல் அசுரக் கொடுமையை
எதிர்ப்போம், உயிரை ஈவோம் என்றே
சுந்தரி சொல்லவே, துணிந்த சக்தியும்
"உயிர்பெரி தன்றே உரிமையே பெரிதாம் ;
கோடி யிடர்கள் குறுக்கே நின்று
தடுக்கினும் அருட்பணி விடுக்கிலோம் ; எந்தை
உணர்ந்து திருந்தும் உண்மை வழியில்
இயன்ற தெல்லாம் இயற்றித் தானவர்
தீமை தீரப் பூமி நலம்பெற
இரத்தம் சிந்துவோம்" என்றனள் ஆங்கே....

### போக முனிவன்

போக முனிவன் பொறுமையோ டெழுந்து,
மாவலி நாட்டில் மனவலி யாலே
அறத்தை நாட்டும் ஆர்வங் கொண்டீர்,
முன்னொரு காலம் அன்னியத் தானவர்

திருமிகு சிகரத் தீவினைப் பற்றி
அசுரக் கொடுமை அளவில செய்தார்.
சிவபுண் ணியத்திற் சிறந்த நாட்டிலே
ஊனுங் கள்ளும் உயிர்க்கொலைப் பழியும்
போக சாலையும் பொருட்பெண் மாயமும்
பெருகச் செய்து, பேய்க்கூத் தடித்தார்.
வளமெலாம் சுரண்டி வறுமையே வளர்த்தார்,
கடுவரி விதித்தார் கொடுவரி போலே.
சுதந்தர வீரரைக் கதம்பெறக் கொன்றார்.
தேச மெல்லாம் சிறையெனச் செய்தார்.
ஏனென் றவரை எமனிட மனுப்பினார் ;
நாடென் றவரை வாட நலித்தார்.
கையும் வாயுங் கட்டிடச் சட்டம்
விதித்து மக்களை வதைத்தனர் அரக்கர்.
வாயைத் திறக்க வகையிலை யேனும்,
உரிமைக் கனலும் உணர்ச்சிப் புயலும்
எரிமலைக் கொதிப்பும் ஏறித் துடிக்கவே
தைரியப் படுத்தும் தலைவனும் எழுந்தான்.
எழுந்தான் மகாமுனி என்னும் பெரியோன் ;
ஏழைக் குடிலில் எளியவர் ஈன்ற
திருவுடைச் செல்வன், சிறிய வயதிலே
கலையிலுங் கவியிலும் புலமை பெற்றோன்.
ஒன்பது வயதிலே யோகம் பயின்றோன்.
பதினாறு வயதிற் பழுதறத் துறந்து,
நிட்டை கூடி நிருவி கற்ப
சமாதி யெய்திச் சாட்சாத் கரித்த
பரமாத்ம ஞானம் பாடலாய் அருளி,
உலகிற் கீந்து பலபுகழ் பெற்றோன் ;
உலகெலாங் கோயிலாய் உயிர்த்தொகை கடவுளாய்
நிலவிடக் கண்டு நலம்பல செய்த
அருட்பணி வீரன் ; அஞ்சா நெஞ்சன்,
ஆத்தும சக்தியின் அன்பூற் றன்னான்,
எண்ணிய வினையைத் திண்ணமாய் முடிப்போன் ;
சிகரந் தன்னைச் சீர்தி ருத்தவே
குருகுலம் அமைத்துக் குமரர் குமரியர்
கலையும் வீரமும் கடவு ளறிவும்,
யோக சக்தியும் ஒருங்கே யடையும்
சாதனந் தந்து, தளர்வற வுழைத்தான்....
"பிரம சரியமே பெருந்திற லளிக்கும்,

பொருந்திற லாலே பெறுவோம் விடுதலை”
என்று சிகர இளைஞரை ஊக்கிய
மகாமுனி தன்னை வஞ்சக ஒற்றர்,
“புரட்சியைத் தூண்டினை புரட்டுகள் பேசினை,
தானவர் வகுத்த சட்டம் மீறினை”
என்று தாக்கி, இழிவு படுத்திக்
குருகுலத் திற்கும் கொள்ளியை வைத்தார்.
வகுப்புவா தத்தை வளர்த்து நாட்டைப்
பிரித்தார் பழமறை எரித்தார் கொடியர்.
அஞ்சா மாமுனி அரக்கர் கொடுமையைப்
பலரும் அறியப் பண்புடன் பேசியும்
உருக்கமாய் எழுதியும், ஊர்விழித் தெழுந்தே
“எங்கள் சுதேசம் எமக்கே உரிமை,
தானவர் கொடுமையைத் தாங்கோம் இனிமேல்
பஞ்சமா பாதகப் படர்களை ஒழிப்போம் ;
கள்ஊன் அருந்தோம், கற்பை அழியோம்,
நாட்டுப் பொருளையே நாட்டார் கொள்வோம்,
விதேசப் பொருளை விலக்குவோம் ! எங்கள்
பொருளைக் காப்போம் அருளைக் காப்போம்....
உயிரைக் கொடுத்தும் உரிமை பெறுவோம்.....
வஞ்சக் கடைகளை மருங்கெலாம் விரித்தே
மோசடி பாகக் காசடிக் கும்பலை
வீழ்த்துவோம்”என்றே வீரன் எழுந்து,
பணிமுறை வகுத்துத் துணிவுறக் கிளர்ந்தான் ;
தொண்டரை அரக்கர் துன்பச் சிறையில்
அடைத்தார் ; தலைவனை அடக்கு முறையால்
அடக்கிட முயன்றார் ; அவலமே யானார்....
இடர்களே உரமாய்ப் படர்ந்தது நலமே.
சிகர இயக்கம் தேசந் தாண்டி
உலகெலாம் பரவி, உள்ளன் படைந்து,
தானவர் கொடுமையைத் தமுக்கடித் துரைக்கவே
உலகெலாந் தொண்டர் உதவிகள் பெற்றார் ;
மாமுனி செய்கையை மக்கள் புகழ்ந்தார் ;
சிகரர் அனைவரும் சேர்ந்தொரு குலமாய்த்
தானவர் ஊழியந் தாழ்வென விடுத்தார் ;
படையிற் சேரார் ; பயமு றுத்தினும்
அஞ்சார், யாரும் அரக்கரை வணங்கார்.
பெண்டிர் இணங்கார் ; பிரம சரியம்
கொண்டெல் லாரும் கொடுமை ஒழியவே

பொதுநலம் புரிந்தார், போகசா லேகளைப்
பொட்ட லடித்துப் புற்றரை செய்தார் ;
விலேமா தர்களைக் குலமாத ராக்கி
விடுதிக ளெல்லாம் வீடுக ளாக்கிப்
பெண்களை மிகவும் பெருமை செய்தார்.
கொலேயூண் உண்பதும் கொடுப்பதும் வெறுத்தார்.
மதியை மயக்கும் மதுவை யொழித்துக்
கட்கடை பஜனை கானமந் திரமாய்த்
தெய்வ நாமமே செழிக்கச் செய்தார்.
அன்னியப் பொருள்களை அடிமைத் தனமென
ஒதுக்கித் தாமே உழைத்துப் பிழைத்தார்.
நாட்டுப் பொருளை நாட்டார் துய்த்தார்.
கோயில்க ளெல்லாம் குருகுலஞ் செய்தார்.
நாட்டிற் குரிய நற்கலேப் பண்பை
உயிரெனப் போற்றி உண்மைக் கவிகளை,
நாடு வாழும் பாட லியற்றி
வீடு தோறும் பாடச் செய்தார்...
கலேக்கோட் டத்திற் கள்ளர் புகாது
கவிகளைத் தாமே கண்ணெனக் காத்தார்.
வழக்குமன் றங்களை விலக்கிடச் செய்தார்.
துரோகக் கும்பலேத் தூவென வெறுத்தார் ;
சுதேசியைச் சுதேசி தோழமை பூண்டு,
சுயநல மின்றிப் பொதுநலங் காக்க
ஊக்கினர் மாமுனி ஊட்டிய திறனல் !....
இனித்தம தமுல்கள் இயலா வெனவே,
தேடுவா ரற்ற திருட்டு முரடர்,
ஒன்று சேர்ந்து நின்ற நாட்டை
வணக்க முயன்று வலியிலா தொழிந்தார்...
மாமுனி நாட்டை மறுபடி பற்றிச்
சீகர நீதியைத் திறமையாய் நாட்டி,
வீரமும் கலேயும் விதவிதத் தொழில்களும்
வளரச் செய்து, வஞ்சத் தானவர்
கிட்ட வராது சட்டமுஞ் செய்தான்.
அத்தகை மாமுனி ஆற்றிய பணியே
இத்ததி நாமும் இயற்றுத லாமே !

சக்தி

இதுவே நல்வழி.....இயற்றுவோம் எழுமின்
ஆடுவோர் பாடுவோர் அனைவரும் நமது

சுத்தசன் மார்க்கச் சுருதியே செய்மின் !
ஊர்தோறும் நாடோறும் உளந்தொறும் ஊறிச்
சன்மார்க்க நேயந் தழைத்திடச் செய்மின்.
போகந் தவிர்மின் ! போதை தவிர்மின்
பெண்ணும் ஆணும் பிரம சரியம்
காத்துக் காமக் கசடரைத் திருத்துமின்....
பெண்கள் ஆண்களைப் பிழையறச் செய்மின்.
அரக்கர் நம்மை அடக்கி ஒறுக்கினும்
உறுதிகொண் டின்னும் உண்மைக் குழைப்போம்...
உடலினும் உயிரினும் உண்மையே பெரிதாம்.
சிறையிடர் வருக....சிரிப்போம் இன்னலை...
பீரங்கி முன்னும் பேசுவோம் உண்மை...
சுத்த யோகி சுதந்தர மளிப்பான்...
" தைரியம் " என்று சக்திவீ றிடவே
ஆன்ம நேயர் அருட்பணிக் கெழுந்தார்...
ஊர்ஊ ராக உத்தமர் சென்றே
குறித்த பணியைக் குறித்தவா றியற்றி
வேக மாக வெற்றிகண் டாரே !
ஆணவத் தம்பியின் ஆதர வாலே
மேலும் மேலும் வெற்றியெய் தினரே !

## 21. குண்டலகேசிப் படலம்

**கா**லையில் மாவலி கடுகடுத் தெழுந்தே,
சுதந்தரி யான சுந்தரி தன்னை
வெட்டிப் புதைக்க வெறியுடன் சென்றான்.
அத்ததி வெள்ளி அவனை மறித்தே,
"பழிக்குப் பழிவரும் பழங்கதை யான
குண்டல கேசிபோற் கொலை கொலையாகும்"
என்றலும்"சொல்லதை"என்னமா வலியும்
ஐம்பெருங் காப்பியம் அதனுள் ஒன்றும்
அணியழ கொளிரும் அகலக் கவியாம்
அதனை அரக்கனும் அமர்ந்து கேட்கச்
சொன்னான் இளந்தமிழ்ச் சொல்லணி யாலே :
சீர்த்தி யோங்குந் திருநக ரதிலே,
கல்வியும் வாணிகச் செல்வமுஞ் செழித்து
வாழ்ந்தான், இசைபெறு வாணிக மணியே.
அன்னவன் பெற்ற மின்னிடை யன்னம்,
மதிவளர் முகத்தாள் ; மலர்தரு விழியாள் ;

அமுதம் பொழியும் குமுத வாயாள் ;
புயலும் புகையும் போலச் சுருண்ட
கூந்தல் அழகி ; குண்டல கேசி
என்னும் *பத்திரை, பதுமினி,
சித்திரத் தெழுதொணுத் திருவுடை மாதே !
பருவ மடைந்த திருமா தொருநாள்
கொஞ்சுங் கிளிபோல் கூவுங் குயில்போல்
தோகை மயில்போல் தோழிய ருடனே
மாடத் தின்மேல் ஆடிநின் ருளே.
அத்ததி தெருவில் அரசன் காவலர்
திருட ஞெருவனைச் சிறைப்பிடித் தேகினர்.
பார்த்தாள் பெண்மணி ; பதைபதைப் படைந்தாள் :
"எழிலார் வாலிபன், இளந்திரு வுடையான் ;
என்மனம் விரும்பு மன்மதன் இவனே !
இவனே கள்வன் ? இவனென் காதலன் !"
என்று திகைத்து நின்ருள் பாவை.
"காளன்" என்னும் காளையக் கள்வன் ;
அரசருக் கினிய அமைச்சன் புதல்வன் ;
புத்த சமயம் புகுந்து பயின்றும்
அடங்கா மனத்தால் அறமல செய்தான்.
சிறையிட் டிவனைச் சிரம்வாங் கிடவே
வேந்தன் பணித்தான் ; வினைப்பய னென்னே !
கோவின் காவலர் கொண்டுசென் ருரே.
காத லாலே கலங்கிய நங்கை
உடலம் வெளுத்தாள் ; உள்ளஞ் சோர்ந்தாள் ;
நுவலமாட் டாத நோய்கொண் டயர்ந்தாள்.
கண்ணைக் கவர்ந்த கள்வனைத் தவிர
வேறு நினைப்பெலாம் வீணென விடுத்தாள் ;
செல்வ வாலிபர் சொல்லையும் வெறுத்தாள் ;
காதலன் விடுதலை காண வேண்டிப்
போதி நாதனைப் பூசனை செய்தாள்.
பெற்ருர் திருமணம் பேசும் போதெலாம்,
"மனத்திற் கிசைந்த மணாளன் ஒருவனே ;
அவனை யன்றி யெவனையும் பாரேன்"
என்றுதன் உள்ளம் நன்றுரைத் தாளே.
மந்திரி முயன்ருன் ; மாசறு தந்தையும்
அரசனை வேண்டினுன். ஆண்டவன் கருணையால்

*இதுவே அவள் இயற் பெயர்.

காளன் விடுதலை கண்டான் ; கண்டு,
கன்னி மகிழ்ந்தாள், கடிமணம் புரிந்தாள் !
செல்வம் பெருகிய செட்டி மகிழ்ந்தே
"மனதிளந் செல்வர் இனிதுவாழ்" கென்றே
இல்லந் தந்தான் ; செல்வந் தந்தான் ;
கவலை யற்றுக் காதலர் நாளும்
புதுப்புதுப் போகம் புசித்தனர் ஆங்கே !
உலகை மறந்தார் ; உடலுக் கினிய
சுகமே நினைந்து, சுதியுடன் இசைபோல்,
இருவரும் அன்பால் ஒருவரே யானார் ;
கணமள வேனும் இணைபிரி யாமல்
கரையிலாக் காமக் கடல்குளித் தாரே.
துய்த்துக் காமந் துடைப்போ மென்னல்
அனலை நெய்யால் அணைப்பது போலாம்.
நினைவறப் புணர்ந்ததை நீக்குவோ மென்பார்,
புனலாற் புனலின் போக்கணைப் பவரே !
வேல்விழி தாக்கத் தோல்வியுற் றிணங்கிக்
காமத் தீயில் வேமும் மாந்தர்
எத்தனை போகம் துய்க்கினு மென்னே ?
அவர்நுக ரின்பம் அரைநொடி யின்பமே !
நில்லா யாக்கை நிகரவே, யதன்பால்
ஊறுங் காமமும் வேறுபா டுறுமே !
மாந்தர் ஆசை மண்டல மதனில்
விருப்பும் வெறுப்பும், விழைவும் சோர்வும்,
இனிப்புங் கசப்பும், எரிப்புங் குளிரும்
அலைகளைப் போலே ஆடிப் புரளும் ;
இன்றுநே சித்தவர் இன்னொரு நாளே
கொடும்பகை கொதிக்குங் கூற்றுமா வாரே.
காதலும் பொறுமையும் கலந்த நாகன்
என்னுஞ் செல்வன் இயற்றிய சூதால்
கேசியுங் காளனு நேசித் திருந்த
வாழ்விற் கலக்கம் வந்ததும் விந்தையோ ?
கூடலே யுவந்து நீடிய காதல்,
கூடல் சுருங்கி ஊடல் பெருகவே,
ஊடலி னூடே உரைகள் வளரவே,
உரைக ளுடனே குறைகள் கூறவே,
பேச்சுத் தடிக்கவே, பெண்ணணங் கொருநாள்,
"ஒழுக்க மென்னும் உயர்நல முடைய
செல்வன் அருமைச் செல்வி. யானே !

நீயோ, ஒழுக்க நிலைகெட் டலைந்து
கடுஞ்சிறை வருந்திய கள்வன்" என்றாள்.
"நானுன் கணவன், நீயென் மனைவி ;
என்னையா கள்வன் என்றனை பெண்ணே ?
பாதகி, உன்னைப் பழிவாங் குகிறேன்"
என்றுட் சினத்தால் எரிமனக் காளன்,
போலிச் சிரிப்பாற் பொழுதைப் போக்கிக்
காலம் பார்த்துக் கண்விழித் தானே.
உட்சினங் கொண்ட உறவெத் தனைநாள் ?
உதட்டு நேயமும் உட்சின முறுவலும்
புழுவுளே துளைத்த பழமெனப் போமே !
காளன் ஒருநாள், "கனியிளம் பாவாய்,
செல்வச் சீமான் செல்விநீ ; யின்றுன்
அணிமணி வரிசையாய் அணியுற வுலகின்
அரம்பைபோல் என்னுடன் அழகாய் வா வா"
என்றனன் ; சரியெனச் சென்றனள் பேதை !
காளனும், சரிகை கட்டித் தன்னை
மாரவேள் போலவள் மதித்திட நின்றான் !
குண்டல கேசியின் கோமள வனப்பைக்
கண்டு கள்ளக் களிநகை பூத்து,
"கண்ணே, அழகுக் கரும்பே, உத்தமப்
பெண்ணே, எனது பெருமட மானே,
துயர்ச்சிறை நீங்கித் தூக்கு மேடையைத்
தப்பினேன், போதி அப்பன் அருளால் !
ஆதலால், இன்றே அவனை வணங்கிப்
படையல் வைக்கப் பருவதச் சிகரம்
ஏறிச் செல்வோம், என்னுடன் வா"வெனக்
கூட்டிச் சென்றான் ; கோதைசென் றாளே !
மலைமுடி மேலே, மணாளர் சென்றதும்,
சிலைபோற் சற்றே சிந்தனை செய்து,
காதலன் முகத்திற் கடுமை காட்டி,
"கள்ளீ, நீயெனைக் கள்வன் என்றாய் !
ஆம்யான் கள்வன், அழகுச் செருக்கீ.....,
மண்டைக் கருவம் கொண்ட பேதையே !
கள்வன் இன்றுனைக் கொள்ளை யடித்துக்
கொல்வான், கொடுமனக் கசடீ" என்றான்.
தீப்பொறி பறக்கும் சினக்கண் உருட்டி
நிற்குங் கணவனைப் பொற்கொடி பார்த்தாள் ;
சற்றே கலங்கிச் சங்கடப் பட்டாள்.

பிறநதன் னுள்ளே பேசிக் கொண்டே,
"கணவனைப் பணிதலே கற்பிற் கழகாம் ;
தேவரீர் செய்க திருவுளம் ; ஆனல்,
என்னைக் கொல்லுமுன் என்னுயிர்க் கணவரே,
தம்மை யடியாள் மும்மை சுற்றி
வணங்கி நிற்கும் வரந்தர வேண்டும்"
என்றலும் ,கள்வன் இணங்கினன் ; அந்தக்
கள்ளியும் வலம்வரக் காட்டி, அவனைத்
தந்திர மாகத் தள்ளினள். அந்தோ......!
"புத்தா சரணம்......போதி நாதா,
வஞ்சனை செய்ய வந்தேன் ; என்னை
வஞ்ச நினைவே வதைத்தது ; செய்த
தீவினை, விளைத்தது திப்பயன் எனக்கே ;
மன்னித் துனது மலரடி சேர்ப்பாய்"
என்று காளன் இறைவனை நினைந்தே,
இருண்ட மடுவி லுருண்டு பயங்கர
மௌனப் பாழில் மறைந்தொழிந் தானே !
"தற்கொல் லியினை முற்கொன் றேன்" என
ஒருநொடி நகைத்தாள் ! மறுநொடி, "அந்தோ !
கணவனைக் கொன்ற கள்ளியா னேனே.
என்ன தீவினை யியற்றி முடித்தேன் ?
இந்த வினைப்பழி என்னை விடுமா ?
என்ன செய்வேன், எனது நாதரே ?
நானும் உம்முடன் ஏனிக் கணத்தில்
விழுந்துசா காமற் கழுந்துபோ லிருக்கிறேன் ?"
என்று கண்ணீர் இறைத்தாள் பேதை.
அந்தியில் புத்த நந்தி முனிவர்
புத்தசங் கத்திற் புகுவெனத் தூண்டினர்.
பிறகவள் உலகிற் பிறந்த பயனை,
அடைந்தே சாதல் அழகெனக் கொண்டாள்.
பிறந்தவ ரெல்லாம் இறந்து வினையாற்
பிறந்து பிறந்துயிர் துறந்துமண் ணுவார்.
சுற்றும் உலகில், சூழும் இயற்கையில்,
கற்றும் கேட்டும் கண்டும் பெற்ற
பொருளிற், செல்வ போக மதனில்,
எதுவே நிலையாம் ? எல்லாம் ஓட்டம் !
இன்றுளார் நாளை யில்லை யாவார் !
குழந்தை யிறந்து குமரி யாகிக்
குமரி யிறந்து குலமக ளாகிக்

குலமகள் தாயாய்க் குலச்சுமை தாங்கித்
தாயும் பாட்டியாய்த் தளர்ந்து தளர்ந்து,
புதைசூழிக் கிரையாய்ப் போய்மண் ணுவதே
உடலின் கதையாம் ! உயிரின் கதையோ.....
மனத்தி லடைந்த மாசுக ளெல்லாம்,
பற்றுய்ப் பெருகிப் பந்த தொந்த
விகாரமாய் வளர்ந்து, வெவ்வினை பெருகி,
சித்தமும் புத்தியுஞ் சிதைந்து கெட்டு,
மோகங் கொண்டு மூட மதியால்
ஆவியும் விடுதலை அடைவதிங் கிலதால்,
மீண்டும் கருமம் வேண்டும் பலனை
அனுபவித் தனுபவித் தயர்வதை எண்ணின்,
ஆஆ,..........துன்பம் ; ஆஆ,.......பிறவி........!
வேதனை தப்பி விடுதலை பெறவே
உடலையும் உலகையும் உள்ளே துறந்து,
அருளார் வாழ்வை அடைந்த சிலரே
உத்தம முத்தர் ! உற்றவர் வழியில்
செல்வேன் ; இந்தச் சென்மத் தொல்லையைக்
கொல்வேன் ! என்று குண்டல கேசி
ஆரியாங் கனைகள் அருகனை வணங்கும்
தவமடஞ் சேர்ந்துபின் சத்துவ போதராம்
புத்தர் சேவடி புகலெனப் புகுந்தாள்.
புத்த பிக்குணி, புனித விரதையாய்
மாசு மறுவற மனதைக் காத்துப்
புலன்களை யடக்கிப் புத்தியை வென்று,
வாழ்வை யெல்லாம் வன்றவ மாக்கினுள்.
வெயிலுடன் மழையும், வெப்புடன் குளிரும்,
பசியும் விருந்தும், பழிப்பும் புகழும்
சமமெனத் தாங்கித் தன்னூண் சுருக்கிக்
காற்றையே நோக்குங் கப்பலைப் போலே
உயிரைச் சார்ந்த உடலைப் போலே
சுத்த சித்தனும் புத்த தேவனின்
அருளையே சார்ந்து மருளை விலக்கினுள் !
திக்காய் பவர்புகைத் திங்கு நோக்கார் ;
நோயர் மருந்தின் கசப்பை நோக்கார் ;
சுடச்சுட நோற்குந் தூயவர் அதன்பால்
வருமிடர் நோக்கார் ; வருத்தம் பாரார் ;
நல்ல தாகு நலமே நோக்கார் ;
தீய தாகுந் தீமையே நோக்கார் ;

நலந்தி தந்து பொலங்கொள் சமதை
காக்குந் தாயர் கலையுறத் தவஞ்செய்
சங்க மெய்திய நங்கை கேசி,
வினைகெட, வினையின் விளையுளை கெடவே
ஆசா பாசம் அறுந்துக நோற்று,
மாசறு மனமும் தேசுறு ஞானமும்
பெற்றாள் ! புத்த பிரானையுங் காணப்
பெற்றாள் ! பிறப்பின் பெரும்பயன் யாவும்
பெற்றாள் !—பெரிய பிறவாப் பெருமையே !
கதையுஞ் சரியெனக் கடிந்தின மாவலி
இன்றொரு சூழ்ச்சியை எண்ணினன் மாதோ !

## 22. வளையாபதிப் படலம்

கொடுமனக் கணவரின் கோபப் புயலால்
சுந்தரி யனைய தூயநன் மாதர்
வருந்திய கவலை மாறிட வேண்டியே
சங்கங் கூட்டிச் சத்திய போகர்
வளையா பதியால் வருந்திய பத்தினி
கதையைச் சொன்னார் கவிக்குயி லெனவே !
சக்தியா ழிசையுந் தமிழைப் பருகவே.

வணக்கம்

நினைவாய் மனமே, நினைவாய் மனமே,
நினைக்க நினைக்க நெஞ்சினில் அமுதாம் !
இன்பக் கடவுளை, இன்னுயிர்க் குயிராம்
அன்புக் கடவுளை ஆர்வங் கொண்டு
நினைவாய் மனமே, நித்தலும்
போற்றிப் பூசனை புரிவாய் மனமே !
புறத்தே திரியும் புலன்களைத் திருப்பி
அகத்தே யடக்கி அமைதிகாண் பெரியார்,
வானும் புவியும் வாழ்வின மெல்லாம்
"அதுமயம்" என்றே அறியும்,
பொதுநிலைப் பொருளைப் போற்றுதி மனமே !
போற்றிப் பூரணம் பொலிவாய் மனமே !
சரண்புகு மனமே, சரண்புகு மனமே,
வரந்தரு இன்ற பரம்பொருட் சக்தியைச்
செல்வச் சிறப்பு நல்குந் திருவை,
வெற்றி யளிக்கும் வீரமா காளியை,

அறிவுந் திருவும் அருளும் வாணியை,
தவக்கன லலிக்குஞ் சிவக்கன லொளியைச்
சரண்புகு மனமே, சரண்புகு மனமே !
இஃது,
தன்சரண் புகுந்த தருமபத் தினியைக்
கருணை மிக்க காளிமா தேவி
அருளுரு வான ஔவையின் மூலம்
காத்துக் கவலை தீர்த்த கதையே ;
வளையா பதியாம் வயிர வாணிகன்
வளைந்து கற்பை வணங்கிய கதையே ;
மாண்புற வழங்கி மறைந்த கதையே ;
நல்லறஞ் சொல்லுந் தொல்பெருங் கதையே !
உலகுள் ளளவும் நிலவத் தமிழர்
அமுதெனப் பருகி அகமகிழ் வெய்த
வல்லான் எழுதிய நல்லசித் திரம்போல்,
காவிய மாகிய ஓவியஞ் செய்வாய் !
தெள்ளிய நடையும், ஒள்ளிய பயனும்,
ஆழ்ந்த கருத்தும் அமைவுறப் பாடி,
உள்ளன் புடனே உன்கடன் புரிய,
கடமையில் வெற்றி கண்டு களிக்க,
வளையா பதியின் மாகதை யிதனை
இறைவியை எண்ணி எழுதுகோல் ஊன்றித்
தீட்டுவாய் மனமே, நாட்டுவாய் புகழே !
திருவருட் சார்புடன் செய்கடன்
செய்தால் வெற்றி திகழுமென் மனமே !,

## காவிரிப்பூம் பட்டினம்

காவிரி வாழ்க, காவிரி வாழ்க,
காவிரி பசுமையாற் பூவளம் பெருக்கும்.
காவிரி வாழ்கவே, காவிரி வாழ்கவே !—
பொங்கும் பொன்னியின் சங்க முகத்திற்
பொலியும் செல்வப் பூம்புகார் வாழ்க !
பழம்பதி யான பட்டினம்....
புலவர் பாடிய பூம்பட் டினமே !
தென்னா டெல்லாந் தன்னா டாக்கி,
வடநாட் டாரை வணக்கி, இமயப்
பொருப்பின் பிடரிற் புலிக்கொடி பொறித்து,
நந்தமிழ் வீரரின் முந்திய பெருமையை
நாட்டிப் பகைவரை விட்டி, நன் னீதிச்

செங்கோ லோச்சிய திருமா வளவன்
ஆக்கிய வளநகர், அருநிதி
குவிந்து கிடக்குங் குபேரபட் டினமே !
கலங்கள் வருவதும், கலங்கள் செல்வதும்,
சோனகர், யவனர், சீனர் ஆதியாம்
அன்னிய வாணிகர், ஆற்றல் படைத்த
நந்தமிழ் வாணிகர் நயக்கும் பண்டம்
ஆவலாய் வாங்கிக் காவலன் வாழ்கெனப்
பொன்னை அள்ளிப் பொழியும் காட்சியும் ;
பன்மணி முத்து பவளந் தானியம்,
உண்ணும் பண்டம், உடுக்கும் உடைகள்,
நாட்டில் விளைந்தவை, வீட்டிற் செய்தவை,
துய்த்து மிஞ்சிய தூய பொருட்குவை
மரக்கல மேற்றி வளர்பொருள் வாணிகர்
துறைதுறை சென்று நிறைநிறை செல்வம்
கொண்டு வந்து குவிக்குங் காட்சியும் ;
நெய்தற் பறையி னிசை விக்கிப்
பரதவர் ஆடும் பரவசக் காட்சியும் ;
வெள்ளியும் பொன்னும் வெறிநடம் புரியும்,
கடைத்தெரு விடையே கலகல வென்று
வணிகர் வருவதும், வணிகர் செல்வதும்
வண்டி வண்டியாய் வளம்பெறு பொருள்கள்
கொண்டு வருவதும், கொண்டு செல்வதும்,
பண்டமாற் றுகளின் பல்வகைக் காட்சியும் ;
நவதானி யங்கள் குவிதரு காட்சியும் ;
"இறைதுணை ஒன்றே, இரண்டு மூன்" றெனவே,
அளந்து கொட்டும் ஆணவக் காட்சியும் ;
அணியணி யாகத் துணிமணிக் காட்சியும் ;
போகப் பொருள்களின் பொலிவுறு காட்சியும் ;
வாசனைச் சரக்குகள் வீசுநன் மணத்தைத்
தென்றல் அள்ளித் திரியுங் காட்சியும் ;
காலை வகையும் காய்கனி கிழங்கும்
பன்னிறங் காட்டும் இன்னியற் காட்சியும் ;
நவமணி வில்விடு நகையணிக் காட்சியும் ;
குழல்யாழ் மத்தளங் கொம்புகள் பறைகள்
இசைபெறு தமிழரின் இசைநலக் கருவிகள்
பளபளப் பான படைக்கல வகைகள்,
தச்சர் கொல்லர் தட்டார் சேணியர்
கன்னார் குயவர் காருகர் சிற்பிகள்

கலைச்சிறப் புடனே விலைபெறச் செய்த
நயம்பெறு பொருள்களை வியனுறக் காட்டி
விளம்பரஞ் செய்து விற்குங் காட்சியும் ;
திரைகட லோடியும் தேச தேசமாய்க்
கொண்டு விற்றும் கோப்பெரு வாணிகர்,
பாடு பட்டுப் பணத்தைச் சேர்த்து,
வீடு செழிக்க, வீட்டினும் பெரிய
நாடு செழிக்க நன்மன துடனே
அறவினை செய்யும் அன்புக் காட்சியும் ;
காலும் கலமும் கலையார் தொழில்பல
புரிந்து வணிகர் பொற்செழிப் போங்கி
வாழும் மாட மாளிகைக் காட்சியும் ;
உயிரைப் போலப் பயிரைப் போற்றிப்
பயிரைப் போலப் பழந்தமிழ் போற்றிப்
பழந்தமிழ் போலப் பழந்தமி ழீன்ற
பரமனை நாளும் பரவிப் பாடித்
தாளாண்மை மிக்க வேளாளர் தெருவில்
பத்தியும் பணியும் ஒத்தநற் காட்சியும் ;
அழகுக் கலைகளின் எழில்பெறு காட்சியும் ;
குழலும் யாழுங் குரலும் முழவும்
கூடிக் குழையக் குயிலின மென்னப்
பாடகர் பாடப் பரதநாட் டியந்தேர்
நாடக மகளிர் நறுங்கலை யின்பம்
அள்ளிப் பரப்பும் அரங்கின் காட்சியும் ;
கலைகளை மாணவர் கற்குங் காட்சியும் ;
அரியநன் னூல்களை ஆக்கிய புலவர்
படித்து விளக்கும் பண்டிதக் காட்சியும் ;
நடித்து விளக்கும் நவரசக் காட்சியும் ;
நாட்டை உயர்த்து நாடகக் காட்சியும்
இனிவரும் வீரர் இளமையி லினிதே
கல்வியுந் தொழிலும் கசடறக் கற்றுத்
தேகப் பயிற்சியுஞ் செய்யுங் காட்சியும் ;
அந்தணர் தெருவின் அமைதியாங் காட்சியும் ;
வளர் தமிழ்க் கொடிகள் வானை யளாவிச்
செருக்குடன் ஆடுந் தெருக்களின் காட்சியும் ;
முரசு கொட்டி முதுபுகழ் வீரர்,
அரசவாழ்த் துடனே, அதிர் நடை பயின்று,
பூமியை வெல்லப் புடைபெயர் காட்சியும் ;
தேர்பரி கரியினம் ஊர்திருக் காட்சியும் ;

இடம்வல மென்றே எடுத்தடி பெயர்த்துப்
படையணி வகுத்துப் பாய்ந்துபாய்ந் திளைஞர்
போலிப் போர்கள் புரியுங் காட்சியும் ;
ஆண்மை ஆண்மை ஆண்மையென் றோதும்
நிமிர்நடைச் சியர், நீண்டுயர் தோளர்
அகன்ற மார்பினர் அறங்காப் பாளர்
அரச வீதியை அணிசெய் காட்சியும் ;
முரசுடன் மேக முழக்கமு மியங்கும்
கோபுர மாளிகை நூபுர மார்க்க
அணிமணிப் பாவையர் ஆடுங் காட்சியும் ;
சோலையில் உலவியுந் தோணியிற் சென்றும்
காதலர் கூடிக் களிக்கும் காட்சியும் ;
சைவ வைணவ சமண பௌத்தக்
கோயிலில் அடியார் குழுமிய காட்சியும் ;
வீடு தோறும் விருந்தின் காட்சியும் ;
தோரணங் கட்டிய வாரண வீதியில்
தேர்வல முடனே ஊர்வலக் காட்சியும் ;
அரசவை நிகழும் அரண்மனைக் காட்சியும் ;
தாங்கி, நல்லிசை ஓங்கிய பூம்புகார்
சிறப்பென் சொல்வல் ! சேர மாகவி
இளங்கோ பாடிய வளம்பெறு நகரே !

## வயிர வாணிகன்

வீரர் வாளும், வேளாண் கலப்பையும்,
வணிகர் தராசும், வளஞ்செய் புகாரை,
வெண்குடை தாங்கிப் பண்புடன் ஆண்ட
சோழ னுக்குச் சுடர்முடி சூட்டும்,
மாண்பு பெற்ற மன்னர் பின்னோர்,
நாட்டை வளர்த்த நாட்டுக் கோட்டையார்,
நகர்வள மாக்கிய நகரத் தார்கள்,
*செட்டுத் தொழிலார் செட்டி மார்கள்,
திரைகட லோடித் திரவியஞ் சேர்த்து
நல்லறஞ் செய்யுஞ் செல்வக் குபேரர்,
புகாரை அவரே பொன்னுக் கினரே !
அவருள்,
பட்டினப் பாக்கம் பரவிய புகழோன்,
செட்டிமார் நாட்டின் சிரோமணி யாவான்,

* வாணிகம்

வளையா பதியெனும் வயிரவா ணிகனே !

அன்னவன்,

கொற்கை முத்தும், கொச்சி மிளகும்,
செந்தமிழ்ப் பொதியச் சந்தனக் கட்டையும்,
மதுரைச் சேலையும், மலைவளர் ஏலமும்,
சேலம் பட்டும், கூல வகைகளும்,
தொழிலா ளரிடந் தொகைக்கு வாங்கிக்
கட்டுக் கட்டாய்க் கப்பலில் ஏற்றி,
சிங்களம் கடாரம் சிங்கபூர் மலயம்
சாவகத் தீவெலா மேவித் துறைதுறை,
குலமுறைப் படிக்குக் கொண்டுபோய் விற்றுப்
பைபை யாகப் பணக்குவை சேர்த்தான் ;
சென்றநா டெல்லாம் சிவமுந் தமிழும்
செழிக்கச் செழிக்கச் செல்வம் பொழிந்தான் ;
பெருந்தன வணிகன், வருந்திய பேர்க்குத்
தருந்தன வணிகன், தருமக் கிழவன் ;
கடவுட் கோயிலுங் கலையின் கோயிலும்
எண்ணறக் கட்டிய புண்ணியன் அவனே !
"ஒன்பது கோடிப் பொன்படை நாரணன்"
என்றும் உலகில் இசைபெற் றேனே !
இத்தகை வணிகனுக் கிருந்த ஓர் குறை
குடிவேறு செய்யும் பிடிவாத மொன்றே ;
கேட்பார் பேச்சைக் கேட்டுக் கொண்டு
தனக்குப் பட்டதைச் சாதித் தெளிதில்
வளைந்து தராத மதியுடை யானாய்,
வளையா பதியென வழங்கப்
பெற்றான், இந்தப் பெரும்புக ழோனே !

## அந்தரி

வளமிகு வயிர வாணிக னுக்கு
வாழ்க்கைத் துணைவியர் வாய்ப்புடை இருவர் ;
ஒருத்தி அந்தரி ; ஒருத்தி பத்தினி.
இருவர் குணமும் எதிரெதி ராமே !
அந்தரி என்பவள் சுந்தரி ; தந்திரி ;
செல்வச் செருக்கி ; செட்டிச் சீமான்
ஈன்ற புதல்வி ; தான்றன தென்னும்
இறுமாப் புடையாள் ; எதிரே பேசும்
நாத்தடிப் புடையாள் ; ஆத்திரக் கள்ளி ;

வளையா பதிபோல் வளையா மனையே !
அன்பனை மனப்படி ஆட்டி வைக்கும்
சாகசக் காரி ; சக்களத் தியுடன்
முன்னே நகைத்து முகமன் பேசிப்
பின்னே ஏசிப் பிரிவினை செய்யும்
வஞ்சகி ; அவளிடம் வளையாச் செட்டியும்
அச்சங் கலந்தவள் அன்புகொண் டானே !

### பத்தினி

அந்தரி மிக்க சுந்தரி யேனும்
பிள்ளைப் பேறு பெறாமை யாலே
பொருந்துய ரடைந்து பூம்புகார் வணிகன்,
மற்றொரு மனைவியை மணக்க விரும்பினன்.
பெருஞ்சாத் துடனே பெயர்ந்தொரு நாளில்
பாண்டி மதுரைப் பதிக்கு வந்து,
நல்வே ளாள நண்பன் வீட்டில்
விருந்தாய் வயிரன் இருந்தான் மாதோ !
அந்த நண்பனின் அழகிய செல்வியே
பத்தினி என்னும் பதுமினிப் பெண்ணாம் !
அவளைக் கண்டதும், அவளுங் கண்டதும்,
மலர்ந்த கடைக்கண் கலந்து பேசிக்
கருத்துங் கருத்தும் பொருந்த முறவே,
காத லாகிய கனலெழுந் ததுவே !
தமிழர், சைவர், சமரச நண்பர்
சம்மதப் படியே தம்மன மொன்றிய
காதலர் இருவருங் கடிமணம் புரிந்து,
பூம்புகார் மேவும் பொன்மா ளிகையில்
மங்கல மான மனையறங் காத்தார்.
மாசறு நல்லார் மதுரைவே ளாளர்
மனையிற் பூத்த மதிமிகு நல்லாள்,
உள்ளத் தழகே உடலிற் பொலியும்,
கற்பிற் சிறந்த பொற்புடைத் திருவே !
தலைவனைத் தன்னுயிர் நிலையென மதித்தே,
உடலுயிர் மனந்திரு வுள்ளம் வாழ்வெலாம்
பக்தி யுடனே பதிக்கே யீந்தாள் ;
ஆடல் பாடல் அழகெலாம் அவனை
மகிழ்வித் திடவே மாசறப் பயின்றாள் !
“கண்ணே மணியே கட்டிக் கரும்பே,
அழகே அணியே ஆசை அமுதே,

மனிதரை மனிதர் கொல்லும் வாளரக்கப் போர்களேன் ?
மனிதரை மனிதர் தேய்க்கும் வஞ்சவாணி கங்களேன் ?
மனிதரை மனிதர் வீழ்த்தும் வன்மனக் கொடுமையேன் ?
மனிதரை மனிதராய் மதித்தினிது வாழுவோம் !

ஆணும் பெண்ணும் சரிசமான மாகவாழ்க வாழ்கவே,
அடிமை செய்யும் கட்டுகள் அனைத்தும் வீழ்க வீழ்கவே
மாணுறும் சுதந்தரம் மனிதவாழ்வில் ஓங்கவே
மண்ணும் விண்ணு மன்றல்கொண்டு மங்களம் பொலிகவே..

வீரமோங்க வீரர் தொண்டில் வெற்றியோங்க நாளுமே
சாரமான ஞானமோங்க சத்தியச்சொல் லோங்கவே
தீரமான சிந்தை யோங்கத் தெய்வசக்தி யோங்கவே,
பாரிலுண்மை யோங்கவே பணிபுரிய வாருங்கள் !

பண்புடையும் சுந்தரி யிசைமுழங்கிச் செய்திடும்
தொண்டுடன் ஜனங்களின் சுதந்தரக் கிளர்ச்சியும்
கண்டிலங் கலங்கினன் கறுத்துளஞ் சினந்தனன் ;
பெண்டிலங்கம் பேதையல்ல பேயெனப் பிதற்றினன்.

அலகிலாத காதல்கொண்டென் ஆசைபெற்ற சுந்தரி,
நலமெனக்குச் செய்தலென்று நாட்டையே கிளப்பினள் ;
கலகக்காரச் சுந்தரியைக் கைதுசெய் தடக்குமின் ;
கலகம் இன்னும் ஓங்கிடிற் கனல்வெடியை வீசுமின்...

மாவலியிவ் வாறுசொல்லி வாயைமூடப் பேயரும்
தாவி யோடிச் சுந்தரி தனித்திருந்த வேளையில்,
வாவென வளைத்தனர் தளைத்தனர் சிறைக்குளே
போவெனப் புகுத்தினர் வலுத்த பூட்டுப் பூட்டினர்.....

வீறுகொண்ட செல்விக்கோர் குறிப்பினை விளக்கியே,
நீறுகொண்ட தீயென் றன்னை நீள்சிறை யிருப்பினும்,
மாறுகொண்ட ஊணரின் வலியசேனை தாக்கினும்
மீறுகின்ற நல்ல கால வேகத்தைத் தடுக்கவோ ?

# 25. சக்தி யெழுந்த படலம்

தாமெனும் அகந்தை கொண்டு தன்னிலை மீறிச் செல்லும்
தாமத வரக்கர் தம்மைத் தரும தேவதை வதைக்கக்
காமமும் பொன்னு மண்ணுங் காட்டியோர் வெறியை யேற்றிப்
பூமியின் பாரந் தீர வீழ்த்திடும் பொறுமை யென்னே !

அறவழி கிளர்ச்சி செய்யும் ஆன்மநே யர்க ளைத்தன்
மறவழிப் படையி னாலும் வன்சிறை யிடுத லாலும்,
அறவழித் திடுவேன் என்னும் அரக்கனைச் சுற்றி மற்றோர்
பொறைவழிக் கிளர்ச்சி வந்து புந்தியைக் கலக்கிற் றம்மா !

ஒருவரை வாயடக்க ஊரெலாம் வாய்திறக்க,
ஒருவரைச் சிறையடைக்க ஊரெலாம் சிறைமுன் நிற்க,
ஒருவரைச் செயல டக்க ஊரெலாம் செயலெழுச்சி
பெருகிய தமுத சக்தி பேசிய திறத்தி னாலே.

படபடத்தளிர்ப்போம்;யார்க்கும்பயமின்றியுண்மைசொல்வோம்,
அடக்கிடு முறைக ளாலே அகக்கனல் அடக்கு வாரோ ?
சுடச்சுடச் சினந்திட் டாலும், சுடச்சுட நியாயம் சொல்வோம்,
திடக்கருத் துடனே தொண்டர் தீமையை யெதிர்த்து வெல்வோம்.

செய்வகை யறிந்து செய்து, செயமுழக் கத்தி னூடே
இவ்வகை சக்தி செய்யும் இனியநற் கடமை யெல்லாம்,
உய்வகை யறியா ஊணன் உள்ளத்தை வெதுப்ப, மிக்க
வெவ்வகை யாலே தொண்டர் வேகத்தைஒடுக்கப் பாய்ந்தான். 20

கூச்சலைத்தடுத்தான்; அன்பர்கூட்டத்தைத் தடுத்தான் ; அன்னார்
பேச்சினைத் தடுத்தான்; மெய்யன்பெயரையுந் தடுத்தான்;கைகள்
வீச்சினைத் தடுத்தான்; பெண்டிர்வெளிவரத் தடுத்தான்; இந்த
ஏச்சினைப் பொறுத்தி டாதார் இனுமினுங் கிளர்ச்சி செய்தார்...

உட்சினம் பொங்கி ஊணன், உத்தமத் தொண்டர் கூடிக்
கட்கடை மறித்த போது, கட்குடிச் சட்டம் போட்டான் ;
வெட்கமி லாத போக சாலையை வெறுத்தோர் தம்மை.
உட்கிட நாணம், ஆடை உரிந்தவ மானஞ் செய்தான்.

"இடும்பைசெய் கொடுங்கோ லிங்கே ஏ"னெனக் கேட்ட நாவைத்
தடிந்தனன்; அவமானத்தைத் தடுத்தவர் கையைக்கொய்தான்
ஒடுங்கிடா தின்னும் ஊருக் குதவியோர் செல்வ மெல்லாம்
கடும்புய லென்ன வாரிக் கவந்தன்போல் விழுங்கி னானே !

தெய்வத்தைத் துதித்த நாவைத் தீயினாற் சுட்டான் ; யாரும்
சைவநல் லுணவைப் போற்றிற் சாம்பிணக் கூட்டி லிட்டான்.
துய்யகற் பொழுக்கம் பேசிற் சுரிகையை வயிற்றில் வைத்தான்.
வெய்யவன் வெம்மையாலே விளைந்தன தொல்லை யம்மா !

சக்தியின் அறிக்கை

கெடுக தீங்கெனக் கிளர்ந்தனள் சக்தி!
"தந்தையே உனது சிந்தையை மாற்றாய்.
அகில வுலகெலாம் அரக்கனென் றுன்னை

அஞ்சி வெறுக்கும் அடக்கு முறைகளும்,
சித்திர வதையும், சிறைசெய் வதையும்,
சன்மார்க் கிகள்படுஞ் சாற்றொணாத் துயரும்,
இனியார் பொறுப்பார் ; இன்றுநீ மெய்யனை,
போகனை அன்னையைப் புனிதமெய் யன்பரைச்
சிறைவிடு வித்துக் குறைதீர் ; இன்றேல்,
மகளாய்ப் பிறந்த மாசினை வருந்தி
உண்ணா திறப்பேன் ; எண்ணாய் உறுதி.
இறந்து மீண்டும் பிறந்து, பிறந்து,
அரக்கர் கொடுங்கோல் அழியவே வாழ்வேன்....
இரக்கமில் லாமல், இன்ன லிழைப்போர்
புலியினுங் கொடிய விலங்குக ளன்றி,
மானிட ரென்று மதிக்கப் பெறுவரோ ?
நல்லது சொல்லினும் அல்லலே செய்வோய்,
உலகை வருத்தும் உன்மக ளென்றே
என்னைக் கருதேன் ; அன்னை சுந்தரி
உயிரே என்னுயிர் ; உபவா சத்தால்
உடலை விட்டுன் கடனைத் தீர்த்துப்
புண்ணியப் பிறவி நண்ணியிவ் வுலகில்
சுத்தசன் மார்க்கத் தொண்டுசெய் வேனே...."
என்றிவ் வறிக்கை ஈந்ததும், சக்தி
சிறைச்சா லைக்கெதிர் செழிவன மிருந்து,
அசுரக் கொடுமை அடங்கி யுலகில்
அறவோர் வாழவே இறைவனைத் துதித்தாள்.
தொண்டருங் கூடித் துதித்துநின் றாரே.

கண்டனன்அறிக்கைவெய்யோன்;கருணையுஞ் சினச்செருக்குங்
கொண்டனன்; மனது சற்றே குழைந்துதுன் மதியின்சொல்லால்,
"பெண்டிரின் பிடிவாதத்தைப் பேயெனத் தகர்ப்பேன்" என்றே
அண்டையி லிருந்த ஊணர் ஆயுதம் எடுக்கச் செய்தான்...

சட்டமுஞ் சாய வில்லை, தண்டனை பலிக்க வில்லை,
கொட்டமும் அடங்க வில்லை குமாரியும் அடத்தி னாலே
பட்டினி கிடந்தால், இன்னும் பரிவுடன் கிளம்பு வார்கள் ;
சுட்டவர் வீழச் செய்வீர், துபாக்கியே சக்தி யென்றான்.

மனத்தினைக் கொள்ளை கொண்டாள் ; மகளெனப் பொறுத்தி
ருந்தேன்.
இனத்தினைக் கொள்ளைகொண்டென் இலட்சியந் தனையெதிர்த்துச்
சனத்தினைக் கிளப்பி நாளும் சங்கடஞ் செய்தென் வெய்ய
சினத்தினைக் கிளப்பி விட்டாள் சேயெனக் கருத லாமோ ?

இனவலி குறைந்த தேனும், இரும்புண்டு, கனலு முண்டு
சினவலி யுண்டு சேனைத் திரளுண்டு சட்ட முண்டு ;
மனவலி படைத்த தொண்டர் மாண்பினைக் காண்போம் என்றே
கனவலி யரக்கர் தம்மைக் கடிதினில் ஏவி னானே....

## சக்தியின் விரதம்

பூரண யோக சக்தி புண்ணிய ஞான சக்தி,
ஆரண நாத சக்தி, ஆத்தும நேய சக்தி,
வீரரின் விஜய சக்தி விளங்கருட் கதிர்கள் வீசும்
பாரத சக்தி யான பரிதியை நினைந்தாள் சக்தி....

இழிதரு கொடிய வாழ்க்கை யின்றியித் தானவர்கோன்
பழிதரும் பாப மின்றிப் பரிவுறத் திருந்து மட்டும்,
அழிபசிக் கன்னங் கொள்ளேன் ; அறிதிரென் றன்புச் சக்தி
செழிதரு சோலைவீட்டிற் சிறையெதிர் தவமி ருந்தாள்.

கன்னிநீ குடும்ப வாழ்விற் கால்வைக்கும் பருவந் தன்னில்,
என்னநீ செய்கின் றுயென் இணைவிழி மானே, உன்றன்
பொன்னனி வாழ்க்கை யெங்கே ? புன்னகை யின்ப மெங்கே ?
இன்னலே னென்று தந்தை இளகிய மொழியுஞ் சொன்னான்.

அன்னையை, போக மெய்யர் அன்பரை விடுவித் தெங்கள்
இன்னியற் கலைமு யற்சிக் கிடந்தர வில்லை யாயின்,
அன்னமும் வேண்டேன் உன்றன் அருமைநன் மகளா மென்றே
இன்னமும் வாழ வேண்டேன் என்றனள் உறுதி கொண்டே.

பித்தினைத் தணிப்பேன் என்றே பெரும்படை காவல் வைத்து,
மத்துறு தயிரைப் போன்று மனமலை யரக்கன் சென்றான்...
சக்தியின் விரதத் தாலே தானவன் கொடுமை கண்டு
மொய்த்தனர் மக்கள் ஆட்சி முறையினைக் குறைசொன்னாரே.

இனியநல் லன்னை பெற்ற மகளிவள் ; இனிய நல்லாள்,
கனிநகைச் செல்வி யார்க்குங் கருணையே காட்டு நீராள் ;
பனிமொழிப் பாவை தெய்வப் பாசுரம் பாடி யெம்மைத்
தினம்பர வசப்ப டுத்துந் தேவியெம் ஆவி யன்னாள்.

பதிதரின் பாப வாழ்வைப் பக்குவ மாகப் போக்கிக்
கதிதர வந்த மெய்யர் கடுஞ்சிறை தவிப்ப தாமோ ?
மதிமிகும் அழகி யிங்கே வருந்திடக் காண்ப தாமோ ?
துதிமிகு சக்தி வாட நாங்களுந் துய்ப்ப தாமோ ?

எங்களுக் காக நல்லோர் இடர்ப்படு கின்றார் ; யாங்கள்
வன்கொடு நெஞ்ச ராக மறங்கொண்டு வாழு வோமோ ?
என்கொடுந் தடைகள் வந்தும், இயற்றுவ தியற்றித் தீர்வோம்.
தங்கடன் அறிந்த தொண்டர் உயிர்தரத் தயங்கு வாரோ ?

காய்சின வரக்க ரெம்மைக் கழுத்திலே கல்லைக் கட்டிப்
பாய்திரைப் படுத்திட் டாலும், பரனருள் உண்டு ; காக்கும் ;
வாயினை யடைத்திட்டாலு மனதினை யடக்க லாமோ ?
நாயகன் பணிசெய் வாரை நாத்திகங் கெடுப்ப துண்டோ ?

சொல்வன சொல்லி யெம்மைச் சுதந்தர வாழ்வில் உய்த்த
நல்லவ ருக்கே ஆவி நல்கிடக் கடமைப் பட்டோம்
அல்லலிற் கைகொ டுக்கும் அன்பர்காள் வம்மி னென்று
கல்வியிற் பெரிய தொண்டர் கங்கணங் கட்டி வந்தார்.

சுந்தரி பெற்ற செல்வி "சுதந்தர விறு பெற்றீர்,
பந்தனை விழத் தீவின் பாபங்கள் ஒழிய வேண்டி,
நிந்தனை யற்ற தூய நெறியொன்றே பற்றி, நல்ல
சிந்தனை யுடனே சேர்ந்து செய்வன செய்வ" மென்றாள்.

வருத்திடுந் தந்தை வாழ்வின் வசைகளை மாற்ற வேண்டி,
மருத்துவன் சுரிகை போன்று வன்கடன் புரிந்து மெல்லத்
திருத்திட வேண்டித் தெய்வத் திருவரு ளிறைஞ்சு கின்றேன் ;
பொருத்தமாம் கடமை யெல்லாம் பொறையுடன் புரிகு வீரால்.

சந்ததம் அன்பர் தம்மைத் தளர்வறக் காக்கும் சக்தி,
அந்தராத் துமனுய் நம்முன் அனலென உயிர்க்கும் சக்தி,
வந்திருந் தேகுந் தேக வாழ்வினைக் கடந்த சக்தி,
முந்திருந் தாண்டு நம்மை முன்செல நடத்துங் காணீர்...

வெய்யரை வெம்மை யாலே வெதுப்பிநல் வழிக்கு மாற்றிச்
செய்யரைச் செம்மை யாலே சீர்வழி நடத்தி யென்றுங்
கையினிற் பலனை நல்கிக் காத்திடுங் கடவு ளுண்டு,
பையநந் தூய உண்மைப் பணிக்கது வெற்றி யீமே.

தெள்ளிய நல்லோர் செய்த தியாகமே உலக மாந்தர்
உள்ளினை மாச கற்றி உயர்நிலை சேர்க்கு மென்பார் ;
ஒள்ளிய தாயின் அன்புத் தியாகமே ஓங்குஞ் சேயாம் ;
வெள்ளத்தின் ஈகையேநல் விளைபயி ராவ தாமே.

கலகமில் லாது நெஞ்சக் கசப்புமில் லாது, மெய்யன்
பலமுறை சொல்லிச் செய்த பணியினைத் தொடர்ந்து செய்வீர்,
நலமுள வாய்மைத் தொண்டு நாப்பறை யின்றி யிந்த
உலகெலாம் பரவி, மாந்தர் உயர்வுற வாழ்வ தாமே !

எல்லையில் இடர்கள் வந்தும், எதிர்ப்புகள் எதிர்த்து வந்தும்,
தொல்லைகள் வளைத்து வந்துஞ் சுதந்தர வீரர் அஞ்சார் ;
சொல்லறுஞ் சுத்த சக்தி துணையென நம்பி வாழ்வார்
வெல்லுவ துறுதி யென்றாள் விரதமேற் கொண்ட தூயாள்.

இன்னவை சொன்ன பின்னர் இணையறு சக்தி யாங்கே,
புன்னகை செய்த டங்கிப் புனிதனைத் தியானம் செய்தே,
தன்னகங் கொண்ட பக்தி பரவசந் தவழ யாழில்
இன்னிசை மீட்டி "யுன்றன் இச்சையைப் புரிவா" யென்றாள்...

சுத்த கானம்

பளிங்கெனத் தெளிந்த உள்ளம் பளிச்சிடுந் திருவே போற்றி
இளங்குயில் போலென் னுள்ளே இசைத்திடு மறையே போற்றி !
வளங்கெழு வசந்தம் போலே வந்தெழில் காட்டு கின்ற
களங்கமில் லாத தூய கருணையே போற்றி போற்றி !

பலபல பான்மை யாகப் பயின்றுயிர்க் குயிராய் மேவி,
உலகியல் ஆடல் செய்யும் ஒருபரன் அருளே போற்றி,
இலகொளி விளக்கே போன்றென் இருள்கடிந் தின்ப மீந்தாய்-
விலகற நின்றாய் உன்னை விலகியான் வாழ்வ தாமோ ?

செங்கதிர் உதயம் போன்ற திருமுகப் பொலிவு கண்டேன் ;
எங்குமே வளைந்த வான்போல் இடமுறு ஞானங் கண்டேன் ;
மங்கல மலரைப் போன்ற வசனத்தை என்னு ளேநீ
தங்கமா மணியைப் போலே சாற்றிடுஞ் சமர்த்துங் கண்டேன்.

உந்தையில் உன்னைக் கண்டேன், உருகியுன் அன்பு மேவும்
சிந்தையில் உனது சிந்தை செழிப்பதை நிதமுங் கண்டேன்.
தந்தனன் உனக்கே என்னைத் தனிப்பெருங் கருணை வள்ளால்
வந்தெனை வழிந டத்தாய், வாய்மனங் கடந்த தூயா !

துன்பங்கள் கோடி யென்னைத் துண்டுதுண் டாக்கி னாலும்,
கன்மபா சங்க ளென்னைக் கட்டியே யிடர்செய் தாலும்,
பொன்பெணென் றலையும் ஊணர் போர்ப்படை எதிர்நின் றாலும்
அன்புடன் உனையே போற்றி அச்சத்தை மாற்று வேனே !

எனதியான் எனுஞ்செ ருக்கை இகல்செயுஞ் செருக்கைப் பூமி
தனதெனக் கொடுமை செய்து தருமத்தைச் செகுசெ ருக்கை,
மனதினில் அடர்ந்த மோக மாயப்பேய்ச் செருக்கை நீக்கி,
இனமொன்றாய் உலகோ ரெல்லாம் இன்புற வாழச் செய்வாய்.

அண்டிய பொன்னும் வேண்டேன், அமுதினும் இனிய தாகும்
உண்டியும் வேண்டேன் ; எந்தை உவந்தளி புலகும் வேண்டேன்,
எண்டிசை யினிலும் அன்பும் இரக்கமும் தூய வாழ்வும்
பெண்டிரின் கற்பும் வெற்றி பெற்றிட விரும்பி னேனே...

பெருமிதச் செருக்கி னாலே பேயெனப் போர்தொ டுத்துத்
தருமமே வடிவ மான சத்திய நாட்டைப் பற்றித்
திருவெலாம் அழித்துத் தீமை செய்திடும் அசுரமாய
இருளினைத் தவிர்க்கச் சக்தி யிரவிபோல் எழுக தூயன் !

வெல்லுக சுத்த னிச்சை, வெல்லுக சுத்த சங்கம்,
வெல்லுக சுத்த யோகம், வெல்லுக சுத்த தர்மம்,
கொல்சம ரொழிக ! காமக் கொடுமைகள் ஒழிக ! நாளும்
பல்குக நன்மை நாளும் பரிதியின் கதிர்கள் போலே !

செவ்விய யாழுடன் சேர்ந்தி சைத்திடும்
திவ்விய கானமும் செய்ய சக்தியின்
துவ்விய சாந்தமுந் துணிவுங் கண்டவர்
வெவ்வியல் அரக்கனை வெறுத்தெ ழுந்தனர்.

கூட்டங்கள் கூடினர், கூச்ச லிட்டனர்,
தீட்டினர் அறிக்கைகள் தினமு மாவலி
போட்டிடுஞ் சட்டத்தைப் பூவென் றூதினர் ;
மாட்டிய விலங்கினை மகிழ்வொ டேற்றனர்.

கறைபெறு வாளரின் கடுமை யிதெனக்
குறைகளைக் கூறினர்; குடியுங் கூத்தியும்
புரையெனப் புகன்றனர் ; புலாலைக் கண்டித்தார் ;
சிறையிரு ளிடரிலுஞ் சிரித்து வாழ்ந்தனர்.

அரசனுக் குதவிடும் ஆட வர்களை
விரசரென் றரிவையர் விலகி நின்றனர் ;
சரிசம உரிமையைத் தருக வென்றனர்
வரிசையாய் ஊர்வலம் வந்து பாடினர் :

அடிமைசெய் ஆட்சியை அடக்கி வீழ்த்துவோம்,
கொடுமைசெய் கோலினைக் குமைத்து நாட்டிலே ;
மடமையும் வறுமையும் மறைந்து, மாந்தரின்
கடமையும் உரிமையுங் காக்க வாழுவோம்....

வீரங்கொள் அன்பரின் வேகங் கண்டனன் ;
காரங்கொள் அவுணனிக் கருணை யாளரைப்
பீரங்கி யாற்சுடப் பெரிய ராக்ஷஸப்
போரங்கிப் படைகளைப் போவி டுத்தனன்.

விடுதலை யென்கிற வீணர் கூட்டத்தைச்
சுடுமினென் றரக்கனுஞ் சுடரத் தீவிழி
இடிகுர லார்த்தனர் ; "இன்றுடன் அவர்
பொடிபடு வாரெனக்" குண்டர் போந்தனர்.

அஞ்சறு தொண்டர்கள் அஃத றிந்ததும்,
மிஞ்சிய துடலென வீறு கொண்டுளே
தஞ்சமென் றிறைவனைச் சரண்பு குந்தனர்
நெஞ்சுரங் கொண்டுமுன் னின்று பாடினர்....

"நாளுறச் சுழன்றிடு ஞால வட்டத்தை
ஆளுறும் ஆண்டவன் ஆள நின்றனம்.
கோளுறு வஞ்சமுங் கூற்றும் அஞ்சிலோம் ;
தோளுயர் வீறுடன் றொண்டு செய்வமே....

நல்லதைச் செய்திட நாடுந் தூயவர்,
அல்லல்செய் அரக்கருக் கடிமை யாவரோ ?
கொல்கணை யாலெமைக் கொடுமை செய்யினும்,
சொல்லரும் பணியினிற் சோர்வுண் டாகுமோ ?

கடக்கருந் தருமத்திற் கருத்தை வைத்தவர்,
அடக்கிடு முறைகளால் அடங்கிச் சோர்வரோ?...
திடக்கருத் துடனின்று செய்வ செய்குவோம்...
இடர்க்குலம் வருகநம் எதிரில் என்றனர்..."

"கடவுளென் றின்னமுங் கதறு மூடர்காள்
அடிபணிந் தெம்மிறை அன்பை யெய்துமின் !
படியிரேற் பீரங்கி படபடத் துமைச்
சுடு"மெனச் சுட்டனர் ஊணர் சொல்லுடன்.

அந்தகோ அந்தகோ ! அநீதி யென்றங்கே
சுந்தரி மகளொரு சுடர்மின் னென்னவே
"வந்தனள் எனைப்பலி வாங்கிப் பின்னரே
இந்தநல் லன்பரைத் தொடுவிர்" என்றனள்.... 240

வாரமைந் துணவற வாடு மேனியள்,
சீரிய சுத்தனைச் சிந்தை செய்பவள்.
பீரங்கி முன்னவள் பதும பீடத்தில்,
தீரமொ டமர்ந்துளே ஜெயசுத் தாவென்றே.

அன்பரைக் காத்திடும் அன்பு வள்ளலே,
துன்பத்தைத் துடைத்திடுந் தூய நண்பனே,
உன்பரம் உன்பரம் ! உண்மை நீயெனில்
என்பயம் இரும்பிற்கும் இடிக்கும், கூற்றிற்கும்....

சுத்தஓம் என்றெதிர் துணிந்த மர்ந்திடும்
சக்தியைக் கண்டதுந் தான வர்களும்
எத்தகைப் பாதகம் இயற்றி னோம்என
மெத்தவுந் திகைத்தனர் விலவி லத்தனர்...

சுடுவெனச் சொல்லவுந் துணிந்த சொல்லிலார்,
சுடவுங்கை வணங்கிலர் தூய சக்தியை
அடிபணிந் திடவெனில் அரக்கன் ஆணையே
இடைநிற்ப தென்பதை இன்னுஞ் சொல்வதென்?...

இத்ததி அதிசயம் என்ன சொல்லுவேன்,
பத்திடி போலிரு பறவைக் குண்டுகள்,
பொத்தென விழுந்தன புகையுந் தீயுமாய்
எத்திசை மருங்கினும் எழுந்த தம்மவோ !

விர்ரெனப் பறந்தன விமான ராசிகள்,
கிர்ரென விழுந்தன கிளர்ச்சி தூண்டுதாள்.....
பர்ரெனப் பாய்ந்ததைப் படித்த வர்தமை
உர்ரெனத் தானவர் உடன்வி லக்கினர்....

எழுந்தனர் ஆத்திரம் ஏறித் தொண்டர்கள்
அழுந்திருட் புகையினில் அடக்க மாகவே,
பழஞ்சிறை யுடைத்தனர் ; பாது காவலர்
குழம்பினர் கூவிடக் குரலும் அற்றனர்.

வாழிய சக்தி யென்றே வந்தனர் அன்ப ரெல்லாம் ;
சூழுறுஞ் சிறையைக் காணர்....சுவரிடி மண்ணே கண்டார்...
ஏழிடி போல வாங்கே இறைந்தொரு விமானம் வந்து
பாழ்படுந் தானவர்கள் பற்றுமுன் விரைந்த தம்மா !

மல்லர்காள், அனலன் சாக வான்வெடி வீசிடுங்கள் !
செல்லுங்கள் விமானந் தன்னிற் செருங்களப் பகைவர் தம்மைக்
கொல்லுங்கள் ! அழகி சக்தி மெய்யனின் கூட்டம் யாவும்
வெல்லுங்கள் ! போர்போர்'' என்றே வீறிட்டான் அரக்க னுங்கே !

மெய்யனுங் காண வில்லை, மெல்லிய சக்தி யில்லை ;
செய்யசுந் தரியு மில்லை, சிரிய போக னில்லை ;
துய்யநற் றெண்ட ரில்லை, துணிவுள சனங்க ளெல்லாம்,
''வெய்யவ உன்ற னுட்சி வீழ்'' கென வீறி னரே....

புரட்சியோ புரட்சி யென்று பொங்கினன் ஊனர் கோனும்,
திரட்சிகொள் படையுந் தன்னைத் திசைதிசை எதிர்க்கக் கண்டான்,
மருட்சிகொள் அரக்கன் முன்னே மற்றொரு நீள றிக்கை
வெருட்சிதந் திட விழுந்த விந்தையென் சொல்லுவேனே !

கண்டனன் அறிக்கை தன்னைக் கனலினுஞ் சினந்து ''தம்பி
கொண்டவெம் பகையைச் சேனை கொண்டெதிர்த் துடனே யிந்த
மண்டலம் அஞ்சப் போர்செய் மனவெழுச் சியுடன் வீடு
சென்றனன் ; அமைச்சர் கூடிச் செய்முடி பறிகு வோமால்...

போர்விமா னங்கள் எங்கோ போயின ; மின்னி டித்துக்
கார்மழை பொழிந்த தன்பர் காரியக் கூட்டங் கூடி
ஊரினை யமைதி யாக்க உற்றநன் முடிவு செய்தார் ;
சீரெலாம் ஒற்றர் செல்லத் தெரிகுவோம் சபைக்கு வாரீர்...

# 26. இடி முழக்கப் படலம்

துன்மதி நாசன் வெள்ளி தூமகே துவுடன் கூடிக்
கன்மதி யரக்கன் போரின் காரணங் கதைக ளெல்லாம்,
பன்முறை ஆய்ந்த பின்பு பாய்புலி யெனவெ ழுந்து
தன்மதி கொண்ட தெல்லாந் தடதட வெனப்பு கன்றான்.

மாவலி பேச்சு

மந்திரி மணிகாள் வந்தது வெம்போர் !
ஆணவத் தம்பி நாணிக் குனியக்
கப்பலும் பறவையும், கடுவூர் திகளும்,
நாசகா ரிகளும், வீசு வெடிகளும்,
பறக்கும் வெடிகளும் படுகண் ணிகளும்,
கணக்கறச் செய்து களங்கண் டிடுமின்.
பதினாறு முதலறு பதுவரை ஆண்பெண்
அனைவரும் படையணி யமைந்திடச் சேர்கவே !
என்னே கொடுமை ! என்னுடன் பிறந்தான்—
போட்டி போட்டுப் போருந் தொடுத்தான்.
அறிவிப் பின்றி ஆகா யப்படை
குண்டு வீசக் குறித்தான் !....எனது
பளிங்குமா ளிகையிற் பறக்கும் வெடியைக்
கணக்கா யெறிந்த காரணம் அறிந்தேன்.
எனக்கே உலகென் றிருக்கச் சிறுவன்
தனக்கே உலகெனத் தாவிக் குதித்தான்....
மெய்யன், புண்ணியத் துய்யனைப் பெற்றோன்
என்னை வீழ்த்தவே இங்குவந் தானும்.
பாடகன் அவனும், பதகன் அவனை
வெட்டி யிருப்பேன் ; வீணை தடுத்ததே.
கலைசன் மார்க்கம் கடவுள் என்றிப்
போலிகள் அனலன் பொம்மைக ளாகி,
இங்கே நடப்பதை அங்கே சொல்லி,
நமதர சிற்கே நமராய் முளைத்தார்.
இந்தக் கயவன் இரக்கத் தாலே,
நல்லவர் வாழவே நாடுகின் றானும்.
போக மெய்யர் புண்ணிய வாளராம்,
தந்திரக் கொடியாள் சுந்தரி தன்னைச்
சிறையி லிட்டதும் செல்வியாய் வந்த
சாகசி பட்டினி சாதித் ததுமே,
பொதுஜனம் புரட்சி புரிந்தகா ரணமாம்.

ஜனவுரி மைக்கே மனமுடன் உதவப்
போர்தொடுத் தானும். பொய்யன், எனது
நாட்டிலே விடுதலை நாட்டி விடுவனும்.
திட்டிய கத்தி திப்பிடித் ததுவே !
வஞ்சந் தீர்க்கிறேன், வா வா தம்பி....
போர்பத் தாண்டுகள் புரிந்திடத் தக்க
உணவும் படையும் உரமும் உண்டாம்....

* * *

காண்போம் ! இனியேன் வீண்பேச் சிங்கே ?
தறுகண் மிக்க தானவப் புலிகாள் !
என்பெரு மைக்கே இன்னுயிர் வாழ்வீர்,
என்னையே வணங்கும் இன்னிய தொண்டர்காள்,
செல்லுமின் ! உலகெலாம் செல்வம் கொணர்மின்.
கொள்ளை யடித்துக் கொணர்மினே பொருளை....
வாணிகக் கொள்ளை, வழிப்பறிக் கொள்ளை,
புத்தகக் கொள்ளை, புரோகிதக் கொள்ளை,
இயந்திரக் கொள்ளை இசைநடக் கொள்ளை,
நாடகக் கொள்ளை, நாரியர் கொள்ளை
பலவழிக் கொள்ளையாற் பணமும் உணவும்
கொண்டுவந் திங்கே குவிப்பீர், குவிப்பீர் !
புண்ணிய பூமியிற் பொலியும் வளமெலாம்
சுரண்டிக் கொணர்மின் ; இரண்டுநூற் றாண்டு
போர்நடந் தாலும் ஓர்துய ரில்லையே.
அமெரிக் காவின் அளவறு நிதியை
அள்ளிக் கொணர்மின், ஐரோப் பாவின்
இயந்தி ரங்களை எடுத்துக் கொணர்மின்,
ஆப்பிரிக் காவின் அணிமணிப் பொன்னைக்
கப்பல் கப்பலாய்க் கரந்து வம்மினோ ?
எங்கே தம்பி ஏற்றம் பெற்றான்
அங்கே அவனை அடக்கப் பார்மினோ!...
என்று மாவலி இடிமுழக் கிடவே
அதுசரி என்றனர் அமைச்சர்க ளாங்கே.
மாவலி யமர்ந்ததும் வக்கிரன் வந்து,
"மன்னா சர"ணென வணங்கிநின் றானே !
"வருக வக்கிரன் வையச் செய்தி
தருக" வென்னத் தானவர் கோமான்,
செவிக்கொள வென்னச் செகவிவ காரம்
கொட்டி யளந்தான் கோளுக் கரசனே !

வக்கிரன்

வையக மாந்தர் "மாவலி" யென்றால்
வெய்யவன் உயிரைக் கொய்பவன் என்பார்....
எங்குமுன் கொள்கை, எங்குமுன் கொள்ளை
எங்குமுன் அச்சம் பொங்கிடக் கண்டேன்.
ஊரக மெல்லாம் அமரக மெல்லாம்,
வைர மெழுப்பிக் கைரவ மாற்றும்
தானவ ஒற்றர் தானவ வணிகர்
தானவ வீரர் மானிடர் தம்மைப்
பிரித்தவர் செல்வம், அரித்தவர் வாழ்வை
உரித்துன தரசே பெருத்திடச் செய்தார்.
அடங்காத் தம்பி இடம்பெற் றெங்கும்
தடங்கலைச் செய்யும் பிடுங்கலே பெரிதாம்.

மாவலி

பொல்லவன் செயலைச் சொல்லவன் செருக்கைக்
கொல்லுவன் அதற்கே கூடின மின்றே.

வக்கிரன்

அனலன் இழைக்கும் அக்கிர மங்கள்
மேற்கே அதிகம் கிழக்கிலும் உண்டு.
காற்றினும் வேகமாம் ககனப் பறவை
அலையுளே செல்லும் அழிவுசெய் கப்பல்,
மலையையுந் தகர்க்கும் வலிமிகு குண்டுகள்,
கூற்றினுங் கொல்லுங் கொடிய கண்ணிகள்,
காற்றினும் வேகமாம் கடுதிப் பொறிகள்,
கோட்டைபோற் செல்லும் வேட்டை விமானம்,
திரிபுரம் போன்று தீமைசெய் விமானம்,
ஒருநொடி வீச்சால் ஊர்சுடு காடாம்
யுரேனனுக் குண்டுகள்—உயிர்களை அள்ளும்
தொத்துநோய்க் குண்டுகள் பித்துப் பிடிக்கும்
பெரும்புகைக் குண்டுகள், பேய்க்குரல் வெடிகள்,
மூச்சைப் பிடிக்கும் முழுவிஷப் புகைகள்,
பாக னின்றிப் பறந்து சென்று
பகைவரை யழிக்கும் பறவைக் குண்டுகள்,
நெருப்புவைத் தூரை நீறு செய்திடும்
அக்கினிக் குண்டுகள், ஆயிரம் ஆயிரம்
தினந்தினஞ் செய்து சேர்க்கிறான் அவனே.....
வகைவகை யான வாக னங்களை
விளம்பப் போமோ ! விமானங் கோடி.....

உளவு பார்க்க, உயர்வா னளாவிப்
படம்பிடித் தேகும் படகுகள் பலவே.
எதிர்விமா னத்தை எதிர்த்துத் துரத்தி
அழிக்கும் விமானம் அளவில வாமே...
தரையை வென்று விரைபுகை வண்டி,
மின்சா ரத்தால் முன்செல் வண்டி,
எண்ணெ யாலே ஏகும் வண்டி,
காற்ருல் ஓடும் காற்றசை வண்டி,
விரைந்து சென்று வீளபயிர் அறுத்துக்
குவையாய் கொண்டுறும் கொள்ளை வண்டி,
கடலை வெல்லுங் கப்பல்கள் ஆயிரம்,
ஆயுதக் கப்பல், அணிபடைக் கப்பல்,
உணவுக் கப்பல், உதவிக் கப்பல்,
மருந்துக் கப்பல், மனத்தினும் வேகமாம்
சண்டைக் கப்பல் சலியா தாக்கிக்
கடலெலாம் பரவிடக் கண்டேன் ஐயா !
கொள்ளைக் கப்பல்செய் கொடுமையுங் கண்டேன்
வாணிகக் கப்பல் வளத்தையுங் கண்டேன்.
நாசக் கருவிகள் பாசக் கருவிகள்,
காந்தக் கருவிகள் கணக்கி லடங்கா.
இருந்த வாக்கிலே எட்டுத் திசையும்
நிகழ்வதைக் கேட்டு நிகழ்த்திட வேண்டி
வானெலிக் கருவி மனைமனை யுண்டு.
உலக நிகழ்ச்சியை உருவாய்க் காண,
தொலையுருக் கருவி தொகையற உண்டு.
கைய டக்கமாங் கருவிக ளாலே
பேச்சறி வித்துப் பெறுவான் விடையும்.
பிறஊர் நிகழ்ச்சியைப் பிடித்துக் கொணர்ந்து
வெள்ளித் திரையில் விளங்கக் காட்டி
நடித்துப் பேசும் படங்களும் பலவே.
அற்புதம் இன்னும் பற்பல உண்டாம்.
தம்பி செய்யும் வம்புகள் மிகையே.

மாவலி

நமக்கும் இந்த நாசக் கருவிகள்
எண்ணற வுண்டு கண்ணுறக் காண்பீர்.
அனலன் படையினும் அதிகப் படையும்,
படைக்க லங்களும் பதுக்கியுள் ளோமே
ஆயினும் இன்னும் அதிசய மாகக்

கொல்லும் கருவிகள் கோடி யியற்றுவோம் !
பாரீர் நானேயே பௌதிக ரசாயன
பஞ்ச பூதப் பயன்களி னாலே,
இங்கே யிருந்தே அங்கே தம்பியின்
ஆணவ புரியை அழிப்பேன் குண்டால்.
அசுரபீ ரங்கிகள் ஆயிரம் வைத்துக்
கடற்கரை ஊன்றிக் கனல்களை யெறிவேன்.
காஸ்மிக் ரேயைக் கக்குவே னிங்கே.
இங்கே விசையை இப்படி அழுத்தலும்
அங்கே ஆணவம் அனல்பிடித் தெரியும்.
இந்திர சித்தும், இராவணச் சிங்கமும்,
திரிபுரா திகளும் செய்ததைச் செய்வேன்.
மேகமண் டலத்தில் வேகமாய்ச் சென்று,
குண்டுகள் பொழிவேன் ; கண்டு வியப்பீர்.
கடலடிப் படையாற் கப்பலை யுடைப்பேன்.
காந்த வெடிகளால் கப்பலை மூழ்க்கிச்
சரக்கினை அள்ளித் தருக்கென வருவேன்.
மூழ்கிய கப்பலை மூழ்கி யெடுத்தே,
புதுப்புதுக் கப்பல் பொலிவுறச் செய்வேன்,
சத்த மின்றித் தாவிடும் வண்டிகள்,
கண்கா ணாத நுண்விமா னங்கள்,
பாதா ளத்திற் பதிந்து வெடித்தே
தூருடன் எதிரியின் ஊரை யிடிக்கும்
மாவலிக் குண்டை ஆவலாய்க் காணீர்.
கடிகா ரம்போற் காணும் வானொலி
அமைத்துப் பகைவன் அந்தரங் கத்தை,
அறிவேன் ; எனக்கும் அறிவுண் டறிவான்.
போர்க்கலை வல்லீர், பொட்டென் றெழுமின்.
கொலைக்கரு விகளைக் குவிப்போம் வாரீர்....
"வாடா தம்பீ, வஞ்சப் பதரே,
மாவலி யுடனா மல்லாடு கின்றாய் !
பறந்து வந்துன் பட்டண மெல்லாம்
சுட்டுச் சுட்டுச் சுடுகா டாக்குவேன்....
இந்த உலகில் என்னைத் தவிரத்
தலைவனென் றெவரே தலை நிமிர் வாரே !
தந்துன் அரசைத் தம்பியாய் வாழ்ந்தாற்
பிழைப்பாய் இன்றேல் இழப்பாய் அனைத்தும்....
குண்டிற் கொன்பது குண்டு போடுவேன்
என்சிறை காத்த சன்மார்க் கிகளை

எடுத்துச் சென்றாய் ; கொடுத்தாற் பிழைத்தாய்.
இன்றேல் ஊருடன் எரித்துவந் துன்னையும்
அறஞ்சொலும் அவரையும் அக்கணங் கொல்லும்
மின்பொறி யேற்றிப் புன்னகை புரிவேன்.....
பாரடா வாடா பார்ப்போம் ஒருகை....
அம்பிப் பயலே அசட்டுத் திமிரால்,
வம்பு செய்தாய் ! வருந்தாய் ! வருந்தாய் !
ஆனவ நாட்டீர், அனலனை எதிர்மின்,
உங்கள் பொருளையும் உயிரையும் அழிக்க
வந்த கூற்றவன் ; வலுப்போர் செய்து
நாட்டை அழிக்க நாடினன், எதிர்மின்....
ஒருவனைக் கொன்றால் ஊரே பிழைக்கும்.
தானவம் போல நானுமைக் காப்பேன்.
எனது குடைக்கீழ் எல்லாம் சுதந்தரம்....
அதர்மப் பதராம் அனலனைச் சுடுவீர்....
சுட்டவர் என்னிடம் சுகமாய் வாழ்வீர்....
புரட்சி செய்மின் ! புரட்சி செய்மினோ......"
என்றுடன் அறிக்கை இரண்டு கோடி
அச்சிட் டுயர்ந்து, நச்செனத் தூவுமின்....
பற்றிக் கொள்ளும் பகையும் போரும்....
போரில் லாதது போலி வாழ்க்கையே...
பெண்டிலாக் கையும் குண்டிலாக் கையும்
பேடிக் கைகள் ! பேச்சினி யில்லை....
செயலைக் காணீர், செந்நதி காணீர்.....
அண்டம் வெடிக்கக் குண்டுகள் வீசி
உலகை ஆள்வேன் ஹூம் ஜயபலமே !

வெள்ளி

செய்வோம் போர்கள் கொய்வோம் தலைகள்....
ஆயுதம் உண்டுநம் ஆட்படை யுண்டெனின்,
மருந்துகள் உணவுகள், மல்கிய பொருள்கள்
வேண்டும் ; அதற்கு வேக மாகவே
வளம்பெறு நாட்டை வசப்ப டுத்திக்
களம்பெறு வளமை கண்டிட வேண்டுமே....
பூவிற் செழித்தது புண்ணிய பூமியே...

மாவலி

"சொல்லுதி விரிவாய் அந்தத் தொல்வள நாட்டின் காதை,
அல்லல்செய் கலிய ரும் அதர்மிகள் படையும் ஆங்கே,
வெல்குறி யுளதோ" வென்று வினவிய மாவ லிக்கு
மல்கிய குறிப்பி னின்று வக்கிரன் வகுத்துச் சொன்னான் !

வக்கிரன்

வினைவகை யறிந்த வெள்ளி விளம்பிய வழியே சென்று,
தனைமறைத் துருவ மாறித் தன்னலக் கலிய னும்,
அனைவரு மயங்கும் வண்ணம் அதர்மமே தரும மென்று
புனைவுரை பரப்பி, நாட்டிற் புதுமையுண் டாக்கி னனே !

மனத்தினைக் கெடுத்தான் ; பெண்டிர்
மானத்தைக் கெடுத்தான் ; செல்வர்
தனத்தினைக் கெடுத்தான் ; வீட்டுத்
தாம்பத்யங் கெடுத்தான் ; சேர்ந்த
இனத்தினைக் கெடுத்தான் ; மாந்தர்
இயல்பினைக் கெடுத்தான் ; வேத
வனத்தினைக் கெடுத்தான்—வாழும்
வரிசையைக் கெடுத்தா னந்தோ !

மாணுறு புனித நாட்டின் வளம்பெறு தொழில்கள் கற்று,
வாணிகக் கடைவி ரித்து, வரம்பிலாச் செல்வஞ் செய்தே
காணறப் பொறிகள் செய்து, கலகத்தைக் கிளப்பி, வெற்றி
பூணுறச் சிறந்தா னையா புகழ்பெறுங் கலிய னங்கே !...

சொந்தநாட் டன்பைத் தேய்த்துச் சுதந்தரஉணர்வைத்தேய்த்துச்
சிந்தையில் ஊனுங் கள்ளுங் காமமுஞ் சேர்ந்து சுற்றப்
பந்தனை யாக்கிப் பாபப் பணிகளை யூக்கி, எங்கள்
சந்தையே யாக்கி னேமத் தருமபூச் சிகளின் ஊரை. 240

வித்தகர் பெருத்த நாட்டை வேற்றுமைக் கந்தை யாக்கிப்
புத்தகம் பிடித்த கைகள் புட்டியும் சுருட்டு மாக்கி,
பத்தினி மானங்கூடப் பஞ்சத்தாற் பறந்து போக
நித்தியஞ் சூழ்ச்சி செய்த நிசாசரச் சிங்கம் யானே !

பொங்குமின் சாரங் காந்தம் புனல்கொதி யாவி, வானந்
தங்கிடும் எலெக்ட்ரன் ஆன சக்திக ளாலே ஓடும்
சங்கையில் அதிச யங்கள் சாதித்த நம்மை மாந்தர்
எங்குமே எழுந்து கூப்பி எண்ணிலர் வணக்கங் கொண்டோம்.

காலமும் இடமும் வென்றோம், கடவுளின் விதியும் வெல்வோம்;
ஞாலமும் வென்றோம் ; நூல ஞானமும் வென்றோம், கற்றுச்
சீலமும் நோன்புங் கொண்ட சிலரையும் வென்றோம், கற்பின்
கோலமும் வென்றோம், சாந்த குணத்தையும்வென்றோம் ஐயா.

பலம்படை சித்தி மன்னன் பாரினைத் துறந்த பின்பு
நிலம்படை சிறிய மன்னர், நிலையினைக் கலக்கி மெல்லப்
புலன்களைக் கெடுத்துப் போரும் போட்டியுந் தூண்டி, நாமே
நலம்பெறப் புகுந்து நாட்டில் வாட்கொடி நாட்டி வந்தோம்.

படையினைத் தருவோம் என்று பகையினைத் தூண்டி, நாங்கள்
இடையினிற் புகுந்து வேந்தர் இருவரும் தோற்கச் செய்தே,
கடையினைப் பரப்பி, மெல்லக் கதையினை வளர்த்து, வாளின்
கொடியினைப் பரப்பி யுன்றன் கொற்றமே பரப்பி வந்தோம்.260

சகத்திற்கு வேதந் தந்தார், சாத்திரம் பலவுந் தந்தார்,
இகத்திற்கும் பரத்தி னுக்கும் இணைப்பிலாப் புராணம் பேசி,
மகத்துவ மான தூய மறைகளை மறந்து, தேக
சுகத்தினுக் கான கல்வி துளியவர் கற்கச் செய்தோம்.

கப்பலைக் கட்டி நாளுங் கடலினைக் கலக்கி வாழும்
இப்பரின் செல்வ நாட்டில், ஏழைகள் இல்லா நாட்டில்,
செப்பருங் கைத்தொ ழில்கள் செழித்தபொன் னாட்டில், எங்கள்
கப்பலுந் தொழிலுங் கொண்டு கவலையு மெலிவு மீந்தோம்.

இவ்வகை மெல்ல நாட்டை இருதலைக் கொள்ளி யாக்கி,
உய்வகை நாமென் றோதி, உட்புகுந் தூன்றிக் கொண்டோம் ;
பொய்வளர் கலிய னுந்தன் புரியிலே முடிபு னைந்து,
நெய்வளர் நெருப்பைப்போலெம் பொறுமையை நீளச் செய்தான்..

முடிதரி கலியன் இன்று மோகியின் செருக்கி னாலே,
துடிதர ஊணர் கோபம் சுயநலக் கொடியை நட்டான்.
அடிதரத் துணிந்தான் யாங்கள் ஆத்திரங் காட்டிக் கேட்டால்,
இடிதர வேண்டும் அந்தக் கலியனுக் கின்று நீயே...

மாவலி

செவித்த மாவலி சினங்கொண் டுரைத்தான் :—
நமது கலியனே நமைக்கேட் காமல்
முடிதரித் தாண்டான்...அடிமைக் கலியன்....
சுதந்தரப் பகைவா, தூம கேதுவே, 280
செல்வாய் உடனே, சேனை கொண்டு ;
விண்மண் கடற்படை வேகமாய் விரைக !
கலிமோ கியரைக் கைதுசெய் துடனே.
கடுஞ்சிறை யடைத்துக் காவல்வைத் தவரை
நாட்டி லெங்குமே நாட்டென் கொடியை ;
பேச்சுநீண் டவரின் மூச்சை யடக்குவாய் !
எதிர்த்தாற் சுடுவாய் இடர்களை வீழ்த்துவாய்.
குண்டும் கொடுமையுங் கொண்டுமுன் னேறி,
நாட்டைப் பற்றி நாட்டுநம் மரசையே.
பொன்மணி தானியம் போருக் கேற்ற
பௌதிக ரசாயனப் பண்டம் உலோகம்
எல்லாம் கொண்டிங் கிறக்கிட வேண்டுமே...

நாட்டைச் சுரண்டி நமக்கிங் கனுப்புக
செல்லுடன் என்ற சொல்லுடன் பட்டுத்
தூம கேது துறுதுறுத் துரைத்தான் :

தூமகேது

மாவலி யரசே, பூவல யத்தில்,
நினக்குத் தம்மை நிகரெனச் செருக்கும்,
பதர்களை யொழிக்கவே பலவான் உள்ளேன்.
வெள்ளியும் தாமும் விளம்பிய படியே
புண்ணிய பூமியுன் புகழர சாகச்
செய்வேன் அதன்வளம் செம்மையாய்ச் சுரண்டி
வங்கத் தொடரில் இங்கே யனுப்புவேன்....
அரசே இங்கே ஆயுதப் படையால்
ஆணவம் ஆளும் வீணை ஒழிப்பாய்.....
கலியனை உடனே காவலில் வைத்துன்
வாட்கொடி நாட்டி வரிசை வரிசையாய்ச்
செய்யுங் கடமையைச் செய்வழி செய்வேன்....
தூம கேதுவின் சுடுதிறங் காணாய்....
பிறரை அடிமைசெய் பெருமையைக் காணாய்,
கொலைத்திறம் புரியுங் கலைத்திறங் காணாய்.
வெற்றிமேல் வெற்றி விளைப்பேன் யானே.....

மாவலி

"செல்லுன் குண்டு வெல்லுமென் அருளால்....
புண்ணிய பூமியிற் பொருந்துநம் ஆட்சியும்
ஆணவப் போரும் ஆகிய கடன்களை
நமக்கே நலமுற நடத்திடு வோமே"
என்று மாவலி இயம்பி யெழுந்து
தூம கேதுவைத் துறைமுகஞ் சேர்த்தே
அரக்கப் படைகளை அணிவகுத் தானே ......

# 27. சங்கத்திற்கு நலமுரைத்த படலம்

தானவ—ஆணவச் சமர்

தானவன் செருக்கினைத் தகர்க்கத் தம்பியும்
தானையை மிகைபடச் சேர்த்துத் தாக்கினன் ;
யானையும் யானையும் எதிர்த்து மோதினால்,
ஏனைய முடிவினை யியம்ப வேண்டுமோ ?

மண்ணுடை யாசையும், மனசின் மாயமாம்
பெண்ணுடை யாசையும், பிரிவு செய்திடும்
பொன்னுடை யாசையும் புரட்சி செய்திடின்,
புண்ணுடை வஞ்சகப் போருக் கெல்லையோ ?

உறவுடன் சுற்றமும் ஊருந் தேசமும்
அறமுமென் றெதனையும் ஆத ரிப்பரோ—
மறவலி கொண்டமண் ணசை மாயத்தால்,
பொறைவலி கெடுநின்ற பூரி யர்களே?

அண்ணனுந் தம்பியும் அனலுங் காற்றுமாய்ப்
பண்ணிய போர்வினை பாரைப் பற்றவே,
மண்ணக நாடெங்கும் வசிக்கு மூணரும்
திண்ணெனச் சமர்செயத் திரண்டு வந்தனர் .

புதுப்புதுச் சுடுசரம் புதுவி மானங்கள்,
புதுப்புதுக் கப்பல்கள் புதிய ஊர்திகள்,
புதுப்புதுச் சூழ்ச்சிகள் புதிய போர்களும்
புதுப்புது வடிவுடன் புவியைச் சூழ்ந்தவே !

எழுங்கதிர் முரசொலி யியம்பக் கேட்டிடும்
விழுங்கதிர் சாங்குரல் விம்மக் கேட்டிடும்,
கொழுங்கதிர் உமிழ்ந்திடுங் குண்டு பீரங்கி
விழுங்கிடுந் திசைகளைப் புகையின் வேகமே.

விதித்தனர் கடுவிதி ; விதியை மீறியே
எதிர்த்தவர் எமபுரம் ஏக வென்றுளங்
கொதித்தனர், மிதித்தனர், கொன்று மண்ணிலே
பதித்தனர் பஞ்சமா பதகர் கூட்டமே !

மட்டறு செருக்கினர், மற்றை நாட்டினர்
கட்டடி மைகளென் றிழிவு காட்டினர்,
கட்டினர் வெட்டினர் கால வேடன்போற்
சுட்டனர் சுடிகையு நடுங்கத் துன்பத்தால்.

வேவுசெய் விண்படை விளக்கிடும் நிழல்
ஓவியங் காட்டிடும் ஊரை நோக்கியே,
தாவுவர் ; சுடுசரந் தள்ளித் தீயிட்டே
பாவிகள் அனைத்தையும் பாழ்செய் வார்களே.

மெய்யன் ஆணவம் வந்த கதை

இங்கனம் இகல்செயும் இராக்க தர்புரி,
தங்கம்போல் மாசறு சத்தி யன்குழு,
பங்கஞ்செய் மாவலி படரைத் தாண்டியே
எங்கனம் வந்ததென் றியம்பு வாமரோ !

மதிமிகு போகனு மன்னன் மெய்யனும்
துதிமிகு சுந்தரி சூழ்ச்சி சொல்லவே,
கொதி மிகும் அனலனைக் கூவிப் பேசிடக்
கதிமிகு வானொலிக் கருவி யாக்கினூர்.

தானெனும் ஆணவந் தழைத்த தம்பியும்,
ஊனுடன் ஒட்டிய உளப்பொ ருமையால்,
வானொலி பேசிய வாறு வானத்தே,
தானவ நகரினைத் தாக்கி னுனரோ !

ஊணறு விரதத்தில் ஊன்றுஞ் சக்தியைக்
காணுறு பொதுசனங் கனன்றெ ழுந்ததும்,
சேணுறு *குடையினிற் சிலர் இறங்கினூர் ;
ஆணவர் சிறைதிறந் தனலும் வீசினூர்....

கூவென மூண்டிடுங் குழப்பத் தூடவர்
மாவலி யாளென மாறு வேடத்தில்,
காவலைக் கடந்துமுன் ககனக் கப்பலில்
வாவினர் ஆணவம் வந்தி றங்கினூர்.

கொலைசெய மாவலிக் குண்டர் தேடியே
மலைத்தனர் ; அழகியு மகளு மன்னனும்
கலைதரு முனிவனுங் கடிதிற் சென்றதை
நலிவுறத் தெரிந்துள நடுங்கிச் சோர்ந்தனர். 60

ஒற்றர்கள் ஓடுக உடனந் நால்வரைப்
பற்றுக வென்றனன் பதறு மாவலி ;
பற்றலர் சூழ்ச்சிகள் பலிக்க வில்லையால்,
வெற்றுரை யானது வெய்யன் வெம்மையே.

பேயெனப் பெருஞ்சமர் பெருத்த நாட்டிலே,
சேயென நால்வருஞ் சேர்ந்து கூடமாய்
ஓய்வற நிருதரின் உழைப்பி னுல்வரும்
ஆயுத மனைத்தையும் ஆய்ந்து கற்றனர்.

இரக்கமற் றிரவுடன் பகலும் இன்னல்செய்
அரக்கரின் போர்முறை அறிந்தப் போரினைச்
சுருக்கிடுஞ் சூழ்ச்சியுஞ் சூட்சு மங்களும்
பொருக்கெனக் கற்றனர் பொருந்து நாளிலே.

உருக்கமோ டனலனும் உபச ரித்தனன் ;
இருக்கையும் ஈந்தனன்; எனினும் அன்னவன்
வருக்கத்திற் குரியதாம் வஞ்ச நெஞ்சினுன்
கருத்தினிற் காமமுங் கரவுங் கொண்டனன்.

* ஆகாசக் குடையில் Parachute

முன்னரே முழுமன மோகங் கொண்டவன்,
இன்னரேன் இச்சையை எய்துவேன் எனு அ
"அன்னமே" என்றனன் அழகி முன்வந்தே ;
புன்னகை புரிந்தவள் புறமொ துங்கினுள்.

அத்ததி அவ்விடம் அறிந்து வந்தநம்
சத்தியைச் சங்கடஞ் செய்யத் தாவினுன் ;
உத்தம முனிவரன் ஓடி வந்தனன்,
மெத்தவும் அறிவுரை விளம்பிப் போக்கினுன்.

மெய்யனைச் சிறைசெய்து வேத நாட்டினைக்
கையினிற் பற்றிடக் கருத்திற் கொண்டனன்....
ஐயனும் இவையெலாம் அறிந்து போகனை
உய்வழி ஓட்டமென் றூக்கி னனரோ.

சன்மார்க்கத்திற்கு நல்லுரை

நோக்கினிற் பெரியான், மிக்க நுண்மதி கொண்ட மெய்யன்
ஆக்கிய சன்மார்க் கத்தின் அன்பரை உடனே கூட்டி,
"வாக்குடன் மனமுந் தொண்டும் வளம்பெறும் நல்லீர் ஒன்றி
ஊக்கமோ டுழைமின் வெற்றி யுண்"டென உரைத்தான் மன்னே!

சுந்தரி, சக்தி, போகன் சுதந்தரப் பணிக்கென் னேடும்
இந்தநாள் ஏகு கின்ருர் ; ஏற்றநாள் மீண்டும் , இங்கே
வந்துமது துரிமை நாட்டி மக்களுக் கினிது செய்வோம்,
அந்தநாள் வரவை நீரும் ஆர்வமோ டெதிர்பார்ப் பீரே.

அல்லலிற் கைவிட் டோமென் றஞ்சலிர் ; அரக்க ருக்குத்
தொல்லைகள் வந்த திந்தச் சுடுசரப் போர்க ளாலே ;
மல்லுறு தம்பி யோடு, மாவலி புரியும் போரே
கொல்லுறும் ஊணருக்குக் கொடியதண் டனையென் றெண்ணீர்.

போரெனும் பேயின் கையிற் புகலடை அரக்கர் கூட்டம்,
பேரிடி முழக்கஞ் செய்து, பீரங்கிப் புகையாய்த் தங்கள்
வீரியத் திமிர்கள் சென்று, விறலிழந் தயரக் காண்பீர்,
பாரத சக்தி வந்து பரிந்துமக் குதவக் காண்பீர்.

உங்களுக் குரிய வீட்டில் ஒடுக்கமாய் அடங்கி நின்றே,
சங்கத்தை வளர்த்து, சுத்த சத்திய சன்மார்க் கத்தை
அங்கத்தி னர்க ளெல்லாம் அறிந்தவர்க் கோதி, அன்பு
பொங்கிடப் பணிகள் செய்வீர் புனிதனுல் வெற்றி யாமே.

சத்திய விரதம் பூண்டு, சத்துவ உணவைத் துய்த்து,
பத்தியும் பரிவும் பேணிப் பலர்பயன் பெறுந லஞ்செய்
உத்தமர்க் கழிவொன் றில்லை ; உலகெலாம் அவரைச் சாரும் ;
சுத்தனுந் தியானந் தன்னிற் சுடரொளி காட்டுவானே.

ஆவியில் இணைந்த நேயர் அன்புடன் அன்பு சேரிற்
பூவினில் அரிதொன் றில்லை ; புரிசெயல் வெற்றி யாமே.
தூவிய லறத்தைக் காக்கச் சுத்தனை நோக்கி நாங்கள்
போவது தரும மின்னே; புன்னகை விடையைத் தாரீர்.

நானில நிகழ்ச்சி யெல்லா நாடொறு முங்க ளுக்கு
வானொலி சொல்லக் கேட்டு வரிசையாய்ச் செய்வ செய்வீர்.
தானவ நிலையைக் கண்டு, தாவிநாம் வந்து பின்னே,
ஆனதைச்செய்வோம்;அன்பீர்ஆதலால்விடைகொள்வேனே! 120

"ஒன்றுபட் டுழைப்போம் ; இங்கே உரியகா லத்தில் வந்து,
வென்றியை முழக்க வேண்டும் ; வேந்தநீ"யென்று நல்லோர்
நன்றிகள் பலவுங் கூறி நல்விடை மாலை சூட்டச்
சென்றனர் நான்கு பேரும் சீகர விமான மேறி.... 124

# 28. சீகரன் மகிழ்ந்த படலம்

சொந்தவி மானத்திற் சூட்சு மங்களை
விந்தையாய் அமைத்துடன் விரைந்து, நால்வரும்
சந்தடி யின்றியே தாண்டித் தூரத்தை
வந்தனர் சீகரம் வாழ்த்தொ லிக்கவே !

இழந்தநற் செல்வத்தை இரும டங்கென
வழங்கிடப் பெற்றவன் மகிழ்ச்சி போலவே,
இளங்கிளி சுந்தரி எதிர நின்றதும்,
உளங்கிளர்ந் துவந்தனன் உரிய தந்தையே.

சக்தியை அன்புறத் தழுவி ஏற்றனன்,
சத்திய மன்னனைச் சயசபா ஷென்றான்,
உத்தம முனிவனை உருகிப் போற்றினான்,
மெத்தவுங் கதைகளை விரும்பிக் கேட்டனன்.

அன்னிய நாட்டினில் அரக்கர் மாயத்தில்
இன்னவர் வாழ்ந்ததும், இசைக்க லையினால்,
இன்னல்செய் அவுணரின் இனத்தை மாற்றியே
நன்னலம் புரிந்ததும் நவிலக் கேட்டனன்.

சீகரன்

ஆவியைப் போலநான் அன்பு செய்திடும்
பூவியல் அழகியே, புதல்வி யோடினித்
தேவியல் வாழ்வுடன் சீக ரத்திலே
நாவியற் கலைகளை நாட்டிப் போற்றுவாய். 20

கற்பினுக் கரசியே, கலையின் செல்வியே,
அற்புத முனிவரன் அன்பு பொங்கவே
நற்பணி செய்தினி நாளை வேண்டிய
முற்படு வெற்றியை முயலு வாமரோ !

சுந்தரி

திடமன மறிந்ததைச் செய்யுந் தந்தையே,
இடமகல் உலகெலாம் இராக்க தர்களின்
வெடிபடு செருக்கினால் விளைந்த தீமைகள்
அடர்ந்தன ; வருந்தநல் லறங்கள் எங்குமே.

புண்ணிய பூமியைப் புலிய ரக்கர்கள்
எண்ணிய படியிடர் எய்தப் பற்றினார்.
மண்ணுல கங்கெட மல்லுங் கொள்ளையும்
புண்ணுட னிழைத்தனர் புல்லர், கள்ளரே....

அவுணரின் செருக்கினை யழித்திந் நாளிலே
புவிநலம் புரிந்திடப் புனிதன் செய்திடும்
தவநலம் பலித்திடச் சக்தி யோடுநான்
நவநலத் தொண்டுசெய் நாட்டங் கொண்டுளேன்.

சீகரன்

என்மனம் அதுவென விசைத்துச் சீகரன்
கன்மன வரக்கரைக் கடிது மாற்றிடப்
பொன்மனங் கொண்டுறும் புனிதன் சேவைக்கே
நன்மனங் கொண்டதை நன்று பேசினான்....

போகன்

உலகினைப் பங்கு போட ஒருவருக் கொருவர் போட்டி
விலகறப் போடும் ஊனர், விளைத்திடும் தொல்லை யாலே,
கலகமே பெருகி மாந்தர் கலங்கிடுங் கலக்கந் தீர
நலமுறு சுத்தன் வந்தான் ; புதுயுக நாதன் அன்னோன்.

தானவத் தீவில் யாங்கள் சாதித்த பணிக ளெல்லாம்,
தீனரைத் தாங்குஞ் சுத்த சித்தனே சாதித் துள்ளான்.
மோனமாய்த் தவத்தின் சக்தி முடிவறத் தந்து, வெற்றி
ஈனுறக் காரியத்தை இனிதவன் முடித்தான் ஐயா...

தலைவனும் அவனே எங்கள் சரிதையும் அவனே, இந்த
நிலைபெறும் உலகுக் கெல்லாம் அன்பொளிர் நிலையம் அன்னான்.
கலைகளுக் கிறைவன், யோகக் கனலினைப் பரப்பி, நாளும்
அலைகடல் உலக மெல்லாம் அதிசய நன்மை செய்வான்.

போர்செயும் அரக்கர் போகும் போக்கினை யறிந்தி ருந்தே
சீர்பெறுங் காலங் கண்டு, சீரிய சுத்தன் வாழும்
கார்வரை சென்று, நல்ல காரியந் தொடங்கும் போதென்
ஆர்வத்திற் குதவி செய்வீர் ; அனைவரும் என்றான் போகன்.

### சத்தியன்

எங்குநாம் இருந்துந் தூயன் இதயத்தில் இருக்கக் காண்போம்,
இங்குநாம் அவனை யெண்ணி யியற்றுவ நன்று செய்வோம் ;
அங்குதா னவர்கள் ஆட்டம் அடங்கிடில் அறவோர் கூட்டம்
செங்கதிர்க் கிரணம் போலச் செகத்தினை யழைப்ப தாமே.

அத்தகை நல்ல காலம் அழைப்பதை உள்ளே கேட்டுச்
சுத்தசே வைக்குச் செல்லச் சுதந்தர ராக நிற்போம்.
பித்தங்கொள் அவுணர் தாமும் பெருஞ்சமர் வெறியி னைத்தே
உத்தமன் அருளை நாடும் உபாயமும் செய்ய லாமே...

### சக்தி

உலகெலாம் பரவுஞ் சோதி, உள்ளத்தில் இலகுஞ் சோதி,
பலவகை நன்மை யெல்லாம் பரிந்தருள் சுத்த ஜோதி,
விலகிலா தென்னுள் ஆடும் விமலமா ஜோதி யொன்றைக்
கலந்துவாழ் வாழ்வே இந்தக் கன்னியின் வாழ்க்கை யாமே...

இன்னலைத் தீர்க்கும் ஐயன், எனைவிடா தருளு மையன்,
பொன்னொளிர் புனிதன், அன்பு பூண்டெனை யாளும் கோமான்,
தன்னலந் துறந்த வள்ளல், சகத்திற்கே வாழுந் தியாகி
அன்னவன் யோக மேயென் ஆருயிர்க் கினிய தாமே...

இவ்வகை அன்பு செய்யும் இணைபிரி யாத நேயர்
நவ்விளந் திருவார் சக்தி நல்லிசை யமுதும் பேச்சும்,
செவ்விய கலையும் யோக சித்தியும் சுத்த னன்பும்
திவ்விய வாழ்வு மாகத் தினம்பல கழித்தார் மாதோ !

### போகன் புறப்படுதல்

இடமகல் உலக மெல்லாம் இகல்செயும் அசுர மாயம்
அடங்கிடுங் கால மெய்த ததற்கறி குறிய தாகத்
திடமன நேயர் ஓர்நாள் தியானத்தில் ஆழ்ந்த போது,
நடம்பெறுஞ் சிலம்பொ லிக்க நாதமொன் றழைத்த தம்மா !

### சக்தி

என்னவன் அழைத்தான்; ஆங்கே இசைமிகு போகன் சென்று
முன்னர்நம் சரிதையெல்லா முற்றுறச் சொல்லி, எம்மான்
என்னநாம் செய்ய வேண்டும் என்பனே அதனைச் செய்யத்
துன்னுவோம் என்றாள் சக்தி சுத்தனுக் காக வந்தாள்....

பொருத்தமென் றுரைத்துப் போகன் புனிதனுர் அழைப்பிலுள்ள
கருத்திதென் றோதி, அன்புக் கடவுளைத் தியானஞ் செய்து,
திருத்தகு நாளில் வேக விமானத்திற் சென்றான்; அன்னோன்
வரத்தகு வரவை முன்பே வாசகர்க் கோதி னேமால்.

இத்தகை நிகழ்ச்சி யெல்லாம் போகனார் இயம்பக் கேட்டே,
உத்தம நேயருக்கும் உரைத்தனன் கவிதை யாலே ;
சுத்தனு மனங்கு விந்து சூட்சும உடலி னாலே
சித்தருட் கடமை பேசித் தியானத்திற் பாடி னானே !

அன்புநிலை கண்டுலக மனைத்தும் வாழ்க !
அருளாட்சி தழைத்துயிர்கள் அமைதி சேர்க !
துன்பமெலாம் பொறுத்துலகத் தொண்டு செய்யும்
சுத்தசம ரஸத்தொண்டர் துலங்கி வாழ்க.
நண்புணர்வு பரவிடுக ! நலிக வெம்போர் !
நல்லபொது நிலையினிலே ஞான மோங்கி,
இன்பநிலை யாமிறைவன் கருணை யாலே
எல்லாரும் ஓர்குலமாய் வாழ்க மாதோ !

தருமத்தை நிலைநாட்டத் தவங்கள் செய்தோம்,
சத்தியத்தைக் கண்டிடவே தியானஞ் செய்தோம்.
கருமத்தை யோகமெனக் காக்க வேண்டிக்
கனவொன்று பெற்றின்று காத்து நின்றோம்.
மருமத்தை அறிந்தவுணர் அவுண ராலே
மதமடங்கப் போர்வந்த வகையுங் கண்டோம்.
ஒருமித்து வாய்மைக்கே உயிர்க்கும் அன்பீர்,
உலகசக்தி அழைப்புமினி யுறுவ தாமே !

"இருமிங்கு போகனாரே இனியுல குய்ய வேண்டித்
திருமிகு கடமை நம்மைத் தேடியே விரைவில் இங்கே
வரு" மெனத் தூயன் சொல்ல வரமுனி போற்றி செய்து,
உருவெனக் கண்ட ஞான ஒளியினைத் தியானித் தானே !

போகன்

சுத்தனே சரணம் ! சுத்த தருமமே சரணம் ! அன்பார்
சுத்தசங் கத்தி லுள்ள தொண்டரே சரணம் ! என்றும்
பத்தருக் கருளும் சுத்த பரமனே சரணம் ! யோக
சக்தியே சரணம் ! சித்தி தருகுரு வரனே போற்றி !

பத்தியாய்ச் சுத்தா னந்த பாரதிக் கினிய சுத்த
சக்தியின் அருளாற் பூத்த பாரத சக்தி தன்னில்,
இத்துடன் நான்காங் காண்டம் இயல்புற முடிந்த திந்தத்
தத்துவக் காதை சொல்லுந் தானவர் தன்மை தானே .

*பாரத சக்தி, நான்காவது*

தானவ காண்டம் முற்றிற்று

# பாரத சக்தி மகா காவியம்

## ஐந்தாவது

## சுத்த சக்தி காண்டம்

[சுத்த நிலையம் உலகெங்கும் அருட்பணி செய்யத் தயாராக நிற்கிறது; அந்தச் சமயம் சக்தியும் சீகரனும் விமானத்தில் வந்து இறங்குகின்றனர். சுத்தன், சக்தியை "கௌரி" என்று அறிந்து தன், யோக சக்தியைத் தருகிறான். சித்தி நகரிலிருந்து பாரத முனிவர், சித்திமான் முதலிய பெரியோர் வந்து, "புண்ணிய பூமியை விடுதலை செய்ய இதுவே தருணம்" என்று வேண்டுகின்றனர். சுத்தன் அகண்ட தியானத்தில் எல்லோருக்கும் பாரத சக்தியாகிய ஆத்ம சக்தியைத் தூண்டிச் சிலகாலம் யோகத்தி லிருத்துகிறான். அந்த யோகத்தில் ஒவ்வொருவருக்கும் ஓர் உண்மை உதிக்கிறது. அப்படி உதித்த உண்மைகளை "**யோக சித்தி**" என்ற நூலாகத் தொகுத்து, அதில் உள்ள பன்னிரண்டு இயல்களையும் உலகில் பரப்பப் பன்னிரண்டு சித்தர் குழுக்களைத் தயார் செய்து, சக்தியின் தலைமையில் உலகிற்கு அனுப்புகிறான். யோக சித்தர்கள் உலகெங்கும் சென்று, சன்மார்க்கமும் தெய்வச் சுடரும் பரப்பி, மிருக பலத்தையும் அசுரத்தனத்தையும் மாற்றிப் புதிய உணர்ச்சியை உண்டுபண்ணுகிறார்கள். புண்ணிய பூமியில் தூமகேது கலியனைச் சிறையிட்டு, தான் அரசாளுகிறான். மோகியும் கலியனை மோசஞ் செய்து தூமகேதுவை மணக்கிறாள். கலியன் கண் திறக்கிறது; சுத்தனை நினைக்கிறான். வஞ்சப் பதர்களான மாவலி யரக்கரை ஒழித்து உலகில் சுத்தனின் யோக ராஜ்யத்தை நிலைநாட்ட உறுதி கொள்கிறான். இதே சமயம் சித்திமான் கலிநகரைப் படையெடுக்கிறான். கலியன் சிறை தப்பி, மோகியைக் கொன்று, புரட்சி செய்து, தூமகேதுவைச் சிறையிலடைத்து, சித்திமானுக்கு உதவிசெய்து, கலிநகரைச் சுத்த நகராக்குகிறான்.

இச் சமயம் தானவத்திற்கும் ஆணவத்திற்கும் வலுத்த குண்டுப் போர் நடக்கிறது. சத்தியனும் சுந்தரியும், சுத்தனின் சக்தியால், சாந்தப்படை சேர்த்து, சமரில் தானவர் பலர் சேராது செய்கிறார்கள். ஆணவன் மாவலியன் கொழுப்பை இறக்குகிறான். கொடுமையான கொலைக்கருவிகளால் போர்செய்து இரு நாடுகளும் களைத்துப்போகின்றன. சுத்தனின் சன்மார்க்க வேகம் எங்கும் பரவி, ஜனங்களுக்குப் போரில் வெறுப்புண்டா

கிறது. குண்டுகளெல்லாம் மடமடவென்று பொடிந்து சுக்கலாகின்றன. முடிவில் ஆணவனும் மாயையும் தனித்துப் புலம்புகின்றனர். மாயவள் ஆணவனைக் கொல்லுகிறாள். அவள் மாசற்ற பக்தையாய்ப் பட்டுத் தளர்ந்து, தன்னுடைய நடந்த அனைத்து நாசத்திற்கு வருந்துகிறாள். இந்நிலையில் சுத்தன் சக்தி தவத்தால் நல்ல எழுச்சியை ஏற்படுத்துகிறான். மாயவள் அதற்குள் துயரம் முடியவில்லை. உடனே புண்ணிய பூமியை அடைந்து யோகாசிரமத்தில் சேர்கிறாள். அழியும் சிற்றுயிர் உடலம் திருந்துகிறது. சிவன் புண்ணிய பூமியில் ஞானியர் பெரியோர்களுடன் சேர்ந்து சுத்தனின் பெருமையையும் அருளுக்கு அடங்கி நடப்பதின் நன்மையையும் விளக்குகிறாள். மாயவனும் புண்ணிய பூமிக்குப் போய் அமர்ந்து, செருக்கை விட்டுச் சுத்தனை வணங்குகிறான். சக்தி அப்போதுதான் தந்தைக்கு "யோக சித்தி"யை உபதேசித்து, வாழ்க்கையின் பயனை விளக்குகிறாள். இப்போது உலகமெல்லாம் சுத்தனை அறிகிறது. அவனுடைய யோக சாம்ராஜ்யத்தை வரவேற்கிறது. சுத்தன், சக்தி சாந்த முனிவர் சூழ்ந்த தனது யோக சங்கத்துடன் சித்திநகரத்தில் அமர்ந்திருக்கிறான். உலகத் தலைவர்களெல்லாம் கூடி அவனை அரியணை யேற்றி முடி சூட்டுகிறார்கள். சுத்தன், தன்னை அரசன் என்று அழைக்காமல், உலகத் தொண்டன் என்று கருதி, ஆயுளெல்லாம் மனித சமுதாயம், தேவ சமுதாயமாக முன்னேறவே பணியே செய்கிறான். புண்ணிய பூமியில் சுத்தன் யோக சாம்ராஜ்யத்தையும் தேவ ஜாதியையும் நிலைநாட்டுகிறான். அதன் அழகையும் அருளின்பத்தையும், அமைதியையும் கண்ட பல நாட்டார் சுத்த சக்தியின் துணையை நாடி, யோக சித்தர்களை வரவேற்றுத் தத்தமது நாடுகளிலும் தெய்வ ராஜ்யத்தை நிலை நாட்டுகின்றனர். சுந்தரி, ஆனவன் தானவன் ஆகிய இரண்டிலும் அவ்வாறே செய்கிறாள். மாயவன் புதிய மனிதனாகி, சுந்தரிக்கு உதவி செய்கிறான்; சமயன் பொதுநல ஊழியனாகிறான். சுத்தனும் சக்தியும் மனித சமுதாயத்திற்கு அருட்பணி செய்து, கோடானு கோடிப் பேர்களுக்கு யோக சக்தியை அளித்துப் புதிய உலகை நிலை நாட்டி, தவத்திலேயே உடலை உதறி, சூட்சும சரீரத்தால் எங்கும் உலவிப் பணி செய்கின்றனர். உலகமெல்லாம் ஒரே நாடு; ஒரே அரசு; உலகின் அரசர் உலகோர். உலகோரால் தேர்ந்தெடுக்கப் பெற்ற ஒரு பாரத சக்தி சபை உலகை நிர்வகிக்கிறது. சுத்தனும் சக்தியும் நீண்ட தவத்தால் வளர்த்த பாரத சக்தி, அறங்காத்து உலகை இன்பமய மாக்குகிறது.]



# பாரத சக்தி மகா காவியம்

## ஐந்தாவது

## சுத்த சக்தி காண்டம்

---

### காப்பு

மலர்களைக்கொஞ்சி மணவெறி யேற்று
    வருகின்ற தென்றலைப் போலே,
கலகல வென்றே காலையிற் பாடுங்
    கட்டிலாப் புள்ளினம் போலே,
சலசலத் தோடிப் பயிர்களை வளர்க்குந்
    தவமலை யருவியைப் போலே,
கலைவளர் கவிதை யருளுவாய் இன்பக்
    கடவுளே கருத்தினில் அமுதே !

எத்திசை யுலகும் இனிதெனக் கொள்ளும்
    இயல்புறு நிலையினை விளக்கிச்
சுத்தசன் மார்க்க விளக்கினைத் தூண்டித்
    தொண்டறி வன்பினைத் துலக்கிச்
சத்தியத் துடுப்பால் வாழ்வெனும் படகைச்
    சதானந்த வெள்ளத்திற் செலுத்தி,
நித்திய மான பயனளித் தெனது
    நிறைகவி நிலவிட வருளாய் !

ஓங்கிய தெய்வச் சுவையிலே தோய்ந்திவ்
    வுலகினில் அமரவாழ் வெய்தித்
தீங்கலை வளமை திசை திசை பெருகிச்
    செவ்விய நன்னடை செழிக்க,
நீங்கறு சுடராய் என்னுளே நிலவு
    நிமலனே நீதரும் இந்தத்
தேங்கவி யான பாரத சக்தி
    திகழுக புகழுறச் சிறந்தே !

சித்தரின் உள்ளே தியானத்தில் வந்து
    தித்திக்கும் சிவமயப் பொருளே,
சுத்தசன் மார்க்கச் சுடரொளிக் குன்றே,
    சுத்தனும் சக்தியுந் துலங்கி,

இத்தல மெல்லாம் அருளர சாட்சி
இலக்கிய கதையினை யிசைக்க
வித்தகர் போற்றும் வேதவாக் கருளாய்
வெற்றியை விளக்கிடும் இறைவா !

கோரிநான் கொண்ட கொள்கைகள் அனைத்தும்
குயிற்றிய குணம்பெறு மாலை,
பாரத சக்தி , மாலையைச் சூட்டிப்
பரம நின் னருளையே போற்றி !
ஊருன தூரராய், உளமுன துளமாய்,
உரையுன துரை;செய லுனதாய்ப்
பாரினில் வாழ்ந்துன் பதநிழ லடையப்
பசுபதி யேயெனக் கருளாய் !

# 1. புதுநாட் படலம்

உலகம் வாழ்ந்திடத் தவஞ்செயும் உத்தமர் தலைவன்,
பலது றைகளிற் பயின்றொரு பொதுமுறை பணித்தோன்
இலகு சங்கமும் கொள்கையும் இரவிபோன் றிலகிப்
பொலிய வந்தது சுத்தநாள் புதியபொன் னாளே !

ஆனந் தக்கடல் மிதந்திடும் அமுதப்பொற் கலசம்
மான சூரியன் உதித்தது மறுவறு வானில்
தேனி றைந்தன நாண்மலர், இமயத்தின் சிகரம்
ஞான வெண்ணகை புரிந்தது நலங்கெழு நாளே.

மலைம கிழ்ந்தது ; வளர்நதி மகிழ்ந்தது ; கால
நிலைம கிழ்ந்தது ; நின்மல நிலையத்தின் யோகக்
கலைம கிழ்ந்தது ; பூமணக் காற்றுடன் கதிரும்,
தலைசி றந்தபே ரின்பத்தைக் குறித்தன தழைத்தே.

செண்டு மாமலர்த் தேனையுண் டோமெனத் திரியும்
வண்டு பாடிட வனப்புட்கள் பாடிடக் கங்கை
பண்டு போலவே பாடிடப் பணிநலம் புரியுந்
தொண்டர் பாடினர் புதுயுகந் தோன்றிடுந் துதியே.

செங்க திர்களை வீசியே சகமெலாந் திகழத்
தங்க மாக்கிடுஞ் சூரியன் போலவே, சாந்தம்
பொங்கு ஞானத்தைப் பூவினில் யோகத்தாற் பரப்பி,
மங்க ளப்புது யுகத்தினை வளர்குரு வாழ்க !

புதிய வாழ்க்கையும் புண்ணியத் திருக்களும் பொலிக !
முதிய நான்மறை மொழிந்திடு முதற்பொருள் பொலிக!
மதியில் ஒற்றுமை மனதினில் மங்கலம் பொலிக!
சதிசெய் பாபங்கள் ஒழிந்தருட் சாந்தமே பொலிக !

பால்வ ளங்களும், பயிர்கனி வளங்களும், வீரர்
வேல்வ ளங்களும், வித்தையின் வளங்களும், செய்ய
கோல்வ ளங்களுங் குடிகளின் வளங்களும், ஈகை
யால்வ ரும்புகழ் வளங்களும் இலகுக மிகவே !

அடிமை வாழ்க்கையும், அறிவிலி வறுமையும், அரக்கர்
கொடிய போர்களுங் குண்டடிக் கூச்சலும் ஒழிந்தே,
படியி லேயருள் பாலிக்கும் பணிகளும் பயனும்,
குடிகொண் டாளுக குலவுக தேவரின் குணமே.

ஏக மாகிய பரம்பொருள் இறைவனை யடையுந்
தாக மோங்குக ; சாதகர் யாவர்க்கும் சுத்த
யோக சித்திகள் ஓங்குக ; வுள்ளறி வொளிர்க !
வேக மாகநம் விருப்பங்கள் வெற்றிகா ணுகவே !”

ஒன்றி யுள்ளத் தொடுங்கி, மனத்தினை
வென்று, கண்ட விழுமிய உண்மையைக்
கன்றிற் கீயுங் கருணைப் பசுவென
நின்ற ளித்திடு நீள்புவித் தொண்டர்கள்.

அறிவும், ஆற்றலும், ஆத்தும சித்தியும்,
இறைவ னுகும் உலகினுக் கென்பவர்,
துறவு கொண்ட துகளறு நேயர்கள்,
அற வடிவம தாகிடும் அன்பர்கள்.

அரும்பு போலுள் ளடங்கித் தியானித்தே
கரும்பு போன்ற கடவு ளருட்சுவை
விரும்பி யுண்டொளி கண்டு மலர்ந்தவர்,
பெரும் புனிதன் பிறந்தநன் னுளிலே,

இரு ளரக்கர் இடர்களைப் போக்கிடும்
அருளை வேண்டினர் ; ஆனந்தம் வேண்டினுர்,
பொருள றிந்த பொதுமறை யின்வழி
திரு வுலகந் திரும்பிட வேண்டினுர்.

உளங் கவரும் உயர்ந்த நிலையத்தைப்
பளிங்கு போலப் பரிசுத்த மாக்கியே,
வளம லர்கள், வனப்புறு தோரணங்
களை நிரம்பிடக் கட்டி யணிசெய்தார்.

வனப்பு மிக்க வளைவுக ளாக்கியே
நினைக்க நன்னெறி நீதி யெழுதினர்,
அனைத்தும் வாழ்கென் றருமறை பாடினர்,
மனத்திற் பூமியின் மங்கலம் போற்றுவார்.

கனியும் பாலுங் கடலையுங் காய்களும்,
இனிய மூலிகை யின்வகை யுங்கொண்டே
புனித நல்விருந் தாக்கிப் புசித்தனர்,
மனித தேவ மரபினர் ஒன்றியே.....

காலை யெல்லாங் கரும மியற்றினர் ;
மாலை சுத்தன் மலர்க்குடி லின்முனே
நீல விண்மலர் நேர நெருங்கினர்
ஞாலம் வாழ்கென நல்லிசை பாடியே....

எளியநல் லுடையுடன், இனிய வாக்குடன்,
களிவளர் நகையுடன், கருணைக் கண்ணுடன்,
அளிவளர் கையுடன், அருட் கருத்துடன்
ஒளிவளர் சுத்தனும் உற்ற மர்ந்தனன்.

முன்னுள தொண்டரை முனிவர் காவலன்,
புன்னகை குலுங்கிடப் பூங்க ணோக்கியே,
உன்னத மலையினின் றுருகி வீழ்ந்திடும்
சன்னதக் கங்கைபோற் சந்தம் பேசினன்.

சுத்தன்

பங்கய உளத்தில் அன்புப் பரம்பொருட் சோதி யான
செங்கதிர் படிந்தே, யோக சித்தியைப் பெற்றீர், சுத்த
சங்கமின் றடைந்த நன்மை சகலரும் அடைய வேண்டித்
தங்குல கெல்லாந் தொண்டு செய்திடுந் தருண மிஃதே !

பன்மய உலக மெல்லாம் பரந்தொரு மயமாம் சுத்த
சின்மய சக்தி யாலே, சித்திகள் பலவும் பெற்றீர்,
பொன்மய உடலும், உள்ளும், பூரண வாழ்வும் பெற்றீர்,
தன்மய வுயிர்கட் கெல்லாம் பணிசெயுந் தருண மிஃதே !—

பூவினில் அசுர மாயம் புரிந்திடுந் தீதை மாற்றத்
தேவியல் கொண்ட நல்ல திருக்களை வளர்த்த செல்வீர் !
ஓவறு சாத னத்தால் உள்ளுறப் பெற்ற சித்தி
ஏவர்க்கும் எய்த வேண்டி ஏகிடுந் தருண மிஃதே !

கள்ளத்தால், அறிவி ழந்த காமத்தால், ஆண வத்தால்,
கொள்ளைப்பே ராசை யாலே, குணங்கெடு மாந்தர் மாற,
உள்ளத்தால், உண்மையான ஒன்றினை உணர்ந்தீர், அன்பு
வெள்ளத்தால்உயிர்த்தொண்டாற்றும்விழுமிய தருணம்இஃதே!

புண்ணிய பூமி வாழப் பூதல மெல்லாம் வாழத்
திண்ணிய விரதங் கொண்ட தீரர்காள், இனிநாம் சென்றே
நண்ணுறு நலந்தீ தெல்லா நாயகன் இச்சை யென்றே
எண்ணிய கரும மாற்றும் இனியநற் றருண மிஃதே !

மக்களைப் பிடித்த லைக்கு மாவலிச் சனியனுக்குத்
தக்கதோர் விடைய ளித்துத் தானவஞ் சென்று வந்த
மிக்கநல் லன்பர் சேவை விழுமிய பயன ளிக்க
ஒக்கநாம் உலக மெங்கும் உதவிசெய் தருண மிஃதே !

துன்பிருள் அடிமை யச்சந் துயர்பல மேவ நாட்டில்,
வம்புசெய் தூமகேது வகையிலா தொழிய, மாந்தர்
இன்பவா னரசை யிங்கே யெய்திடக் கரும யோகம்
அன்பினா லியற்றக் காலம் அழைத்திடுந் தருண மிஃதே !

காட்டினைத் திருத்தி, வேண்டுங் கருவிகள் உழைப்பா லெய்தி,
போட்டிபொ றாமை யற்ற புதுயுக நிலையங் கண்டீர் ;
வீட்டினை யமைத்த தேபோல், வீறுகொண் டிடரை வென்று,
நாட்டினை யமைக்க வாரீர் ; நல்லதோர் தருண மிஃதே .

எல்லையிற் பொறுமை யாலே இன்னல்கள் அனைத்தும் போக்கி,
வல்பெருந் தவங்க ளாற்றி வரம்பெற்ற சுத்த சங்கச்
செல்வர்காள், கலியொ ழிந்து, சத்திய சீலர் காலம்
ஒல்லையி னொளிர நம்மை உதவிடுந் தருண மிஃதே !

அயலவர் மாயத் தாலே, அரக்கரின் பிடிப்பி னாலே,
துயிலுறு நாடு மீண்டுஞ் சுதந்தர வுணர்ச்சி பெற்றே,
செயலுடன் எழுந்து வீரத் திருவுறு பணிகள் செய்யப்
புயவலி யுடனே தொண்டு புரிந்திடத் தருண மிஃதே.

பொன்பழுத்த பரஞ்சோதி பொழியருளி னாலே,
புதுயுகமும், புதுவாழ்வும் பூமியிலே பொலிய,
அன்புளத்தீர் வாருங்கள் அருட்பணிகள் புரிவோம் !
அசுரபயம் ஒழித்திடவே, அதிமனிதர் செல்வோம் !

பண்படுத்தி விதைவிதைத்தே, பத்திவெள்ளம் பாய்ச்சிப்
பயிரெனவே உயிர்க்குலத்தைப் பரிவுடனே போற்றி,
விண்பழுத்த பேரின்பம் வியனுலகிற் கனிய
வீறு கொண்ட வேலைதொடர் வேளையிது வாரீர்.

கல்வி கேள்வியிற் கடவுளின் அருளினிற் கனிந்த
நல்ல தொண்டர்காள், அவரவர் நாட்டினுக் கியற்ற
வல்ல தொண்டினை வகையுற நினைத்தினி வகுத்தே,
சொல்லுவீர் அதைப் புரிந்திடத் துணிகுவீர் இனிதே....

இந்த மாப்பணிக் கெழுந்திடும் அன்பர்காள், உள்ளே
அந்த ராத்மனைக் கலந்துநீர் அமைதியா யிருந்தே,
சொந்த வாழ்வையே பொதுநலத் தொண்டெனச் செய்யும்
சிந்தை யூறிய தியானத்திற் செயற்றிறம் பெறுவீர்.

சுத்த னிவ்வகை சுதந்தர வுணர்வுறப் பேசிச்
சத்தியன் செயும் பணியையுந் தகையுறச் சொல்லிச்
சித்தர் கூட்டத்தைத் தியானத்திற் சேர்ந்திட வமர்த்திச்
சக்தி யூற்றினன் ஸஹஜ சமாதியி லிருந்தே....

வான மர்ந்தது ; பூமியும் அமர்ந்தது ; மலையின்
கானமார் நதி யமர்ந்தது ; கருணையின் மன்னன்
மோனமா யமர் நிலையத்தின் முனிவரர், உள்ளே
தான மர்ந்தது—பாரத சக்தியாம் தணலே.....

ஆன்ற மாதவர் அருந்தவம் அளித்தசிற் சக்தி,
சான்ற யோகிகள் சாதனம் சாதித்த சக்தி,
ஈன்ற தாயினும் இனிதுசெய் எழில்பெறுஞ் சக்தி,
ஊன்றி யுள்வளர் ஒள்ளிய பாரத சக்தி.

இகல வர்செயும் இடர்க்குலம் ஆயிர மேனும்,
தகர் திறம்பெறத் தழைத்திடும் ஆத்தும சக்தி,
அகவிருளையும் துயரையும் அழித்தொளி துலக்கும்
பகலெ னத்திகழ் ஞானமாம் பரிதியி தாமே

அரக்கர் தீமையை வேருடன் அழித்திடும் ; கனலைச்
சுரக்குந் திவ்விய சுதந்தரச் சுடர்பெறுஞ் சக்தி ;
இரக்க மன்பருள் ஈகைதி யாக விவேகம்,
பரக்க நல்கிடுஞ் செல்வமாம் பாரத சக்தி.

ஆணில் ஆண்மையும், பெண்ணினிற் பெண்மையு மாகிக்
காணு முக்குண உலகினிற் காட்சியாஞ் சக்தி ;
வீணுறும் பிடி வாதத்தை வீழ்த்தியன் புடனே
பேணுந் தூயரைப் பெருமைசெய் பாரத சக்தி.

சோக மோகத்தைத் துரத்திடும் தூயசிற் சக்தி ;
யோக மேதரும் உத்தம நித்திய சக்தி ;
ஏக மாகியிவ் வுலகெலாம் இலகியா னந்த
போக மீந்திடும் புண்ணிய பாரத சக்தி.

சோர்வும் அச்சமுந் துயரமுஞ் சோம்பலுந் துடைத்தே,
வீர தீரமும் வினையுல கனைத்தையும் வெல்லும்
காரி யத்திற னுந்தருங் கைகண்ட சக்தி
பாரதத் திரு நாடுயர் செழுந்தவப் பயனே !

இத்தகைப் பெருஞ் சக்தியுள் ளிறங்கிடு மெல்லே,
சத்த மின்றிநற் சமயத்தில் சார்ந்தனர் இருவர் ;
சுத்த யோகியத் தூயரை யுடன்வர வேற்று
மெத்தவும் உப சரித்ததை விளம்புவ தென்னே !

செய்ய பாரத முனியுடன் சித்திமான், எங்கள்
ஐயன் பால்வரும் செய்தியோர் அதிசய மாமோ ?
"வையங் கூவுதுன் வரவினை வரத"வென் றவர்சொல்
மெய்யு ரையினை விரும்பிடார் நிலமிசை எவரே !

கண்டதும் பெருங் காதலோ டருட்பெருந் தூயன்,
வண்டுணு மலர் சொரிந்தவர் மலரடி பணிந்தே,
பண்டுடன் பசும் பால்,பருப் பவர்பசிக் களித்தே,
உண்டு சற்றிளைப் பாறவும் உலகியல் கேட்டான்.....

வீட்டிற் குற்றதும் வெவ்விய தூமகே துவினால்,
நாட்டிற் குற்றது நாயகன் யோகத்தை நாடிக்
காட்டிற் குற்றபின் கண்டதும் பாரதன் கதைக்கக்
கேட்டவா றுரை செய்குவேன் கேண்மினோ புலவீர்....

## 2. போற்றிப் படலம்

வாழ்வை முற்றிலும் வளர்தவ யோகமே யாக்கித்
தாழ்வுயர் வறச் சத்திய சமரஸ வெளியிற்
சூழ்புவியினில் ஆண்பெண்கள் சுதந்தர மாக
வாழ நல்வழி கண்டனை வரதநீ வாழ்க !

தான வர்செயும் அதர்மத்தைத் தகர்த்திட வேண்டி
மோன மாகச்சிற் சக்தியை முத்தியாற் பரப்பி,
மான வர்களை அதிமனி தரின்மர பெனவே
மேனிலைபெறச் செய்தனை ; விழுமியோய் வாழ்க !

ஆதி ஈடனும் சுவர்க்கமும் அமரநா டதுவும்,
காதை சொல்லிடும் கற்பக விண்ணுமிவ் வுலகில்,
சாதி மாமத பேதமே சார்வறச் சாந்தச்
சோதி மாதவச் சுதந்தர சக்தியாற் படைத்தாய்.

இளமை கொஞ்சிடும் இயலழ குடன்மனை யழகும்,
வளமை கொஞ்சிடும் மலர்கனிச் சோலையின் அழகும்,
தெளி புனல்களுந் தெய்விகக் கலையைக் காணும்
உளம கிழ்வுமென் னுயிரினுக் குதவிடும் களிப்பே.

துங்க மான மந்தாகினி ஓம்எனத் துதிக்கத்
தங்க மாங்கனித் தருக்களிற் பறவைகள் பாட,
பங்க மாம்புவிப் பாசங்கள் விலகிய சுத்த
சங்க மங்கள கானங்கள் சாந்தமிந் தனவே.

வேத மெய்ப்பொருள் விளங்கிடக் கண்டுளம் விண்டே,
சாத கர்களைப் பயிற்றியிச் சகத்தினுக் கெல்லாம்
ஓதி டாதற வழியினை புணர்த்திடும், பரம
சோதி வீசிடுஞ் சுத்தசங் கத்தினைப் படைத்தாய்.

கொடிய வணைந்திடு மரங்களுங் கொழுங்கனி மலரும்,
படிய ணைந்திடும் பசுமையும், படிகவா றணையும்
முடிநி வத்திடு மலைகளு, முத்தமிட் டழகைக்
கடிக மழ்ந்திடு மூலிகைக் காற்றையு நுகர்ந்தோம்.

புண்ணி யப்புனல் படிந்தரன் புகழினைப் பாடி,
விண்ண ளாம்பனி மலைகண்டு வேகமா யிங்கே
நண்ண லும்ஒரு நவசக்தி யின்பத்தை நயந்தோம்,
எண்ணந் திண்ணிய வெற்றியென் றிதயத்திற் களித்தோம்.

பரவ சம்பெறும் பாரத முனியிவை கூறி,
வரதன் சொல்வர லாற்றையும் அறிந்துதான் வகிக்கும்
விரத பூஞ்சொலி, சித்திமான் விருப்பையுங் குறித்தே,
இரவை யோட்டிடும் இரவிநீ யெழுகென வுரைத்தான்.

சுதந்தன்

இரவி இப்புது நாளினில் எழுந்தது பெரியோய்.
கரவுங் கள்ளமுங் கடுங்கொலைப் பாபமும் கடிந்தே,
சுரகு ணத்தினைத் துய்க்குமுன் சுதந்தர மற்றே,
இரவி லிப்புவி வருந்திய வகையினை யியம்பாய்.....

பாரத முனி

பத்தி மான்களின் பாவன னாகிய பகவன்,
புத்தி மான்களின் போதனை புறக்கணித் துலகம்,
எத்த கைத்துயர் வருந்திய தென்பதை, நமது
சித்தி மான்சொலக் கேளெனச் சிவமுனி குறித்தான்.

சித்திமான்

பிறந்ததும் வளர்ந்ததும் பிறர்க்கு வாழநீ
சிறந்ததும், கலியினைச் செயித்து, நீளிசை
நிறைந்ததுந் துறந்தது நிமல யோகத்தில்
உறைந்ததுங் கண்டுனை வணங்கும் உள்ளமே.

முயன்றநின் அற்புத முயற்சி திவ்வியப்
பயன்றரு நேர்மையும், பாரில் உன்றனல்,
இயன்றதும் அறிந்துளம் எண்ணி என்மனம்
வியந்தது ; மகிழ்ந்தது வெற்றி கூறியே !

அங்குநீ துறந்தனே ; அணிநிலா விலாக்
கங்குலைப் போலகக் கவலை மூண்டனம்,
இங்குன தருந்தவ வியல்பைக் கண்டதும்,
செங்கதிர் உதித்ததெஞ் சித்த வானிலே.

அன்னையும், அப்பனும், அரிய நண்பனும்,
பின்னுள தலைவனும், பிரானும் நீயென
உன்னையே நல்லவர் ஓது கின்றனர் ;
தன்னையே உலகுயத் தந்த தீரனே.

உலகினைத் துறந்தனை ; உலகுக் காகவே,
அலவற வருந்தினேம் ; அசுர மாயையாற்,
கலகமும் போட்டியுங் கலியும் கேதுவும்,
பலதுயர் செய்யினும் பான்மை கெட்டிலோம்.

மன்னுயிர்க் குலமெலா மகிழ நீசெயுந்
தன்னல மற்றநற் றவத்தை யெண்ணியே,
அன்னைதன் குழந்தையில் அமைதி காண்பதே
என்னநாம் உன்புக ழெண்ணி வாழ்கின்றேம்.

கெடுமதிக் கலியனுங் கீழ்க்கு ணத்தையே,
நடுவதிற் சலிப்பறு நாசத் தூமனும்,
படுதுயர் செய்தனர் ; பரிவு கொண்டுநீ
விடுதலை தந்திட வேண்டும் ஐயனே.

மூதறி முனிவனு முதிய ராணியும்,
தீதறு நண்பருஞ் செய்த சேவையால்,
யாதொரு தீமையும், இன்று நாள்வரை
ஆதவன் கொடியினை அசைக்க வில்லையே.

கருமமே கண்ணெனக் கடமை செய்யுமென்
ஒருமனத் திறனிலை ; உன்னை நல்லருட்
குருவெனப் போற்றிய கொள்கை, சித்தியின்
உருவினை இன்னமும் உலைக்க வில்லையால்.

நற்றவ முடிந்தது நாடு சேர்ந்துநீ
பற்றலர் கொடுமையைப் பங்கஞ் செய்குவாய் ;
ஒற்றுமை யாக்கிநல் லுறவை யூக்கியே,
தெற்றென நிலைமையைச் சீர்தி ருத்துவாய்

பொய்யிருள் போக்குவை ; புனித சக்தியால்
மெய்யருள் இலக்குவை ; மேன்மை யீகுவாய்,
துய்யநீ எங்களைத் துகளி லாமலே
தெய்விக வாழ்விலுஞ் சேர்க்க வல்லனே.

கண்ணனும் புத்தனுங் கந்த வேளும்போல்,
எண்ணிய தவத்தினுல், எடுத்த காரியம்
திண்ணிதின் அடைந்திடும் சுத்த சித்தனே,
உண்மையின் றடைந்ததுன் உபய பாதமே !

சுத்தன்

ஏன்செய லெதுவு மில்லை என்னையா ளுடைய சுத்தன்
அன்னைபோல் சக்திப் பாலை அளித்தெனை வளர்க்க லாகிப்
பின்னொரு பந்தமின்றிப் பேச்சறு தவத்தி லுய்த்தான் ;
அன்னவன் அருளை யன்றி யடியனுக் குருவு முண்டோ ?

அற்புத மான சுத்த சக்தியின் அருளி னுலே
சிற்பரா னந்த யோக சித்தியைக் கண்டேன் ; ஐய
கற்பினைக் காத்து நிற்கும் கன்னிபோல், உள்ள மூறும்
அற்பினு லவனுக்கேயான் ஆசைகொண் டுயிர்ப்ப தாமே.

எனக்கொரு வணக்கம் வேண்டேன் ; எம்பிரான் சுத்த தேவன்
தனக்குநீர் சரண மாவீர் ; சமயமாஞ் சழக்கிற் சிக்கி,
மனக்கிலே சப்ப டாமல் மறுவறும் உண்மை தன்னைத்
தனிக்குரு வாகி யுள்ளே தந்தனன் சிந்தை மேவி.

நிசமுள சுத்த சக்தி நெறியினைப் பற்றிச் சென்று,
நிசியிருள் இடர் வருந்து நில்வுல கிற்குந் தெய்வப்
பசிவளர் பத்த ருக்கும், பரனருள் வழியைக் காட்டிச்
சுசியுடன் வாழச் செய்யுந் தொண்டுசெய் தொண்டன் யானே.

இந்தநல் லுலக மெல்லாம், இராக்கதக் கொடுமை மிஞ்சி,
வெந்துய ரடைந்த போது, விடுதலை தந்து காக்க,
முந்துநாள் அருளைத் தந்து, முனிவருக் கினிது செய்த
தந்தையென் முறையுங் கேட்டுத் தன்னருள் பொழிந்தா னிங்கே.

அவ்வருட் சக்திக் கேயான் அடிமைசெய் வாயி லாக,
வெவ்விய தான வர்கள் வேதனை தீர்க்க வந்தேன்.
செவ்விய பாத்தி ரங்கள் சேர்ந்தன ; இனியிக் காலம்
ஒவ்விய செய்யு முன்னே உன்கதை யுரைத்தி டாயே....

கலியனெவ் வாறு மீண்டான் ; கலங்கறு நாட்டி லின்று
புலியெனத் தூமகேது புகுந்தவா றென்னே ? அன்னுர்
நலிவுறு ததர்மத் தாலே நாட்டினை வளைத்த தென்னே !
பொலிவுறு புத்தி மானே புகலுவை புலவ ரேறே.

# 3. கலி மீண்ட படலம்

கோகுலக் கண்ணன் போலே கோதம புத்தன் போலே,
ஆகுலந் தீர்க்க வந்தாய் அரவிந்தக் கண்ணு கேளாய் :
போகமா நகரை நீயும் பொட்டெனத் துறந்து, முன்னே
ஏகலும் உன்சொற் போற்றி இந்திரைக் குதவி செய்தோம்.

பகவநீ துறந்த தாலே, பங்கயச் செல்வி சின்னாள்
அகமலர் வாடி வாடி ஆறுத லடைந்த டைந்து,
முகமலர்ந் தெங்க ளுக்கு முதற்பெரும் அன்னை யாகித்
தகவுடன் செங்கோ லோச்சித் தருமத்தைத் தாங்கி வந்தாள்.

ஆதவன் பிசகி னாலும், அரசவை தவற மாட்டாள் ;
வேதநன் னெறியா யுன்றன் விதிமுறை காத்து நின்றாள் ;
மாதமும் மாரி பெய்ய, மன்னுயிர் மகிழ நாட்டில்
யாதொரு குறைவு மின்றி இந்திரை யன்னை ஆண்டாள்.

அன்னநம் அரசிக் கேற்ற துணைவலி யாக யானும்,
பின்னுறும் அமைச்சர் தாமும் பெருந்தகை முனியும் சேர்ந்து,
மன்னறங் காத்து, நாட்டு மக்களை உயிர்போற் பேணி
உன்னறந் தழுவி, என்றும் உண்மையைத் தழுவி யுள்ளோம்.

இணையறும் ஆத்ம ஞானம், இனியநற் கல்வி வாழத்
துணைதருந் தொழில்கள், செல்வத் துறைதரு வாணி கங்கள்,
கணைதரு வீரக் காவல், கவிதரு புகழ்கள் எல்லாம்
தணிவறத் தழைக்க நாட்டைத் தாங்கினேம் நீங்கி லாதே !

தீரனும் புத்தன் போன்ற திருவகக் கருணை கொண்டாய்,
வீரனும் சிவாஜி போன்று கலியினை வென்ற சூரா,
ஆரண முனிவர் போன்றே அருந்தவம் புரிந்த தூயா,
பாரத நாட்டை யுன்பால் அன்பெனப் பரிவின் ஆண்டோம்.

ஒளிவளர் மணியே, எங்கள் உள்ளமுன் உள்ள மாகி,
அளிவளர் உன்றன் அன்பே ஆருயிர் நேய மாகக்
களிவளர் கருத்தி னோடுங் கடமையைக் காத்து வந்தோம் ;
தெளிவளர் உனதி யோக சக்தியுந் தினமும் தேர்ந்தோம்.

தாயென நாடு தாங்கத் தருமமே அரசைத் தாங்கத்
தூயநல் லமைச்சர் வைரத் தூணென நீதி தாங்க,
நீயெமை யிங்கி ருந்தே நீளரு ளாலே தாங்கத்
தேயத்தை அன்னை தாங்கச் சேமமாய் வாழ்ந்து வந்தோம்.

அத்ததி யுலக மெல்லாம் அலைந்தலைந் துனது தந்தை
சத்தியன் இருக்கைத் தேடிச் சலித்தநம் உள்ளம் பொங்க,
உத்தமச் சிகரன்பால் உதவிய கடித மொன்று
வித்தக மன்னன் செய்தி விளம்பிட வியந்தோம் ஐய :—

### சத்தியன் கடிதம்

இளநகைச் செல்வன், சுத்தன், இந்திரை யரசி, ஞான
வளமிகு முனிவன், சித்தி மந்திரி, அனைவருக்கும்,
உளமிகும்அன்பைச்சொல்லி,"உண்மையின் அழைப்பையேற்றேன்;
எளியவன் பணிக்கி றைவன் இரங்கிநற் றுணையு மீந்தான்.

இல்லறம் இடைநின் றாலும், ஈன்றவள் எதிர்நின் றாலும்,
செல்வனின் பாசம் வந்து செல்வழி குறுக்கிட் டாலும்,
சொல்லறங் காக்குந் தூயர் துணிந்ததைத் துறப்ப துண்டோ ?
நல்விடை கொள்கிறேன் ; என் கனவினை நனவ தாக்க.

சித்தனே டசுர நாடு செல்கிறேன், கலையி னாலும்,
சுத்தசன் மார்க்கத் தாலும், சுதந்தர ஒளியைத் தூண்டி,
அத்தனின் கருணை யாலே அதர்மத்தை மாற்றிக் காமப்
பித்துடை யவுணர் போர்ப்பேய் பிறகிடத் தொண்டு செய்வேன்.

விரிவுரை யெல்லாம் சுத்தன் அறிந்திட விளம்புகின்றேன் ;
அரியதோர் கருவியாலே போகனின் அருளி னாலே,
நரசமு தாயத் திற்கு நமனென வாய்த்த ஊணர்,
தரையெங்கும் பரவி, யான்ற தருமத்தை யழிக்கின் றாரே.

மந்திரி மணியே, மீண்டும் வஞ்சகக் கலிய னுள்ளே
வந்தறந் தேயத் தீமை யிழைத்திடா வகையைச் செய்வீர் ;
கொந்தளித் தகந்தை மோதுந் தானவர் கூட்டம், உள்ளே
முந்திடா தமைதி யாக முப்புறம் விழித்தி ருப்பீர்.

இல்லறம் வழுவி டாமல், இயற்கையோ டொன்றிப் பூத்த
தொல்லறம் வழுவி டாமல், சுத்தனுர் தவத்தின் வந்த
நல்லறம் வழுவி டாது, நாட்டினைக் காத்து நிற்பீர் ;
கொல்லறங்கொண்ட வூணர் குலத்தினைத் திருத்தி மீள்வேன்.

பார்க்கின்ற உலக மெல்லாம் படுகொலை யரக்கர் செய்யும்
போர்க்கடு மைக ளின்றிப் புதுயுகம் பிறக்க நன்மை
சேர்க்கிறேன் ; முதிய வாழ்வைச் சிறந்தசன் மார்க்கத் திற்கே
வார்க்கிறேன் மீண்டு மங்கே வருகிறேன் வாகை கொண்டே...

இனையன விளக்கி மெய்யன், ஏகியங் கிழைத்த தெல்லாம்
தனையறி போகன் வந்து சாற்றிடக் கேட்டு வந்தோம்...
மனையினைப் போல நாட்டை மாண்புறக் காத்து வந்தோம்,
வினையுறு பயனுற் பின்பு விளைந்ததைக் கேளாய் மன்னு...

### கலி வருதல்

காற்றினில் ஆவிபோற் கரந்து வந்திடுங்
கூற்றையுங் கண்டுடன் கொய்து வீழ்த்திடும்
ஆற்றலைப் படைத்தவர் அணிகொள் சேனையை
ஏற்றநல் லிடங்களில் இருத்திக் காத்தனம்.

வீரருள் வீர, ஓர் வியன்செய் கப்பலிற்
காரிருட் போர்வையிற் கரந்தி றங்கிய,
போர்மத வரக்கரைப் புரட்டித் தள்ளினேம்
ஆர்கலி விழுங்கிய ததர்மக் கூட்டத்தை.

கரையறு கருங்கடற் கடந்து, மற்றொரு
பெரியபோர்ப் படைவரப் பெயர்த்த னுப்பினேம்,
திரை தரைப் படையினைத் திடுக்கிட் டஞ்சியே
விரைவுறத் தானவர் வீட்டை நோக்கினர்.

அரியவர் பெரியவர் அன்பு மிக்கவர்,
உரியவர் அறிவினில் உயர்ந்த வீரர்கள்,
எரிவிளக் கென்னவே எங்குந் தேசத்தின்
புரிகளை உயிரெனப் போற்றி நின்றனர்.

இவ்வள விருப்பினும் இகல்செய் மாவலிக்
கொவ்விய கலியனும் ஊணர் கூட்டமும்
எவ்வகை வந்தனர் என்று காணிலோம் ;
வெவ்வியர் பலபல வேடங் கொண்டனர்.

அணியணி யாகநீள் ஆழிச் செல்வத்தைக்
கொணர்பெருங் கப்பலிற் கூலி வேலைசெய்
பணியினர் வந்தனர் ; பதுங்கிப் பின்பல
வணிகரும் வந்தனர் வாங்கி விற்கவே.

பகைமுக மறைத்தவர் பகட்டு மன்பினால்,
நகைமுக மினுக்கினால், இந்த நாடெங்கும்,
வகையுறப் படர்ந்துபின், வலிய சந்தைகள்
மிகையுற விரித்தனர் விந்தை வாணிகர்.

துணி நிறை மூட்டையைச் சுமந்து விற்றவர்,
அணிபெறுங் கடைகளை அகல நாட்டினர் ;
தணிவினைக் காட்டியே தயவைப் பெற்றதுந்
துணிவினைக் காட்டினர் துறைமு கங்களில்.

அன்னசத் திரங்களும் அறம டங்களும்,
இன்னியற் கல்விகள் ஈயுஞ் சாலையும்,
பொன்னுறப் பொலிந்திடும் புனிதக் கோயிலும்,
உன்னத மனையிலும் உறைந்து சென்றனர்.

பத்தர் போற் சிற்சிலர் பகட்டி வந்தனர் ;
சித்தர்போற் சிற்சிலர் செகத்தை யேய்த்தனர் ;
சத்தர்போற் சிற்சிலர் தந்திரஞ் செய்தார்,
எத்தர்கள் ஊரினை யேய்க்கும் வஞ்சரே.

இமயமா மலைமுதல் இலங்கை மட்டிலும்,
சுமையுடன் சுற்றிய சூழ்ச்சிக் காரர்கள்,
அமைதியின் அமர்ந்துபின் அகங்க ரித்தவர்,
இமைவறு வரிப்புலி யென்னப் பாய்ந்தனர்.

கரும்பெனப் பேசிய கள்ளர் தம்மையும்
விரும்பிநல் விருந்தென வீட்டி லேற்றுமே
அரும்பசி தீர்த்தநல் லன்பர் நெஞ்சிலே
பெருந்தின வேறிட நஞ்சு பெய்தனர்.

வாணிகஞ் செய்திட வந்து, மன்னரின்
ஆணவ நெஞ்சினில் ஆசை தூண்டியே,
வீண்சமர் இளப்பினல் வீடி ரண்டுறக்
காணியுந் துறைகளுங் கலந்து பெற்றனர்.

நந்தொழி லாளரை நயந்து, கற்றதுந்
தந்தொழி லுக்கொரு சந்தை தேடினார்,
இந்தமா யாவிகள் இருவர், ஓர்பகல்
வந்தனர் என்னிடம் வணிக ரென்னவே.

கடையினை விரித்திடக் காணி கேட்டனர்,
உடையினுள் ஒளிந்திடும் உள்ளங் கண்டுடன்,
நடையினைக் கட்டுமென் னாட்டி லேயுமைத்
தடைசெயுஞ் சட்டமென் றழுந்தச் சாற்றினேன்.

முன்கலி வித்திய முரண்கள், இன்னமும்
தன்னலக் கும்பலின் சரிதை யாகிடத்
துன்னிய சாகசர் தூண்டி யாசையைப்
பொன்புகழ்க் கனவினைப் பொருந்த வைத்தனர்.

அங்கொரு மன்னனை ஆத ரித்தபின்,
இங்கொரு மன்னனை இழிவு செய்குவார்.
உங்களுக் கேயினி யுதவி யென்றவர்
தங்களுக் குதவியை நாடுந் தந்திரர்.

எண்ணுறு சூழ்ச்சியால் இடம்பெற் றன்னவர்
உண்ணியென் றொட்டுவர் ; ஒற்றர் வந்திடிற்
கண்ணினிற் பொடியினைத் தூவிக் காணிலார் ;
பண்ணிய தொல்லைகள் பகர வொண்ணுமோ ?

புண்ணிய நாட்டினிற் புலாலின் வாடையும்,
கண்ணினைச் சுழற்றிடுங் கள்ளின் வீச்சமும்
பெண்ணினங் கற்பழி பெரிய தீமையும்,
புண்ணுறக் கண்டதும் புரிந்து கொண்டனன்....

தானவ மாவலி தரக ஞகவே,
மானமி லாக்கலி மாறு வேடத்தில்,
ஈனரின் படையுடன் இன்னல் செய்வதை
நானறிந் துடனொரு சபையை நாட்டினேன்.

சிற்றர சர்களிற் சிலர் எதிர்த்தனர் ;
மற்றவர் வந்தனர் மதிவ லாருடன் ;
கற்றவர் முடிவுறக் கருதிச் சொன்னதைப்
பற்றினர் பற்றலர் படையொ டுங்கவே.....

சித்தியைச் சார்ந்த சிற்றர சர்காள் !
நாட்டுத் தலைவீர் நன்னெறி மக்காள்,
நமது சுத்த நரபதி யன்று,
முறியடித் தோட்டிய முரட்டுக் கலியன்
தானவஞ் சென்று தரும விரோதப்
படையுடன் மீண்டும் பதுங்கியே வந்துளான்.
விண்குடை தனிலும் விமானந் தனிலும்,
மீன்பிடிப் பவர்போல் வேடம் பூண்டு,
படகு களிலும் பாதகர் வந்தார்.
துணிகளை விற்கும் வணிகர் போலும்,
தொண்டர் போலும், துணைவர் போலும்,
கடையை விரித்துக் கனிவுரை பேசி,
மெல்ல மெல்ல விடத்தையூட் டினரே !
சிற்றர சர்களின் சித்தங் கலக்கி,
ஊன்மது காமம் ஊட்டி மயக்கி,
அறிவைக் கெடுத்தும், அறத்தைக் கெடுத்தும்,
ஒருவருக் கொருவர் ஒவ்வா தாக்கியும்,
சிண்டு முடித்தும் சண்டைக் கிழுத்தும்,
பழைய கதையைப் படிக்கத் தொடங்கினர்....
ஆதலால் அனைவரும் அறியச் சொல்வோம் :—
கலியன் அவன்படை காணில் எங்கும்
பிடித்துச் சிறையில் அடக்குமின் உடனே.
கதிர்க்கொடி முத்திரை காணின் அல்லது,
துணிமணி யெதையுந் தூக்கி விற்பவர்
கலியாட் களெனக் கடுஞ்சிறை யிடுமின்.
துறைமுகக் காவலர் கரைசேர் முன்பே
கப்பற் சோதனை கவனமாய்ச் செய்மின்.
விண்ணிலும் உங்கள் கண்ணினை ஓட்டீர் !
கீதையுங் குறளும் ஓதித் தினமும்,
அருட்பா டல்களை விருப்புடன் பாடிச்
சன்மார்க் கத்தைச் சார்ந்து வாழுமின்.

பஞ்சமா பாதகர் வஞ்ச வலைகளை
அறுத்தெறிந் துண்மை அறவழி நடமின்.
உலகம் வாழவே உறுதவம் புரியும்
புலவன், புனிதன், புண்ணியன் சுத்தன்,
கட்டளை தன்னைக் கருத்துடன் காமின்.
அதர்மப் படையுடன் அந்த ரங்கமாய்
உலவுங் கலியன் உதவியை நாடும்
அரசரைத் திருத்துமின் ; அல்லது விலக்குமின்.
காதுங் கண்ணுங் கருத்தும் வைத்துக்
கலியன் ஆட்களைக் கண்டுடன் கட்டிக்
காவலர் கேட்டுக் கடுஞ்சிறை யிடுமின்.
அதர்மத் தானவர் அடிமைக ளான
வேந்தர் நாட்டின் விரோதிக ளாவார்.
புண்ணிய நாட்டீர், புத்தனும் வீரனும்,
கண்ணனும் வந்த கண்மணி நாட்டீர்,
சிவாஜியும் பிரதாபனும் சீக்கிய குருவும்,
இராச ராசனும் இலகிய நாட்டீர் !
வீரத் தமிழர், வீர மராடியர்,
அக்கினி குலத்தினர், அகாலியர், கூர்க்கர்
வாள்வலி தாங்கும் வளமிகு நாட்டீர்,
பாபமே யறியாப் பாவன நாட்டீர்.
பஞ்சமே யறியாப் பல்வள நாட்டீர்,
கலைமிகு வங்கர்காள், காரியத் திறமிகும்
கூர்ச்சரச் செல்வர்காள், கொங்கணத் தொண்டர்காள்,
கன்னடப் புலவர்காள் கண்விழித் திருமின்.
அன்னியப் பகைவர்கை அடிமைப் பட்டால்,
ஆண்மையும் பெண்மையும் அறமும் பிசகும்.
பொருளெலாம் கொள்ளை போகுமென் றறிவீர்.
பஞ்சமும் பசியும் பந்தமும் பிணியும்,
மடமையும் நாட்டைக் கொடுமைகள் செய்யும்.
அறிவீர் ! ஆதலின் அன்னியப் பகைவரை
இடங்கொடா தடக்கி, இரவிக் கொடிக்கு
நன்றியோ டிருமின் ! வன்றவக் கதிரோன்
அரசன் சுத்தன் அருட்சக் தியுடன்
புதிய வாழ்வைப் புதிய யுகத்தைப்
பொற்புற நாட்டும் அற்புதப் பணிக்குத்
துணைசெய உங்களைத் தூய ராக்குமின் !
அருளைப் பெறவுள் ளன்பை வளர்மினோ !
தீமையை வெல்ல நன்மையை வளர்மினோ.....

இவ்வா றெங்கும் எழுத்திலும் சொல்லிலும்,
எச்சரித் தனைவரும் எழுந்திடச் செய்தேன்.
ஆயினும் அந்தப் பேயினுங் கொடியான்,
ஊட்டிய மயக்கால், உட்பகை கொண்டு,
நான்குசிற் றரசர் நாட்டைக் கெடுக்க
ஊணர் படையின் உதவியால் மீண்டும்,
கலியனைப் போற்றிக் கத்தியுந் தீட்டி,
எளிய மன்னரை எளிதாய் வென்றே
"அரசன் இங்கே ஆண்டி யானான்,
அரியணை வகிக்கும் உரிமை சத்தியன்
தம்பிக் கே"யென வம்பு தொடுத்துச்
சித்திக் கோட்டையைச் சுற்றிச் சூழ்ந்தார்....
உடனே நாங்கள் படைவலி கொண்டே,
பகைவர் சேனை பதறப் பொருது,
பாதியைக் கொன்றதும் பயந்தவர் ஓடிச்
சிலநாள் ஒளிந்து, சேனை திரட்டிப்
புதுக்கொடு வெடிகளாற் பொதுக்கொலை செய்து,
கலிய நாட்டைக் கைப்பற் றினரே.
சிற்றர சுகளிற் சிலவும் பற்றினார்.
செருக்குறு கலியன் செயமுடி சூடி
நாட்டை யாள நாள்வைத் திருந்தான்.....
அத்ததி அரக்கர் ஆகாய வழியே
பொத்தெனக் குதித்துப் போர்முர சடித்தார்.
தூமகே துவெனும் துட்டக் கொடியோன்,
கலியனைப் பற்றிக் கடுஞ்சிறை யிட்டுத்
தானே யரசெனத் தற்செருக் குடனே
முடிபுனைந் ததனை முதல்வா கேளாய்....
இடிவிழுந் ததுபோல் இருந்ததச் செயலே.....

## 4. தூமகேதுப் படலம்

"பொன்முடி சூடியிப் பூமி யாளுவேன்
என்னினும் பெரியவர் ஏவரே" யெனத்
தன்னகங் காரத்தைக் கலியன் சாற்றியே
மன்னவை புகுந்தனன் மமதை விம்மவே.

அத்ததி அளவறும் அன்பு பேசியே,
முத்துருள் புன்னகை முகத்திற் காட்டியே,
மெத்தவும் பரிவுடன் விநய மாகவே
எத்தனுங் கேதுவும் எய்தி னாரோ !

மாவலி யனுப்பிட மல்லர் தம்முடன்
ஆவலாய் வந்தனம் அன்பு செய்யவே,
நாவினில் அளவறு நட்பு கொண்டநம்
பூவுல காட்சியும் பொருந்து மின்பமே.

நயவுரை இவ்வகை நவின்ற கேதுவைப்
புயவரை புயவரை பொருந்தப் புல்லியே,
பயமிலே இனியெனப் பதகன் விம்மினன் ;
கயவரின் உறவினிற் கணக்குங் காணுமோ ?

நண்பகல் வெளிச்சத்தில், நட்புக் கொண்டவன்
விண்கருந் திரையிட வேறு மாறியே,
உண்களின் வேகத்தில் ஊணர் சேனைக்குக்
கண்ணடித் தொருபுறம் கலியைக் காட்டினன்.

தட்டெனக் கேதுவின் றுன வர்களும்,
கட்டினர் செருக்குறு கலியை வெம்மையாய்த்
திட்டினர், கொட்டினர், சிறையி லிட்டனர்,
வெட்டினர் விடுதலை விளம்பு மாக்களே.

கலியினைச் சிறையினிற் கட்டிப் போட்டதும்,
கிலிகொளு மோகியைக் கேது பற்றியே,
நலிவுறு முகமினி நகைமல ரெனப்
பொலிகவென் றணைந்தனன் போலிக் காமுகன்.

கற்பெனிற் கைகொட்டிச் சிரித்துக் கல்விசெய்
அற்பமாம் சுகத்தினை அவாவு மோகியும்,
புற்புதக் கனவெனக் கலியைப் போக்கியே
பொற்சுக வரக்கனைப் புல்லிக் கொண்டனள்.

ஆயிரங் கோணல்கள் அறியக் காட்டியே,
வாயிலும் உதட்டிலு மலர்கண் கோணத்தும்,
தூயரு மயங்கிடத் தொழில்செய் மாதரின்
மாயங்கள் யாவரே மதிக்க வல்லவர் ?

"கொல்லுவேன் பாதகி" என்று கோபமாய்ப்
பல்லினைக் கடித்தனன் பழங் கலியனைச்
"செல்லறுங் காசெ"னச் சிரித்துக் கண்முனே
புல்லினள் கேதுவைப் பொறுமை யேறவே....

அரக்கரை வைதனன் ; அழகு மோகி யாம்
பரத்தையை வைதனன் ; பழிசெய் கேதுவை,
உரக்கநின் உயிரினை உலைப்பன் என்றனன் ;
இரக்கங்கொள் அண்ணனை எண்ணிக் கூவினான்.

சத்தியச் செம்மலே, சாது மன்னனே,
எத்தனை பிழைகளை யியற்றிக் கெட்டனன் !....
சித்தியின் மரபினைச் செருக்கத் தீட்டிய
கத்தியென் கழுத்தினைக் கதறக் கொய்ததே.

யாதொரு தீமையும் இயற்றி லாதநின்
ஆதவன் குலத்தினை அழிக்க முந்தினேன் ;
பாதகப் பதரினைப் பரிந்து மன்னிப்பாய் ....
வேதனை தந்தது விதிவி னைப்பயன்.

ஒட்டுற வாகிய ஒருகு லத்திலே
கெட்டவன் உதித்தனன் இளைய னாக்கவே.....
பட்டனான் ! வினைப்பயன் ! பாச வெஞ்சிறை
விட்டதும் அடைக்கலம் ! விமல நாதனே !.....

ஐயனை என்னுடை யண்ணல் மைந்தனைத்
துய்யனை யடைந்தினித் தொண்டு செய்தலே
உய்வழி என்றனன் உருக்குச் சங்கிலி
கையிலுங் காலிலுங் கலக லக்கவே. 60

இச்ச மயம் இகல்செய் அரக்கர்கள்,
அச்சு றுத்தி யடித்துப் பறித்ததை
மெச்சு கேதுவின் வெற்றி விளைவென
உச்ச மாக முரசடித் தோதினார்.

காலிக் கூட்டங்கள் கட்குடித் தாடிடக்
கூலிக் கூட்டங் குரலெடுத் தோதிடப்
போலிக் கூட்டங்கள் பொன்முடி சூட்டிடக்
கேலிக் கூத்தினைக் கேட்டு வியந்தனன்.

உலகை யாளும் உயர்ந்தநல் லாட்சியாங்
கலையை எங்குங் கனக வெறியினாற்
கொலைசெய் யூணக் கொடுஞ்செயல் வேந்தனும்
மலையைப் போலந்த மன்றில் எழுந்தனன்.

காகந் தன்னை வெருட்டிக் கருநிசி
கூகை தன்புகழ்க் கூச்சலிட் டாலென
ஓகை கொண்டபல் ஊணர்கள் வாழ்த்திட,
மோகி-கேது முறுவலித் தோதினான் ;

தூமகேது

மாவலி எங்கள் கோவலன் உயர்த்திய
வாட்கொடி யின்கீழ் வந்தமா னிடர்காள் !
என்னை அரசாய் ஏற்ற நண்பர்காள்,
தானவச் சட்டந் தலைக்கொண் டென்னுடன்
அரிய தொண்டுகள் ஆற்றிட நின்றீர்.
பெரிய நலஞ்செயப் பிரியங் கொண்டே
கடலைத் தாண்டிக் ககனந் தாண்டி,
உடலுக் குற்றிடும் இடர்களைத் தாண்டி,
உங்களை யாங்கள் உய்விக்க வந்தோம்.
பலமதம், பலவகை பலநிறங் கொண்டே,
கலகமிட் டிழிந்த கடையரை நாங்கள்
அமைதியாய் வாழவே அடக்கி யாளுவோம்.
சாதி வேற்றுமை, சமய வேற்றுமை
சாமி வேற்றுமை சற்று மின்றியே,
எண்டிசை மாக்களைத் தொண்டராய்க் கொள்வோம்.
எனதுன தென்னும் இகலும், போட்டியும்,
இல்லை யினிமேல் எல்லாம் எமதே.
மானிட ராக மாநிலத் துள்ளார்,
தானவ ருக்குச் சமவூ ழியரே.
நாட்டிய விதிப்படி நடந்தார் மகிழ்வார்.
ஊனை வளர்க்கும் உணவு தருவோம்.
ஊக்க மளிக்கும் *ஒன்றை ஊட்டுவோம்.
இளமை விரும்பும் இன்ப மளிப்போம் ;
ஆடல் பாடலின் அருவிருந் தளிப்போம்.
தானவர் வகுத்த சட்டந் தவறினல்,
எங்களுக் கெவரும் எதிர்சிறி தாற்றினுல்,
கட்டளை மீறிக் கதையை வளர்த்தால்,
கேட்டதைத் தராது கெடுவினை வைத்தால்,
துப்பாக்கி யாலே சுட்டுப் பொசுக்குவோம்.
தூக்குப் போடுவோம், துப்பாக்கி காட்டினுல்,
பீரங்கி யுள்ளது ; போர்களுக் கேற்ற
விமான வெடிகளும் வெவ்விடப் புகைகளும்,
கண்ணிகள் பலவும் காத்திருக் கின்றன.
மாவலி யடியார் மடியார் என்றும் ;
மாவலிப் பகைவர் மடிவார் உறுதி.
அறிஞரும் புலவரும் அப்புறஞ் செல்க.

---

* மது

படிந்து நடக்கும் அடிமைகள் வருகவே !
அள்ளிப் பணந்தரும் புள்ளிகள் வருகவே !
எம்மையே பணியும் ஏழைகள் வருகவே !
இவரே என்னர சியக்கும் கருவிகள்.
அரசன் மாவலி ஆணவத் துடனே
கடும்போர் தொடுத்தான் ; காரணம் அறிமின் !
அனலனிந் நாட்டில் ஆட்சி பெற்றால்,
ஆளையும் பணத்தையும் அள்ளி விழுங்குவான்.
உள்ள வளமெலாம் கொள்ளை போகும்.
பஞ்சமும் பிணியும் பரவுமென் றெண்ணியே,
உங்களுக் கெல்லாம் உற்ற நண்பனும்
மாவலி யரசன் மற்போர் தொடுத்தான்.
போரினை வெல்லப் பொற்குவை தாரீர் !
நன்றிசெய் வீரே நன்றிசெய் வீரே !

* * *

இளர்ச்சியாய்த் தூம கேதுபே சிடவே,
அடிமைப் பொம்மைகள் ஆஹா என்றன !
மடையரும் செல்வரும் சடசட வென்றே
கையடித் துடனே பைகளை அவிழ்த்தார்.
மாவலி கேது வாழிய நீடெனக்
குடித்தனர், களிப்பிற் குதித்தனர்; ஆங்கே
பறைகள் கொட்டின பல்லிய முழங்கின,
அழகிளம் பாவையர் அரக்கனைப் புகழ்ந்து
பாடினர் ஆடினர் பரிசுகள் பெற்றார்.
"எம்மைக் காக்கவே இத்தொலை கடந்து
கப்ப லேறிக் கருணையோ டுற்றீர்,
தெய்வமு நீரே, திருமறை நீரே,
உமக்கே நாங்கள் ஊழியர்" என்று
மானங் கெட்ட மதியிலி மன்னரும்,
வயிறே பெரிதென வாழும் மாக்களும்,
அடிமை வலையில் அகப்பட் டாரே....
கலிநகர் அரக்கர் களிநக ராகவே,
பாரத தருமம் பாழாய் மறையும்,
அநுசா ரங்களும் அக்கிர மங்களும்,
வளர்ந்து, மக்கள் வாழ்வைக் கெடுத்தன.
நாத்திகப் படிப்பும், நாத்திகத் தடிப்பும்,
தலைவரிக் கொடுமையுங் கொலைவெறிக் கொடுமையும்
அன்னியச் சரக்கும், அகத்தொழி லழிவும்,
வறுமையும், கல்லா மடமையும் வலுத்தே,
புண்ணிய பூமி கண்ணியங் கெட்டதைக்

காணக் காணக் கவலைக் கண்ணீர்
பெருகினேம் உள்ளம் உருகினேம் ஐயா..... 153

# 5. போராடிய படலம்

சுத்தன்

மதுபுலால் அரக்கர் வந்து, மகுடமும் பூண்ட தென்னே !
முதுபுகழ் சிறந்த நாட்டின் மொய்வலி மூய்ந்த தென்னே ?
பதியறம் விளங்கு நாட்டிற் பாபத்தின் பேரி கைகள்
அதிர்வதும் என்னே ? நம்மோர் அடிமைகள் ஆன தென்னே ?

வேல்கொண்ட வெற்றி, வேத வித்தகர் வெற்றி, செய்ய
கோல் கொண்ட வெற்றி யின்பங் குடிகொண்ட பரத நாட்டில்,
போலிகள் புகுந்த தென்னே ? புண்ணியந் தேய்ந்த தென்னே?
மால்கொடு மன்னர் இன்று மாவலிக் கிசைந்த தேனோ ?

தேசமெந் தேச மென்றே சிந்தனை செய்வோர் எங்கே ?
ஆசையாய்ப் பொது நலத்தை யணிந்திடுந் தொண்ட ரெங்கே ?
நேசமன் னர்களெங்கே ? நேர்மையும் அறமும் எங்கே ?
விசுமின் வாளு மெங்கே ? விதிவலி தான தந்தோ ?

சுதந்தரத் தணலைக் கொண்ட சூரரின் வீர நாடு,
மதந்தரு தான வர்க்கு மண்டியிட் டடிமை யான
விதந்தனை யறிகிலேன் ; பின் விளைந்ததை யறிகிறேன்;என்
இதந்தரு சித்தி யங்கே யியற்றிய கடமை யென்னே ?

தொண்டையும் அடைக்கக் கண்ணீர் துளும்பிடத் தூய னுங்கே,
பண்டைநன் னுடு போன கதியினைப் பகர்ந்த போது,
எண்டிசை திகைத்த தேங்கி, யியற்கையும் விசன மிக்கக்
கொண்டது காற்றும் புள்ளுங் குரலடைத் திருந்த மாதோ !

சித்திமான்

ஆங்குறு மோனந் தன்னை ஆண்மையாற் பிளந்த மைச்சன்,
"நீங்கறு கருணை யாலே நீளுயிர்த் துயரை யெண்ணிப்
பூங்கணீர் வடிக்கும் எங்கள் புனிதனே, நாங்க ளெல்லாம்
தூங்கினே மில்லை ; எங்கள் சூரப்போர் கேளா" யென்றான்.

தோற்க வில்லை துணிவுறு வீரர்கள் !
ஏற்க வில்லை இகலவர் ஆட்சியைப்
பார்க்கப் பார்க்கப் பதைத்துளம் பொங்கியே,
வேர்க்க வெட்கி விரைந்துடன் கூடினேம்.

வீட்டை யன்னியர் வெய்துறப் பற்றியே
நாட்ட றத்தை நலிக்குங் கொடுமையைச்
சாட்டை யென்னச் சரேலென் றுணர்ந்தனம்.
திட்டு வாளொடு செஞ்சினங் கொண்டனம்.

வங்கர் கூடினர், மாரதர் கூடினர்
சிங்கம் போன்ற செழுந்தமிழ் வீரரும்,
தங்கம் போன்ற சமர்த்தருங் கூடினர்
எங்கள் பாரதம் என்னும் உணர்ச்சியால்.

பணத்தி னுக்கும், பரத்தைக்குங், கள்ளுக்கும்
குணத்தை விற்றுக் குடிகெடுந் தாதரைப்
பிணத்தை யொப்பப் பிறகி லொதுக்கியே
கணத்தி லொற்றுமை கண்டுமு னின்றனர்.

தன்னலந் துறந்தாய் தவ சக்தியால்,
இன்னல் போக்கும் இறைவநின் அன்பையே,
உன்னி நாங்கள் உருவியெம் வாளினை
மின்னிட் டோங்கும் விரதங்கள் கொண்டனம்.

கல்லும் வேதத்தைக் காட்டிடும் பூமியில்,
வில்லும் வேலும் விரோத வரக்கரை
வெல்லும் வீறுகொள் வீரரின் பூமியில்
எல்லை மீறி இகற்கொடி யாடுமோ ?

அருந்த வத்தில் அமைந்த சமூகத்தின்,
வருந்து நோயும் வறுமை மடமையும்
தெரிந்த ரக்கர்செய் தீமையும் ஆகுமோ ?
புரிந்த நீதியும் பொய்யெனப் போகுமோ ?

வசிக்க நல்ல வளம்பெறு பூமியும்
புசிக்க நெல்லும் பொலிந்தொளிர் நாட்டிலே,
பசுக்கொ லையும் பரிவறச் செய்தெமை
நசுக்குந் தானவர் நாடக மாகுமோ ?

*நாலெட் டென்று நலம்செய் தருமங்கள்
சாலப் போற்றும் சமரஸ நாட்டிலே,
சீல மற்ற திருவிலி ராக்ஷஸர்
கால சக்கரங் கைக்கொண் டிருப்பதோ ?

---

* பொது நலத்தை வளர்க்கும் 32 தானங்கள்: அவை. பசு, பயிர், கல்வி, கலை, தொழில், தாய்மொழி, உலகமொழி, பூத பௌதிக, ரசாயன சாத்திரங்கள், இல்லறம், மக்கள், ஒழுக்கம், வீரம், கடவுளன்பு, அரியநூல்கள், பிரமசரியம், அஹிம்சை, உடலுறுதி, வீட்டு நலம், ஊர் நலம், தேச நலம், உலக நலம், ஆன்மநலம், ஆன்மநேயம், ஒற்றுமை, ஐம்பூதநிறை, செங்கோல், ஆண்பெண் கற்பொழுக்கம், யோகசித்தி, யோகசித்தர், திருமடம், கோயில், குளம் முதலியவற்றைக் காத்தலாம்.

புரையி லாத புலவர் அருளிய
கரையி லாத கலைவளர் நாட்டிலே,
நிறையி லாத நிருதரின் கும்பலும்
வரையி லாத வழக்கை வளர்ப்பதோ ?

கூற்றி னுக்குங் குலைந்தக மஞ்சிடார்,
ஆற்றல் பெற்றவர் †ஆரிய வீரர்கள்,
நேற்று வந்த நிருதர்முன் னேயிவர்
தோற்றனர் எனுஞ் சொல்லுமுண் டாவதோ ?

மனைய றத்தினை, மக்கள றத்தினை
அனைவ ருக்கும் அமைதி யளிக்கின்ற
தனைய றியும் சதாத்ம வறத்தினை
இனிது போற்றிடு மெங்கள் சுதேசமே !

"ஆவு, மந்தண்மை யாளரும், பெண்டிரும்,
காவலனும், கடன்முறை காட்டியே,
மேவு வேதமும் வாழ்"கென வித்தகர்
தூவு மாமலர் தூய்மை யிழப்பதோ ?

வாழை போன்று வழிவழி வாழ்கின்ற
தோழ மையுந் துகளறு நீதியும்,
வீழ நாட்டினில் வீணர் கொடுமையால்
ஏழை யின்விழி நீரிங் கிறைப்பதோ !

குறையி லாத கொடைவளர் செல்வமும்,
சிறையி லாத திருவினர் கற்புடன்
கறையி லாத கருணை யரசுடன்
வரையி லாத வளம்பெறு நாடிதே !

முதுபெரும் புலவர் முனிவர் பலர்
துதிகள் பாடித் தொழுதநன் னாட்டிலே,
இதய மற்ற விராக்கதர் இன்றுசெய்
மதும யக்கை மறுப்பறக் காண்பமோ ?

பொன்ம ணித்திரள் பொங்கிய நாட்டிலே,
கன்ம யோகியர் காத்திடு நாட்டிலே,
வன்மங் கொண்ட வணிக நிருதர்கள்
பன்ம ணியைப் பகற்கொள்ளை கொள்வதோ ?

தாங்கு கின்ற தரும நிலத்தினைத்
தீங்கு செய்யுந் திருடர்கை விட்டுநாம்
தூங்கு வீரத் துடிப்பறப் பின்விழித்(து)
ஏங்கிக் கைபிசை யும்இழி வாகுமோ ?

† ஆரிய : நேரிய

ஒன்றி யாக உலகைச் செயித்திட
வன்றி நல்பெறு மாதவர் நாட்டிலே,
கொன்று யிரைக் குடிக்கும் அவுணர்கள்
வென்றி கூறி விறைத்து நடப்பதோ ?

கோல மாளிகை கோபுரக் கோயில்கள்,
சால மாநிதி சத்தியங் காத்திடுஞ்-
சீல மன்னர் திருத்திய நாட்டிலே
கால பாசர் களிநட மாகுமோ ?

ஆட்க ளுண்டுநல் லாயுத முண்டெழுந்
தோட்க ளுண்டு, சுடர்பெறு வீரரின்
வாட்க ளுண்டு மனமுண்டு, நாட்டினே
வேட்க, வீரர் வருகென வீறிட்டோம்.

பற்றலர் படைத்திறம் பார்க்க வேண்டியே
ஒற்றரை ஏவியுள் உளவு பார்த்ததும்,
வற்றறு கடலென வலிய சேனையாற்
பற்றினம் ஊணர்கள் பற்றும் ஊர்களை.

கொழுந்தெறி கனலெனக் கோபத் தானவர்
எழுந்தனர் ; அடிமைகள் இசைமு ழங்கவே ;
அழுந்தநம் படைக்குலம் அமர்செய் தோட்டவே
இழந்தனர் முதற்சமர் ; இன்னும் வந்தனர்.

எங்கிருந் தெழுந்தார் என்றே இன்னமும் அறியோம் ஐயா !
பொங்கிடுங் கடலைப் போலும், பூகம்பம் போலும், ஊணர்
சங்கையில் ஆயு தங்கள் சகடைகள் விமான ராசி,
வெங்கதப் படைக ளேந்தி சித்தியை விழுங்க வந்தார்...

அத்தனை கொடிய தாகும் ஆயுத மில்லோ மேனும்,
உத்தம வீரர் சேனை ஒன்றுபட் டிகலை வென்றோம்.
பித்தர்கள், அடிமை மன்னர், பின்னரும் வழியைக் காட்டச்
சத்துரு சேனை மீண்டுஞ் சாடிய தைய கேளாய்....

ஊழி வெள்ளமோ ஊணர் சேனையோ,
ஆழி யேழுமே ஆர்த்து வந்தவோ ?
நாழி தன்னலிந் நாடு முற்றுமே
பாழ்ப டுத்தவே பாய்ந்து வந்ததால் !

காடு மாமலை கரந்து நாங்களும்,
சாடி வேங்கைபோற் சண்டை செய்துமென் ?
வீடு காத்திட வேண்டுஞ் சோதரர்,
ஆடு காத்தஓ நாயென் றுயினுர்.

கடையு கப்புயற் கடலெ ழுந்திட
மடைதி றந்ததோ ! சண்ட மாருதப்
படைதி ரண்டதோ பகைதி ரண்டதோ,
இடையறுப் புகை யிருள் செறிந்ததோ !

வன்ம னத்தினர், வஞ்ச நெஞ்சினர்,
தன்மை யற்றவர், தான வர்களின்
புன்ன கைபெறப் போக வாழ்வுறப்
பொன்ம யக்கினிற் போர்தொ டுத்தனர்.

உண்மை நோக்கிலார், உரிமை நோக்கிலார்,
பெண்மை நோக்கிலார், பெருமை நோக்கிலார்,
கண்மை யற்றவர் கல்லி னெஞ்சினர்
திண்மை யுற்றசிற் றரசர் சேனையே...

ஈட்டி வாளுடன் எடுத்த போரிலை;
தோட்டி னவுறத் தொடுத்த போரிலை ;
போட்டி போட்டுபீ ரங்கி பூமென
வேட்டு டன்கொலை வீறும் போரிதே.

மண்ணி லேயெதிர் மாவ லிப்படை
மண்ண ழுந்திட மற்பு ரிந்தனம் ;
விண்ணி லேறியே வேக மாகவே
எண்ணி லூணர்கள் குண்டெ றிந்தனர்....

* * *

அந்தோ கொடுமை, அந்தோ கொடுமை,
கோட்டை கொத்தளங் கோபுரங் கோயில்,
அரண்மனை வீடுகள் அறிவுமன் றங்கள்,
மருத்துவ சாலைகள் மகளிர் இல்லம்,
எல்லாம் குண்டால் இடிந்துமண் ணாயின....
தேசச் சிற்பிகள் செய்து வியந்த
கலையின் அற்புதம் கனவெனச் சென்றதே !
பெண்டிர் மூத்தோர் பிள்ளைகள் ஆக்கள்,
அனற்குண் டுகளால் அடிபட் டிறந்த
காட்சி இரத்தக் கண்ணீர் தருமே.
தரையிலுங் கடலிலும் வருபகை யெல்லாம்
வென்றேம் ; அரக்கரைக் கொன்றேம் ; ஆயினும்
நூறு மயில்வரை ஏறிப் பறவையில்
விண்ணி லிருந்தே கண்கா ணமல்,
நாச வெடியும் நச்சுப் புகையும்,
நோதரு வெடியும், பேயொலி வெடியும்,

வீசினர் ; எதிர்க்க வேறு வகையிலோம்,
ஒளிந்துயிர் பிழைத்தே ஓடிச் சென்று,
சித்திக் கோட்டையிற் சிந்தித் திருந்தோம் :—
எத்திசை எங்கே இராக்கதர் இருக்கை,
எப்படி யிவர்கள் இங்குவந் தார்கள்,
இத்தனை வெடிகளும் எப்படிக் கொணர்ந்தார்—
என்பதைக் காண வியலோம் ஐயா ;
இருப்பினும் முயற்சி சிறப்புறு மென்றே
அர்த்தசாத் திரமும் அதர்வ வேதமும்,
ஆயுத நூலும் ஆழ்ந்து பார்த்து,
ககனப் புரவியும் கடுங்குண் டுகளால்
அழியா வேலியும், பழிக்குப் பழிதரும்
குண்டுகள் சிலவும் குகைகளிற் செய்து,
கலிநக ரத்தைக் கலக்க வெழுந்தோம்.
வங்கர் தமிழர் மராட்டியர் சீக்கியர்,
அக்கினி குலத்தார், ஆந்திரர், முதலியோர்
பதுங்கி யிருந்த பறவைக் கப்பல்கள்
பாழ்பட் டழியப் படார்வெடி போட்டதும்,
கலியின் கோட்டையைக் கதமுறத் தாக்கினேம்.
அரக்கரும் அரக்கரின் அடிமை மாக்களும்,
திகைத்திட மீண்டும் சேனையால் வளைத்துப்
புதிய கருவியாற் போரும் புரிந்தோம்.
துரோகி யொருவன் சுதந்தர விரோதி,
ஒன்னலர்க் கெங்கள் உளவெலாம் சொல்லி,
ஆயுதக் குகைகளை அழியச் செய்தான்.
இராக்கதர் மீண்டும் எம்மைத் துரத்தி,
வந்தனர் சித்தி வாயல் வரைக்கும்.
சித்தியில் எங்கள் சிறந்த சேனைகள்
இடிமின் புயலென வெடிப்புகை கிளரப்
போர்கொடுத் தரக்கரை வேருடன் ஒழிக்க,
முயன்ற பொழுதும், பயின்ற துரோகிகள்,
நாட்டை மெல்லக் காட்டிக் கொடுத்து,
சித்திக் கோட்டையைச் சிதைக்கத் தூண்டினர்.
எங்கிருந் தென்றே இன்னும் அறியோம்
எண்ணெய் கரியாய் ஏகும் வண்டிகள் ;
பதினு லங்குலம் ப்ரும்பீ ரங்கிகள்
வந்தன மீண்டும் ; வலிமையை ஊன்றி
உயிரைத் தந்தே உயிரினும் பெரிய
மானந் தன்னை மயக்கறக் காத்தோம் ;

ஆயிரம் ஆயிரம் ஆட்பலி தந்து,
பேயரை முடிவிற் பெரும்போர்க் களத்தில்
முறியடித் தோட்டி முரசு கொட்டினேம்.
பெருஞ்சமர் புரிந்து பிழைத்தது சித்தியே.
பிழைத்தது கதிர்க்கொடி பெருமநின் னருளால்.
நாடு முழுதும் சோடை யடிமைகள்
அரக்கரை அஞ்சி அஞ்சித் தாழ்ந்தும்,
சித்தியின் பொன்னுர் சிகர ஜோதி
முன்போல் ஒளிரவே என்பணி செய்தேன்.
எத்திறச் செயல்கள் எங்களால் இயலும்,
அத்திறச் செயல்கள் அனைத்தையுஞ் செய்து,
காந்த வேலி கட்டி மேலே
குண்டையுந் தடுக்குங் கூரை யமைத்துக்
கண்க ளுறங்காக் காவலும் வைத்துச்
சித்தியை அரக்கர் தீண்டவொண் ணது
காத்து நிற்கிறேம் கருணையி னுலே.
முன்னே கலியை முறியடித் திடவே
செய்து வென்ற செருவினும் கொடிய
போர்களைச் செய்தும், புரட்சி செய்தும்,
தூம கேதுவைத் துணிந்தெதிர் பேசக்
கூட்டம் போட்டுங் கூக்குர லிட்டும்
ஓயா தரக்கர் உள்ளே வருந்தக்
கிளர்ச்சி செய்தும் தளர்ச்சி யின்றியே
சூரியன் ஒளிரும் சுதந்தரக் கொடியைப்
பற்றிநிற் கின்றேம் பகவநின் னருளால்.
எனினும்,
ஒற்றுமை யின்றி, உள்ளன் பின்றி,
ஓரினம் என்னும் உணர்ச்சியு மின்றி,
அன்னியத் தானவர் அடிமை யாக்கிய
நம்மவர், நமக்கே வெம்மையைச் செய்யும்
தீமையி னுலே தீரர் முயற்சி
வீணாய், நாடு வீழ்ச்சி யடைந்து,
வருந்து நிலையினித் திருந்திட வேண்டி,
பூரண சித்தி பொலியத் தவஞ்செய்
பூரண யோகிநீ போந்தருட் பணிசெயும்
காலம் வந்தது ; ஞாலம் அழைத்தது,
பாரத முனிவரும் பண்புடன் கண்டே
உன்னை அழைக்கவே என்னுடன் எழுந்தார்.
ஐயநீ எமக்கினி அருள்புரி வாயே....

பாரத முனிவர்

சுடச்சுட நோற்றுத் துரியா தீத
நிலைபெற் ருெளிரு நின்மல யோகியே,
சுத்தச் சுடரே, அத்தினம் உன்ருய்,
கண்ட கனவே காட்சியா னதுவே.
பஞ்ச வடியிற் பண்ணவன் சாந்தன்
பகர்ந்த தெல்லாம் பழுதறும் உண்மையே.
நாத்திகத் தானவர் நாடெலாம் பரவி,
உலகெலாம் பரவிக் கலகமே தொழிலாய்
அன்பறம் வருந்தத் துன்புறு செயலே
செய்தனர் ; அதனுல் வெய்துறும் உலகும்,
புண்ணிய பூமியும், புனிதனே நின்னை
முறையிட் டழைத்தன ; குறைதவிர் வள்ளால்,
இங்கிருந் தேநீ இயற்றிய நலங்களை
நன்குநாம் அறிவோம் ; ஞாலம் போற்றிடும்
பெரியரும் அறிவார் ; அரியமெஞ் ஞானியே,
உள்ளிருந் தியற்றிய உயர்வினை பலவும்
வெளியிருந் தியற்றும் வேளையும் இதுவே.
பயிற்றிய சித்தர் படையுடன் எழுந்து,
வாராய் உன்னை வரவேற் றிடவே
சித்தி மக்கள் ஒத்துநிற் கின்ருர்.....
ஊனுங் கள்ளும் உளங்கெடு நடையும்
காமமுங் கொலையுங் கல்வியில் லாத
மடமையும் வறுமையும் அடிமைப் புத்தியும்,
பஞ்சமும் பிணியும் பார்க்கச் சகியா
நோவுந் துயரும் மேவிய உலகின்
இற்றை நிலைமை இயம்புவ தென்னே....
உன்னினும் அறிந்தார் உலகினில் உண்டோ ?

சாந்தன்

முந்துநான் முதற்போர் ஆங்கே முடிந்ததும் உரைத்த காலம்
வந்தது ; தீமை யெல்லாம் வழுத்திய வாறே யின்று
வந்தன ; உலகைப் பற்றி வருத்தின ; வரத நீயும்
வந்ததைத் திருத்துங் காலம் வந்துனை அழைத்த தின்றே.

அஞ்சுபா தகத்தை மிஞ்சி ஆயிரம் பாத கங்கள்
வஞ்சரின் கோள்பொருமை வளர்கொடுந் துயரப் போர்கள்
கஞ்சியென் றுழைக்கும் ஏழை கண்ணிநீர் வடிக்குங் காட்சி,
எஞ்சிய கொடுமை யெல்லாம் ஏவரே அறிந்தி டாதார்....

தானவர் அசுர மாயந் தந்ததீ வினைக ளெல்லாம்,
வானுல கெங்குங் கண்டோம் ; வருணித்த லினியும் என்னே !
நினைரைக் காக்க வந்த திவ்விய வாழ்வின் மன்னு
நாவில முய்யுந் தொண்டு நாட்டிடச் சமய மிஃதே.

சென்றனர் வார மாகச் செகம்புகழ் உனது சேவை
வென்றிடக் கௌரி மீண்டும் வியன்பெருஞ் சக்தி யாக
நின்றெதிர் பேசு கின்றாள் ; நிமலநின் பணிக்கே அன்னாள்
'இன்றுநான் வருவேன்' என்னும் இன்னிய சொல்லுங் கேட்டேன்.

ஆதலால் சுத்த சக்தி அருளினால் இனிநாம் சென்று,
மேதினிப் பணிசெய் கால மேவிய தென்று சாந்தன்
ஓதிய போதே, யாங்கே உயரொளி விமானங் கண்டார்...
சோதிமின் போற்சு ழன்று சுழன்றது தாழக் கண்டார்.

வனத்தின் உயர்வி னின்று வையத்திற் றுவு கின்ற
வானம்பா டியினைப் போலே வந்தெதிர் குதித்த நல்வி
மானத்தி னின்றி றங்கி வருபவர் யாவர் ? அன்னார்
ஏனிவண் வந்தா ரென்றே இக்கணம் அறிகு வோமே. 296

# 6. சக்தி விஜயப் படலம்

எண்ணிய பணிக ளிங்கே இயற்றிட வேண்டித் தூயன்
உண்ணினை யுணர்வே போல உள்ளமும் உருவுங் கொண்டே,
விண்ணினின் றிறங்கும் தெய்வத் திருவருள் விளக்கம் போலே,
கண்ணுளங் களிக்கச் சக்தி பாட்டனின் காப்பில் வந்தாள்...

போகன்

போகனுங் கிருந்து, சக்தி புனிதன்பால் அடையச் செய்து,
"தாகமாய் உன்னை யன்பு செய்திடுந் தயைமி குந்த
சீகரன் பேர்த்தி சக்தி சீலமும் வீறுங் கொண்டாள்,
ஏகநா யகநின் கௌரி இவ்வுருக் கொண்டாள்" என்றான்.

சத்தியன், உந்தை அந்தத் தானவ ரிடையே செய்த
உத்தமப் பணிகட் கெல்லாம் உயிரென வுதவி செய்தாள்.
பித்துறும் அரக்கன் எம்மைச் சிறையினிற் பிணித்த போதிச்
சத்தியே விரதங் கொண்டுன் சத்தியாற் கிளர்ச்சி செய்தாள்.

இரவொடு பகலும் உன்னை எண்ணியன் பிசைக்கு நீராள் ;
கரவிலாத் தூய நெஞ்சள், கருணையே உருவ மானாள் ;
வரமிகு குரலும் பாட்டும் கவிதையும் வாக்கும் பெற்றாள்,
சரசுவ தியுடன் காளி தாமரைத் திருவும் போன்றாள்.

இங்குன தமர்க்க ளத்தில் உடலினை ஈந்த கௌரி,
அங்கிவ ளுட்பு குந்தே அதிசயம் புரிந்தா ளைய.....
வெங்குலத் தான வர்கள் வெறிகளற் றுனது நன்மை
பொங்குறத் திருந்த வேண்டிப் பொதுநலம் புரிந்த நங்கை.

தந்தைமா வலியின் கெட்ட தனங்களைச் சீகரத்தாய்
சுந்தரி யோடெதிர்த்துச் சுத்தசன் மார்க்க சங்க
மந்திரி யாகி,யூணர் மரபையே மாற்றி வைத்த
தந்திரக் கலையில் வல்லாள் சக்தியுன் சக்தி யன்னாள்....

இயல்புற உன்னை நட்டாள், இயல்புற உள்ளே கண்டாள்,
இயல்புற உன்னைக் கேட்டாள், இயல்புற உனக்கே வாழ்ந்தாள்,
இயல்புற வுனது தொண்டே இன்னுயிர்ப் பணிய தானாள்,
இயல்புற உன்பால் வந்தாள் இனியுனக் கின்ப மாமே !

போக னிவ்வகை புகலுமுன் புன்னகை யாலே,
ஓகை காட்டியவ் வுத்தம சக்தியைச் சுத்தன்,
வேக மாய்வர வேற்றவள் சரண்புகுந் ததுவும்,
யோக சக்தியைப் பெய்துடன் உரைசெயப் புக்கான்....

சுத்தன்

அன்று போர்க்களம் ஆவியாய் மேலெழுந் தாங்கே,
சென்றென் அன்பினைத் தியானத்திற் செறிவுட னுணர்ந்தாய்,
ஒன்றி வாழ்ந்தநம் உயிரினிப் பிரிதலும் உண்டோ ?
நன்றென் சக்தியாய் வாழ்கநீ நீடென நவின்றான்.

வருக கௌரியே, வருகநின் வாழ்வினிப் பொலிக !
தருக நின்னையித் தரைமிசை தருமமோங் கிடவே ;
வருக சக்தியே பாரத சக்தியாய் வாழ்க !
தருக நின்னையே தானவர் குலந்திருந் திடவே....

முந்தத் தானவ நாட்டினைத் திருத்தவென் முதிய
தந்தை சென்றதுந் தியானத்திற் சக்தியாய்க் கௌரி
எந்தைக் காற்றிடும் இயல்புறுந் துணைகளுங் கண்டேன்.
சிந்தையா லிருந் தங்குநான் செய்ததை யறிவாய்....

வன்மங் கொள்செருக் கோங்கிய மாவலி திருந்திக்
கன்ம னங்கரைந் திடவொரு காரியஞ் செய்தாய்.
நன்ம ருந்துபோல் வந்தனை பாரத நாட்டிற்
கன்ம யோகஞ்செய் ; காத்திருந் தேனெனப் புகன்றான்.

கௌரி சக்தி

முன்னுறு பிறவி தன்னில் உனதரு முதல்வி யாகிச்
சொன்னதை நிறைவு றுத்தத் தூயநின் பணியே தாங்கி,
இன்னொரு சக்தி தேகம் ஏந்தியான் வந்து சேர்ந்தேன்.
என்னவா எம்பி ரானே என்னையா ளுடைய கோவே !

தானவ ரிடையே தோன்றித் தானவர் கொடுமை வீழ,
ஊனுட லுள்ளே கௌரி உன்சக்தி யாக வந்தாள்,
நானென ஒன்றும் இல்லை ; நம்பனே நீயே எல்லாம் ;
ஆனதை அறிந்துன் னன்பே ஆருயி ராகக் கொண்டேன்.

வெல்லுக நினது யோக வித்தையின் சக்தி யெங்கும்,
தொல்லுல கனைத்தும் ஓங்கித் துலங்குக அருளி னாட்சி ;
சொல்லுவ தினியென் ? ஐய தொடங்குவோம் கடமையென்றே
சொல்லறு மின்பக்கண்ணீர் சொரிந்தனள் அறிந்த நல்லாள்!

சுத்தன்

அருமை யாகிய செயல்களை யாற்றிடத் துணைசெய்
பெருமை பெற்றதோர் பெண்ணினைப் பெற்றசீ கரனே,
திருவின் மாமுனி செப்பிடத் தெரிந்தனன் அனைத்தும்,
வருக மன்னநீ எந்தையின் வலக்கரம் போன்றாய்....

உனது மாமகள் உயிர்த்தநம் சுந்தரி சக்தி,
எனது கௌரியின் இன்னுயிர் தாங்கிடும் சக்தி,
தனது வாழ்வினைப் பொதுநல வாழ்விற்கே தந்த
மனது யர்திரு மகளொரு மாசிலா விளக்கே !....

அருளைப் பெற்றநல் லணியிவள், அவனியிற் படர்ந்த
இருளைப் போக்கிடும் இனியபுன் னகைத்திரு வுடையாள் ;
தெருளு றத்தெளிந் தென்னுளே செறிந்தெழும் வாக்கைப்
பொருள றிந்திவள் போற்றியிப் புவிக்கருள் புரிவாள்.

அன்பு கொண்டிவள் ஐக்கிய சித்தியும் பெற்றாள் ;
என்ப ணிக்கிவள் எழுந்ததே இதன் குறிப் பாமே ;
நண்ப நான்கொண்ட நாளினை எப்படி யறிந்தாள் ?
இன்பத் தாயுடன் எந்தையும் என்னவா யினரோ ?

முனிவன் வந்தபின் முயன்றநன் முயற்சிக ளெல்லாம்
இனிதெ மக்குரைத் திடுகெனத் தூயனும் வினவக்
கனிமு கத்துடன் சீகரன் கைகுவித் திறைஞ்சிப்
புனித நாங்களும் புரிந்ததைக் கேளெனப் புகன்றான்.

சீகரன்

பொறிக ளின்கலை தேர்ந்தநம் போகமா முனியின்
அறிவி னாலென தரசினில் அமைத்தசூட் சுமத்தால்,
இறைவ நாங்களிவ் வுலகெலாம் இல்லத்திற் கண்டு,
நிறைவு றப்பெரு நினைவுகள், இயன்றன புரிந்தோம்.

தான வத்திலும், ஆணவந் தன்னிலும் அன்பர்
ஈனப் போர்களின் இரத்தவீண் இதுவெனக் காட்டி,
ஞான மானசன் மார்க்கத்தின் கிளர்ச்சியை நாட்டிக்
கோனை வேண்டிலர் ; குடியர செழுந்திடக் குறித்தார்.

அரக்க வேகத்தில் ஆயுதப் போர்புரிந் தலுத்தே,
பரக்கும் ஆணவம் பாழ்பட மாவலி யாங்கே
இருக்குந் தன்மையை யறிந்துநம் இணையறு மெய்யன்,
திருக்க ளோங்கிய சுந்தரி தொடர்ந்திடச் சென்றான்.

மாண நன்னெறிக் கிளர்ச்சியால் வசஞ்செய்து நாட்டை,
ஊணர் போர்வெறி உலைந்திடக் குடியர சுயர்ந்தே,
வீணர் வாழ்வினை யுன்வழி விளங்குறத் திருத்திக்
காணத் தொண்டுசெய் கருத்துடை யாரிரு வருமே.

அன்ன வாறவர் செய்தலும், நின்னருள் அடைந்த
மின்னொ ளித்திரு சக்தியும் வேகமா யெழுந்தே
உன்ன ரும்பணிக் குறுதுணை யாகிட உற்றாள்....
பொன்னின் மாமணி போன்றினிப் பொலிகநின் பொருளே!

சித்தி கண்டனம் கௌரி விலாசத்தைச் சேர்ந்தே,
பத்தி யாய்த்தொழு தோம்;அந்தப் பத்தினித் தெய்வம்,
சத்தி யாயுனை யடைந்தனள் ; சகத்தினில் இனிமேல்
சுத்த சக்தியின் சுடரொளி பரவுக தினமே.

போரி லாதவிப் புண்ணிய பூமியும், இன்று
போரி லேவளர் அரக்கரின் புரட்சியாற் சிதைந்து,
காரி ருள்படர்ந் துள்ளதைக் கண்டனம் ; ஐய,
பாரி ருள்தெறப் பரிதிபோல் எழுந்திடும் பண்பா.

எடுத்த நல்வினை இயல்புற முடித்துவெவ் வரக்கர்
கெடுத்த பூமியைக் கேடறத் திருத்திநல் லறிவைக்
கொடுத்துத் திவ்விய சீவனங் குலவிட நீசெய்
அடுத்த மெய்வினைக் காவன புரியுமென் அன்பே.

சுந்தன்

வீரத்திற் பெரியாய், இங்கே வெய்யவர் கொடுமை யாலே
போரொத்த கருவி செய்யப் புகலிலோம் ; சென்று நீயுன்
சீரொத்த தீவில் வேண்டுந் திட்டணி படையைச் சேர்ப்பாய் ;
கூரொத்த படையும் வேண்டும் ; குறிப்பறிந் தனுப்ப லாமே.

ஆற்றலை யனைத்தும் ஆற்றின் அருளிசை முரல்வ போன்றும்,
காற்றலை மேக மெல்லாங் கருணைவான் பொழிவ போன்றும்,
வேற்றலை வின்றி நாமும், விரும்பிய புண்ணி யத்தைப்
போற்றலைக் குறிப்பின் இங்கே புரிவினை புரித லாமே.

தீரமும் வேண்டும் ; உள்ளத் திண்மையும் வேண்டும் ; ஆத்ம
வீரமும் வேண்டும் ; ஊணர் வெறியெழப் படைந டத்திப்
போரினைத் தொடுத்தால், யாமும் போருக்குப் போர்கொ டுத்து,
வேரொடுந் தீமை சாய விடுதலை வழங்கு வோமே.

கத்தியின் பலத்தை நாமும் கடைசியாய் வைத்துக் கொண்டு,
புத்தியின் பலத்தி னாலே, பூரண யோகந் தந்த
சத்தியின் பலத்தி னாலே, தானவர் செருக்கைப் போக்கிச்
சத்திய யுகத்தை நாட்டச் சாந்தமாய்ப் பணிகள் செய்வோம்...

அன்னதே செய்வோம் என்று சீகரன் அன்பு கூறப்
புன்னகை புரிந்து தூயன் புனிதநா வின்று ; நீவிர்
முன்னுல குய்ந்து சுத்த சமரஸ முத்தி சேரத்
தன்னறி வுண்மை யொன்று தருகுவீர் இராவில் என்றான்..132

# 7. யோக சித்தி எழுந்த படலம்

மோக மற்ற முனிவர் அருளிய
ஆக மத்தும் அருமறை யுள்ளத்தும்
ஏக மாயுணர் எவ்வகை ஞானமும்
யோக சித்தி யுணர்த்திடக் காணுவாம்.

நீண்ட மாதவஞ் செய்த நிமலர்கள்,
பூண்ட மாதவத் தின்பொருள் யாவுமே
வேண்டு சுத்தன் விரும்பத்தி யானத்தில்
ஈண்டு சித்தி யெழுந்தது கேண்மினோ !

கான மாமலர்க் காற்றுடன் கங்கையும்,
மீன ளாவி மிளிர்மதி வானமும்,
மோன மாக முனிவருட் பூத்தருள்
தேன ளாவிய செஞ்சொலைக் கேட்டவே.

வெண் கடலெழும் வெண்மணித் தாழிபோல்,
விண் கடலில் விளைந்தபொற் சோதிபோற்
கண் கருத்துட் கலந்த சமாதியில்,
உண்மை பொங்கி ஒலியுருக் கொண்டதே.

இயற்கை யின்பம் இலகும் இமாலயம்,
இயற்கைக் கானக மேந்திய சாந்தத்தில்
இயற்கை யொன்றி யிறைவனைக் கண்டுளே
இயற்கை யோகத் திருந்த முனிவரே ; 20

சுத்த ஜோதிச் சுடர்மணி யானவர்,
சுத்த சக்தி சொரூபத்தைக் கண்டவர்,
சுத்த னோம்பிய சுத்தசங் கத்தினர்
சுத்த யோகியர் ஆத்மசு தந்தரர்.

உயர் துரிய ஒளிமணி மாடத்தே
இயல்பி னின்றுறும் இன்பமெய்த் தூயவர்
பயிலும் யோகப் பயனே யளைந்தவர்,
துயர் கெடுத்தசுத் தானந்தத் துங்கரே.

புலனே வென்றவர், புந்தியி லேமனச்
சலன மின்றி நிலைத்துப சாந்தத்தால்,
இலகு தத்துவ மெய்தியஃ தாகியே
உலகை யுள்ளத் தடக்கிய உத்தமர்.

தூம னத்தினர், தூய செயலினர்
தூமொ ழியினர் தூய கருத்தினர்,
பூமி வாழப் பொழியு மழையெனச்
சேம சக்தி செழிக்கப் பொழிபவர்.

இருண டுங்கும் இனிய முறுவலாள்,
அருணத் தேவி யழகில் அரும்பிய
கிரண முத்தென உள்ளங் கிளர்ந்தெழும்
கருணே யான கனிமொழி வல்லவர்.

பொங்கு மானந்த போத சொரூபத்தை
நன்கு ணர்ந்து, நடுநிலே கண்டவர்,
இங்கு சுத்தன் இதயத்தொ டொன்றியே,
தங்கி நின்றனர் யோக சமாதியில்.

கதிரை யுண்டு விரிந்த கமலம்போல்,
மதியை யுண்டு மடல்விரி யல்லிபோல்,
இதயப் பூவிரிந் தின்பம் பருகியே
மதுவென் றின்னிய வாக்கு வழங்கினர்.

ஆழ்ந்த யோகத் தநேகம் வருடங்கள்
வாழ்ந்து கண்ட வரம்பெறும் உண்மையைச்
சூழ்ந் தெழுதித்தம் சுத்த குருபதந்
தாழ்ந்து வைத்தனர் 'சத்தியம் வெல்' கென்றே.

தூயர் தந்த சுருதி மொழிகளே
நேய ஞகிய நின்மலன் ஆய்ந்துதன்,
வாய்மை கண்ட வரகவி வாக்கிஞல்,
ஏய வேத மியற்றி முடித்தனன்.

ஒன்றி யுள்ளத் தொளிகண் டுரைத்தவன்
இன்று தந்தநல் லீரடி யின்னிசை
நன்று லகு நயந்து பயின்றிடும்
வென்றி செய்பொது வேதமென் ருனதே.

வாய்ந்தநல் வேதந் தன்னை வரிவரி யாக நோக்கித்
தோய்ந்ததிற் படிந்து, யோக சித்தியின் சொரூபங் கண்டு,
ஓய்ந்தது சமயச் சண்டை உலகொரு குலமாய் வாழத்
தூய்ந்தமிழ் யோக சித்தி துலங்கிய தென்றான் சுத்தன்...

பூரண யோக சங்கம் பூவெலாம் பொலிய, மாந்தர்
நாரண ராகத் தேவ சீவன நயந்து வாழக்
காரண மாகும் யோக சித்தியைக் கருணை வள்ளல்,
சீரிய சுத்த சங்க சீலருக் கிந்து சொன்னான் :

சுத்தன்

பளிங்கு போன்றநல் லுளத்திற் பார்த்துசுத் தான்மா
விளங்கி யப்பர மானந்த விளக்கமே வாழ்வாய்த்
தெளிந்த மேலவர் சிந்தனைத் திரளிது காணீர் ;
குளிர்ந்த தென்னுளங் கொண்டிதை ஓதுமின் உடனே...

கடவுளும் உலகும் அறமும் அறிவன்பும்,
நடையும் இல்லமுங் குலந்தொழில் அரசுட னவின்றே
இடைய றுத்தவ யோகமும் சித்தியின் இயல்பும்,
அடைய மானிடர் அமரராம் அருளொளி தருமே.

மனிதர் தேவராம் பன்னிரு சாதன வகையை
இனிது ரைக்குமிந் நூலினை ஆரபி யிசையில்,
அனைவரும் இசைத் திடுகென அன்புடன் அளித்தே,
புனித னேதிடப் புங்கவர் சங்கமோ தியதே.... 80

சத்தி யாழுட னிசைத்திடத் தவப்பெரு முதல்வர்,
ஒத்த நெஞ்சுடன் சுத்தன்பின் ஓதிட ஒருங்கே,
சுத்த யோகத்தின் சித்தியை விளக்கிடுஞ் சுருதி—
நித்தி யானந்த ஓமென விரிந்தது நிறைந்தே....

எல்லா உயிர்க்கும் இறைவன் ஒருவனே
எல்லா உடலும் இறைவனா லயமே
எல்லா ருக்கும் இயல்பாம் இன்பம்,
எல்லா வாழ்வும் இறைவன் யோகமே !

என்று நூலினை இனிதுறத் தொடங்கியத் தூயர்,
நன்றி சைத்தனர் ; நாதமா மறைநலங் கிளர ;
என்றும் அன்பரின் இதயத்திற் சுழலுமந் நூலை
ஒன்றி நல்லுல கோதிட வுரைப்பதெம் உவப்பே. 92

# 8. யோக சித்திப் படலம்

## 1. கடவுளியல்

### 1. கடவுள்

ஓங்கார மாகி யொளியா யுயிர்க்குயிராய்
நீங்காதான் இன்ப நிறைவு.

உள்ளத்தான், ஓங்கு முலகத்தான், பேரின்ப
வெள்ளத்தான் விண்ணின் விளக்கு.

எண்குணத்தான், ஏகனே, எல்லா மடங்கவுளான்
புண்ணியனும் போதப் பொருள்

காற்றைக் கனலைக் கதிரைக் கடலுலகைத்
தோற்றினு னன்பர் துணை.

எல்லா மவனுடைமை ; எல்லா மவனுணை ;
எல்லா மவன்பொதுவென் றெண்.

### 2. உள்ள பொருள்

பெயர்வடி வாதியவாம் பேதங் கடந்த
வுயர்பொருளொன் றுண்டென் றுணர்.

பலர்பற் பலவாகப் பாரிற் பகர்வர் ;
உளனெருவ னென்றே யுணர்.

ஐந்தரணுக் குள்ளே யரசாளு மன்னவனை
ஐந்தடங்கி யன்பா லறி.

அருளாலே யுள்ளத் தறிவா யிலங்கும்
பொருளாலே யின்பப் பொலிவு.

விழிமி னெழிமினுள்ளே விண்ணரசைக் கண்டு
செழிமின்சுத் தானந்த சித்து.

### 3. அருள் விளக்கம்

அறிவுச் சுடரோ னருட்கதிரா லெங்கும்
நிறையு நிறைவை நினை.

தாக்கற்று நோக்குந் தனித்தலைவன் சந்நிதிக்கே
யாக்கன்முத லைந்தொழிலு மாம்.

ஒன்றெனவுந் தோற்ற மொடுக்கமதி லேயெனவுங்
கண்டவனே காட்சிக் கிறை.

பிண்டத்தி லுள்ளான் பிரமாண்டத் திற்கோயில்
கொண்டுலவுந் தெய்வமெனக் கொள்.

நானென்ற மாயை நலிய நலியவுனைத்
தான்கொண்டு போற்றுமருட் டாய்.

### 4. வழிபாடு

நேசம் பதிந்துள்ளே நின்றுருகி, நெஞ்சாரப்
பேசினாற் பேசும் பிரான்.

அன்புண்மை யாக அமர்ந்த கடவுட்குன்
அன்புண்மை யால்வழிபா டாற்று.

பற்றற்றுப் பற்றிப் பணிந்துணர்வா லர்ச்சித்துத்
தொட்டுநில் ; அஃதே துதி.

எனதென தென்ன லிடராகு மென்றும்
அவனது வென்ன அருள்.

தம்மைக் கொடுத்தோர்க்குத் தன்னையே தந்தருளும்
அம்மையப்ப னாணைவழி யாற்று.

### 5. கடவுட்டன்மை

மகிழ்விற் படைத்தளித்து மாற்றும் பொருளை
அகத்தூய்மை யாலே யறி.

வாய்மை நலனோன்பு வன்றொண் டடக்கமிவை
தூயவனைச் சேருந் துணை.

மெய்யன்பு நல்லுறுதி மேதக்க வொப்புரவாந்
துய்யவுளத் தொண்டர் துணை.

காமம் வெகுளி கலக்கமி லாதமனச்
சேமமத னாலிறையைத் தேர்.

உள்ளப் பொதுவெளியி லோங்கு மணிவிளக்கைக்
கள்ளமற வுள்ளுறவிற் காண்.

## 2. உலகியல்

### 1. உலகாலயம்

உயிர்மேனி யாக்கொண்டே யோங்குமொரு சோதி
பயிலா லயமுலகு பார்.

ஆருயிர்கட் கோருயிரா யாங்காங்கு நின்றியங்கும்
பாரால யத்தானைப் பார்.

விரிவா னுலகை விளங்கருளா லாடும்
பரமான்மா வாகவே பார்.

உலவுடலஞ் சிற்றுலகாம் ; உள்ளத்தான் கோமான் ;
நிலவியல்பே நீதி நெறி.

இயற்கையே யாக்கை ; யிறைவனே யான்மா ;
உயிர்க்குல மோர்தொடர்பென் றுன்.

## 2. உலகநிலை

உண்டில்லை யென்றேயாச் சண்டையேன் ? உள்ளவரை
பண்டுலகிற் பாங்குற் றிரு.

வகுக்கு மனமயக்கால் வையத்தைக் காணேல் ;
உகக்கு மொளியறிவா லுன்.

இருப்ப தொருபொருளே ; யெல்லா மதுவே ;
பிரிப்பதுபொய் மாயப் பிணி.

ஆலுக்கும் பூசனிக்கும் ஆய்ந்து கனிகொடுத்த
ஞாலத்தான் வைப்பே நலம்.

மாறித் திரிந்து வளர்மன் னுலகினிலே
மாறுத வொன்றை மதி.

## 3. இயற்கை

இயற்கையின் புத்தகமே யின்பாக நோக்கிற்
பயக்கு மறிவுப் பழம்.

பேசாது பேசிப் பெருநல் லறிவுணர்த்தும்
ஆசா னியற்கையே யாம்.

கதிராற் கடன்முகந்து, கார்மேக நல்கி,
யிதஞ்செய் யியற்கையென் றுய் !

ஓசைப் படாம லொருகோடி யற்புதஞ்செய்
தேசுற்றுள் சித்தாடுந் தாய்.

இயற்றுவ தெல்லா மியற்கையதைப் பற்றிப்
பயிற்றுக வாழ்வைப் பரிந்து.

## 4. உலகுயிர்

ஒவ்வோ ருயிரு முலகின் வினைக்கணியாய்த்
தெய்வம் படைக்குமெனத் தேர்.

வினைக்களவு தோற்றம் ; விமலனரு ளாலே
யனைத்துயிரும் வீடடைத லாம்.

போக்கு வரவற்ற பூரணனைக் கூடுதற்கே,
மீக்கூர்த்துச் செல்லுமுயிர் மேல்.

பெண்ணின்றி ஆணில்லை ; ஆணின்றிப் பெண்ணில்லை ;
எண்ணிருவர் சேர்ந்தே யிகம்.

வேறுபா டெல்லாம் விகற்ப மனமயக்காம்
ஊறுபா டென்றே ஒதுக்கு

### 5. உலக வாழ்வு

தன்னியல் பாந்தெய்வத் தன்மை யறியாக்கால்,
என்னபய னிப்பிறவி யே?

ஆட்சிபெற் றுள்ளே யகில விளையாட்டைக்
காட்சிபோற் கண்டு களி.

எத்தனையோ காரியங்க ளிந்த வினையுலகில்;
அத்தனையும் ஆடலென லாம்.

வினையுலகை யஞ்சாத வீரன்போல் வெல்க—
மனவுறுதி யாலே மகிழ்ந்து.

அகிலவாழ் வத்தனையு மான்மவிரி வாக
நிகழுவதே யுண்மை நிறைவு. 100

## 3. அறவியல்

### 1. அறம்

தானு நிறைவுற்றுத் தன்னவரு மின்புறுதற்
கானவொழுக் காறே யறம்.

மன்னு மனச்சாட்சி மன்னவன்சொல் என்னவென
வுன்னி நடத்த லுயர்வு.

'இவ்வழிச்செல்' லென்றென்றுள் ளெச்சரிக்கை செய்யுமே
அவ்வழியி லச்சமறச் செல்.

அறமென் றறிந்ததனை யஞ்சாது செய்மின்;
இறைவனருள் காக்கு மினிது.

இறந்தபின் னெப்படியோ; ஈங்கண் ணுலகிற்
சிறந்த திருவினையைச் செய்.

### 2. அறவிரிவு

யாதொன்று காலத்திற் கேற்றபொது நன்மையதை
வாதின்றி யாற்றி மகிழ்.

பழமை பழமையெனும் பல்லவியே பாடேல்;
புதுமை புதுமையெனப் போ.

மோகமய மின்றி, முரணற்ற முன்னேற்றம்
நாகரிக மென்றே நவில்.

தொடர்ந்தார் துயரந் துடைக்காத செல்வன்
கடமை வழுவியோன் காண்.

எதுதீ தெனநோக்கி யெள்ளற்க ; நன்மை
யதுபோற்ற லாற்ற லறிவு.

### 3. அறத் தகுதி

போக்கும் வரவும் பொழுதுமறி யோமதனால்,
யாக்கையோ டேசெய் யறம்.

உண்ணா வுடுக்க வுவந்திருக்க நன்முயற்சி
பண்ணல் அறவாழ்வின் பண்பு.

சோர்வு விடுத்துச் சுயேச்சை யடைந்துலகில்
வீரனாய் வாழ விரும்பு.

உலகோ ரருட்குலமா யொன்றியினி தோங்கு
நலமார் பொதுநிலையை நாட்டு.

உள்ளொளியிற் பூத்த வுயிர்வாழ்விற் சாதிமதச்
சள்ளையிலை சச்சரவுந் தான்.

### 4. அற நெறி

விண்ணின் விரிந்த வியன்செய் யறநூலின்
உண்மை யுடுவி னுறும்.

அன்புண்மை யின்சொ லடக்கம் பொறுமையருள்
இன்பப் பொதுநெறியென் றெண்.

கொலைபுலை, கூத்தி, குடிகளவு, சூதாம்
வலிய நரக வழி.

வசைசின வஞ்ச வழக்கற்றுத் தீய
நசையற்று நாணுற்று வாழ்.

மூவழுக்கு நீங்குகவே, முத்தூய்மை யோங்கிநர
தேவர்குலம் வாழ்க செழித்து !

### 5. பொது நலம்

பிறர்க்கென வாழும் பெரியோரே சேர்வார்
துறக்கத்துங் காணாச் சுகம்.

எத்துணை நன்றெண்ணி யிவ்வுலகிற் கன்புசெயல்
அத்துணை யான்மவிரி வாம்.

ஈசன் அருண்மொழியை யெவ்வினத்தார் சொன்னாலும்,
ஆசையுடன் கேட்ப தறிவு.

அற்பம் பெரியதென் றெண்ணும லன்புசெயு
நுட்ப வறிவுடமை நோன்பு.

கீண்மேற் பிறரொடுதான் கேண்மைதெய் வொன்றெனவே
காண்போன் கருணைக் கடல்.

# 4. அறிவியல்

## 1. அறிவு

அறவின்பம், வாழ்வி னழகின்ப மெல்லாம்
அறவின்ப ஊற்றி னமிழ்து.

எங்குற்றே மென்னசெய லெங்கேக லென்றறிவோன்
கங்குற் கடல்கடந்தோன் காண்.

போக்குவர வற்ற பொருளான்மா ; நானதுவென்
றேக்கமற் றின்புற் றிரு.

யானு முலகு மறிவுண்மை யின்பமயம் ;
ஏனோ வெருவ லினி.

நம்பு, நினை, முயல் ; நாடொருமை ; ஞானமாம்
இன்பம் பெருகு மினிது.

## 2. கல்வி

அறிவு தொழிலொழுக்க மாண்மை யழகாந்
திறமான கல்வித் திரு.

இயற்கைவளத் தோங்கி, யியற்புலனைத் தூண்டும்
இயற்கைநெறிக் கல்வி யினிது.

ஆற்றல் மிகப்பெருக்கி யாளாக்குங் கல்வியினைப்
போற்றுக வீரர் பொலிந்து.

மெய்க்கு மறிவிற்கு மேன்மை யுறுதிதராப்
பொய்க்கல்வி யாலென் புகழ் ?

ஈகையு ளீகையா மின்கல்வி ; பெற்றவனுக்
கேகுழி யெங்கு மிசை.

## 3. கற்ற பயன்

கற்ற வழியாற்றக் கற்றோனே கற்றோனும் ;
மற்றவன் கற்ற மடம்.

அருளற்ற நெஞ்சில் அடைத்தநூற் குப்பை
பொருளற்ற வெற்றுரையைப் போன்ம்.

புலனைவென் றோனே புலவனும் ; பாட்டாற்
கலகலப்போன் பேச்சுக் கடை.

வெள்ளத் தனைய விரிநூ லளந்தாலும்
உள்ளத் துணர்வே யுயர்வு.

கல்வியும் வாழ்வும் கவியுஞ் சுவையும்போற்
புல்லுவதே செல்வப் பொலிவு.

### 4. ஆசான்—சீடன்

ஆசா னருளு மழிவில் லறிவொளியே
காசினிக் காகுமுளக் கண்.

வானும் விளைநிலனும் வாரிதியும் வெற்பும்போல்,
ஞானகுரு செய்யு நலம்.

நாட்டிற் பெருந்தகையா ளுளைவீ ரற்கறிவை
யூட்டினுன் பெற்ருரி னூங்கு.

அழகுநிறை யாசானுக் கன்புடைமை யீந்து,
பழகிடலே நல்லறிவின் பண்பு.

நாடிப் பணிந்தோதி, நற்சேர்க்கைத் தொண்டுடனே
சீடன்மெய்க் கற்றல் சிறப்பு

### 5. கலை வளர்ச்சி

போற்றுக தாய்மொழியைப் பொன்போற் புறநயங்கண்
டேற்றுக நாளு மெழில்.

அருளறிவி லூறி, யழகிற் றவழ்ந்து,
பொருள்செழித்த பொற்கவியைப் போற்று !

பாட்டும் பரதமும் பண்புள்ள நாடகமும்
நாட்டிற்கு நல்ல நலன்.

கண்ணைக் கருத்தையுறக் கைந்நயத்தை யின்புறுத்தும் ;
கண்போல நுண்கலையைக் கா.

மெல்லியர்க்கு மென்கலைகள் ; வீரத் திறனுண்மைக்(கு)
எல்லார்க்கும் எண்ணே டெழுத்து. 200

## 5. அன்பியல்

---

### 1. அன்பு

அன்பே கடவுளா மன்பே யருஞ்சமயம்
அன்பே யறிவிற் கணி.

அன்புள் ளிருந்தால், அடவியிலு மச்சமில்லை ;
தன்போல் அகிலவுயிர் தான்.

சுமையுமெளி தாகுஞ் சுடுபகைநட் பாகும் ;
நமனும்போ மன்பை நயந்து.

பொன்புகழி னுலன்று ; பூதவுட லாலன்றே ;
அன்பினுல் ஆளை அறி.

தாயன்பு காட்டித் தமர்பிறரென் றேரமிலா
நேயனுக்கு முண்டோ நிகர் ?

## 2. இனிமை

இன்சொல்லி னில்லை யியம்பி னிணங்காரின்
வன்சொல்லை மாற்று மருந்து.

கன்மீது கூர்செய்யுங் கத்திபோல், வன்சொல்லில்
இன்சொல்லைக் கூர்செய் யினிது.

விருப்பினிய சொல்லேயாம் வெம்பகைவன் கோப
நெருப்பை யவித்திடுநன் னீர்.

மாற்றான்செய் துன்பமெலா மன்னித்துத் தான்மறக்கும்
சீற்றமிலான் சீரியனே தேர்.

தன்பிழையைப் போக்கிப் பிறர்செய் பிழைதாங்கி,
அன்புசெய்வான் அன்பர்க் கிறை. 220

## 3. இன்னாத செய்யாமை

இன்னாத செய்யாமை யென்னும் ஒழுக்கத்தாம்
மன்னுயிர்க் கெல்லா மறை.

'கொல்லேன், விழையேன், குடிகளவு சூதெண்ணேன்,
பொய்யே'னென் றேயுறுதி போற்று.

மனத்தி லிரக்கமிலா மக்களை மாக்கள்
இனத்தினுஞ் சேர்த்த லிழுக்கு.

கதறக்கொன் றானுண்ணுங் காதகர்க்கே தன்பு ?
மதுவுண்பார்க் கேது மதி ?

கூற்று மிடுகாடுங் கூடிய மாக்களே
நாற்றவுட லுண்ணு நரர்.

## 4. நட்புரிமை

மாணப் பெரியது மன்னோ, மயக்குலகில்
ஆணவமில் லன்புத் தொடர்பு !

சீரியர் கேண்மை சிறிது கிடைத்தாலும்,
ஆருயிர்க்கு நல்லமுத மாம்.

இடித்துத் திருத்து மிணக்க மினிது ;
கொடுத்தும்புன் கேண்மை கொடிது.

உடல்பொரு ளாவி யுதவியுங் கொள்க
கடவுட் பெரியார் கழல்.

உயிரைக் கொடுத்து முயிர்பிரியா துள்ளே
உயிரொன்றி நட்டார் உறவு. 240

### 5. பொறுமை

ஆற்றல் பொறையளவே யாகு மதனாலே
யேற்றம் பெறுமெங்கு மே.

வாய்மை, பகையாமை, மாட்சி, மனப்பொறுமை
காய்வானைக் காயும் படை.

பொறுமை புவிவெல்லும் புன்னகையால் ; வாணப்
பொரிபோற் சினங்கரிந்து போம்.

காந்தியைப் போன்ற கருத்துறுதி யோடு நீ
தேர்ந்த திருவினையைச் செய்.

அறந்தாங்கி வாழும் அருட்பெரியார் என்றும்
இறந்தும் இறப்ப திலர்.

## 6. நடை யியல்

### 1. ஒழுக்கம்

முகத்தில் விளங்கும் முறையான வாழ்வால்,
அகத்தொளிரு மான்ம வழகு.

தெய்வ மிகழார்க்குத் தேவரெதிர் பேசார்க்குப்
பொய்புகலார்க் காகும் புகழ்.

தன்னடை போற்றுதான் சான்றாண்மை பேசுவதின்
மின்னைக் கரிதிட்டன் மேல்.

குற்ற மிரங்கிக் குறையற் றெழுமின்கள் ;
அற்றே நடையோங்கு மாறு.

காலையி லாற்றுங் கடமை வழுவார்க்கு
மாலையி லுண்டாம் மகிழ்வு. 260

### 2. தீயன விலக்கல்

முரடர் துணையு முரண்பாடாஞ் சான்று
கரடியீ யோட்டுங் கதை.

பேரைக் கெடுத்துப் பிணிசேர்க்கும் வேசைவழிச்
சேராரைச் சேருந் திரு.

வேரோ டொழிக விலைவாழ்வு ; வீட்டறத்திற்
சீரோங்கு பெண்டிர் சிறந்து.

வட்டாஞ் சகுனி வலைப்பட்டு மன்னவர்கள்
கெட்டாரம் மாயம் கெடு.

நடையை மதியை நலத்தைப் புகழைக்
குடியைக் கெடுக்குங் குடி.

## 3. புன்மை விலக்கல்

கோள்பொய் புகன்று குளிரவோ ? வுன்னெஞ்சை
வாள்கொண் டறுக்குமனச் சான்று.

காதலரை நாயின் கதைகட்டிச் சீரழிக்கும்
பாதகரைப் பார்த்தல் பழி.

தற்பெருமைத் தம்பட்டந் தன்னுள்ளே யொன்றுமிலை ;
அற்பமதி யாணவமே யாம்.

கற்கண்டு போற்பேசிக் காறுது தீவைப்பார்
மற்கொண்ட மாற்றாரிற் கேடு.

எள்ளி யிழித்த லிரத்தல், பிறர்பொருளைக்
கொள்ளைகொளல் புல்லர் குணம்.

## 4. வாய்மை

தூய்மையும் வாய்மையுந் தோழ ரவர்நட்பு
வாய்பவர்வாழ் வின்ப வனம்.

'இப்பொய்யே யின்றுரைத்தோம்' என்று வருந்தியுடன்
அப்பொய்யை நீக்க லறிவு.

பயனுள கூறும், பழிபகையைப் போக்கும்—
நயனுள நாவி னலம்.

பக்குவத்திற் கேற்ற பயனுரையே பேசிடுக ;
மிக்கது, மோனம் ; விரும்பு.

புறத்தூய்மை செய்யும் புனலைப்போ லுண்மை
மனத்தூய்மை செய்யு மருந்து.

## 5. விந்தடக்கம்

சிந்தை யடக்கிச் சிறுபுலனைக் காத்தடக்கி,
விந்தை யடக்கிவளர் வீறு.

பிரம சரியம் பிழையின்றிப் போற்றின்
அரிய பயனெல்லா மாம்.

ஆற்றல் அறிவாயு ளாக்கைநல வாழ்வின்ப
வூற்றுகும் விந்துன் னுயிர்.

ஆண்பெண் விலக்கில்லை ; யான்மப் பொதுவுறவு
பூண்டார்க்கு நீங்கும் புரை.

வன்னியாய்க் கற்ற வலியுடையார் போற்றுகவே
நன்மனை வாழ்க்கை நயம்.

# 7. இல்லற வியல்

## 1. இல்லறம்

வீட்டின் விரிவே வியனுலக மாதலினால்,
வீட்டறத்தில் வெற்றி விளக்கு.

இல்லற மீசனரு ளெய்திய நல்லறமஃ
தில்லையெனி லில்லையுல கிங்கு.

இல்லறமே வீட்டின்பம் ; இல்லாளு நல்வாழ்வும்
புல்லித் தழைக்கும் புகழ்.

நல்லாளைக் காதலித்து நம்பி நனிவாழ்க
வள்ளுவரும் வாசுகியும் போல்.

பூணோடு பொன்போற் பொருந்தி யறிவொளிரும்
ஆணோடு பெண்சக்தி யாம்.

## 2. திருமணம்

காந்தமுனை மாறிக் கவர்வதைப் போலுமே
மாந்தருள் ஆண்பெண் மயக்கு.

காதல் மணமே கருத்திற் கினியமணம் ;
ஏதம் வலுமணமென் றெண்.

நல்ல குணமணியாய் நாணுடுத்த நல்லாளைக்
கொள்ளுக வாழ்வைக் குறித்து.

ஆக்கல் அழகுசெயல் அன்பறிவு மெய்யுறுதி
காக்கலிவை பெண்டிர் கடன்.

கற்புயிர் ; நாணழகு ; காரிகைக்கு நற்கணவன்
சொற்படித லாகுஞ் சுகம். 320

## 3. பெண்ணின் பெருமை

மென்மை யுடலின்ப மேதக்க வாழ்வெல்லாம்
பெண்மை யுவந்தளிக்கும் பேறு.

வாழ்க்கைத் துணையும், வகையும், விரிநலமும்
ஆக்கமும் பெண்சக்தி யாம்.

அறமன்பு மைங்கடனு மாற்றிலுக் காவாள்,
நிறைமனைவி யென்றே நினை.

பகட்டணிக் கொள்ளாள், பதிக்கணி யாவாள்
அகத்திற்கு வாய்த்ததிரு வாம்.

பெண்ணிற் பிறங்கும் பெருங்கனலைப் புல்லினால்,
மண்வாழ்வு மங்கலவிண் ணாம்.

### 4. ஆண்மை

ஈட்டுமனை போற்றல் இசைபெருக நல்லறங்கள்
ஆற்றலிவை யாண்மைக் கழகு.

இல்லாளோ டன்புற் றிணங்கி யறங்காக்க
வல்லான் மணவாள ளும்.

மனைவியுடன் காதலாம் ; மக்களுட னன்பாம் ;
அனைவரொடுந் தண்ணருளே யாம்.

தக்க மனையிருக்கச் சார்ந்தயலிற் சீரழிவான்
கக்கலை புண்ணுங் கடை.

கண்ணிறைத்த வீட்டிற் கனதன மங்கலமே ;
மண்ணிறைத்த வான்பயிரின் வாழ்வு. 340

### 5. காதலின்பம்

குலமோங்குஞ் சக்திக் கொழுந்தோங்குங் காதல்
நலமோங்க நாடோங்கு நாள்.

ஈதலிற் காதற் கிணையில்லை ; தண்முகிலும்
வாதத்தான் மாறு படும்.

புண்ணுற்று மோகப் புணர்வுற்று நொந்தழியும்
கண்ணற்ற காமக் கடா.

பெண்ணைப் பழிக்காதே ; பெண்ணை யிழிக்காதே ;
பெண்ணைப் பெருமையுறப் பேணு.

காதலுல காக்குங் கனலதனை யீசன்பால்
ஈதலே யின்பமென் றெண்

## 8. குலவியல்

### 1. தாய்

எல்லார்க்கும் ஓரன்னை ஈச னருளன்னை
எல்லாரும் ஓர்குலமென் றெண்.

தாய்சக்தி வாழியநீ ! தங்கக் குழந்தைகளால்
தேயம் வளர்க்குந் திரு.

தாய்மா ரிடத்தாகுந் தன்னுட்டின் சீர்மையெலாஞ்
சேய்வடி வாகச் செறிந்து.

வீறு மகனையே யீன்றெடுத்த மெல்லியற்கு
வேறுதவ மேனோ விளம்பு ?

சோறூட்டும் போதன்பாய்ச் சொல்லிவாழ் வின்கடமை
வீரத்தா யூட்டும் விறல். 360

## 2. தாய்ப்பணி

சாவையும் அஞ்சாது தாயின் பணிபுரிவோம் ;
ஆவிக் குரியா ளவள் !

அன்னை யளித்தவுடல், அன்னை யளித்தவுயிர்
அன்னை யருட்பணிக்கே யாம்.

மழையின் விளைநிலமு மன்னுயிரும் வாழ்வுந்
தழைவது தாயன்பாற் றான்.

அன்போடு கொஞ்சி யமுதிட்ட பொற்கையைப்
பின்பற்றி முன்னேறல் பீடு.

தாய்சொல்லும் அம்மொழியே தம்மக்க ளுஞ்சொல்வார் ;
தாய்நன்று சொல்லத் தகும்.

## 3. தந்தை

தந்தை செயலே தனயன் செயலாகும் ;
தந்தைக் கொழுக்கந் தலை.

சுற்றும் புலன்வழியே தோய்ந்து மனம்பற்றும் ;
சுற்றத்தைச் சுத்தமுறச் சூழ்.

பெற்றோருங் கூடப் பிறந்தோரும் போலநீ
உற்றமனை நாடுலகு முன்.

குலனென் றணங்குங் குரிசிலும் பொன்செய்
நிலனும் விதையும் நிகர்.

அறிவுந் திருவும் அறநெறியும் அன்புத்
திறனும் பெருகுகநின் சேய்.

## 4. சேய்

இன்றுசேய் நாளையே யிப்புவியின் கையாகும்
என்றுசேய் போற்ற லினிது.

இல்விளக் காகு மினிய புதல்வர்க்குக்
கல்வியறி வாற்றலாங் கண்.

நன்மக்க ளின்பெருமை நாட்டிற்கெல் லாம்பெருமை ;
வன்மக்கள் வீட்டின் வசை.

தாலாட்டிச் சீராட்டிப் பாராட்டி னோர்மேல்வை
மாறுட்ட மில்லா மனம்.

இளமையிலே பெற்றோர் இயற்றியதை மைந்தர்
முதுமையிலே செய்யன் முறை.

## 5. சுற்றம்

நல்ல துணைநின்று நன்றி மறவாதான்
எல்லார்க்கு மின்னுறவென் றெண்.

பாகத்தி லன்று ; பரிந்த வுதவியினில்
நேகத் துணைவனை நீ தேடு.

கிளையுரிமை கொண்டாடிக் கேடுசூழ் வானுந்
தலையரிக்கும் பேனுஞ் சரி.

இன்னா புரிவார் இரத்தக் கலப்பெனினும்
ஒன்னா ரெனவே யுணர்.

நன்னோக்கங் கொண்டுமனை நாடுய்ய வாழ்ந்திடலே
முன்னோர்க்குச் செய்யு முறை.

## 6. பிழைக்கும் வழி

தேவை யறிந்து, செழுமையுறப் பொன்செய்து,
பூவையறிந் தில்லம் புரி.

கடன்செய் யிடம்பம் கவலைக்குத் தூது ;
விடஞ்செய் வறுமைக்கு வித்து.

வீணணி யாடை விருந்து மணச்செலவு
காண்வறுமை காட்டி விடும்.

மடைவாய்நீர் போல வழிந்துபோம் செல்வம் ;
உடையார் தருக வுவந்து.

திருநாள், பெருநாள், கருநாட் செலவு
வருநாளைப் போற்றி வழங்கு.

## 7. குலநலம்

நிலநலத்தை வேண்டி, நிறைமுறையாம் வாழ்வாற்
குலநலத்தைப் போற்றக் குறி.

பசிக்குத் தொழிலும், பரமற்கு நெஞ்சும்,
இசைக்கு வியன்செயலு மெண்.

அச்ச மடிமை யகந்தை யிருள்வறுமை
யிச்சகத்தைக் கொல்லும் எமன்.

தின்றுபடுத் தீன்றெமன்வாய்ச் சென்றுபடல் வாழ்வன்றே ;
பன்றிக்கு முண்டப் பயன்.

வீண்பகட்டும் வேண்டா வெறுமையு மில்லாது
மாண்புபெற வாழ்வாங்கு வாழ்.

# 9. தொழிலியல்

## 1. முயற்சி

முயல்க, முயல்க, முயல்கமேன் மேலும்
பயன்களைவைத் தீசன் பதம்.

தங்கு முயற்சியாற் சாராத தொன்றில்லை ;
கங்கை கொணர்ந்தோன் கரி.

முயற்சிக்குச் சீதேவி முன்னுகும் ; சோம்பும்
அயர்ச்சிக்கு முதேவி யாம்.

ஏதானு மொன்றை, யியற்புலமை கொண்டறிந்து,
மூதுலகம் வாழ முயல்.

அவலப் படுவினையில் ஆற்றலைப் போக்கல்
உவர்நட்டு நீர்ப்பாய்ச்ச லொப்பு.

## 2. வினைத்திறன்

முடிக்குந் திறனின்றேல் முந்திநா னென்னேல் ;
அடக்கத்தி னுற்ற லறிவு.

உழைத்த வுணவை யுவந்துசுவைத் துண்க ;
வழுத்தி வழிபட்டு மன்.....

மாமனிதன் தேவனெனும் வாழ்க்கைப் படிகளெலாம்
தாம்செய் வினையே தரும்.

தேவா சுரர்தாந்தாஞ் செய்யும் வினையாலே
யாவா ரிதனை யறி.

வையமெலாம் சிற்சபை;நல் வாழ்வெல்லாம் வேள்வியே ;
செய்வதெலாந் தெய்வச் செயல்.

## 3. தொண்டு

நல்லவினை யேசூழ நாளு மிருப்பாயேற்
பொல்லா வினையெல்லாம் போம்.

தொண்டா லுறுமகிழ்வே தொல்புவியுஞ் செய்தோனும்,
அண்டரும் போற்று மமிழ்து.

அருட்பணி யின்ப வமுதமாம் ; பொல்லா
இருட்பணி நஞ்சா மிடர்.

நாட்டி னடிமையு நல்குரவு நீக்கிடலே
வீட்டின்ப மென்ன விரும்பு.

ஒருண்மை தேர்ந்திங் குலகுய்யத் தொண்டாற்றி
யீருலகு மெய்தி யிரு!

## 4. நலிவறல்

பசியு நசையுமறு பட்டாலிப் பூவே
வசையற வோங்கிடும் வான்.

இவ்வுலகைப் போற்றி யியல்பான நல்லறஞ்செய் ;
அவ்வுலகி னின்பமெலா மாம்.

இளைத்தோர்க் குணவு மியன்றோர்க் கறமும்
விளைத்து வறுமை விலக்கு.

நாட்டில் விளைபொருளந் நாட்டார் நலம்பெறவே
யீட்டு முயற்சி யினிது.

இன்மை மடமை யிரண்டும்பா பாசுரன்கை ;
நன்மைவிழுங் காது நலி. 460

## 5. கைத்தொழில்

கைத்தொழி லொன்றற்றார் கையிருந்துங் கையற்றார் ;
மெய்த்தொழிலின் வேர்வையெலாம் பொன்.

இயற்கைதருஞ் சக்திகளை யந்திரத்தில் ஊக்கிச்
செயற்கரிய நன்மையெலாஞ் செய்.

காலத்தை வெல்லுங் கருவி பலசெய்து
ஞாலத்தி லேவெற்றி நாட்டு.

ஒவ்வொரு கையும் உழைத்துப் பிழைத்தாலே
செவ்வியதாந் தேசத் திரு.

தொழிற்செல்வ மோங்கச் சுதந்தர வாழ்வாகும்
எழிற்செல்வ மோங்கும் இனிது.

## 6. வேளாண்மை

ஏரோசை பாருக் கிதயத் துடிப்புநூற்
போரோசை ஓங்காரம் போல்.

சொற்போரும், விற்போரும், பொற்போருஞ் சோருமே
நெற்போரொன் றில்லா நிலை.

ஒருபயி ராக்கி யுணவீவான் பாரிற்
பெருமக னென்றுநீ பேசு.

பயிர்செய்வான் வாழ்க்கையே பாங்கு; மற் றெல்லாம்
அயல்சார்ந்த சேவகமே யாம்.

உழைத்துவிளைத் துண்ண வுவந்தா லுலகம்
செழித்து வளருந் தினம். 480

## 7. உழைப்பு

செய்யுங் கிணறுஞ் சிறுகுடிலும் பெற்றமுங்
கையுழைப்பு மீயுங் களிப்பு.

நூற்றுத் தறிநெய்து, நூல்கற்று, மண்ணுழுது
காற்றுட வாழக் களிப்பு.

மண்ணுழு துண்ணுர், வறுமைகொடி தென்பார்க்குக்
கண்ணிருந்துங் கையிருந்து மென் ?

கட்கஞ்சாத் தீயிலைகள் காப்பி யறநீக்கி
நற்பயிர்செய் யுண்டுடுக்க நாடு.

அந்தந்த நாட்டிற் கமைந்தபயிர் செய்துண்ணல்
அந்தந்த நாட்டார்க் கழகு.

## 8. பிழைப்பு

பாடுபட் டோருக்குப் பாட்டின் பயனெய்தில்
நாடுவிட் டோடும் நலிவு.

விளைப்பானே நேராக விற்றுண்ணு வானேல்
உழைப்பாளிக் கோங்கும் பிழைப்பு.

தன்னியல்புக் கேற்றபடி தாளாண்மை, வேளாண்மை
பண்ணுக ; தீமை படும்.

கூலி குறைந்தாற் குலங்குறையும் ; பாட்டாளர்
ஞாலவாழ் விற்கு நரம்பு.

புவிமக ளீந்தபயன் போதிய மட்டும்
அவரவர் துய்த்த லறம்.

## 9. பணம்

நல்லன மல்கி நலமோங்க நல்வழியிற்
செல்வ முயற்சிகளைச் செய்.

பணஞ்செய் படர்நீங்கிப் பண்டமாற் றேங்கின்
மணஞ்செய்யு நாட்டின் வளம்.

போதைத் தொழிலாக்கிப் பொன்னைப் பொருளாக்கி
மேதைப் புகழை விரும்பு.

பொய்வஞ்சக் கள்ளர் பொருளைக் கவராது
தெய்வப் பணிக்குத் திருப்பு.

பைதந்த செல்வம் பலருண்டு வேலைசெயக்
கைதந் திடவே கருது.

### 10. செய்வகை

இயற்றுக கால மிடம்வகை தேர்ந்தே ;
பயக்கும் பருவமழை போல்.

காக்கையிடம் பாட்டைக் கரக்கும் குயிலெனநீ
நாக்கடங்கி நன்முயற்சி செய்.

பின்று வதனைப் பெரிதுங் கருதியே
முன்னோர் வினையை முயல்.

தாய்மொழியுந் தன்னறமுந் தாய்நாடுந் தண்ணருளும்
வாய்மையறி வும்பெருக வாழ்.

'ஓம்வணக்க' மென்ன வுயர்ந்தோ ரடிபணிக ;
போமகந்தை ; புண்ணியங்க ளாம்.

### 11. வினை வெற்றி

சங்கடம் போன்று ஐயமாந் திருவினைகள்—
கங்குன் முதிரக் கதிர்.

சொல்லிற் குறைபோலத் தோன்றி நிறைபெறுமே
பல்லுயிர் வாழும் பணி.

மலர்மெத்தை மீதல்ல, வாண்மீது சென்றே
பலர்நன்மை செய்தார் பரிந்து.

துணிந்துமுன் செல்க ; துயர்க்குலந் தானே
பணிந்துவெற் றிக்காம் படி.

ஆருயிர்கட் கன்புற் றருள்வலியால் வெற்றிபெறும்
சீருயர்ந்த தெய்வப் பணி.

## 10. அருளரசியல்

### 1. தலைமை

பாருலக மெங்கெங்கும் பாரோர் உரிமையலால்
ஓரோர் உரிமையா மோ ?

இவனுயிரே யாகும் அவனுயிரு மென்னில்
எவனடிமை யாவதெவ னீங்கு.

குடியிற் குடியாய்க் குடியொத்துக் கோல்செய்
நடுநிலை யாட்சி நலம்.

அறங்காக்கும் வீறும், அறிவழகும் வெற்றித்
திறங்காக்கு மன்னன் றிரு.

உண்மையே திண்மை ; யுலகி லறமோங்கு
நன்மையே நாடாள்வான் சீர்.

## 2. நேர்ச்சி

குடிகளே தேர்ந்திதமாய்க் கொண்டவனே கோமான் ;
நடுநிலைசேர் நாட்டத்தி னுன்.

தான முயரச் சமுதாய சேவைகளும்
மாணப் பெருகி வரும்.

ஆராய்ந்து போற்றி யனைவருந்தேர் சீரியரே
பாராள் சபைக்கமைதல் பண்பு.

பொதுநலமே வாழ்வாகும் புண்ணியரைத் தேர்ந்தால்,
அதுநலமாம் பூவிற் கணி.

உள்ளத் துடிப்பில் உலகந் துடிப்பவரைத்
தெள்ளத் தெரிந்துடனே தேர்.

## 3. நல்லாட்சி

தொத்தடிமை யின்மை, துயர்செய் முரணின்மை,
உத்தமனுள் ஊருக் கணி.

சிற்றூரிற் றேயம் தெரியும் படியாண்டு
வற்று நிறைவு வழங்கு.

பார்தழுவிப் பஞ்சம் பகையிருள்நோய் அச்சமறச்
சீர்வழியிற் செங்கோல் செலுத்து.

வறுமையற நற்றெழிலும், வாய்மை யறிவும்
முறைமையுறத் தந்துதவு முன்.

ஒளிசெய்யுங் கல்வி யுலகிலெல் லார்க்கும்
எளிதுறச் செய்த லினிது.

## 4. வரவு செலவு

கல்வி தொழில்,சுகங் காப்பு நலங்கருதி
மல்குவரி வான்போல் வழங்கு.

தேவைக்கு மேற்சேர்க்குஞ் செல்வர் திறைவாங்கித்
தேவையறத் தேசநலஞ் செய்.

எவரெவ ரெத்திறத்த ரென்றுய்ந்து போற்றி,
அவரவர்க் காந்தொழிலே யாக்கு.

மனங்கொண் டறவழியில் மாந்தர் ஒழுகின்,
கனங்கொள் படைச்செலவேன் ? காட்டு !

கூரை பிடுங்கிக் குளிர்காய் வதுபோலும்
பாரைப் பிடுங்கும் பரிசு.

## 5. படை

நயத்தால் அரசாள நாடாத மன்னன்,
பயத்தாலே கொள்வான் படை.

பார்மனம் பற்றிப் பரிந்துமுறை செய்நாட்டிற்
போர்வெறிகள் போக்கற்றுப் போம்.

நஞ்சப் பகைவர் நடுநடுங்கப் போர்புரியும்
அஞ்சாப் படைவலிமை யாக்கு.

வீரப் பயிற்சிமிக வேண்டிப் புலிநரிகள்
ஊரைக் கெடுக்கா தொழி.

இன்றுவாள் வென்றதனை யின்றொருவாள் வெல்லுவதே
என்றுமிம் மண்ணுள் இயல்பு. 580

## 6. வெம்மை விலக்கல்

காலைபோற் செய்யதிருக் காவலன் சீரோங்கும் ;
மாலைபோ லாம்வெய்யோன் வாழ்வு.

கோதேறி ஞானேறுங் கொற்ற நெடுஞ்செருக்கு
மீதேறும் கற்போல் விழும்.

நடுக்கி யடக்கிடவே நாளும்போ ராட்டம் ;
அடுத்துத் தரவமைதி யாம்.

பாரோடு வாழான் படைச்செருக்குத் தன்னரசை
வேரோடு சாய்த்து விடும்.

ஆன்மநே யத்தாம் அருளாட்சி யாலுலகில்
வானரசை யென்றும் வளர்.

## 7. சட்ட திட்டம்

கட்டுக் கடங்கிக் கடமையினி தோங்கிடவே
சட்ட மியற்றத் தகும்.

அதிகாரஞ் சொற்பம் அதிகஞ் சுயேச்சை
விதிசிலவா மாட்சி விரும்பு.

வித்தக நல்லோர், விதந்தெரிந்த மேன்மக்கள்
ஒத்துழைத்த லென்று முயர்வு.

ஐந்த னணியி லவைசேர்த் தறிவன்பர்
மந்திரத்தி னுளுமுறை மாண்பு.

அறவோர், தொழிற்புலவர், அஞ்சாத வீரர்,
அறிவாளர் நாட்டிற் கணி.

 600

## 8. நாட்டன்பு

வீடுகளி னீட்டம் விரிநாடா மாதலினால்,
வீடென்றே நாட்டை விரும்பு.

வளமறிவு வீரம், வளரிசையு மாந்தர்
உளமகிழ்வு மோங்கியது நாடு.

நாந்திருந்தி மேலோங்க நாடுந் திருவோங்கும் ;
தாந்தாந் திருந்தல் தலை.

அன்னையன் புக்கனலை யாவிதொறு மூட்டிடுவோம் ;
பின்னே திருளச்சப் பேய் ?

எந்தா யருட்பணிசெய் யின்பத்தி னின்பமிலை ;
இந்திர போகமெமக் கெள்.

## 9. மக்கள் கடமை

ஆற்றப் பொறுத்துநல் லன்போ டறங்காத்தல்
மாற்றானை மாற்று மருந்து.

உலகிலுன் னாட்டை யுயர்த்துகமெய் வீரப்
புலவர்மலிந் தோங்கப் புகழ்.

நல்லொழுக்கம் பற்றி நடந்து நடந்துதினம்
அல்லொழுக்கம் போக அடங்கு.

பணிந்து நடக்கை பயனீயும் ; வீரர்
துணிந்து நடக்கையினைப் போல்.

வெற்றிபெற வாழ்தலும், வீட்டுநலந் தாங்குதலுங்
கற்றறிந்த மக்கள் கடன். 620

## 10. ஒற்றுமை

ஒற்றுமையே பேராற்றல் ; ஒற்றுமையே வாழ்வின்பம் ;
ஒற்றுமையே வெற்றிக் குயிர்.

உள்ளொன்றி னாலே யுலகொன்று மாதலினால்,
உள்ளத்தில் ஒற்றுமையை யூன்று.

பார்த்தால் மனத்தாற் பலவாகும் ; சுத்தான்மா
போர்த்தா டியற்கைப் புவி.

மானிடர் தெய்வத் திருக்கூட்ட வாழ்வடைவர்,
ஆன்மவொருப் பாட்டுரிமை யால்.

ஒன்றே யுயிருலகம் ; ஒன்றே யுலகிறைவன்
ஒன்றே யிறைவனுறை யுள்.

## 11. யோகவியல்

### 1. யோக சக்தி

பூரணத்தை யுட்புறமும் பூரணமா யோர்ந்திவளர் ;
பூரணமே யோகப் பொருள்.

சக்திக் கதிராற் சகமொளிர வாழ்ந்திடலே
சுத்தான்ம சித்தியெனச் சொல்.

சக்தியே முக்திபரா சக்தியே யின்பமருட்
சக்தியே சித்தியெனச் சாற்று.

"ஓம்சுத்த சக்தி"யென வுள்ளே யுயிர்த்திடுமின் ;
ஆம்சித்தி சக்தியரு ளால்.

மதிநீ ; வழிநீயே ; வாழியறத் தாயே !
கதிரின்றிக் காணுமோ கண் ? 640

### 2. உடலுறுதி

உடலுறுதி செய்க ; உடலையொளி செய்க ;
உடல முயிர்மனையென் றுன்.

பத்தா மிருக்கை உயிர்ப்படக்கம் ஆறுவினை
சுத்தமுட லியுஞ் சுகம்.

ஈரெட்டு நான்களவில் ஈர்த்தடக்கி விட்டுயிர்ப்பின்
வேரெட்ட வுண்டாகும் வீறு.

அற்றுப் பசிகண் டளந்துண் டியல்வழிநில் ;
குற்றமு றுதூன் குடில்.

தூயவுண தூய்நட்புத் தூயமனத் தூயருக்குக்
காயமுங் கண்ணுடி யாம்.

### 3. இயற் சிகிச்சை

தியமனத் தாலுந் திருவற்ற வாழ்வாலும்
நோய்பிறக்கு மென்றே நுவல்.

தூயவுடை யூணுந் துகளறுவாழ் வுங்கொளலே
நோயு மருந்துமிலா நோன்பு.

பூத வுடலுக்கைம் பூதமே நன்மருந்தாம் ;
பூதநிறை யெந்நாளும் போற்று.

உண்ணுமை மாற்றும் உடற்பிணியைக் காற்றொளிநீர்
மண்வாழ்வார்க் காகு மருந்து.

உண்ணும் பணியை யுடல்வாழ் பரமனுக்கே
பண்ணும் பணியாகப் பார். 660

## 4. மனவுறுதி

நிலைத்த மனமே நிலைபேறும் ; ஆசை
யலைத்த திடர்க்கடலே யாம்.

சுற்றும்பேய் நெஞ்சைச் சுருக்கிச் சுகவழியே
பற்றற்று நிற்கப் பயில்.

சினத்துடனே மண்ணைச் செயிப்பதினுந் தத்தம்
மனத்தை யடக்கிடலே மாண்பு.

நிலைக்கு நலநாடி நீளவா நீந்தி
அலைக்கு மனத்தை யடக்கு.

நினைப்பி னுருவே நிசமாகும் ; நல்ல
நினைப்பையே தேர்ந்து நினை.

## 5. சித்த ஜயம்

வந்ததையும் போனதையும் வாதனைப்பட் டெண்ணுவதேன் ;
சிந்தையலை யாதிருக்கச் செய்.

ஒன்றினை யொன்றலே யோகம் ; அலைமனத்தை
வென்றிடி னென்றும் விரைந்து.

தீனி முயக்கினிலே செல்லாதுன் வாணாளில்
ஞான முதிர்ச்சிபெற நாடு.

இன்பத்தி லின்பம் எனைத்திலுங் கட்டின்மை ;
துன்பத்துட் டுன்பந் தொடர்பு—

பற்றற்று வாழ்ந்து, பரம சுகமெய்தக்
கற்றவனே கற்றார்க் கிறை. 680

## 6. மௌனம்

செவிப்படக் கேட்டவை சிந்தித்துச் சித்தங்
குவிப்பது கற்பின் குறி.

வாயடங்க நெஞ்சடங்க மௌனமே மந்திரமாம் ;
சேயடங்குந் தாயைத் தெளிந்து.

தானாகக் கூடுந் தலைவன்முன் பேச்சடங்கும்
ஆனாத மோன மது.

வாய்ப்பேச் சடக்க, மனமடங்கி, நாடியாழ்
பாய்ச்சும் பரநாதப் பண்.

இரவுபக லின்றி யெரிமுச் சுடரிற்
பரமான்ம நூலைப் படி.

## 7. தியானம்

நினைத்து நினைத்து நினைப்பற்று, நெஞ்சே,
நினைப்பற்றி நீயாகி நில்.

சிதையாம லெண்ணித் தெளிந்தாலுன் னுள்ளே
"அதுநா" னென் றேயுணர லாம்.

எழுந்து விழுந்தும் இடத்தமர்முன் னீர்போல்
அழுந்தியுன் னுள்ளே யடங்கு.

பொன்னூற்றிற் பொங்கிப் பொலியும்வெண் டாமரைவாழ்
அன்னமென் றுன்னை யறி.

அமைதியின் பத்தில் அறிவுச் சுடராய்ச்
சமதைபெறுந் தன்னிலையைச் சார்.

## 8. ஸஹஸ்ரார ஸித்தி

கர்ப்பூரத் தீபவொளி காட்டும் உடலுயிரும்
சிற்கனலை யேற்றச் சிரம்.

ஆறுருவி, யேழேறி, யானந்தத் தேனுண்ணும்,
சீறியெழும் ஆதாரத் தீ.

வெண்டா மரையில் விளைதேன் அறிவருளால்
உண்டார்க்கும் உண்டோ பசி ?

ஊற்றைப்போற் பொங்கி யுலகைச் செழிப்பிக்கும் ;
ஆற்றைப்போற் பாயு மருள்.

கூற்றஞ்சி யோடுங் குலகுண் டலியுச்சிக்
கேற்றுக முக்கண் ணிடம்.

## 9. சாகாக் கலை

என்று மிருப்பதனி லென்று மிருப்பதுவே
என்று மிருக்கும் இருப்பு.

பிறப்பிறப் பில்லாப் பெருவாழ்வு வேண்டின்,
மறப்பறவுள் ளூன்று மனம்.

தேகாதிக் கெட்டாத சிற்சுக மெய்வாழ்வே
சாகாத சக்திக் கலை.

கூற்றையுதைத் தாடுங் கொழுந்தடியைப் பற்றினால்,
மாற்றேறும் பொன்னுடல மாம்.

எப்போது மெண்ணி யிருப்பார்க் இயலுண்மை
தப்பாது வீசுந் தணல்.

### 10. கூற்றிற்கஞ்சாமை

சாதல், பழையவினைச் சட்டையறப் புத்துடலே
யீத லுயிர்க்கென் றியம்பு.

மாரடிப்பு வேண்டா ; மகிழ்மினே, யிவ்வுலகப்
போரொழிந்து சாவுவரும் போது.

வாவென்னும் ; வந்தால், மனேமக்க ளேப்பிரியேன்,
போவென்னுங் கூற்றைப் புவி.

உண்மைக் குயிர்வாழும் உத்தமருக் கச்சமிலே ;
திண்மையிலார்க் கென்றுந் திகைப்பு.

என்றுந்தான், எல்லாந்தான், எங்குந்தான் சுத்தாத்மா ;
பொன்றுவது முண்டோ ? புகல் ?

## 12. சித்தி யியல்

### 1. மெய்த்துறவு

மனத்தி லருண்மல்கி மானுலக முய்யுந்
தனேத்துறக்குந் தொண்டே தவம்.

கனத்த நிதிகண்டுங் கட்டின்றி வாழு
மனத்துறவே வாய்மைத் துறவு.

பத்தாறும் வென்று பழுதற்ற சுத்தான்ம
சித்தரைத் தேவரெனத் தேர்.

அடிமைத் தளேயுதறி யஞ்சாத வீரம்
மடமையை மாற்றும் மருந்து.

அழகெனக் காட்டி யடிமை தருவ
முழுவதும் போக்க முயல். 740

### 2. பற்றறுத்தல்

பற்றே துயராகும் ; பற்றறலே பேரின்பம் ;
கற்றறிந்தோர் கொண்ட கருத்து.

வெற்றெலும்பை நாய்கடிக்கும் விந்தையென மாயமனப்
பற்றுழன்று நோவார் பலர்.

அழியாப் பொருளே யழியாது பற்றின்
அழியா வமரநிலே யாம்.

கொண்டுவந்த தில்லே ; கொடுபோ வதுமில்லே ;
வண்டார் கனிமரம்போல் வாழ் !

தாளாக நாளாக நாளான மாயம்போய்,
ஆளாத லீசற்கென் றும்.

## 3. மன மாயம்

சிரிப்பும் அழுகையுஞ் சேர்ந்தமன மாயம்
அரிப்பும் எரிப்பும்போ லாம்.

ஆசை, பொறாமை, யகந்தையிவை, நெஞ்சத்திற்
பாசவலை வீசும் பகை.

தூசியிலா ஆடியிலே தோன்றுமுகம் போலான்மா
ஆசையிலா நெஞ்சகத்தே யாம்.

இன்பவலை வீசி யிழுக்கு மனமாயந்
துன்பவலை யாகுந் தொடர்ந்து.

ஆசையழுக் கில்லாமல் ஐம்பொறியை வென்றவனார் ?
ஆசா னுலகிற் கவன்.

## 4. தெய்வ வொளி

தெய்வ வொளிதனையே தேடு ; பிறவெல்லாம்
கைநழுவுங் காலத்திற் காண்.

ஆர்வக் கனலுடனே யாண்டவனை வேண்டினருட்
பேரமுத வான்பொழியும் பேறு.

இருக்கிறே னிங்கென் றிதயத்தா னுன்னை
யழைக்கிறா னங்கே யடை.

மனத்தூ டுருவி மணிமன் றொளிகாண் !
இனிக்கும் பரம்போ லிகம்.

துரியமலை மீதேறிச் சோதிநடங் காணின்,
அரிய செயலெல்லா மாம்.

## 5. ஆத்ம சாந்தம்

பொன்னும் பொருளும் புவியு மளித்திடுமோ,
தன்னுள்ளா மின்பந் தனை ?

உறவுந் துணையுமாம் உள்ளத்தான் ; உண்மை
யறிவின்ப மாவ னவன்.

இயல்பான வுன்னை யியல்பா யறிந்தே,
யியல்பாகி யின்புற் றிரு.

அன்னிய மின்றி யறிந்தடங்கி, யெக்காலுந்
தன்னிலையிற் றானா யிரு.

கண்ணைத் திறந்து, கருணையொளி காட்டியருள்—
உண்மைப் பரம்பொருளே ஓம் !

## 6. அறவோர்

பார்வாழ்க்கை முற்றும் பரமன் வழிபாடாம்
பூரணருக் கென்றே புகல்.

அறிதற் கரிதை அறவோர் அறிந்துலகில்
அறிவொளி யாவா ரவர்.

அருட்கோயில் சுற்றி யணியணியாய் மாந்தர்
திருத்தக்க வாழ்வமையச் செய்.

அதிமனிதர் தீரர், அருட்சக்தி மைந்தர்
புதுயுக வீரர்வரப் போற்று.

அறக்கடவுள் வாழி ! யறம்வாழி ! வாழி
யறவோர் அருள்வெற்றி யாங்கு.

## 7. போற்றி

போற்றுகிறே னுன்னைப் புவியே யிறைவடிவென்
றுற்றுகிறேன் அன்புப் பணி !

நடமாடுங் கோயில்காள் ! ஞாலத் துயிர்காள் !
கடவுட் குலமொன்றே காண் !

வான்பழுத்த வாழ்வே மகிழ்ந்து மகிழ்ந்தின்பத்
தேன்செழித்து வாழ்க தினம் !

இறைவ னருட்குடைக்கீழ் எல்லாரு மின்ப
நிறைவெய்தி வாழ்க நிலைத்து.

விண்குடை தாங்கியருள் வேந்தனுக்கே யாளாவோம்
பண்ணும் பணியும் படைத்து.

## 8. அனைத்தும் வாழ்க !

இதயம்பூ ; மந்திர மின்சொல் லுனதன்பு
துதியாக வேயருளாய் தொண்டு.

போரற்றுப் பாரிற் பொறுமை விளங்கியுயிர்
சீருற்று வாழ்க செறிந்து !

உன்பொற் றிருமுகத்தை யுள்ளும் புறமுங்கண்
டன்புற் றிருக்க வருள்.

இத்தல வட்டமெலா மென்மனைபோற் றெண்டுசெயச்
சக்திக் கனலெனக்குத் தா.

நல்லறிஞ ரோங்க, நலமோங்கிப் பூவெங்கும்
எல்லாரும் வாழ்க வினிது !

# 9. அகண்ட சாதனப் படலம்

மண்ணில் மாந்தர் வாழ, மன்னுயிர்க் குலங்கள் வாழப்
புண்ணிய பூமி வாழப் பூரண சுத்த யோகி,
எண்ணிய பலனை யெய்தி இந்நாளும் அருளி னாட்சி
நண்ணிடச் சுத்த சங்க நண்பரை அணிவ குத்தான் :—

எவரெவர் எத்தி றத்தர் எனத்தெரிந் தன்பு கொள்ளும்
அவரவர்க் கிசைந்த தாகும் அருட்பணி வகுத்துத் தொண்டை
நவையறப் புரிதற் கேற்ற ஞானமுந் திறமுந் தந்து,
புவியினில் அகண்ட யோக சாதனம் புரியச் செய்தான்.

வாழிய சுத்த யோகி, வாழிய சுத்த யோகம்
வாழிய சுத்த யோக சங்கத்தின் வளமை யென்றே
ஏழிசை யுடனே சங்கம் இனியநற் கீதம் பாடிச்
சூழவும் அமர்ந்து சுத்தச் சுடரினை நினைந்த தம்மா !

பத்தியும் பணியும் அன்பும் பலகலை யறிவுங் கொண்டு,
நித்திய யோகஞ் செய்திந் நிலையத்தில் வாழ்ந்த நல்லீர்,
சத்திய யுகத்தைக் காணச் சகமெலாம் சுத்த சங்க
சித்தியைப் பரப்பு கின்ற சேவையே சேவை யாமே.

திவ்விய சேவைக் கேற்ற திறல்பெறுஞ் சித்த ரெல்லாம்
ஒவ்விய பணியைத் தேர்ந்த உத்தமத் தொண்ட ரெல்லாம்,
செவ்வழி யறிந்து செய்யச் செய்பணி கேண்மின் என்றே
துவ்விய குருவு மாங்கே சொன்னதைச் சொல்வேன் கேளீர் : 20

## பொதுக் கடமைகள்

பூரணம் பெற்ற புனிதமெய் யோகிகாள்,
சுத்த சமரஸ சுதந்தரச் சுடர்காள்,
பல்லாண் டுகளாய்ப் பயின்றநம் யோகம்
யோக சித்தியாய் உருவெடுத் துள்ளதே.
மலைவளர் சுத்த நிலையம் இனியிவ்
வுலகெலாம் பரவி யோக சித்தியின்
வழியே, மாந்தர் வாழச் செய்யும்
அகண்ட சாதனம் ஆற்றிட லாமே.
பூரண சாதகர் பொதுவிதி கேளீர் :
காலை யெழுந்து கடன்முறை செய்து,
கானத் தாலும் தியானத் தாலும்
சுத்த சக்திச் சுடரினை உள்ளே
கலந்து நிற்றல் கடமை யுமக்கே.

கவிகளே புதிய காலைக் குயில்களாம்.
அருட்கவி யாகும் ஆனந்த யோகி,
பாடிய பாடலைப் பஜனையாற் பரப்பி
மாந்தரை எழுப்புமின் ; மானிடப் பிறவியின்
பயனை யறியப் பாடிப் பேசுமின்.
காலை மாலை கடவுளை வணங்கல்,
எல்லா ருக்கும் இயற்பெருங் கடனும்.
சத்துவ மான சைவ உணவையே
பசித்திரு முறையே புசிப்பது நலமாம்.
யோக சித்தியை ஒருமுறை தினமும்
ஓதுதல் கேட்டவர்க் குணர்த்துதல் கடனும்.
உழைத்தே உண்ணல் பிழைத்தலின் விதியாம்.
இருளர சேகி அருளர சோங்கி,
நமது மெய்ப்பணி நலமுறு மட்டும்,
பெண்ணும் ஆணும் பிரம சரியமே
காத்துத் தவமெனக் கடமை செய்கவே.
சிறப்பாய் அவரவர் செய்கடன் அவரே
கலப்பறச் செய்து காணுக வெற்றியே.
ஒருவர் கடமையில் ஒருவர் குறுக்கிடேல்.
ஓர்பெரும் பொறியில் ஒவ்வொரு பங்கும்
அதனதன் கடமையை அமைதியாய்ச் செய்தே
ஓரேமின் சக்தியால் உயிர்ப்பது போன்றே,
உடலில் உள்ள ஒவ்வோ றுறுப்பும்
இயங்குவ தொப்பவே, இயங்குவீர் நீரும்.
சாதி மதநிறப் பேதமே யில்லை.
உலகெலாங் கோயில் உயிர்த்தொகை சாமி ;
பொதுநலம் புரிதலே பூசனை யாகும்
என்றுணர்ந் தனைவரும் ஏகுவீர் ; அவரவர்
தலைவரைப் பணிவீர் ; தகுந்த தொண்டரை
ஒவ்வொரு காலையும் செவ்விதிற் பயிற்றி
ஊர்தொறும் ஊர்தொறும் உரியன செய்வீர்.
நானூற் றைந்து நல்ல தொண்டரும்
பன்னிரு தலைவரும் பகுதி பகுதியாய்,
பாக்கம் பாக்கமாய்ப் பரவிப் பணிசெய
நோக்குவீர் புதுயுகம் ஆக்குவீர் ஆங்கே !
அருட்பணிக் கெழுவீர் அன்புள மணிகாள்,
இருளற் றுலகெலாம் இன்பமே பொலியும்
அருட்பணிக் கெழுவீர்....அகண்டசா தகர்காள் !

### கடவுட் குழு

நீண்ட தவத்தால் ஆண்டவன் அருளைப்
பெற்றுக் கற்பனை கற்றுச் சிறந்த,
ஜோதி முனிவரின் பாது காப்பிலே,
ஒள்ளிய தொண்டர் ஊரூர் சென்று,
பாட்டி னாலும் பஜனையி னாலும்,
அருட்பெரி யாரின் அற்புத வாழ்க்கைப்
படித்துப் பேசிப் பக்கவாத் தியங்கள்
சேரக் கதைகள் செய்வ தாலும்,
தெய்வம் உண்டு தெய்வத் திருவருள்
சூரியன் ஒளிபோல், மாரிபோல், அனைவரும்
பெறத்தகும்; கருணைப் பெரும்பரஞ் ஜோதி,
சாதி மதநிற சாத்திர கோத்திர
நாடு நகர நானா பேதம்
இல்லை ; இறைவன் எவர்க்கும் பொதுவாம்.
உலகெலாம் இறைவன் உலாவிடுங் கோயில்.
உள்ளந் தோறும் உள்ளது கடவுள்....
நம்புமின் ; என்று நவின்று நவின்றே
ஊர்தொறும் அன்பரை ஒன்று சேர்த்துப்
பரம்பொரு ளுணர்வைப் பரவச் செய்மினே !
நாமே தெய்வம் ; நமக்கினை யில்லை,
என்று பேசி இறுமாப் பாலே
உண்மையை மறைத்தே, உலகை மயக்கிப்
பொருளும், புகழும் போகமுந் தேடும்
போலிக் குருமார் புரட்டுகள் ஒழிய,
ஒன்றே தெய்வம் உளந்தொறும் அதுவே,
பத்தியுந் தியானமும் பரோப காரமும்
அதனை அடையும் அன்பு வழியெனப்
புகல்வீர், திருவருள் பொதுவென விளக்கி,
நாத்திகத் தடிப்பை நச்சடி யடித்தே
சுத்த யோகத் தொண்டர் தமக்கு
வழியைத் துலக்கி மகிழ்வுறு வீரே....

### உலகக் குழு

அனுபவ ஞானி ஆத்தும நேயனைத்
தலைக்கொண் டேகுக உலகக் குழுவே.
இப்போ துலகம் எண்ணிலாப் பிரிவினைச்
சந்தையாய் அகந்தைச் சண்டையா யுள்ளதே.
சாதிச் சண்டை, சமயச் சண்டை

நாட்டுச் சண்டை வீட்டுச் சண்டை,
நிறத்திமிர்ச் சண்டை நீசச் சண்டைகள்
ஆயிரம் கொள்ளிப் பேயெனக் கிளம்பி,
மனிதரை விலங்கென மாற்றுகின் றனவே.
புலவர் சொன்ன பொதுநெறி மறந்தே
தாந்தம தென்னுஞ் சமயக் கோட்டைகள்
எழுப்பி, மாந்தர் மழுப்பி மெய்யைத்
தன்னலத் தாலே தற்கொலை புரிவார்.
உலகம் பொய்யதை உதறிச் செல்வதே,
துறவெனச் சிலபேர் சொல்லைப் பெருக்கி,
ஊரின் சோற்றை உழையா துண்டு,
"நாசமாய்ப் போகும் ஞால விசாரமேன் ?
சும்மா இரு"மெனச் சொல்லித் திரிவார்.
இப்படிச் சும்மா இருப்பவ ராலே
தொண்டினை வெறுக்கும் சோம்பற் கூட்டம்
பெருத்தது ; நாட்டின் பெருமை குறைந்ததே ;
மண்ணாசை கொண்ட மாற்றார் நம்மை
அடிமை செய்தார். அந்தோ, துயரம்.....!
உலகக் குழுவினர் உணர்ச்சி ததும்பும்
சொற்பொழி வுடனே சிற்பம் சித்திரம்
பாட்டு நாடகம் பரத நாட்டியம்
நூல்கள் ஆகிய நூறு வகையால்,
வானம் வளைத்த மாநில மெல்லாம்
திருவருள் ஆடும் ஒருபெருங் கோயில் ;
உள்ள மட்டிலும் உலகம் உண்மை.
நமக்கு முன்னும் நமக்குப் பின்னும்
கற்ப கோடி கால மிருக்கும் ;
அழகுச் சோலையாம் பழகிய வுலகம்
அன்பு மலரும் அருட்கனி வளமும்
செழிக்கத் தொண்டு செய்வதே வாழ்வாம்.
என்று நன்றே இயம்பி விளக்குமின்.
மதமும் சாதியும் மனவிவ காரமே ;
அறிவிலி மனமே பிரிவினை என்றே
அழுந்தக் கூறி அகண்ட உலகில்
ஆருயிர் அனைத்தும் ஓர்குலம் எனுமின்.
உலகிற் கெல்லாம் ஒன்றே கடவுள்
உயிரெலாங் கடவுளின் உடலென லாமே,
உயிர்க்குயி ராக வுள்ளசுத் தான்மா
அதனைக் கலந்தால் அறிவொளி யதுவே.

தானே பிறராம் பிறரே தானும் ;
ஆன்ம நேயம் அன்புறக் காணினே.
அமர்க்கள மொழியும் அகந்தை மொழியுமே.
உலகோர்க் கெல்லாம் உலகப் பொதுவே.

மண்வெறி கொண்டு புண்சமர் செய்யும்
அரக்கர் செருக்கை அறுக்கும் வாளிதே—
ஆலய உலகில் ஆன்ம ஒருமை.
கொலைப்போ ரன்று, விலைவாய் வன்று,
கொள்ளை யன்று, கொடுமைக ளன்று,
பெண்மண் பொன்வெறிப் பிழைகளு மன்றே—
கண்ணியும் வெடியும் பண்ணிக் குவித்து,
நாட்டை நாடு நலியப் போர்செய்
இரத்த வெறியிலே.....இப்புவி வாழ்வின்
குறிக்கோள் இறைவனை அறிந்து கலத்தலே.
எங்கும் பரம்பொருள் இருக்கக் காணலே,
எல்லா ருக்கும் இன்பஞ் செய்தலே ;
என்பதை நீவிர் மன்பதைக் குரைத்து,
வழியைத் துலக்கின், வரும்அறக் குழுவே....

## அறவோர் குழு

எல்லா மதமும் எல்லா நூலும்,
பழமையும் புதுமையும் பண்புறப் பயின்று,
நின்று பார்த்து நிலையறி வுடைய
தரும சேனர் தலைமையிற் சென்றுநம்
அறக்குழுத் தொண்டர் அறப்பணி செய்கவே.
அறவோர் கூட்டமே அருளாட் சிக்கு
வலக்கரம் போல வாய்ந்தது வாகும்.
மறவலி யரக்கர் மண்வெறி யாலே,
இவ்வுல கத்தில் இரத்தம் வடிப்பதை
மாற்றி அமைதியைப் போற்றிடச் செல்வீர்.
ஒருவருக் கொருவர் உள்ளன் புடனே
உதவி யாக உலகில் வாழ்வதே
அறமென் றுரைப்பீர் ; ஆசை யாணவம்,
காமம் குரோதம் கடுமனச் சீற்றம்,
ஊன்மது புசித்தல், உழைக்கா துண்ணல்,
பிறரைத் திருடல், பிறர்நா டழித்தல்,
நோய்துயர் பெருக்குந் தீய பழக்கம்,
இத்தகை அதர்மப் பித்துகள் ஒழிந்தே,
தூய வாழ்வும், தூய நினைவும்,

வாய்மையும் அன்பும் வளர்ச்சி பெறவே
மேடை அச்சு, பாடல், நாடகம்,
துண்டுப் பிரசுரம், துகளறு நூல்கள்
ஆகிய வற்றால் அரும்பணி புரிகவே.
உலகப் பெரியார் உள்ளமும் உரையும்
சீரிய வாழ்வும் செவ்விய தொண்டும்
அருட்பெரும் பாடலும் அகங்கனிந் துருகப்
படித்து விளக்கிப் படிக்கச் செய்மினோ !

சுத்தசன் மார்க்க சத்தி வழியை
அரங்கிலும் அச்சிலுந் திறம்பட விளக்கி,
ஊர்தொறும் அறவோர் சீர்பெறப் பழக்கி,
அறவிளக் கேற்றி மறவிரு ளகற்றிப்
பொதுநலம் புரிக புதுயுகம் வரவே.

அறிஞர் குழு

அறிவைப் பரப்பும் அரிய தொண்டர்,
பாரத முனிவர் பண்புறப் பயிற்றிய
ஞான ஜோதி நடத்திடச் சென்றே
கல்வி பரப்புக, கலைகளைப் பரப்புக.
மேற்கும் கிழக்கும் விளங்கும் அறிஞர்
கண்ட ஞானமும் காணும் கலையும்,
புண்ணிய பூமிப் புதல்வருக் கெல்லாம்
கலாநிலை யங்கள் கண்டு புகட்டுக.
நூறுவீட் டிற்கு நூலகம் ஒன்றும்
பள்ளி யொன்றும், பாங்குடன் அமைத்துக்
கல்லா மடமை யில்லா தொழிப்போம்.
பிரம சரியம் பேணுக வாலிபர் ;
கன்னியர் குருகுலங் கண்டுபெண் மணிகள்
கற்றறி வோங்குங் கடமை புரிகவே
எண்ணெழுத் திலக்கியம், மண்விண் ணறிவு,
பௌதிகம் ரசாயனம் பொறிக ளமைத்தல்,
பயிர்த்தொழில் நெசவு பயனுறு கைத்தொழில்
இவற்றையும் புலவர் பயிற்றுக நன்றே.
உழைத்துண் டுடுத்துப் பிழைக்கவும், கற்கவும்
எல்லா ருக்கும் எளிதி னியல்கவே.
திண்ணிய உடலும் நுண்ணிய அறிவும்,
எண்ணிய நல்வினை இயற்றும் திட்பமும்,
வீர தீரமும், வெல்லுந் திறனும்,
செறிந்த வாலிபர் தேசப் பணிசெய

முந்துறச் செய்க மூதறி வாளர்.
ஆற்றல் மிகுந்த அரியமா னவரை
அமரகம் ஜரகம் அனுப்பியாங் கறிஞர்
செய்யும் வியன்கலைச் செய்திறன் பெற்று
நமது நாட்டிலே நாட்டுநி வோமே.
தொழிற்கரு விகளும் எழிற்கரு விகளும்,
போர்க்கரு விகளும் வார்த்திவண் செய்ய
வாலிபர் பயின்று ஞாலம் வெல்கவே !
கல்விக் கடலின் எல்லையார் காண்பார் ?
பொதுக்கல் வியுடன் புலமைக் கேற்ற
சிறந்த தொழிலும் திறம்படக் கற்று,
வீடும் நாடும் விளங்கிட நன்றே,
மடமையும் பொல்லா வறுமையும் ஒழியவே,
அன்னியச் சார்பிலா தவரவர் பிழைக்கவே
வேண்டிய கல்வி ஈண்டுநல் குகவே....

### அன்புக் குழு

அறமும் அறிவும் அருளும் திருவும்
அன்புடன் விளங்கும் இன்புறு தொண்டர்
அன்புச் சாமியின் அரிய தலைமையில்,
ஊர்ஊர் சென்றே ஒற்றுமை, நேயம்,
உயிர்களுக் கிரக்கம், ஊனுண் ணாமை,
இன்சொல் லாடல் இணக்கம் வணக்கம்,
பரோப காரம், பரிவு முதலிய
அன்பொழுக் கங்களை அடங்கிப் பயிற்றுவீர் !
பசிக்குத் தானியம் பழம்பால் உண்ண,
உலகைப் பயிற்றி ஊன்உண ஒழிப்பீர்.
ஊனுண வொழிந்தால் உயிர்க்கொலை யொழியும் ;
உயிர்கொன் றுண்ணும் ஒருபிழை யொழிந்தால்,
மனிதரை மனிதர் மடிக்கும் போர்வெறி
ஒழிந்து, கருணை பொழிந்து பொலியுமே,
கருணையி னாலே கடவுட் டன்மைகள்
வளரும் ; அதனால் வன்மனங் கொண்ட
அசுரக் குணங்கள் அற்றரு ளோங்குமே.
அருளால் அறிவும், அறிவால் ஒளியும்
உண்மை யின்பமும் ஓங்குத லாமே.
உழைப்புக ளாலே பிழைப்பருள் சாலை,
உயர்தொழிற் சாலை உணவுடை நல்கும்
கைத்தொழிற் சாலை, கால்நடைச் சாலை,

சிவகா ருண்யச் செயல்கள் இனும்பல
நாட்டி யன்பைக் காட்டுக நல்லோர்.

### நன்னடைக் குழு

நன்னடைத் தொண்டர் ஞாலந் திருந்த
உத்தம சாதுவின் உயர்வழி பற்றியே
பொதுஜன சமூகம் புண்ணிய வழியில்
இயல்பாய் நடக்கவும், இழிநடை ஒழியவும்,
கலைக ளாலும் கட்டுப் பாடுடன்
வாழ்த லாலும் வாழ்வகை விளக்குமின்.
வீறும் பலமும் மேதையும் வளர்க்கும்
பிரம சரியம் பிழையறக் காக்கும்
வகையைச் சொல்லி, வாலிபர் தமையும்
இல்லறத் தாரையும் நல்லறத் துய்மின்.
ஆசை காட்டி ஆளைக் கெடுக்கும்
வேசைத் தொழிலை வேரோ டொழிமின்.
கற்பொழுக் கத்தைக் காத்தில் லறத்தில்
ஆண்பெண் இருவரும் மாண்புற வாழ
வற்பு றுத்தி வழியைக் காட்டுமின்.
காலை மாலை கடன்முறை செய்யவும்,
உடல்மன மொழியில் உண்மையுந் தூய்மையும்
கடமையிற் கருத்தும் காத்திடச் செய்மின்.
மதியை மயக்கும் மதுவை விலக்கிச்
சூதும் தீதும் வாதும் வழக்கும்
வஞ்சமும் இன்றி நெஞ்சத் துடிப்பை
மதித்து நடக்க மாந்தரைப் பயிற்றுமின்!
காலம் போற்றும் சீலத் துடனே,
நாணுவ நாணிப் பேணுவ பேணி,
கனிந்த மொழியும் கண்ணோட்ட முடன்
பிறர்வருந் தாத பிரியமாம் செயலுடன்
நாக ரிகமாய் நடந்துல கத்தில்,
முரட்டுத் தானவர் வறட்டுச் செருக்கை
ஒழித்துத் திருத்த உயர்நடை காண்மின்....
நடையைப் போன்றே நாடா கும்மே.

### இல்லறக் குழு

இல்லற வாழ்வே இப்புவி வாழ்வாம்.
எப்படி இல்லறம் அப்படி நாடாம்.
திவ்விய தாந்திர சித்திகள் பெற்ற
இல்லற யோகிகள் எனப்புகழ் சிறந்த

சிவமங் களரின் சீரிய சொற்படி
இல்லறத் தொண்டர் இருபா லாரும்
இல்லந் தோறும் நல்லறங் காமின்.
பிரம சரியம் பிழையறக் காத்த
கன்னியுங் காளையுங் காதலித் தொன்றி
உழைத்துப் பிழைக்க ஒருதொழில் போற்றிக்
கற்பைக் காத்துக் காமவே கத்தை
அடக்கி யாண்டு திடங்கருத் துடனே,
மக்களைக் கருதியே மனைவியைக் கூடி
மற்றைக் காலம் மாசற ஒழுகி,
அகமும் புறமும் சுகமுறத் தக்க
தியான மும் நல்ல தேகப் பயிற்சியும்
சிஷ்டா சாரமும் சிறந்த விரதமும்
வள்ளுவர் அறப்பால் வகுத்த வழியே
இழுக்கற் றொழுகும் இயலறு மேன்மையும்
விளக்குமின் ; மனத்தின் விகார மொழிமின்.
பெண்டிர் வாழ்வைப் பேயெனப் படுத்தும்,
அடிமைத் தனமும், கொடிய கைம்மையும்,
வரதட் சிணையும் வழக்கற் றொழிகவே.
நல்ல கல்வி நல்ல கைத்தொழில்,
நல்ல காதல் நல்லுழைப் புடனே
இருவரும் உள்ளே ஒருவராய் விரும்பி,
இல்லம் விளங்க நல்ல மக்களைப்
பெற்றுப் பெருகிச் சுற்றந் தழுவி
வாழும் வகையை வாழ்ந்துகாட் டுமினே....

### குலக் குழு

குலத்தை வளர்க்கும் கலையிற் சிறந்த
மணிமா ணிக்கரின் மாண்புறு தலைமையில்,
தாளாண் மையுடன் வேளாண் மையுமுறக்
குலநலங் காக்குங் கொள்கை பயிற்றுவீர்.
தாயுந் தந்தையுந் தனயருஞ் சுற்றமும்
நண்பரும் விருந்தும் அன்புடன் ஒழுகி,
அவரவர் கடமையை அமைவுறச் செய்யவும்,
வீட்டுப் பணிகளை மின்னிடை யாரும்,
வெளிவே லைகளை வீறுகொள் ஆண்களும்,
சரிவரச் செய்து சரிநிக ராக
மனையோர் வாழ்க மங்கலம் பொங்கவே.
அறிவும் செல்வமும் அகமகிழ் வுடனே

அழகுங் கலையும் அன்புந் துலங்க
உடலைப் போற்றும் உயிரென வீட்டை
இன்புறப் போற்றும் இயற்கை யான
நடை முறைகளை நன்றெடுத் தோதுமின்.
தாய்மா ருக்குத் தக்க கல்வியும்,
குழந்தைக் கலையும் அளந்து பயிற்றுமின்.
குழந்தை களுக்குக் குடிக்கப் பாலும்,
எட்டாண்டு வரையில் இனிய கல்வியும்
ஆடலும் பாடலும் அளிக்க வேண்டிய
பாலர் சாலையும் பசுநிலை யங்களும்,
ஊர்தொறுங் காண்மின். உழைத்துப் புசிக்க
வேண்டிய தொழில்களை வித்தகர் பயிற்றுமின்.
ஒழுக்கமும் கல்வியும் ஓங்கிச் செழிக்க
கலைக்கோ யில்கள் கட்டி ஊர்தொறும்,
ஐந்துபு லன்களும் இன்புறச் செய்யும்,
பயனுள நாடகம், பரதம், பாட்டு,
கதை புராணம், கவிதை, சிற்பம்,
சித்திரம் ஆசிய சிறந்த கலைகளை
இருபா லார்க்கும் இயல்புறப் பயிற்றுமின்.
தலந்தொறுங் குலநலச் சங்கம் நிறுவி
உலகமுன் னேற்றம், உலகம் போற்ற
நமது முன்னேற்றம், நாடு பயன்பெற
வேண்டிய திருத்தம் ; விவாகம், சடங்கு,
திருநாள் பெருநாள் கருநாள் செய்வகை
பொதுச்சுகா தாரம் பொதுநலத் தொண்டுகள்
போற்றும் வகையெலாம் ஆற்றவும் பயிற்றி
உலகம் வாழக் குலநலங் காமினே !

## தொழிற் குழு

கலையுந் தொழிலுங் கணக்கும் அறிந்த
புலவன், உழைப்பிற் சலியாத் திண்மையன்
வீரகர் மாவின் விருப்பப் படியே
தொழிற்குழு செய்க தொண்டுகள் பலவே.
வறுமையே மாந்தரைச் சிறுமை செய்யும்
பெரும்பே யாகும், பேரிட ராகும்.
ஒவ்வொரு கையும் உழைத்துப் புசித்தால்,
செவ்விய தொழில்கள் செயமுற வளர்ந்தால்,
நாட்டுப் பொருளை நாட்டார் துய்த்தால்,
பசும்பொருள் இங்கே பண்டமாய் உதவினுல்,

கப்பலும் வணிகமும் கைத்தொழில் வளமும்,
நாடு செழிக்கவே நங்கையி லிருந்தால்,
பணம்புதை யாது பலதொழில் வளர்த்தால்,
தொழிற்பயன் பொதுவுறத் துய்த்தால், உலகில்
வறுமை யிராது வறியரும் எவரே ?
ஜனோப கார சங்கம் நாட்டி
ஊர்தொறும் பிழைப்புற உழைப்பை வகுப்பீர்.
உண்ண வுடுக்க உரிய தொழிலெலாம்
பலர்பய னடையும் பான்மை யுள்ள
கைத்தொழி லாகவே கணித்தல் அழகே....
கஞ்சி வார்ப்பது கைத்தொழி லாகுமே.
கையாற் செய்யக் கட்டி வராத
ஆவிக் கப்பல் ஆகாயக் கப்பல்
ஆயுதம் வாகனம் அச்சுப் பொறிகள்
இவற்றை இயந்திரம் இயற்றலே முறையாம்.
பலர்கை யுறங்கிப் பசிவாட் டாது,
கைத்தொழில் எளிதாய்க் காணுறத் தக்க
இயந்திரங் காணல் இனிதா கும்மே
போட்டியில் லாது பொதுநல வுணர்வுடன்
ஒருவர் இருவர் ஓட்டிப் பலரும்
பழகிப் பயன்பெறும் அழகிய கருவிகள்
மனைதொறும் பயில்க மக்கள் பிழைக்கவே
தையல் யந்திரம், தானியச் சக்கி,
இரும்புக் கலப்பை, இயந்திர ராட்டை,
விசைபெறுந் தறிகள் வீட்டிற் குதவும்
இத்தகைப் பொறிகள் இயற்றலே நலமாம்.
ஆக்கந் தேய்க்கும் அன்னியப் பொருளை
நீக்குக ; சுயத்தொழில் ஊக்குக மாந்தர்.
பணஞ்செய் மாயப் பிணியும் செருக்கும்
பண்ட மாற்றின் பயனால் விலகும்.
நூற்றவர் நூலை மாற்றுக நெல்லாய்.
கள்ளபின் கஞ்சா, காப்பி புகையிலை,
புலாலைப் போன்ற பொல்லாத் தொழில்களைக்
கட்டோ டொழிமின் கருணை வேண்டுவீர்.
உண்டுடுத் திருந்துநன் றாருக் குதவியாய்
வாழ வேண்டிய மங்கலத் தொழில்களைத்
தெருதொறும் வளர்க்கத் திருப்பணி செய்மினோ !
தகுதிக் கேற்ற பகுதியில் உழைத்தே
அனைவரும் உண்ண மனைசெழித் தோங்க

உழைப்பைத் தருதல் உங்கட னுமே !

அரசியற் குழு

ஆண்மையும் வீரமும் அஞ்சா நெஞ்சும்,
வாக்கும், உயர்ந்த நோக்கும் செயலும்,
வீரமும் காரிய வெற்றியும் செறிந்த
பொதுஜன நண்பன் புண்ணிய வீரன்
தருமகேசரி தலைமை தாங்கவே
சித்திமான் வகுத்த திட்டப் படியே,
அரசியற் குழுவார் ஆற்றுக பணியே.
ஒவ்வோர் ஊரும் உலக மாகவே
அரசியற் பணிகள் அமைந்து பொலிகவே !
இசைக்கவி யோகிகள் எழுந்துமுன் சென்றே
பழங்கதைப் பாட்டும் புதுக்கதைப் பாட்டும்,
சரித்திரப் பாட்டும் சமத்துவ சுதந்தர
வீரப் பாட்டும் வீதியி லிசைத்தே
புண்ணிய பூமியின் புகழும் பெருமையும்
இற்றை நிலையும் தெற்றென விளக்கி,
நாட்டன் போங்க நற்பணி புரிகவே
அடுத்தொரு கூட்டம் ஆண்மையும் வீரமும்
உரிமை யுணர்ச்சியும் ஓங்கப் பேசியே,
செய்தித் தாட்கள் செவ்வனே நடத்தித்
தூண்டுக வீரச் சுடரொளித் தொண்டே
மற்றொரு சாரார் மாதரைப் பயிற்றுக.
கல்வியுந் தொழிலும் வல்ல புலவரால்
சுதேசப் பொருளைத் தொண்டெனப் புரிந்து
தேசச் செல்வஞ் செழிப்புறச் செய்கவே.
ஆக்க மழிக்கும் அன்னியர் பொருளை
நீக்கி வாழ ஊக்குக நாட்டை.
அரக்கர்க் கிடந்தரும் அழிசெயல் அனைத்தும்
அன்னிய மோகமும் அடிமைப் புத்தியும்
அறவே யொழியத் திறம்பெறு தீரர்
மற்றக் குழுவுடன் ஒற்றுமை கொண்டே
தேச மெல்லாந் தேவை யளவு
பெற்று வாழப் பெரும்பணி புரிமினே.
வேலை தந்து கூலி யுதவியே
பிச்சை யேந்தும் பிழையைத் தீர்மின்.
சுயமன வுறுதியும் சுயநம் பிக்கையும்,
சுயநல மற்ற பொதுநலத் தொண்டும்,
தியாகமும் ஆத்தும தீரமுங் கொண்டால்,

பிரிவினைக் கட்சிப் பேதமே யின்றி
உரிமை வேண்டி ஒற்றுமை யுற்றால்,
ஆட்சிச் சபைகளை ஆண்மையோ டாண்டால்,
மெல்ல மெல்ல வெல்லுந் திறனும்
விடுதலை யின்பமும் விளங்குத லாமே.
புண்ணிய நாட்டார் புலமையைத் தூண்டி
மேதினி போற்ற மேதா விகளை,
உண்டு பண்ணி உலகெலாம் அனுப்பி,
நாட்டின் மதிப்பை நட்புடன் உயர்த்தினல்,
நமது சொல்லை ஞாலம் மதிக்குமே.
புலவரைப் போற்றிப் புகழ்பெற வாழ்வோம்.
அமைதியாய் இவ்வகை அரும்பணி செய்மினே !
புத்திமா னாகிய சித்திமான் பயிற்றும்
வீரர் செய்வார் விடுதலைக் கிளர்ச்சியே ;
சிகரத் தீவிற் சேனைக் கேற்ற
புதுப்புதுக் கருவிகள் போரெனத் துடிக்கும்....
அதனிடை யேநாம் ஆயுத மின்றியே
தியாக வேள்வியின் வேகத் தாலே,
அறத்தை நாட்டி அதர்ம விதிகளைப்
புறக்க ணிப்போம். பொய்மை யெதிர்ப்போம்,
குடிபடை சேர்த்துக் கொடுமையைக் குமைப்போம்.
நடுங்கா நெஞ்சுடன் கடுஞ்சிறை காத்தும்,
துப்பாக்கி முனையிலுந் துணிந்துமெய் புரைத்தும்,
அடிமைப் பான்மை அடியுடன் சாய்ந்து
சுதந்தர வீரராய்ச் சோர்வற நின்று,
ஒத்த விடத்தில் ஒத்துழைப் பீந்தும்
ஒவ்வா விடத்தில் ஒத்துழை யாதும்,
நல்லதைப் போற்றிப் பொல்லதை வீழ்த்தியும்,
வீரத் தியாகிகள் விடுதலை கொணர்வார்.
அசுர பலங்கள் ஆயுதம் எடுத்துச்
சாது சனங்களைச் சண்டைக் கிழுத்துக்
குண்டுக ளெறிந்து கொலைசெயப் புகுந்தால்,
அவர்களை அடக்கநாம் ஆயுத வீரரைப்
பயிற்றிட வேண்டும். பாரினில் இன்று
வாணிகத் தொழிலுடன் இராணுவ பலமும்
ஐக்கிய பலமும் அறிவுத் திறனும்
வளர்க்க வேண்டும். வலிய ராக்ஷஸர்
சாந்தக் கிளர்ச்சியால், சமதரு மத்தை
அறிந்திட ரின்றி அடங்கிப் போனல்,

இரத்தப் போரிலே ; இருவரும் அன்புடன்
குலவி நல்ல குடியர சாக்குவோம் ....
இவ்வா றனைத்திலும் இகலை வென்று,
சுதந்தரம் பொலிய நிதந்திருத் தொண்டர்
சுறுசுறுப்பாகத் தொண்டுகள் செய்கவே.

யோகக் குழு

எல்லாச் செயல்களும் எல்லாப் பயன்களும்.
யோக சக்தியால் ஒருங்கே தழைக்குமே;
ஆருயிர் வாழ்வெலாம் அகண்டசுத் தான்ம
யோகமாக் குதலே உயர்கட னமே.
அதற்கே நாமும் அருந்தவஞ் செய்தோம்.
அதற்கே சித்தர்கள் ஆயிரந் தேர்ந்தோம்.
யோக தீரன் உம்மை நடத்தச்
செல்வீர் முன்னே சேமம் பெருகவே.
அன்பாம் ஆன்மா இன்ப மயமாம் ;
உள்ளும் உலகும் தெள்ளிதின் அதனை
உணர்ந்து வாழ்லே யோக சித்தியாம்.
சித்தி நல்கும் சக்தியி னலே,
உலகான்ம நேய ஒருமையி லோங்கும்,
அஷ்டாங் கத்தால் அறிவும் உருவும்,
அருளும் ஆற்றலும் ஆனந்த மாமே.
குண்டலிக் கனலை மண்டையி லேற்றி,
வெண்டா மரையில் வீற்றிருந் தாலே,
சுத்தா னந்தச் சுடராம் உயிரே ;
சிற்சக்தி யென்னும் தேன்செழிக் கும்மே.
யோக சித்தியின் உள்ளுரை கண்டு,
சாதனஞ் செய்து, சகலரும் வாழ்வைச்
சுத்தான்ம யோகச் சுடரொளி யாக்கினல்,
மனித சமூகமே மாறுதல் பெறுமே.
பூரணம் பெற்ற புனிதன் ஒருவனல்,
கணக்கிலர் ஆன்மக் கனல்பெறு வாரே.
மனத்தை யடக்கி மாசிலாத் தியான
சாதனத் தாலே சக்தி பெறலாம்.
அத்தகைச் சக்தி யடைந்த நல்லோர்
எங்குந் தம்மையே இயல்புறக் காண்பார்.
அன்பும் நேயமும் அவரால் ஆமே.
அமைதியும் இன்பமும் அவரால் வருமே.
மனேமய மான மானிடம் மாறி,

விஞ்ஞா னத்தில் வியனொளி கண்டே,
ஆனந் தத்தில் அமுதம் பருகியே,
துரியந் தன்னிற் பரசிவ போகம்
புசித்துச் சிவமயம் பொலிந்திடும் போகம்
சந்தி யளிக்கும் சுத்த யோகமே.
அத்தகை யோக சித்தர்காள், இனிநீர்
தேசந் தேசமாய்த் திரிந்துல கிற்குச்
சன்மார்க் கமுடன் சாதன வாழ்வும்,
சொல்லிப் பயிற்றிச் சுத்தான்ம ஒளியைத்
தூண்டுமின் ; எங்கும் சுத்தசங் கத்தை
நாட்டிநல் லோரைக் கூட்டித் தினமும்,
உடலுறு திக்கே ஹடசா தனமும்,
உள்ளுறு திக்கே தெள்ளிய தியானமும்,
சித்தசுத் திக்குப் பத்திவை ராக்யமும்,
இந்திரிய மடங்க இராச யோகமும்,
உபசாந் தந்தரும் ஓம்சுத்த சக்தி
ஜபசா தனமும் தத்வோப தேசமும்
சுத்த முக்த சமத்துவ வாழ்வும்,
அருட்பணி யாகிய கரும யோகமும்,
பாரத சக்தி பரவும் கலையும்
பக்குவ மறிந்து பயிற்றுக நன்றே....
எல்லா நலமும் வல்லது யோகம்.
மூச்சைப் போலவே முதுநில மாந்தர்,
யோகத் திறைவனை உட்கலந் துயிர்க்க
வேண்டும் பணிகளை, விஞ்ஞா னத்தால்,
ஆண்டவன் அருளால், அமைதியாய்ச் செய்மின்,
அவனரு ளாலே புவிநல மாமே.....

சித்தர் குழு

சுத்த சங்கம் துலக்கிய கொள்கையைச்
சித்தர் உருச்செய் திறனைக் கேளீர் :—
ஊர்தொறும் ஊர்தொறும் யோகிகள் கூடிச்
சுத்த சங்கம் வைத்து வளர்ப்பார்.
அன்பர் நாட்டும் அருளால யத்தைச்
சுற்றிலும் சங்கம் வெற்றியோ டமையும்.
அருளால யத்தில் ஆண்டவன் ஒருவனை
தியானத் தாலும் திருப்பாட் டாலும்,
அன்பர் அனைவரும் இன்புறக் கலப்பார்.
அருட்பேச் சருட்பாட் டருட்சா தனமே
அருட்கோ யிலிலே அருளுற நடக்கும்.

வாய்மனங் கடந்த தூயவ னுக்கே
தியானப் பூசனை தினந்தின மாமே.
சக்தி பொழியும் சுத்த நிலையம்
இதுவே ; சித்தர் பொதுவீ டாகும்.
கோயிலைச் சுற்றிக் கொழுங்கனிச் சோலையாம் ;
கனிகளை யுண்டு கடுந்தவம் புரியும்
மாதவர் வாழும் வீதியங் காகும்.
சக்தி யளித்தலும் சாத்திரங் கோத்தலும்,
யோகம் பயிற்றலும் உயர்பொரு ளுரையும்
மாதவர் செய்யும் மாப்பெருங் கடமையாம்.
பொழிலைச் சூழ்ந்து புலவர் வாழும்
கலைநிலை யங்களும் கல்விச் சாலையும்
அறநிலை யங்களும், அணியுறக் காணுமே.
அனைத்தையு நடத்துவோர் அறவோர் ஆவ
கல்வி, கைத்தொழில், கமத்தொழில் நெசவு,
வைத்தியம் முதலிய வகைவகைப் பணிகளை
அணி வகுப்பவர் ஐம்பதாம் அறவோர்.
அச்சுக் கூடமும், அருங்கலை யிதழும்
நடத்தி அறிவை நாட்டிற் பரப்புவார்.
இருபா லார்க்கும் குருகுலக் கல்வியும்
அறிஞர் குழுவால் அளிப்பவர் இவரே.
பிரம சரியம் பேணிய வாலிபர்
தக்க கல்வியும் சக்தியும் பெற்றபின்,
விரவிய தொழிலும் வீரப் பயிற்சியும்
பெற்றிரண் டாண்டுகள் பிரியமாய்ப் பழகி
இல்லறக் குழுவிலும் இன்குலக் குழுவிலும்
தொண்டு செய்தபின் சுத்த சித்தரின்
ஆசி யுடனே மாசிலா மனையறம்
காப்பார் ; ஆண்பெண் கலந்து வாழ்வதும்
நற்பணி செய்யும் நாற்கரம் போலுமே.
நான்கு மக்களை நலமுறப் பெற்றதும்
உடன்பிறந் தார்போல் உள்ளன் புடனே
பிரம சரிய விரதம் பூண்டு
பொதுநலம் புரிந்து புகழுற வாழ்வரே.
இல்லற வீதியின் எல்லையைத் தாண்டிச்
சங்கம் வேண்டும் சகல தொழில்களும்
கலைமன் றங்களும் நிலைபெற் றோங்குமே ;
தொழில்வட் டத்தைத் துருவிச் சென்றபின்,
ஊர்ச்சுகா தாரம் ஊங்குறக் காக்கும்

ஊழியர் வட்டம் ; மேழிச் செல்வர்
உயிரைக் காக்கும் பயிரைக் காத்து
வாழும் விதிகள் வளப்புறக் காணுமே.
சித்தர் மாதவர் சிலர் அறவோர்,
புலவர் தொண்டர் நிலவும் அனைவ நம்
ஒன்றே குலமும் ஒருவனே தேவனும்
என்ற உணர்ச்சியில் ஏக ரசமாய்,
அருளா லயத்தில் அன்புசெய் வாரே.
சுத்த சங்கச் சூரியக் கதிரே
அனைவரும் ஆவர். அருளும் கலையும்
தொண்டுந் துறவும் கொண்டு செழிக்கும்
சுத்தசங் கத்தைத் துலக்கிப் பணிசெயும்
சித்தர் முதலிற் சித்தி நகரிலே
சங்கம் நாட்டிச் சாதனம் வளர்ப்பார்.
அதன்செய லாளன் அமர சித்தனே.
அதன்கிளை யாகவே அமைதியாய்ப் பலவூர்
சுத்த நிலையமாம் தொண்டுகள் வளரும்....
பன்னிரு வகையாய்ப் பகுத்த பணிக்கும்
அறிவுந் தொழிலும் பெருகிப் பரவவும்,
சாத்திரஞ் செய்து தகுமுறை தரவும்,
தொண்டினுக் கேற்ற தொண்டரைப் பயிற்றவும்,
பொருள் வளம் பெருக்கவும் பொதுநல மூக்கவும்,
காலம் பார்த்துக் கட்டளை யிடவும்
நாட்டிற் சங்கம் நாட்டி யுழைக்கவும்,
உலகிற் கெல்லாம் உண்மையை விளக்கவும்,
நாட்டிற் கேற்ற நலமுறு தொண்டரைப்
பயிற்றி யுலகெலாம் பணிசெய் விக்கவும்,
சக்தியும் யானும், முத்தி முனிவரும்
சிரிய தாயும், சித்தி மானும்
அயரா துழைப்போம்....ஆண்டவன் அருளால்.
பன்னிரு வகையிலும் பயின்ற தொண்டர்
சீகர னுடனே செல்க சிலபேர்.
எந்தைக் குதவியாய் ஏகுக சிலபேர்.
தானவம் வளரும் சன்மார்க்க சங்கம்,
அரக்கரை அடக்கி அருளாட்சி நாட்டவே
ஆனந்த விஜயனும் அறவோர் நூறும்
செல்க சத்தியம் வெல்கநா மின்று
தியானத் தாழ்ந்து திருவருள் பெற்று,
சுபகீ தமுடன் சுறுசுறுப் பாகப்

பாரத முனியும் பழம்பெரு சாந்தனும்,
சித்தி மானும், திருமிகு போகனும்
முன்னே தொண்டுகள் முயன்ற பெரியார்
வரலா றுகளை வளம்பெறக் காட்டி
ஊக்கிடச் செல்வோம் உலகப் பணிக்கே !
எல்லாருக்கும் இன்பமோங் குகவே....
சுத்த னிவ்வகை சொன்னதும் சங்கம்—
பன்னிரு வகைப்பணி பணிவுறச் செய்தே
யோகத் தாலும் தியாகத் தாலும்,
அருளாட் சியினை அடியார் நாட்டுவோம்...
சுத்தனும் சங்கமும் சுத்த தருமமும்
போற்றி ! யென்று புகுந்தனர் உளமே !

# 10. மஹாத்ம விஜயப் படலம்

திருவருள் பொலிய ஓங்கும் திவ்விய சுத்த சங்கம்,
குருவருள் குறித்த சேவை கொள்கையின் இயற்ற வேண்டிப்
பெருமகிழ் வுடனே நிற்கப் பெரியவன் பரத யோகி
பொருளுடன் ஆசி கூறிப் புகன்றனன் புனித வாயான்.

பரத முனி

"அகவிருள் போக்கி, ஆத்ம சக்தியின் ஆக்கத் தாலே
சகவிருள் போக்கச் செல்லும் சமரஸ வீரச் செல்வீர்,
பகலொளி போன்ற தூயன் பண்புள பணியைச் செய்யத்
தகவுறு காந்தி போலச் சத்தியக் கனலைத் தாங்கீர்.

ஒவ்விய மனத்தராகி, ஒவ்விய செயலைத் தேர்ந்து,
செவ்விய பயிற்சி யாலே திறம்பல பெற்ற நல்லீர்,
துவ்விய காந்தி போலத் தொண்டுகள் பரவி, யிந்தத்
திவ்வியப் புண்ய பூமி விழித்தெழச் செய்வீர்" என்றான்.

தொண்டர்

நீடுறு தவத்தி னாலே நிலவுறு பரதன் சொல்லைப்
பீடுறு தொண்டர் கேட்டுப் பெரியவ, பெரிய சான்றோன்,
ஈடறுங் காந்தி காதை எங்களுக் கியம்பக் கேட்டால்,
நாடுறு வினைக்கு நல்ல ஊக்கத்தை நல்கு மன்றே.

புண்ணியத் தொண்டர் சொல்லப் புனிதனும் ஆமோதிக்கப்
பண்ணவன் பரதன் ஆங்கே பழுதறு தமிழி னாலே,
கண்ணெலாங் கருணையாகக் கையெல்லாம் சேவை யாக
மண்ணெலாம்போற்றவாழுமஹாத்மனின்சரிதைசொன்னான்.

மஹாத்மா விஜயம்

சத்தியம் உள்ள மட்டும், தருமமே வெல்லு மட்டும்,
உத்தமர் பொறுமை யாலே உயிர் நலம் உயரு மட்டும்,
வித்தக பரத நாட்டின் புண்ணியம் விளங்கு மட்டும்,
இத்தலம் உள்ள மட்டும் இலகுக மஹாத்மா காந்தி.

சாந்தமே கனிந்த வீரன், சத்தியாக் கிரக தீரன்,
காந்தமே போல மாந்தர் கருத்தினைக் கவர்ந்த நல்லோன்,
மாந்தரை வாய்மை யாலே மாசறச் செய்த வள்ளல்,
காந்தியென் றுலகு போற்றுங் கருணையங் கண்ணன் றானே.

திறங்கொண்ட ராம நாம ஜெபத்துடன் சேவை செய்யும்
அறங்கொண்ட தியாக மூர்த்தி அஹிம்ஸையே விரத மாக
மறங்கொண்ட மிருக சக்தி வலிவிழந் தொடுங்கத் திசைப்
புறங்கண்ட மெய்யன், செய்யன், பொறுமையிற் பூமி போன்றான்.

அன்னிய மாயத்தாலும் அஞ்சிடு மடமை யாலும்,
தன்னலச் சூழ்ச்சி யாலும், சாதிம தாபி மானம்
பின்னிய வலைக ளாலும், பிறபல தீமை யாலும்,
மன்னுலக கடைந்த துன்பம் மாறிட வழிசெய் தானே.

இத்தகைக் காந்தி, எங்கள் இந்தியா செய்த வத்தால்,
கத்திய வார்போர் பந்தர் கரமசந் திரனு ருக்கும்
புத்திரி பாய்க்கும் செல்வப் புதல்வனாய் வந்து, நல்ல
பத்தியும் கருணை யன்பும் பழுத்திட வளர்ந்தா னம்மா ! 40

மன்னவன் சலுகை வேண்டா மந்திரி தந்தை நல்லோன்,
பொன்னணி மினுக்குவேண்டான்போட்டிசெய்புகழும்வேண்டான்
அன்னதா னங்கள் செய்வான், ஹரிபக்தி என்றும் செய்வான்
அன்னவன் மகனைக் கண்டால் அவனைநாம் காண லாமே.

சீரிய கற்புத் தேவி, சிவகா ருண்ய சீலை,
சூரிய விரதங் காக்குந் தூயநல் லன்புச் செல்வி,
காரியத் திறமை மிக்காள், கருணைசெய் யறத்தின் மிக்காள்,
ஆரிய தருமத் திற்கே அணிகல மாகும் அன்னை....

வையக வியல்ப றிந்து வாழ்வகை வாழும் இன்னோர்
செய்தவப் பயனோ, அன்றிச் செகஞ் செய்த தவத்தின் பேறோ,
பொய்யிருள் ஒழிய வந்த புண்ணியச் சுடரைப் போலே,
மெய்யருள் வீசி வந்தான் மேதகு சந்த்ர காந்தி.

பள்ளியிற் படித்த போதும், பகவனை மனதில் வைப்பான்,
உள்ளநெக் குருகி ராம கதைகளை ஓதக் கேட்பான் ;
கள்ளமில் லாத காந்தி, கருணையே யான காந்தி,
பிள்ளையா யிருந்த போதே, பெரியனைக் காட்டி னானே.

"ஆருயிர்க் கருணை பேணி, அஹிம்ஸையே விரத மாகி,
நேரிய வாய்மை காத்து, நெஞ்சினில் உனைநி னைந்து,
பாரினில் அஞ்சி டாமல், என்கடன் பணிந்து செய்து
சீரிய தீர னாகச் செய்பரம் பரனே போற்றி."

தாயுடன் இந்த வாறு சாமியை வணங்கி நாளும்,
தூயநன் மலர் சொரிந்து தொண்டுடன் அன்பு செய்வான்.
வாய்மையும் பரிவும், பெற்றோர் மதிமிகு சொல்லும் போற்றித்
தேயமும் அறமும் வாழச் சிறந்தனன் பிறந்த ஊரில்.

புல்லியர் சேர்க்கையாலே புசித்தொரு தடவை யூனை,
அல்லலுற் றழுங்கி யன்றே அஹிம்ஸையின் விரதம் பூண்டான்;
நல்லரிச் சந்த்ரன் போன்ற நாடகம் கண்டும், அன்பர்
சொல்லிசை கேட்டும் வாழ்வைத்தூயநன் னெறியில்உய்த்தான்.

கற்றறி வோங்கு முன்பே, காதலை யறியு முன்பே,
பெற்றவர் பாசங் கொண்டு பிள்ளைக்குப் பதின்மூன் றாண்டில்,
சிற்றில்செய் தாடு கின்ற சிறுமிகஸ் தூரி தன்னை
நற்றினம் வதுவை செய்தார் நன்மனை யின்ப மோங்க.

பொன்னுடன் மணியைப் போலப் பொருந்திய கற்புச் செல்வி
புன்னகை பொழியும் வாயாள் பொறுமையே வடிவ மானாள்.
அன்னமென்னடையாள், அன்பே அணியென வுடையாள், காந்தி
சொன்னதே வேதம் என்று துணிந்துடன் சென்ற தூயை.

கண்ணுடன் மணியைப் போலக் கருத்துடன் சொல்லும் போல,
விண்ணுடன் காற்றும் போல, மின்சக்தி யிரண்டு போலப்,
பண்ணுடன் பதமும் போலப் பரிசுத்த காந்தி, கொண்ட
பெண்ணுடன்வாழ்ந்தான்வாழ்வின்பேறெலாம்பெற்றநல்லோன்.

ஆங்கிலம் பத்தாண் டிங்கே அமைவுறப் பயின்ற காந்தி,
ஓங்கிய சட்டங் கற்க—உறவினர் தடுத்துங் கேளான்—
வீங்கிய புதிய போக வியன்பல விளங்கு லண்டன்
பாங்குறச் சென்றான் ஆங்கே பாரிஸ்டர் பரிட்சை தேற.

மாசறு மகனைப் பார்த்து "வைணவ ஒழுக்கம் பூண்டாய்
வேசை, கள், ஊனை என்றும் விலக்கிவாழ்; உறுதி சொல்"லென்
றாசையாய்க் கேட்டாள்; சேயும் "அன்னையுன் ஆணை காப்பேன்
தேசமே பெருமை கூறத் திரும்புவேன்" என்று சென்றான்.

பாரிஸ்டர் காந்தி

ஊனும் விஸ்கியும் உவந்திடும் சீமையில் உறைந்தும்,
தேனின் இன்னிய காய்கனி தீஞ்சுவைப் பாலும்,
தான ருந்தியோர் தாவரச் சங்கமும் நாட்டி
தீன ரட்சகன் ஜீவரட் சகனெனத் திகழ்ந்தான்.

ஏக நாதநும் கண்ணனும் புத்தரும் இயம்பும்
மாசிலாவுப தேசத்தை வாழ்வகை வாழ்ந்தான்.
தேசு லாவிடும் எளிமையின் சிகரத்தில் இருந்தே,
காசி னிக்குமெய் வழியினைக் காட்டிய கதிரோன் !

இருவி காரத்தை அடக்கிய இருடியைப் போன்றான்,
ஒருமை கொண்டுதன் படிப்பிலே உள்ளத்தை யூன்றி,
பெருமை யாகவே பாரிஸ்டர் பட்டமும் பெற்றே,
அருமைத் தாயகம் அடைந்தனன் அலைகடல் கடந்தான்.

பணைந்செழித்தபம் பாயினில் பகட்டின்றி வாழ்ந்தே,
இணங்கு நன்றொழில் இயற்றினன் எளியவர் மகிழ ;
பிணங்கு செல்வியின் வக்கிரப் பிலுக்கையும் பொறுத்தான் ;
உணங்கிலான் உயர் உள்ளமும் உழைப்புடன் உகந்தே.

அழி வழக்குகள் ஆடிடான் ஆயிரம் கொடுத்தும் ;
பழியை நாணுவான் ; அசத்தியம் கனவிலும் பகரான் ;
உழையும் ஏழைகட் குறுதுணை யாகநின் றுதவித்
தொழிலைக் காட்டிலுந் தருமமே சுகமெனத் தொடர்ந்தான்.

கல்வி கற்றதுங் கடல்கடந் துற்றதுந் தனக்கே
செல்வந் தேடுதற் கன்றுசு தேசத்தின் சேமம்
பல்கவே ஒரு பணிதனக் குளதெனப் பகர்ந்தான் ;
மெல்ல மெல்லமுன் செலுத்திய விதிவழி விரைந்தான்.

அன்னி யக்கொடுங் கோலுக்கே அடிமையாய் நாடு
பொன்னி ழந்துநற் புகலின்றிப் பொலிவிழந் தழுங்கி,
தன்ன தூணுக்குந் தவித்திடக் கண்டுளந் தளர்ந்தான் ;
மன்னு யிர்களின் இன்னலை மாற்றிட வந்தோன்.

தீர ராகிய திலகர்தா தாமுதற் சிறந்தோர்—
பார தச்சபை நடத்திடும் பண்பையும் பார்த்தான்.
ஈர நெஞ்சினன் இந்திய வேள்விக்கே தன்னைத்
தாரை வார்த்திடுந் தருணமும் வருமெனத் தழைத்தான்.

அம்பொன் மல்குதென் னுப்பரிக் காவிலோர் முஸல்மான்,
தன்பெ ரும்வழக் காடிடத் தயவுசெய் கெனவே—
அன்பு வள்ளலுந் தருமமே யழைத்திடச் சென்றான்—
துன்ப முற்றிடுஞ் சுதந்தரத் திருவழி துலக்க.

தென்னுப்பரிக்காவில் காந்தி

வந்த வேலையை டர்பன்மா வழக்குமன் றத்தில்
முந்து நன்முறை முடித்துத் தன் முயற்சியி னாலே
சொந்த மாந்தொழில் செழித்திடத் தொடர்ந்திடும் எல்லை,
இந்தியர் படும் இன்னலை எதிரிலே கண்டான்...

சட்டை தொப்பிகள் அற்றவர் தம்மையே
மட்டம் என்று மதித்திடும் வெள்ளையர்,
சட்ட மிட்டனர் தன்தலைப் பாகைக்கும் ;
வட்ட மிட்டனர் வாழு மிடத்திற்கும்.

வண்டி யேறவும் வம்புத் தடைபல ;
உண்டி கொள்ளவும், ஊரில் நடக்கவும்,
கண்டிப் பான கறுப்புத் தடைகளைக்
கண்டு கண்டு கடிந்தனன் காந்தியே.

தீரன் ஓர்பகல் திரான்சுவால் ஏகுழி,
பேர கந்தையிற் பேசியோர் வெள்ளையன்
"யார டாகறுப் பன்"எனத் தூற்றியே
கோர மாகக்கை கொண்டு புடைத்தனன்.

வெவ்வ நீதிகள் வீதியிற் கண்டெங்கும்
திவ்வி யப்பொறை தேறிய காந்தியும்,
ஒவ்வ றுங்கொடுஞ் சட்டம் உடைக்கவே
செவ்வை யாகக் கிளர்ச்சிகள் செய்தனன்.

தனி யகந்தையும் தன்னலச் சூழ்ச்சியும்
எனது சாதி யினமெனும் வாதமும்
மனிதனை மனிதன் மதி யாதுசெய்
சினமும் வெய்ய செருக்கும் வெறுத்தனன்.

இங்கு வெள்ளை யினத்தவர் மேவியே,
பொங்கு செல்வம் பொலியும் பொழுதெல்லாம்
தங்க வைரச் சுரங்கத்தில் தன்னவர்
மங்கி வாடி மடிவதைக் காட்டினன்.

பசையுண் டென்று பலநயம் பேசியே,
வசஞ்செய் திந்திய மக்களை வாட்டிய
கசையடியுங் கடுந்துயர் வேலையும்,
பசி முகமும் பரிவுடன் கண்டனன்.

நெற்றி வேர்வை நிலத்தினிற் சொட்டவே,
உற்று வேலைசெய் ஒப்பந்தக் கூலியைக்
கற்ற றிந்துங் கருணையில் லாதவர்
வற்ற டித்துயிர் வாட்டிடக் கண்டனன்.

புழுதி மேவிய பொட்டலை வேர்த்திட
உழுது நட்டுரம் இட்டுழைத் தோங்கவே
செழுமை செய்த திருத்தொழி லாளரும்
அழுத கண்ணீர் அகநெகக் கண்டனன்.

இடை முறிந்திடும் இன்னலைத் தாங்கியே
கடமை செய்யும் கதியறும் ஏழையைத்
தடைகள் ஆயிரந் தாழ்த்தி மிதித்திடும்
கொடுமை கண்டு கொடியரைக் கண்டித்தான்.

பால் கறக்கும் பசுவைப் புசிப்பவர்,
தோல் கறுப்பெனத் தூற்றிநம் ஆட்களை
கூலி மக்கள் உழைப்பிற் கொழுத்திடும்
கேலி செய்திடும் கேட்டினைக் கண்டித்தான்.

உதிரம் சிந்துழை ஏழைகள் 'உம்' என்றால்
அதிருஞ் சாட்டை ! அடிமை விலங்கினை
எதிர் முறுக்கின் எமபுர மேகதி ;
கதியி லார்கதி கண்டு கலங்கினான்—

ஏடு கற்கவும் ஏழைக் கிடமில்லை;
வீடு கட்டவும் வீதித் தடைகளே.
ஆடு மாடெனவே படை பட்டிடும்
பாடு பட்டவர் பங்கமென் சொல்லுவோம் ...!

ஈங்குன் சேரியென் றெல்லையை நாட்டுவார் ;
தாங்கொ ணாத தலைவரி வாங்குவார் ;
ஆங் கெழுத்தடை யாளமும் வாங்குவார் ;
ஏங்க மானம் இழிவுசெய் வார்களே.

திரு மணத்திற்கும் திட்டமும் சட்டமும்
வருகை போகைக்கும் வன்மைக் கெடுபிடி ;
ஒருவ ருக்கும் உரிமையாய் வாழ்ந்திடும்
பெருமை யில்லை அடிமைப் பிடிப்பிலே.

கடி யரவினும் காட்டுப் புலியினும்
கொடிய நோயினுங் கொள்ளைப் படையினும்,
அடிமைத் தாதராய், அன்னியர் இன்னலிற்
படிதல் ஆன்மப் படுகொலை யாகுமே.

ஆடு மாடினும் ஆறறி மக்களைக்
கேடு செய்திடுங் கேவலச் சட்டத்தைக்
கூடி நின்று குமைத்திடக் காந்தியும்
மேடை யச்சில் விளம்பரஞ் செய்தனன்.

உழைத்திந் நாட்டை உருப்படி யாக்கியே
செழிக்க வைத்த செழுந்தொழி லாளரை
அழிக்கும் பேயெனும் ஆசியச் சட்டத்தைப்
பழிக்கு மெந்தப் பழுதுறு நாடுமே.

வேலை செய்து விகிதப் படிதரும்
கூலி வாங்கிக் குடித்தனஞ் செய்குவார் ;
ஓல மிட்டழ, வாழும் உரிமையைக்
கோலும் சட்டமுங் கொண்டு பறிப்பதோ ?

பட்டி மாடெனப் பாடு படுத்திடும்
கெட்ட சட்டங் கெடக்கிளர்ந் தன்பர்கள்
"எட்டுத் திக்கும் எதிர்த்துநிற்போ" மென்றுன் ;
சுட்டி டினுஞ் சுதந்தரஞ் சாகுமோ ?

வாய்மை சொல்லி வருந்துயர் தாங்குவான் ;
தீமை வீழ்ந்திடத் தீங்கறு போர்செய்தான் ;
சீமை சென்றுந் தெளிவுறப் பேசினுன் ;
பூமி யெங்கும் புகழ்பணி போற்றினுன் .

காந்தி சொல்லைக் கருத்துறக் கேட்டதும்,
சாந்த மாகிய சத்திய வீரர்கள்,
மாந்தர் மாண்பை மதித்து விளக்கிடக்
போந்தனர் பொறு மைச்சமர் போற்றியே.

"நாடு விட்டு, நலம்புரி மக்களின்
வீடு விட்டிந்த வேகு நிலத்திலே,
காடு வெட்டிக் கரும்பு விளைத்தவர்
பாடு பட்ட பலனிக் கொடுமையோ ?

துலங்கும் ஆன்ம சுதந்தர மானிடர்
விலங்கு போல, மிடியிருள் அச்சத்திற்
கலங்கி யிங்குக் கவலைப் படுவதோ,
நலங் கிளர்ந்திட நாங்கள் கிளர்ந்தனம்.

அரிய மானிடர் அன்பினில் வாழ்ந்திடும்
உரிமை நாட்டிநல் உண்மையை நாட்டுவோம் ;
எரி வெடியும் சிறையும் இடும்பையும்
வரினும் எங்கள் உறுதியை மாய்க்குமோ ?"

என்று கூறி எழுந்தனர் ஆசியர்,
வன்ற வத்தலை வன்சொல் வணங்கியே,
ஒன்று பட்டுத்தம் உண்மை யுரிமையை
வென்று நாட்ட விரைந்து கிளர்ந்தனர்.

"கறுத்த கூலிகள் காந்திக் கிணங்கியே,
மறுத்தெஞ் சட்டத்தை வாயுந் திறப்பதோ ?
வெறுத்த கூலி விநோதப் படைகளை
ஒறுத்த டக்கிடு வோ"மென வெள்ளையர்,

குறைசொல் வாரைக் கொடுமைசெய் தேயிநட்
சிறையி லிட்டனர் ; சிறிப் புடைத்தனர் ;
பறை யடித்திடும் பாரெங்கும் இச்செயல்
நிறச் செருக்கினை நிலை யுரைத்ததால்.

மூலர் இன்னவன் என்று நலிந்தெதிர்
கூலி வேந்தைக் கொடுஞ்சிறை யிட்டனர்.
சால வுங்கடுஞ் சங்கட மாகிய
வேலை தந்து வெறுப்புடன் வாட்டினர்.

தொண்டர் சூழத் துணிந்த மகாத்துமன்,
எண்பு சையும் எதிர்ப்பினைத் தாண்டியே,
கண்ட னத்தைக் கனலுறச் செய்தனன் ;
தண்ட னைகளைத் தாங்கினன் சாந்தமாய்.

அடுத்த டுத்தங் கலையலை யாகப்போர்
தொடுத்த சாந்த சுதந்தர வீரரை,
அடைத் தடைத்துவிட் டேயலுத் தச்சமர்
முடித்தி டவும் முனைந்தனர் வெள்ளையர்.

கட்டி ரும்பும், கடுஞ்சிறை வாசமும்,
சுட்டு வீழ்த்தும் துபாக்கியும் அஞ்சிலார்.
வெட்டு வாளையும் விஞ்சிய வீரரை
எட்டுத் திக்கும் இசைத்தன போற்றியே.

விடப் பொறுமைகொள் வெய்ய பகைவரோ
நடப்ப தற்கும் தடைகளை நாட்டினர் ;
சுடப்ப டினும் சுதந்தரச் சாவென்றே
திடப் பொறுமைகொள் தீரன் எதிர்த்தனன்.

கத்தி யின்றிக் கடுஞ்சொலு மின்றியே,
சுத்த வீரத் துணிவொ டநீதியை
எத்தி சையும் எதிர்த்திடச் சாந்தமாய்ச்
சத்தி யாக்கிர கந்தனைச் சாதித்தான்.

உண்மை யான உறுதிகொள் உள்ளமும்
திண்மை யான தியாகப் பொறுமையும்,
கண்மை யான கருணையுங் கொண்டவர்,
ஒண்மை யான உரிமை பெறுவரே.

கொலையினுங் கொடிதாம் அடிமைசெய் கொடுமை,
கோபமாம் கொள்ளியின் கொடுமை,
தலைவரிக் கொடுமை, தனிநிறச் செருக்காம்
சட்டதிட் டங்களின் கொடுமை,

விலைசெயுங் கொடுமை, வேற்றுமைக் கொடுமை
விநோதமாங் கொடுமைகள் பலவும்
அலைகடல் கடந்தும் உலகினுக் குரைத்தான்
ஆத்மசஞ் சீவியை அறிந்தான்.

தொடங்கிய பணியைத் தொடர்ந்திட மீண்டுந்
துணிந்துதன் மனைமக்க ளுடனே
திடந்தரு காந்தி திரைகடல் கடந்தே
திரும்பிய செய்தியைக் கேட்டே,
அடிமிதி கொல்லென் றன்னியப் பகைவர்
ஆத்திரக் கூச்சலிட் டணுகித்
தடதட வென்று கற்களை யெறிந்து,
தடியினைச் சுழற்றியும் புடைத்தார்.

அந்தகோ நன்மை யதனையே கருதும்
அஞ்சறும் அன்பருட் பெருமான்,
சிந்திய குருதி சிலுவையில் கிறிஸ்து
சிந்திய குருதியே போலும் ;
வந்தது வரட்டும் வாய்மையே வெல்லும்
வாழுவேன் அதற்கெனக் காந்தி
சிந்தனை செய்து தீயவர் செயலைச்
சினத்தலு மின்றியாங் கிருந்தான்.

அத்ததி யாங்கே அந்நகர் காப்பான்
அலெக்சாந் திரன்அரு மனைவி,
உத்தமன் காந்திக் குய்வினை யளித்தாள்
உருமறைத் தவனைக்கைக் குடையால்,
பத்திர மாகத் தன்மனை சேர்த்துப்
பதியிடம் பாதுகாப் பீந்தாள்.
வித்தகன் அவனும் வேடத்தை மாற்றி
விமலனை வீடுசேர்த் தானே.

வன்மனப் பகைவர் வாளினைச் சுழற்றி
வந்தனர் பேய்க்குர லெடுத்தே
அன்னவர் மீது வழக்கினைத் தொடர்வீர்
அக்கணம் எனஅலெக் சாந்தர் ;
"இன்னலுக் கின்னல் இயற்றிடக் கருதேன்,
என்னவர் அன்னவர்" என்றே
புன்னகை புரிந்தான் பொறுமையி னாலே
பூமியிற் பெரியனாய்ப் பொலிந்தான்.

வந்தது கொடிய பேயெனப் போயர்
வன்சமர் குண்டுகள் வீசி ;
அந்தவெம் போரில் அடிபட்டார்க் கெல்லாம்,
ஆபத்தில் அன்னைபோல் உதவி,
இந்தியச் சிங்கம் எனும் பட்டம் பெற்றான்,
இந்தியக் கருத்தெனும் இதழால்,
சொந்தநாட் டாரின் சுதந்தரத் திற்கே
சோர்வறத் தொண்டுகள் தொடர்ந்தான்.

தன்னுடல் பொருளும் ஆவியும் உலகின்
சத்தியப் பணிக்கெனத் தந்தோன்,
தன்மனை தனையும் சகோதரி யாகக்
கருதியே தன்புலன் அடக்கி,
உன்னத பிரம சரியமே பூண்டான்
உண்மை வாழ் வகையினை விளக்க
இன்னிய நூறு ஏகரா வாங்கி
எழுப்பினன் எழில்பெறு நிலையம்.

உத்தமர் டால்ஸ்டாய் ரஸ்கின் உரைகளைப் பருகி நின்று,
சத்திய தியாக வாழ்வைத் தன்மனச் சாட்சி யொப்ப
நித்தியம் பயின்ற காந்தி, நேயரும் பயில வேண்டிப்
புத்தொளி வீசு இன்ற போனிக்ஸா சிரமங் கண்டான்.

பழிசெயும் பேத புத்தி பாழ்பட ஒருமை யோங்கி,
இழிவுசெய் நிறச் செருக்கும் இடர்களும் ஒழிய வேண்டி,
மொழிகளாற் சொன்ன தெல்லாம் செயல்களான் முயன்றுகாட்டி
வழியினைத் துலக்கி, காந்தி வாழ்வகை வாழ்ந்தான் மாதோ.

எளிமையின் சிகர ஜோதி இடம்பத்தை வெறுத்தான், தேவை
யளவறிந்துழைத்தேயுண்டான்,ஆசையாய்க் குவிக்கும்பொன்னைக்
களவென நினைத்தான், கையாற் கதரினை நூற்று நெய்தான்,
உளத்தொடு நடந்தான் என்றும் உலகுக்கே வாழு கின்றான்.

சத்தியச் சோதனைக்கே வாழ்வினைத் தந்த காந்தி,
ஒத்துவாழ்ஒருமைகண்டோன்,ஒழுக்கமேஉயிராய்க்கொண்டோன்,
பத்தியும் பணியும் செய்யும் பண்புடன் பணிவு மிக்கான்,
தொத்துநோய் தீர்ப்பான்; குப்பைத்துடைப்பமும்பிடிப்பானம்மா!

பெட்டக மூளை கொண்ட பெரும்புலி போன்ற மாற்றார்,
வெட்டெனப் பேசி யின்னும் வேதனை செய்ய வெய்ய
சட்டங்கள் விதித்த தெல்லாம் தடையெல்லாந் தகர்க்க வேண்டி
கட்டங்கள் பொறுத்துச் சாந்தக் கனலுடன் எழுந்தான் மாதோ !

நடையுயர் மஹாத்மா காந்தி நல்லநெஞ் சுறுதி கொண்ட
படையுடன் சத்தியப்போர் பயமின்றித் தொடுத்துச் சர்க்கார்
தடைகளை மீறிச் சென்றான், சத்தியாக் கிரக வேகம்
சுடச்சுடத் தியாக தீரஞ் சுடர்விடக் கண்டா னம்மா !

கொதிபகை சுட்ட போதும் கொடுஞ்சிறை யிட்ட போதும்,
விதியையும் எதிர்த்து நின்ற வீரவள் ளியின்பேர் வாழ்க !
துதிமிகு தமிழர் வாழ்க ! துணிந்தநா கப்பன் வாழ்க
அதர்மத்தை எதிர்த்து வெல்லும் அறநெறி யுறவோர் வாழ்க !

ஆந்துரு கோகலே யனைய நல்லவர்
போந்தனர் நிலையினைப் புகுந்து பார்த்தனர் ;
காந்தியின் சக்தியைக் கண்டு போற்றினர்
நேர்ந்ததை விளம்பினர் நீதி யோங்கவே.

## வெற்றி

இடுப்பொடிந் திடவு ழைத்தும் ஈச்ச வளாரினாலே,
வடுப்பட வருந்தி நாட்டை வளஞ்செய்த கூலிமக்கள்,
படுதுயர் தனதென் றெண்ணிப் பாரெலாம் அதிச யிக்கக்
கொடுந்துயர்ச் சிறைபொறுத்த குணநிதி காந்தி வாழ்க ! 360

பொல்லது செய்தோ ருக்கும் புன்னகைப் பொறுமை யன்றிச்
சொல்லினுந் தீமை யற்ற சுடர்பெறுஞ் சாந்த தீரன்,
பல்லினை யுடைத்தா னுக்கும் பரிவினைக் காட்டுங் காந்தி
தொல்லுல குள்ள மட்டுந் துலங்குக நலங்க ளோங்க !

மதிமிகு காந்தி செய்த வாய்மைப்போர் தன்னை மெச்சி,
இதமுற ஸ்மட்சின் மூலம் இணங்கிவெண் ணாட்சி யாளர்,
சதிசெயுங் கொடிய சட்டத் தளைகளைத் தளர்த்தி, வெய்ய
விதிகளை மாற்றி யன்றே விடுதலை தந்ததா ரம்மா !

## இந்தியாவில்

தன்பணி முடிந்த பின்னர் இந்தியத் தாய் வருந்தும்
துன்பத்தைத் தீர்த்து நல்ல சுதந்தரம் அளிக்க வேண்டி,
அன்பினால் அறப்போர் செய்யும் ஆற்றலைக் கொண்டு வந்தான்;
இன்பமெய் யுரிமை வாழ இன்னலைப் பொறுத்த வீரன் !

பகைவரைப் பகைத்தி டாது பகையினைத் திருத்தும் வள்ளல்,
மிகையினைத் தகையால் வென்று, மேன்மையே செய்யுமேலோன்,
தொகை மிகு படையும் ஆத்ம சக்திமுன் தோற்றொ டுங்கும்
வகையினைக் கண்ட வீர மகாத்துமன் வாழி மாதோ !

## இந்திய நிலை

வங்கத்தால் உலகை வென்ற மகாகவி தாகூர் வாழ்த்தச்
சிங்கத்தைப் போன்ற நீரத் திலகமா முனிவர் வாழ்த்த,
தங்கத்தின் கினிபோற் பேசுங் கோகலே சபையில் வாழ்த்த,
மங்கறு புகழை யேந்தி, மகாத்துமன் விளங்கி னானே !

திலகர், லாஜ், பால், கோஷ் செய்த தீவிரக் கிளர்ச்சி யாலே,
தலைநிமிர்ந் தெழுந்த தேசம், தனைக்குறைந் துறங்கி, மீண்டும்
நிலைகுலைந் தினியென் செய்வோம் என்றுள நெக வருந்தி,
மலையொடு நிற்கக் கண்டு மகாத்மனும் வருந்தி னானே.

தொண்டுசெய் கடமை யொன்றே தொழிலெனக் கொண்ட காந்தி,
வண்டுபோல் நாட்டைச் சுற்றி வாய்மையும், பொறையெ திர்ப்புங்
கொண்டுநி யாகத் தாலே குறையறச் சுதந்த ரத்தைக்
கண்டுநாம் களிப்போம் என்று கலக்கத்தை நீக்கி னானே.

## சம்பரான், கைரா சேவை

சம்பரான் குடிகள் வெய்ய சட்டத்தால், வரியால், அந்தோ !
வெம்பினர் அவரைக் காக்கத் தாயென விரைந்து சென்றான் ;
வன்பிணி பஞ்சத் தாலே வருந்திய கைரா மக்கள்
தம்பிணி தீர்த்தான், இந்தத் தயைமிகு சாந்த வள்ளல்.

வறுமையைத் தீர்க்க ராட்டை வழங்கினன் ; மடமை போக
அறநெறிக் கல்வி யீந்தான் ; அருட்பணித் திறனை யூக்கிச்
சிறுமனச் சுயந லத்தைச் சிதறிடச் செய்தான் ; காந்தி
பொறுமையாற் பகையை வென்ற புண்ணிய வீர னானான்.

## சபர்மதி

சத்தியாக் கிரகத் தொண்டர் சாதனஞ் செய்ய வேண்டி,
நித்திய சாந்த மோங்குஞ் சபர்மதி நிலையங் கண்டே
உத்தமர் தம்மைக் கூட்டி ஒருகுல மாக்கி ஆத்ம
சக்தியை வளர்த்துத் தேசத் தாய்ப்பணி புரியச் செய்தான்.

சத்தியம் பேசிப் பிரம்ம சரியத்தைப் பேணி, அன்பே
மெத்தவும் வளர்த்தஹிம்ஸை விரதத்தைப் போற்றிச் சொந்தச்
சொத்துரி மையை விடுத்துப் பிறர்பொருள் சுரண்டி டாது,
நித்தியம் தொழில்பு ரிந்து நியமமாய் வாழச் செய்தான்.

அதர்மத்தை அஞ்சி டாமல், அறத்தினால், உண்மை தன்னால்,
எதிர்த்ததை வெல்ல வேண்டும் ; இடம்பத்தை நீக்க வேண்டும்;
கதிர் சுற்றி நூற்று நெய்யும் கதரையே கட்ட வேண்டும் ;
பொதுஜனத் தொண்டு செய்யும் புண்ணிய வாழ்வே வேண்டும்.

சாதிமா மதபே தங்கள் சங்கட மென்ன நீத்துச்
சோதிப ராத்ம நாதன் ஒருவனைத் தொழுதெல் லாரும்,
மேதினிக் குழைக்க வேண்டும் ; விடுதலைக் கிளர்ச்சி வேண்டும் ;
ஓதலின் ஒழுக்கம் வேண்டும் என்றனன் உண்மை யாளன்.

அவ்வழிப் பயின்ற தொண்டர், அன்புடன் தேச மெங்கும்
செவ்வழித் தொண்டு செய்து, செனங்களின் வாழ்த்தைப்பெற்றுர்;
ஒவ்வருந் தீர னுன உத்தம காந்தி, நாளும்
திவ்விய சேவை செய்து தேசத்தை நடத்தி னுனே....

அதிசய சக்தி மேவும் அனிபெசண் டம்மை செய்த
மதிமிகு சுயாட்சிப் போரில், மராட்டிய திலகன் செய்த
சுதந்தரப் போரில், காந்தி தொண்டுகள் செய்தான் ; அன்னுன்
இதந்தரும் ஆத்ம சக்தி எழுந்ததோர் நிகழ்ச்சி யாலே.

கெடுதலைக் குமைத்திடக் கிளர்ந்து சாந்தமாய்,
நடுநிலை யறத்தினை நாட்டி, மாந்தர்க்கு
விடுதலை யளித்திட விரதங் கொண்டவன்
படுகொலை யொன்றினைப் பதறக் கேட்டனன் !

விடுதலைக் கிளர்ச்சியின் விதையை மாய்க்கவும்,
அடிமையின் சங்கிலி அழுத்த மாகவும்,
இடியென ரவலட்டுச் சட்டம் எங்குமே
கொடியன செய்திடக் குதித்தெ ழுந்ததால்.

வரிகளைத் தாருங்கள் வாயை மூடுங்கள்.
தெருவினி லேந்துபேர் சேர்ந்து பேசவும்
உரிமையொன் றில்லையென் றுரைக்குந் தீவிதி
பெரியதோர் பேயெனப் பிறந்தெ ழுந்ததே.

கசையடி யடித்துயிர் கலங்கத் தீமைசெய்
வசைமிகுஞ் சட்டத்தை மறுத்துக் காந்தியும்,
இசைமிகு திலகரும் இந்தியா வெங்குந்
திசைதிசை கண்டனஞ் செய்து சுற்றினுர்.

சத்தியாக்கிரகம்

முழுச்சு தந்தர மூச்சை, முயற்சியை
அழுத்தி வாயை யடக்குமிச் சட்டத்தை
குழுக்கு ழுவாகக் கூடி யெதிர்த்திட
வழுத்தி னுன்ஒரு மங்கல நாளிலே.

கதர ணிந்துகை ராட்டை சுழற்றியே
மதுவி லக்கித்தீண் டாமையை மாற்றுமின் ;
மதம் வகுப்பு வளர்த்திடும் வாதமேன் ?
பொது நலத்தைப் புரிந்திடச் சேர்மினே.

அல்ல லின்றி, அமைதியாய்க் கூடியே
வல்ல வீரர் வழுத்து மறுப்பினைத்
தொல்லை யென்று சுதந்தர காந்தியை
*எல்லை மீறலென் றேயக மிட்டனர்.

புயலினை யடக்கினும் பொங்கும் ஆழியைக்
கயத்தினில் அடக்கினுங் கருத்தின் வேகங்கொள்
சுயசன சுதந்தரந் தூண்டுந் தாகத்தை
அயலவர் அடக்குதல் ஆசை வார்த்தையே.

கேடுறு சட்டத்தைக் கிளர்ந்தெ திர்க்கவே,
நாடுற எழுந்தது, நலிவை நீக்கிட,
வீடொறுஞ் சத்திய விரதம் பூண்டனர் ;
ஈடிலாத் தலைவர்கள் எழுந்து முன்வந்தே.

அச்சமொன் றறியா வீர அகாலியர், பாஞ்சா லத்தில்,
உச்சமாம் உணர்ச்சி கொண்டே ஒற்றுமை யாயெ ழுந்து,
நச்சுறு சட்டந் தன்னை நலித்திடச் சாந்த மாக
மெச்சுறு காந்தி வாக்கை விளம்பியூர் வலங்கள் வந்தார்.

நாடுகொண் டாடும் ராம நவமியில் அமைதி யாகப்
பாடி 'ஓம் ஹரிராம்' என்றே பக்தர்கள் எழுந்து மாலை,
கூடியே ஜலியன் வாலா தோட்டத்திற் கொள்கை பற்றி,
நீடிய பஜனை யன்று நிகழ்த்தினர் உருக நெஞ்சம்.

"இறைவனே, உலகிற் கெல்லாம் ஏகனே, எம்மைக் காவாய் ;
அறமுயர் நாட்டைக் காவாய் ; அடிமைநோய் தீராய் ; எங்கும்
நிறைபரம் பொருளே, உண்மை நீதியே எமைவ ருத்துங்
குறைதவிர் நிறைவே ! எம்முட் கோயில்கொள் அரசே போற்றி!"

தொண்டரிவ் வாறு கூடித் தோத்திரஞ் செய்யும் போதே ;
அண்டகோ ளங்க ளெல்லாம் அதிர்ந்தன, புகையில் மூடி
விண்டல மிரண்டு, வேக விமானங்கள் 'டாம் டாம்' என்றே
குண்டுகள் பொழிந்த ! கோரக் கொடுமையென் சொல்லுவோமே.

தந்திரச் சூழ்ச்சி யென்னே ! சட்டத்தின் கடுமை யென்னே !
அந்தகோ அந்தகோ இவ் வநீதிக்குச் சொல்லும் உண்டோ !
பந்தத்திற் பரித விக்கும் பட்டினி மக்கள் மீது,
சிந்திய கொடிய குண்டு செய்தவெங் கொலைக ளென்னே !

நீதியே எங்கொ ளிந்தாய் ! நீயுமிக் குண்டிற் கஞ்சிப்
போதியோ அடிமை நாட்டின் புகலிது தானே ! பஞ்சாப்
வீதிகள் சுடுகா டாக வீடெலாஞ் சிறைக ளாக,
மாதரின் கற்பு மஞ்ச வளர்ந்தது கொடுங்கோ லாட்சி !

* *பம்பாயை விட்டு வெளி வராமல் அடைத்தனர்*

சுடுசுடு வென்றே குண்டு சுடும்வரை சுட்டுத் தீர்த்தார் ;
சுடவினுங் குண்டிங் கில்லே என்றுளஞ் சுருங்கிச் சென்றார் ;
விடுதலே கேட்டார், தேக விடுதலே யாய்விண் சென்றார் ;
படுகொலேக் களத்தைக் காணப் பரிதவித் திரவி சென்றான்.

கைபட்டார், கால்பட் டாரும், கண்பட்டார், புண்பட் டாரும்
மெய்பட்டார் மிதிபட் டாரும், மேனிவிட் டேகி னாரும்,
நைபட்டார் நரம்பற் றாரும், நாளமுங் குடலுங் கக்கிக்
கொய்பட்டார் மானபங்கம் பட்டவர் கொஞ்ச மேயோ ?

பிறந்தநாட் டுரிமை கேட்டுப் பிழையொரு சிறிது மின்றி,
அறந்தனக் காவி யீந்தார் ஆறுநூற் றவரே யாக
உறங்கறு மிராணு வத்தால் உலேந்தழிந் தொடுங்கி னார்எண்
இறந்தவர் இன்ன லுற்றார் ; இரத்தக் கண்ணீரே எங்கும் ! !

குற்றத்தை மூட மூடக் கொலேப்பழி வீறிட் டோதிச்
சுற்றிலும் பரவி இந்த உலகையே சூழ்ந்த தம்மா !
குற்றமில் லாரை ஏனே குண்டெறிந் திந்தச் சர்க்கார்,
செற்றனர் என்று தூற்றிச் செகமெலாம் எழுந்ததம்மா !

சுட்டுயிர் துடித்த பேர்க்குத் தொண்டுசெய் அன்பர் தம்மைக்
"கிட்டவ ராதீர்" என்றார் ; கிளேகளேத் துரத்திச் செற்றார் ;
பட்டவர் தாகத் திற்குப் பச்சைத்தண் ணீருந் தாரார் ;
எட்டிநில் என்றார், காயம் கட்டுதற் கிசைந்த பேரை. 500

இல்லினிற் புகுந்தார் ; எங்கும் இராணுவச் சட்ட மிட்டார்.
தொல்லேகள் செய்தார் ; அந்தோ தோகையர் துகிலு ரித்தார் ;
செல்வரை யிழந்த கண்ணீர் வற்றுமுன், செய்ய பெற்றார்
எல்லேயில் இடர்க் கண்ணீரை இருபுறங் கொட்டி னாரே.

மற்குல மலேகள் சாய, மார்பினூல் ஊர்ந்து செல்ல
*வற்புறு மாந்தர் நோக, மானமும் பதைப தைக்கச்
சொற்கருந் துயரக் கண்ணீர் சொரிந்தொரு புகலு மின்றி,
இற்குலப் பெண்கள் வாடச் செய்தனர் ஈர மில்லார்.

திரிபுரர், காலர், நீலர், கீசகர் திரும்பி வந்தே,
எரியெழக் கொலேசெய் தாங்கே இருந்தனர் என்று மேலோர்,
பரிவுடன் பதறி நொந்து, பாரெலாம் அறியச் சொல்லி,
உரியநன் னீதி செய்ய உத்தர வாதங் கேட்டார்.

அசைவன அசையா வெல்லாம் அநீதியோ அநீதி யென்னத்
திசைதிசை வான்பி ளக்கத் தீக்கொலேக் கொடுமை பேசி,
வசையுறும் அடிமை வாழ்வை நரகென வாய்விட் டோதித்
தசைதுடித் தெழுந்த தீய தணலெரி தாக்கு மாபோல்.

* *வற்புறுத்தப்பட்ட*

நாட்டடி யார்கள், காந்தி நற்றவத் தலைமை யேந்திக்
கேட்டினுக் கெல்லை தேடக் கிளம்பினர் ஒருங்கு சேர்ந்தே ;
கூட்டங்கள் போட்டார் ; தங்கள் குறைகளை விறிட்டோதி,
நாட்டங்கள் சிவக்க நல்லோர் நாணமும் விறுங் கொண்டார்.

நாடெலாம் பதற வந்து நரர்களைத் துரத்திக் கொன்ற
வேடரை, டயரை, மன்றில் விசாரித்த போது, சற்றும்
வாடுத லின்றிக் "கையிற் குண்டுள வரையிற் சுட்டேன்
நீடுறச் சுட்டேன் சுட்டேன்" என்றனர் நீதி யில்லார்...

நல்லதென் றியம்பிச் சர்க்கார் நரவுடல் வேட ருக்குப்
பல்வகைப் பரிசும் வைர வாளுடன் பணமுந் தந்து,
கொல்கொலைக் குற்ற மெல்லாம் குணமென மறைத்தத் தீதைச்
சொல்லலுங் குற்ற மென்றே சுடுவிதி விதித்தா ரம்மா !

## சத்தியப் போர்

மாணுறு நாட்டைப் பற்றி மக்களை யடிமை செய்து,
வாணிகச் சந்தை யாக்கி, வளமெலாம் உறிஞ்சிக் கொண்டு
நாணறு சட்டத் தாலே நலித்திடத் துணிந்தார் ஆட்சி
பேணிலோம் என்று தேச பக்தர்கள் பேசி னரே....

சட்டத்தால் அடக்கி வைத்த சாகசச் சருக்கார் ஈந்த
பட்டத்தை எடுத்தெ றிந்து, பாழ்செயும் அடிமை வாழ்வை
நட்டமெத் தனைவந் தாலு நலிப்பதே கடமை யென்று
திட்டமிட் டெழுந்து காந்தி செல்வழி சென்றார் மேலோர்.

நடுநிலை யாளன் காந்தி நல்லதே நினைக்குங் காந்தி,
கடுமொழி சொல்லாக் காந்தி, கங்கணங் கட்டிக் கொண்டே
கெடுதலையொழிப்போம்உண்மைக்கிளர்ச்சியால்மனிதர்க்கெல்லாம்
விடுதலை யளிப்போம் என்றே வீறுடன் முன்வந் தானே.

பாரத சபையை அந்தப் படுகொலைக் களத்தே கூட்டி,
ஆருயிர்க் கநீதி செய்யும் அதர்மத்தைக் கண்டித் தாங்கே,
வீரத்தூண் ஒன்று நாட்டி, விடுதலைக் குறுதி பூண்ட
தீரரைச் சேனை சேர்த்துத் தேசத்தொண் டாற்றி னானே.

## காந்தி

சுதேசம் விடுபடத் துடித்திடும் அன்பீர்
ஒத்துழை யாமைத் தத்துவங் கேண்மின் !
பகைசின மின்றிப் பகைவரைத் திருத்தும்
திண்மன வுறுதியும், தியாகமும் துணிவும்,
உண்மை யகிம்சையும் ஒற்றுமைத் திறனும்
இருந்தால், விடுதலை எய்திட லாமே !

அருந்துணை செய்வீர் அமைதியாய்க் கேளீர் !
எண்ணெய் பிரிந்தால் எரிவிளக் கென்னும் ?
தண்ணீ ரின்றித் தாவர மென்னும் ?
மன்னுயிர் பணிய மன்னன் மன்னும் ;
மன்னுயிர் பிணங்கின் மன்னவ னுண்டோ !
நம்மவர் துணையே நாயகர் ஆட்சி ;
நம்மவர் துணைதரச் சம்மத மின்றேல்
அன்னியர் செய்யும் ஆட்சியு மாமோ ?
உலகைப் பகைத்தவன் ஓங்குவ தில்லை.
தன்னுத வியுடன் சாந்த எதிர்ப்பும்
இன்னலைப் பொறுக்கும் இதய சக்தியும்,
அழியா தென்றும் ஆத்ம சக்தியைப்
பொழியும் கடவுள்பாற் பொருந்திய நேயமும்,
கடமையிற் கண்ணுங் கருத்தும் இருந்தால்,
விடுதலை யெய்தும் ; விளங்குற லாமே.
இந்திய நாட்டைச் சொந்தங் காட்டிச்
சந்தை யாக்கும் விந்தை வணிகர்—
இறக்கும் விதேசச் சரக்குகள் வேண்டோம் ;
கறக்கும் பசுவினும் கற்பகத் தருவினும்,
கைராட் டினமே கவலைதீர் மருந் தாம்.
பொன்னினும் சுதேசப் பொருளையே மதிமின்.
பஞ்சை மக்களின் பசியைத் தீர்க்கும்.
வஞ்ச மின்றி வாழ்வகை யாமே.
தேவை யளவே செலவிட் டெஞ்சிய
யாவையுந் தேச சேவைக் கீவீர்.
குடியைக் கெடுக்கும் குடியை ஒழிப்பீர் ;
மறியல் செய்து மதுக்கடை யொழிப்பீர்.
இந்து முஸல்மான் இரானியர் கிறிஸ்துவர்
எந்த வகுப்பின ரேனும் ஓர்குலம்—
பாரதத் தாயின் சீரிய மக்களே,
என்றே கருதி ஒன்றுபட் டோங்குமின்.
ஹரிஜனர் உம்முடன் சரிசம னாக
வாழும் உரிமை வழங்குமின் உடனே
சமரஸம் பேணி அமைதியாய்க் கூடி,
தேசப் பணிக்கே தியாகம் செய்மினோ !
சுதேசத் தொழில்கள், சுதேசக் கல்வி,
சுதேசப் பொருள்கள் சுதேசக் கலைகள்
சுதேச பாஷை, சுதேச உணர்ச்சி
சுதேச உணவுடை சுகமுறப் போற்றுமின்.

அதிகார வர்க்கம் அடிக்கினும் சிறையில்
அடைத்து வருத்தினும் அல்லலை யெல்லாம்
தவமெனத் தாங்கித் தளரா திருமினே !
அணுவெடி தாக்கினும் அழியா தான்மா
சத்தியம் ஆத்தும சக்தி அஹிம்ஸை
இவையே நலமாம் ! இன்றே பயில்வீர்.....
வந்தே மாதரம் வந்தே மாதரம் !
என்று மகாத்மன் இயம்பிடக் கேட்டார்
ஒன்று சேர்ந்தார் ; உடன்முன் சென்றார்.....
தமிழகந் தனிலிச் சத்தியாக் கிரகம்
உருவாய், நாடெலாம் உலாவிய தறிவாம்.
செல்வத் தியாகி சித்த ரஞ்சனர்,
மோதிலால், ஜவஹர், முதியலா லாஜி,
இராஜன் பாபு இராஜா ஜீயுடன்,
முகம்ம தாலி சௌகத் தாலி,
அன்சா ரியுடன் அபுல்கலாம் அஸாது,
பட்டாபி யுடன்கோ பாலகிருஷ்ணர்,
ஐயர் பிரகாசம் அருமை வீரர்கள்
சட்ட மறுப்பும் சத்தியாக் கிரகமும்
செய்தனர் பன்முறை சிறையுங் காத்தனர் ;
அடக்க அடக்க அடங்கா தெழுந்தே
விடுதலை இயக்கம் வீறிட் டதுவே !
இயந்திரத் துணிகளை எரித்தனர் எங்கும் ;
இராட்டையின் பிரணவப் பாட்டொலி செய்தார்.
கைத்தறி நெய்த கதரே யணிந்தார்.
கட்டுப் பாட்டாற் கட்குடி நீத்தார்,
பட்டம் விட்டார் பதவிகள் விட்டார்.
அதிகா ரத்தை ஆட்டும் சக்கரம்
திகைத்து நிற்கத் தேசத் தொண்டர்,
காந்திக் கொள்கை சாந்தமாய்ப் பரப்பி
உலகெலாம் போற்ற நலம்புரிந் தாரே.

ஆலைகள் நின்ற ; மல்கும் அன்னியப் பொருள்கள் நின்ற ;
வேலைகள் நின்ற ; பள்ளி வித்தைகள் நின்ற, நீதிச்
சாலைகள் நின்ற, சட்ட சபைகளு நின்ற ; மாற்றார்
காலமும் நின்ற தென்றே கணித்தனர் கணக்க றிந்தார்.
வாயினைப் பூட்டுஞ் சட்டம் வாய்களைத் தடுக்க வில்லை ;
பாய்புலிச் சினமும் இந்தச் சாந்தன்முன் பலிக்க வில்லை ;
தூயவன் முன்னே குண்டு துப்பாக்கியும் வெட்கக் கண்டார்
தாயெனும் அன்பின் முன்னே தயங்கினர் சேனை கொண்டோர்.

“இளம்இந்தி யா”வென் கின்ற இதழொன்றி னாலே காந்தி
தெளிந்திடத் தனது கொள்கை தேசத்தை ஊக்கி நின்றான் ;
அளந்தவன் எழுதிச் சொல்லும் அமுதுரை புதிய வாழ்வை
உளந்தொறும் பொழிந்து நாட்டை, உலகினைத் திருத்திற்றம்மா!

காந்தியின் வாழ்வே வாழ்வு, காந்தியின் எழுத்தே வேதம்,
காந்தியின் உரையே யிந்தக் காசினிக் கினிய நன்மை ;
காந்தியின் செயலே மாந்தர் கதிபெறும் சேவை யென்று
தேர்ந்தநல் லறிஞரெல்லாம் திசை திசைபுகழ்ந்து சொன்னார்.

## சிறைவாசம்

உலகெலாம் புகழ்ந்தும் என்னே ; உறங்கிய நாடு செய்யுங்
கலகமிக் காந்தி செய்யுங் கலகமென் றதிகா ரத்தார்,
பலபல குற்றஞ் சாட்டிப் பட்டெனக் கைது செய்து,
விலகறுஞ் சட்டத் தின்முன் விசாரணை செய்து சொன்னார் :

## நீதிபதி

உன்னைப்போற் பெரியோன் இந்த உலகினில் இல்லை, இல்லை ;
என்னைப்போல் ஏழை யில்லை ; என்னினும் அரசச் சட்டம்
தன்னையே பற்றி என்னைத் தாங்கிடுங் கடமை செய்வேன் ;
அன்னையின் அன்பு மிக்காய், அமைதியாய்ச் சிறைசெல் வாயே !

முன்னருன் போலெழுந்த திலகரை முனிந்த சட்டம்
உன்னையும் ஆறுண்டிற்குக் காவலில் உய்ப்ப தாமே ;
என்னினும் இடையில் உன்றன் இருஞ்சிறைத் தளைவிட் டுற்றால்
என்னினும் மகிழ்வார் யாரே, இமாலயம் போன்றாய் நீயே !

திருமுகங் காண, உன்றன் செவ்விய வாழ்வைக் காண,
அருட்பெரும் வாக்கைக் காண, அகந்தையில் எளிமை காண,
உருகுதென் உள்ளம் என்னின் உத்தியோ கத்திற் கான
பெருங்கடன் புரிதல் வேண்டும்; பெருமையாய்ச் சிறைசெல்வாயே!

## காந்தி

தன்னிக ரற்ற சாந்தத் தவநிதி அருளி னோக்கிப்
புன்னகை பொங்கி மிக்கப் பொலிமுக மகிழ்வு காட்டி,
உன்னத மனித னென்றே உலகெலாம் புகழுங் காந்தி
சன்னத வாக்கி னாலே சரியெனச் சாற்றி னானே :

வந்தனம் அரிய நீதி மானுன தின்சொலுக்கு,
வந்தனம் ; உனதி டத்திற் குரியநல் வாய்மை சொன்னாய் ;
உந்தமைப் போன்றோர் எம்மை உடன்சிறை யிடலே நீதி ;
எந்தமைப் போன்றோர் தீதை யெதிர்ப்பதே நீதி யாமே.

இத்தினம் எனது தேசம் இந்தமண் ணுலகின் மீதே
எத்தகை மனித ருக்கும் இயல்புறும் உரிமை நாட்ட,
ஒத்துழை யாமை யென்னும் ஒருவழி கொண்ட தந்தச்
சத்திய வெற்றிக்கே நான் சாகவுந் துணிகின் றேனே !

என்மனச் சாட்சி சொல்லும் உண்மையை யியற்றி நின்றேன் ;
உன்மனச் சாட்சிக் கேற்ற உரைகளை நீயுஞ் சொன்னாய் ;
வன்மன அந்தி தன்னை வாய்மையால் எதிர்ப்போ னுக்கு
மென்மையே ஆறுண்டென்றுவிளம்பினன்பொறையின்வேந்தே.

எமதுநா டிந்தி யாவே இதன்சுதந் தரமெம் மூச்சே ;
தமதுநாட் டன்பு மூச்சைத் தடுப்பவர் உலகில் யாரே ?
உமதுநா டெம்மைப் போலே அன்னியர்க் குரிமை யானால்,
அமைதியாய் இருக்க மாட்டீர் என்பதை அறிகு வீரே !

கத்திதுப் பாக்கி யாலே கலகஞ்செய் யிரத்த வீரர்
எத்திசை தனிலும், உங்கள் இங்கிலாந் தினிலும் வெய்ய
யுத்தங்கள் செய்தே தேசம் உய்ந்திட முயன்றார் ; இங்கே
சத்தியங் கொண்டே நாங்கள் சாந்தமாய்க் கடமை காப்போம்.

சுடுதிற லற்றோம், ஐய துபாக்கியைப் பிடித்து நாங்கள்
படுகொலை செய்து வாழும் பாபமும் பழியும் வேண்டோம் ;
கெடுதலை அஹிம்ஸை யாலே கெடுத்திடர் பொறுத்தே, நாங்கள்
விடுதலை நாட்டும்உண்மைவிரதங் கொண்டெழுந்தோம்ஐயா. 680

படைகளும் இல்லோம், கொல்லும் படைக்கல மில்லோம்; நாட்டை
உடையவர் நாங்கள் ; ஆள உற்றவர் நீங்கள் ; இந்தப்
புடவியில் மிக்க வெய்ய போர்ப்படை யுடையீர் ; ஐயா—
இடர்பொறுத் துரிமை காப்ப தின்றியோர் வழியுங் காணோம்.

சாவதே இயற்கை யான சடலத்திற் கஞ்சோம் ; எம்மை
ஆவலாய்ப் பிடித்த டக்கும் அடக்கிடு முறைக்கும் அஞ்சோம் ;
ஏவலாய் அடிமை செய்யோம்; இனியநல் லுரிமை கொள்வோம்.
காவலாய், அறிதி நெஞ்சக் கடவுளின் சொல்லி தாமே...

அனைவர்க்கும் அப்ப னாகும் ஆண்டவன் ஒருவன் பெற்ற
தனயர்கள் உலகோர் எல்லாம், சாதிவேற் றுமைக ளின்றி
இனிதொரு குலமாய் வாழும் இன்பநாள் வருவதற்கே
அனவர தமும் யான் வேண்டி அருந்தவம் புரிகின்றேனே...

''போதுமிவ்வுரை என்மனச் சான்றினைப் புகன்றேன்.
வாதனைபல வருத்தினும் வாய்மையைத் தவறேன்—
ஆதலால் எனைச்சிறையினுக் கனுப்பியுன் அரச
நீதி செய்குவாய்'' என்றனன் நிகரிலாப் பெரியோன்.

வாயி லான்சொல மனமிலான், வழுவிலான் இவனே ;
நேய னென்றுளே நினைத்தந்த நீதிபன் இரங்கித்
தாயி னுந்தயை மிகுந்தவச் சத்திய நிதியைப்
“போயமர்” எனச் சிறையினுட் பூட்டினுன் உடனே.

கதர ணிந்துநற் கடமையைக் காமினென் றேதி
இதமுடன் எர வாடியிற் சிறைகொண்ட எம்மான்,
பதமுடன் வெளியேபணி செய்ததைப் பார்க்கின்
சுதந்த ரச்சுடர் சுருண்டெழத் தூண்டினுன் காணீர்.

ஆக்க வேலைகள்

சாந்த மூர்த்தியெம் சத்திய மூர்த்தி மஹாத்மா
காந்தியோ சிறைக் கதவின்பின் கடுந்தவம் புரிவான் ;
மாந்தர் யாவரும் அவன்சொலை மனவுறு தியுடன்
ஏந்தி நற்பணி செய்குவோம் என்றனர் வீரர்.

சிற்று ருவினிற் செகத்தினும் பெரியவ னுக
உற்ற காந்தியின் உடலையே சிறையிடும் சட்டம்.
மற்றவன் உளம், ஆத்தும சக்தி எம் மனதில்
உற்ற ருட்பணி தூண்டிடும் ; உழைப்பமென் றுரைத்தார்.

நல்ல வன்;பெரி யானிவன் அமைதியை நாட்ட
வல்ல வன்;சிறை காத்திட வாய்த்தவன் என்றும்
அல்லவன் ; அவனைத் தெறல் அநீதியென் றுலகம்,
சொல்லச் சொல்லத்தம் செய்கையிற் சுறுசுறுப் பானுர்.

உடுத்துக் காந்தியின் கதரினை உண்மையைக் காத்துப்
படித்துக் காந்தியின் வாழ்க்கையைப் பணிகளைப் புரிந்தே,
விடுத்து வேற்றுமை நாடெலாம் வியனுறச் சேர்ந்தே,
முடித்த தன்னவன் முற்றறி மொழிகளைப் புரிந்தே.

நூற்று நாளெலா நுவல்கடன் அன்பர்கள் செய்தே,
வேற்று மையறக் காந்தியின் விடுதலை வேண்டி
நோற்று நின்றனர் ; நூதனத் தலைவனை அந்தோ !
கூற்றெ னுங்குடற் பிணிவந்து குடைந்ததைக் கேட்டார்.

“கடவு ளேயெங்கள் காந்தியைக் கா”வென நாட்டார்
திடம னத்துறும் அன்பினுற் றெய்வத்தைத் தொழுதார் ;
குடலி நோயினை வைத்தியர் குணஞ்செய்த வுடனே,
விடுத லைதரக் காந்தியும் வெளிவந்து நின்றுன்...

இருள்கி ழித்தெழு மின்னெனத் திருநகை யிலக,
அருள் செழித்தெழும் அற்புத வாழ்வினை யுடையான்,
உருவி னுக்குறும் பிணிதுயர் ஒன்றையுங் கருதான்
மருவு நாட்டினில் மறுபடி பலபணி தொடர்ந்தான்.

### பல் பணிகள்

கதர்மல்கக் கைராட்டை சுழலச் செய்தான்
 கல்வியுடன் கைத்தொழில்கள் வளரச் செய்தான்.
மதுவிலக்கி ஏழைகளின் வாழ்த்தைப் பெற்ருன்
 மக்களிடை ஒற்றுமையை மதிக்கச் செய்தான்.
பொதுவுரிமை யுணர்ச்சியினைப் பொலியத் தூண்டிப்
 பொல்லாத தீண்டாமை போகச் செய்தான்.
அதஞ்செய் மடமை வறுமை அடிமை நோய்கள்
 அழியச்சிற் றூர்தோறும் அறிவைப் பெய்தான்.

சட்டசபை மோகத்தார் சர்க்கார் சிங்கக்
 குகையினிலே சமர்த்தெல்லாங் காட்டச் செய்தான் ;
பட்டமிலாப் பதவியுடன் காங்ரஸ் வீரர்,
 பாராள வுஞ்செய்து பார்த்தான் காந்தி ;
இட்டமுடன் உப்புவரி யெதிர்த்து வென்ருன் ;
 இங்கிலாந்து சென்றுரிமை இனிது கேட்டான் ;
வட்டமகா நாட்டினிலே வாய்மை சொன்ஞன்
 மஹாத்மாகாந் தியின்பெருமை வழுத்தப் போமோ ?

இருபதுநாள் பலதரம்பட் டினி யிருந்தே,
 இந்துமுஸ்லீம் ஒற்றுமையை யியற்றி நின்ருன் ;
ஹரிஜனரின் உரிமையினை அமையக் காத்தான் ;
 அநியாயச் சட்டங்கள் அழியச் செய்தான் ;

கருஞ்சிறையும் கடுஞ்சரமுங் கருதா திந்தக்
 காந்திமுதியோன் செய்த காரியங்கள்
வருஞ்சமுதா யத்திற்கு வழியைக் காட்டும் ;
 வாழ்கமகா காந்திஎன்றும் வாழ்க மாதோ !

### உலகப் போர்

இன்னும் கேளீர் இம்முது வாலிபன்
இரண்டாம் புவிப்போர் இராக்ஷஸ வெறியுடன்
எழுந்ததும் அதனை எதிர்த்துநல் லமைதி
உலக மெல்லாம் நிலவ வேண்டி
அறிக்கை யிட்டான்; அரக்க இட்லரும்
உயிர்கொலைப் பழியை உணர்ந்து திருந்தவே....
மகான்சொல் கேளார் மண்வெறி யாளரே !
ஜர்மன் இதாலி ஜபானியர் கூடி
ஐரோப் பாவையும் ஆசி யாவையும்
ஆப்பரிக் காவையும் அமர்க்கள மாக்கி,

விதவித மான விமானக் குண்டால்
ஊர் ஊராக வேருடன் அழித்தார்.
எட்டுத் திசையும் இட்லருக் கஞ்சி
உலகெலாம் இரத்த ஊழியைக் கண்டு
கலங்கித் தவித்துக் கண்ணீர் வடித்ததே.
தனியாய் ஆங்கிலர் சண்டைப் பேயைக்
குண்டுக்குக் குண்டு கொடுத்துப் பொருதினும்,
கோடிக் கோடியாய்க் கொடும்பலி கொடுத்தும்,
பைபை யாகப் பணஞ்செல விட்டும்,
மலைமலை யாக மற்பிணங் குவித்தும்,
இட்லரின் வேகம் இறங்கவே யில்லை.
முத்துத் துறையில் முதற்குண் டடித்த
ஜபானிய மறவர் சைகோன் மலாயா,
ஜாவா பர்மா சகலமும் பற்றி,
கோகினு டாவிலும் குண்டுகள் போட்டுக்
கீழ்வங் காளம் கிடுகிடுத் திடவே
மணிபுரி கடந்து வந்துகொண் டிருந்தார்....
இம்பால் முனையில் இந்திய விதியும்
துடித்து நெஞ்சம் வெடித்துநின் றதுவே.
இந்திய வீரன், இணையிலாத் தலைவன்,
நாட்டன் பொன்றே நாடித் துடிப்பாய்க்
கொண்ட சுபாஷ்போஸ் கொள்கையை முடிக்க,
கல்கத் தாவின் காவலைத் தாண்டி,
பக்கிரி போலப் பதுங்கிச் சென்று,
கைபர் காபூல் காண்டஹார் தாண்டி,
தைரியத் தாலே தடைகளைக் கடந்தே,
துயர்பல வருந்தித் தூதர் துணையால்,
பெர்லின் சேர்ந்து பெரும்புகழ் பெற்றே,
இட்லரின் உறவால் இந்திய முதல்வனாய்,
நீர்மூழ் கியிலே நீள்கடல் கடந்து,
தோகியோ சேர்ந்து சுதந்தர இந்தியா
நாட்டிடச் சேனை கூட்டிட முனைந்தான்,
வீரப் புலிரஸ விஹாரி வேண்டவே,
சிங்கப் பூரில் சிங்கப் படைகளைக்
கூட்டி வகுத்து, நாட்டு விடுதலை
உடனே பெறவே கடமை தொடர்ந்து,
ஜேஹிந் தெனவே ஜெயகோ ஷமுடன்
தில்லி சலோ வெனும் சிங்கநா தமுடன்
செங்கோட் டையிலே தேசக் கொடியை
ஏற்றப் பாய்ந்தான் ஏறுபோல் சுபாஷே !

## இந்திய சுதந்தரம்

இத்தகை நிலையில் இந்தியா இன்றே
சுதந்தரம் பெறுகெனத் துணிந்துநம் காந்தி,
பம்பாய் தன்னில் பணிகளை வகுத்தான்.
ஜவஹர் சரோஜினி சத்திய மூர்த்தி,
அருணா சுசேதா கிருபாளனி தேசாய்
கஸ்தூரி முதலிய கண்ணியத் தலைவர்
இறுதிப் போரை உறுதியாய்த் தொடங்கவே
அத்தனை பேரையும் அதிகார வர்க்கம்
கொத்துடன் சிறையிற் வைத்தது காணீர் !
அகாகான் மாளிகை அருஞ்சிறை யாகி
காந்தி மகாத்மன் காவலில் இருந்தான்.
விடுதலைக் காக வீறிடு நாட்டில்
எரிமலை போலே எழுந்தது புரட்சியே.
ஆயுத மின்றியே ஆத்திரக் கொதிப்பால்,
தந்தியும் ரயிலும் தம்பித் திடவே,
சர்க்கார் நிலையம் தரையிற் சாயவே,
புரட்சி வீரர் புரிந்தனர் போரே.
கரந்து பலபேர் கலகந் தூண்டினர்...
மறைந்து பலபேர் வன்பணி புரிந்தார்.
மறைந்த வானொலி வழியைக் குறிக்க
மறைந்த படைக்கலம் வந்துகை வலுக்க
மறைந்த போர்கள் மல்கியிந் நாட்டில்
அரசாங்க வேரும் ஆடிய தென்னே !

* * *

அமெரிக் காவின் அருந்துணை யாலும்,
ஸ்டாலின் ரூஸ்வெல்ட் சர்ச்சில், ஷியாங்கே,
ஆகிய தலைவரின் ஆற்றலி னாலும்
இட்லர் முஸோலினி இறந்துபட் டாங்கே,
வெண்ணாட் டமர்க்களம் வெற்றி கண்டபின்,
யுரேனிய குண்டால் இரோஷிமா அழியவே
அணுவெடிக் கஞ்சிப் பணிந்தது ஜப்பான்....
இரண்டாம் போரை இப்படி வென்றபின்
ஆசியா முழுதும் தேசிய உணர்ச்சி
பொங்கித் ததும்பிப் பூரண சுதந்தர
கர்ஜனை செய்யக் கண்டு கலங்கியே
இனிநம தாட்சி யியலா தென்றே,
இங்கிலாந் திறங்கி இந்தியா விற்கு

விடுதலை தந்ததை வியப்பென லாமோ ?
காந்தி மகானின் சாந்த சக்தியால்,
தியாகிகள் காட்டிய தீரச் செயல்களால்,
பொதுஜனத் துடிப்பின் புயல்வே கத்தினால்,
பாரத சக்தியின் பரிதிக் கனலால்
உலகுயிர் எங்கும் நலம்பெறக் கருதியே
தனித்தவம் புரியும் தணல்பெறு யோகிகள்
பரமாத்ம சக்தியைப் பரப்பிய பயனால்,
மஹாத்மா காந்தியின் வாய்மைக் கிளர்ச்சி
வென்றது நாடு விடுதலை பெறவே !....
விடுதலை பெற்ற வியன்பெறு நாடு
இந்து முஸ்லிம் எனப்போ ராடி,
இரண்டு துண்டாய் இரத்த வெறியுடன்,
வாளுந் தீயும் கோளும் வசையும்,
குண்டர் ஊழிக் கூத்துமாய் வருந்தும்
அந்த நாளில், அமைதிக் காகவும்
ஒற்றுமைக் காகவும் உள்ளம் மாறி
பிரிவினை நீங்கிப் பெரியநன் னாடு
சேர்ந்துல கிற்குச் சீரிய தொண்டுகள்
செய்துமா னிடரின் உய்திக் கான
தெய்வச் சுடரைத் திசையெலாம் பரப்பவும்,
ஆயிரம் ஆயிரம் அன்பரைக் கூட்டி
பஜனை பிரார்த்தனை பண்புறச் செய்தே
சுத்தசக் திக்குத் துலக்கினான் வழியே....
ஜவஹர் நேருவும் சக்கர வர்த்தியும்,
படேல்ரா ஜேந்த்ரரும் பண்புளார் பலரும்
அசோக சக்கரம் அமைந்தமூ வர்ணக்
கொடியைப் பிடித்துக் குடியர சாளவே,
சமவுரி மைச்சுடர் அமைதியாய்ப் பொலியவே
கண்டு களித்துக் கடவுளின் அருளையே
தாரக மாகத் தவமுடன் கருதி
உலகிற் கேதன் உயிர்வாழ் வுதவி
உலகுள மட்டும் இலகினான் போற்றி....
எல்லா நாடும் இசைத்திட நன்றே....
வாழிய மஹாத்மா ! வாழ்கசத் தியமே !

தந்தை தாய் காட்டிடாத தனிப்பெருங் கருணை தாங்கி
வந்தனை, தியாகத் தீயில் வருந்தினை, அஹிம்சையாலே
இந்திய நாட்டினுக்குச் சுதந்தரம் ஈந்த காந்தி
எந்தமைப் பிரிந்த செய்தி எப்படி நம்புவோமே......

நடுநிலை கொண்ட காந்தி நல்லதே சொல்லும் காந்தி
கடுமொழி யில்லா தென்றும் கனிமுகக் கருணை காட்டி
விடுதலை தந்த காந்தி, விரதத்தால் மெலிந்த காந்தி,
படுகொலை செய்யப் பட்டார் பதைக்குதே நெஞ்சம் ஐயோ!

துடிக்குதெம் ஆவி அந்தோ துயர்மனம் இரத்தக் கண்ணீர்
வடிக்குதெம் உளம்வெதும்பி வாடுதுன் பிரிவை எண்ணி...
இடிக்கும்வெம் புயலி னுக்கும் இடர்ப்படா தெம்வி லங்கை
ஒடிக்குநல் லன்பு வீர உனக்குமோர் சாவும் உண்டோ ?

இடமகல் உலகம் எல்லாம் இனிதுறச் சேர்ந்து வாழ,
மடவிருள் அகலத் தீய வறுமை நோய் தீர வேண்டி......
சுடச்சுட நோற்று நாட்டிற் சுதந்தரக் கொடியை நட்டாய்!
சுடச்சுட உயிரை நீத்தாய் சோகநா டகமிவ் வாழ்வே...!

முனிவ னிவ்வகை காந்தியின் சரிதையை முடிக்கக்
கனிவுடன் அதைக் கருத்துற மாந்திய தொண்டர்
அனைய வாழ்க்கையும் அருட்பணி விரதமுங் காக்க,
மனது கொண்டனர்; சுத்தனும் வாழ்த்துரை மலர்ந்தான்....

சுத்தன்

மெல்லிய உடலுக் குள்ளே மேதினி முழுதுங் கொண்டோன்
சொல்லிய சொல்லின் வாய்மை துலங்கிடத் தொண்டுசெய்வோன்;
வல்லியற் படையும் வெட்கி வணங்கிடும் அஹிம்ஸை வீரன். 900
எல்லையிற் கருணை யாழி ; எளியர்கோன் வாழ்க மாதோ !

விதவித வேடங்கொண்டு, வெம்மைசெய் அடிமை நோயும்,
அதஞ்செயும் வறுமை நோயும், அடங்கொண்ட மடமை நோயும்
கதங்கொண்ட பொறுமை நோயும் கதிர்கொண்ட பனிபோலேகிச்
சுதந்தரம் பொலிய நாடு சுடச்சுட நோற்றான் காந்தி.

மன்னுயி ரெல்லாம் வாழ மறவலிக் கொடுமை வீழத்
தன்னுயிர் கொடுத்தான் ; புத்த தருமமே உருவெ டுத்தான்.
கன்னத்தில் அடித்த வர்க்குங் கருணைசெய் கிறிஸ்து போன்றான்;
மன்னுல கெல்லாம் போற்ற வாழிய மகாத்மா காந்தி...

அந்தம கானைப் போன்றே அருட்பணி செய்ய, நல்லீர்
முந்துமின் என்னச் சுத்தன், "மொழிந்ததைப்புரிவோம்" என்று
வந்தனஞ் செய்து தொண்டர் வாய்ந்தநற் கடமை தாங்கிச்
சிந்தனை யுறுதி யாகிச் சென்றனர் தம்மை வென்றோர். 913

# 11. திருத் தொண்டர் படலம்

பொன்ன முதப் பொலிநகை வீசிப்
　　பூத்த தின்பப் புதுயுகக் காலை ;
மன்னுலகை மணந்தது வானம் ;
　　மானிடந் தெய்வ மாறுத லெய்தி,
இன்ன லின்றிப் பிரிவினை யின்றி,
　　இனமொன் றாக மனமொன்றி வாழத்
தன்னுறுதி தழைத் தற மோங்கச்
　　சக்தி தொண்டர் தவப்பணி செய்தார்.

தூய்ய சுத்தன் சுதந்தரச் சொல்லைச்
　　சொன்ன வாறு துணிந்து புரிந்தே,
மெய்யறிவும் விழுமிய வாழ்வும்,
　　மேன்மை யான நினைப்புந் தொழிலும்,
பொய்யி லாத புனிதமெய் வாக்கும்,
　　பொருந்தி ஞாலந் திருந்திடத் தொண்டர்,
தெய்வ சக்தி திருவரு ளாலே
　　செய்த சேவை சிறப்புற வாழ்க !

சிலை வடித்திடுஞ் சிற்பியைப் போலும்,
　　செகத்தை யாக்கிடுஞ் செங்கதிர் போலும்,
கலை வளர்க்கும் கருத்தினைப் போலும்,
　　கவியின் உள்ளூறுங் காட்சியைப் போலும்,
நிலைபெ றுந்தவ யோகியைப் போலும்,
　　நிலவி யற்கை நெறியினைப் போலும்,
தலைசி றந்த சமரஸத் தொண்டர்
　　சகச மாகச் சகப்பணி செய்தார்.

சுத்தன் யோகச் சுடர்வழி காட்ட,
　　சுருதி மாமுனி வர் துணை கூட்ட,
சக்தி சாதகர் கூட்டத்தை ஊக்கித்
　　தளர்வி லாது சயம்பெறச் செய்ய,
பத்தி ஞான கருமப் பயனும்
　　பாடல் ஆனந்தப் பாணனும் பாட,
உத்தமர் உல கெங்குங்கொண் டாட
　　உண்மைத் தொண்டர் உழைத்தனர் நாளும்.

கீதங்கள்

வாழ்க சுத்த சுதந்தர ஜோதி
　　வாழ்க சத்திய சன்மார்க்க நீதி.
வாழ்க மானிடத் தேவர் மரபு
　　வாழ்க யோக வளம்பெறு வாழ்வே.

வீழ்க ராக்ஷஸப் போரின் வெறிகள்
விண்ண ரசு விளங்குக பூவில்.
சூழ்க நல்லன தொல்லுல கெல்லாம்
சுத்த சக்தி துலங்குக மாதோ !

உலகெ லாம்ஒரு நாடென வாழ்க !
உனதெ னதெனும் சண்டைகள் ஓய்க !
பல மதங்களின் பந்தனை தீர்க !
பரமன் ஒன்றெனும் பண்பு வளர்க !
கலக மின்றியிக் கட்டுக ளின்றிக்
கருணை யான கடவுளை யன்பால்
விலகறக் கலந் தின்பம் விளைந்தே
வீறு பெற்ற விழுமிய ராவோம்.

இருளை யோட்டும் இரவி யெழுக !
இன்ன லோட்டிடும் இன்பம் வருக !
பொருளி லாப்பழம் பொய்வினை போக்கிப்
புதிய ஞானம் பொலிக, பொலிக.
திருவி லாதன தீயன மாறித்
தெய்வ நல்லழ கெங்குந் திகழ்க !
அருளு ணர்ச்சி, அருள்வழி வாழ்க்கை,
அருள ரசுடன் ஆகுக நன்றே !

சாதி யில்லை ; சமயங்க ளில்லை ;
சாத்தி ரந்தரும் சண்டைக ளில்லை.
ஆதி சக்தி யிறைவ னருளில்
அகில மெல்லாம் அமைந்து வளர்வோம்.
தீதி லாத திருவுறு நன்மை,
தியான சாதனந் தீவிர பக்தி,
ஜோதி பூசனை தோத்திர மென்னுந்
தூய வேதச் சுடர்வழி செல்வோம்...

மட்டி லாத மகிழ்வுட னிங்கே
மனிதர் ஓரினத் தேவர்க ளாகத்
தட்டி லாத தவசக்தி கொண்டே,
தாயு ளத்துடன் சத்திய சேவை
எட்டுத் திக்கிலும் செய்திடும் இன்பம்
இம்மை யம்மைக் கினிய நலமாம்—
அட்ட சித்தியி னும்அரி தாகும்.
அவனி வாழும் அருட்பணி யென்போம்.

நாட்டில் ஒற்றுமை நாட்டிட வேண்டி,
ஞாலக் கோயில் நலம்பெற வேண்டி,
வீட்டில் ஆண்பெண் அறம்பொரு ளின்பம்,
மேவி வாழ்க்கை விரிவுற வேண்டி,
சேட்டை செய்திடுந் தீய பகைவர்
தீமுன் விட்டிலாய்த் தேய்ந்திட வேண்டி,
தேட்ட மற்ற சுதந்தரம் வேண்டித்
தீர ராகத் திருப்பணி செய்வோம்.

ஆற்றலும் அறிவும் வளர்ப் போமே,
ஆண்மை ஆண்மையென் றேமுன்செல் வோமே.
சீற்ற முற்றெதிர் தீய பகையும்
திருந்தச் செவ்விய வீறுகொண் டோமே,
ஏற்ற மான சுயேச்சை யிலங்க
எம்mு யிரையும் ஈந்துழைப் போமே,
போற்றி சக்தி புதுயுகத் தேவி
பொங்கு மங்களந் தந்தருள் வாளே.

இன்ன ழகும், இனிய வளமும்,
எங்கு நோக்கினும் தங்கக் கனியும்,
புன்ன கைசெயும் புண்ணிய பூமி,
புனிதர் போற்றிடும் பூரண பூமி,
முன்னு லகின் முதுநலப் பூமி,
முத்தி நல்கிடும் தத்துவப் பூமி,
உன்னத நிலை யோங்கிட வேண்டி
உயிரை யீந்தும் உழைத்திடு வோமே.

சேர்ந்து வாழுந் திறமறி வோமே,
தீர ராகத் தலைநிமிர் வோமே.
சோர்ந்தி டாது துணிந்துநிற் போமே.
சொல்லுஞ் செய்கையும் ஒன்றுசெய் வோமே.
கூர்ந்த நன்மதி கொண்டுயர் வோமே.
கொண்ட கொள்கைக் குயிர்தரு வோமே.
நேர்ந்த போதறத் தொண்டுசெய் வோமே.
நேரத்தைப் பொன்னென் றேநினைப் போமே.

தன்ன லத்தைத் தவிர்த்திடு வோமே.
தாய் நலஞ்செய் தவம்புரி வோமே.
அன்னி யர்வலை யையறுப் போமே.
ஆண்மை தன்னை மிகவளர்ப் போமே.

மன்னன் எம்மனச் சாட்சியென் போமே.
மாநி லம்பொது வாய்மதிப் போமே.
இன்னமும் இருளில் மடி யாமல்
இரவி போன்று விழித்தெழு வோமே.

சிறுமை யின்றிச் சிறந்திடு வோமே,
தேச சேவைத் தவம்புரி வோமே.
வெறுமை யச்சம் பொறுமை மடமை
விடமெனத் தள்ளி வீறுகொள் வோமே.
வறுமை நோயை வராதடிப் போமே,
வாழ்விற் காவிய வான்வளர்ப் போமே.
பொறுமை யாகப் புவிநலம் ஓங்கும்
புது யுகத்தைப் பொலியவைப் போமே.

மனித னுக்கு மனிதன் அடிமையோ
வாழு மாந்தர் அவரவர் மன்னவர்,
கனி மரத்திற்குக் காய்க்கும் உரிமைபோல்,
கதிரி னுக்கொளி காந்தும் உரிமை போல்,
மனதி னுக்கு நினைக்கும் உரிமைபோல்,
மண் ணுயிர்க்கு வளரும் உரிமையாம் ;
தனிய கந்தைகொண் டேபிறர் தாழ்வுறத்
தாக்குந் தீமையைத் தாக்கி நிமிருவோம்.

காணு லகம் பராசக்தி காணியாம் ;
கார்வ ளத்தாற் பசுவளங் காணுமே ;
ஊணு டைக்கிவ் வுலகினிற் பஞ்சமோ
ஒருவரை யொருவர் திருடா துண்டால் ?
மாணு றும்உழைப் பால்வந்த செல்வத்தை
மாந்த ரெல்லாம் பகுத்துண்ண வல்லரேல்,
சாண் வயிற்றுச் சடங்கெளி தாகிடும் ;
சத்தியம் இதென் றேபறை சாற்று வோம்....

(பூபாளம்—சாபு)

அருந்தவ முனிவர்கள் ஆசிகள் கூறி
ஆனந்த கானங்கள் ; ஆர்த்தனர் தொண்டர்,
திருந்திய நற்பணி செய்தனர் நாளும்,
தேசமெந் தெய்வம் எனச்சிரங் கொண்டே ;
வருந்திய மக்களின் வாட்டந் தவிர்த்தே,
மனதிலும் வாழ்விலும் மங்கள வளமை
பொருந்திடப் பொதுநலம் புரிந்திடும் அன்பர்,
புண்ணியம் பொங்குக கண்ணுல கெங்கும்.

ஆர்த்தன பறவைகள், ஆர்த்தன குயில்கள்,
ஆடின மயிலினம், ஆடின மான்கள்,
ஆர்த்தன வேதங்கள் ஆர்த்தன கீதம்,
ஆர்த்தன சுத்த பராசக்தி யென்றே.
ஆர்த்தபல் லாயிரம் ஆனந்தக் குரல்கள்,
அன்பர்கள் பாட்டுடன் அருட்பணி செய்தே
ஆர்த்தனர் யாவர்க்கும் அமர நிலையை
அளித்திடும் அன்புள்ள அன்னையைப் போற்றி...

('பேஹாக்—ஆதி)

புண்ணிய நாடே பூரணர் நாடே
புகழ்மிகு பாரத நாடே
விண்ணொளிர் நாடே வித்தகர் நாடே
விதவித நலந்தரு நாடே.

மாரதர் பலமும், வங்கரின் கலையும்
மங்கலத் தமிழிசை யமுதும்,
சீரிய சிங்கரின் வீறுடன் கூர்ச்சரர்
செல்வமு மல்கிய நாடே.

புத்தரின் சாந்தப் புன்னகை யொளியும்
பூரண யோகியர் கனலும்,
சித்தரின் அறிவும், பக்தரின் அன்பும்
தீரரின் வீரமும் பொலியும்—

எம்முளந் துடித்திடும் இன்னுயிர் நாடே;
எம்விழிக் கொளிதரு நாடே;
எம்மனம் நிம்மதி யெய்துநன் னாடே
எங்களை யீன்றபொன் னாடே;

முனிவரர் போற்றிய முதுபுகழ் நாடே,
மோகனக் கண்ணனின் நாடே
மனதினுக் கினிதுறு வரம்பெறு நாடே,
மலர்கனி வளமிகு நாடே....

பண்டுயர் தருமங் கொண்டுயர் நாடே,
பாருயர் சீருயர் நாடே,
கண்டதும் பெரியார் கைதொழு நாடே
கடவுளைக் காட்டிடு நாடே.

மறுமையை இம்மையில் வழங்கிடு நாடே,
மட்விருள் போக்கிடு நாடே,
பொறுமையும் வீரமும் பொய்யறு புகழும்
பொங்கிய சிங்கரின் நாடே....

ஓரினம் ஓர்குலம் ஓர்நிகர் ; உலகம்
ஒன்றெனும் உத்தம நாடே,
பேரிகை கொட்டி யிதன்புக ழிசைத்தே
பேரின்ப மெய்திடு வோமே.....

பாடி யிவ்வகை பாட்டுட னேபணி
சூடி ஞானச் சுடர்பெறு தாய்நிலம்
வாடி நிற்கும் வருத்தந் தணித்திட
நாடித் தொண்டர் நலம்புரிந் தோங்கினர்.

சுத்தன் ஆணையும் தூய தவந்தரும்
சித்தியும் அருட் செய்கையும் ஏந்தியே
சத்தி சாதக சங்கக் கிளைகளை
பத்தி கொண்டு பணிபெறத் தூண்டினள்.

ஆணும் பெண்ணும் அனைத்திலும் ஒன்றெனப்
பேணும் தொண்டர் பெருகிய கூட்டத்தைக்
காணும் சுத்த சிவசக்திக் காட்சியாய்
மாணு லகு மதித்திடச் செய்தனள்.

யாது செய்யினும் எங்கிருந் தாற்றினும்,
சாதுக் கூட்டம் சமரசப் பான்மையெப்
போதுங் கொண்டு புனிதனின் பொன்மொழி
ஓதுந் தொண்டொ டுயிர்த்தது நாளுமே. 200

நித்தி யத்தை நிரம்பிடக் கண்டவர்,
சத்தி யத்தைச் சரண்புகு சாந்தர்கள்,
சுத்த சக்தி யுபாசகத் தொண்டர்கள்,
சத்த மின்றிச் சகப்பணி செய்தனர்.

ஞாலங் கண்டவர் ஞானத்தைக் கண்டவர்,
கோலங் கண்டவர் கோலத்தி னுள்ளுறும்
கால சக்தியின் காட்சியைக் கண்டவர்
நீல வானென நெஞ்சம் படைத்தவர்.

உண்மை யானவர், உன்னத மானவர்,
கண்மை யுள்ள கருணைத் திருவினர்,
வண்மை கொண்ட வளம்பெறுங் கையினர்,
தண்மை யான தடம்பெறு வாக்கினர்.

சித்தி மானும், திறல்பெறு சக்தியும்,
தத்த மக்குத் தகுமுறை தந்ததைச்
சித்த மூன்றித் திருவுறச் செய்திடும்
பத்தர் கூட்டமிப் பாவனக் கூட்டமே....

பயிற்சி பெற்ற பலகலைச் சாதகர்
அயர்ச்சி யற்றனர் ; அல்லும் பகலுமே
முயற்சி யேயுயிர் மூச்செனக் கொண்டனர்—
உயர்ச்சி யுற்றதை ஓதவும் வேண்டுமோ !

கோட்டை கொத்தளங் கோயில்கள் கோபுரம்
நாட்டி லுள்ள நகரச் சுவர்தொறும்
தீட்டி வைத்தனர் சுத்தனின் செம்மொழி
காட்டி மக்கள் கடமை யறியவே.

யோக சித்தி யுளங்கொண்டு வாழ்ந்தனர்
யோக சித்தி யுரைத்தனர் ஊர்தொறும்,
யோக சித்தி யுரைத்த பணிகளை
யோக சித்தி யொளிரப் புரிந்தனர்.

### சக்தியின் பெரும்பணி

பாலுந் தேனும் பழமுங் கலந்தெனச்
சீல வாழ்க்கையுஞ் செவ்விய சிந்தையும்
கால மேற்குங் கலைகளும் வல்லவள்
ஞால சேவை நடத்தினள் சக்தியே.

அண்ணல் சுத்தனுக் கன்பை யளித்தவள்,
கண்ணு லகை அவனெனக் காண்பவள் ;
உண்ணுஞ் சோறும் அவனென் றுணர்பவள்
எண்ணும் எண்ணமெ லாமவ னெண்ணமே.

உண்மை யான உளத்தினைக் கோயிலாய்ப்
பெண்மை யான பெருமையைத் தீபமாய்,
வண்மை யான வரதனை மூர்த்தியாய்த்
திண்மை யான தியானஞ்செய் சீரியள்.

கண்க டந்த கடலுறு தீவிலே,
தண்க டலையுந் தாண்டிவந் தாட்கொண்டான்.
எண்க டந்த பெருமையன் என்மனப்
பண்க டந்த பனுவலை ஏற்றனன்.

எல்லை யற்ற கருணையன், எம்பிரான்,
தொல்லு லகிருள் போக்கிடும் சூரியன்,
சொல்ல ரிய சுகமெனக் கீந்தனன்,
அல்லி யுள்ளம் அலர்மதி யன்னவன்.

மின்ன லென்னவென் மெல்லிய நெஞ்சிலே,
தன்னொ ளியினைத் தந்து கலந்தவன்
என்னு யிரும் எனதுயிர்க் காவியும்
அன்ன வன்பணி யாவதென் வாழ்வென்றுள்.

அனவ ரதமும் அன்பை நிவேதித்தே,
கனவி லோங்குங் கவியுரு வென்னவே
நினைவி லோங்கிய நின்மலன் சேவைக்கே
மனமும் வாக்கும் வழங்கிய தூயவள்.

பருகும் ஆர்வமும் பண்புள காதலும்
உருகு நெஞ்சினில் ஊறிடும் பண்களும்,
அருவி போலிசை யாழும் அமுதச்செந்
திருவு மோங்கிய திவ்விய வாழ்வினள்.

மற்றை யாசைகள் யாவு மறந்தவள்,
வெற்றி யாக விமலன் விரதத்தை
முற்று விக்க முயன்றுமுன் சென்றிடும்
ஒற்றை யாசை யுளமெனக் கொண்டவள்.

ஓவி யத்திற்கும், உண்மைப் புலவரின்
காவி யத்திற்குங் காணரும் பொற்பினள்.
"ஆவி யின்புறும் ஆனந்த யோகியாந்
தேவன் சேவையென் சென்மப் பய"னென்றாள்.

முருகன் ராமன் முரளி மனோகரன்
அருகன் புத்தன் அனைவரும் கூடிய
உருவன் உள்ளத்தை யள்ளிய உத்தமக்
குருவவ னுக்கென் குவலய வாழ்க்கையே.

என்று நெஞ்சினில் ஏத்திப் பணிந்துளம்
ஒன்று சக்தியின் உட்கனல் ஓங்கவே
நன்று தூண்டினன் பூரண நாயகன்—
வென்றி நல்கும் வியன்பணி செய்யவே.

செங்கை கோத்த தியானத் திறமையால்,
அங்க முற்றும் அருட்கனல் பாய்ந்தொளிர்
தங்க மாகத் தளிரிள மேனியும்
பொங்கு பூரண யோகம் புரிவித்தான்.

ஆறு சக்கரம் தாண்டி யருட்கனல்
ஏறும் உச்சிவெண் டாமரை ஏகமாய்,
ஊறும் இன்ப ஒளிசிவ சக்தியாய்
வீறும் தன்மை விளம்பிட ஒண்ணுமோ ?

தாயுந் தந்தையும் தானும் உலகமும்
தூய னென்று துணிந்து பணிந்திடும்
நேய மிக்க நிமலையைச் சாதகர்
சேயு ளத்துடன் சிந்தித்தன் பாற்றினர்.

தன்னை யீந்த தகவுறு சக்திக்கே
தன்னை யீந்த தயவுறு சுத்தனும்
முன்னி ருக்கு முயற்சித் தலைவியாய்
அன்ன வளை யனுப்பி மகிழ்ந்தனன்.

மருவு கால வழக்கை நடத்திடும்
இருசு டரென் றிருவரும், புண்ணியம்
பெருக மெய்யொளி எங்கும் பிறங்கிடத்
திருவு றும்பணி செய்தனர் நாளுமே.

துய்ய வீர சுதந்தர நாதனின்
தெய்வ வீறுறத் திவ்விய சக்தியும்
வைய மெங்கும் வரதனின் வாசகம்
உய்ய மாந்தர் உருகிடப் பேசினாள்.

மாசிலா யோக சித்தன், மறுவிலாக் கேள்வி யாளன்,
வாசநாண் மலரைப் போல மகிழ்வுறு காட்சி யாளன்,
பேசநா வூறுந் தெய்வப் பெருமையான், உலகுக் கெல்லாம்
தேசிகன் சத்ய சுத்த தேவனை யறிகு வீரே.....

கனியுடன் பாகுந் தேனுங் கற்கண்டுங் குழைத்த தன்ன
இனிமையில் வளர்ந்த சொல்லான், இரக்கமே இதய மானான்,
எனதுயிர்க் கின்ப மானோன், எவ்வுல குயிரி னுக்குந்
தனதுயிர் போல நல்ல தயவுடைத் தந்தை யன்னான்,

ஓங்கிய தவத்தின் மிக்கான், ஒள்ளிய நடையின் மிக்கான்,
ஏங்கிய மனதை யாற்றும் இதயசஞ் சீவி போல்வான் ;
தீங்கனி ரசத்தைப் போலத் தெவிட்டறு வாக்கி னாலே,
தூங்கிய நாட்டை வீரத் துணிவுடன் எழுப்பி னானே.

அஞ்சறு மனத்தான் பூவை யழித்திடும் அசுரர் செய்யும்
வஞ்சனைப் பழியை வெல்ல, யோகத்தின் வலிமை பெற்றான் ;
வெஞ்சின வெறிகொள் வாரை விழிதருங் கருணையாலே
கொஞ்சிள மதலை போலக் குலவிடச் செய்ய வல்லான்.

கொடியதோர் எமபா சத்திற் கொடியதாய் வாழ்வைத்தேய்க்கும்
அடிமைநோய் தீர்க்க வேண்டி ஆத்தும சக்தி கொண்டான்.
மிடிபிணி யிருளி லாது மேதினி மாந்தர் வாழும்
படிநலம் புரியும் வள்ளல் பரிதியுங் கடலும் அன்னான்.

மக்கத்து வள்ளல் போன்றும் வஞ்சமில் கிறிஸ்து போன்றும்,
பக்குவ ஞானி யான பாலறா வாயர் போன்றும்,
மிக்குயர் அப்பர் போன்றும் விழுமிய மூலர் போன்றும்,
சிக்கனக் காந்தி போன்றுந் திவ்விய புருடன் அன்னோன்...

எந்தநன் மதமும் போற்றும் இயல்புறு வாய்மை தன்னைச்
சொந்தநன் மதமாய்க் கொண்டு தூய்மையே போற்றிவாழ்வான்;
இந்தநா டுடனே யூவும் இன்புற மாந்தர்க் கெல்லாம்
வந்தருள் அன்பிற் பூத்த வாசகஞ் சொல்வேன் கேளிர்.

சந்த நாதம்

தலை சிறந்த நல்வினைப் போற்றுமின்;
நிலை சிறந்த நினைவுடன் செய்யன
கலைசி றந்த கருத்துடன் ஆற்றுமின்;
மலையின் மாண்புடன் வாழ்வகை வாழுமின்.

அரிய தாகிய மானிட வினையைக்
கரிய சேற்றிற் கவிழ்த்திட லாகுமோ?
பெரிய நல்லிசை பேசிட மீட்டுமின்—
உரிமை யென்னும் உணர்வுறு பாட்டினுல்.

பேத புத்தியின் பேதமை நீங்கிடின்
சாதி யில்லை, சமயங்க ளில்லையே,
மேதி னியில் விளங்குயர் மானிடர்
நீதி யொன்று நெறியுமொன் றுவரே.

நன்றி யின்றி நடுநிலை யின்றியுள்
ஒன்ற லின்றி, உயிர்க்கரு ளின்றியே
கொன்று கூடிக் குடித்துத ரச்சுவை
தின்று கெட்டதித் தீனி யுலகமே!

வெம்மை யின்றி வெறிக்களி யாட்டின்றிச்
செம்மை போற்றித் திருவுற வாழ்ந்திடின்
நன்மை கண்டு நடந்திடின், வாழ்விலே
இம்மை யம்மையின் இன்பந் தழைக்குமே.

அழிந்த நெஞ்சினர் ஆருயிர் வாழ்வினைப்
பிழிந்துண் பேயர் பெருங்கொலைப் பாதகர்,
பொழிந்ததைப் பொடிக்கும் பொறி போன்றவர்
இழிந்த தீமையால் வந்ததிங் கின்னலே.

ஞால சக்தியின் நாடக மாகவே
கால மான கயிற்றி னியங்கிடும்
தூல வாழ்வெனும் சூத்திரப் பாவையைச்
சீல வாழ்வெனச் செய்திட நேர்மினே.

பயங்கொள் குண்டுப் படைகளைக் கண்டுநீர்
மயங்கி யஞ்சி மனந்தடு மாறலேன்?
புயங்கொள் சக்தியினும் புனி தாத்தும
நயங்கொள் சக்தி நலந்தரும் வெற்றியே.

தம்ம தேபெரி தென்னுந் தனிமதம்
இம்மி கூட இனிப்பய னில்லையால்,
எம்ம தமும் இனிதெனப் போற்றியே
சம்ம திக்கும் சமரசங் காணுவாம்.

இலகு நெஞ்சில் இருக்கும் பரமனை,
விலகி டாது விரும்பிக் கலந்ததும்
உலகில் அந்த உணர்வுடன் வாழ்வதே,
நிலவ மைதி நெறியென லாகுமே.

தினமு மன்புத் தியானஞ்செய் மாந்தர்கள்,
மனமொன் றுகி மதவகுப் பின்றியே
இனமொன் றுகி இனிதுற வாழுவார்,
தினக ரனிற் செறிகதிர் போலவே.

சமதை யுள்ளமும் சத்திய நேர்மையும்
இமயத் தோளில் எழுந்தொளிர் வீரமும்,
எமனும் அஞ்சும் இதயவிஞ் ஞானமும்
அமர வாழ்க்கை யளித்திடும் அன்பர்காள்.

அருமை யானசுத் தாத்தும சக்தியும்,
தரும வீரமுந் தன்மை யுணர்ச்சியும்,
ஒருமை யாகிய ஒற்றுமை நேயமும்
பெருமை செய்யும் பிறப்பின் உரிமைக்கே.

அவ மிகுந்த அவுணரை வெல்லுவோம்,
சிவமி குந்த திருவுற வாழுவோம்,
தவமி குந்தருள் சக்திப் பெருக்கினுல்,
புவிமி குந்த புதுப்பொலி வெய்தவே.

பஞ்ச பூதஞ்செய் பஞ்சர மேனியிற்
கிஞ்சு கமெனக் கேடற வாழுயிர்
அஞ்சி லாத சுதந்தர மானது ;
நெஞ்சி லந்த நிலையை நினைமினே.

மன்னு யிரின் மனத்தைக் கெடுத்திடும்
தன்ன லங்களுந் தாமதப் பேய்களும்,
உன்ன தம்பெறும் ஓர்மய உண்மையை
முன்ன றிந்து முயன்றிடின் வீழுமே.

சிறுமை யில்லை, செகத்தை வருத்திடும்
வறுமை யில்லை, மடமை யிருளில்லை,
வெறுமை யில்லை, விலங்கில்லை தீதில்லை,
பொறுமை யுள்ளம் பொலிபொருள் காணினே.

சாமி யென்பது சத்திய சுத்தமே,
பூமி ஆன்மப் பொதுவளர் சோலையே,
நாமி தென்பது நம்முயி ருக்குயிர் ;
சேம மென்பது சேதன வாழ்க்கையே.

எங்கு மாந்தர் இதயத்தில் ஒன்றியே,
சிங்கம் போலச் சிரநிமிர்ந் தோங்குவார்,
எங்கெல் லாரும் இறைவ னருட்குடை
தங்கி வேறு சழக்கற வாழ்வரோ,

எங்கு நான்என தின்றிப் பொதுமையில்
மங்கலம் பெற வாழ்வு சிறக்குமோ,
பொங்கு யோகமும் போகமும் போதமும்
துங்க மாகத் துலங்குமந் நாட்டிலே.

அயர்வி லாத முயற்சியும் ஆண்மையும்,
துயரை யோட்டுந் துணிவுறு வீரமும்,
மயர்வி லாத மனத்தில் உறுதியும்
உயர்நி லைதரும் உண்மை யறிகுவீர்.

கடமை கண்டு கருத்துடன் காமினோ !
மடமை யச்ச மயக்கம் ஒழிமினோ !
திட மனத்துடன் சேர்ந்தினி வாழ்மினோ !
அடிமைப் பேயும் அடங்கி யொழியுமே.

அரியின் குட்டிவெள் ளாட்டிடை வாழ்ந்தபின்
நரியின் குட்டியைக் கண்டு நடுங்கல்போல்,
உரிமை தன்னை உணர்ந்துகொள் ளாமலே,
பிரிவு செய்யும் பிறரைப் பணிவதோ ?

ஞான பாரத நாட்டினர், வீட்டினர்
ஈன மான அடிமையென் றுவதோ ?
வான ளாவிய வாகைப் புகழினர்
தீன ராகித் தியங்குவ தாகுமோ ?

பொங்கு வீரப் புகழ்சிறந் தோங்கிடும்
சிங்க வீரச் சிகாமணி நாட்டினர்,
தங்க மான தருமப் புலவர்கள்
மங்கி யின்று மடிவது நீதியோ ?

ஏங்கி டாமல், இழிநிலை தன்னிலே
தூங்கி டாமற் சுறுசுறுப் பாகநீர்
தீங்கை வென்று திருக்கொடி நாட்டவே,
ஓங்கி ஓம்சுத்த சக்தியென் றோதுமின் !

எரி நெருப்பில் இருப்பதைக் காட்டிலும்,
வரிப்பு லிக்குகை வாழ்வதைக் காட்டிலும்,
பரிவி லார்கை பகட்டிடும் பாவையாய்
உரிமை யின்றி யுயிர்ப்பது சாவரோ !

ஏழை யில்லே இழிந்தவ ரில்லேயே
தோழர் யாருஞ் சுதந்தர வீரரே ;
ஊழி யஞ்ச உழைப்பினில் ஓங்கியே
வாழி தெய்வ வரம்பெறு நாட்டினர். 440

தொண்டர்க ளுடனே சக்தி சுத்தவா சகத்தை யோதி,
வண்டெனச் சுறுசு றுப்பாய் மானில மெங்குஞ் சென்ருள்.
பண்டுசீர் அறிந்து மக்கள் பாரதப் பான்மை நெஞ்சிற்
கொண்டெழுந் துணர்ச்சி வெள்ளங் குமுறிடப் பணிசெய் தாரே.

மடமையை அறிவாற் போக்கி, வறுமையைத் தொழிலாற் போக்கி,
அடிமைசெய் மாயம் போக்கி ; ஆத்தும தீர ராகக்
கடமையைக் காத்து வெற்றி காட்டிய சுத்த சங்கம்
இடமகல் உலக மெங்கும் இயல்புற நிலவிற் றன்றே..... 448

# 12. விழித் தெழுந்த படலம்

**வீ**ரநல் லுரைக ளாலும் வீறுகொள் பணிக ளாலும்,
பாரத சக்தி யாலும் பழம்புது நடைக ளாலும்,
ஓரின உணர்ச்சி யாலும், உண்மையை அறிந்த தாலும்,
பூரணன் அருளி ஞலும் புண்ணியம் எழுந்த தன்றே....

அருளினை யடைந்த தொண்டர், அயர்வறும் பணிக ளாலே
இருளினை யடைந்த நாடும், இடமகல் உலகும், எங்கும்,
தெருளினை யடைந்து மாந்தர் திசைதிசை சுத்த சக்திப்
பொருளினை யறிந்து ஞானப் பொலிவுற விழித்தெ ழுந்தார்.

கங்குலைக் கடிந்து நீண்ட கதிர்களைப் பரப்பி, மண்ணைத்
தங்கமே யாக்கி, மோனத் தணல்பெறும் இரவிச் செல்வன்,
இங்குல குயிரின் வாழ்வை எழிலுறச் சமைப்ப தேபோல்,
பொங்குயர் சுத்த சக்தி புதுயுகஞ் சமைத்த தன்றே.

சதம் பெறுஞ் செயல்க ளாலே, சத்திய வாழ்க்கை யோங்க
நிதந் திரு வளர, மாந்தர் நினைவுகள் புதுமை யாகக்
கதந்தரு மரக்க மாயங் கலங்கிடக் கதிர்கள் வீசிச்
சுதந்தர சக்தி யென்னும் சூரியன் எழுந்த தன்றே.

கார்பெறும் அரக்க ருக்குக் கைகட்டி யஞ்சி யிங்கே
சோர்வுற வாழ்ந்த வாழ்வைத் தூவென உதறித் தள்ளிச்
சீர்பெறும் பரத நாட்டுத் தீரர்கள் விழித் தெழுந்து,
நேர்பெறத் தலை நிமிர்ந்து நின்றனர் சிங்கம் போலே.

நாட்டு நிலைமை

ஆருயிர் நலத்தைத் தாங்கும் அறமெனுங் கற்பகத்தின்
வேருடன் கிளையு மாகி, விண்கனி பழுத்த நாடு,
பேருடன் புகழு மோங்கிப் பெருஞ்செயல் புரிந்த நாடு,
நீருலர் கமலம் போல வாடிய நிலையைக் கண்டார்.

தாமதப் பகையை நூறித் தணல்பெறுஞ் சாந்த மெய்தி,
நேமமும் பிரம ஞான நிட்டையுஞ் சபமும் காத்துப்
பூமிநல் லின்ப மெய்தும் பொதுநலம் புரிந்து வாழ்ந்த
தூமறை யாளர் தங்கத் தூசியின் அடிய ரானார்....

கிழக்கொளி எழுந்த போதும், கிளர்பக லுலகைப் போற்றி
வழக்கமாய் அந்தி மாலை வந்தது மறையும் போதும்,
வழுக்கறச் சந்தி செய்து "மன்னுயிர் வாழ்க" வென்று
தொழுக்கடன் புரிந்த சீலர் தோற்கிடங் காள ரானார்.

மனதுறு மாண்பி னாலே மாதவ வாழ்க்கை பூண்டு,
வனநடு விருந்து கல்வி வழங்கிய குருமா ரெல்லாம்,
கனதன சுகத்தைத் தேடிக் கைகட்டி வாய்பு தைத்துச்
சினமிகு செருக்கர் சேவை செய்திடப் புகுந்தா ரம்மா.

அந்தணர் வணிக ரானார், ஆயுதம் பிடித்த வீரர்,
சந்தையில் விறகு விற்றார், சாத்திரச் செல்வர் தாமுந்
தொந்தியை நிரப்ப வேண்டித் தொத்தடி யார்க ளானார்,
பந்தனை வலையிற் பட்டுப் பதமிழந் தார்க ளம்மா.

தவம்பெரி தாற்றி நின்ற சத்திய சித்தர் தாமும்,
சிவம்பெரி தென்பார் ; மாலே சிறந்தவ னென்பார் ; மற்றோர்
எவர்பெரி யாரென் றேச்சும் பேச்சுமாய் இகல் வளர்ப்பார் ;
அவம்பெரி தாகி யின்னும் ஆயிரஞ் சாதி செய்வார்.

பொங்கிய தொழில்கள் செய்து, புவியெலாங் கப்ப லூர்ந்து,
தங்கமு மணியுங் கொண்டு தாயகங் குவிந்த நல்லார்,
சிங்கனின் மரபார் ஊணர் தேசத்துச் சரக்கை வாங்கித்
தங்கடன் மறந்து நின்ற சங்கடந் தனையுங் கண்டார்.

கலையென்பார் புதுமை யென்பார் கைகட்டிச் சேவகஞ்செய்
நிலையினி லுள்ள தாதர், நெஞ்சினில் உரமே யின்றி,
விலையிலாக் காலந் தன்னை வீண்கதை பேசித் தீர்ப்பார்
மலைமலை யாகக் குப்பை மலிந்திடத் தினத்தா ளெல்லாம்.

முனிவர்செய் யிலக்க ணத்தை முனிந்தெரி மூட்டு வார்கள்,
கனிமொழி யென்றுற் சந்தைக் கடைமொழி யென்று சொல்வார்.
மனதினில் வந்த வாறு வசவுநூ லெழுதி விற்பார்
இனிய பண் டிலக்கி யத்தைத் தலைவலி யென்று நோவார்.

அணியிசை யாப்புமுற்றும்.அமைந்தநன் னூலை யோதி
மணி மொழி பேசுகின்ற மாபெரும் புலவர் தம்மை,
உணவுடன் உடைக்கு மின்றி உலர்ந்திட விடுப்பார் ; ஈசன்
பணிநலம் புரிவார் ஒன்றும் பசலியென் றிகழு வாரே.

தம்பெருங் குறைகள் எண்ணார் ; தகுமுறை கற்றுந் தேறார்,
கம்பனுங் குறளும் ஆன்றோர் கவிகளும் காலம் வேண்டா
வம்புகள் என்பார் ; வாக்கை மாற்றுவார் ; உண்மை தன்னை
அன்புடன் சொன்னாற் சென்ளென் றுத்திரங் கொண்டு பாய்வார்.

செய்தித் தாள் பேறு நாட்டத் தெரிந்ததும், அகங்க ரித்து
வையத்தைத் திருந்த நாமே வந்தனம் என்பார் ; நல்ல
மெய்யுரை யாளர் தம்மை விதவித மாக வைவார்,
பொய்யெலாம் புனைந்து காட்டிப் பொழுதினைக் கொலைசெய் வாரே.

தம்மையே புகழ்வார், தம்மைப் புகழ்ந்தவர் தமைப்பு கழ்வார்
செம்மையாய்க் கற்ற டங்கிச் செய்வன செய்வார் தம்மை
இம்மியு மதிக்க மாட்டார் ; ஏளனஞ் செய்வார், செல்வர்
பொம்மையாய்த் திரிகி விட்ட போக்கினிற் போவா ரன்றே.

மதிப்புறு காவி யத்தை மன்றினில் விலக்கி வைத்துக்
கொதிப்புரை பேசி நாசக் குரங்கின்கை மாலை செய்வார்.
துதித்ததம் அடியார் தம்மைத் துதித்துக்கொண் டேயி ருப்பார்-
எதிர்த்திது நீதி யென்றால் இடிபுய லாவா ரன்றே...

புன்னகை புரிந்து முன்னே புகழுரை பலவுஞ் சொல்லித்
தன்னலப் பயனைக் கொள்வார் ; தந்ததும் நன்றி கொல்வார்,
பின்னிருந் திழிவு செய்து பேய்நகை யாடு வார்கள்
அன்னிய ரிடங்கோட் சொல்லி அஃதொரு பிழைப்பு மானார்.

கொல்கொலைக் கஞ்சி டார்கள் ; கோள்பொய் பொறாமை யாலே
நல்லவர் தம்மைத் தூற்றி நலித்திடச் சூழ்ச்சி செய்வார்.
கல்வியிற் பெரியர் பேரால் காசடி வேலைசெய் வார்,
பல்வகைத் திருடர் பட்டப் பகலினில் வலுத்தா ரம்மா.

எதிர்மனை வாழக் காணார் ; வழக்கினில் இழுத்து விட்டுச்
சதிசெய்து பொட்ட லாக்கச் சாட்சிசோ டித்து நிற்பார்.
கதிர்விடு மணியும் பொன்னுங் கடுஞ்சிறை யடைத்து வைப்பார்.
மதியினை மயக்கும் வேசை மனங்கொளத் தந்து தீர்ப்பார்.

ஆயிரம் திருட்டுச் சொத்தில் அரைப்பணந் தருமஞ் செய்வார்.
கோயிலைக் கொள்ளை கொண்டு கோபுரங் கட்டு வார்கள்.
தாயையு நம்ப மாட்டார், தம்படிக் கணக்குப் பார்ப்பார் ;
தேயத்தின் பெயரைச் சொல்லித் தின்றுடை மினுக்கு வாரே.

மன்னனை முகமன் கூறி மந்திரி யாகப் பார்ப்பார்,
இன்னொரு தக்கார் எய்தின், எதிர்த்தொரு கட்சி சேர்ப்பார்.
அன்னவன் அழியப் பிள்ளை யாருக்குத் தேங்காய் போட்டுத்
தன்னலஞ் சாதித் தோங்கச் சாமிக்கி லஞ்ச மீவார்.

பொன்னுடன் பெண்கி டைத்தால்,பொருளுடன்புகழும் வந்தால்
மன்மதக் குழந்தை வாய்த்தால், மற்றொரு லாபம் வந்தால்
"இன்னதற் கிதுகா ணிக்கை" என்றுகைக் கூலி யீவார்.
அன்னவர் ஆசைதோற்றல் "ஆண்டவன் இல்லை"யென்பார்.

எளியவர் பசியைக் கண்டும் எச்சிற்கை யுதற மாட்டார் ;
தெளிமிகு புலவர் வந்தாற் செவிட்டுடன் ஊம ராவார்.
களிமது வுண்டு வேசை காலினிற் பொன்னைப் பெய்வார் ;
வெளிமயக் கிடம்பா சார விருந்தணி செய்வா ரன்றே.

குணநலம் பாரார் ; நல்ல குலநலம் பாரார் ; கல்வி
மணநலம் பாரார் ; அன்பு மனநலந் தானு மில்லார்.
பணநல மொன்றே கண்டு பாதகம் பலவுஞ் செய்வார்.
கணமொரு கவலை யாகக் காசினைச் சுமக்கும் கஞ்சர்.

பிறப்பெனப் பெற்றார் யாரும் பெருகிழைத் தயர்ந்து நாளை
இறப்பெனுப் புலிவாய் சேரு முன்னரே எய்துஞ் செல்வம்
அறப்பணிக் கீந்து, நாட்டில் அறிவுடன் தொழில் வளர்க்க
மறப்பரேல் அவர்செய் செல்வம் மண்ணினும் வறிய தாமே.

காதகர் ஒருபால், செல்வக் கருமிகள் ஒருபால், பஞ்ச
பாதகர் ஒருபால், வாடும் பஞ்சைகள் எங்கு மம்மா !
ஓதியும் உணரார் ஓர்பால் ஓரெழுத் தறியார் ஓர்பால் ;
சாதிகள் பேசு கின்ற சாத்திரக் காரர் ஓர்பால்.

உட்புல னுணரா மாக்கள், உண்மையை யுணரா மாக்கள்,
கட்புல வருந்து மாக்கள், களிநடம் புரியு மாக்கள்,
நட்புற வென்று வந்து நாகரி கங்கள் காட்டி
மட்புல மயக்க மீந்து வாழ்வினைக் கெடுப்பா ரம்மா.

வீங்கிய செருக்கி னாலே, வென்றவ ரென்னும் பட்டம்
வாங்கிய செருக்கி னாலே, வலிபெறுந் தூம கேது
தாங்கிய கொடுங்கோ லுக்குத் தாதராய், அரக்கர் பின்னே
வேங்கைபின் நாயைப் போலே விரைகுவர் வெட்கங் கெட்டார்.

ஒருமையும் அன்புங் கொண்டே உயர்புக ழடைந்த நாட்டில்,
இருமனப் பெண்டிர் போலே இராக்கத வஞ்சர் புக்கு
ஒருவரை யொருவர் தூற்றி உட்சினங் கொண்டு மோதத்
திருவிளை யாடல் செய்த தீமையை யென்சொல் வோமே !

தந்திர நரியைப் போலே சமயம்பார்த் தின்னல் செய்ய,
மந்திரக் கிழவர் போலே, வாணிகர் போலே நாட்டில்
வந்திருந் தறங்கெ டுத்து, மனதினைக் கெடுத்து நாட்டைத்
தந்திரு வரசு செய்த தானவர் கால மஃதே.

சுத்த சங்கத்தார் தொண்டு

கோசலர், வங்கர், சிந்தர், கூர்ச்சரர், சிவாஜி நாட்டார்,
மாசிலாத் தமிழர், கூடி மாதவத் தொண்டர் தொண்டு
காசினிக் கினிதே செய்து, காலசக் கரத்தை மாற்ற,
நேசமோ டுதவி தந்து நிறைகடன் புரிந்தா ரம்மா.

மின்சக்தி கொண்ட வர்க்கு விண்சக்தி காட்டி வென்றார் ;
பொன்சக்தி கொண்ட வர்க்குப் பொருட்சக்தி காட்டி வென்றார் ;
மன்சக்தி கொண்ட வர்க்கு, மாவலிக் கும்ப லுக்குத்
தன்சம னற்ற சுத்த சக்தியை விளக்கி னாரே.....

பொறிகளை யடக்கி வென்ற புலவர்கள் அறிவி னாலே
பொறிபல படைத்த ரக்கர் பொறிவலி தன்னை வென்றார்.
வெறிகொளும் தூம கேது வியந்திடத் தூயர் சுத்த
நெறிதரும் அன்பர், அஞ்சா நிமிர்நடை நடந்தா ரம்மா.

அடிமையின் இழிவைக் காட்டி அரக்கர்கள் உலகிற் செய்யும்
கொடுமையை உணரக் காட்டிக் குடிகளை விழிப்பு றுத்தி,
மடமையை விலக்கி, வீர வளமையை ஊக்கித் தொண்டர்
கடமையை எழுதிப் பேசிச் செயலிலுங் காட்டி னாரே.

அச்சிலு மேடை மீதும் அளவறும் இதழ்க ளாலும்
அச்சமில் லாது தொண்டர் அறத்தினை யுணர்த்தி, நாளுந்
துச்சமாம் புன்மை போக்கித் துயர்செயும் அடிமை வாழ்வை
எச்சிலென் றொதுக்கி மாந்தர் ஏறுபோல் நடக்கச் செய்தார்.

சோலையைப் பள்ளி யாக்கிச் சுதந்தரக் கல்வி தந்து,
வேலைசெய் துண்ட ரக்கர் வேலையை விலகி வாழக்
காலையு மாலைப் போதுங் கைத்தொழி லளிக்குங் கர்ம
சாலைகள் வைத்துக் காசுங் கஞ்சியும் வார்த்தா ரன்றே.

புண்ணிய பூமி நல்கும் பூரண ஞானத் தோடு
மண்ணினிற் புலவர் கண்ட மாண்புதுக் கலையுங் கூட்டி,
உண்ணவும், உடுத்தி ருந்தே உழைக்கவும், தேச சேவை
பண்ணவு மேற்ற கல்வி பயிற்றினர் பரிவி னாலே.

வீனுறு சடங்கு மின்றி, வெளியுறு வேட மின்றி,
மானுறு நடையி னாலும், மன்னுயிர்த் தொண்டி னாலும்,
பூனுறு விரதத் தாலும் புனிதநி யானத் தாலும்,
கானுறு கலையி னாலுங் கடவுளை யுணர்த்தி னாரே..

பத்தியும் பாட்டும் தொண்டர் பணிகளும், இனிய சொல்லும்,
ஒத்தநல் உளமும், ஆன்ம ஒருமையும், அன்பும், சித்த
சுத்தமும், செருக்கி லாத தெய்விக நடையுங் கண்டு,
சத்துரு பக்கத் தாருஞ் சகோதரர் ஆகி வந்தார்.

நன்றியும் தெளிவும் அன்பும், நடுநிலை யான பேச்சும்,
வன்றவக் கதிருங் கொண்ட வாய்மையின் வடிவ மானார் ;
ஒன்றிது நலமென் றோதின், உணர்ந்ததை உள்ளத் துள்ளே
கொன்றுணும் கூற்றன் னாருங் கொடுமையை விடுத்தா ரம்மா.

பொய்யினைப்பொய்யென் றார்கள்; பொழுதினைக்கொலைசெய்யாது,
மெய்யருள் வாக்கைக் கற்றார் ; மேதினி தன்னை யாளுந்
தெய்வமும் உண்டென் றார்கள் ; தேகத்தைக் கடந்த தேகி
துய்யது ; சுத்த சக்திச் சுகமொன்றே சுகமாம் என்றார்.

ஆத்திரப் பொறாமைச் சண்டை அமைதியைக் கெடுப்ப தென்றார்;
நாத்திகச் செருக்கி னாலே நரகமே வாழ்க்கை யென்றார் ;
சாத்திர ஒழுக்க மெல்லாந் தருவன சுகமே என்றார் ;
தீத்தணல் போன்ற தீரர் திருந்திய திருவி னாரே.... 180

தூலதே கத்தின் மோகத் தோலழ கதனைக் காட்டிப்
போலிச்சா யங்கள் பூசிப் புருடரைக் கெடுத்த மின்னார்,
சாலமு மாறி இல்லத் தருமத்திற் பற்றுக் கொண்டார் ;
காலமு மாறி யந்தக் கரணமு மாற நன்றே.

மட்டிலா அடிமை வாழ்வால் வலிமையை யிழந்து, நான்கு
சட்டையுள் எலும்புக் கூடாய்த் தம்முயிர் தாங்கும் மாந்தர்
திட்டமாய்ச் சுத்த யோக தியானத்தின் பயன தாகக்
கட்டுடன் கனமு மெய்திக் காளைபோல் வீர ரானார்.

செப்பறுங் கவலை பற்றிச் சென்மத்தைச் சலித்துக் கொண்டு,
தப்பிட வழியைப் பார்க்குந் தானவ தாச ரெல்லாம்,
அப்பரும் கனகன் சேயும் அருட்சுடர் வள்ள லாரும்
செப்பிய நெறிய றிந்து தீரராய்த் தலைநி மிர்ந்தார்.

அன்னிய வணிகக் கூட்டம் அடிபகற் கொள்ளை கண்டு,
முன்னலை கடல்க லக்கி முதுபொருள் செய்த நாட்டார்,
பன்னருங் கவிதை பெற்ற பாரத வணிகர், சுத்தன்
சொன்னதைச் செய்து நாட்டுத் தொழில்களை ஊக்கி னாரே.

கூட்டுநெஞ் சாளர், நெஞ்சக் கவலையாற் குழிந்த கண்ணர்,
வாட்டிய பசியால் வாழ்வை வஞ்சருக் கடிமை செய்தார்,
பூட்டிய மனந்தி றந்து புந்தியில் உறுதி கொண்டு,
நாட்டினுக் கேதம் வாழ்வை நல்கிட நலங்கண் டாரே !

வெற்றுரை விடுத்தார் ; நாட்டு விடுதலை நாட்டிக் காண
ஒற்றுமை யாக நின்றார் ; உயிரையுந் துரும்பென் றெண்ணிப்
பற்றலர் குற்றங் குற்றம் என்றவர் பகர்ந்து, தம்மை
முற்றிலுஞ் சுத்த சங்க முயற்சிக்கே அர்ப்ப ணித்தார்.

வெறுக்கிறோம் அடிமை செய்யும் விநோதநா கரிக வாழ்வைப்
பொறுக்கிலோம்;அயலார்வைத்த பொறியிலே சிக்கி நொந்தோம்.
அறுக்கிறோம் பந்தம் என்றே ஆண்மைகொண் டெழுந்திருந்தார்
மறுக்கிலாச் சுத்த சங்க சக்தியை மதித்த வீரர்.

விருந்துடன் அரக்கர் செய்த வினைவிளை யாட்டிற் சிக்கி
மருந்திற்கும் அன்பி லாத மாயக்கள் ளுண்ட மாந்தர்,
அருந்தவ சுத்த சக்தி யடியரைக் கண்ட போதே,
திருந்தினர் கண்வி ழித்துத் தேசமெந் தெய்வ மென்றார்.

பிறர்குறை பிதற்று வாருந் தங்குறை பெரிதுங் கண்டு,
நிறைவுறத் தியான யோக நிம்மதி பெற முயன்றார் ;
குறியுடன் நாவுந் தொந்திக் குரம்பையும் வளர்ப்ப தேதம்
அறமென நினைத்த பேரும் ஆத்தும வுணர்ச்சி பெற்றார்.

பித்தராய், அரக்கர் ஆளும் பிள்ளையாய் இருந்த பேரும்,
சித்திமான் முதலோர் செய்த சேவையால் உணர்ச்சி பெற்றுச்
"சுத்தனே போற்றி ! சங்க சுத்தரே போற்றி ! யோக
சித்தியே போற்றி" யென்று தீவிரத் தொண்டு செய்தார்.

தருமத்தை யிழந்து, தீய தானவர்க் கடிமை யானோர்,
அருமையாம் ஏடி ழந்தே அலமருங் கவிஞன் மீண்டும்
ஒரு மலர் வெளியிட் டிந்த, உலகதைப் புகழக் கண்டு
பெருமகிழ் வெய்த தேபோல் பிறந்தநாட் டுரிமை தேர்ந்தார்.

நச்செனும் அடிமை மாய வலையினைப் பிளக்க வேண்டி,
அச்சமற் றெழுந்த வீரர், அடக்கமாய் உபச ரித்தே
மெச்சினர் ; சுத்த சங்க விரதத்தைத் தாமுங் கொண்டார் ;
உச்சமாங் கதிர்கள் ஊற்றும் ஒளியினைத் தடுப்பார் யாரே.

தெய்வநற் கனிபி ழிந்து, தீந்தமி ழமுது கூட்டி,
மொய்மலர்த் தேனைச் சேர்த்து முருகிளம் உருவதாக்கி,
செய்யயா ழிசையுங் கூட்டித் திருவுறப் பொலியு மின்னார்
உய்வருள் சக்தி யென்றே உணர்ந்தனர் புதுமை வீரர்.

பேதையள், அபலை, காமப் பிணிதந்து பிணியைத் தீர்க்கும்
போதை ; ஓர் போக வத்து, புருடரின் அடிமை, யென்றும்
மாதர்கள் மாயை யென்றும் வழங்கிய பிழைக ளின்றி
ஆதியாம் சுத்த சக்தி யன்னையென் றறிந்தா ரம்மா.

அன்னிய மாயத் தாலே, நாட்டினை அசட்டை செய்து,
தன்னலப் போகந் தேடித் தானவர் அடிமை யானார்,
இன்னிய சுத்த சங்கம் இசைத்திடும் பாடல் கேட்டு,
முன்னற நாட்டைக் காக்க முயற்சியின் முன்னின் றாரே! 240

சிலர்புகழ் ஓங்க வேண்டிச் செல்வமும் அழுலுஞ் செய்யப்
பலர்நலம் அழிக்குங் காலம் பயனிலா தொழிய, மாந்தர்
தலைதலைப் பொறுப்பு ணர்ந்து, தருமத்தை நடையிற் காக்க
நிலமெலாம் உரிமை பெற்று நிலவிடத் தொண்டு செய்தார்.

இவ்வகை யோக சித்தி இயம்பிய படியே நாளும்,
செவ்வியர் செய்த சேவை செகமெலாம் புதும லர்ச்சி
ஒவ்விய படிகி ளர்த்தி ஓசையில் லாது வீச,
வெவ்விய தானவர்கள் வியப்புடன் அஞ்சி னாரே. 248

## 13. தூமகேது திகைத்த படலம்

வந்தது மோச மென்று மறுக்கமுற் றரக்க ரும்
சிந்தனை நடுந டுங்கி ; சினப்புய லெழுந்து மீறித்
தந்திர ஒற்றர் தாதர் சரியெனத் தலையை ஆட்டும்
மந்திரி மார்கள் கூட மன்னவை நடத்தி னாரே.

கோபுரந் தாங்கும் பொம்மைக் கொலுவென வீற்றி ருக்கும்
பாபமே உருவன் னார்கள் பாரத தேசத் தாரின்
சாபமே யனைய தாதர், சத்தியத் திருவி லார்கள்
"நீபரம் பொருளே" யென்று நிருதனைப் பாடி னாரே.

அடிமைகள் சுற்றி நின்றே அரகர அரக்க வென்னத்
துடிதரு சினத்தீ பொங்குந் தூமகே துவு மெழுந்தே,
கொடியசெங் கண்ணி னாலே கொற்றவை முழுது நோக்கி,
இடிகுர லெடுத்தான் கார்செய் இயற்கையும் திகைக்க வம்மா!

பொழிதரு மேகஞ் சூழப் புயலதை மின்னல் வாளாற்
கிழிதறப் பூகம் பங்கள் கிளர்ந்துல கத்தை யெல்லாம்
அழிதறக் குமுறி அட்ட காசங்கள் செய்வதே போல்
பழிதரும் தூம கேது படபடத் துரைக்கின் றனே :—

தூமகேது

மாவலி வாழிய ! மன்னர் மன்னவன்
ஏவலைப் புரிந்திடும் இறைவன் யானிங்கே
காவலா யிருந்திரு கண்ணி மையென
ஓவற உழைத்தனன் உறக்க மின்றியே.

ஊழ்வலி பெரிதென ஊனை யிட்டிடும்
பாழ்படு சாதிக்குப் பகுத்த றிவினை
வாழ்வுறத் தூண்டினேன் ; மதமுந் தெய்வமும்
தாழ்வுறச் செய்தனன் சமதை பேசியே.

மறையென மறையவர் மறைத்து மாயஞ்செய்
குறைகளைப் பழம்பெருங் குப்பைக் கொள்கையை
முறையுற மாற்றிட முயற்சி செய்தனன்
சிறையுறக் கடவுளைச் செப்பு மூடரே.

ஓரின மெனில் இவர் ஒன்றி நம்முடன்
போரிடு வாரெனப் பொருந்தும் ஐக்கிய
வேரினிற் கோடரி வைத்து வெட்டியே
பேரினப் பகைவராய்ப் பிரித்த டக்கினேன்.

வாள்வலி பெருத்தவர் வலிமை நோக்கியே,
கோள்வலி பெருத்தநங் கொள்கை மேவியே
நாள்தரும் வேலையை நச்சிப் போர்செயுந்
தோள்வலி, கலப்பையைச் சுமக்கச் செய்தனன்.

அற்புதப் பொய்க்கதை அளக்கும் வீணர்கள்
பற்பல புதுக்கலை பயின்று நம்வழி
நிற்பதே நலமென நினைக்கச் செய்தனன்
தற்பெரு மைகளைத் தகர்த்திந் நாட்டிலே.

ஊகத்தை வளர்த்தனன் ; ஊணர் போற்றிடும்
நாகரி கத்தினை நன்கு நாட்டினேன்.
மோகியின் கொள்கையில் மோகங் கொண்டிட
வேகமாய்ப் பெண்களின் விருப்பை மாற்றினேன்.

சதிபதி கற்பெனச் சாற்று நாட்டிலே
விதி விதி யெனத்துயர் விளைந்த நாட்டிலே
துதிபெறுந் தானவச் சுதந்தரச் சுக
மதியினை ஊக்கினன் மதுவை யூக்கினேன்.

பண்டறம் பரமெனப் பகரு நாட்டிலே,
கண்டது நிசமெனக் கருதச் செய்தனன்.
உண்டொரு தெய்வமென் றுளறு நாட்டிலே
திண்டிறல் மாவலி தெய்வ மென்றனன்.

யானைபோல் வீரர்கள் இருந்த நாட்டினைப்
பூனைபோல் அடங்கிடப் புரிந்து தானவ
சேனையிற் சேர்த்தனன் சிறந்த வீரரை ;
ஏனைய நன்மைகள் எண்ண லாகுமோ ?

தமதென நாட்டினைத் தருக்கி டாமலே
நமதெனக் கண்டவர் நயந்து தாழவே,
இம—முனை வரையிலும் எமது சேனையால்
அமைதியை நாட்டினேன் அடிமை நாட்டிலே.

ஒன்றிய நாட்டினை உருக்கு லைந்துநாம்
வென்றனம் வாளினால் வெருவ ஆளுவோம்.
என்றுமிங் கிறையவர் என்றி ருந்தனம்
இன்றுநம் ஆட்சியை எதிர்த்த தேனிவர் ?

பல்வகைச் சமயத்திற் பட்ட ழிந்தவர்,
கொல்படை காட்டிநங் கொடியை ஆட்டினாற்
சொல்லினைக் கேட்பவர், சுதந்தரம் எனத்
தொல்லைசெய் யாரெனத் தூங்கி நின்றனன்.

படிந்தனர் அடிமைகள் என்னப் பாவித்தேன் ;
இடிந்ததென் எண்ணமும் ; இன்று மீண்டிவர்
"விடிந்தது விழித்தனம் விடுதலை யெனக்"
கடிந்தனர் நம்பெறுங் கட்டுங் காவலும்.

பாரத மாக்கிய பார்த்த சாரதி
தீரரை யூக்கிடத் திரும்புங் கூத்திதோ !
சீரிய துருவனே தேசம் பெற்றிடக்
கோரிய தவசித்தி கொண்டுற் றான்கொலோ ?

அரசரின் கூட்டத்தை அழிக்க வேண்டியே
பரசுறு ராமனே வந்த பண்பிதோ ?
இரணியன் உடலினை இருதுண் டாக்கிய
நரசிங்க தேவன்செய் நாடகம் மிதோ.

தன்மமும் வீரமும் தவத்தின் ஓங்கிய
கன்மமும் கடவுளுங் கருணை யாடலும்
சன்மசா பல்யமுஞ் சாற்றும் பேதையர்
என்மனம் ஏங்கிடற் கெழுந்த செய்கையே.

நன்றியை மறந்தனர் ; நமது நன்மையைக்
கொன்றிடத் துணிந்தனர் கொடுசு தந்தரம்
என்றிடத் துணிந்தனர் ; எனது சோற்றையே
தின்றிரண் டகஞ்செயுந் திருவி லார்களே.

சுத்தனாஞ் சங்கமாம் சுத்த சக்தியாம்,
இத்தினம் உலகெங்கும் எழுந்து வீறிடும்,
அத்தகைக் கும்பலை அடக்க மாவலி
ஒத்தொரு வழியையும் உரைத்து விட்டனன்.

புயலுறு நெருப்பெனப் பொங்கித் தூமனும்
மயிலணை வகித்திவை மன்றிற் கூறியே
செயலெது நலமெனச் செப்பு வீரென்றான்
அயலுறும் அடிமைகள் அணிந்து கூறினார்.

அடிமைத் தாதன்

கடலும் விண்ணுங் கடந்து கருணையால்
உடலும் உள்ளமும் ஓய்வற் றுழைத்துமே
அடல ரியவிந் நாட்டை யடக்கியே
நடல ரியவும் வாட்கொடி நட்டநீர்.

அத்த தியுமை ஆத்திரங் கொண்டெதிர்
சித்தி யிந்திரை மந்திரி யாகிய
சித்தி மான்செயும் செய்கைய லால்இவை
சுத்தனார் செயுந் தொண்டுகள் அல்லவே.

கண்ணை மூடியக் காட்டிலொரு புறம்
எண்ணத் தின்சுழல் இன்றித் தவஞ்செயும்
மண்ணி ழந்தவம் மன்னன் இக் காரியம்
பண்ணு வானெனல் பைத்திய மாகுமே.

ஆண்டி சுத்தன் அரும்பெயர் தன்னையே
பூண்ட சிற்சிலர் புண்ணிய போதமே
யாண்டும் செய்தனர் என்ப தறிகுவோம்—
வேண்டும் சித்தியை வேருடன் வெட்டவே.

சாது சங்கம் சன்மார்க்க மிவற்றினால்,
யாதுந் தீதில்லை என்ப துறுதியே.
வாது செய்திடும் வன்மனச் சித்திமான்
கோது செய்தனன் கோக்களைத் தூண்டியே.

தூமகேது

காரணம் அறிகிலேன் கதிய றிகிலேன்
ஆரண நாட்டினர் அதிர்ந்தெ ழுந்தனர்.
பூரண சுதந்தரம் புகலு கின்றனர்.
பாரணங் கொற்றுமை பகரு கின்றனர்.

தானவர் திருந்திடத் தக்க சூழ்ச்சிகள்
மானவர் வகுப்பராம் ; மனதை வென்றவர்
ஈனமில் லாதினி எங்கும் ஆருயிர்
மேனல முற்றிட வேலை செய்வராம்....

சொப்பிடி வித்தையிற் சொரிந்த பொன்னைப் போல்,
எப்படி யெழுந்தன இந்தக் கொள்கைகள் ?
இப்படி யாரெங்கும் இயம்பு கின்றனர் ?
செப்புக ஒற்றரே நன்கு சிந்தித்தே...

ஒற்றர்

கலிநகர் காக்கும் புலியே, தூம
கேதுவே வணக்கம், கீர்த்தியிற் சிறந்த
மாவலிக் கேற்ற மாணவ வணக்கம்.
உன்கடுங் காவல் ஓங்கிய நாட்டில்
ஈராண் டாகவே இனந்தெரி யாமல்,
பொதுசனத் துடனே பொதுசன மாக,
உழைப்பா ருடனே உழைப்பா ராக
பண்டித ருடனே பண்டித ராகப்
பாமர ருடனே பாமர ராகவே
திறமை கொண்டவர் தினமுங் கலந்து
பொதுக்கடன் செய்வது போலே காட்டி,
மக்களை எழுப்பி மனதைத் திறந்து,
நிமிர்ந்து நடக்க நிகழ்த்தினர் எங்குமே.
யாரவர் என்பதை இன்னுங் காணிலோம்.
சித்திமா னில்லை ; சுத்த சங்கத்
துறவிக ளில்லை ; சுதந்தர நாதம்
எப்படிப் பரவிய தென்பதை யறியோம்....
காற்றும் காலைக் கதிரும் போலே
புதிய சக்தி பூத்துப் பரவி
உலகெலாம் உணர உள்விழித் ததுவே....
தானவர் செயலெலாம் தடைப்படு கின்றன.
"எல்லா நாடும் எல்லா வீடும்,
எல்லா வனமும், எல்லா வாக்கும்
ஆன்ம ஒருமை, ஆன்ம சுதந்தரம்
உலகக் கோயில், கலகமில் லாத
சமத்துவ சாதனம், சாந்த நிலையம்,
சுதந்தர சக்தி சுத்த நிலையம்"
என்னும் பல்லவி இசைத்திடக் கேட்டோம்.
இந்த நாட்டை இனிது புரந்தே
துறந்த துறவி சுத்தனு வானே...

உலக வாழ்வை உதறிய ஞானி
இமாலய மீதே யிருக்கிறுன் உறுதி.
அவனிடம் பயிலும் அருந்தவ யோகிகள்,
உலக மெங்கும் உலாவுகின் றுரே.
ஆயினும் அவரிடம் அரசியற் பேச்சிலே.
ஞானமும் யோகமும் நவிலுகின் றுர்கள்.
ஐந்து மாதமாய் ஐயநாங் கண்டது
மாவலி மன்னன் மகளாம் சக்தி
சுத்த சமத்துவ சுதந்தர வாழ்வை
வாழ்ந்து காட்டி வழுந்துவ தொன்றே.
மேட்டிமை யான மேடைப் பேச்சிலே.
இரகசிய சங்கமும் இருப்பதை யறியோம்.
உள்ளமும் உள்ளமும் உறுவது போலே,
மனமும் மனமும் வைத்தது போலே,
யாங்கும் அவள்கருத் தேகிடக் கண்டோம்.
கருத்திற் கிசைந்த காரிய மெங்கும்
இயல்பாய்த் தொண்டர் இயற்றிடக் கண்டோம்.
குற்றங் காணுக் குணவான் கூட்டமே
கிராமந் தோறும் கிளர்ந்திடக் கண்டோம்.
அரசகப் பேச்சே அறிந்தோ மில்லே.
மூச்சைப் போலே மூலே முடுக்கெலாம்
பேச்சே யின்றிப் பெரியகா ரியங்கள்
நடப்பதை யறிந்தோம், நடத்துந் தலேவரை
யாரெங் கெவரெனப் பேரு ரறியோம்.
சாம்பற் பூத்த தணலென மாந்தர்
நெஞ்சுக் குள்ளே நெருப்பு வளர்ப்பதை
உணர்கிறேம் ; ஆயினும் உட்புகுந் தறியோம்.
பம்பரம் ஆடும் பரபரப் பறிந்தோம் ;
சாட்டை கட்டிய சக்தியைக் காணேம்....
மாவலி மகளின் மனதறி யோமே !

தூமகேது

மாவலி பெற்ற மகளேயான் அறிவேன்,
அவளேத் தந்தை அடக்கிட வேண்டினுன்.
சக்தி யிங்கே சுத்தயோ கியிடம்
ஏதோ கற்றுள். இவ்வுல கெல்லாம்
ஆன்ம வொருமையில் அன்புடன் வாழவே
பேசுவ தாகப் பெரிதும் அறிந்தேன்.
ஆயினும் நாமும் அறியா வண்ணம்

தொண்டரைத் தூண்டிச் சுதந்தர முயற்சி
செய்கின் றளோ ? செய்யவும் வல்லாள்.
ஆம், ஆம் அவளே, அவளே காரணம்...
சுந்தரி மகளிவள், சுதந்தரப் பிச்சி,
புண்ணிய பூமியின் கண்ணியத் தோழி,
ஆதலால் இவளை அடக்கிட வேண்டும்...
தானவக் கொடியைத் தாக்கிப் பேசினல்,
புண்ணிய பூமியைப் புகழ்ந்து பேசினல்,
அரக்கர் தியரென் றுரக்கப் பேசினல்,
ஊன்மது போகம் உண்பதைக் கெடுத்தால்,
தெய்வம் பெரிதெனத் திருவாய் மலர்ந்தால்,
நமது கலிநகர் நலியப் பேசினல்,
தூம கேது துட்டனென் றலோ,
ஒற்றர் அவளைப் பற்றிச் சென்று
தானவ வீரர் தம்மிடந் தந்து,
கட்டிக் கொணர்மின் கடுஞ்சிறை யிடவே !
மகளை ஒறுக்க மாவலி யாணை
வந்ததன் பிறகே வகுத்தேன் இம்முறை.
சக்தியைத் தவிரச் சனங்களில் யாரும்
தானவர் ஆட்சியைத் தாக்கிடின் உடனே
வாய்ப்பூட் டிடுமின் ; வன்சிறை யடைமின்.
கையை ஓங்கினல் கையை வெட்டுமின்.
துப்பாக்கி காட்டினல் சுட்டுத் தள்ளுமின்.
நமது வாணிகம், நமது கொள்கை,
நமதுநா கரிகம், நமது நியதி
பிசகெனப் பேசும் வசவினைத் தாங்கோம்,
வாட்கொடிக் கெதிர்செயும் வஞ்சரை உடனே
ஒழிப்பதே கடனும்....ஒற்றர் எழுமினே !
இரத்தத் தாலே இரத்தவாட் கொடியைக்
காப்போம் உலகக் காவலர் யாமே !
மானிடப் பூச்சிகள் தானவர்க் கிணையோ ?
வாழ்க மாவலி வாழ்கநம் வாளே !''
என்று தூமன் எழுந்து நின்றே
மன்றுடன் ஒருவாய் மதுவைக் குடித்துப்
பாண்டு முழங்கப் பரத்தையர் ஆட
அரக்கர் வாளுடன் உறக்கப் பாடி
மாவலி—கேது வாழிய வென்ன,
மோகிமோ கத்தால் முகம்வெறி காட்ட
வேகமாய்ச் சென்றன் போகமா ளிகையே.

# 14. மோகி யிறுதிப் படலம்

புயலைப் போலப் பொழிந்து கொடுமொழி
செயலைத் தூண்டித் திரும்பிய தூமனும்,
மயல்கொள் மோகி மருங்கினிற்கள் ளுண்டதுந்
துயிலிற் சொக்கிச் சுயேச்சை யிழந்தனன்.

சஞ்ச லத்திற் சலிப்பறு மோகியும்
நஞ்ச முகை நகையுடன் காட்டியே,
கெஞ்சு வாளெனக் கேள்வன் கரத்தினைக்
கொஞ்சிக் காம வெறிகொடுத் தோதுவாள்...

மோகி

நல்ல கேது, நயமுள்ள கேதுவே,
செல்லக் கேதுவென் சிந்தனை யின்புற
வல்ல கேதுவென் மன்மதக் கேதுவென்
சொல்லைக் கேட்டுச் சுகம்பெறும் கேதுவே....

தூமகேது

அன்பு மோகினி ஆசைப் பசுங்கிளி,
என்பு ருகி இளகிடக் காதல்கொள்
இன்ப மோகினி இட்டது சட்டமே—
நம்பு மோகி நவில்க நயமொழி.

மோகி

புவியில் ஊணர் புகழினிச் சாய்ந்திடுங்
கவலை யுற்றனை ; காரணங் காணிலை ;
அவலை விட்டுமி அள்ளிப் புசித்தனை
திவலை யென்சொலைச் செய்து பயனுறாய்.

தூமகேது

தனையொவ் வாத்திருத் தானவ சோதரீ,
உனைத் தவிர உயிரெனக் கில்லையே.
எனை யெதிர்க்கும் இடர்களை எற்றிட
மனம் வகித்தனை வந்தனம், வந்தனம்....

சொல்லு சொல்லெனக் கொஞ்சிடத் தூமனும்
"கொல்லு கொல்லுடன் கோபக் கலியனை
அல்ல லெல்லாம் அவன்செயும் சூழ்ச்சியே
தொல்லை யில்லை தொலை, தொலை !" என்றனள்.

மோகி சொன்னதும் மோக வெறியனும்
வேக மாக விரைந்து மறைந்ததுந்
தாக மான தனி நிசி தன்னிலோர்
சோக நாடகந் துள்ளி யெழுந்ததால்...

உள்ளத் தாழிட் டுறங்கிட மோகினி
கள்ளுண் காமக் கனல்வெறிக் கண்களை,
மெள்ள மூடினள் ; வேற்றுருக் கொண்டொரு
கள்ளன் வந்தவள் கட்டிலைத் தொட்டனன்.

ஆசை நாயக வாவென் றணைந்திட
வேசை மோகி விழியைத் திறந்துகை
கூசி டாது கொடுத்தனள் அவ்வையின்
வீசு வாள் முலை மார்பினை விண்டதால்...

ஐயை யோவென் றலறிய மோகியின்
நாவையும் அறுத்து " நலங்கெடு வேசையே
கட்டிய கணவனைக் கைவிட் டின்னொரு
மட்டியைக் கூடிய பட்டியே பதரே !
போரை வளர்க்கும் பொறுமைப் பூதமே,
நல்லவர்க் கெல்லாம் அல்லல் விளைக்கும்
அகந்தைப் பேயே, ஆணவ நெருப்பே !
கட்டுக் கடங்காக் காமரா க்ஷஸியே,
அடுத்தவர் தம்மைக் கெடுத்திடும் பீடையே,
உள்ளதைச் சொன்னால் உடம்பெரி கொண்டு
கொள்ளிப் பேய்போற் கொலையைத் தூண்டும்,
கொடுமனப் புலியே கெடுமனப் பாம்பே,
நேர்மை கெட்ட நீலிநீ யிருக்கும்
வீடும் வேசை விடுதியா வதுவே,
பள்ளியும் வெறிதருங் கள்ளுக் கடையே,
புசிக்கு மிடமும் புலாற்கடை நாற்றமே,
வசிக்கு மிடமெலாம் வஞ்சச் சூழ்ச்சியே,
கலியைக் கெடுத்த கசட்டு மதியே
தூமனைக் கூடிய காமப்பி சாசே,
அழிவைத் தூண்டும் அழகுப் பிணமே,
எனக்கு நிகரிலை என்றுவாய் நீளும்,
தனச் செருக்கியே தானவர் பதரே,
மோசஞ் செய்த மோகினிப் பேயே,
உனக்குத் தண்டனை உயிர்க்கொலை......சாசா,
சாகுமுன் என்னைச் சற்றே பாரடீ...
பொய்ச்சாக் கடையிற் புரளும் புழுவே
புண்ணிய பூமியிற் புகுந்த பாபமே !"

கலியா ஐயோ கொலேபா தகனே..
ஊணரே வாரீர்....உடனே ஐயோ...
கொல்லுமின் கொல்லுமின் கொல்லுமின் என்று
மோகி சாய்ந்து முய்ந்தனள் அம்மா !...

* * *

இரத்தச் சிரிப்புடன் இகல்பெறு கலியும்
மின்னென மறைந்தான்...மிடுக்குடன் கேது
கடுஞ்சிறை தனிலே கலியைக் காணேன்...
அந்தோ வென்றே அலறித் திரும்பி
இரத்தப் பெருக்கில் இறந்து கிடந்த
மோகியைக் கண்டு சோகமே லிட்டு,
யார்செய் கொலேயிது ? பேரறி யேனே..
அந்தோ....கவலே ! அந்தோ துயரம் !
அந்தோ மோகினி ! அழகுத் திருவே...
என்று சோர்ந்துபின் எழுந்து நன்றே,
இனிநான் சக்தியை இனிதே கூடி
ஊணர் மரபை உயர்த்துவேன் எனவே
பெருமை கூறிப் பிதற்றிடும் போதே
ஐயோ கலகம்...ஐயோ செத்தோம்...
என்றா ரெங்கும் எழுந்தன குரலே !
தூம கேது துடிதுடித் தோடினன்...
பிடிபிடி யென்றே பேரிடி முழக்குடன்
அவனேப் பிடித்ததோர் ஆண்மைக் கையே...
"தானவ சேனே தகர்மின் பகைவரை...
போரோ போரெ"னப் புலிபோல் உருமிய
தூமனே வீரர் சூழ்ந்துபின் கட்டிக்
கலியை அடைத்த கடுஞ்சிறை தனிலே
காவல் வைத்துக் கைதட் டினரே !....
தானவர் ஆயிரர் தங்களால் இயன்ற
திசையெலாஞ் சுட்டுத் தசைமலே குவித்தும்
பயனிலே ; தாமே பயிற்றிய படையெலாம்,
தூம கேது தொகுத்த தாதரும்
எதிர்த்து நின்றனர் ; என்னே வியப்பு ...
கொல்கொல் லென்று கூவினர் அரக்கர்.
வெல்வெல் லென்றே வீறிய தூரே !
அந்தச் சமயம் அரண்மனேக் குள்ளே
காவலே வீழ்த்திக் கலியன் புகுந்து,
சபையைக் கூட்டிச் சாற்றிய தென்னே !

# 15. கலி பணிந்த படலம்

போனதுயர் போனதினிப் புதுயுகத்தைக் கண்டு விட்டோம்.
ஈனவிருள் ஒழிந்ததடா இனியெம்மை இடர்ப்ப டுத்துந்
தானவருக் கிடமில்லை, தருமமெனும் கதிர் வீசி
ஞானரவி யெழுந்ததென்றே ஞாலமக்கள் ஓலமிட்டார்.

ஆவியினும் அரியநலம் ஆகியதன் னுரிமையினைப்
பாவமெனும் படுசிறையிற் பந்தனைசெய் கலியவனும்
சீவனிலே சுத்தவொளி புகுந்திடவே திருந்தி வந்தான் ;
ஏவரெமை யினியடிமை யென்றடக்க வல்லவரே.

சிக்கியநற் பைங்கிளியைச் சிறகரிந்து கூண்டடைத்தே
அக்கவெனப் பயிற்றிவைக்கும் ஆசையுள்ள மாந்தரைப்போல்,
மிக்கவுயர் கலையோங்கி, மேன்மைபெற்ற நாட்டினிலே
புக்கடிமைக் கல்வியெமைப் பொய்யடிமை யாக்கியதே.

மோகவலைப் பட்டிருந்த மூடமனக் கலிகொணர,
தேகபல மிகுமரக்கர், தீமைவடி வானவர்கள்,
சோகமுறச் சுதந்தரத்தைச் சொல்லிறந்தே பரிதவிக்கும்
மூகையெனச் செய்ததெல்லாம் மூய்ந்ததிடர் ஒய்ந்ததுவே !

வாயிருந்தும் பேசாது, வலிவிருந்தும் கைகட்டித்
தாயிருந்தும் பசிதவிக்கும் தனயரெனத் தாழ்ந்துவிட்டோம்
பேயிருந்த சுடுகாடாய்ப் பிறர்கொள்ளை யடித்திடவே
தேயமக்கள் பார்த்திருந்த தீநாட்கள் ஒழிந்தனவே....

சத்தியசுத் தர்தருமந் தாங்கியபுண் ணியபூமி,
சித்தர்களுஞ், சிங்கம்போல் செருவெல்லும் வீரர்களும்,
ஒத்துவளர் உயர்பூமி, ஊணர்களின் ஆணவப்பேய்
கத்துதலுக் கஞ்சுகின்ற காலமலை யேறியதே.

சிங்கமிருந் தாண்டுவந்த சித்திவளர் நாட்டினிலே,
பங்கயத்தி லேயமர்ந்த பாம்பெனவே, தானவத்தின்
வெங்கொடுங்கோல் வீற்றிருக்க விடுவோமோ...விடுதலையோ ?..
எங்கள்வள நாடெமதே யாமதற்கு மன்னரென்போம்.

ஆத்துமஞா னமும்,அன்பும், அருட்பணியும், அருளரசுந்
தோத்திரமும், சுதந்தரமுந் துலங்குகின்ற வளநாட்டில்,
ஆத்திரமும் அசுரர்களின் ஆணவமும், கொடுங்கோலும்,
நாத்திகமும், வந்தொழிந்தே நாடுநம தானதுவே.

சேர்ந்தவரைப் பிரித்திடுவார் ; தேசவுணர் வழித்திடுவார் ;
நேர்ந்தவரை அடிமைசெய்வார் , நேர்மையில்லா ஒற்றர்களால்
தேர்ந்த நலத் தொண்டர்களைத் தும்மிடினுஞ் சிறையிடுவார் ;
சோர்ந்தவரைத் தொக்குகின்ற தூமாசுரர் வீழ்ந்தனரே.

சாற்றையெல்லாம் பிழிந்துண்டு சக்கையினைத் தந்துந் தம்மைப்
போற்றிமிகத் தற்புகழும் புன்மதியர், உள்ளமில்லார்,
ஆற்றலெலாந் தீமையலால், அணுவேனு நன்மையிலார்—
காற்றினிலே தூசியெனக் காலவெள்ளத் தேமறைந்தார்.

தாமுலகைப் பிடித்தாட்டும் தறுகண்மை மிகவுடையார்,
நாமுவக்கும் வழியடைப்பார், நரிபுலிஒ நாய்மனத்தார்,
பாமரரை மயக்கிடுவார், பண்டிதரை அடக்கிடுவார்
பூமியிலே இவர்கொடுமை பூண்டோடே பொன்றியதே...

வீடுநலம் பெருகிடவே, வீதிநலம் பெருகிடவே,
நாடுநலம் பெருகிடவே ஞாலநலம் பெருகிடவே
தேடுநலம் கைக்குவந்து சேர்ந்ததெனத் தீரர்களா
பாடுகமே சுத்தசக்தி ஓம்எனவே பாடுகமே !

பழம்பெரும் பான்மை கண்டு புதுப்பெரும் பண்பு ணர்ந்து,
செழுந்திருப் புனித னன்பர் செயசெய சுத்த வென்றே,
எழுந்தனர் இருபா லாரும் கதிர்க்கொடி ஏந்தி நாட்டில்
அழுந்திருள் அகல, வெற்றி யருளொளி துலங்க மாதோ !

மலருடன் மணமும் போல, வாழ்வுடன் யோகம் போல,
நலமுறக் கற்ற நாட்டார் நயவஞ்சப் பிரிவி னைகள்
இலையெனச் செய்தார், அச்சம் இரவுடன் அடிமை நோயும்
வலைவிரி வஞ்சச் சூதும் வாய்ப்பற மறையச் செய்தார்.

கோழைக ளில்லை நாட்டிற் கோட்சொலும் புல்ல ரில்லை ;
ஏழைக ளில்லை ; கல்வி தொழிலறி யாதா ரில்லை ;
பீழைக ளில்லை தெய்வப் பெருமையை விளக்கி வாழும்
தோழர்க ளாக மாந்தர் சுதந்தர முழக்கஞ் செய்தார்.

ஒருபெருங் கடவுள் ஆடும், ஒருபுவி யால யத்தில்
ஒருகுல ஆன்ம நேயர் ஒருமன மொன்றி வாழ்வோம்,
ஒருபொது மொழியுந் தந்தந் தாய்மொழி யுடனே கற்போம்,
ஒருதிரு வருளின் வாழ்வோம் என்றனர் உண்மை நல்லார்.

சத்தியக் கடவுளுக்குச் சாதியு மதமு மில்லை ;
எத்தகை யாரும் உள்ளே எண்ணிடின் அடைவா ரென்னுந்
தத்துவம் பரவித் தூய சமத்துவம் பரவி, மாந்தர்
ஒத்துழைத் துரிமை காக்கும் உறுதியைப் பூண்டெ ழுந்தார்.

மதச்செருக் கின்றித் தேச மமதையு மின்றிச் செல்வ
முதற்செருக் கின்றித் தத்தம் மொழிச்செருக் கின்றி, எல்லாம்
பொதுச்சிறப் புணர்ச்சி கொண்டு புவிநலம் புரிந்து விர
சுதந்தர ராக வாழத் துணிந்தநல் லுறுதி கொண்டார்.

சுத்தமே கடவுள், ஆத்ம சுத்தமே சுகசன் மார்க்கம்,
சுத்தமே சக்தி, சுத்த சங்கமே தொகுத்த மாந்தர்,
சுத்தமே கொள்கை, சுத்த சேவையே சுருதி—வாழ்க்கை ;
சுத்த ஓம் சக்தி யென்னும் மந்திரஞ் சொல்லு வோமே....

எந்தமா மதமு மின்றி இயற்கையோ டிணைந்து வாழ்வோம்,
சொந்தமென் றென்று மில்லோம் ; சுதந்தரப் பொதுவில் வாழ்வோம்,
பந்தமொன் றில்லோம் அன்பும் பணியுடன் அறிவும் போற்றி
இந்தமா நிலத்தில் எல்லாம் இன்புற வாழு வோமே.

தனிச்செருக் கின்றி, ஏறுந் தனச்செருக் கின்றி, பேத
மனச்செருக் கின்றி, நாடு மதநிறச் செருக்கு மின்றி,
இனச்செருக் கின்றி, இங்கே இறைவனின் மக்க ளெல்லாம்
எனச்சம ரசத்தி லொன்றி ஏகமாய் வாழு வோமே.

உலகெலாம் விரிநா டாகும் ; உள்ளெலாம் கோவி லாகும்,
பலமத வாத மற்ற பண்புள சுத்த சக்தி
நிலவிடும் தியான கான நிட்டையே சமய மாகும் ;
கலகமில் லாது வாழக் கற்றனம் கருணை யாலே.

நாட்டினை நாடு பற்றி நலிப்பதை நலிக்க நின்றேம்.
சேட்டைசெய் அசுர மாயத் தீவினை தீர நின்றேம்,
வேட்டைகொள் அநீதி தன்னை, வெருவுறும் அடிமைக்கோட்டைப்
பூட்டினை யுடைத்து வாய்மைச் சுதந்தரம் பொலிய வாழ்வோம்.

உண்மையை உண்மையாக உயர்த்திட உழைப்போம் ; பூவில்
பெண்மையின் பெருமை காப்போம் ; ஆண்மையை வளர்த்து நெஞ்சத்
திண்மைகொண் டெதிர்த்து நிற்குந் தீமையைத் தகர்ப்போம் ; என்றும்
வண்மையே புரியச் செல்வ வளமையைப் பெருக்கு வோமே!

புன்மையை வெறுப்போம் ; கோள்பொய் பொறுமையை மிக வெறுப்போம்,
நன்மையை உகப்போம் ; தீமை நலியவே தொண்டு செய்வோம்;
பன்மையில்ஒருமைகாண்போம்;பாரினிற் பொதுமைகாண்போம் ;
தன்மையில் உலகங் காண்போம்—சத்திய சுத்த நேயர்.

எமனெதிர் வந்த போதும் இறைவனை மறக்க மாட்டோம் ;
நமதுநா மென்னும் பித்தர் நம்மையே மாற்றப் பாரோம்.
சமரஸப் பான்மை யோடு தருமமே கரும மாகி,
அமரசுத் தான்ம நேயர் அமைதியாய் வாழு வோமே.

வாழிய சுத்த மூர்த்தி, வாழிய சுத்த தர்மம்
வாழிய சுத்த சங்கம் வளர்பிறை போல நாளும் !
வாழிய யோகபோக வளம்பெறுந் தெய்வ ஜாதி ;
வாழிய உலக மெல்லாம் வானருள் அரசு வாழ்க !

இவ்வகை நாட்டில் எழுந்திரு மக்கள்,
ஏறுபோற் பீடுடை நடையார்,
உய்வகை கண்ட உத்தமன் கொள்கை
உலகெலாம் அறிந்திட ஓதிச்
செய்வகை யறிந்து செய்வன செய்து,
தேசத்தின் சேமத்தை நினைந்து,
தெய்வத்தைப் போற்றிக் கலிநக ருள்ளே
திடுதிடு வெனப்புகுந் தாரே....

கதிரினிற் குளித்துக் கங்கையில் ஆடிக்
கங்கணங் கட்டியின் றெழுந்தே,
புதியச காப்தம் தோற்றிட வேண்டிப்
புண்ணியப் புனிதசங் கத்தார் 120
அதிசயமான தவவொளி பரப்பி,
அகங்களைக் காந்தம்போற் கவர்ந்தே
துதியுடன் புகுந்தார் சுடர்மணிக் கணம்போல்
சுதந்தர பேரிகை முழங்க...

வாதெலாம் வம்பு வழக்கெலாம், சும்மா
வாயடைத் தெதிர்வந்து வணங்கத்
தீதெலாம் அஞ்சித் தினகரன் முன்னே
திரள்பனித் துளியென மறையத்
தாதரு மாறித் தம்மவ ராகத்
தரங்கெட்ட ஒற்றருந் திருந்தப்
பாதக வூணர் படைகளுந் திகைக்கப்
பரமன்பேர் பாடினர் புனிதர்.

ஊரெலாந் திரளாய் ஓம்சுத்த சக்தி
ஓமென நல்வர வுரைக்கப்
பாரெலாம் அறிந்த சுத்தசன் மார்க்கப்
பண்பினர் வருகநன் றெனவே,

நேரலா தாரும் நேர்மைகொண் டுரைக்க
நிளுயர் கதிர்க்கொடி நிலவத்
தாரெலாஞ் சூட்டித் தமர்வர வேற்கத்
தமிழ்க்கடல் முழங்கிட வந்தார்....

தீதினை விலக்கித் திருவுறு நன்மை
தினந்தினஞ் செய்திட லொன்றே
காதலாய்க் கொண்ட கண்ணனார் வருக !
கடமைக்குக் கருத்தினை யளித்துச்
சாதலுந் துணிந்து சத்தியத் தொண்டைச்
சரியையும் யோகமும் எனவே
நீதியாய்ச் செய்த நின்மலர் வருக
நித்தியா னந்தர்கள் வருக !

எத்தனை மொழியார், எத்தனை மதத்தார்
எத்தனை நாட்டினர் உண்டோ,
அத்தனை பேரும் அகம்புற மொன்றி
அன்புடன் வருகவென் றார்த்தார்—
உத்தமத் தமிழர் கன்னடர் தெலுங்கர்
உரமிகு கேரளர் வங்கர்
மெத்த மராடர் கூர்ச்சரர் சிந்தர்
விதவிதப் பண்களை யிசைத்தார்.

தூக்கமும் அடிமைத் தொண்டுமே யாகத்
துருப்பிடித் திருந்தவர் தம்மை
ஊக்கமாய்த் தேசப் பணிநலம் புரிந்தே
உயிர்த்திட நடத்திய உரவோர்,
ஆக்கவே லையிலே அற்புத வெற்றி
யடைந்தவர், அரக்கரை யெங்குந்
தீக்கதிர் முன்னே யிருளெனச் செய்த
திவ்விய யோகிகள் வாழ்க...

கொடியவெம் பாசம் வீசியே நம்மைக்
குலங்கெடக் கொன்றிடும் அரக்கர்,
அடிமைவி லங்கை ஆத்மசக் தியினால்
அறுத்தெறிந் தருளிய முனிவர்,
மிடிபிணி மடமை யிருளினைப் போக்கி
மேன்மையாம் அறிவுடன் தொழிலும்,
ஒடிமனம் உறுதி யடைந்திட யோக
சக்தியும் உதவியோர் வாழ்க.

புண்ணிய பூமி விழித்தெழச் செய்தார்,
பூமியிற் கிழக்கிலும் மேற்கும்,
கண்ணிய முள்ள நாடெலாஞ் சென்றே
கடவுளன் பறிவினை விதைத்தார்.
பண்ணிய தவத்தாற் பரிதியின் கதிர்போற்
பாவன சக்தியைப் பரப்பி,
எண்ணிய தியற்றும் எழிலுடைப் பெரியார்
எழுகென ஏற்றதந் நகரே....

சுத்தனின் ஆணை தாங்கிய புலவோன்
சுதந்தர வீரரின் சிங்கம்
சித்தியின் அமைச்சன் சித்திமான் சேனை
செறிதரக் கலிநகர் புகுந்தே,
சத்துரு யாரும் எதிர்த்திடா தெல்லாம்
சாந்தமா யிருந்திடக் கண்டே
மெத்தவு மகிழ்ந்து, வினவுமுன் கலியன்
வேகமாய் விரைந்தெதிர் கொண்டான்.

நல்வர வாகுக ! சித்தி நாயகன்,
வெல்கநங் கதிர்க்கொடி வீறுற் றேங்குக,
புல்லிய லரக்கரின் பொருமை வீழுக,
செல்வமார் புண்ணிய தேசம் வாழ்கவே !

சித்திமான் வருகெனத் திருந்து நங்கலி
பத்திமா னாகிய பணிவொ டேற்றதும்,
புத்திமான் உலகிது புனித னாகிய
சக்திமான் செயலெனச் சாற்றி நின்றதால்.

கொதிப்புடன் போர்களைக் கொடுத்த தீயவன்,
சதிப்படை யடங்கிடத் தரும தூதனாய்
எதிர்ப்பறப் பணிந்ததும், இளகு நெஞ்சினால்
மதிப்புற வேற்றதும் வரதன் செய்கையே.

கிலிபிடித் துலகமே கிடுகி டுத்திட
நலிவுறு சமர்செயு நாச நாயகன்
கலியுளங் கருணையுங் கண்ட காரியம்
புலிபசு வாகிய புதுமை போன்றதே.

எம்புவி, எம்மதம், எமது நாத்திகம்,
எம்புகழ், எம்பெருஞ் செல்வம், என்றெலாம்
வம்புரை யகந்தையு மாறி, ஈசனை
நம்புத லானது நாதன் சக்தியால்.

அரக்கரின் மாயத்தை யறிந்த நங்கலி,
செருக்கினை நீத்தருட் செம்மல் சுத்தனின்
திருக்கரு ணைதனைச் சிந்தித் தன்பினால்
உருக்கிய நெஞ்சுடன் உரைபு கானரோ !

கலியன்

சுத்தனின் பதமலர் துதித்து நாயினேன்
சித்தமுந் திருந்தினன், செய்கை சீருற்றேன் ;
அத்தகு குருபணிக் காசை கொண்டினும்
இத்தகு மானிடம் ஏந்தி நிற்கின்றேன்.

கேளுங்கள் சித்திமான், கேள்வர், நற்சனம்,
கேளுங்கள் என்மதி கெட்டு மீண்டதைக்
கேளுங்கள் என்னுளங் கிளர்ந்த மாற்றத்தை—
வாளுடன் வாழ்ந்தவன் வணங்கக் கற்றனன்.

மதர்த்த மோகி மதியை மயக்கிடப்
பதைத்திப் பாரைப் பறித்திசை யாளவே
சிதைத்த னன்பெருஞ் சித்தி மரபினை
வதைத்த னன்மர போங்கிய வாய்மையை.

இதந்தரும் என தண்ணல் இயம்பிய
பதந்த ரும்உரை யைப்பதர் என்றனர்,
கதந்தரும் அரக்கர் கையின் பாவையாய்ச்
சுதந்தரம் இழந்தேன் சுகங் கெட்டனன்.

புள்ளி மானைப் புலியு நரிகளுங்
கள்ளருந் துயர் செய்திடக் காட்டினேன் ;
கள்ள ரக்க ருடன்களித் தாடினேன் ;
உள்ளம் வேகுமச் செய்கையை உள்ளினால்.

சொந்த நாட்டிற் சுதந்தர மூச்சினை
முந்த விக்க முரடன் முயன்றனன் ;
பந்த னைசெய் பகைவரை நத்தினேன்—
அந்தப் பாவமென் ஆணவப் பாவமே !

கூழைக் கும்பிடு போட்டிடுங் குள்ளரைக்
கோழைத் தாதரைக் குண்டுணிச் சுப்பரை
பாழ ரக்கரைப் பற்றியிப் பாரினைச்
சூழும் வென்று சுகம்பெற நாடினேன்.

சடத்தைக் கொண்டு சகத்தினை யாண்டிட
மடத்து ணிவுடன் மாசறு தீரரைச்
சுடத்து ணிந்திரு தோல்வி யடைந்துமே
கெடத்து ணிந்தனன் கெட்டவர் கேண்மையால்.

தன்னறம் விடுத்தனன் ; சத்தி யன்சொலும்
மன்னறம் விடுத்தனன் ; மரபின் வேருக்கே
இன்னல்செய் கோடரி யெனமு ளைத்தனன்,
என்னினும் பாதகர் இருக்க வல்லரோ ?

அண்ணலை யெண்ணிலன் ; அறத்தை யெண்ணிலேன்.
புண்ணிய பூமியின் புகழை யெண்ணிலேன் ;
கண்ணிலன் உலகுயிர் கண்க லங்கவே
பண்ணினன் பலதரம் பாபப் போர்வினை.

தீரரும் மனசினைச் செயித்த வீரரும்,
ஆருயிர் போலவே அருளிற் காத்திடும்
பாரத தருமத்தின் பண்ப றிந்திலேன்,
ஊரினை ஊணருக் குணவென் றுக்கினேன்.

உத்தமக் குணமெலாம் ஒருங்கு சேர்ந்தவன்,
இத்திரு வுலகெலாம் இறைமை தாங்குவோன்,
சுத்தனென் அண்ணலின் சுடர்வி ளக்கினை,
எத்தனை அகந்தைகொண் டின்னல் செய்தனன் !

கூற்றென நாட்டினைக் குலைக்கப் போர்செய்து,
தோற்றனன் இனுமினுந் தொடர்ந்து மோகியே
சாற்றிய சூழ்ச்சியாற் சதிசெய் தானவர்
போற்றிய சூழ்ச்சியிற் புகுந்து கெட்டனன்.

பைகட்டிக் குவித்திடப் பாரை யேய்த்திடப்
பொய்கட்டி வாணிகம் புரிந்து, மக்களைக்
கைகட்டி வாய்கட்டிக் கடுமை யாகவே
மெய்கட்டி யடிமைசெய் வீண ராக்கினேன்.

தாயினைச் சிறையிடத் தனயர் கையுடன்
வாயினை யடக்கிட, மதிகெ டுத்திட,
நாயடி மையென நடக்கச் சட்டங்கள்—
பேயென விதித்தனன் பெரிய நாட்டிலே.

தூயரும் அழிந்திடச் சூது கட்புலால்
வாய்நகை வேசியின் வலைவி ரித்தனன் ;
நோயினுங் கொடியவர் நூறு நூறுபேர்
ஆயபுல் லரக்கரை அழைத்து வந்தனன்.

தந்திர நாத்திகத் தான வர்படை
தந்திட நானிந்தத் தரும நாட்டிற்கே
பந்தனைத் துயர்செய்த பாபம் யாவையும்
வந்தெனைச் சூழ்ந்தன மாய மேகம்போல்.

வஞ்சனேன் பாவங்கள் வரம்பி லாதன
நஞ்சனேன் கொடுமையை நாளும் எண்ணியே
அஞ்சினேன் சுத்தனின் அருட்க ருணையால்
நெஞ்சகந் தெளிந்துமை நிமிர்ந்து காண்கின்றேன்.

உறங்கிய உலகினை யோக சித்தியால்
அறந்தர எழுப்பிய ஐயன் என்னையும்,
மறந்திலன் மாயையின் மறைப்பு நீக்கியே
திறங்கொள எழுப்பினன் சிறையி ருட்டிலே.

எவரையென் னுயிர்த்துணை யெனம யங்கினேன்,
அவரெனைச் சிறையினில் அடைத்த பின்னரே,
துவரிதழ் மோகியைத் துறந்த பின்னரே,
புவியியல் அறிந்தனன் புழுத்த நாயனேன்.

சிறையினிற் பிழைகளைச் சிந்தித் தையன்பாற்
குறைகளை முறையிட்டுக் கொண்டி ருந்தநாள்,
இறைவனென் இதயத்தில் இனித் திருந்தியான்
நிறைவுறும் தன்மையை நிலவக் காட்டினன்.

தூயவன் ஏவிய தொண்டர் கூட்டமும்,
தேயமெ லாந்திரு செழிக்க வாழுநாள்,
தீயரின் கலிநகர் திருந்த வேண்டியும்
தாயருள் பூத்திடத் தயவு செய்தனர். 300

என்மன மாற்றத்தை இயம்பக் கேட்டவர்
நன்மனத் தொண்டரை நாட்டிக் காவலில்,
வன்மனத் தானவர் வஞ்சம் தோற்கவே,
பொன்மனக் கருணையாற் புகல ளித்தனர்.

வன்சிறை தப்பவும், வாய்மை காக்கவும்,
என்னர செய்தவும், இகலை வீழ்த்தவும்,
தன்னிக ரற்றவன் சமர்த்தன் சித்திமான்
*துன்சகோ தரனெனத் துணையு மீந்தனன்.

நல்ல நேயர் நடத்திடத் தப்பிநான்
கல்ல றையைக் கடந்தெழும் ஆவிபோல்
புல்ல ரக்கர் புரியிற் புகுந்ததும்
கொல்லுந் தூமன் கொடுமை யறிந்தனன்.

நிலையி லாது நினைத்ததைச் செய்திடுங்
கலை சிறந்த கடுமன மோகியின்
வலையில் வீழ்ந்து மயங்கிய ‡வாலன்போல்
கொலை மறைத்துருக் கொண்டு புகுந்தனன்.

* *துன் : துன்னிய, எய்திய* ‡ *மோகியின் : ஆசைநாயகன்*

என்னைக் கொன்றிடக் கேதுவை யேவினுள்,
இன்ன லுக்குத் தலைவி, இரக்கமில்
அன்ன மோகியை ஆவி குடித்தனன் ;
பின்ன ரேபிற விப்பய னெய்தினேன்.

பழி மிகுந்த பதகனை, எம்பிரான்
அழிவி னின்றும் அருளுக் குயர்த்திஞன் ;
விழி திறந்திட நன்மை விளக்கிஞன் ;
வழிதி றந்தது வாய்மை திறந்ததே.

தூக்க மற்றவன், சுத்த னருளிஞல்
ஏக்க மற்றனன் ; என்னை யினியவன்
ஆக்க வேலைக் கடைக்கல மாக்கலே—
நோக்கம் ; வேருெரு நோக்கமு மில்லையே.

நாத்தி கக்கலி நாட்டின தீநகர்
ஆத்தி கக்கரு ணைநக ராகுக.
ஏத்து சித்திக் கினிய துரிமையாம் ;
பாத்தி யம்எனக் கன்புப் பணியொன்றே.

மன்னித் தென்னை மறந்திடு வீரினி
என்னன் பாகும் இறையைச் சரண்புக
இன்ன ரேகுவன் இந்திரை மந்திரி
மன்னு மாட்சி புரிந்தினி வாழ்கவே.

ஒப்ப ரிய உயர்குணச் செம்மலைச்
செப்பி நற்பணி செய்தினி வாழுவேன்.
எப்பொ ருளும் இனியெனக் கில்லெனத்
தப்பி ஞன்கலி சத்திய சீலஞய்...

சித்திமான்

புலியென வாழ்ந்து புரைமிகச் செய்து
புனிதனின் அருளிஞல் உய்த
கலியனைக் கேட்டுக் கருணையன் "இனிநீ
கடவுளின் அடியவன், மலைமேல்
இலகிடும் சுத்தன் இனிதுனை ஏற்பான் ;
ஏகெனச்" சித்திமா ஞங்கே
நிலவிடுந் தொண்டர் நெடுந்துணை செய்ய
நிமலன்பாற் செலவிடுத் தானே.

வாட்சின வெறிகள் அடங்கிட, நாட்டில்
வளர்ந்திட வாய்மையும் அன்பும்,
கோட்சின வஞ்சங் குறுகிட வரக்கர்
கொலைப்பழி நீங்கிட உடனே,

ஆட்சியிற் சிறந்த சித்திநல் லமைச்சன்,
அருளர சியலினை வகுத்து,
மாட்சியிற் சிறந்த மக்கள்பால் விடுத்து,
மகிழ்ந்தனன் புகழ்சுமந் தனனே....

தானவர் முயற்சி தட்டழிந் திடவுந்
தருமமே நிலையுயர்ந் திடவும்,
மானவர் மரபு மாசிலாத் தெய்வ
மரபென வளஞ்சிறந் திடவும்,
ஆனகா ரியங்கள் ஆற்றிடும் சுத்தன்
அன்பரை நாடெலாம் அனுப்பி,
ஞானமும் கரும வீரமும் செழிக்க
நாடினன் சித்திமந் திரியே.

## 16. புது மலர்ச்சிப் படலம்

அதிகஞ் சொல்லுவ தென்னினி ஆருல கெல்லாம்
புதிய நல்விழிப் படைந்தது பூரணன் அருளால்,
சதிசெய் ஆணவ தானவப் படைகளுந் திகைக்க—
மதிமி குந்தநந் தொண்டர்கள் வாழிய மாதோ !

ஐந்து கண்டத்தும், அமர்பல நாடுகள் எல்லாம்,
"உய்ந்த னம்"என ஊர்தொறும் ஊர்தொறும் அழைத்தே,
வந்த னத்துடன் வாய்மையைக் கண்டுகேட் டுவந்து,
சிந்தை செய்கையுந் துகளறத் திருந்தின பரிந்தே.

தன்ன லங்களைத் தவிர்த்தனர் ; பொதுநலந் தழைக்கப்
பன்ன லங்களைப் புரிந்தனர் ; பாருயிர் செழிக்கப்
பொன்ன லங்களைத் தொழில்வளர் புண்ணியஞ் செய்தார் ;
உன்ன தக்கருத் தோங்கிய உலகினில் வாழ்வார்.

கையு ழைத்தன ; கருத்துகள் கடவுளை நினைத்த ;
மெய்யு ழைத்தன ; வாய்மலர் மெலிந்தவர்க் குதவப்
பைய விழ்த்தன பணமிகு மனங்களும் ; பாரில்
ஐயன் ஏவிய தொண்டரின் அருட்பணிச் சிறப்பால்.

அன்பு கொண்டவர் ஆருயிர் யாவிற்கும்
இன்ப நல்லறம் செய்யும் இயல்பினர்
துன்ப மற்ற சுதந்தரத் தொண்டரை
நம்பி மாந்தர் நடந்து சிறந்தனர்.

தனிய கந்தையும், சாதி யகந்தையும்,
எனதுல கென் றிகல்செய் யகந்தையும்,
இனவ கந்தையும் இன்றி, மனிதரை
மனித ராக மதித்தனர் மாந்தரே.

இந்து முஸ்லீம் கிறிஸ்து வெனுரினி
அந்தண் ஆரியர் திராவிடர் என்றிலார்,
எந்தத் தோல்விவ காரமும் எண்ணிடார்
சிந்தை யொன்றிய மானிடத் தேவரே.

தீட்டு தீட்டென் றெதுங்கிடச் செய்வதும்,
பூட்டி வைத்துப் பொருள் சிறை காப்பதும்,
வீட்டில் ஓர்மதம் வீதியி லோர்மதம்
காட்டும் வேடமும் கட்டுடன் விட்டனர்.

மொட்டை தாடி குடுமி முகத்துரு
பொட்டு நாமம்வி பூதி பலவகைச்
சட்டை கண்டிடுஞ் சண்டைகள் யாவையும்
விட்டொ ழித்தனர் உள்ளதை விண்டவர்.

தற்பெரு மைகளுஞ் சாதி மாமதக்
கற்பனை வேடமுங் காட்டி, நாட்டிலே
சிற்சிலர் எதிர்த்தனர் ; சிரித்து, வைதனர் ;
அற்புதம் இவர்களும் அடங்கிப் போயினர்.

பட்டமும் பதவியும் பந்தனை செயும்
சட்டமும் கொடுமையின் சம்ப மோங்கிடுந்
திட்டமும், அரக்கரின் செருவும் போக்கிடக்
கட்டங்கள் பொறுத்தருங் கடமை காத்தனர்.

வன்ப டையின் வலிமையைக் காட்டிலும்,
பொன்ப டைத்த புகழினைக் காட்டிலும்,
அன்பொ டொற்றுமை யாகும் அருட்பணி
இன்ப மென்றனர் எண்ணம் உயர்ந்தவர்.

ஞான சூனிய ரான நடலையர்,
ஈனச் சேவக மேற்கும் அடிமைகள்,
மானி டர்கள் மயங்கிடு மட்டுமே
தான வரின் சமர்த்தும் பலிக்குமே.

நந்து ணைகொடு நம்மை நலிப்பவர்,
நந்து யர்களைக் கண்டு நகைப்பவர்,
நந்துணை மறுத் தாலொரு நாடிலார் ;
வந்த தானவர் மர்ம மிதுவென்றார்.

இரும்பும் ஈயமும் எண்ணெயும் செம்புடன்,
கரும்பு கைக்கரி கந்தகம் மாங்கினம்
பெரும்ப கைச்சமர்ப் பேய்ச்சரக் கென்னவே,
தருங்க ளிகளைத் தப்பறக் காத்தனர்.

சண்டை தூண்டும் சரக்குகள் யாவையும்,
அண்டை நாட்டி லகப்படா வாறவர்,
எண்டி சையிலும் உண்மை யியம்பியே
தொண்டர் போர்வெறி போக்கினர் சூழ்ச்சியால்.

யோக சித்தி யுறுப்புறு தொண்டர்கள்
சீக ரத்திலு சிறிய தேசத்தும்,
வேக மான வியன்பணி மேன்மையால்
ஏக மான உணர்ச்சி யெழுப்பினர்.

சத்தி யன்னவர் தம்பணி சீர்பெறச்
சுத்த யோகச் சுடரைப் பரப்பியே
சத்தியயுகத் தத்துவஞ் சாற்றியே
புத்து ணர்வைப் பொலிவுறத் தூண்டினுள்.

வானரசு மண்மீது வந்த தன்பீர்,
    மாயவிருட் சங்கடங்கள் மறைந்த தன்பீர்—
மோனத்தின் முடியினிலே முளைத்த சோதி,
    முத்திநதி பாய்மூல சக்திச் சோதி,
ஞானத்தண் கதிர்வீசு நாத ஜோதி,
    ஞாலத்தைப் பொன்னுக்க நயந்த ஜோதி,
தேனெத்த பேரின்பந் திளைத்த ஜோதி—
    சித்தாந்தச் சிரம் விளங்கும் சுத்த ஜோதி....

அத்தகைய ஜோதியரு ளார்வங் கொண்டே
    அன்புசெயும் திருத்தொண்டர் அகில மெல்லாம்
சத்தியமும் சாதிமத பேத மில்லாச்
    சன்மார்க்க ஒற்றுமையும் தழைக்க வேண்டிப்
பத்திமையும் அருட்பணியும் பதிஞானத்தின்
    பண்புடனே திண்விரதம் பலிக்க வேண்டிப்
புத்துருவும் புதுவாழ்வும் புதிய சீரும்,
    பொலிந்திடவே பொதுநலங்கள் போற்றி னுரே.

பொல்லாங்கும் பொய்யுரையும் பொறுமை நோயும்,
    புறங்கூற்றும் போலிநடை யுடையும் போக,
அல்லலுறும் அசுரபயம் அற்றுப் போக,
    ஆத்மபலம் யோகத்தாற் பூத்துப் பொங்க,

வெல்லாண்மை வீறுபெறச் சோர்வு நீங்க,
வேறுசெயும் பேதமனம் வேரோ டேகி,
எல்லாரும் ஓர்குலமாய் இனிது வாழ,
இன்பமெனும் இரவியெழுந் திலகக் காணீர்.

கருவினையை மாற்றுகின்ற கருணை வள்ளல்,
காசினிக்குப் புதுவழியைக் காட்டும் வள்ளல்,
இருவினையின் பற்றின்றி இயற்றும் செய்கை
இறைவனுக்கு வழிபாடாய் இயற்றச் செய்யும்
குருமணியென் குறைதீர்த்த கோமான், தெய்வக்
குலமணியின் அன்பினிலே குலவி வாழ்வீர்,
ஒருபரமன் உயிர்க்குயிராய் உள்ளத் துள்ள
ஒளிமணியைத் தியானத்தால் ஒன்று வீரே.

தேனோங்குங் கலைச்சோலை யாக வாழ்க்கை
திருவோங்கத் தெய்வவொளி செழிப்புற் றோங்க,
வானோங்கும் பேரின்பம் வளம்பெற் றோங்க
வரமோங்குங் கவிவாக்கு மலர்க ளோங்க,
ஊனோங்கும் உயிர்க்குலத்தின் உளஞ்சி லிர்க்க,
உண்மையறி வோங்கவுயர் பெண்மை யோங்க,
மானோங்கு பாகனரு ளாலே யென்றும்
மங்களமோங் கிடநல்லோர் வருகு வீரே....

ஆண்டானைத் தலைக்கொள்வோம் ; அவனுக் கேயாம்
அருச்சனையாய் அருட்பணிகள் ஆற்று வோமே ;
நீண்டமுடி கவித்தாலும் நீண்டு போகோம் ;
நிந்தனைகள் வந்தாலும் நெஞ்சங் குன்றோம் ;
தூண்டுசுடர் ஞானவெளி துலங்க, நல்ல
தொண்டுகளே செய்திடுவோம் தூய நேயர் ;
வேண்டோமிப் புவிப்புகழும் ; வீறுகொண்ட
வேதாந்தப் பொதுவினிலே விளங்கு வோமே.

புகழுக்கோ கம்பாழ்வார் கவிபு னைந்தார் ?
புகழுக்கோ இலியாதை ஓமர் செய்தார் ?
புகழுக்கோ திருக்காட்சி யிசைத்தார் தாந்தே ?
புகழுக்கோ ஷேக்ஸ்பியர்நா டகங்கள் செய்தார் ?
புகழுக்கோ தேவாரம் இசைத்தார் மூவர் ?
புகழுக்கோ வள்ளுவனுர் பொதுநூல் செய்தார் ?
புகழ்வேட்டை யாடாது பூசை யாகப்
பொய்யில்லா மெய்த்தொண்டு புரிகு வோமே !

எவருக்குந் தீங்கின்றி இடும்பை யின்றி,
எள்ளளவும் இழிவான பொறாமை யின்றி,
அவரவரின் ஆற்றலுக்கே ஏற்ற தாகும்,
அருட்பணியை அன்புக்கே ஆற்று வோமே ;
எவருக்கும் அஞ்சாமல் இதயந் தன்னில்
இறைவனுடன் இரண்டறவே ஏக மாகி,
நவயுகத்து நாதனிடம் பணிகள் செய்வீர் ;
நரநாரா யணராக நன்று வாழ்வீர்.

மானிடரின் அரசியலை மாற்ற வேண்டி
வால்தேரும், ரூஸ்ஸோவும், மார்க்சும் வந்தார் ;
தீனர்துயர் தீர்க்க லெனின் ஸ்டாலின் வந்தார்,
செல்வமுடன் செய்தொழிலும் பொதுமை செய்தார்.
கோனாட்சி குடியாட்சி யாகச் செய்தார்,
கொலையாலே கொடுங்கோல்கள் குமையச் செய்தார் ;
ஆனபொழு தும்அசுரப் போர்கள் இன்னும்
அழிநாட கஞ்செய்வ தறிகு வோமே.

துன்பத்தைத் தொழிலாகத் தொடரும் ஊணர்,
துறுதுறுத்துத் திரிகின்ற துட்ட ஊணர்,
மன்பதையைக் கொசுப்போல மதிக்கும் ஊணர்,
மாடாடு மதுவுண்டு மதங்கொள் ஊணர்,
அன்புவழி யறியாமல் அவனி யெல்லாம்
அதர்மப்போர் ஆக்குகின்ற அரக்கர் தம்மை
நம்பியடி மைப்பட்டார் ஞாலத் திற்கே
நமன்போல நலிவினைகள் செய்வா ரம்மா !

ஆசையுடன் ஆணவமும் அளைந்த தீவில்,
அசுரபலம் கொண்டுலவும் அரக்கர் கோடி,
காசினியைக் கம்ஸதுரி யோதனுதிக்
காடென்னச் செய்தார்கள் கத்தி தீட்டி,
வேசைமது ஊன்சூது கொலைவே கத்தை
வீரமிலாத் தந்திரத்தாற் போர்வே கத்தை
மோசமுறத் தூண்டியிவர் முப்பால் வாழ்வை
மோகவலை யாக்கிடவே முளைத்தா ரம்மா !

தினமுதிக்கும் தினகரனைத் தேட மாட்டார்,
சிறுதீபச் சுடர் வணக்கம் செய்வார் மாந்தர்,
மனமுதிக்கும் சாட்சிமொழி மதிக்க மாட்டார் ;
வாய்வாதக் குப்பைகளை வாங்கி நிற்பார்.

மனைவளரும் பத்தினியை மதிக்க மாட்டார்
மதிமயக்கும் விலைமாதை மடியில் வைப்பார்,
வனமுதிக்கும் மணமலரைக் கசக்கிப் போட்டு—
வருணக்கா கிதமலரில் மயங்கு வாரே.

யானைகுதி ரைமரியா தைகள் வேண்டார் ;
இசைவிரும்பார் இயல்பாக உள்ளத்துள்ளே
மோனையெது கைநயங்கள் முற்றத் தேர்ந்தே,
முன்னுலகும் பின்னுலகும் முழுதுங் கண்டே,
தேனருவி போலூறும் தெய்வ வாக்கைத்
தெவிட்டாத நல்லமுதைச் செகத்திற் கீந்தார் ;
மானவர்கள் அவர் வாக்கை மதிக்க மாட்டார் ;
மாசுற்ற காமவழி மயங்கு வாரே.

தன்புதல்வர் தமைக்காக்குந் தாயைப் போலே,
தயவுடனே சுத்தபிரான் தந்த வாக்கை
அன்புடனே கற்றறிந்து நடப்பீர் ; அன்றே
ஆனந்தக் காவியமாம் அவனி வாழ்க்கை.
துன்பமில்லை, அச்சமில்லை, துயர மாகும்
தொத்தடிமைத் தொல்லையில்லை சொன்னேன் கேளீர் ;
இன்புறுவோம், இடர்களைவோம்; எல்லா ருக்கும்
இனியவையே மனதறியச் செய்வோம் வாரீர் !

வானிலத்தில் ஒளியுண்டு ; மழையும் உண்டு,
மண்ணினிலே பயிருண்டு ; வளமை யுண்டு ;
தேனொத்த கரும்புண்டு செந்நெ லுண்டு,
தேசமெலாம் உண்டுடுக்கச் செழிப்பு முண்டு,
மானொத்த விழியுண்டு ; மக்க ளுண்டு ;
மனையுண்டு ; வள்ளுவனார் மறையு முண்டு,
ஊனொத்த உயிர்க்குயிராம் ஒருவ னுண்டே,
உண்மைவழி வாழ்ந்தாலிங் கொண்மை யுண்டே.

உலகினிலே அநியாயம் ஒழிய வேண்டி,
உள்ளத்தில் உள்ளன்பு பொலிய வேண்டி,
கலகஞ்செய் பேராசை கவிழ வேண்டிக்
காதலுடன் கற்பொழுக்கங் காணவேண்டிப்
பலருணவைப் பறித்துண்ணும் பதகர் கூட்டம்,
பாட்டாளர் உழைப்பிற்குப் பணிய வேண்டி,
நலமெண்ணி, நலம்பேசி, நலமே செய்யும்
நல்லோரை ஞாலத்தார் மதிப்ப தென்றோ !

சத்தியஞ்சொல் மனச்சாட்சி தன்னைப் போற்றிச்
சாந்தமாய்த் தருமவழித் தொழில்க ளாற்றி,
உத்தமராய் உயர்வான சிந்தை யோங்கி,
உலகிற்கு நலஞ்செய்யும் உறுதி கொண்டே,
பித்தான பேராசைப் பேயைத் தப்பிப்
பிசகான துன்மார்க்கப் பிழைக ளின்றி
சித்திரைக்குச் சித்திரைமுன் னேற்றம் பெற்றே
சிராக மாந்தர்குலம் செழித்து வாழ்க !

மூலையிலே விதியென்று முக்கா டிட்டே
முனங்காதிர். நன்மையுற முயற்சி செய்வீர்,
காலையிலே கனிநகைசெய் மலரைப் பாரீர்,
கள்ளுண்டு வண்டிசைக்குங் கருத்தைக் காணீர்.
சோலையிலே சோடிப்புள் கூடு கட்டிச்
சுதந்தரமாய் விளையாடுஞ் சுகத்தைப் பாரீர்.
வேலையிலே கதிராவி மொண்டு மேகம்
விளைவித்து மழைபெய்யும் வியப்பைக் காணீர்.

தேகத்திற் பலம் வேண்டும் ; தெம்பு வேண்டும் ;
தீரராய்ச் செய்தொழிலைச் செய்ய வேண்டும் ;
சோகத்தைச் சோம்பலினைத் துரத்த வேண்டும் ;
சொல்லுடனே செயல்வேகந் தொடர வேண்டும்.
மோகமயக் கறச்சிவன் முத்த ராகி
முன்னுலகக் கோயில், பணி முயலவேண்டும்,
ஏகமாய் அநேகத்தை இயக்கி நிற்கும்
இறைவனருள் இன்பத்தில் ஆடுவோமே !

அந்தமதம் இந்தமதம் என்னு தீர்கள் ;
அச்சாதி யிச்சாதி என்னு தீர்கள் ;
விந்தையுறும் புதுமதங்கள் விளைக்கா தீர்கள் ;
வேற்றுமைசெய் விதிகளையே வளர்க்கா தீர்கள்,
வந்திருந்து செல்வாழ்வின் அரங்கந் தன்னில்,
வாழ்வாங்கு வாழ்ந்திடுவோம் இயல்பாய் நாளும் ;
சந்ததமும் சுத்தசுதந் தரச மத்வம்
தருகின்ற சத்தியசன் மார்க்கம் ஒன்றே.

மனிதகுல மொன்றேநங் குலம தாகும்,
மாசற்ற மனச்சாட்சி சுருதி யாகும்,
தனியகந்தை யற்றசரி சமான ராகச்
சன்மார்க்கப் பொதுவெளியிற் சார்ந்தெல் லாரும்,

கனிகுலுங்குங் கற்பகம்போற் கருணை தாங்கிக்
காசினிக்கு நலஞ்செய்யுங் கடமை காப்போம்,
அனவரதம் தியானத்தால் அன்பே யாகி
ஆருயிரைக் கடவுளுக்கே அருச்சிப் போமே !

மங்களச் செல்வி சக்தி மண்புவி நாட்டி லெல்லாம்,
பொங்கிடும் புனிதன் வாக்கைப் பூமொழி யிசைக ளாலே,
சிங்கநா தத்தைப் போலும் தென்றலுங் குயிலும் போலும்,
திங்களி னமுதம் போலுந் தெவிட்டறப் பொழிந்தாள் மாதோ !

தீக்கொழுந் தேறும் வீர தீரரின் புகழைப் போலும்,
பாக்கியம் பழுத்த நல்ல பத்தினி யழகைப் போலும்,
பூக்களின் பொலிவைப் போலும், பொய்யறு புலவர் உள்ளம்
ஆக்கிய கவிதை போலும் அருண்மொழி துலங்கிற் றம்மா !

மிடியிருள் அச்சந் தீர, விடுதலைத் திறமை யோங்கக்
கொடியரின் கொடுமை வீழக் குமுறிடும் வீரத் தாலே
அடிமைநோய் அலறி யோடி, ஆண்மையும் பெண்மை யன்பும்
கொடியுடன் மலரும் போலக் குலுங்கிடத் துலங்கிற் றம்மா !

நமனையும் அஞ்சா வீறு நல்கியெந் நாளும், வாழ்வில்
அமைதியும் சுறுசுறுப்பும் ஆற்றலுஞ் செழிக்கக் கன்னித்
தமிழிசை யமுத மென்னச் சமரஸ நேய மோங்க,
விமரிசை யான சுத்த வேதவாக் கோங்கிற் றம்மா !

முல்லையைத் தென்றல் வந்து முத்தமிட் டணைந்து கொஞ்ச,
எல்லையிற் கடலின் உள்ளம் எழுமுழு மதியுங் கொஞ்ச
நல்லியற் காதலுள்ளங் காதலை நாடிக் கொஞ்சப்
பல்கலைக் கவிதை கொஞ்சும் பான்மைபோற் பரவிற் றம்மா!

அவரவர் தியானத் தாலே அழகுற மனந்தி ருந்தி,
நவயுக சக்தி யேற்றி, நலந்தரும் பணியி லுய்த்தே
சிவசுப சாந்த மெய்த்தித் திவ்விய வாழ்வை வாழ்ந்து,
புவியினிற் புனிதன் கொள்கை பொலிவுற நடந்தார் மாதோ !

ஆண்டவன் அருளே தங்கள் ஆற்றலென் றன்ப ரெல்லாம்,
பூண்டனர் உலக மெல்லாம் புதுயுகம் பூக்குந் தொண்டே.
வேண்டிய கல்வி வேலை விரிதருங் கலைகள் ஓங்கக்
காண்டலுக் கினிய தான ஒற்றுமை காட்டி னரே.

வாய்மையில் வளரும் வாக்கும் வண்மையில் வளருங் கையும்,
தூய்மையில் வளரு நெஞ்சும், சுத்தனில் வளரும் உள்ளும்,
தாய்மையில் வளரும் அன்புந் தருமத்தில் வளரும் வாழ்வும்,
நோய்மையில் லாத தூல நுண்ணுடற் பொலிவும் பெற்றார்.

மோனத்தில் வளரும் முத்தனின் அருளால்
முனிவரின் யோகசக் தியினால்,
ஞானத்தில் வளரும் பக்தியுஞ் சங்க
சாதன நன்மையுங் கண்டார்,
தானத்தி லோங்குந் தண்முகில் போலே
தருமமுங் கருமமுங் கண்டார்,
வானத்தி னரசைப் புவியிலே வளர்க்கும்
வாய்மையுந் தூய்மையும் அணிந்தார்.

தீரர்க ளெல்லாந் தியானத்தில் ஒன்றித்
திரள்திர ளாகஊர் தோறும்,
பாரத சக்தி யாகிய சுத்த
யோகத்தின் பயனுறும் அமுத
தாரையை யிறங்கப் பெற்றனர் ; சாந்தந்
தணலுமின் சாரத்தைப் பெற்றூர் ;
வீரமும் வெற்றித் திறமையும் பெற்று
வீக்கினர் புதுயுகப் பாட்டே !

ஒன்று பட்ட நெஞ்சமும், உலக மெல்லாங் கோயிலே
என்று காணுங் காட்சியும், இலகுயிர் நலங்களே
நன்று செய்யும் ஆற்றலும் நலிவிலாத் தருமமும்,
வென்றியும் அளித்தருள் விரிந்த பூமி நாதனே !

சள்ளையற்ற சாந்தமும், சலிப்பி லாத சக்தியும்,
கொள்ளையற்ற செல்வமும் கொடுமை யற்ற நீதியும்,
எள்ளலற்ற சீர்த்தியும், எதிர்ப்பை வெல்லும் வீரமும்,
கள்ளமற்ற வாய்மையும் கடவுளே யருளுவாய்.

வறுமையற்ற வாழ்க்கையும் வரம்பிலாத ஈகையும்,
சிறுமையற்ற சிந்தையும் சிறந்த தேச சேவையும்,
பொறுமையுற்ற வீறுடன் பொறாமை யற்ற நேயமும்
திறமை யுற்ற சொல்லுடன் சிறந்து வாழ்க மானிடர்.

சூதிலாத் தொழில்களும் சுரண்ட லற்ற வணிகம்,
கோதிலாக் குணங்களும், குறையிலா வளங்களும்,
தீதிலாப் பொறிகளும், திருமிகுங் கலைகளும்,
வாதிலாச் சன்மார்க்கமும், வளர்க மாந்தர் வாழ்கவே !

# 17. மாவலி வீழ்ச்சிப் படலம்

சுத்தவா சகத்தைக் கேட்டுச் சொல்லொணு வுவகை கொண்டு
இத்தல மாந்தர் எல்லாம், இயல்வழி இயற்றிக் காட்டி,
சத்திய வழியே சென்று, சாந்தமா யிருக்கு மெல்லை,
பித்துறுந் தானவத்திற் பெருஞ்சமர் பெருகிற் றம்மா.

கவலையுந் துயருங் காமக் கள்வெறிச் சினமும் போரும்
புவியிகழ்ச் சிகளும் சூதும், பொறாமையும்,வாழ்க்கையெல்லாம்
உவர்நட்ட பதருக் கென்றே ஊற்றிய நீரைப் போன்ற
அவலமும் ஆயின் அஞ்சி யரக்கனுங் கலங்கி டானோ ?

அங்குதன் மகள்கொண் டோங்கும் அறத்துறை வெற்றி யாலும்
இங்கிளந் தம்பி கொண்ட மறத்துறை யிசையி னாலும்,
எங்குந்தன் அரக்க மாயம் இழிவுறும் வசையி னாலும்,
பொங்கிய மாவலிக்குப் பொறாமைத்தீ கொதித்த தம்மா.

கொலைகொலை யாகச் செய்து குவிக்கினும், ஆண வத்தின்
கலைபெறுங் கொலைக்குத் தப்பக் கருவிகள் பலவும் இல்லை.
அலைகடந் தாயு தங்கள் போர்ப்பொருள் அடைவ தில்லை,
நிலையறி செய்தி யில்லை நிருதனுந் திகைத்தான் மாதோ !

புண்ணிய பூமிச் செய்தி புகுவதேயில்லை யிங்கு ;
மண்ணக மெங்குந் தன்சீர் மண்ணுற்ற செய்தி யில்லை ;
எண்ணிய எண்ணத் திற்கும் எதிரதே யாகத் தம்பி
பண்ணிய சூழ்ச்சி யென்று பதறினான் பதர னானே ! 20

அறிவினிற் சிறந்த தம்பி, ஆற்றலிற் பெரிய தம்பி,
பொறியினிற் கொடிய னாகிப் போரினை வெல்லு கின்றான் ;
வெறியினிற் பெரிய மாலி விடுவனோ ! பாரென் றின்னும்
குறியினிற் கொடிய வாணக் குண்டுகள் குவித்தெ ழுந்தான்.

பயிற்சியின் சிறப்பி னாலே, பலசன மதிப்பி னாலே,
உயர்ச்சியைப் பெற்ற நெப்போ லியனைப்போல், உலகை வெல்ல
அயர்ச்சியில் லாது *வீடு குண்டுகள் அடித்த இட்லர்
முயற்சியைப் போலே இந்த மூர்க்கனும் முனைந்து சென்றான்.

குளிர்மிகு மாஸ்கோ தன்னைக் குமைத்திடச் சென்றான் போலும்,
களிமிகு ஸ்டாலின்க்ராடைக் கைப்பற்ற முனைந்தான்போலும்
ஒளிமிகும் இந்தியாவில் ஒளிந்துற்ற குள்ளர் போலும்,
தெளிவறும் அரக்கன் ஆண வத்தினைத் தீண்டப் போனான்.

"நாளையே ஆண வத்தை நாசமுஞ் செய்து, தம்பி
வாளையு முறியக் கொன்று தலையுடன் வருவேன்" என்று
நீளுறு மீசை தன்னை நினைப்புறத் திரிகி விட்டு,
மாளுறத் தாக்குங் குண்டு மழையுறப் புறப்பட் டானே.

ஒற்றரால் அறிந்த தம்பி, ஊழிமாப் புயலைப் போலும்,
எற்றிநாற் றிசையும் தீயை எறியெரி மலையைப் போலும்,
உற்றெழும் பூகம் பத்தின் உலுக்கலைப் போலும், கோபம்
பெற்றெழுந் தனலைப் பெய்தான் பேரிடி முழங்க மாதோ!

முன்னமே அரக்கர் போரின் முடிவறு வெறியுங் கேடுஞ்
சொன்னதை நினைத்துக் கொள்வீர் ; சுருக்கமே போது மிங்கே.
தன்னது தானென் றெண்ணித் தலைதடு மாறும் ஊணான்
என்னது யானென் றெண்ணும் ஊணனை எதிர்த்து நின்றான்.

கொல்லெனப் பறைகள் கொட்டக் கும்மெனப் புகைகள் சூழக்
கல்லென வெடிகள் விழக் கடக்கென ஊர்கள் சாயச்
சொல்லரும் அரக்கர் நாடு சுடுபிணக் காடாய் வேக,
அல்லுடன் பகலும் போரின் அலறலே மிச்ச மம்மா !

ஆயிரங் கப்பல் செல்லும், ஆயிரங் கப்பல் வீழும்,
ஆயிரம் படைகள் ஏகும் ஆயிரம் படைகள் சாகும்,
ஆயிரம் பொறிகள் முட்டும் ஆயிரம் பொறிகள் வெட்டும்,
ஆயிரம் ஆயுதங்கள் அனற்பட்ட பஞ்சு மாமே...

போமென முன்னே சேனை போக்குவான் அரக்கன் ; ஆங்கே
டாம்எனக் கேட்ட போதே டபதட வென்னச் சாயும்,
டோமென வெடி பறக்கும் செந்தசை துருவிச் செல்லும்,
வேம்பல ஊர்கள் பற்றி வேதி நூல் வினையி னாலே.

பன்னெடு நாட்கள் செய்த படைநிறைக் கப்ப லொன்று
சின்னதோர் காந்தக் கண்ணி தீண்டிடச் சிதறி மூழ்கும் ;
முன்னுறு டாங்கைட் டாங்கு முடித்திடும் ; கண்ணி தீண்டி
இன்னொரு நாச காரி எரிவிற கென்னப் போகும்.

கொலையினில் வலது கையாய்க் கொள்ளையில் இடது கையாய்,
அலையினில் ஆகாயத்தில், அடுகளப் போரில் எங்கும்
நிலையறச் சுழலக் கண்ணும், நெஞ்சத்தை மண்ணுக் காக்கி,
உலைவறப் போர்கள் செய்யும் ஊணருக் கோய்வும் உண்டோ ?

படையினைப் படைநொ றுக்கப் பகைவனைப் பகைநொ றுக்கத்
தடையினைத் தடைநொறுக்கத் தம்பியை அண்ணன் கொல்லப்
புடைத்தெழுந் தோளை நோக்கிப் பொம்மெனக் குண்டு பாயத்
தடித்தினுஞ் செருக்கி னாலே தானவன் போர்செய் தானே.

மாரிபோற் பொன்பொழிந்து மாரிபோற் புண்ணீர் பெய்து,
மாரிபோற் கண்ணீர் பெய்ய மரணத்தின் விருந்தே யாகக்
காரிருட் புகையைக் கீண்டு கனலினை யணைந்து கோடிப்
பேரிடிக் குண்டு தாக்கப் பிணமலை குவிந்த தம்மா !

இயற்கையின் சீற்றந் தானோ, தருமத்தின் இரக்கந் தானோ,
புயற்குலச் சீற்றந் தானோ, போரிடி முழக்கந் தானோ,
துயர்க்குலச் சேனை தானோ, துட்டரை யழிக்கும் சக்தி
வியக்கருஞ் செய்கை தானோ வெடித் தெழும் சமர மம்மா ?

பீரங்கிக் கொலையும் குண்டு பெய்பெருங் கொலையும் தீயிற்
கூரம்புக் கொலையும் ஊரைக் கொள்ளித்தீ சூழ்ந்து கொண்டு
காரம்பு வீசிக் கொல்லுங் கடுங்கொடுங் கொலையும், தோன்று
நீரம்புக் கொலையும் கண்ணிக் கொலைகளு நினைக்கப் போமோ?

ஆண்டுகள் அமைத்த ஊர்கள் அணுவெடி தாக்கி மண்ணும்,
ஆண்டுகள் அமைத்த கோயில் அறிகுறி யற்றே போகும்,
ஆண்டுகள் தொகுத்த சேனை அடுபுகை யாகப் போகும்,
ஆண்டுகள் செய்த செய்கை ஆழிவாய் உப்பைப் போலாம்.

தசமுகன், மேக நாதன், தரகா சுரன், சிக்கந்தர்,
விசைபெறும் அனிபால் நெப்போ லியன் கெய்சர் வியப்புமேவும்
வசைமிகு பொறிக ளாலே இட்லர்செய் வன்போ ரெல்லாம்
நசைபெறுந் தானவன்செய் நாசப்போர்க் கிணைய தாமோ ?

செருவலித் திமிர் மிகுந்த மாவலி கொழுப்ப டக்கப்
பெருவலி யேவி யேவி ஆணவன் பெரும்போர் செய்தான் ;
உருமறைப் புகைக ளிட்டும் ஊழிபோற் கனலு மிழ்ந்தும்,
இருநிரு தர்செய் போருக் கிலக்கியப் போரும் என்னும் !

அறிவினை வளர்த்தே, கொல்லும் ஆயுத மாகச் செய்து
பொறியினைக் கொண்டி ரத்தப் போர்செயும் வீர ஊணர்
அறவினை மறந்த தீயர், அழிவினை தேர்ந்தார் செய்த
மறவினைப் பயன்க ளெல்லாம் மண்டையில் விடிந்த தன்றே !

தடிந்தனர் தம்மைத் தாமே தம்பியும் அண்ண னுரும்
ஒடிந்திட ஒருவர் கையை ஒருவர்வெட் டிடவே பாய்ந்தார்,
கடிந்தனர் உடல மெல்லாங் காயமாய் இரத்தங் கொட்ட
மடித்தனன் சிரமிழந்து மாவலிக் கேற்ற தம்பி...

வென்றனன் ; கொடிய தம்பி வீழ்ந்தனன் மண்ணைக் கவ்வி ;
வென்றனன் ஆண வத்தை வீறுக பேரி கைகள்
என்றுமா வலிசெருக்கால் ஏறிய மகிழ்ச்சி பொங்கி,
நின்றபோ தவனை நோக்கி நெருப்புக்குண் டுருமிற் றம்மா !

"ஆள்வனிவ் வர்ண வத்தை அவுணன்யான்" என நிமிர்ந்த
நீள்சிரந் தன்னைச் சுட்டு நிலத்தினில் ஒடியத் தள்ள
ஊள்ளென ஊழைப் போலே உற்றதோர் அணுக்குண் டந்தோ!
மாள்வனென் றஞ்சி யாங்கே மாவலி ஓடினனே...

ஒப்பிலாத் தம்பி தன்னை ஒழித்ததே பெரிய வெற்றி
அப்பவோ போதும் போதும் ஆணவப் போர்க ளென்றே
முப்புறம் பகைவர் குண்டு முழங்குமக் களத்தை விட்டுத்
தப்பினேன் பிழைத்தே னென்று தானவன் ஓடினானே !

வேகவி மான மேறித் தானவம் விரைந்த ஊணன்
சோகமே வடிவ மாகத் துறையினில் இறங்கும் போதே,
சீகரப் படைகள் சூழ்ந்து சிறைப்பிடித் திடுமென் றஞ்சித்
தேகமு நடுநடுங்கத் திக்குவே றின்றி நின்றான்....

புலியினைப் போலப் பின்னே ஆணவப் போர்து ரத்த
நலிசிறை யடைக்க முன்னே நற்குடி யாட்சி நிற்க,
வலியதன் செருக்கே தன்னை வம்புறக் கேலி செய்ய
பலிக்கடா போல ஊணன் பதறினான் கதறினானே !...

நாம்செய்த பொறிகள் வெந்து நம்மையே நலித்த வென்று
தீமையின் பயனை யெண்ணித் திகைத்தமா வலியை, வெள்ளி,
தூமகே துவிடம் செல்வோம் துரிதமாய் என்று கொண்டு
மீமிசைப் பறந்தான் கண்ணீர் நிலமிசை விழுந்து சோர..

எல்லை யற்ற பொருட்குவை ஏந்திய
வல்ல மைபெறு மாவலி ராக்ஷஸன்,
கொல் லமரிற் கொலைத்தொழி லேசெய்து
தொல்லை யுற்றுத் துடித்துயிர் சென்றனன்.

கற்ப காலங் கனகங் குவித்திந்த
அற்ப மண்ணினை ஆளச் சமர்செய்தே
சொற்ப காலத்திற் சுற்றமுந் தோற்றவன்—
புற்பு தமெனப் போயினன் ஆசையால்.

வாடி மன்னுயிர் மாளச் சமர்செய்த
கோடி கோடி யரக்கர் கொலை யுண்டார்.
தேடினும் அவர் திக்கினைக் கண்டிலோம் ;
ஆடி யோய்ந்த தரக்கரின் மாயையே.

வெறிகொண் டேசெய் விமானங்கள் போர்மதப்
பொறிக ளெல்லாம் பொரிந்துமண் ணாயின.
அறிவைக் கொண்டு கொலைசெய் யரக்கரின்
குறி யெதிர்த்துத் தமைக்குறி வைத்ததே.

தூர நாட்டைச் சுரண்டிச் சுரண்டியே
சேரப் பொன்மலை ஆயுதஞ் செய்தனர்,
நேரப் போர்வினை நீண்ட செருக்கெலாம்
தூரில் வெந்து துணையற வீழ்ந்தனர்.

அரக்க மாவலி யப்புறஞ் சென்றதும்
உரக்கச் சத்தியன் உள்ளம் எழுந்ததும்,
இரக்க மென்னும் இதயக் கடவுளே
பறக்க விட்ட பகற்கொடி காட்டுமே ! 148

# 18. சத்தியன் வென்ற படலம்

நீதியு மன்பும் போற்றி நின்மலன் தந்தை மெய்யன்,
தீதிழைத் தான வத்தர் திருந்திட வேண்டி நல்ல
போதனை செய்யும் போகன் புகன்றவா றழகி யோடும்
மாதவத் தொண்டர் சூழ மாவலி நகரம்—சேர்ந்தான்.

முன்னமே விரிவாய் அங்கே முயன்றநற் பணிக ளெல்லாம்
இன்னமும் வெற்றி யோங்கி யிலகிடத் தொண்ட ரெல்லாம்
பன்னரும் பயன டைந்து, பதிநலம் பலவுஞ் செய்து,
*மன்னனும் காணு வண்ணம் மறைந்திருந் தானை காத்தார்.

பூவினிற் சிறந்த தான புண்ணிய பூமி தன்னில்,
மாவலி யரக்க னுரின் ஆணவம் மறைய வேண்டித்
தேவசங் கத்தை நாட்டித் திருத்தொண்டு பரவு கின்ற
பாவனச் சித்த னுன சுத்தனைப் பணிந்த சிலர்,

அஞ்சறு செயலின் மிக்க சீகரன் அனுப்ப வந்து,
செஞ்சொலாம் யோக சித்தி செப்பிய தொண்டு செய்தே,
நெஞ்சினைத் திறந்து தூய நெறியினைத் தூண்டி யன்பர்
வஞ்சமில் லாது ழைத்து வாய்மையை நாட்டி னுரே.

வெறுத்தனர் அவுணர் செய்த வேதனை பலவும் அன்பர்
பொறுத்தனர்; அவுணர் தம்மின் பொய்யொழுக் கத்தை வேரோ
டறுத்தனர் ; அடக்க மாக அரக்கரும் ஒருநாள் போரை
மறுத்தனர், அமைதி நாட்ட மனதுடன் பாடு பட்டார். 20

படுகொலைப் பழிகள் செய்யும் பாபப்போர்க் களத்தி னின்றும்,
விடுதலை செய்து, நாட்டில் அமைதியை விளைப்ப தல்லால்,
சுடுதொழி லெதையுஞ் செய்யோம்; ஆயுதந் தூக்க மாட்டோம் ;
கெடுகமண் ணுசை யென்று கிளர்ந்தனர் உணர்ந்த ஊணர்.

சத்திய வாழ்வை நாட்டிச் சகலர்க்கும் உதவும் யோக
சித்தியைக் கற்று ரெல்லாம் தியானமும் திருத்தொண் டாற்றும்
பத்தியுங் கொண்டு, தூய பரனருள் பணிந்து, சுத்த
சத்தியும் இறங்கப் பெற்றுத் தழைத்தனர் சாந்த மாக.

---

*மாவலி

திருக்கதை பலவுஞ் செப்பித் தினந்தினம் சுத்த சங்கம்
உருக்கிய நெஞ்சத் தாலே உள்விழி திறந்த ஊணர்
மருக்கொளு நாத்தி கத்தை மமதையென் றுதறித் தள்ளி,
இருக்கிறான் கடவு ளென்னும் உறுதியை இயம்பி னாரே.

நயமெனத் தோன்று கின்ற நஞ்சுறுஞ் சிற்றின் பத்தில்,
மயங்கிட வசந்த மாவார், கலங்கிட மாரி யாவார்,
முயங்கிட மோகங்கொள்வார் முடிவினில் ஏக்கங் கொள்வார்—
பயனுறக் கற்பொ ழுக்கம் பற்றியின் புற்றார் மன்னே !

கள்ளமே யுள்ள மாகக் கரவொழுக் கங்கள் செய்வார்,
பொள்ளெனச் சினந்து மற்றோர் பொறுமையைச் சோதிப்பார்கள்,
எள்ளுவார் பிறரை யெல்லாம் ஏத்துவார் தம்மைத் தாமே,
கள்ளிலே நீந்தும் ஊணர் கண்விழித் துண்மை கண்டார்.

துறவினைக் கேலி செய்வார், தொண்டரைக் கண்டிப் பார்கள்,
அறவினை அசடென் பார்கள், அறிவினைக் கருவி செய்து,
மறவினை தொடுப்பார்; ஓர்நாள் வானையும் பிளப்போம் என்பார்,
இறைவனை நம்பி வாழும் இயல்பினைப் பெற்றா ரம்மா !

இருளினை விரும்பு கின்ற திருடர்கள், இன்னல் செய்து
பொருளினைப் பறித்துத் தாமே போகங்கள் புசிக்கும் ஊணர்,
பருவமங் கையரை யள்ள நரகிலும் பாயும் தீயர்—
அருளினைப் பொருந்தி வாழும் அடியவ ரானார் மாதோ !

நிலமிசை நமக்கு நாமே நேரெனச் செருக்கு மிஞ்சிப்
பலபழி புரிந்த பஞ்ச பாதகர் தமது தீதால்
உலகெலாம் வருந்தி நோகும் உண்மையை யறிந்து கண்டு
மலமல வென்னக் கண்ணீர் வாரிடத் திருந்தி னாரே.

அரியநல் லறிஞன் சீலன் அன்புரு வான மெய்யன்
பெரியவன் பெருமை யாளன், பேயையுந் தூய தாக்க
உரியவன் சுத்தசக்தி யுடையவன், எம்மு ளத்தின்
அரியணைக் கரசன் என்றே அன்பர்கள் போற்றி னாரே.

தொட்டிலிற் பழகுந் தீமை சுடுவன மட்டு மாறாக்
கட்டையர், விலங்கைக்கொன்று கடித்துண்டு தடித்த ஊணர்—
மட்டறும் உயிர்க்கு லத்தை வயிற்றினிற் புதைத்த தெண்ணிச்
சட்டென ஊனை நீத்துச் சைவர்க ளானா ரம்மா !

பெருநிலப் போரி னாலே பிழைப்பிற்குப் பஞ்ச மாகி,
ஒருபிடி யுணவு மின்றி ஒருவரை யொருவர் உண்ண
வருநிலை கொண்ட ஊணர், மனத்தினில் இரக்கங் கொண்டு
சருகையும் உண்பா ரன்றிச் சவங்களை யுண்ணா ரம்மா !

சீரிய மெய்யன் சொல்லும் சீவகா ருண்யம் போற்றிப்
போரினை வெறுத்த நல்லார், பொறுத்திலோம் கொலைவாழ்
வென்றே,
கூரிய கணையுங் குண்டுங் கொண்டடு களத்திற் கேகார் ;
பாரினில் அமைதி நாட்டும் பணிகளைத் தொடர்ந்து செய்தார்.

பறையிலாப் பேச்சும், வீணர் பகட்டிலாத் தொண்டும், செந்நீர்க்
கறையிலாச் செயலும், சீவ காருண்ய நெறியுங் கொண்டு,
குறையிலாத் தூய நேயர் கொள்கையிற் சிறந்த போது,
நிறைவிலா நிருதர் கோனும் நெட்டுயிர்த் தெழுந்தான் மாதோ!

மாவலி

"எழுந்தனள் அழகி மீண்டும் எழுந்தனன் அறிந்த மெய்யன்
எழுந்தது சுத்த சங்கம், எழுந்தது கடவு ளன்பே
எழுந்தது கருணை யுள்ளம்" என்று மாவலியும் கோபங்
கொழுந்துவிட் டெரிய ஒற்றர், கொலைஞரைக் கூவினானே.

அரக்கரின் சமர வாழ்வை அவமதி சைவ ரானார்,
இரக்கமென் றுளறுங் கோழை யிதயத்தை வளர்த்தார், மந்தி
வருக்கமென் றூன்வெ றுத்தார்; வன்சமர் செய்ய மாட்டார்—
இருக்கவா போக வாநான் இத்தகை யாள ராலே.

மதந்திகழ் களிறு போன்ற மல்லர்கள் ஊண ரானோர்,
நிதமெனக் கடிமை செய்யும் நிலையின்று மாறி, என்முன்
சுதந்தரம் பேசு கின்றார் ; சுத்தனைப் போற்று கின்றார்.
இதன்பொருள் அறிகி லேனே..என்னவர் எதிர்ப்பென் றாமோ ?

பொன் மொழி பேசி மெய்யன் புண்ணியக் கதைகள் சொல்லி,
அன்புடன் மயக்கி ஊணர் அறிவினைக் கெடுத்து விட்டான்,
துன்பத்தை அஞ்சு கின்றார், சுத்தனின் ஆணை யாலே
இன்பத்தை அடைவோம் என்பார் எப்படி யடக்கு வேனே ?

மூச்சிலும் என்னை யன்றி முதல்வனொன் றில்லை யென்பார்,
பேச்சிலும் எழுத்திலும் ஓர் பேரின்பப் பொருளுண் டென்பார்,
தீச்சொலைக் கொண்டென் செய்கை தீதெனத் தாக்கு கின்றார்,
ஏச்சினி யுண்டோ ? நானும் இராக்கதச் சிங்கந் தானே ?

ஆணவத் தம்பி செய்யும் ஆயுதப் போர்கள் கோடி
காணரும் புண்ய பூமிக் கலியன்செய் இடர்கள் கோடி ;
மாணுறும் உலகம் என்னை மறுத்திடும் வகைகள் கோடி,
நாணுதென் உள்ளம் ; இந்த நரத்துயர் காணுவேனே !

மனைவியிங் கெதிர்செய் கின்றாள்; மகளுமங்கெதிர்செய்கின்றாள் ;
எனையடுத் தாண்மைத் தம்பி எங்குமே இடர்செய் கின்றான்,
முனையினுக் கேகவோ யான் முரண்களைத் தீர்ப்பதோயான்
அனைவர்க்கும் பொல்ல னானேன் காரணம் அறிகி லேனே.

ஒற்றரால் இன்னும் இன்னும் உளவறிந் துள்ளம் வேகும்
கொற்றவன் கொலைவாள் இன்னுங் கொதித்திடச்சினத்தினாலே,
பற்றுள மனைவி யான சுந்தரி பண்ப றிந்து,
நற்றிருக் கடிதம் விட்டு நயந்ததை அறிகு வோமே.

சுந்தரி கடிதம்

காவல னாகிய மாவலி மன்ன,
பூவல யத்திற் போர்வினை யேசெய்
அரக்கர் கோவே, அழகியுன் மனைவி,
இரக்கங் கொண்டிதை உரைக்கப் புகுந்தேன்.
மனங்கொண் டொழுகின் மயக்கந் தீர்வாய்,
இனந்திருந் திடவே இப்பணி செய்தேன்.
உனது நலமே எனது கருத்தாம்,
எனது மனத்தை உனதாய்க் கொள்வாய்.
ஐயநீ நாட்டில் அமைதியை வேண்டின்,
மெய்யன் மெய்ம்மொழி மேலெனக் கொள்வாய்,
மனித ராயினும் மாவலி யாயினும்
பூத யாக்கையிற் பொருந்திய உயிரே.
உன்னுயிர் வேறிலை மன்னுயிர் வேறிலை.
உயிர்க்குயி ராகிய ஒருபொருள் உண்டு,
பரம்பொருள் அதுவே பாருக் கிறையாம்,
அப்பொருள் பற்றி ஆருயிர் உலகிற்
கட்டற வாழுங் கருணை வழியை
எப்பெரி யாரும் எடுத்துரைக் கின்றார்.
அன்பும் அருளும் அறிவுயர் செயலும்
பண்புங் கொண்டு பலகலை கற்றுப்
பாரில் அழகாய்ப் பதமாய் வாழ
வழிதிறந் துள்ளது, விழிதிறந் துள்ளது,
நில்லா உடலும் நில்லா வாழ்வும்,
நில்லாப் பொருளும் நிலையென நம்பிப்
பொல்லாப் போர்செய் கொல்கொலை யரக்கர்,
உலகை அழித்தலே நலமெனக் கொண்டார்.
உயிரடித் துண்ணலே உணவெனக் கொண்டார்,
கொலையால் வளர்ந்து கொலையே தேடும்
பொறாமைப் போர்வெறி பொருந்திய உன்னால்
ஆணவந் தன்னிலே அழுந்துமுன் தம்பியால்,
நாடெலாம் படுசுடு காடென லானதே,
இயந்திரப் போர்செய் இரத்த வெள்ளம்
முக்கால் நாட்டை முடித்து விட்டதே
இருவர் பகையால் இறப்பது கோடி,

அண்ணனுந் தம்பியும் அகப்பகை கொண்டால்
இருவரும் கட்டிப் பொருதிப் பார்க்கலாம்,
நாட்டையும் உலகையும் வாட்டிப் போர்முனை
பலிதரல் பெரிய பாதக மாமே.
போரினித் தாங்கோம், பொறுமை யிழந்தோம்.
வரிச்சுமை யாலே வருந்தினோம் ; இன்னும்
வரிச்சுமை யேற்றினாய்....வளம்பெறு செல்வரைக்
கொள்ளையுங் கொண்டாய் ; கொடுமை யாக
ஊணரைப் போர்ப்பேய் உண்டிடச் செய்தாய்.
குண்டினாற் பிணமலை குவிந்தது ; நாட்டில்
மாளிகை எத்தனை மண்ணா யினவே !
பஞ்சம் வந்து பட்டினி மக்களைக்
கொன்ற கொடுமை, கொடுமை, கொடுமை !
வயிற்றிற் கேசிலர் மானம் விற்றனர்,
ஆடை யின்றி அவமா னங்கொள்,
மானிகள் உயிரை மாய்த்துக் கொண்டனர்,
தெருவெலாம் பிணங்கள் ; செருக்களம் பிணங்கள் ;
வீடெலாம் தற்கொலை விளைத்த பிணங்கள்....
நாடெலாம் இரத்தம் ; காடெலாம் இரத்தம்,
காணச் சகியோம் ; கருணை யுள்ளம்
வெறுப்புறு துன்பால் வெடிக்குதென் ஐயா!
ஆதலால் உலகிலித் தீதெலாம் ஒழிய,
அரக்கப் பான்மையை அடியோ டொழித்தே,
சீவகா ருண்யமே சிரமெனக் கொண்டோம்.
தெய்வப் பான்மை திருவுற விளங்க,
சுத்த சங்கத் தொண்டர்கள் கூடி,
அருட்குடி யரசை அமைத்தனம் இன்றே,
உடனே போரை உதறித் தள்ளி
அரசை எம்மிடம் அடைக்கலம் வைத்தே
எம்முடன் நீயும் இனிதிருந் துலகில்
எதுபொது நலமோ அதையே புரிவாய்.
அதனால் உனக்கே அழியாப் புகழாம்.
இன்றேல் என்றும் இகழ்ச்சி யாமே.
போதும் கொலைவெறி புதுவாழ் வடைவாய்.

சொல்லுக்குச் சொல்வி நோதச் சூதுறு பொருளை ஒற்றர்
சொல்லிட ஊணன், அந்தோ "சுந்தரி எமனே உன்னைக்
கொல்லுவேன்" என்று தாவிக் குதித்தனன் வாளை ஓங்கிப்
பல்லினைக் கடித்தான் மீசை படபடத் திடத் துடித்தான்.

பசிகொண்ட புலியைப் போலும், படமுயர் பாம்பைப் போலும்,
விசைகொண்டகணையைப்போலும்,வெவ்வியநெருப்பைப்போலும்
தசைகொண்டு திமிர்பி டித்த தானவ வெறியன் நாவில்,
வசைகொண்ட மட்டும் வைது வாளரை ஏவி னானே.

"கட்டுங்கள் சுத்த சங்கக் கள்ளரை, அழகி தன்னைப்
பட்டெனச் சிறையி டுங்கள் ; பதிலொன்று மூச்சுவிட்டால்,
வெட்டுங்கள் சிரத்தை ; வெட்டு விழாதவர் தடுத்தால், மார்பிற்
சுட்டுடன் புதைத்தி டுங்கள் சுதந்தரக் கிளியும் சாக.

கடுவரி விதித்து சாதுக் கயவரை வருத்தி டுங்கள்,
விடுதலை பேசு வோரை விண்ணெனக் கொடுத்தி டுங்கள்,
கொடுவரிக் கூட்டம் போலே கொள்ளையும் வாளுங் கொண்டு
படுகொலை செய்தி டுங்கள் பாவத்திற் கஞ்சா நெஞ்சீர்....

இறைவன்யான் எனக்குமேலேஇறைவனென்றிருப்பான்என்னிற்
சிறைகளை நிரப்பி டுங்கள், சிந்தையும் புகுந்து பார்த்துக்
குறைசொலு வோரை நன்றாய்க் குட்டுங்கள்" என்றி ரத்தக்
கறைநகை வாளை யோச்சிக் காவலன் கதறி னானே.

* * *

இன்னவை சொல்லி ஊணன்இரத்தக்கண்கொதிக்கும் போதே,
மன்னவை மதிம யங்க வானவி மானக் குண்டு
தின்னுறும் ஊழிப்பேய்போற் சிடுசிடு திடுதி டென்று
பன்னரு திசையி னின்றும் பாய்ந்ததைக் கண்டான் பாவி....

வேந்தநின் தம்பி செய்யும் வேலையிச் சேட்டை யென்றே
ஒந்திக்கண் ஒற்றன் சொல்ல, ஊழிபோற் குமுறும் ஊணன்,
காந்தக்கண் ணிகளுங் குண்டுங் கடுமையாய்ப் பொழிந்து தம்பி
தீர்ந்தபின் சிரத்தைக் கொண்டே திரும்புவேன் என்று
சென்றான்.

அப்புறம் அரக்க னேகி, ஆணவப் போரில் மூழ்க,
இப்புறம் பொதுச னங்கள் 'இம்'என எழுந்தி ருந்தே,
கப்பெனச் சத்த மின்றிக் காவலைக் கவர்ந்து கொண்டு,
முப்புறம் ஊரைச் சூழ்ந்து சுதந்தர முழக்கஞ் செய்தார்.

ஒன்றிய திறமை யோடும் உலகியல் நலமே செய்யும்
வன்றவ உறுதி யோடும் சத்தியன் வழி நடத்தச்
சென்றுளே "அரக்கன் ஆட்சி தீர்ந்தது ; பொதுநல் லாட்சி
இன்றுடன் வந்த" தென்றே இயம்பினர் இரக்கங் கொண்டார்.

மதியுள நல்லோர், மெய்யன் வகுத்தநன் முறையைப் பற்றி,
விதிகளை யியற்றி, அன்பே விளங்கிடும் அருளி னாட்சி,
துதிபெற நிலவச் செய்து, சுந்தரி தலைமை தாங்கப்
"புதியசு காப்தம் இன்று புலர்ந்த"தென் றுவகை கொண்டார்.

பெருந்திரள் அரக்க ராங்கே பிரியமாய் ஒத்து ழைத்தார் ;
திருந்திய ஊணர் ஆண வத்துடன் சேர்ந்தந் நாளே
வருந்திடும் உலகு வாழ மாப்பெரும் போர்நி றுத்தி,
அருந்துணை யன்ப ராக ஆணவர் அமையச் செய்தார்.

* * *

ஆணவன் இறந்த செய்தி, அண்ணனும் பறந்த செய்தி
காணுற வறிந்த மெய்யன் சுந்தரி கனிவு கூற,
நாணறு நடத்தை விட்டு மாவலி நன்மை சேரச்
சேணுறச் சென்று மாற்றச் சீகரஞ் சேர்ந்தான் மன்னே !

வெள்ளிமா வலிகள்செல்லும் விமானத்தை மறித்துக் கொண்டு
வள்ளிமான் அழகி தந்தை, "மாப்பிள்ளை வருக" வென்றே
தெள்ளிய நதிகள் பாடும் சீகரந் தனிலி றக்கி,
உள்ளுற மாற வேண்டி உபாயங்கள் பலவுஞ் செய்தான்...

புண்ணிய பூமி தன்னிற் புதுயுகம் பிறந்த தோதி,
மண்ணில முய்ய வந்த சுத்தனின் மகிமை சொல்லிக்
கண்ணிய மான சங்கக் கருணையை விளக்கி ஊணன்
உண்ணெகிழ்ந் துருகச் செய்தே உயர்நல வாழ்வை யீந்தான்.

"சென்றது செல்க; நானுந் திருந்தினேன்,அறிந்தேன்உண்மை;
நன்றிது நானும் சுத்த நாயகன் சேவை செய்வேன்"
என்றகங் கார மின்றி, மாவலி இயம்பும் போது
"நன்றென" மெய்யன் முன்னே நல்லுரை சொல்லி வந்தான்..

புண்ணிய பூமி யாண்ட சத்தியன், புலவன், மெய்யன்
விண்ணிலே பறந்தி றங்கி வெய்யதா னவர்கள் உய்யப்
பண்ணிய பணிக ளெல்லாம் சீகரன் பகரக் கேட்டுத்
திண்ணென வணங்கித் "தங்கள் சேவகன்" என்றான் ஊணன்.

நாமறி கதைக ளெல்லாம் நன்கறிந் தவுணர் கோனுந்
தூமனின் விதியுங் கேட்டுச் சுத்தனைப் பணிய வேண்டித்
தாமத மின்றிச் சென்றான் சத்திய னுடனே !....வாரீர்
நாமினிச் சுத்த சங்க நிலையத்தை நாடு வோமே...

## 19. சுத்த மங்களப் படலம்

*ஆசிரிய விருத்தம் பண் பழம்பஞ்சுரம்—சங்கராபரணம்*
*(ரூபக தாளம்)*

வான்சி லிர்த்தது; மண்சி லிர்த்தது; வாழி பாடின புள்ளினம்;
தேன்மலர் வனம் புன்சிரித்தது; தெய்வக் காலை சிலிர்த்தது;
மீன்க ணங்கள் பவனி வந்து மிளிர்கிழக்கிற் புகுந்தன ;
ஊன்சிலிர்க்க உயிர்சி லிர்க்க உலகமெல்லாஞ் சிலிர்க்கவே.

அருண ஜோதிப்பொற் கிரண வீசி அமுதப் புன்னகை செய்ததே;
பொரு ளுணர்ந்த இயற்கை யுள்ளம் புளகித் தின்பம்சிலிர்த்ததே
இருள கன்றது ; புத்துலகின் இரவி நல்லொளி வீசியே,
கருணை கொண்ட கடவுளின் அருட் காட்சி காட்டி யெழுந்ததே.

இன்னி சைக்குழல் வீணை மத்தளம் இன்ப கானம் முழங்கின ;
மன்னு மாதவர் ஆசி கூறினர் ; மங்கலப்புது நாளிலே,
பன்ம தத்தினர் எட்டுத் திக்கும் பரந்த மாந்தர் விரைந்தனர் ;
பொன்முகத் திருப் புன்னகையொளிர் புனிதனைத்தினம் போற்றவே.

சைவர் வைணவர் சாக்தர் புத்தர்சமணர் கிறிஸ்து இஸ் லாமியர்,
உய்வகை உணர்ந் தோமென்றொற்றுமை கொண்டெழுந்தனர் மானிடர் ;
தெய்வ நன்னிலை யெய்தினர் தவ சித்திசாதனம் செய்ததும் ;
ஐவகை நில மக்களும் பர மானந்தப்பண் முழங்கினர்.

கோயி லான உலகிலே, ஒரு கொற்றவன்பர மாத்துமா.
தாயுந் தந்தையுந் தக்க நண்பனுந் தாரகமும் அவனென்றே ;
வாயுஞ்செய்கையும்நெஞ்சுமொன்றிவணங்குவோம்சுத்தசக்திஓம்
தூய மந்திர நாதமெங்கும் துலங்க வெற்றி யிலங்கவே.

போற்றி இன்பப் புதுயுக வொளி, போற்றி திவ்விய ஜீவனம்,
போற்றிசச்சிதா னந்தசுத்த சுயம்பிரகாசம் போற்றியே.
போற்றி சாந்த சிவானந்த சுப மங்களப்பொருள் போற்றியே,
போற்றியே பதிபுண்ணியத்தினிற் பொங்குவாழ்க்கைபொலிகவே.

குயிலினோசையும்,கிளியின்ஓசையும்,யாழ்குழலுடன்கொஞ்சவே,
மயிலின் ஆடலும் மந்த மாருத மலரின் ஆடலும் கூடவே,
செயலில் வென்றநம் சித்த ராடினர் யோகசித்தியைப் பாடியே,
தெய்வ பாரத சக்தி காவியத் தேனிசை யிசை யோங்கவே.

தொத்த டிமைத் துயரொழிந்தது ; துள்ளரக்கரின் மாயமாம்
பித்தொ ழிந்தது ; ஆசையாணவப் பேயொ ழிந்தது ; தாயகம்
இத்த லத்துடன் இன்னலற்றநல் லின்ப மெய்தி மகிழ்ந்தது,
சுத்தமுத்த சமத்துவச் சுடர் தொல்லுலகில் விரிந்ததே.

கோரராக்ஷஸர்கொண்டபூமியைக்கொண்டனர்திருத்தொண்டரே,
வீரதீரர் விஞ் ஞானசித்தர் விளங்கு பொன்யுகம் பூத்ததே,
போரிலையினிச் சாந்த மாகப் பொருந்தி வாழுவர் மானிடர் ;
ஓரருட் குலம், ஓரருட்பரன், ஓரருள் அர சோங்கவே....

மாற்றி மாற்றி மனிதச் சன்மத்தை மாசி லாதபொன் னாக்கிடும்,
ஆற்றலார் சுத்த சக்தியின்பரி ணாமகாரியம் ஆயிற்றே.
வேற்றுமைச்சண்டை யில்லைசாதி விரோதங்கள் இனி இல்லையே
ஊற்றி மெய்யறி வின்பப் பாலை உலகி நம்மை வளர்த்தனள்.

கற்ற றிந்தவர் கல்வியின் பயன் கடவு ளென்பதைக் கண்டனர்,
உற்ற றிந்தநல் யோக மாதவர் உலகந் தாமென விண்டனர்,
பற்ற றிந்தவர் தெய்வசக்தியைப் பற்றினூர் பசு பாசத்தை
முற்ற றிந்தவர் முதல்வன் அன்பினைப் பெற்றறிந்தனர்பாரிலே.

நாடு வாழ்ந்திடக் கல்வியுந்தொழிற் செல்வமும் நல்ல வீரமும்,
வீடு வாழ்ந்திட முப்பொருளையும் மேவி யன்பினில் வாழுவோம்,
ஓடு வாழ்வினில்ஊறிஉள்ளத்தின்இன்பஊற்றினைக்காணுவோம்,
பாடுவோம்பதிப் பாடல் பண்ணுடன் பணிநலங்களும் பூணுவோம்.

காசினியிற் பிறந்த மானிடர், கருத்தொன் றாகிக் கலந்தவர்,
தேசபாஷை நிறச் செருக்கறத் தெய்வசக்தியில் வாழுவோம்,
மாசிலாத மனத்திலே வளர் மன்னனை நிதம் உன்னுவோம்
தேசு லாவிடுந் தெய்வ ஜீவனம் எய்துவோம் திரு வோங்கவே.

ஆக்கிக் காத்தளித் தாருயிர்களை அருளினல் வினை யாடிடும்,
நீக்க மற்று நிறைந்த சுத்தனைநெஞ்சிலேநினைந்தொன்றுவோம்.
போக்குடன்வர வாகும் பூமியின் போக நாடகந் தன்னிலே,
ஊக்க மாக உளத்தில்மன்னும் ஒளியைக் கூடி மகிழுவோம்.

அன்பர்கள் கூடி யிவ்வா றனந்தக் கீதம் பாடிப்
பண்புடன் எடுத்த செய்கை பழுத்தது, வெற்றி யென்றே
நண்புற நினைத்துத் தங்கள் நற்பணிப் பயன்க ளெல்லாம்
இன்பமாம் இறைவ னுக்கே ஈந்தனர் சாந்த வீரர். 60

அரியநற் பணிக ளாற்றி, அடக்கமாய்ப் புன்ன கைத்துத்
துரியமா யோக நிட்டை துலங்கிடும் சுத்த னைப்
பிரியமாய்த் தூய னை பேணிய சக்தி தன்னை,
உரியநல் லிசையி னலே உற்றவர் போற்றி னரே.

பாரத முனிவன் சாந்தன், பலகலைப் போகன், இந்தப்
பாரினை யோகத் தாலே உய்வித்த பண்பை மெச்சிச்
சீரிய வாக்கி னலே தோத்திரம் செய்யக் கேட்டு
"ஓரருட் சக்தி செய்கை" என்றனன் ஒப்பி லானே.

அரக்கமா வலியும் அன்பன் ஆகிய கலியும், ஆங்கே
"இரக்கமே வடிவ மாகும் எம்பிரான் சரணம்" என்றே
உரக்கத்தம் பிழைகள் கூறி, உள்ளுணர்ந் தழுது வீழ்ந்தார் ;
சிரக்கம்பம் செய்து சுத்தன் தியானத்தில் ஆழ்ந்து சொன்னன்!

கதிருடன் இரவும் வாழ்வின் கதையினை வளர்த்து நாளும்,
எதிரெதிர் தொடர்வ தேபோல் இப்புவி விதியில் ஊணர்,
கதிபெறும் மிருக சக்தி காட்டினர் உலகம் அஞ்சத்
துதிபெறும் சுத்த சக்தி துலங்கிடத் தோற்று வீழ்ந்தார்.

உலப்பறும் உடுக்க ணத்தில் உலகொரு தூசி போலும்,
அளப்பற விரிந்த விண்ணின் அந்தரத் தாடும் தூசி,
கலப்புறு பூத யாக்கை முக்குணக் கயிறு கட்டி
உளப்பொது சக்தி யாட்டும் ஓய்வறும் பாவை யம்மா.

அத்தகை நாடகத்தில், ஆருல கரங்கு வாழப்
புத்துயிர் ஒளிர, நல்ல புதுயுகம் பூக்க வேண்டி,
இத்தகை விளையாட் டொன்றை யியற்றினாள் சுத்த சக்தி ;
அத்தகை யாடல் வெல்ல எளியனும் ஆடி னேனே.

என்னுடை அருமைக் கௌரி எனக்குயிர் ஈந்து சென்று
தன்னுடை யாவி தன்னைச் சக்தியுள் வைத்து வந்து,
மன்னுல கத்தில் மோன மணியினை ஒலித்துக் காட்டி,
உன்னதத் தொண்டு செய்த உண்மையும் அருளின் ஆடல்.

கலியினை முறியடித்துக் கடல்கடந் தோடச் செய்து,
புலியினும் கொடியர் தம்மைப் புகலடைந் திங்கு வந்து,
நலிதரும் சூழ்ச்சி யாலே நாட்டினை அவர்கை யீந்து,
இலிகொளுஞ் சிறைவ ருந்திக் கிளர்ந்ததும் அருளின் ஆடல்.

நாட்டினை யடிமை செய்ய நாடிய கலியை ஊணர்
மாட்டிடச் சிறையில், அன்னோன் மதிதெளிந்தெதிர்த்து,மீண்டும்
போட்டியைச் சிறையி லிட்டுப் புத்திவந் திங்கு பத்தி
காட்டிய செயலும் அன்புக் கடவுளின் செய்கை தானே.

இழந்ததை மீட்டுச் சித்தி மான் முதல் அன்ப ரெல்லாம்
தழும்புறத் தொண்டு செய்து, தானவப் பகையை வீழ்த்தி,
எழும்புது யுகத்திற் கான செயல்களை யியற்றி, நாட்டின்
பழம்புகழ் இலகச் செய்த பரிசுமென் பகவன் ஆடல்.

ஏந்திய வீரத் தோடுந் தானவம் ஏகி எந்தை,
வாய்ந்தசுந் தரியைக் கண்டு சக்திக்கு வகையுஞ் சொல்லி,
தேர்ந்தநற் போக னாலே திருத்தொண்டு கலையாற் செய்து,
காந்தம்போல் அரக்கர் தம்மைக் கவர்ந்ததுங் கடவுள் ஆணை.

அரசினைச் சுற்றி ஐந்தால் அடவியற் சாந்த னான
வரமுனி வாக்கைக் கேட்டு, வாளினாற் கலியை வென்று,
சிரமணி போன்ற கௌரி என்னுடன் சேர்ந்து வாழப்
பரம்பொரு ளிச்சை செய்த பாக்கிய மறிகு வீரே...

தானவர் எழுந்து, வீழ்ந்து, சரண்புகுந் ததுவும், பாரில்
மானவர் இன்ன லின்று மறைந்ததும், அமைதி சேர்ந்து,
நானிலம் இன்ப முற்ற நன்மையும், உயிரின் உள்ளே
தானென நடன மாடும் தற்பரம் பொருளி னாலே.

ஆதலால் அன்ப ரெல்லாம் அருட்பெரும் சுத்த சக்தி
சோதியை வணங்கி நிற்போம் என்றலும், தொண்ட ரெல்லாம்
நாதத்தால் வணங்கிப் பின்பு நயனத்தை மூடி த்யான
போதத்தால் வணங்கும்போது சித்திமான் புகுந்து சொன்னுன்;

சித்திமான்

சுத்தனே வணக்கம் ! சுத்த சங்கமே வணக்கம் ! யோக
சித்தியே வணக்கம் ! அங்கே சிந்தித்த பணிக ளெல்லாம்
உத்தம வெற்றி யோங்கி, ஒளிர்ந்தன உலக மெல்லாம்
சித்திமா நகரிற் கூடித் திருவிழாச் செய்வ தாமே. 120

பண்ணிய யோக மெல்லாம் பலித்தது ; பண்ப நீயும்
புண்ணியத் தொண்டர் சூழப் பொருந்திநன் னகரில், இந்தக்
கண்ணியத் தலைவ ருக்குக் கருத்துற உபதே சித்தெம்
எண்ணமும் இலக வெற்றி அரியணை இருப்பாய் வேந்தே...

அன்னதே கடமை யென்றுங் கந்தண்மா முனிவர் சொல்லத்
தன்னிக ரற்ற சுத்தன், சங்கத்தோ டெழுந்து, விண்ணில்
மின்னலைப் போலப் புஷ்ப விமானத்திற் சென்று, சித்தி
மன்னக ரடைந்து வெற்றி மகாசபை நடத்தி னுனே... 128

# 20. சுத்த விஜயப் படலம்

விண்ணுயர்ந்த மாடமும் விளக்கு யர்ந்த தூபியும்
பண்ணுயர்ந்த தென்றலிற் பகற்கொடியின் ஆட்டமும்,
கண்ணுயர்ந்த காட்சியும் கவினுயர் அணிகளும்,
எண்ணுயர்ந்த சீர்த்தியும் இலங்கு சித்தி மாநகர்.

எங்குமே புதுமைகள், புதுநகை, புதுவியன்,
எங்குமே புதுயுகம் புதுமலர்ச்சி வேகமே ;
எங்குமே புதுமை பெற்ற பூர்ணயோக வாழ்க்கையே ;
மங்கலப் பழநகர் மறுவசந்தச் சோலையே.

பத்திமான்கள் யோகத்திற் பழுத்த திவ்ய ஞானிகள்,
புத்திமான்கள் பல்கலைப் புலவர், மன்னர், வீரர்கள்,
சித்திமான்கள் சேமமோங்குஞ் சித்திமா நகரிலே
"சுத்தசக்தி ஓ"மெனச் சுருதி பாடிக் கூடினுர்.

முன்னர் வாழ்வி லேபடர்ந்த முக்குண விகாரமாம்
பன்மதங்கள் சாதிபேத நாடு வர்ணப் பண்புகள்
இன்னர் சூழும் அன்பிலே இணைந்தெலாம் ஒருமயப்
புன்னகைப் புதுநலப் பொலிவுறப் பொருந்தின.

அழுந்திருள் விலகியே அருணன்பூத் தழகொளிர்
செழுந்திரு வசந்தக்காலே சித்திகௌரி மாளிகை,
உழுந்திட இடமிலாமல் ஓங்குகற்ப கத்திலே
கொழுங்கனித் திரளெனக் குலாவினுர் வழுவிலார்.

வீரதீரர் வித்தகர், வியன்பெரும் புலவர்கள்,
ஈரமுள்ள செல்வர்கள், இசைமிகுந்த பாடகர்,
பாரிலோங்கு மன்னர்கள், பழுத்ததூய ஞானிகள்,
ஆரியர் திராவிடர் அனைவரும் குழுவினுர்.

பயிர்செழிக்கும் வானெனப் பயன்மிகும் பணிகளால்,
உயிர்செழிக்க உள்செழிக்க உலகறம் செழிக்கவே,
துயர்கெடப் பயங்கெடத் துணிந்துதொண்டு செய்தவர்,
அயர்வறும் தொழிற் புலவர் அன்புகொண்டு வந்தனர்.

உலகு கண்ட சீரியர் உருவொளிர் திருச்சபை,
இலகருட் பெரியவர் இருந்திலங்கு சிற்சபை,
புலவரின் பலகலேப் புகழ் மணக்கும் பொற்சபை,
நிலவு நாட்டு வீரர்கள் நிரல்பட விளங்கினுர்.

மாப்பெரிய ஆசியா அமெரிக்கா வளம்பெறும்
வாய்ப்பு மிக்க ரஷ்ஷியா வணிகர்வாழ் ஐரோப்பியா,
ஆப்பரிக்கம் ஆஸ்திரேலி யம்அனேயு நாடுகள்
பூப்புகழ் சிறந்தசித்தி மாநகர் பொலிந்தவே.

ஆங்கிலம் பிரெஞ்சு ஜெர்மன் ஆரியம் உருசியம்,
தீங்கனித் தமிழ்தெலுங்கு சீனமிந்தி வங்கமாம்
பாங்குறும் மொழிபல பயின்றநற் சபையிலே
நீங்கிலா தொருமை மிக்க நெஞ்சளாவி நின்றதே,

முன்னர்சாத னத்திலே முயன்றவர் பயின்றவர்,
பன்மதப் பெரியவர் பழகிய புலவர்கள்,
மன்னர்வீரர் மாதவர் மனமொருங்கு கூடியே
அன்னேயன் பளாவுமக்கள் என்னவாங் கிருந்தனர்.

திருந்திய கலியனும் வலியனும் திருச்சபை
பொருந்தினர் புலிகள்மாறிப் பூனேயான வாறுபோல்.
அருந்திறல் அருளொன்றல் அனேவரும் சமரஸ
விருந்தருந்தி ஓரின வுணர்விலே விளங்கினுர்.

திருமிகச் செதுக்கிய உயிர்ச் சிலேகள் போலவே
கருமவீரர், ஞானவீரர், கருணேவீரர் கூடியே
உருமிகப் பொலிவுகூற யோகசித்தி உள்ளமாய்,
ஒருகுலம் ஒருநிகர் ஒருமைகொண் டிருந்தனர்.

புனைவுறும் சமயதேசப் பொய்ப்பிரிவை நீத்தவர்,
அனைவரும் ஒருவனை அகத்திலே நினைத்தனர்.
நினைதொறும் நினைதொறும் நெகிழ்ந்துநெஞ் சுருகியே,
தனையொவாத் தலைவ சுத்த சக்தியோகிஓம் என்றார்.

உள்ளெலாம் ஒருவனே ; உணர்வெலாம் ஒருவனே ;
தெள்ளறிவி லேயொளிர் தினகரன் ஒருவனே ;
வெள்ளமாக் கருணையன்பு மேவு சுத்தன் வாழ்கெனு
துள்ளுமார்வங் கொண்டிசை துலக்கி நின்ற போதிலே,

சிந்தனை குளிரயோக சித்திகேட்டுப் பூரித்தார் ;
சந்தமார் மதுரகீர்த்த னுஞ்ஜலி தழைத்ததே ;
அந்தமார் விமானத்தில் அருளழகு வீசியே,
வந்திறங்கி னார்கள் சுத்த சக்திமா முனிவரே.

சுந்த ரத்தவப் பொலிவுடன் சுடர்நகை வீசி,
வந்த மன்னனை வாழிபல் லாண்டென வழுத்தி,
மந்தி ரத்தமி ழிசைகளை மாரிபோல் வழங்கி,
இந்தி ரையுடன் ஏற்றனர் இனமலர் சொரிந்தே.

இந்திரை, "மகனே" யென இருகையால் அளாவிச்
சிந்தை யானந்தஞ் சிலிர்த்திடச் செல்வனை யேற்றாள்.
தந்தை தாயினைத் தகுமுறை முறைமுறை வணங்கி,
முந்து நின்றனன் முத்தியின் பிழம்பென முதல்வன்.

வீர மூதிளஞ் சத்தியன் விமலனைத் தழுவிப்
பாரெ லாம்ஒளி பரவிய திருவருட் சுடரே,
சூரி யக்கொடி யுலகெலாந் துலங்கிடச் செய்த
தீர வாழ்கெனச் சென்னியை முகந்துமுத் திட்டான்.

"இனிய தந்தைநீ இன்றெனக் காயினை" என்று
பனி மலருடன் சக்திமா வலியினைப் பணிந்தாள்,
இனிய சத்திய குருவினை, இந்திரை தன்னை
நனி வணங்கிநல் லாசியை நயந்தனள் ஆங்கே.

யாழின் ஓசையும் குழல்களின் மழலையும் எழுந்த ;
வாழி பாடினர் மாசபை வயங்கிய பெரியார்.
ஆழி போல்இசை யார்த்திடும் அப்பெரு மன்றில்,
சூழ யோகிகள் விளங்கினன் சுடர்மணிப் பெருமான்.

மங்கல மறைமு ழங்க மாதவர் மலரைத் தூவ,
திங்களும் இரவி யும்போற் சித்தியின் சக்தி சுத்தர்,
தங்கமாந் தவிசி ருக்க ஜயசுத்த சக்தி யென்றே
பொங்கிய தன்ப ருள்ளம் புன்னகை முகங்கள் பூத்தே.

சித்திமான், சாந்தன் போகன், சிகரன் பரத யோகி
பத்தியோ டாசி கூறப் பரவசா னந்தந் தூண்ட,
சத்தியன் அரசி யோடு தாங்கிப்பொன் முடியை, "வாழ்க
சுத்த ஓம் சக்தி" யென்று சுபமுறச் சூட்டி னானே!

சுத்தசக்தி சுத்தசக்தி சுத்தசக்தி ஓமென
சத்திய னுடன்சபை சயமுழக்கஞ் செய்யவே,
அத்தர்வாசச் சந்தனம் அருமலர் பொழியவே,
சித்தர்போற்றி சைக்கவே சிலிர்த்ததன்பர் உள்ளமே.

கலையெலா மறிந்தனை கணக்கெலா மறிந்தனை
நிலையெலாந் தெளிந்துநின்று, நீதிகாத்த வள்ளலே !
உலகெலாம் ஒருமைசேர யோகசித்தி தந்தனை ;
நலமெலாம் தவமென நயந்தசுத்த நாதனே.

மடமையும் அடிமைநோயும் வறுமையும் மாற வேண்டி,
விடமனத் தானவர்கள் வெம்மையைப் போக்க வேண்டிக்
கடமையைக் காக்கவேண்டிக் கலியினைத் திருத்த வேண்டி,
இடையறு யோக சக்தி இரவிபோல் ஈந்தாய் வாழ்க !

பல்வகைச் சமயசாரம் பார்த்துப்பார்த்துப் பாரிலே
அல்லலற்று மானிடர் அமைதியாக வாழவே,
கொல்லும்ஊணர் வீழவே கொழுங்கருணை சூழவே
வெல்லும்யோக சக்தியை விளக்கினை விமலனே....

கூற்றென வந்த தீமை, குளிர்மலர் கொஞ்சு கின்ற
காற்றெனச் செய்தாய் வாழி ! கலியினை அன்ப னாக
மாற்றினை வாழி ! தான வத்தினை மெய்யன் வெல்லச்
சாற்றினை வழியை யோக சாதன குருவே வாழி !

போற்றி போற்றி புதுயுகச் செங்கதிர்
போற்றி சுத்த சுதந்தர சக்தியே
ஆற்ற லாயுள் அறந்திரு வின்பொளி
போற்றி மானிடர் பூரணம் பொங்கவே....

மன்னன் சுத்தனிம் மன்னுயிர்க் கின்னுயிர்
என்ன வாழி இகத்திற் பரசுகம்
துன்னு யோகச் சுடர்மணி வாழியே
அன்னவன் பணி யானந்த மாகுமே....

இந்தவா றிசைத்து நல்லார் இசைமலர் வாரித் தூவ,
சிந்தையுட் குவிந்து சுத்தன் சிற்சக்திக் கதிர் பரப்பி
முந்துளோர் உள்ளந் தன்னுள் தன்னுளம் முந்து ளோருள்
சந்ததந் துடிக்க நாட்டிச் சாற்றினான் அமுத வாக்கே....

# 21. சுத்த வாணிப் படலம்

உள்ளப் பெருமான் உலவுங் கோயில்காள் !
என்னுயிர் அனைய இன்னுயிர் மக்காள் !
உங்கள் முன்னே ஊழிய னாகி,
என்னுள் இன்பம் இவ்வுல கிற்கும்
எய்த வேண்டி எழுந்தேன் இத்தினம் ;
சுத்த நிலைய சித்திக ளெல்லாம்
எல்லா ருக்கும் எளிதிற் கிடைத்தே
மானிட ரெல்லாம் மங்கள மான
பூரண வாழ்க்கை பொருந்திட வேண்டியே,
சக்தி பரப்புதல் நித்தியக் கடனே.
அரசிய லுக்கும் ஆத்மசா தனமே
அடிப்படை யாகும் அறவழி வகுத்தேன்.
எம்மத மாயினும், எக்குல மாயினும்,
ஆண்பெண் அடங்கலும் அரைமணி தினமும்
சித்தங் குவிந்து தியானம் செய்மினோ !
பொன்னிளங் காலை புலரும் போதும்,
மாலைச் செங்கதிர் மறையும் போதும்,
அன்பறி வோங்கி யனைத்தும் வாழ்கென
ஊரூர் மக்கள் உறுதியாய்க் கருதினால்,
உயிரும் உலகும் ஒற்றுமை யாமே.
மனதின் வெற்றியே வாழ்வின் வெற்றியாம் !
உள்ள மிருந்தான் உலகும் இன்பமாம்.
நல்ல கல்வியும் நல்ல சிந்தையும்
பலகலை யறிவும் பல தொழின் முயற்சியும்,
நன்னெறி யொழுக்கமும் நாளும் பயின்று,
உடலுயிர் மனமும் உள்ளமுஞ் செயலும்,
உறுதி யாகி, உலகப் பணிக்கே
பயனுற வேண்டும் பதியன் புடனே.
யோகமுந் தொண்டும் ஒன்றாக வாழ்வில்.
பிரம சரியம் பேணிக் கற்றபின்,
வீரப் பயிற்சியும் பாரினில் வாழத்
தொழிற் பயிற்சியும் துலங்குக நாட்டில்.
பிறகே தகுதி பெற்ற வாலிபர்—
ஒத்த காதலர் உலகம் வளர—
இல்லற மாகிய நல்லறந் தாங்குக.
மக்களுக் குரிய மாநிலந் தன்னைச்
சரிசம னாகப் பிரித்துக் கொடுத்தே
உழைப்பால் உண்ண ஒவ்வொரு வர்க்கும்

உரிமை யுண்டென உலகினில் நாட்டுவோம்
மனிதப் புரட்சி வயிற்றின் புரட்சியே.
ஒவ்வொரு கையும் உழைத்தே புசித்தால்,
எல்லாக் கைகளும் இயற்றிட வேண்டி
பொதுநலத் தொழில்களைப் பொருத்தமாய் வகுத்தால்,
பஞ்சப் பேயை பாரினின் றோட்டினால்,
போருமில்லை ; புரட்சியு மில்லையே!
அஞ்ஞா னத்தை அறிவால் விலக்கி,
தொழிலால் வறுமையைத் தூர விலக்கி,
யோகத் தாலே ஒழுக்கம் பேணி,
உள்ளன் பாலே ஒற்றுமை நாட்டி,
ஒருவரை யொருவர் உயிரென மதித்தே,
வீடும் விரிந்த நாடும் வாழ
அருளர சாட்சி தருவதென் கடனே.
அரியணை யிருந்தே அணிமுடி தாங்கி,
மனப்படி யாளும் மன்னன்யா னல்லேன்.
பரம்பொருள் ஒருவனே பாரின் அரசனும் ;
ஆருயி ரெல்லாம் அவன்உட லாமே.
என்னுள் எவனோ அவனே உலகில் ;
அரசிய லென்பதும் ஆருயிர்ப் பணியே.
தாய்மொழிப் படிக்கே தரணியைப் பிரித்து
வாய்மையன் புறவே வளம்பெறச் செய்வேன்.
உலகப் பொதுமொழி யுடனே அவரவர்
தாய்மொழி போற்றுக தனிச்சிறப் பெய்தவே.
உலக மக்கள் ஒரேசமு தாயம் ;
நாட்டை நாடு நன்கு மதித்து,
போட்டி பொறாமை போர்மத மின்றி,
இயற்கை விளைவை இயல்புறத் துய்த்தே,
திறமைப் படியே செய்தொழில் வகுத்தே,
இல்லாப் பொருளை இருப்பவர் நல்கி,
பண்ட மாற்றினாற் பயனுற வாழ்ந்தால்,
உலகில் அமைதி உலாவக் காண்போம்.
பொறாமைச் சண்டை பூண்டோ டொழிக.
கொடிய பயிர்களை அடியோ டொழித்து,
ஊனுடைக் காகவே உழவினைச் செய்தால்,
உணவுப் பஞ்சம் உடனே ஒழியும்.
உழைத்துப் பலபேர் உண்ணத் தக்க
யந்திரத் தொழிலை ஏற்பதுங் கடனே.
வீட்டைக் காக்கவும், நாட்டைக் காக்கவும்,

குண்டரைக் குமைக்கவும் தொண்டுசெய் வீரர்
எல்லா ருக்கும் இராணுவப் பயிற்சி
தகுமுறை தருவோம், தருமம் வாழவே.
பாதகர் ஒழியப் படைவலி வேண்டும்.
நாட்டை நாடு வேட்டையா டாமல்,
குண்டைக் குவித்துச் சண்டைபோ டாமல்,
பாதுகாப் பிற்கே படையணி யாமே.
பாருக் கோர்பொதுப் படையணி வேண்டும்
ஒவ்வொரு நாடும் உத்தம வீரரைத்
தேர்ந்தப் படையிற் சேர்த்திட வேண்டும் ;
ஐக்கியப் படையே அதன்பெய ராமே.
ஆண்டுக் கோரிடம் அப்படை யூன்றி,
அநீதியைத் தாக்கும் அறத்தையே காக்கும் ;
உலகில் அமைதி ஒளிரச் செய்யுமே ;
எந்தநா டாயினும் இன்னொரு நாட்டை
அதருமப் போரில் அழித்திடப் பார்த்தால்,
கொடுமை யாகக் கொள்ளை யடித்தால்,
அந்த நாட்டை ஐக்கியப் படையே
அடக்கி அறவழி அமைப்பது கடனே.
மனிதனுள் விலங்குகள் வாழுறு மட்டுமே,
காவற் படைகள் கண்விழித் திருக்கும்.
தலைவர் இருவர் சண்டைக் கெழுந்தால்
பொதுஜன வாழ்வைப் போராக் காமல்
அவரவர் திறமையை ஐக்கியப் படைமுன்
பண்புடன் காட்டிப் பலன்பெற லாமே.
ஒருவன் செருக்கால் உலக மாந்தர்
குண்டு பட்டுக் கொலையுண் டிறப்பதை
இனிநாம் உலகில் என்றுங் காணேம்.
ஆசையா ணவத்தால் அழிந்த மனமே
வீரியத் தினவால் வெம்போர் புரியும்.
மனப்போர் வளர்ந்தே இனப்போ ராகும்.
படையும் வெடியும் பாழும் போரும்,
உள்ளே கிளம்பியே உலகைத் தாக்கும்.
உள்ளப் பயிற்சியே உலகமை திக்குச்
சாதன மாகும் தன்மை யறிவீர்.
உள்ளந் திருந்தின் உலகம் திருந்துமே.
யோகத் தாலே உள்ளம் திருந்துமே.
சுத்த சமத்துவ சுதந்தர யோகம்
பூமிக் கெல்லாம் பொதுவாய் விளங்கினல்,

எல்லா ருக்கும் இதயந் திறந்தே
தெய்வத் தன்மை தெளிவுற லாமே.
ஆசை யாணவம் அடியோ டொழியும் ;
அன்பும் அருளும் ஆத்ம சக்தியும்
வாழ்வுக் கியல்பாய் வளம்பெற லாமே.
பொய்யும் வஞ்சமும் பூண்டுடன் அழிந்தே,
அரக்கத் தன்மை அன்பினால் மாறி
அமரத் தன்மையே ஆருயிர் மூச்சாம்.
மனிதக் குறைகள் மாறி மாறியே
நரரும் அமரராய் நலமுற விளங்கி
தேவ ஜாதியும் தேவஜீ வனமும்
எல்லா ருக்கும் இயல்புற லாமே.
சித்தி நகரிலே தேவ ஜாதியை
நாட்டிய பிறகு ஞால மெல்லாம்
பாரத சக்தியைப் பரப்பிப் பரப்பியே
யோகமே வாழ்வாய் உருக்கொளச் செய்வோம்.
ஊர்தொறும் ஊர்தொறும் யோகசங் கங்கள்
புதுயுக வாழ்வைப் பொலிவுறச் செய்கவே.
யோகமே வாழ்க்கை வாழ்க்கையே யோகம்.
அனைவரும் வணங்கும் அருட்பெருங் கோயிலே
திருவுறச் செய்த தியானமந் திரமாம் ;
அதனைச் சுற்றி அறவோர் வாழ்வார்
அவரைச் சுற்றி அறிவுச் சாலைகள் ;
அவற்றைச் சுற்றி அருங்கலைப் புலவர் ;
அவரைச் சுற்றி அருந்தொழி லாளர்கள்,
அவரைச் சுற்றி அரும்பணி யாளர்கள்,
அவரைச் சுற்றி அருந் தொழிற் பண்ணைகள்,
சாதனம் செய்து சாந்தமாய் வாழவே
புதுயுக மாந்தர் புதுநகர் அமைப்போம்.
சித்தியை அப்படித் திருவுறச் செய்தே,
நாடெலாம் அவ்வகை நலமுறச் செய்து,
அருட் கோயில் சுற்றி அணியணி யாகப்
பொதுநல வாழ்க்கை பூத்திடச் செய்வோம்.
மண்புவி தியான மந்திர மானால்,
வாழ்வே யோகமாய் வளர்ந்து விளங்கினால்,
அழகும் சிவமும் அமைதியும் சக்தியும்,
அமரத் தன்மையும் ஆற்றலும் பெருகி,
எல்லா வுயிர்களும் இன்புற லாமே.
இந்தக் கடமை இனிது நடக்கத்

தொண்டராய்ச் சேர்ந்து துணை புரிவீரே.
உலகத் தொண்டே உயிர்ப்பெனக் காமே.
ஒருல கத்தில் ஓர்குல மாந்தரை
யோக வுணர்வில் ஒளிபெற நாட்டியே
யானும் சக்தியும் இமாலயஞ் சென்று 1
யோகத் தாலே ஊன்சுமை நீத்து
நுண்ணுட லாலே எண்ணிய நலங்கள்
யாங்கும் புரிந்து நீங்காத் தூய
ஒருமையும் தெய்வ வுரிமையும் நாட்டி,
சுத்தா னந்த முத்திசேர் வோமே!

வெற்றுரைகள் பேசாமல், வீண்பொழுது போக்காமல்,
வீறு கொண்டு,
கற்றறிவுங் காணறிவுங் கலையறிவுந் தொழிலறிவும்
கருதித் தேர்மின்.
ஒற்றுமையும் உள்ளன்பும் உண்மையறி வின்பத்தில்
ஒன்றும் யோகப்
பற்றுதலும் பயின்றிடுமின் ; பாரால யத்தினிலே
பரவி வாழ்வீர்.

எனதுனதென் றிறுமாக்கும் இருமனதை யடக்கிடுமின் ;
ஏழை யின்றி
இனிதறிவு தொழிலெய்தி எல்லாரும் உழைத்துண்மின்
இயற்கை யாக
மனிதசக்தி தெய்வசக்தி யாய்வளர மேன்மேலும்
வாழ்க்கை தன்னைப்
புனிதமுறத் திருத்திடுமின்! அருள்பெற்ற பூரணராய்ப் 18
பொலிமின் அன்பீர் !...

என்று சுத்தன் இயம்பிய நன்மொழி
மன்று கேட்டு மகிழ்ந்தது ; ஞாலமும்
நன்று கேட்டு நலஞ்செய நாடியே
நின்று தூய நிருபனைப் போற்றுமே.

தானொ லித்த தகைமணி வாசகம்
வானொ லித்திட வையக மெங்குமே,
தேனொ டொத்த திருவருள் வாக்கென்றே
ஊனொ டொத்த உயிரி லுணர்ந்ததால்.

ஊண நாட்டின் ஒழுங்கமை சுந்தரி,
மாண நல்ல வழியென வாழ்த்தினாள் ;
ஆண வத்திலும் அன்பர் புகழ்ந்தனர் ;
வேண தொண்டுசெய் வேட்கை விளம்பினார்.

புதிய மாவலிக் கன்பு புகன்றினிச்
சதிபதி யெனச் சம்மதங் கூறினாள்.
துதிசெய் மாவலி சுந்தரி சொன்னதே
மதி யெனக்கென மாறிப் பிறந்தனன்.

சீக ரத்திற் செழுந்திருத் தொண்டர்கள்,
ஏக மாக விரிநில மெங்குமே,
வேக மாகவிண் ணாட்சி விளங்கிட
யோக சித்தி யொளியைப் பரப்பினார்.

சித்தி முற்றிய யோக சிகாமணி,
சுத்த பாரத சக்தியைத் தூண்டியே
ஒத்த மானிடர் ஓர்குலத் தேவராய்
எத்தி சையும் இலங்கத்தொண் டாற்றினான்.

புண்ணியப் பெரும் பூமி நடுவதாய்,
விண் பறவை வியன்பெரு வானொலி
*கண்வை யான கருவிக ளாலிந்த
மண்ண கத்தின் மனத்தில் விளங்கினான்.

நாடு நாடு நலங்களை நாடிட,
வீடு வீடு விளங்கிட மங்களம்—
பீடு மிக்க பெரும்பணி யாற்றியே
நீடு நீடு நிலவி மகிழ்ந்தனன்.

பேச்செ லாம்அருள் பெற்ற மணிமொழி ;
மூச்செ லாம்அருள் அன்பின் முதிர்பணி.
ஓய்ச்ச லின்றித்தன் யோக வொளியினைப்
பாய்ச்சி னான்புது வாழ்வு பழுக்கவே.

அறிவும் ஆற்றலும் ஆயுளும் ஓங்கிடத்
துறவுந் தொண்டுந் துகளறு நன்மனை
யறமுடன் அரு ளாட்சியும் ஓங்கிட,
நிறைய வாழ்ந்து நிறைவிற் கலந்தனன்.

* Television (தொலைக்காட்சி)

பரனருள் எனும் பாரத சக்தியின்
வரன ருளும் வரம்பெறு நன்மையால்,
அரிய யோகத்தில் வாழ்அதி மானிட
மரபெ ழுந்தது ; மன்புவி வாழவே.

இம்மை யம்மை இருமைப் பயன்களும்,
செம்மை யாகச் செழித்திட வாழ்விலே
அம்மை யப்பன் அருள்வழி காட்டிட
இம்ம காகவி என்னுள் உதித்ததே.

இந்தக் காவியம் ஏத்திடும் சுத்தனென்
சிந்தை யிற்குடி கொண்டொளிர் சித்தனே ;
அந்த ராத்ம குருவென லாம்;அவன்
தந்த வேதமிப் பாரத சக்தியே.

என்னு ளேஎன தாவி நலம்பெறத்
தன்னே வைத்துத் தழைத்தனன் செய்யுளாய் ;
பன்னு காவியம் பாரத சக்தியை,
என்ன வர்க்கும் எழுத்தி னுதவினேன்.

எத்தி றத்தினர் ஏற்றமும் பேணியே,
தத்து வப்பெயர் தந்த பெருங்கதை,
ஒத்து லகம் உயர்நிலே வாய்ந்திட 240
வைத்த மாநிதி யென்ன வழங்குமே.

ஊனு டலம் உயிரைப் பிரியினும்
யானு ளேனிவ் வரகவி யென்னவே.
பானு போற்றி வளர்த்திடும் பாரிலே
ஏனு ளேனென் றியம்புமிக் காப்பியம்.

அணேந்தி டாதுள் அமரக் கனலெனத்
துணேதந் தோங்கிடுஞ் சுத்த பராசக்தி ;
இணேயி லாத கருணேயை யென்றுமே
இணேந்தி ருக்குமென் இன்னுயிர் வாழ்க்கையே.

கோவி லான குவலய வாழ்விற்கே,
ஆவி யாகும் அருட்பெருஞ் சோதியே—
தேவ மானிடச் சித்திர மாகுமிப்
பாவி லேவளர் பாரத சக்தியே.

வாழ்க பாரத சக்தி வளம்பெற ;
வாழ்க பாரத நாட்டு வளமையே.
ஏழ்க டலுல கெங்குநல் லின்பமே
சூழ்க நல்லரு ளாட்சி துலங்கவே ! 257

கவியோகி சுத்தானந்த பாரதியாரின்,

பாரத சக்தி மகா காவியம்

ஐந்தாவது சுத்த சக்தி காண்டம் முற்றிற்று

ஓம் சுத்த சக்தி

